# தொல்காப்பியம் - சொல்லதிகாரம்
# உரைக்கொத்து

தமிழன்னை



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 509

# தொல்காப்பியம்-சொல்லதிகாரம் உரைக்கொத்து

முதற்பகுதி

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்
தி. வே. கோபாலய்யர்,
7, முதல் மாடி, அக்ரகாரம்,
பாகூர், பாண்டிச்சேரி.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

2007 ] [ விலை : ரு. 425-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : தொல்காப்பியம் - சொல்லதிகாரம் உரைக்கொத்து |
| பதிப்பாசிரியர் | : தி. வே. கோபாலய்யர் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 509 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2007 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 852 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக் கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : இலக்கணம் |
| விலை | : ரூ. 425/- |

# வெளியீட்டாளர் முகவுரை

தொன்மையாலும், நிறைநூல்முறை நன்மையாலும் சிறந்தது தொல்காப்பிய நூல். தமிழில் இறவாமல் 3000 ஆண்டுகளுக்குமேல் நின்று நிலவும் பழமை போலவே, அறிவுசால் செறிவு, வரம்பிகவாமல் வரையறுத்து வடித்த ஒழுங்குமுறை, மொழி வளர்ச்சிக்கு என்றும் உதவும் கட்டமைப்பு ஆகியவற்றில் ஒப்புயர்வற்ற சிறப்பு வாய்ந்த (இலக்கண) நூல், தொல்காப்பியர் பெயரால் வழங்குகிறது. தமிழில் மட்டுமல்லாது உலகில் பல மொழிகளிலும் வழங்கும் புகழ்வாய்ந்த எல்லா இலக்கணங்களிலும் இல்லாத இயல் வளமும், எழிலும், பயனும், பண்பும் வாய்ந்தது இந்நூல். வேறெந்த மொழி நூலுக்கும் இல்லாத பழமையும், பெருமையும், அழகும், அருமையும் வாய்க்கப்பெற்ற இந்நூல் தமிழரின் தனிப்பெருஞ் செல்வமாகும். மற்ற இலக்கண நூல்களெலாம் எழுத்துக்கும், சொல்லுக்கும் இலக்கணம் சொல்ல, தொல்காப்பியம் மட்டும்தான் வாழ்க்கைக்கும் சேர்த்து இலக்கணம் வகுத்த சிறப்புக்குரியது.

திரு. தி. வே. கோபாலய்யர் தொல்காப்பியக் கடலில் மூழ்கி முத்தான கருத்துக்களைத் தமிழ் உலகிற்கு அளித்த பெற்றியர். இப்பெருமகனார் நம் நூலகத்தில் 11 இலக்கண நூல்களைப் பதிப்புத்துள்ளார்கள்.

இவரிடம் இந்நூலகச் சுவடிகளில், தொல்காப்பியம் சொல்லதிகாரம் பதிப்பிற்காக வழங்கப்பட்டது. முத்தமிழ்த் துறையின் முறைபோகிய இவ்வித்தகர், சொல்லதிகாரத்தின்

முதலியலாம் கிளவியாக்கத்திற்குரிய அனைத்து உரைகளையும் உள்ளடக்கியதாக இந்நூலைப் பதிப்பித்துள்ளார்.

முன்னுரைப் பகுதியில் முதற்கண் தொல்காப்பியத்தின் பதிப்பு வரலாறு, ஆண்டுக் குறிப்போடு செவ்வனே விளக்கப்படுகிறது. சி. வை. தாமோதரம்பிள்ளை, இராசகோபால் பிள்ளை, பாவலர்ஏறு பாலசுந்தரனார் முதலான அறிஞர்களும், பவானந்தர் கழகம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கரந்தைத் தமிழ்ச்சங்கம் முதலான நிறுவனங்களும் தொல்காப்பியப் பதிப்பு முயற்சியிலீடுபட்ட வரலாற்றை விளக்கியுள்ளார்.

இந்நூலகம் வெளியிடும் இவ்வுரைக்கொத்துப் பதிப்பில் சொல்லதிகாரத்தின் ஒவ்வொரு நூற்பாவும், இளம்பூரணர் உரை முதல் பெயர் தெரியாத ஒருவர் உரை முடியப் பல உரைகளும் நிரல்பட அமைந்துள்ளன. ஒவ்வொருவர் உரைக்கும் சிறப்பான உரைவிளக்கக் குறிப்புடனும், ஒவ்வொரு நூற்பாவிற்கும், அவற்றிற்குரிய உரைகளின் இறுதியில் இவ்வுரைகளின் ஒற்றுமை வேற்றுமை பற்றிய ஒப்பீட்டுக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. தேவைப்பட்ட இடங்களில் 1930இல் வெளிவந்த பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் வரைந்த செய்திக்குறிப்பும், சென்ற நூற்றாண்டின் இறுதியில் நம் தஞ்சைத் தரணி தந்த தொல்காப்பியக் கடல் பாவலர்ஏறு பாலசுந்தரனார், தொல்காப்பியம் முழுமைக்கும் வரைந்துள்ள ஆய்வுக் காண்டிகையுரைச் செய்திக்குறிப்பும் தரப்பட்டுள்ளன. ஒவ்வோரியல் இறுதியிலும், பிற்காலத்து வரையப்பட்ட, சொல்லதிகாரம் பற்றிய நூல்களின் ஒப்புமை நூற்பாக்களும் ஒத்த நூற்பாக்களும் இப்பதிப்பில் இடம்பெறுகின்றன.

இப்பதிப்பாசிரியர் சேனாவரையரால் மறுக்கப்பட்ட இளம்பூரணர் உரைகள் சில மறுக்கத்தக்கன அல்ல என்று உரிய காரணத்தொடு விளக்குகிறார். உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் நுண்மாண் நுழைபுலத்தோடு உரை வகுத்துள்ள இடங்கள் பலவற்றை எஞ்சாது எடுத்துக் காட்டுகின்றார்.

மேலும், சேனாவரையர் இளம்பூரணரின் உரையைத் தழுவும் இடங்கள், அவர் உரையை மறுத்துரைக்கும் இடங்கள் ஆகியவை பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன. சேனாவரையர் சொற்களுக்கும் தொடர்களுக்கும் தரும் அரிய விளக்கங்கள் பற்றிய பட்டியலும் பயன்மிக்கது. சேனாவரையர் மேற்கொண்ட உரையின் அமைப்பும் விரிவாக ஆயப்பட்டுள்ளது. நூலாசிரியர் பற்றியும், உரையாசிரியர் பற்றியும் இப்பதிப்பாசிரியர் தரும் செய்திகள் ஆய்வுலகத்திற்குக் கிடைத்த கருத்துக்கருவூலம் என அறுதியிட்டுக் கூறலாம். இலக்கண உரைகளை ஒப்பிட்டு மொழியாராய்ச்சி செய்வார்க்கு இப்பகுதி விழுமிய துணையாக அமைவது உறுதி. மேலும் இலக்கணச் சிந்தனையின் வளர்ச்சியையும், மொழி வரலாற்றுப் போக்கினையும் அறிய இத்தொகுப்புப் பெரிதும் பயன் தரும்.

இத்தகு பெருநூலை உருவாக்கிய பெரும் பேராசிரியர் திரு. தி. வே. கோபாலய்யர் அண்மையில் காலமானார். இந்நூலகம் அன்னாருக்குச் செலுத்தும் அஞ்சலியாக இந்நூலை வெளியிடுகிறது. இந்நூலின் முகப்பு அட்டைக்குத் தமிழன்னை படம் எழிலூட்டுகிறது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அமைந்துள்ள தமிழன்னை சிலையைப் புகைப்படமெடுத்து முகப்பு அட்டையில் பயன்படுத்திக்கொள்ள மாண்பமை துணைவேந்தர் அவர்கள் அனுமதி வழங்கினார்கள். அன்னாருக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூலகத்தின் நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் எம்.ஏ. அவர்கள் வெளியீட்டு மேலாளர் பொறுப்பையும் வகித்துவருகின்றார். அவருக்கும், இந்நிறுவனத்தின் கணினிப் பிரிவில் பணிபுரிவோர்க்கும், என் இனிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
**மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும்**
**இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

தஞ்சாவூர்,
24-11-2007.



# தொல்காப்பியம் - சொல்லதிகாரம் உரைக்கொத்து

## கிளவியாக்கம்








# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# பதிப்புரை

இளம்பூரணரே தொல்காப்பியத்துக்கு முதல் உரையாசிரியர் எனினும், அவர் உரை முதலில் அச்சிடப் படவில்லை. எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையும் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் உரையும் பொருளதிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையுமே சான்றோர் பலராலும் விரும்பிப் பயிலப் பட்டமையின், அவையே 19ஆம்நூற்றாண்டின் பிற்பகுதி தொட்டு அச்சிடப்பட்டன. எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம் 19ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அச்சிடப்பட்டது. அதனைத் தொடர்ந்து சில ஆண்டுகளுக்குப் பின் சொல்லதிகாரம் சேனாவரையம் இராசகோபால் பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டது. அடுத்த இருபது ஆண்டுக்குள் ஏடு எழுதியோரால் நிகழ்த்தப்பட்ட பிழைகளைக் களைந்து பத்தி பிரித்து அழகாக அமைக்கப் பட்ட நாவலர் கைப்பிரதி தாமோதரம்பிள்ளையவர்களால் அச்சிடப்படவே, சேனாவரையர் உரையே பயில்வோரிடைப் பிரசித்தி யாயிற்று. சில ஆண்டுகளுக்குப் பின்னர்த் தாமோதரம்பிள்ளைவர்கள் சொல்லதிகார நச்சினார்க் கினியத்தையும் பதிப்பித்தார். சேனாவரையத்துக்குப் பின் இணைப்பாக விளங்கிய அவ்வுரை சற்றுச் சுருக்கமாக அமைந்திருந்ததால் தொல்காப்பியத்தின் சொல்லதி காரத்திற்கு ஓருரையே பயில விரும்பியவர்கள் சேனாவரை யத்தையே விரும்பினார்கள். சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் சேனாவரையம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் அழகிய முறையில் சில நுட்பமான உரைக் குறிப்புக்களுடன் வெளிவந்தது. சேனாவரையம் கணேசய்யர் உரை விளக்கங்களை அடிக்குறிப்பாகக் கொண்டு இலக்கணச்செய்தி அகரவரிசை, எடுத்துக்காட்டு அகரவரிசை,

'வேற்றுமைப் பொருளை விரிங்குங்காலை' என்பதன் விளக்கக் கட்டுரை, 'பிறிது பிறிது ஏற்றலும்' என்பதன் விளக்கக்கட்டுரை, 'இருபெயரொட்டு ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்' என்ற கட்டுரை, தொகைநிலை என்பது பற்றிய கட்டுரை முதலியவற்றுடன் 1938இல் அழகிய பதிப்பாக வெளிவந்து நன்மக்களால் போற்றப்பட்டது.

தாமோதரம்பிள்ளை 19ஆம் நூற்றாண்டு இறுதியில் பொருளதிகாரம் நச்சினார்க்கினியத்தைப் பதிப்பித்தார். 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அவ்வுரையில் முதல் ஐந்து இயல்கள் நச்சினார்க்கினியர் உரை, பின் நான்கு இயல்கள் பேராசிரியர் உரை என்பது நிறுவப்பட்டது. இருபது ஆண்டுகளுக்குப் பின் செய்யுளியல் நச்சினார்க்கினியர் உரை அடிக்குறிப்பில் இளம்பூரணர் உரையொடு வெளிவந்தது. பொருளதிகாரம் நச்சினார்க்கினியர் உரையும் பேராசிரியர் உரையும் பவானந்தர் பதிப்பாகவும் கனகசபைப்பிள்ளை பதிப்பாகவும் வெளிவந்தன. அடுத்துக் கணேசய்யர் பதிப்பாகப் பல அடிக்குறிப்புக்களையும், எடுத்துக்காட்டுப் பாடல்களின் குறிப்புரைகளையும், பல தேவையான பிற்சேர்க்கைகளையும் சிறுபொழுது பற்றிய கட்டுரையையும் கொண்டு நச்சினார்க்கினியம் தனியாகவும், பேராசிரியம் தனியாகவும் வெளிவந்தன.

எழுத்து இளம்பூரணம் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வெளிவந்தபின் அறுபது ஆண்டுகளுக்குப்பின் வ. உ. சிதம்பரம்பிள்ளை பதிப்பாக வெளிவந்தது. அடுத்த சில ஆண்டுகளில் பொருள்இளம்பூரணமும் அவரால் பதிப்பிக்கப் பட்டது.

சொல்லதிகாரம் இளம்பூரணம் நமசிவாய முதலியாரால் இலக்கணச்செய்தி அகரவரிசை, எடுத்துக்காட்டு அகரவரிசை, இளம்பூரணர் உரை சேனாவரையரால் மறுக்கப்படும் இடங்கள் முதலிய இன்றியமையாத செய்திகளுடன் 1927இல் முதன்முதலாகப் பதிப்பிக்கப்பட்டது.

எழுத்து இளம்பூரணம் அடிகளாசிரியர் சொந்தப் பதிப்பாகச் சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதியை ஒட்டியும், சொல் இளம்பூரணம் அவரால் செப்பம் செய்யப்பட்டுத் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்பாகவும் சிறப்பான முறையில் பல பிற்சேர்க்கைகளுடன் வெளிவந்துள்ளன.

சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம் பவானந்தர் கழகப்பதிப்பாக மிகச் சிறந்த முறையில் புல பிற் சேர்க்கைகளுடன் வேணுகோபாலப்பிள்ளையவர்களால் 1941இல் பதிப்பிக்கப்பட்டது.

சொல்லதிகாரம் தெய்வச்சிலையார் உரை கரந்தைத் தமிழ்ச் சங்கப் பதிப்பாகக் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளையவர்களால் 1929இல் பதிப்பிக்கப்பட்டது.

கல்லாடர் உரையும், பெயர் தெரியாத ஒருவருடைய உரையும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் 1964இல் முதன்முறையாகப் பதிப்பிக்கப்பட்டன. வேறு பதிப்புக்களும் உள.

இந்த எல்லா உரைகளும் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரால் தேவை ஏற்படுங் காலங்களி லெல்லாம் அவ்வப்போது பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. தொடக்கத்தில் சேனாவரையத்தைத் தேவநேயப்பாவாணர் குறிப்புரையுடனும் பூவராகவம் பிள்ளை விளக்கக் குறிப்புடனும் பதிப்பித்த கழகம், 1960க்குப் பிற்பட்ட தொல்காப்பியப் பதிப்புக்களை எல்லாம் எம்மாணாக்கர் முனைவர் கு.சுந்தரமூர்த்தியின் உரை விளக்கக் குறிப்பினைப் பிற்சேர்க்கையாக இணைத்துப் பதிப்பித்துள்ளது. வாணிக நிமித்தமாக மிகுதியாக விலையிடாமல் நல்ல கட்டுக் கோப்புடன் இந்நூல்களை வழங்கவேண்டியிருத் தலின், ஷை நூற்பதிப்புக் கழகத்தார், உரைவிளக்கத்தை அடிக்குறிப்பாக அமைத்தற்கண் ஏற்படும் சிக்கலையும், பிற்சேர்க்கைகளை இணைப்பதனால் ஏற்படும் பொருசெலவையும்

உட்கொண்டு அவற்றை விடுத்தனர்போலும். சேனாவரையம் முனைவர் கு. சுந்தரமூர்த்தியின் விளக்கக் குறிப்புக்களுடன் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பாகவும் வெளி வந்துள்ளது.

தஞ்சை சரசுவதிமகால் நூல்நிலையத்தாரால் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியமும் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியமும் இராம. கோவிந்தசாமிப்பிள்ளை என்ற அறிஞரைக்கொண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன. தொல்காப்பிய உரைவளம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தாரால் சிவலிங்கனாரைக் கொண்டு 1980 முதல் விரிவாகப் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.ం

தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல்நிலையம் வெளியிடும் இவ்வுரைக்கொத்துப் பதிப்பில் சொல்லதிகாரத்தின் ஒவ்வொரு நூற்பாவும், இளம்பூரணர்உரைமுதல் பெயர் தெரியாத ஒருவர் உரை முடிய வரிசையாக அமைக்கப்பட்டு, ஒவ்வொருவர் உரைக்கும் தேவைப்படும் உரைவிளக்கக் குறிப்புடனும், ஒவ்வொரு நூற்பாவின் உரைகளின் இறுதியில் இவ்வுரைகளின் ஒற்றுமை வேற்றுமை பற்றிய குறிப்புடனும், தேவைப்பட்ட இடங்களில் 1930இல் வெளிவந்த பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் வரைந்த செய்திக்குறிப்புடனும், சென்ற நூற்றாண்டின் இறுதியில் பாவலர்ஏறு. பாலசுந்தரனார் என்ற பெரும்புலவர் தொல்காப்பியம் முழுமைக்கும் வரைந்துள்ள ஆராய்ச்சிக் காண்டிகையுரைச் செய்திக் குறிப்புடனும் நிகழ்கிறது. ஒவ்வோரியல் இறுதியிலும், பிற்காலத்து வரையப்பட்ட சொல்லதிகாரம் பற்றிய நூல்களின் ஒப்புமை நூற்பாக்கள், **ஒத்த நூற்பாக்கள்** என இப்பதிப்பில் இடம்பெறுகின்றன. உரைகளில் ஏடு எழுதியோரால் நிகழ்த்தப்பட்ட பன்மை ஒருமை மயக்கம், ஒரு ஓர் வேறுபாடின்மை, ஒடு ஓடு வேறுபாடின்மை, அது அஃது வேறுபாடின்மை, மேற்கோள் பாடல்களில் அமைந்த எழுத்துப் பிழைகள் போல்வன களையப்பட்டுள்ளன. பாடவேறுபாடு என்ற பெயரால் ஏடு எழுதியோர் நிகழ்த்திய பிழைகள் பாடவேறுபாடுகளாகக் காட்டப்படவில்லை.

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியாத பண்டையுரையாசிரியராகிய ஒருவர் - என இவ்வுரையாசிரியன்மார் அறுவர் உரையும் முறையே இடம் பெற்றுள்ளன. அவ்வவ்வுரைப்பகுதியை யடுத்து, ஏற்புழியெல்லாம் பெரும்பான்மையும் சூத்திரம் தோறும் அவ்வவ்வுரை விளக்கம் இடம்பெற்றுள்ளது. இவற்றை யடுத்து வேண்டுழியெல்லாம் பி.சா. சுப்பிரமணிய சாத்திரியார், ச. பாலசுந்தரனார் இவர்கள் தம் உரைக் குறிப்புக்கள் முறையே இடம்பெற்றுள. உரையாசிரியர் களிடைச் சூத்திர எண்கள் வேறுபடுதலின், அவ்வேறுபாடு தோன்ற, அவ்வவ்வுரையாசிரியர் உரை தொடருமிடத்தே சூத்திர எண் குறிக்கப்பெற்றுள்ளது. உரிய சூத்திரம் உரைதோறும் வரையப்பட்டுள்ளது, மயக்கமின்மை கருதியே என்க. ஒற்றைப்படை எண்பெறும் பக்கத்தில், நூற்பா எண், அப்பக்கத்தே நிகழும் செய்திக்குரிய உரையாசிரியரது கருத்துக்கு இயைந்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. நெடுமுன்னரே இவ்வுரைக்கொத்துச் செய்தி முழுதும், விரைவில் நூல்நிலையத்தே அச்சிடுதற்கு வாய்ப்பாகக் கொடுக்கப்பட்டிருப்பினும், பனுவல் அச்சிடும் பணி ஏதோ ஒருவகையால் காலப்பணிப்பின்வாய்ப்பட்டது.

விரிவான முன்னுரைச்செய்திகளொடு வெளிவரும் இம்முதல்தொகுதி கிளவியாக்கம் ஒன்றும் பற்றியது. இரண்டாம்தொகுதி அடுத்த மூன்று இயல்கள் பற்றியது. மூன்றாவது பெயரியல் வினையியல் என்ற இரண்டும் பற்றியது. இறுதித்தொகுதி இடையியல் உரியியல் எச்சவியல் என்ற மூன்றும் பற்றியது. தொகுதிதோறும் நூற்பா அகரவரிசையும் சுருக்கெழுத்து விளக்கமும் இடம்பெறும். இயல்தோறும் இறுதியில் ஒத்த நூற்பாக்கள் அணி செய்யும். பக்கவரையுட்கொண்டு பொருட்குறிப்பு எடுத்துக்காட்டு அகரவரிசைகள் இடம்பெற வாய்ப்புண்டு.

## தொல்காப்பியச் சொல்லதிகார உரைப்பதிப்புக்கள்

தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பெயர் தெரியாத ஒருவர் என்ற அறுவர் வரைந்த உரைகளும் அச்சில் வெளிவந்துள்ளன. அவற்றின் விவரம் பின்வருமாறு:

| உரையாசிரியர் பெயர் | பதிப்பித்தோர் பெயர் | ஆண்டு |
|---|---|---|
| இளம்பூரணர் | நமசிவாய முதலியார் | 1927 |
| சேனாவரையர் | இராசகோபால் பிள்ளை | 1868 |
| | தாமோதரம் பிள்ளை | 1886 |
| | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் | 1923 |
| | கணேசையர் | 1938 |
| நச்சினார்க்கினியர் | தாமோதரம்பிள்ளை | 1892 |
| | வேணுகோபாலப்பிள்ளை | 1941 |
| | சை. சி. நூ. கழகத்தார் | 1962 |
| | தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தார் | 1962 |
| தெய்வச்சிலையார் | வேங்கடாசலம்பிள்ளை | 1929 |
| | சை. சி. நூ. கழகத்தார் | 1964 |
| கல்லாடர் உரை, | சை. சி. நூ. கழகத்தார் | 1964 |
| ஒருவர் உரை | தெ.பொ.மீனாட்சி சுந்தரம் பிள்ளை | 1971 |
| சொல்லதிகார உரைவளம் முற்பகுதி | ஆபிரகாம் அருளப்பன் வி. ஐ. சுப்பிரமணியம் | 1980 |
| ஷை உரைவளம் முழுதும் | சிவலிங்கனார் | |

சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சான்றோர் பலருடைய அடிக்குறிப்பு, பிற்சேர்க்கை, விளக்கம் முதலியவற்றொடு தொல்காப்பியச் சொல்லதிகார உரைகள் பலவற்றையும் தொடர்ந்து பதிப்பித்து வழங்கிவருகிறது. 1960க்குப்பின் வெளிவந்துள்ள தொல்காப்பியச் சொல்லதிகார உரைகள் பலவற்றிற்கும் எம்மிடம் தொல்காப்பியம் பயின்ற திரு. சுந்தரமூர்த்தி அவர்களின் விளக்கக் குறிப்புக்கள் அமைந்திருக்கும் செய்தி எமக்குப் பெருமகிழ்வைத் தருகிறது.

என் அறியாமையான் இப்பதிப்பில் நிகழ்ந்திருக்கக் கூடிய பிழைகளைத் திருத்தம் செய்து நன்மக்கள் பயன்கொள்ள வேண்டுகிறேன்.

குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

அன்பன்,

புதுச்சேரி,
20-06-2006

**தி. வே. கோபாலையன்.**



## தொல்காப்பியம் - சொல்லதிகாரம் உரைக்கொத்து

# முன்னுரைச் செய்திகள்

### தொல்காப்பியனார்

இன்று தமிழில் வழங்கும் இலக்கண நூல்களுள் தொல்காப்பியமே பழமையானது. அதற்கும் முற்பட்ட காலத்தனவாகக் கருதப்படும் எட்டுத்தொகைப் பாடல்கள் மிகச்சிலவே இருக்கலாம். பொதுவாகப் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் தொல்காப்பியம் இயற்றப்பட்ட பின்னரே தோன்றின எனலாம்.

எழுத்து, சொல், பொருள் என்னும் முப்படலங்களையும், படலம் தோறும் ஒன்பது ஒன்பது ஓத்துக்களையும், ஏறத்தாழ 1600 நூற்பாக்களையும் கொண்டுள்ள தொல்காப்பியம் ஒரு சுருக்க நூலே. 'புலம்தொகுந்தோனே' என்ற சிறப்புப்பாயிரச் சொற்றொடர் இதனை வலியுறுத்தும். தொல்காப்பியத்தின் சிறப்பு, செய்திகளை வரிசைப் படுத்திக் கூறுதலே. இதனை 'மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி' என்ற சிறப்புப்பாயிரத் தொடர் எடுத்து இயம்புகிறது. இன்றியமையாத செய்திகளைச் சுருக்கமாகவும் வரிசைப்படவும் குறிப்பிடும் தொல்காப்பியச் செய்திகளை விரிவாகத் தெரிந்துகொள்ள விழைந்தார்க்குத் தம் காலத்திலேயே விரிவான இலக்கண நூல்கள் இருந்த செய்தியைத் தொல்காப்பியனாரே சொற்படல இறுதி நூற்பாவில்

'செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரிந்தனர் காட்டல்' சொல். 463

என்று குறிப்பிடுவதனால் அறியலாம்.

இஃது ஒரு சுருக்க நூல்; ஆகவே, இதன்கண் பல செய்திகள் குறிப்பிடப்படாமலே போதகாசிரியர் மாணாக்கருக்கு உணர்த்தும் வகையில் விடுக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, எழுத்து, சொல், பொருள், அகம், புறம், செய்யுள், உவமம் இவற்றின் இலக்கணம் வெளிப் படையாகக் குறிப்பிடப்- படவில்லை. தொல்காப்பியனார் தாம் வழிநூல் ஆசிரியர் என்பதும், தம் நூலுக்கு முன்னரே தமிழ் இலக்கண நூல்கள் பல இருந்தன என்பதும், அவற்றைப் பயிற்றிய போதகாசிரியர் பலர் இருந்தனர் என்பதும் புலப்படுத்தும் நூற்பாக்களில் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் 'என்ப' என்ற சொல்லையும், 65க்கு மேற்பட்ட இடங்களில் 'என்மனார் புலவர்' 'என்மனார்' என்பன வற்றையும், 10க்கு மேற்பட்ட இடங்களில் 'வரையார்' என்ற சொல்லையும் ஆண்டுள்ளார். மேலும் அறிந்திசினோர், உணர்ந்திசினோர், உயர்மொழிப் புலவர், கற்றறிந்தோர், குறி அறிந்தோர், சிறந்திசினோர், சொல்லியற் புலவர், தெரியுமோர், தெளியுமோர், தொன்மொழிப் புலவர், தொன்றுமொழிப்புலவர், நல்லிசைப் புலவர், நுண்ணிதின் உணர்ந்தோர், நுணங்குமொழிப் புலவர், நுனித்தகு புலவர், நூல்நவில் புலவர், நேரிதின் உணர்ந்தோர், பாங்குற உணர்ந்தோர், புலன் உணர்ந்தோர், மொழிமனார், யாப்பு அறிபுலவர், வாய்மொழிப் புலவர் முதலிய சொற்றொடர் களால் தமக்கு முன்னர் வாழ்ந்தவரும், தம் சமகாலத்தில் வாழ்ந்தவருமான புலவர் பெருமக்களைத் தம் நூற்பாக்களில் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியத்திலுள்ள சூத்திரங்கள் எல்லாம் நூற்பாயாப்பில் அமைந்தவை. தொல்காப்பியத்தில் இருசீர் கொண்ட அடி முதலாக 59 அடி உயர் எல்லையாக நூற்பாக்கள் அமைந்துள்ளன. நூற்பாக்கள் யாவும் சிறந்த இலக்கியம் போல எதுகை நயமும் மோனைநயமும் இனிய நடையும் நிறைந்தவை. எழுத்துப்படல நூற்பாவின் உயர்எல்லை 13 அடி. சொற்படல நூற்பாவின் உயர்எல்லை 11 அடி. பொருட்படல நூற்பாவின் உயர்எல்லை 59 அடி.

இப்பெருமகனாரின் வரலாறு பற்றிய செய்தியாக 20 ஆம் நூற்றாண்டின் தொடக்ககாலம்வரைப் புலவர் பெருமக்கள் மனம்கொண்டு குறிப்பிட்ட செய்திகள் இக்கால அறிஞர்களின் கருத்துக்கு இசைவுடையனவாகக் கொள்ளப் படவில்லை. முற்கால அறிஞர்கள் புராண இதிகாசச் செய்திகளுக்கும் செவிவழிச் செய்திகளுக்கும் நிறைந்த மதிப்புக் கொடுத்து அவற்றை வரலாற்றுச் செய்திகளாகவே கொண்டனர். எடுத்துக்காட்டாக, கி. பி. 1905இல் அரசஞ் சண்முகனார் என்ற பெரும்புலவரால் இயற்றப்பட்ட தொல்காப்பியப் பாயிர விருத்தி என்ற நூலில் தொல்காப்பியர் வரலாறாக அவரால் ஆட்டாண்டு கூறப்பட்ட செய்திகளைத் தொகுத்துக் காண்பாம்.

''இனி ஆசிரியர் அகத்தியனாருக்கு மாணாக்கர் பன்னிருவர், சமதக்கினி இருடியின் புதல்வருள் ஒருவனும் பரசுராமன் சோதரனுமாகிய திரணதூமாக்கினி என்னும் இயற்பெயர் உடைய தொல்காப்பியனும், அதங்கோட்டு ஆசானும், துராலிங்கனும், செம்பூட்சேயும், வையாபிகனும், வாய்ப்பியனும், பனம்பாரனும், கழாரம்பனும், அவி நயனும், காக்கைபாடினியும், நற்றத்தனும், வாமனனும் என. அவருள்ளே தொல்காப்பியன், அவிநயன் முதலாயினார் முத்தமிழும் விரவக்கூறிய முதல்நூலாகிய அகத்தியத்தி னின்று இயற்றமிழை வேறு பிரித்து வழிநூல் செய்தார். அவ்வழிநூல் எல்லாவற்றுள்ளும் தொல்காப்பியமே சிறந்தமையின் இடைச் சங்கத்தார் அதனை அகத்தியத்தோடு ஒப்புக்கொண்டு போற்றினார். அந்நாள் முதல் இன்றுகாறும் ஏனைய நூல்பரப்பு எல்லாம் அழியத் தொல்காப்பியமே நிலைபெற்று வழங்கல் அதற்குத் தக்க சான்றாம். இசைத் தமிழ் வழிநூல் எல்லாவற்றுள்ளும் சிறந்தது, சிகண்டி செய்த இசைநுணுக்கம். இசைநுணுக்கம் போலவே, தொல்காப்பியத்தின் முன்னர்த் தோன்றிய வழிநூல்கள் பூதபுராணமும் மாபுராணமுமாம். அவை இன்ன ஆசிரியரால் செய்யப்பட்டன என அறிதல் இக்காலத்தில் கூடாதாயிற்று. ஆயினும் அவை அகத்தியம் போல் விரவிக் கூறாமல் வேறு

பிரித்து முத்தமிழும் முற்றக்கூறிய விரிந்த வழிநூல் என்பது மாத்திரம் முன்னோர் உரைகளால் விளங்குகின்றது. தொல்காப்பியன் முதல் பன்னிருவரும் ஓரொருவர் ஓரொரு படலமாகப் பன்னிரு படலம் என்னும் வழிநூல் ஒன்று செய்தனர்.......கடைச்சங்கத்தின் பின்னர்த் தொல்காப்பியம் ஒழிந்த நூலுள் மிகப்பல இறப்பத் தொல்காப்பியத்தின் வழித்தாகச் செய்யினும், ஆசிரியன் கருத்து உணராமல் மரபுநிலை திரியச் செய்தமையான் பிரமாணம் ஆகாத நூலும் பல தோன்றின. அவை சின்னூல், நன்னூல், வீரசோழியம், இலக்கணக்கொத்து, பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், சூத்திரவிருத்தி, இலக்கவிளக்கச் சூறாவளி முதலாகப் பல.

''இனி, அகத்தியனார்வழித் தோன்றிய ஆசிரியர் எல்லாருள்ளும் தொல்காப்பியனாரே தலைவர் என்பது எல்லா ஆசிரியர்க்கும் ஒத்த துணிவு. என்னை?

'கூறிய குன்றினும் முதல்நூல் கூட்டித்
தோமின்று உணர்தல் தொல்காப் பியன்தன்
ஆணையின் தமிழ்அறிந் தோர்க்குக் கடனே'

என்று பல்காப்பியனார் கூறினமையானும்,

'வீங்குகடல் உடுத்த வியன்கண் ஞாலத்துத்
தாங்கா நல்லிசைத் தமிழ்க்குவிளக்கு ஆகஎன
வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ்
ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்
அருந்தவ முனிவன் ஆக்கிய முதல்நூல்
பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்'

என்பதனான் அகத்தியனார் செய்த அகத்தியத்தினை முதல்நூல் எனவும், அவர் வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ் ஆனாப் பெருமை உடையார் எனவும், அவர் செய்த முதல்நூலைப் பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோருள்

தலைவர் ஆயினார் தொல்காப்பியனார் எனவும், பன்னிரு படலத்துக்குப் பாயிரம் கூறியதனை அப்பன்னிருவரும் உடன்பட்டமையானும், பன்னிரு படலம் முதல்நூலாக வழிநூல் செய்த வெண்பாமாலை ஐயன் ஆரிதனாரும்,

'மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை இருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்தமிழ் தாவின்று உணர்ந்த
துன்அருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதல்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த'

எனப் பாயிரம் செய்தற்கு உடன்பட்டமையானும், கடைச் சங்கத்தாருள் களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரனார் 'இடைச்சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் நூல் ஆயிற்றுத் தொல்காப்பியம்' எனக் கூறியமையானும் என்பது.

''இனி, நச்சினார்க்கினியர், பாண்டியன் மாகீர்த்தி இருபத்துநாலாயிரம் ஆண்டு வீற்றிருந்தான் என்பது, . . . . . . . தொல்காப்பியனார் அகத்தியனாரைச் சபித்த வரலாறு முதலியவற்றையும் . . . . பாயிரத்துள் உரைத்தார். அவர் இன்ன நூல் பிரமாணம் கொண்டு எழுதினார் என அறிதல் பன்னூல் இறந்துபட்டமையான் இக்காலத்து அரிதாயிற்று. நமக்கு மேற்கோள் கிட்டாமைகொண்டு அவர் உரைத்தன கொள்ளாம் எனல் அமையாது. என்னை? 'பாண்டியன் மாகீர்த்தி இருபத்துநாலாயிரம் ஆண்டு வீற்றிருந்தான்' என்றாற்போல் புனைந்துரை வகையாற் கூறுவவும் ஆசிரியர் கருத்தை மாறாக உணர்ந்தமையான் கூறுவவும் அன்றி, அவர் பன்னூல் பயின்ற செந்நெறிச் செல்வராகலின், தாமே ஒன்றைப் படைத்திட்டுப் பொய்கூறார் ஆகலானும் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் நகுடற்குப்பின், தென்திசை போந்தபின், சுவர்க்கம் போய் மீண்டார் என எந்நூலகத்தும் இன்மையானும் என்பது . . . . . . .'' *(பா. வி. பா. 104-7)*

இதனால் முன்னைய தமிழ்ச் சான்றோர் தம்முன்னோர்களைப் பொய் கூறாத புனிதர் என்று மதித்து, அவர்கள் பழம்புராண வாயிலாகவும் செவிவழிச் செய்தி வாயிலாகவும் அறிந்து குறிப்பிட்டவற்றைப் பிரமாணமாகக் கொண்டே ஆராய்ச்சி செய்தனர் என்பதும், இப்பொழுது அம்மரபு அடியொடு மாறி, கைக்குக் கிட்டிய சான்றுகளைக் கொண்டும், தாம் தம் மனத்து உறுதியாக முடிவுசெய்துள்ள கருத்துக்கு மாறாக ஒரு நூலின் செய்யுள்கள் அமைந்திருப்பின் அவை இடைச்செருகல்கள் என்று உறுதியாகக் கூறியும், நூலாசிரியரைத் தம் கருத்துக்கு இழுத்துவந்தும் செய்யும் புதுமுறை ஆராய்ச்சியே தலைதூக்கி நிற்கின்றது என்பதும் உளங்கொளத் தக்கன.

தொல்காப்பியனார் தம் பொருளதிகாரத்தின் புறத்திணை யியலில் புறத்திணையும் அகத்திணை போல ஏழே என்று குறிப்பிட்டு, வெட்சி குறிஞ்சிக்குப் புறன், வஞ்சி முல்லைக்குப் புறன், உழிஞை மருதத்துப் புறன், தும்பை நெய்தற்குப் புறன், வாகை பாலைக்குப் புறன், காஞ்சி பெருந்திணைக்குப் புறன், பாடாண் கைக்கிளைக்குப் புறன் என்று விளக்கி நூற்பா வரைந்தவர். புறத்திணை பன்னிரண்டு என்ற கோட்பாட்டினை ஏற்றுப் பன்னிரண்டு புறத்திணை களில் முதலாவதாகிய வெட்சித்திணையின் துறைகளை விரித்துக்கூறி வெட்சிப்படலம் என்ற நூற்பகுதியை இயற்றித் தந்திருப்பார் என்ற செய்தி இளம்பூரணருக்கும் உடன்பாடு அன்றாம்.

ஆகவே, அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருள் முதல்வரும், அகத்தியத்தின் வழிநூலான பன்னிரு படலத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றாகிய வெட்சிப்படலத்தை இயற்றியவரும் ஆகிய தொல்காப்பியனார் வேறு ஒருவர். தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்திலோ, தொல்காப்பிய நூலிலோ யாண்டும் அகத்தியர் பெயர் காணப்பெறாமையின், பன்னிருபடலத் தொல்காப்பியரின் இவர் வேறொருவர் என்றும், இவர் அகத்தியரின் மாணாக்கராய் இருந்தார்

என்பதற்குப் போதிய சான்று இன்மையான் அகத்தியருக்கு அடுத்த காலத்தில் வாழ்ந்து, தமக்கு முன்னர் வழக்கத்தில் இருந்த இயற்றமிழ் நூல்களாகிய மாபுராணம், பூதபுராணம் முதலிய பல நூல்களையும் ஆய்ந்து செய்திகளை வரிசைப்படுத்திச் சுருக்க நூலாகத் தொல்காப்பியத்தை வரைந்தவர் இவர் என்றும், எனவே, தொல்காப்பியர் என்ற பெயரில் இருவர் அடுத்து அடுத்து வாழ்ந்திருக்கலாம் என்றும் முடிவுசெய்யும் ஆராய்ச்சியாளரும் உளர்.

ஆசிரியர் தொல்காப்பியனார் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்று சிறப்புப் பாயிரத்தில் போற்றப் படுதலுக்கு ஏற்ப, வடமொழியில் ப்ராதிசாக்ய நூல்களையும், யாஸ்கரது நிருக்தத்தையும், மற்றுமுள்ள நூல்களையும் நன்கு அறிந்தவர் என்பது, மொழிமரபு பிறப்பியல் என்ற பகுதிகளிலுள்ள நூற்பாக் களாலும், உரியியல் நூற்பாக்க ளாலும், வேற்றுமைப் பொருள் உணர்த்தும் வேற்றுமை யியல் நூற்பாக்களாலும் நன்கு அறியப்படும். இவர் அந்தணருடைய வேதத்தை அறிந்தவர் என்பது 'எல்லா . . . அந்தணர் மறைத்தே' (எ. 102) என்ற நூற்பாவான் விளங்கும்.

இவர் தமிழ்மொழி, வடமொழி இரண்டையும் நன்கு ஆராய்ந்து, முன் இருந்த இலக்கணங்களினும் சிறந்ததோர் இலக்கண நூலை எழுதியுள்ளார் என்பது தெளிவு. எழுதத் தொடங்குமுன் அம்மொழிகள் இரண்டற்கும் இடையே உள்ள வேற்றுமை ஒற்றுமை இரண்டனையும் அறிந்து, வடமொழி முறைகளுள் தமிழுக்கு ஏற்பனவற்றைத் தமிழ்மொழியின் அழகு குன்றாதவாறு அமைக்க வேண்டிய இடங்களில் அமைத்தும், மொழிபெயர்த்தும், வடமொழி யிலிருந்து தமிழ்மரபு வேறுபடும் இடங்களைத் தமிழுக்கே உரிய தனித்தன்மை தோன்ற விரித்தும், கற்றவர் வியந்தும் நயந்தும் பாராட்டும் வகையில் தொல்காப்பியத்தை முப்படலங்களாக அமைத்துள்ளார்.

இனி, *தமிழ்மொழிக்கும் வடமொழிக்கும் உள்ள வேற்றுமை*

**எழுத்து**

தமிழ் மொழியில் உள்ள எ, ஒ - வடமொழியில் இல்லை. வடமொழியிலுள்ள ஊகாரத்தை அடுத்து வழங்கப் படும் ரு, ரூ, லூ என்ற மூன்று உயிர்களும் தமிழ்மொழியில் இல்லை.

வடமொழியில் ஏ, ஐ, ஓ, ஔ நான்கும் இணைப்பு எழுத்துக்கள் (சந்தி அக்கரம்).

| | |
|---|---|
| அ, ஆ + இ, ஈ | - ஏ |
| அ, ஆ + ஏ | - ஐ |
| அ, ஆ + உ, ஊ | - ஓ |
| அ, ஆ + ஓ | - ஔ |

இவ்வாறு தமிழில் உள்ள எ, ஏ, ஒ, ஓ, ஔ என்பன இணைப்பு எழுத்துக்கள் ஆகா. வடமொழியில் க, ச, ட, த, ப என்ற ஐவருக்கத்து ஒவ்வொன்றையும் அடுத்த மூவெழுத்துக் களும் தமிழில் இல்லை. தமிழில் உள்ள ழ, ற, ன வடமொழியில் இல்லை. வடமொழியில் ட, ண - நாநுனி மடித்து அண்ணத்தின் மேற்பகுதியைத் தொடப்பிறக்கும். தமிழில் ட, ண - நுனிநா, நுனி அண்ணத்தைத் தொடப் பிறக்கும். தமிழில் உள்ள குற்றியலிகரம், குற்றியலுகரம் இரண்டும் வடமொழியில் இல்லை. தமிழில் ஆய்தம் வல்லினமெய் ஆறன் முன்னரும் வரும்; வடமொழியில் க,ப என்ற இரண்டன் முன்னரே வரும். வடமொழியில் இணைந்த மெய் (ஸம்யுக்தாக்ஷரம்) மொழிமுதலில் வரும். தமிழில் இணைந்த மெய் என்ற அமைப்பே இல்லை.

சொல்லொடு சொல் புணரும் புணர்ச்சியில் இரண்டற்கும் வேறுபாடுகள் மிகப் பல.

1. தமிழில் வேற்றுமைப் புணர்ச்சி, அவ்வழிப் புணர்ச்சி இரண்டும் பெரும்பாலும் வேறானவை. அவற்றை அறிவதற்கு அச்சொற்கள், சொற்றொடர்கள் ஆகியவற்றின் பொருளை அறிதல் இன்றியமையாதது. வடமொழியில் இவ்வாறு இல்லை.

2. தமிழில், நிலைமொழி ஈற்று உயிரும் வருமொழி முதலுயிரும் புணரும்போது, இடையில் உடம்படுமெய் வருதல் இயல்பு. அவ்விரண்டும் புணரும்போது வடமொழிப் புணர்ச்சி பெரும்பாலும் வேறுபட்டது. குற்றியலுகரப் புணர்ச்சியும், சாரியைப் புணர்ச்சியும் தமிழுக்குத் தனிப்பட்ட முறையில் உள்ளன.

**சொல்**

1. தமிழில் பெயர்ச்சொல்லின் பால் பெரும்பாலும் அதன் பொருளாலே விளங்கும். வடமொழியில் பொருளுக்கும் சொல்லின் பாலுக்கும் சம்பந்தமே இல்லை. சொல் ஆண்பாலாக இருக்கப் பொருள் அஃறிணையாக இருக்கும் (விருக்ஷம் - மரம்). சொல் ஒன்றன்பாலாயிருக்கப் பொருள் ஆண்பாலாக இருக்கும்; பெண்பாலாகவும் இருக்கும் (மித்ரம் - நண்பன், தோழி). சொல் ஆண் பாலாயிருக்கப் பொருள் பெண்பாலாய் இருக்கும் (தாரா-மனைவி).

2. வடமொழியில் உள்ள இருமை தமிழில் இல்லை. வடமொழியில் ஒருமைக்கு வேறு வினைமுற்று, இருமைக்கு வேறு வினைமுற்று, பன்மைக்கு வேறு வினை முற்று. வேற்றுமை உருபு இணைவதிலும் ஒருமைக்கும் இருமைக்கும் பன்மைக்கும் வேறுபாடு உண்டு.

3. வடமொழி வினைமுற்று ஒருமை, பன்மை குறிக்குமேயன்றிப் பால் குறியாது.

4. வடமொழியில் பெயர் வேறு; அதன் முதல் வேற்றுமை வடிவம் வேறு. தமிழில் முதல்வேற்றுமை 'பெயர் தோன்றுநிலையே'.

5. தமிழில் இடைச்சொற்களும் உரிச்சொற்களும் பொருள் குறித்தபின் அவையும் சொற்களாகக் கணக்கிடப் பட்டுள்ளன. வடமொழியில் இடை, உரி சொற்களாகக் கணக்கிடப்படவில்லை.

6. தமிழில் பொருளை அறியாது சொல் இலக்கணம் கூற இயலாது. எனவே, ஆகுபெயர், எச்சம் என்பன தமிழில் சொல்லிலக்கணத்திலே கூறப்பட்டுள்ளன. வடமொழியில் இவை அணியிலக்கணத்திலேயே இடம் பெறுகின்றன.

7. வினைமுற்று படுத்தல் ஓசையால் வினையால் அணையும்பெயர் ஆதல் தமிழிலேயே உண்டு. வட மொழியில் அவ்வாறு இல்லை.

தமிழில் அறுவகைத் தொகை உண்டு. வடமொழியிலும் அறுவகைத் தொகைகள் உண்டு. ஆனால் அவற்றிடையே வேற்றுமையும் உண்டு. வேற்றுமைத்தொகை, பண்புத் தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்ற நான்கும் ஓரளவு இருமொழியிலும் ஒற்றுமைப்படும். தமிழிலுள்ள வினைத்தொகை உவமைத்தொகை வடமொழியில் இல்லை. வடமொழியிலுள்ள எண்தொகை, இடைச்சொல்தொகை தமிழில் இல்லை. சொற்படலத்துள் காணப்படும் உயர்திணை அஃறிணை என்ற சொற் பாகுபாடும், பொருட்படலத்தில் காணப்படும் அகம் புறம் என்ற பொருட்பாகுபாடும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்ற அகத்திணைப்பாகுபாடும், வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற புறத்திணைப் பாகுபாடும், ஆசிரியம், வெண்பா, கலி, வஞ்சி என்ற பாக்களின் பாகுபாடும்போல்வன தமிழிற்கே சிறப்பாக உரியனவாம்.

"தமிழ்மொழிப் புணர்ச்சிக்கண் படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும், இன்னோரன்ன பிறவும்

வடமொழியில் பெறப்படா'' என்று சிவஞானமுனிவர் தமிழ் இலக்கணத்தின் தனித்தன்மையினைத் தாம் வரைந்த முதற்சூத்திரவிருத்தியில் குறிப்பிட்டுள்ளார்.

'ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்' - செ ா. 462

சூதர் ஏத்திய துயிலெடைநிலை, கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கம், பெருமங்கலம், மண்ணுமங்கலம், குடைநிழல் மரபு, வாண்மங்கலம், கண்படைநிலை, இயன்மொழி வாழ்த்து, புறநிலைவாழ்த்து, வாயுறைவாழ்த்து, செவியறிவுறூஉ, ஓம்படை (பொ - 87, 88) என்பனவற்றை நோக்க, தொல்காப்பியனார் காலத்திலேயே பல சிற்றிலக்கியங்கள் சிறப்பாகத் தமிழில் இயற்றப்பட்ட திறம் போதரும். செய்யுளியல் குறிப்பிடும் அம்மை, தொன்மை, தோல், விருந்து, இயைபு முதலிய வனப்புக்களை நோக்கத் தமிழில் அவர் காலத்தில் பல தொடர்நிலைச் செய்யுள்கள் இருந்தமையும் அறியப்படும்.

'இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே' சொ. 397
'மொழிபெயர்த்து அதற்பட யாத்தலோடு அனைமர
பினவே' பொ. 652

என்ற நூற்பாக்களால், தேவைப்பட்ட இடங்களில் ஆரியச்சொல்லைத் தமிழ் மரபிற்கு ஏற்பத் திரித்து அமைத்துக்கொண்ட வடசொற்களைப் பயன்படுத்துவது அவருக்கு உடன்பாடு என்பதும், தேவைப்பட்டால் தமிழ் வனப்புக் குன்றாது பிறமொழிச் சொற்களை மொழி பெயர்த்தும் கொள்ளலாம் என்பது அவர் கருத்து என்பதும் போதரும்.

தொல்காப்பியச் சொற்படலத்தில், சேனாவரையர் நூற்பாப் படி, தெய்வம் (4, 57) அந்தம் (4), பகுதி (17), காரணம்

(21, 22, 40, 394), வண்ணம் (26, 78, 416), இலக்கணம் (27), காலம் (38, 57, 81, 110, 112, 198, 199, 201, 221, 229, 234, 247, 248, 250, 254), பூதம் (57), ஏது (74, 92, 93), கருமம் (84), பிண்டம் (90), ஆணை (396), திசை (397, 400, 449), குணம் (416), மந்திரம் (449) என்ற சொற்களைக் காணலாம். இவற்றுள் சில தமிழ்ச் சொற்களே என இக்கால அறிஞர் சிலர் உறுதி செய்யினும், எஞ்சியவை வடசொற்களே என்பது தெளிவு.

சொல்படலத்தில் வடமொழியிலுள்ள சில மரபுச் சொற்கள் மொழிபெயர்த்துத் தமிழில் கொள்ளப்பட்டன என்பது அறிஞர் சிலருடைய துணிவு.

வடமொழியிலுள்ள விபக்தி என்பது வேற்றுமை எனவும், அஜஹல்லக்ஷணா என்பது தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணல் எனவும், ஜஹல்லக்ஷணா என்பது ஒப்பில் வழியான் பிறிது பொருள் சுட்டல் எனவும், மாத்ரா என்பது அளவு எனவும், ஸம்விஜ்ஞாதாநீ என்பது வெளிப்படு சொல் எனவும், அஸம்விஜ்ஞாதாநீ என்பது வெளிப்பட வாராச் சொல் எனவும், சமாசம் என்பது தொகை எனவும், உத்தரபதார்த்தப்ரதாநம், பூர்வபதப்ரதாநம், அந்யபதப்ரதாநம் என்பவை பின்மொழி நிலையல், முன்மொழி நிலையல், அன்மொழி நிலையல், எனவும் தமிழில் மொழிபெயர்த்துக் கொள்ளப்பட்டிருக்கலாம் என்பது சிலருடைய கருத்தாகும்.

உரிச்சொற்கள் பெயர் வினை இவற்றின் பகுதிகள் ஆதலின் உரிச்சொற்களை ஆசிரியர் சொற்படலத்தில் குறிப்பிட்டார். பொருள் வெளிப்படையாக அறியப்படாத உரிச்சொற்களையே ஆசிரியர் குறிப்பிட்டுப் பொருள் விளக்கம் தந்துள்ளார். இவ்வுரியியலில் ஒருபொருட் பல சொற்களை முன்னரும், பலபொருள் ஒரு சொற்களைப் பின்னரும், பெயர்ப்பகுதியைத் தனித்தும், வினைப் பகுதியைத் தனித்தும் கூறுகின்ற முறை வடமொழி யாஸ்கர் நிருக்தத்தில் ஆளப்பட்ட முறையை ஒத்துள்ளது எனத் தமிழ் வடமொழி என்ற இருமொழிப்புலமையும் உடைய சான்றோர்கள் கருதுகின்றனர்.

ஆசிரியர் நூன்மரபில் இடைநிலை மெய்மயக்கம் பற்றிக் கூறிய நூற்பாக்களில் 'என்ப', 'என்மனார்' முதலிய சொற்களே இல்லை. இந்நூற்பாக்களின் செய்தியை ஆசிரியரே தமிழ்மரபு அறிந்து, தமிழின் சொல்லமைப்பு மரபில் இன்ன எழுத்தை ஒட்டி இன்ன எழுத்துத்தான் வருதல் வேண்டும், இன்ன எழுத்து வருதல் கூடாது என நட்பெழுத்து, பகை யெழுத்துக்களை வரையறுத்து, இவ்விதிக்கு மாறாக வரும் சொற்கள் தமிழ்ச் சொற்களாகா என்று அறிவதற்காக அமைத்துள்ளார் என்று அறிகிறோம்.

'தொல்காப்பியன்' என்பது ஆசிரியருக்கு இயற் பெயராக அமைக்கப் பட்டதாகத் தோன்றவில்லை. தமிழில் சிறந்த அறிஞராக எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட காலத்திலேயே இவருக்கு இப்பெயர் ஏற்பட, இயற்பெயர் மறைய இச்சிறப்புப் பெயரே இயற்பெயர் போல மக்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கலாம் எனக் கருதுகின்றோம். இனி, தொல்காப்பியம் என்ற இலக்கண நூலை இயற்றிய பின் அந்நூலை இயற்றிய ஆசிரியர் என்ற முறையில் இவர்தம் நூலை அடியொற்றி இவருக்குத் தொல்காப்பியர் என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம் எனக் கருதுவாரும் உளர்.

ஆசிரியர், பாணினியாரின் காலத்தை ஒட்டியவராயின், அவரைப் போலச் சொல்லிலக்கணத்தில் ஒருமொழிப் புணர்ச்சியை விரித்துக் கூறியிருப்பார். அங்ஙனம் கூறாமையாலும், சிறப்புப்பாயிரத்தில் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்றே சிறப்பிக்கப்படுதலாலும் ஆசிரியர் பாணினியாரின் காலத்துக்கு முற்பட்டவராதல் வேண்டும் என்று கருதுதல் பொருத்தமானதே.

இக்காலத்தில் ஐந்திரநூல் வழக்கிலில்லை. ஒருகால் அந்த நூலின் சூத்திரங்கள் பாணினீயத்தைப் போல் அல்லாமல் சற்று விளக்கமாகச் சொற்சுருக்கங் கருதாது பொருள்புலப்பாடு ஒன்றே கருதி அமைக்கப்பட்டன போலும். அம்முறையைத் தொல்காப்பியனார் பின்பற்றினார்

போலும். 'மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டிய' தொல்காப்பியனார் நூல் கூறுவன யாவும் முற்பட்ட சான்றோர் பின்பற்றிய மரபுவழிக் கூறப்பட்டனவே என்பதனை விளக்கப் பல இடங்களிலும் 'என்ப', 'என்மனார்' போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். இதனைத் தவிர, தொல்காப்பியத்தில் 'வெற்றெனத் தொடுத்தல்' என்ற குற்றத்திற்கு இயையும் செய்தி ஏதும் இன்று. பிற்கால நூல்கள் சிலவற்றில் காணப்படும் மகடூஉ முன்னிலை போன்றவற்றைத் தொல்காப்பியத்தில் காண்டல் இயலாது.

நூற்பா வாயிலாகப் பல செய்திகளையும் விளக்கி உரைத்த ஆசிரியர் தாம் குறிப்பிடாத சில செய்திகளைத் தம் நூற்பா அமைப்பில் வெளிப்படுத்தி, அவற்றையும் மேற் கொள்ளுமாறு குறிப்பிட்ட இடங்களும் தொல்காப்பியத்தில் பல உள. அவற்றை 'உடம்பொடு புணர்த்தல்' என்ற உத்தி வகையுள் அடக்குவர் தொல்காப்பியனார்.

தொல்காப்பியத்தின் இறுதிநூற்பா உத்திவகைகளைப் பற்றியது. அந்நூற்பாவில் இளம்பூரணர் கொண்ட பாடத்தின்படி 'உடம்பொடு புணர்த்தல்' என்று உத்திவகை உள்ளது. ஆனால் பேராசிரியர் கொண்ட பாடத்தில் 'உடம்பொடு புணர்த்தல்' என்னும் உத்திவகை இல்லை. ஆனால் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய பலரும், நன்னூலுக்கு உரைவரைந்த சான்றோரும் இந்த உத்திவகையைத் தம் உரையில் குறிப்பிட்டு விளக்கியுள்ளனர் என்பது உளங்கொளத்தக்கது.

தொல்காப்பியனார் உடம்பொடுபுணர்த்துக் கூறியுள்ள செய்திகளில் சிலவற்றை நோக்குவோம். முக்காலத்திலும் ஒத்தியல் பொருளை நிகழ்காலத்திற்கு உரிய 'செய்யும்' என்னும் வாய்பாட்டால் கூறுதல் வேண்டும் என்று விதி கூறிய ஆசிரியர், செய்யும் என்றும் வாய்பாட்டான் உணர்த்துதற்கு ஆண்டுள்ள வினைச்சொற்கள் பின்வருமாறு.

### 1. என்ப

எழுத்து எனப்படுப
அகரமுதல் னகரஇறுவாய்
முப்பஃது என்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றுஅலங் கடையே. (எ-1)

முக்காலத்தினும் ஒத்தியல் பொருளை நிகழும் காலத்துச் செய்யும் என்னும் வாய்பாட்டான் குறிப்பிடல் வேண்டும் என்ற விதியைத் தெரிவித்த ஆசிரியர், அவ்விதிக்கு ஏற்பப் பல நூற்பாக்கள் அமைத்திருப்பினும், முக்காலத்திலும் ஒத்து இயல்பொருளை எதிர்காலத்தான் உணர்த்துதலும் ஏற்புடைத்தே என்ற கருத்தில், தனித்து நூற்பா வாயிலாகக் குறிப்பிடாமல், எதிர்கால வாய்பாட்டான் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் 'என்ப' என்ற சொல்லை அமைத்ததன் வாயிலாக உடம்பொடு புணர்த்து விதி

அமைத்துள்ளார்; இறப்பினும் நிகழ்வினும் உண்மை நிகழ்வான் அறியக் கிடத்தலின், எதிர்காலத்தினும் உளதாதல் அறிந்தன்றி முக்காலத்தினும் நிலைபேறுடைமை உணர்தல் கூடாமையின், அதுபற்றி எதிர்காலச்சொல்லாலும் கிளத்தல் தமிழ்நடை என்பது ஆசிரியர் துணிபு என்றதற்கு.

## 2. உம்மை

'இனைத்துஎன அறிந்த சினை முதற்கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்'

சொ. 33

என்று குறிப்பிட்ட ஆசிரியர் தமிழ்எழுத்து 'முப்பதும்' என உம்மையைக் கொடாது விடுத்தார். 'ஆயிரு திணையின்' சொ.1. 'அம்முப்பாற்சொல்' சொ. 2. 'ஆயிருபாற்சொல்' சொ. 3. போன்ற இடங்களில் உம்மையைத் தொகுத்து, செய்யுள் விகாரத்தால் இனைத்தென அறிவிக்கும் உம்மையைத் தொகுத்தலும் ஒரோவழிப் பொருந்தும் என்பதனை உடம்பொடுபுணர்த்துத் தெரிவித்துள்ளார். (நூற்பா எண்கள் நச்சினார்க்கினியம் எண்களே.)

3. இனி, அந்நூற்பாவில் உள்ள '*மரபின்*' என்ற சொல்பற்றி நோக்குவோம். ஆசிரியர் இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர்களும் தொகாநிலைத் தொடர்களும் புணர்ச்சிக்கண் பெறும் வேறுபாடுகளைத் தொகைமரபினில் 'மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்' (எ. 157) என்ற நூற்பா வாயிலாக விளக்கியுள்ளார். அந்நூற்பாவின் ஒருபகுதி,

'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்' என்பது.

(எ. 157)

அஃதாவது 'வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும்' (எ. 420) என வண்டு என்ற சொல் இன்சாரியைபெறும் என்ற விதி இருக்கவும், இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்

சாரியை பெறாது 'வண்டு கொணர்ந்தான்' என்றாற் போல வருவதாகும். இன்சாரியை இணையுமிடத்து 'வண்டினைக் கொணர்ந்தான்' என்று இரண்டன் உருபு விரிந்தே வரல் வேண்டும் என்பது அந்நூற்பாக் குறிப்பிடும் செய்தியாகும்.

மரபு என்பது குற்றியலுகர ஈற்றுச்சொல். அஃது உருபு ஏற்கும்போது 'இன்'சாரியை இடையே வரும் என்பது,

'குற்றிய லுகரத்து இறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை' - எ. 195

என்ற உருபியல் நூற்பாவால் பெறப்படும். அச்சாரியை பெறும்போது இரண்டாம் வேற்றுமை உருபு விரிந்துவரல் வேண்டும் என்பது தொல்காப்பிய விதி. அவ்விதிக்கு மாறாக 'மரபினை உடைய' என்று வரவேண்டுவது உருபும் பொருளும் தொகச் சாரியை மாத்திரம் பெற்று 'மரபின்' என்று வந்துள்ளது. இச்செயல் விதிக்கு மாறுபட்டதுபோலத் தோன்றினும், இதுவும் ஏற்றுக்கொள்ளத் தக்கதே என்பதனை ஆசிரியர் உடம்பொடுபுணர்த்துக் கூறியுள்ளார்.

'மரபினை உடைய', 'சிறப்பினை உடைய' என்று வரவேண்டியன 'மரபின்' , 'சிறப்பின்' என்றே தொல்காப்பிய நூற்பாக்கள் பலவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன. 'மரபின்' என்பது எழுத்து - 1, 143; சொல் - 113, 174, 175, 213, 217, 223, 231, 451; பொ - 24, 60, 75, 142, 152, 196, 242 என்ற எண்ணுடைய நூற்பாக்களிலும், 'சிறப்பின்' என்பது பொ - 28, 60, 63, 79, 80, 102, 114, 117, 146, 147, 243, 300 என்ற எண்ணுடைய நூற்பாக்களிலும் காணப்படுகின்றன. இவ்விரு சொற்கள் அன்றி, 'எண்ணின்' சொ. 44, 'முறையின்' - சொ. 70, 'வினாவின்' சொ. 145, 150, 212, 'அன்மையின்' சொ. 216, 'குறிப்பின்' சொல் - 239, 'செய்தியின்' சொ. 463; 'இன்ன வகையின்' - பொ. 115, 'எழூத்தின் மான' - பொ. 146 என்பனவும் காணப்படுகின்றன. ஆகவே, 'மரபின்' - 17, 'சிறப்பின்' - 15, ஏனைய - 8 ஆக நாற்பது இடங்களில் தொல் காப்பிய நூற்பாக்களில் சாரியை உள்வழி இரண்டன் உருபு

நிலையாது வருதலைக் காண்கிறோம். இவையாவும் இரண்டாவது உருபும் பொருளும் உடன்தொக்க தொகைகளாம்.

இரண்டாவது விரியாது பெயர் இறுதியில் 'இன்' சாரியை மாத்திரம் வருதலும் ஏற்புடையதே என்பது உடம்பொடுபுணர்த்து அறிவிக்கப்பட்ட விதியாகும். இவ்விதிப்படி 'திணையின்' - (சொ. 1) என்பதனையும் கொள்ளலாம்.

## *4. அலங்கடை*

'சார்ந்துவரல் மரபின் மூன்றுஅலங் கடையே' -எ. 1
'பின்முன் கால்கடை வழிஇடத்து என்னும்
அன்ன மரபின் காலம் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றுஇயல் பினவே' -சொ.231

என்ற நூற்பாப்படி அலங்கடை என்பது கடைஈற்று வினையெச்சம் ஆகும். இவ்வாய்பாடுகள் இறந்தபின், வரு(ம்)முன், இருந்தக்கால், வந்தக்கடை, உரைக்கும் வழி, தாழ்ந்தஇடத்து, என்றாற்போலப் பெயரெச்ச வாய்பாடுகளொடு பின், முன் முதலியன ஒட்டி ஒருசொல்லாக நிகழ்வன. பெயரெச்சத்திற்கும் பின் முன் முதலிய சொற்களுக்கும் இடையே சாரியை எதுவும் வாராது.

'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்' - பொ. 203.

எனத் தொல்காப்பியனாரும் இவ்வாய்பாட்டினைக் கையாண்டுள்ளார். அவ்வாறாக, குறிப்புவினைப்பகுதிக்கும் கடை என்ற இறுதி நிலைக்கும் இடையே அம் என்ற சாரியை வரலாம் என்பதற்குத் தொல்காப்பியத்தில் விதியில்லை. ஆசிரியர் 'அலங்கடை' என்று ஆண்டிருப்பது கொண்டே வினையெச்சத்துக் கடை என்ற இறுதிநிலையின் முன்னர் அம்முச்சாரியை வரலாம் என்பதனை அறிய வேண்டியவராக உள்ளோம். இந்த 'அலங்கடை' என்ற சொல் சங்க இலக்கியத்தில் காணப்பட வில்லை. தொல்காப்பியத்திலேயே

'தம்முன் தாம்வரும் ரழஅலங் கடையே' - எ. 30
'முற்ற இன்வரூஉம் இரண்டலங் கடையே' - எ. 433
'அ ஐ ஔஎனும் மூன்றலங் கடையே' - எ. 62
'ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே' - எ. 72
'தொழில்நிலை எட்டும் ஒன்றலங் கடையே'-சொ.71
'முற்பட வகுத்த இரண்டலங் கடையே' - பொ. 130
'வரைநிலை வைத்த மூன்றலங் கடையே' - பொ. 312
'மாயிருந் தூவி மயிலலங் கடையே' - பொ. 603
'கொள்ளுங் காலை நாயலங் கடையே' - பொ. 596

எனப் பல இடங்களிலும் ஆளப்பட்டுள்ளது. இவ்வாறே தொல்காப்பியத்திலேயே ஆட்சி பெற்றுள்ள 'அருங்கு' (பொ. 146) போன்ற சொற்கள் சில உள. அவற்றை ஆசிரியர் உடம்பொடுபுணர்த்து நமக்குக் காட்டியுள்ளார்.

### 5. ஓரன்ன

'முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன' - எ. 2

அன்ன என்பது உவமஉருபுகளுள் பெரிதும் வழங்குவது; உவமத்தின் நான்கு வகைகளாகிய வினை, பயன், மெய், உரு என்ற நான்கு நிலைகளிலும் வருவது. 'முப்பாற் புள்ளியும் எழுத்தே அன்ன' என்று கூறின், முற்கூறிய எழுத்துக்களைப் போல்வன என்ற கருத்துப் புலப்பட்டுவிடும். ஓர் என்ற முன் ஒட்டினைப் புணர்த்துக் கூறும் 'ஓரன்ன' என்ற சொல் தொல்காப்பியத்திலேயே மிகுதியாகக் காணப்பட, அச்சொல் சங்க இலக்கியத்திலும் இடம்பெற்றுள்ளது.

'எழுத்து ஓரன்ன பொருள்தெரி புணர்ச்சி' - எ. 141
'ஆமுப் பெயரும் அவற்றோரன்ன' - எ. 328
'இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய' - சொ. 224
'தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன' -பொ. 560

'ஓரன்ன' என்பது பன்மை. 'ஓரற்று' என்பது ஒருமை. 'ஓரன்ன' என்பது போல 'ஓரற்று' என்பதும் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது.

'சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே' - எ. 62
'வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே' - எ. 216,
225, 252, 266, 276, 292

முதலியன காண்க. ஓரனைய சொ. 226 என்பதும் அது.

6. 'உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல்
நிலையலும் - எ.157

என்ற இரண்டாம் வேற்றுமை பற்றிய நூற்பாவில் இரண்டன் உருபு உயர்திணைப் பெயர் இடத்தும், விரவுப்பெயர் இடத்தும் தவறாது விரிந்தே வரல்வேண்டும் என்ற செய்தி சொல்லப்பட்டுள்ளது. இவ்விதிக்கு மறுதலையாக உயர்திணைப் பெயர்க்கண்ணும் விரவுப்பெயர்க்கண்ணும் இரண்டன் உருபு தொக்க தொடர்கள் பல தொல்காப்பிய நூற்பாக்களில் உள.

' ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி' - சொ. 2

ஆடூஉவை, மகடூஉவை, பல்லோரை அறியும் சொற்கள் என்பன உருபு தொக வந்துள்ளன. இவை உயர்திணைச் சொற்கள். உயர்திணைச்சொற்கள் உருபுதொக்குப் பயன் படுத்தப்பட்டுள்ள செய்தியைச் சொல். 2, 5, 6, 7, 167, பொருள் 39, 41, 72, 73, 79, 90, 91, 102, 111, 114, 117, 146, 147, 150, 151, 203 முதலியவற்றில் காணலாம்.

விரவுப்பெயரிடத்து இரண்டன் உருபுதொக்குவருதலை,

தன்னும் அவனும் அவளும் சுட்டி - பொ. 36
தற்காட்டுறுதல் - பொ. 111

தமர்தற் காத்த காரண மருங்கினும் - பொ. 111
தந்தையர் ஒப்பர் மக்கள் - பொ. 147
தன்புகழ் கிளவி - 180, 18133

முதலிய நூற்பாக்களில் காணலாம். ('தற்காட்டுறுதல்' போன்றவை புணர்ச்சி விகாரத்தால் இரண்டன்தொகை என்ப.)

### 7. மூன்றாவதன் 'ஆன்' உருபு

'அவைதாம்,
பெயர் ஐ ஒடுகு, இன்அது கண்விளி என்னும் ஈற்ற' - சொ.65
'மூன்றாகுவதே,
ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' சொ. 74

என ஒடு உருபினைச் சிறப்பாக எடுத்து ஓதினும், மூன்றாவதன் 'ஆன்' உருபினையும் தொல்காப்பியனார் குறிப்பிட்டுள்ளார்;

'குஐ ஆன்என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே' சொ. 103

என ஆன்உருபினைக் குறிப்பிடுகின்றார்.

'அதனான் செயற்படற்கு ஒத்த கிளவியும்' - சொ. 111
'ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்' - சொ. 98
'மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி' - சொ. 93
'இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம்அவ்
விரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும்' - சொ. 94
'தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்
கடிநிலை இலவே பொருள்வயி னான' - சொ. 96

என ஆன்உருபு பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

'செங்கடு மொழியான் சிதைவுடைத்து ஆயினும்' - பொ. 114
'தந்தையர் ஒப்பர் மக்கள்என் பதனான்' - பொ. 147
'புள்இயல் கலிமா உடைமை யான' - பொ. 194
'மகடூஉ பிரிதல் அச்சம் உடைமை யானும்'-பொ. 225
'ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலான்'-பொ.465
'ஒருநெறி இன்றி விரவிய பொருளான்' - பொ. 483
'ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்' - பொ. 480
'தன் நூலானும் முடிந்த நூலானும்' - பொ. 659
'பழித்த மொழியான் இழுக்கம் கூறல்' - பொ. 663
'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்'-பொ.665
'வாரா ததனான் வந்தது முடித்தல்' - பொ. 665

இந்நூற்பாக்களில் ' ஆன்' உருபு காரணப் பொருட்டாயும் கருவிப்பொருட்டாயும் வந்தவாறு.

'எண்முறை நிலையான் உறுப்புற்று அமைய'-எ. 83

எட்டாகிய முறைமை உடைய தன்மையொடு கூடிய உறுப்புக்களோடு ஒன்றுற்று இங்ஙனம் அமைதலானே - என்புழி, ' நிலையான்' என்னும் ஆன் உருபு 'தன்மையொடு' என ஒடுஉருபின் பொருளில் வந்தது.

'அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்
கண்என் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானும்என்று
அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்.' - சொ. 215

(உடைமைப் பொருட்கண்ணும், நிலப்பொருண்மைக் கண்ணும், உவமத்தின் கண்ணும், பண்பின்கண்ணும் வரும் சொல்லகத்துக் காலம் குறிப்பாகத் தோன்றும்) என்ற நூற்பாவில் ஆன்உருபு ஏழன்பொருட்கண் வந்துள்ளது.

'அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப.' - பொ. 81

இந்நூற்பாவிலும் ஆன்உருபு கண் என்னும் உருபின் பொருள்பட வந்துள்ளது.

'இயங்குபடை அரவம்' என்னும் நூற்பாவில், 'பெருமை யானும், கொடைமையானும், கொற்றத்தானும், நெடுமொழி யானும்' போல்வனவற்றில் உள்ள ஆன் எல்லாம் அசைநிலை இடைச்சொல் என ஆக்கி, பெருமையும், கொடைமையும், கொற்றமும், நெடுமொழியும் எனப் பொருள் கொள்ப. இன்றேல், 'அரவம் எடுத்தல், பேராண்பக்கம், பெருஞ்சோற்றுநிலை, விளக்கம், தேய்வு, கொற்றவள்ளை' என்பனவற்றிற்கும் ஆன்உருபு கொடுத்து எல்லாத்துறை களையும் அதற்கு ஏற்பப் பொருள்கோடலும் ஆம்.

கூதிர் வேனில் - பொ. 76
மாற்றருங் கூற்றம் - பொ. 79

என்ற நூற்பாக்களிலும் ஆன்உருபை அசைநிலையாகவோ, மற்றவற்றோடும் ஆன் உருபை இணைத்து எண்ணியோ பொருள் செயல் வேண்டும்.

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற . . . . . .
மெய்ம்மை யானும் ஈரிரண்டு ஆகும் - சொ. 137

என்புழி, 'மெய்ம்மையானும்' என்பது பொருள்தோறும் என்ற பொருளில் வந்துள்ளது. எனவே, ஆனுருபு ஒடுஉருபின் பொருளிலும், ஏதுப்பொருளிலும், தோறும் என்னும் பொருளிலும், ஏழன் இடப்பொருளிலும், அசைநிலையாகவும், ஓரிடத்திலிருந்து பல பெயர்களொடு பிரிந்து இணைந்து ஒன்றியும் பயன்படுத்தப்பட்டமைக்குத் தனிப்பட்ட விதிகள் நூற்பாக்கள் வாயிலாகக் கூறப்படவில்லை. இச்செய்திகள் யாவும் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டனவே.

8. ஒடு ஓடு ஆதல்

'அதன்நிலை உயிர்க்கும் யாவரு காலை
முதல்நிலை ஒகரம் ஓ - ஆ கும்மே
ரகரத்து உகரம் துவரக் கெடுமே' - எ. 479

(ஒன்று என்ற எண்ணுப்பெயர் வருமொழியொடு சேரும்போது ஒரு எனத் திரிந்து புணரும். வருமொழி உயிர்முதல் மொழியாயினும் யகரஆகார முதல்மொழி யாயினும் ஒரு என்பது ஓர் எனத்திரிந்து வருமொழியொடு புணரும். ஒன்று என்பது அஃறிணை எண்ணுப்பெயர் ஆதலின் வருமொழி அஃறிணையாதல் கொள்க.

ஒன்று + தேர் - ஒரு + தேர் - ஒருதேர்
ஒன்று + ஆறு - ஓர் + ஆறு - ஓராறு
ஒன்று + யாடு - ஓர் + யாடு - ஓர்யாடு

வருமொழி முதலில் உயிரும் யகரமும் வரும்போது ஒரு என்பது ஓர் என்று ஆவதற்கு விதி கூறப்பட்டுள்ளது.

அதுபோல, வருமொழி முதலில் உயிரெழுத்து வரின், நிலைமொழி ஈற்றில் உள்ள ஒடுஉருபு ஓடு எனத் திரிந்து புணரும் என்பதற்கு விதி கூறப்படவில்லை. இவ்விதி உடம்பொடுபுணர்த்தலாலேயே அறியப்பட வேண்டியதாய் உள்ளது. பண்டு சுவடிகளில் ஒடு, ஓடு என்ற இரண்டும் வரிவடிவில் ஒன்றாகவே எழுதப்பட்டமையின், இந்நுட்பம் அறியாது பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியப் பதிப்புக்களும் உள.

'மெய்யோடு இயையினும்' - எ. 10
'அகரமோடு உயிர்த்தலும்' - எ. 17
'ஏனை உயிரோடு உருவுதிரிந்து' - எ. 17
'ஆவோடு அல்லது' - எ. 65
'கவவோடு இயையின்' - எ. 70
'அதனோடு இயைந்த' - சொ. 75

இங்ஙனம் ஒடு என்ற உருபு பெற்றன புணர்ச்சி நோக்கி ஓடு என்று நீண்ட செய்கையை உடைய ஆயின. பொ. - 48, 71, 75, 90, 114, 115, 141, 146, 204, 236, 274, 279, 313, 501, 560, 570, 573, 590, 644, 652, 665 என்பனவும் அன்ன. ஆகவே, 'ஒடு' ஓடு ஆகத் திரிந்து வருமொழியொடு புணர்ந்த செய்தியை உடைய நூற்பாக்கள் தொல்காப்பியத்தில் முப்பது இடங்களுக்கு மேலாக உள்ளன.

## *9. கிழவோன்- கிழவோள்*

'ஆஓ ஆகும் பெயருமார் உளவே;
ஆயிடன் அறிதல் செய்யுள் உள்ளே' - சொ. 197

ஆன், ஆள், ஆர், ஆய் என முடியும் பெயர்களில் உள்ள ஆகாரம் ஓகாரமாகத் திரியலாம். உதாரணம் : வில்லான் - வில்லோன்; தொடியாள் - தொடியோள்; நல்லார் - நல்லோர்; செப்பாதாய் - செப்பாதோய் எனவரும்.

அழாஅன், கிழாஅன் என்ற அளபெடைப் பெயர்கள்
அளபெடுத்தால்ஆ-ஓஆகா.

கிழவன் - அன் ஈற்றுப் பெயர்.
கிழவி, கிழத்தி - இகர ஈற்றுப் பெயர்.

இவை தொல்காப்பிய நூற்பாக்கள் பலவற்றில் கிழவோன், கிழவோள் என உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டுள்ளன. கிழவோன் என்ற சொல் பொருட் படலத்து 117, 135, 146, 147, 150, 152, 156, 160, 164, 165, 172, 181, 203, 210, 227, 234, 302, 305 என்ற எண்ணுடைய நூற்பாக்களில் காணப்படுகின்றது; கிழவோள் என்ற சொல் 107, 147, 148, 150, 152, 161, 234, 304 என்ற எண்ணுடைய நூற்பாக்களில் காணப்படுகிறது. கிழவோன் என்ற சொல் பொருட்படலத்து 20 இடங்களிலும் கிழவோள் என்ற சொல் 8 இடங்களிலும் தொல்காப்பிய நூற்பாக்களில் உடம்பொடுபுணர்த்து ஆளப்பட்டுள்ளமை அறியத்தக்கது. தலைவன் - தலைவி - தலைமகன் - தலைமகள் என்ற

சொற்கள் தொல்காப்பியத்திலோ இறையனார் களவியலிலோ இடம்பெறவில்லை. சங்கப் பாடல்களிலும் தலைவன், தலைவி என்ற பெயர்வழக்கம் இல்லை. இறையனார் அகப்பொருள் உரையிலேயே தலைமகன், தலைமகள், தலைவன், தலைவி என்ற சொற்களை முதன்முதலில் காண்கிறோம். பின் நம்பியகப்பொருள் முதலிய நூல்களில் அவை பெருவரவின.

## 10. ஏவல் ஒருமைவினை

விரவுவினையாகிய முன்னிலைவினை இருவகைத்து. அவை முன்னின்றான் தொழில் உணர்த்துவது, முன்னின் றானைத் தொழிற்படுத்துவது என்பனவாம். முன்னின்றான் தொழில் உணர்த்தும் விகுதிகள் இ, ஐ, ஆய் என்பன. 'அவற்றுள், முன்னிலைக்கிளவி, இ ஐ ஆய் என வரூஉம் மூன்றும், ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்' - சொ. 225 என்ற நூற்பாவை நோக்குக. இந்நூற்பா முன்னிலை ஒருமையின் தொழில் உணர்த்துவது.

'இர்ஈர் மின்என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்ஓ ரனைய என்மனார் புலவர்' - சொ. 226

என்ற நூற்பாவில், முன்னிலைக்கண் உள்ள ஏவல் பன்மைக்கு மின்ஈற்றைக் குறிப்பிட்ட ஆசிரியர், ஏவல் ஒருமைபற்றி, முன்னிலைஒருமை பற்றிய நூற்பாவில் ஒன்றும் கூறவில்லை. ஆனால், எச்சவியலில்,

'முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மருங்கின் மெய்ஊர்ந்து வருமே'-சொ. 451

எனவும்,

'ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகுஇடன் உடைய' - சொ. 444

அவற்றுள்,

'ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே' - சொ. 445
'தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே' - சொ. 446
'கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே' - சொ. 447
'பின்வா என்றலும் பேதைமை ஊட்டலும்'-பொ.114
'மாண்நலம் தாஎன வகுத்தற் கண்ணும்' - பொ. 150
'எங்கையர்க்கு உரைஎன இடித்தற் கண்ணும்'- பொ.147
'இரவினும் பகலினும் நீவா என்றலும்' - பொ. 210

என உடம்பொடுபுணர்த்து ஆசிரியர் உணர்த்திய செய்திகளான் வினைப்பகுதியே எடுத்தல் ஓசையான் முன்னிலைஒருமை ஏவல்வினை ஆமாறு உணர்த்தப் பட்டுள்ளது.

## 11. தரல், வரல், கொடை, செலல்

தா, வா என்ற ஏவல்வினைகள் தன்மையில் உள்ளவன் முன்நின்றவனை நோக்கி ஏவும் சொற்கள் ஆதலின், இவை தன்மை முன்னிலை இரண்டன் கண்ணேயே நிகழ்வன. செல், கொடு என்பன தன்மையில் உள்ளவன் படர்க்கையைக் கருதி ஏவுவதால், இவை படர்க்கைப் பொருள்களை நோக்கிக் கூறப்பட்டனவாம் என்பதே சொ. 29, 30 நூற்பாக்களின் கருத்தாகும். இவையேயன்றித் தருதல் வருதல் பொருளில் வரும் வினைகள்எல்லாம் தன்மை முன்னிலைகளுக்கு உரிய என்றும் கொடுத்தல், செல்லுதல் பொருளில் வரும் வினைகள்எல்லாம் படர்க்கைக்கு உரிய என்றும் கொள்வது பொருத்தமாகத் தெரியவில்லை.

'மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை அழிக்கும் சிறப்பிற்று என்ப' - பொ. 70

(தனது வலியினை உலகம் மீக்கூறுதலே தனக்குப் பெறுபொருளாகக் கருதி மேற்சென்ற வேந்தனை, அங்ஙனம் மாற்று வேந்தனும் அவன் கருதிய மைந்தே தான்

பெறுபொருளாக எதிர்சென்று அவனைத் தலைமை தீர்க்கும் சிறப்பினை உடைத்து அத்தும்பைத்திணை என்று சொல்லுவர் ஆசிரியர். 'வரல்' செலவாதல், 'செலவினும் வரவினும்' - சொ. 28 என்னும் பொதுவிதியான் கொள்க. 'மைந்துபொருளாக' என்பதனை 'வந்த' என்பதற்கும், 'சென்று' என்பதற்கும் கூட்டுக, அஃது இருவர்க்கும் ஒத்தலின். எனவே, இருவரும் ஒருகளத்தே பொருவாராயிற்று என்பது இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையாகும்.)

வந்த, வந்து, வரு, வரூஉம் என்பன மூவிடங்களுக்கும் பயன்படுத்தப் பட்ட செய்தியை - பொ. 79, 111, 112, 114, 146, 150, 151 என்ற எண்ணுடைய நூற்பாக்களில் காணலாம். வரூஉம் என்ற சொல் தொல்காப்பிய முப்பாலங்களிலும் ஏறத்தாழ 50 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. செலவு - பொ. 77, 185 ஆகிய நூற்பாக்களிலும், கொடை 150ஆம் நூற்பாவிலும் இடம்பெறுகின்றன. இடவரையறை இவற்றுள் கொள்ளப்படவில்லை. எனவே, இடவரையறை என்பது ஏவல் ஒருமை வினைக்கு உரியதே என்று கருதுகிறோம்.

## 12. வியங்கோள்

வியங்கோள் பற்றி,

> 'முன்னிலை தன்மை ஆஈர் இடத்தொடு
> மன்னாது ஆகும் வியங்கோள் கிளவி' - சொ. 228

என்ற நூற்பாவில் கூறப்பட்டுள்ளது. அஃதாவது வியங்கோள் வினைச்சொல்லின் வடிவம் தன்மைஇடத்து வினையுடனோ, முன்னிலைஇடத்து வினையுடனோ பொருந்தாது என்பதாம். தன்மைவினை ஈறுகள் கு, டு, து, று, என், ஏன், அல், கும், டும், தும், றும், அம், ஆம், எம், ஏம் என்பன.

முன்னிலைவினை ஈறுகள் ஐ, ஆய், இ, இர், ஈர், மின் என்பன. வியங்கோள் ஈறுகள் இவ்வீறுகளுள் அடங்கா; ஆகவே, எஞ்சியுள்ள படர்க்கை ஈற்றுள் அடங்கும் என்பது. வியங்கோள் ஈறுகள் நூற்பாவில் குறிப்பிட்ட அகரஈறு, உடம்பொடுபுணர்த்த அல்ஈறு, ஆல்ஈறு என்பன.

'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' -சொ.19

'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' -சொ.20

'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' -சொ.13

'எப்பொருளாயினும்... பிறிதுபொருள் கூறல்' -சொ.35

'அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்' - சொ. 36

'இன்ன பெயரே . . . உணர்தல்' - சொ. 195

'அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்' - சொ. 273

'எஞ்சுபொருள் . . . . கிளத்தல்' - சொ. 286

'கிளந்த அல்ல . . . . கொளல்' - சொ. 298

'அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்' - சொ. 442

'மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல்' - சொ. 443

'உரையிடத்து இயலும் உடனிலை அறிதல்' -சொ.458

'வேறுபட . . . . கொளாஅல்' - பொ. 307

'அழியல் அஞ்சல்என்று ஆயிரு பொருளினும்'-பொ.146

(அழுஅழியல் - தீங்கு நினக்கு உளது என்றுவருந்தற்க

அஞ்சல் - தீங்கு எனக்கு உளது என்று அஞ்சற்க)

'செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்' பொ.147

(செல்க + என = செல்கென)

இந்நூற்பாக்கள் பெரும்பான்மையும் முன்னிலைக்கும் பொருந்துமாறு அறிக. எனவே, வியங்கோள் ஈறாகிய க, அல், ஆல் என்பன உடம்பொடு புணர்த்து உணர்த்தப்பட்டமை உணரப்படும். (அகரஈற்றுள் ககரம் அடங்கலுமாம்.)

## 13. வயின் - ஏழன் சொல்உருபு

கண்கால் புறம்அகம் உள்உழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை எனாஅ
முன்இடை கடைதலை வலம்இடம் எனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார். - சொ. 83

என்ற நூற்பாவில் வயின் என்ற ஏழன் சொல்லுருபு இடம்பெறவில்லை. ஆயினும் ஆசிரியர் வயின் என்பதற்குச் 'சுட்டு முதல் வயினும்' எ. 334 என்ற நூற்பாவில் புணர்ச்சிவிதி கூறியதோடு, அதனைப் பல இடங்களிலும் உடம்பொடு புணர்த்து எழுத்தாண்டுள்ளதனைக் காண்கிறோம்.

'சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்' - எ. 334
'பொருள்வயி னான' - சொ. 96, 101
'விளிவயி னான' - சொ. 135, 148
'பெயர்வயி னான' - சொ. 163
'பெயர்வயி னானும்' - சொ. 418
'அவன்வயி னான' -பொ.108,110,129

இனி, வயின் என்பது அகரச்சுட்டோடு இணைந்து அவ்வயின் எனவும், பெரும்பான்மையும் ஆவயின் எனவும் தொல்காப்பிய நூற்பாக்களில் இடம் பெறுகின்றது.

## 14. சுட்டு நீட வருதல்

'நீட வருதல் செய்யுளுள் உரித்தே' - எ. 208 அகரச்சுட்டு நீடவருதல் செய்யுளுக்கு உரியது என்று கூறி அச்செய்தியை இகரஉகரச்சுட்டுக்களுக்கும் 238, 255, 256 என்ற நூற்பாக்களில் ஆசிரியர் குறிப்பிடுவார். 'நீடவருதலும்' என்ற உம்மை விகாரத்தால் தொக்கதாகக் கொள்ளவேண்டும். நூற்பாக்களில் சுட்டு நீண்டுவருதல், சுட்டு நீளாதுவருதல் என்ற இரு நிலைமையும் இடம்பெறுகின்றன. 'அவ்வயின் மூன்றும்' - சொ. 229 என அருகியும், ஆவயின் எனச் சுட்டு நீண்டு பெரும்பான்மையாகவும் எ. 178, 179, 476; சொ. 164, 169, 276,

282, 330, 432; பொ. 21, 90 முதலிய நூற்பாக்களில் இடம்பெற்றுள்ளது. இவ்வாறே மற்ற சொற்களும் அகரச் சுட்டுடன் புணர்ந்து, பொதுவிதி பெற்று, அவ்வியல், அவ்வாறு, அவ்விரு வீற்றும், அம்மரபு, அம்மூவிடத்தும், அம்மூவுருவின, அந்நாற் கிளவியோடு என வருதலும், ஆயிரண்டு, ஆயீரியல, ஆமுப் பெயரும், ஆமுறை இரண்டும், ஆயிடைவருதல், ஆவறு மூன்றும், ஆயீரைந்தொடு, ஆயெட்டென்ப, ஆயேழ் சொல்லும் எனச் செய்யுளுள் அகரச்சுட்டு நீண்டு வருமொழியொடு புணர்தலும் காணப்படுவதால், ஆசிரியர்கருத்து 'நீட வருதல் செய்யுளுள் உரித்தே' எ. 208 என்புழி உம்மை விகாரத்தான் தொக்கது என்று கோடலே. அவர் உடம்பொடு புணர்த்துக் கூறியவாற்றான் இது பெறப்படும்.

## 15. அ - அன்றி

அகரச்சுட்டு அன்றி எனத் திரிந்து வருமொழியொடு புணர்தற்கு ஆசிரியர் விதி கூறவில்லை. பிற்காலச் சான்றோர்களும் அகரச் சுட்டினை அன்றி எனத் திரித்துப் புணர்த்தனர் என்பதனை அறியக்கூடவில்லை. அகரச்சுட்டு அன்றி எனத் திரிதல் தொல்காப்பிய மரபாகவே உள்ளது.

'அன்றி அனைத்தும் எல்லா வழியும்' - எ. 144
'அன்றி அனைத்தும் இயல்பு' - எ. 210, 224
'அன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே' -சொ.67
'அன்றி அனைத்தும் விளிகோள் இலவே' - சொ. 137
'அன்றி அனைத்தும் அவற்றுஇயல்பினவே'-சொ.167
'அன்றிப் பாற்கும் ஓரன் னவ்வே' - சொ. 184
'அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி' -சொ. 425
'அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே' - சொ. 449

முதலியன காண்க.

## 16. எகரவினா

நூன்மரபின் இறுதியில் வினாவைப் பற்றிக் குறிப்பிடும் இடத்தில் ஆசிரியர், 'ஆஏ ஓஅம் மூன்றும் வினாஅ' - எ. 32 என்றே குறிப்பிட்டுள்ளார். ஆண்டு எகரவினா சுட்டப் படவில்லை. ஆனால் நூலில்,

'எகரமுதல் வினாவின் இகர இறுதியும்' - எ. 159
'எகரமுதல் வயினும்' - எ. 334

என்ற இடங்களில் எகர உயிரை வினாப்பொருளிலும்,

எப்பெயர் முன்னரும் - எ. 128
எப்பொருள் ஆயினும் - சொ. 35
எவ்வயின் பெயரும் - சொ. 69
எம்முறைச் சொல்லும் - சொ. 242
எவ்வயின் வினையும் - சொ. 428
எந்நில மருங்கின் -பொ. 19
எத்திணை மருங்கினும் - பொ. 35

என்ற இடங்களில் எகர உயிரை எஞ்சாப்பொருளிலும் ஆசிரியர் கையாண்டுள்ள திறம் உடம்பொடு புணர்த்த லானேயே உணரப்படுகிறது.

## 17. இயற்கையும் ஆக்கமும்

ஆசிரியர்,

'இயற்கைப் பொருளை இற்றெனக்கிளத்தல்'-சொ.19
'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்'-சொ.20

என்று விதித்திருப்பதனான் செயற்கைப் பொருளே ஆக்கம் புணர்த்துக் கூறப்படும் என்பதும், இயற்கைப் பொருளோடு ஆக்கத்தைப் புணர்த்துக்கூறல் கூடாது என்பதும் ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும். இந்த விதிகளுக்கு மாறாக,

'நின்ற சொல்முன் இயல்பு ஆகும்மே' - எ. 144
'இயல்பு ஆகுநவும் வல்லெழுத்து மிகுநவும்' - எ. 158
'நும்என் இறுதி இயற்கை ஆகும்' - எ. 187
'அவைதாம், இயற்கைய ஆகும் செயற்கைய என்ப' -எ.197
'இயல்பு ஆகுநவும் உறழ் ஆகுநவும்' - எ. 151
'மெய்பிறிது ஆகுஇடத்து இயற்கை ஆதலும்' - எ. 157
'சாரியைக் கிளவி இயற்கையும் ஆகும்' - எ. 201

என இயற்கைப் பொருளுக்கு ஆக்கம் கொடுத்து நூற்பாக்களை அமைத்துள்ளமை உளங்கொளத்தக்கது.

### 18. சாவ - அறிய - என்ற செயவென் எச்சங்கள்

'சாவ என்னும் செயஎன் எச்சத்து
இறுதி வகரம் கெடுதலும் உரித்தே' - எ. 209

எனச் சாவ என்பது இறுதியில் உள்ள அகர உயிரும் அதனால் பற்றுப்பட்ட வகர மெய்யும் கெடச் சாவக் குத்தினான் என்பது சாக்குத்தினான் எனவும் வரும் என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால் 'அறிய' என்னும் செய என் எச்சம் இறுதியில் உள்ள அகர உயிரும் அதனான் பற்றப்பட்ட யகரமெய்யும் கெட 'அறி' என்றே வினையெச்ச மாகப் புணரும் என்பதற்கு விதி கூறாமல் அதனைப் பல இடத்தும் உடம்பொடு புணர்த்தே விதி கூறியுள்ளார். 'சாவ என்னும் செயஎன் எச்சத்தும்' என்ற உம்மையை விகாரத்தால் தொக்கதாகக் கொள்ளுதலும் அமையும்.

'பால்அறி வந்த உயர்திணைப் பெயரே' - சொ. 164

'பால்அறி வந்த அஃறிணைப் பெயரே' - சொ. 169

'பால்அறி வந்த என்ன பெயரும்' - சொ. 168, 172

'பால்அறி வந்த அம்மூ விரண்டும்' - சொ. 210, 220'

பாலறி வந்த அன்ன மரபின்' - சொ. 217, 23
என்பன நோக்குக.

## 19. இன்றி, அன்றி என்னும் குறிப்புவினையெச்சங்கள்

'இன்றி என்னும் வினைஎஞ்சு இறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்றுஇயல் மருங்கின் செய்யுளுள் உரித்தே' - எ. 237

'உகரம் ஆதலும்' என்ற உம்மை விகாரத்தான் தொக்கது என்று கோடலே ஏற்றது; ஆசிரியர் 'இன்றி' எனவும் 'இன்று' எனவும் நூற்பாக்களில் வழங்குதலின்.

'நோய்இன்று உய்த்தல்' - பொ. 58

'பொருள்இன்று உய்த்த பேராண் பக்கம்' - பொ. 63

'வழூஇன்று நிலைஇய இயற்படு பொருளினும்' -பொ.111

'முந்நாள் அல்லது துணையின்று கழியாது'- பொ.122

'காத்த தன்மையின் கண்இன்று பெயர்ப்பினும்' - பொ.150

'பொறைஇன்று பெருகிய பருவரற் கண்ணும்' - பொ. 151

'காய்வுஇன்று அவன்வயின் பொருத்தற் கண்ணும்'
-பொ. 151

என்பனவும்,

'அச்சமும் உவகையும் எச்சம் இன்றி' - பொ. 91

'இன்றிச் சென்ற தன்நிலை கிளப்பினும்' - பொ. 146

என்பனவும் நோக்குக.

ஆசிரியர் காலத்து அன்றி என்பது அன்று என்று திரியாமையைத்

'தான்மீண்டு எறிந்த தார்நிலை அன்றியும்' -பொ. 72

'ஏரோர் களவழி அன்றி' - பொ. 76

'குடையும் வாளும் நாள்கோள் அன்றி' - பொ. 68

முதலியன நோக்கி அறியலாம்.

கோபலய்யர் -பதி- 4

## *20. கே - ஏழன் பொருள்பட வருவது*

'நாள்முன் வருஉம் வன்முதல் தொழிற்கே'- எ. 124
'முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே' - எ. 152
'நும்இடை வரூஉம் முன்னிலை மொழிக்கே' - எ.191
'டகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே' - எ. 302
'றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே'- எ. 332
'உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே' -எ.240

இவை முறையே தொழிலிடத்து, மொழியிடத்து, பொருளிடத்து, அவளிடத்து என்று பொருள்பெறக் 'கே' என்னும் இடைச்சொல் ஏழாம்வேற்றுமை உருபின் பொருள்பட வருதலை நோக்கி வீரசோழியம் ஏழன் உருபுகளுள் முதலாவதாகக் 'கே' என்பதனைக் 'கே ஏழன் பொருள்வயின் ஆகும்' என்று குறிப்பிடுகிறது. 'கே' என்பது, 'கண்கால்' சொ. 83 என்னும் நூற்பாவில் இடம்பெறாமல் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது.

## *21. நூற்பா இலக்கணம்*

தொல்காப்பியம் நூற்பா என்ற செய்யுள் யாப்பில் இயற்றப்பட்டது. இதன்கண் இருசீர் கொண்ட ஓரடியாக அமையும் நூற்பாக்களும் உள. நூற்பாவின் குறைந்த அளவு ஓர் அடி. தொல்காப்பியத்தில் உள்ள நூற்பாவின் உயர்ந்த அளவு 59 அடி. நூற்பாக்கள் ஓரசைச்சீர்களால் அமைதல் கூடாது. பெரும்பாலும் ஈரசைச் சீர்களே நூற்பாக்களில் பயிலும். அருகி மூவசைச் சீர்களும் வருதல் உண்டு.

'பொற்பே பொலிவு' - சொ. 335

'இசைநிலை நிறைய நிற்குவ ஆயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' பொ. 339

என்பதனான் பொலிவு என்பதனை நிரைபு அசையாகக் கொள்ளாமல் நேர்நேராகக் கொள்ளவேண்டும்.

'எய்யா மையே அறியா மையே' - சொ. 342

இதன்கண் மகர ஐகாரம் தனிஅசையாகக் கொள்ளப்படும்.

'வாய்மையும் பொய்மையும் கண்டோற் சுட்டி'-பொ. 39

மகரஐகாரத்தைக்குறுக்கமாகக் கொண்டு இவ்வடியின் முதல் இருசீர்களையும் ஈரசைச் சீர்கள் ஆக்குக.

பன்மையொடு, வேனிலொடு - இவற்றை நேர்நிரைபு ஆகிய ஈரசைச் சீராகக் கொள்க. வலிக்கும்வழி, மெலிக்கும் வழி, விரிக்கும்வழி, நீட்டும்வழி, குறுக்கும்வழி (சொ. 403) போல்வனவே அருகி வரும் மூவசைச் சீர்கள்.

'ஆஏ ஓஅம் மூன்றும் வினாஅ' - எ. 32
'கூறிய மருங்கின் கொள்வழிக் கொளாஅல்'-பொ.307
'கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ' -பொ. 402
'அஆ வ என வரூஉம் இறுதி' - சொ. 9

என்றாற்போல அளபெடை புணர்த்தாவது ஈரசைச்சீராகக் கொள்ளல்வேண்டும். நூற்பாக்களின் தொடக்கத்தில் 'அவற்றுள்' முதலிய தனிச்சொற்களும், நூற்பாவினுள் சொற்சீர்களும் அருகிக் காணப்படுகின்றன.

## 22. அளபெடை விளக்கம்

'நீட்டம் வேண்டின் அவ்வளபு உடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்.' - எ. 6

வடமொழியில் அளபெடை என்பது, நெடில் ஒலியாகிய இரண்டு மாத்திரையொடு குறில்ஒலியாகிய ஒருமாத்திரை விட்டிசைத்தலின்றி மூன்று மாத்திரையாகக் கூடி ஒலிக்கும் எழுத்தாகும். வடமொழியில் அளபெடை விளி ஒன்றிலேயே வரும். அளபெடையால் பொருள் வேறுபாடு ஏற்படாது.

தமிழில் மூன்று மாத்திரை அளவு ஒலிக்கும் தனி எழுத்து எதுவும் இல்லை. தமிழில் அளபெடை என்பது நெட்டெழுத்தின் மாத்திரை நீள வேண்டிய இடத்தில் பயன்படுத்தப்படும் ஒத்த குற்றெழுத்தேயாம். அளபெடை இன்னோசைக்காகவும், செய்யுளில் இசை நிறைத்தற்காகவும், தன்வினையைப் பிறவினை யாக்குதற் காகவும் பயன்படுத்தப்படுதலைத் தொல்காப்பியத்தில் காண்கிறோம்.

'அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை இன்றித் தான்வரு காலையும்
உளவெனப் படுப பொருள்வேறு படுதல்' - சொ. 281

என்று ஆசிரியரும் குறிப்பிட்டுள்ளார்.

'நீட்டம் வேண்டின்' என்ற சொற்றொடரின் விளக்கம், ஆசிரியர் தம் நூற்பாக்கள் பலவற்றில் அளபெடையைப் புணர்த்துக் கூறுவனவற்றாலேயே அறியவேண்டியவராக உள்ளோம். 'நீட்டம் வேண்டின்' என்ற தொடரில், ஓரசைச் சீரை ஈரசைச்சீர் ஆக்கவேண்டுதல் முதல்இடம் பெறுகிறது. இதன்கண், நெடில் அளபெடுத்தலும், குறில் நெடிலாக நீண்டு பின் அளபு எடுத்தலும் அடங்கும். விரித்தல் விகாரமாக ஒற்று மிகுதலும் ஓரசைச்சீரை ஈரசைச்சீர் ஆக்குதற்கேயாம். இன்னோசை கருதி அமைக்கப்பட்டதாய்ப் பிற்காலத்தார் சொல்லிசை அளபெடை என்று வழங்குவதும் இதன்கண் அடங்கும்.

புகாஅக் காலை, பகாஅ விருந்தின் - நெடில் அளபெடுத்தன-பொ. 107

வருஉம் இறுதி - குறில் நெடிலாக நீண்டு அளபெடுத்தது -சொ.9

இயல்பா கும்மே - ஈரசைச்சீர் அமைக்க மகரஒற்று விரிந்தது-எ.144

தழீஇயின ஒழுகும் - இன்னோசை கருதித் 'தழுவின' என்பது தழீஇயின எனத் திரிந்தது.

எழு - தன்வினை; எழூஉ - பிறவினை. பிறவினை வாய்பாடு என்பதனை அறிவிக்கக் 'கூட்டி எழூஉதல்' (எ. 6) என்று ஆசிரியர் அளபெடையைப் பயன் படுத்தியுள்ளார். 'துன்புறூஉம் துவ்வாமை' என்னும் குறளின்கண் வருவனவும் அது. 'நீட்டம் வேண்டின்' என்பதன் விளக்கமாக ஆசிரியர் இவற்றை எல்லாம் தம் நூலின் பல இடங்களிலும் உடம்பொடுபுணர்த்துக் கூறியுள்ளார். வினையெச்சத் திரிபுகளாக 14 சொற்களும், பெயரெச்சத் திரிபுகளாக ஆறு சொற்களும், வினையடி யாகப் பிறந்த பெயர்களாக எட்டுச் சொற்களும், வினைமுற்றுக்களாக இரண்டு சொற்களும், தொல்காப்பியத்தில் அளபெடை வடிவில் இடம் பெற்றுள்ளன. தொக்கு, தொகுத்து, தொகுக்கப்பட்டு என்ற பொருள்களில் வழங்கும் 'தொகைஇ' என்ற சொல் நூலுள் இருபது இடங்களுக்குமேல் ஆளப்பட்டுள்ளது. பிறவும் அன்ன.

இன்னோரன்னவாய்த் தொல்காப்பியத்துள் நூற்பாக்கள் வாயிலாகக் கூறப்பட்டன அன்றி உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டனவற்றையும் நுனித்து உணர்ந்துகோடல் தொல்காப்பியம் பற்றிய அறிவு நிரம்புதற்கு உதவும்.



# தொல்காப்பியனார் சமயம்

*'நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்*
*கலந்த மயக்கம் உலகம் ஆதலின்'*-பொ. 644

என்று மரபியலில் கூறுதலான், ஐம்பெரும்பூதமும் உடன்பட்டு அவை பஞ்சீகரண முறையான் கலந்தது உலகம் என்றலின், இவர் நான்கு பூதமே உடன்பட்ட பௌத்த சமயத்தவராகார்; ஆகாயம் கிரியை இல்லாதது என்று கூறும் சமண சமயத்தவரும் ஆகார். சமணர்கள் உலகம் அழிவற்றது என்றும், 'மூவா முதலா உலகம்' என்றும் கூறுவர். இவர் 'நில்லா உலகம் புல்லிய நெறித்தே' (பொ. 78) என்று உலகம் நிலையற்றது என்று கூறலானும் சமணர் ஆகார் என்பது தெளிவு.

*'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தான்அமர்ந்து வரூஉம்; மேவற்று ஆகும்'* - பொ. 223

என்று குறிப்பிடுவதனான் இவர் உயிர்கள் பல என்பதனை உடன்பட்டவராவர்.

*'சென்ற உயிரின் நின்ற யாக்கை'*- பொ. 71
*'தொல்உயிர் வழங்கிய அவிப்பலி யானும்'*-பொ. 76

என்ற தொடர்களால் இவர் உயிர் என்றும் அழிவில்லாதது என்ற கருத்தையும், அது பல பிறவிதோறும் உடலில் புகுந்து வருவது என்ற கருத்தையும் உடன்பட்டவராவர்.

*'காலம் உலகம் உயிரே உடம்பே*
*பால்வரை தெய்வம் வினையே பூதம்*
*ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்*
*ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன*
*ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்*
*பால்பிரிந்து இசையா உயர்திணை மேன'* - சொ. 55

“ காலம் என்பது முன்னும் பின்னும் நடுவும் ஆகி உள்ளதொரு பொருள். உலகம் என்பது மேலும் கீழும் நடுவும் ஆகி எல்லா உயிரும் தோன்றுதற்கு இடமாகிய பொருள். உயிர் என்பது ஜீவன். உடம்பு என்பது மனம் புத்தி அகங்காரமும் பூத தன்மாத்திரையும் ஆகி, வினையினான் கட்டுப்பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்பதொரு நுண்ணிய உடம்பு; இதனை மூலப்பகுதி என்னலும் ஆம். பால்வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினை என்பது ஊழ். பூதம் என்பது நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் ஆகிய ஐம்பெரும்பூதம். ஞாயிறு என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது. திங்கள் என்பது நீர்த்திரளாய் உலகிற்கு அருள்செய்வது. சொல் என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்த்துவது. அச்சொல்லினான் இயன்ற மந்திரம், விடம் முதலாயின தீர்த்தலின் தெய்வம் ஆயிற்று. இந்நூல் செய்தான் வைதிக முனிவன் ஆதலின் சொல் என்பது வேதம் என்று கொள்ளப்படும்’’ என்று தெய்வச்சிலையார் கூறியன கொண்டு தொல்காப்பியரின் கொள்கையை நன்கு உணரலாம்.

சேனாவரையர் ‘பால்வரை தெய்வம்’ என்பதற்கு ‘எல்லாருக்கும் இன்ப துன்பத்துக்குக் காரணமான இரு வினையையும் வகுப்பது’ என்று உரைகூறித் ‘தெய்வம் செய்தது’ என்று உதாரணம் காட்டியதும் உளம்கொளத்தக்கது.

அகத்திணையியலுள் கருப்பொருள் கூறிய இடத்து ‘தெய்வம் உணாவே மாமரம் புள்பறை’ - பொ. 18 என்று கூறிய இடத்து அவ்வந்நிலத்திற்கு உரிய வழிபடு தெய்வத்தை இவர் உடன்பட்டதைக் காண்கிறோம். அவ்வந்நிலத்துக்கு உரிய தெய்வங்களை,

‘மாயோன் மேய காடுஉறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்

வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே'- பொ.5

என்னும் நூற்பாவான் கூறிக் காட்டலானும் தெய்வம் பற்றிய இவர் கொள்கை புலப்படும். இந்நிலத் தெய்வங்களுக்குப் படிமை அமைத்து மக்கள் வழிபட்ட செய்தியும், அப்படிமை அமைந்த கோயில்களை அரசர் முதலியோர் ஊறு நேராமல் காத்தனர் என்பதும்,

'மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையான்
பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே'- பொ. 28

என்னும் நூற்பாவான் குறிப்பிடப்படுதலின் இவர் தெய்வப்படிமைகளை வைத்து வணங்குதலையும் உடன் பட்டவராவர்.

'மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே'- பொ. 144
'பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே'-பொ. 224

என்பனவற்றான் இவர் நான்கு வருணமும் உடன்படுதல் காணலாம்.

'நூலே கரகம்' பொ. 625 என்ற நூற்பாவால், இவர் பூணூல் அணிந்து கல்வியிலேயே காலம் கழிக்கும் பிரமசரிய நிலையையும்,

'கரணத்தின் அமைந்து முடிந்த காலை'- பொ. 146
'புரை அறந் தெளிதல்' - பொ. 272
'தாய்போல் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரிய என்ப
கவவொடு முயங்கிய காலை யான' - பொ. 173

என்பனவற்றான் இல்லற நிலையையும்,

'காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் கடனே' - பொ. 192

என்பதனான் வானப்பிரத்த நிலையையும்,

'காமம் நீத்த பாலி னானும்'- பொ. 76
'அருளொடு புணர்ந்த அகற்சி யானும்'- பொ. 76

என்பனவற்றான் துறவு நிலையையும்,

'கட்டில் நீத்த பாலி னானும்' - பொ. 76
'நாலிரு வழக்கின் தாபத பக்கமும்' - பொ. 75

என்பனவற்றான் தவம் செய்யும் நிலையையும் உடன் பட்டவராவர்.

'காதலி இழந்த தபுதார நிலையும்'- பொ. 79
'காதலன் இழந்த தாபத நிலையும்' - பொ. 79

என்பனவற்றான் மனைவியை இழந்த ஆடவன் மறுமணம் செய்துகொள்ளாமல் தனித்தே வாழ்வதனையும், கணவனை இழந்த மனைவி கைம்பெண்ணாகவே வாழ்வதனையும்,

'நல்லோள் கணவனொடு நனிஅழல் புகீஇச்
சொல்இடை யிட்ட பாலை நிலையும்' - பொ. 79

என்பதனான் கணவனை இழந்த மனைவி இறந்துபட்ட தன் கணவன்உடலோடு உடன்கட்டை ஏறுதலையும் உடன் பட்டவராவர்.

'அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே' - எ. 102
'மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்' - பொ. 92
'மறைஎன மொழிதல் மறையோர் ஆறே' - பொ. 498
'மறைமொழி கிளந்த மந்திரத் தான' - பொ. 477
'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்' - பொ. 75

எனக் கூறுவதால் இவர் வேதத்தினையும், அஃது அந்தணர்கண் நிலை பெறுதலையும், அது கூறிய ஒழுக்கங்களையும், அது கூறும் மந்திரங்களையும், 'கபிலை கண்ணிய வேள்வி நிலை' - பொ. 90 முதலிய வேள்விகளையும் உடன்பட்டவராவர்.

இவர் நான்மறைக்கண் ஓதப்பட்ட தெய்வங்களுள் திருமாலை மாயோன் எனவும், முருகனைச் சேயோன் எனவும் இந்திரனை வேந்தன் எனவும் இயமனை 'மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்'-பொ. 79 ,என்பதனான் கூற்றம் எனவும்,

துர்க்கையை,

'மறங்கடை கூட்டிய துடிநிலை ஏனைக்
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே'- பொ.59

என்பதனான் கொற்றவை எனவும் தமிழ்ப்பெயரிட்டு இந்நூலுள் வழங்குதலான் இத்தெய்வங்களின் வழிபாடு இந்நாட்டில் இவர் காலத்துக்கு முன்பே சிறந்து விளங்கிய செய்தியைத் தெளியலாம்.

'காலம் உலகம்' என்ற நூற்பாவை நோக்க, நிலம், பொழுது, பூதம், ஞாயிறு, திங்கள், நாமகள் வடிவாகிய சொல் இவை இந்நிலத்தில் போற்றிப் பாராட்டப்பட்டதனை அறியலாம். இக்கருத்துக்கு இயையவே, மாயோனுக்கு மால் என்ற பெயரும், சேயோனுக்கு வேலன், முருகன், வேள் என்ற பெயரும், இந்திரனாகிய வேந்தனுக்கு வானவன் என்ற பெயரும், கூற்றத்திற்கு மடங்கல், மறலி என்ற பெயரும், கொற்றவைக்குப் பழையோள், காடுகிழாள் என்ற பெயரும், தமிழ்ச் சொற்களாகவே நிகழ்கின்றமையான் இத்தெய்வ வழிபாடுகள் இந்நாட்டுள் இறப்ப முந்தியன என்று கருதலாம்.

'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்' - பொ. 60

என மாயோனுடைய புகழுக்கு மன், பெரு, தாவா, விழு என்று நான்கு அடைகள் கொடுக்கப்பட்டிருப்பது கொண்டு, நாடுகாவல் செய்யும் அரசர்களைத் திருமாலுடைய அமிசமாகக் கருதினர் மக்கள் என்பதைத் தெளியலாம்.

'தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே' - பொ. 450
'அமரர்கண் முடியும் அறுவகை யானும்' - பொ. 81
'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்' -சொ.4

என்பனவற்றான் இவர் பொதுவாக எல்லாத் தேவரையும் உடன்படுதலைக் காணலாம்.

'காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்' -பொ. 60

என்பதனான் இறந்த வீரர்களுக்கு நடுகல் நட்டு அவர்களை வழிபடுதலைக் குறிப்பதனான், இறந்தவர்களைப் பிதிரராகக் கொண்டு வழிபடும் ஒழுக்கம் இத்தமிழ்நாட்டில் இவருக்கு முன்னரே உண்மை உணரலாம்.

'அந்நிலை மருங்கின் அறம்முத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப' - பொ. 418

என்ற நூற்பாவில் 'அறத்தை முதலாவதாகக் கொண்ட ஏனைய பொருள் இன்பம் வீடு என்ற உறுதிப்பொருள்களுக்கும்' என்று பொருள்செய்வார் கருத்தை உட்கொண்டு, இவர் காலத்தில் அறம், பொருள், இன்பம், வீடு என உறுதிப் பொருள்கள் நான்காகக் கணக்கிடப்பட்டதனை அறியலாம். வீடு என்பது அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினின்றும் விடுபடுதல் ஆதலின், அறம் பொருள் இன்பம் என்பனவற்றின் நிலையாமையை அறிவிப்பதன் வாயிலாக நிலைபேறுடைய வீடுபேற்றைக் குறிப்பால்

'பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே' -பொ. 78

என்ற நூற்பாவில் தெரிவித்துள்ளார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

பாங்கருஞ்சிறப்பின் - தனக்குத் துணையில்லா வீடுபேறு நிமித்தமாக என்பது அவர் உரை.

இவற்றை நோக்கத் தொல்காப்பியர் சமண-பௌத்த சமயங்களைச் சார்ந்தவர் அல்லர் என்பதனையும், தம் காலத்தில் பாரததேயத்தில் சிறப்புற விளங்கிய வேத வழக்கொடுபட்ட நெறியினராய்ப் பல்புகழ் நிறுத்த படிமையோராய் வாழ்ந்தவராவர் என்பதனையும் உறுதி செய்யலாம்.



# இளம்பூரணர்

நூல் என்பது பண்டு இலக்கண நூல்களையே உணர்த்தும் சொல்லாக இருந்தது என்ற செய்தி, 'அவருக்கு நூல் அகத்தியம்', 'அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் மாபுராணமும் இசைநுணுக்கமும் பூதபுராணமும் என இவை என்ப', 'அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப', 'மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு என்றார்' - என இறையனார் அகப்பொருள் முதல்நூற்பா உரையுள் வரும் தொடர்களால் அறியப்படுகிறது. தொல்காப்பியனார் நூலின் இலக்கணத்தினை,

'நூல்எனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள்நின்று அகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுஅதன் பண்பே'-பொ. 478

என்ற செய்யுளியல் நூற்பாவில் விளக்கியுள்ளார். இதனால் நூற்பாக்கள் விளக்கிக் கூறத் தக்க உரை கூறும் வகையில் அமைந்திருக்கவேண்டும் என்று அவர் கருதியதாக நினைக்கிறோம். அவரே தம் நூலின் இறுதி இயலாகிய மரபியலில்,

'ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகையது ஆகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத்து இருவகை உத்தியொடு புணரின்
நூல்என மொழிப நுணங்குமொழிப் புலவர்'
-பொ. 653

என்று நூலின் இலக்கணத்தினைக் குறிப்பிட்டுள்ளார். இந்நூற்பாவிற்கு உரை வரைந்த பேராசிரியர் ''ஒத்த சூத்திரத்தினை உரைநடாத்தல் வேண்டினவழிப் பிறந்த காண்டிகையும், அக்காண்டிகையானும் விளங்காத காலத்து

அதனையும் விளங்கக் கூறும் உரை விகற்பத்ததுமாகிப் பத்துவகைக் குற்றமும் இன்றி நுண்பொருளவாகிய முப்பத்து இருவகை உத்தியொடும் பொருந்த வரின் அதனை நூல் என்று சொல்லுப நுண்ணிதின் உணர்ந்து உரைக்கும் புலவர் என்றவாறு'' என்று பொருள் எழுதிப் பின் விளக்கத்தில் ''இதனது பயம், உரையும் காண்டிகையும் இன்றிச் சூத்திரந்தானே சொற்படு பொருள் உரைத்தலும் உண்டு. அஃது அவற்றை ஒழிய ஆகா, இக்காலத்து என்றவாறு'' என்று குறிப்பிட்டிருப்பதால், தொல்காப்பியனாரை அடுத்த காலத்தில் வாழ்ந்த போதகாசிரியர்கள் நூற்பாக்களை வைத்துக்கொண்டே தம் நுண்ணறிவான் அவற்றிற்கு வாய் மொழியாகப் பொருள்கூறி விளக்கிவந்தனர் என்பது அறியப்படுகிறது. இந்நிலை பல நூற்றாண்டுகள் தொடர்ந் திருக்கலாம்.

ஏறத்தாழ 2500 ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய தொல்காப்பியத்துக்கு கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரைப் போதகாசிரியர் பயிற்றிய வாய்மொழி வாயிலான உரையே நிலவிவந்தது. அந்நூற்றாண்டில் தோன்றிய இளம்பூரணர் என்ற பெரியார் தம் இயற்பெயருக்கு ஏற்ப இளம்பிராயத்திலே மொழியறிவு நிரம்பப் பெற்றுத் தமிழகம் எங்கும் வாழ்ந்துவந்த சிறந்த போதகாசிரியர் எல்லோரையும் சந்தித்துச் சிக்கலான தொல்காப்பிய நூற்பாக்களுக்கு அவர்கள் கூறிய உரைகளை எல்லாம் தொகுத்துக்கொண்டு தொல் காப்பிய முப்படலங்களுக்கும் எழுத்து வடிவில் உரை வரைந்தருளினார். சுவடிகள் சிலவற்றில் இவர் வரைந்த உரை 'இளம்பூரணர் விருத்திக்காண்டிகை' என்றே குறிப்பிடப் பட்டுள்ளது.

தொல்காப்பியத்தின் முதல் இருபடலங்களுக்கும் இளம்பூரணர் வரைந்த உரையைப் பெரும்பாலும் பின்பற்றிப் பவணந்தி முனிவரால் இயற்றப்பட்ட நன்னூல், அது தோன்றிய அண்மைக் காலத்திலேயே மயிலைநாதர் என்ற சான்றோரால் உரை வரையப்பட்டு மக்களால் போற்றப்

படுவதாயிற்று. மயிலை நாதர் நன்னூல் பொதுவியலில் கூறப்படும் பத்துவகை எச்சங்களைக் குறிப்பிடும் 'பெயர்வினை உம்மை' (359) என்ற நூற்பாவிற்குத் தாம் வரைந்த உரையில் "இஃது ஒல்காப் பெருமைத் தொல் காப்பியத்துள் உளங்கூர் கேள்வி இளம்பூரணர் எனும் ஏதமில் மாதவர் ஓதிய உரை என்று உணர்க" என்று குறிப்பிட்டு இளம்பூரணரைப் போற்றியுள்ளார்.

பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய சாமிநாததேசிகர் இயற்றியருளிய 'இலக்கணக்கொத்து' என்ற நூலுக்கு, இக்காலத்து நம்மால் பெயர் அறியப்படாத சான்றோர் ஒருவரால் இயற்றப்பட்ட சிறப்புப்பாயிரத்தில் காணப்படும்

'ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி
தன்பெய ரால்உலகு இன்புறத் தரும்நூல்
உளம்கூர் உரையாம் இளம்பூ ரணமும்'

என்ற அடிகள் இளம்பூரணர் இயற்றியருளிய தொல்காப்பிய உரை மாணாக்கருக்குப் பேருதவியாக இருந்த செய்தியை எடுத்து இயம்புகிறது.

இத்தகைய அரிய தமிழ்ப்பணியினைச் செய்தருளிய இளம்பூரணருடைய வரலாறு பற்றி நாம் மிகுதியாகச் செய்திகளை அறிய இயலவில்லை. தொல்காப்பியத்தின் இளம்பூரணர் உரைப்பாயிரமாக இவருடைய வரலாற்றைக் குறிக்கும் பாடலாக வரலாற்றுப் பேராசிரியர் உயர்திரு. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் செந்தமிழ் தொகுதி 42இல் வெளியிட்டுள்ள பாடல் ஒன்று இவரைப் பற்றிய சிற்சில செய்திகளை நமக்கு எடுத்து இயம்புகிறது. அப்பாடல் பின்வருமாறு :

"தண்கடல் அசைவளி உருப்பத் திரைபிதிர்ந்து
ஊங்கலின் பொருட்குவைப் புணரியில் ஐயுற
அலைவமன் மயரினை அகற்ற எழுத்தால்

திணைதுறை உட்கோள் இயல்திறன் அறியாக்
கவர்பொருள் மாக்கள் மயக்கினுக்கு இரங்கிப்
பாய்இருங் காப்பியச் சுவைபல உணர்ந்துஅகம்
தோய மடுத்தோர் தொல்காப் பியன்உரை
முத்திற ஓத்தினுக்கு ஒத்தசீர்க் காண்டிகை
சொல்நிலை மேற்கோள் தொகுபொருள் துணிபுஉடன்
இயல்நூற் பாமுடிபு இணைத்துக் காட்டித்
தலைகடை கூட்டித் தந்தனன்; பண்டே
கொங்குவேள் மாக்கதைக் குறிப்புரை கண்டோன்,
தன்அறி அளவையின் நல்லுரை தேவர்
பன்மணிக் குறட்பா மதிப்பிடப் பொறித்தோன்,
குணகடல் செல்லூர் மணக்குடி புரியான்,
தண்முலை முகைஎன வெண்ணூல் சூடி,
அந்தணன், துறவோன், அருமறை உணர்ந்த
இளம்போதி பயந்த புனிதன்,
இளம்பூ ரணன்உரை இனிதுவாழ்க ஈங்குஎன்''

இப்பாடல் ''கிழக்குக் கடலினைச் சார்ந்த செல்லூரை அடுத்த மணக்குடிபுரி என்ற ஊரினைச் சார்ந்தவனும், முல்லை அரும்பு போன்ற பூணூல்நூலை அணிந்தவனும், அந்தணர் குலத்தில் பிறந்தவனும், துறவு ஒழுக்கம் உடையவனும், இளம்போதி என்பான் பயந்த புனிதனும் ஆகிய இளம்பூரணன் பண்டே கொங்குவேள் மாக்கதைக்குக் குறிப்புரையும் திருக்குறளுக்கு நல்லுரையும் எழுதியவன். அத்தகையோன் பின்னர்த் தொல்காப்பியன் அருளிய முப்படலங்களுக்கும் காண்டிகை உரை இயற்றி வழங்கினான்'' என்று குறிப்பிடுகிறது.

மணக்குடிபுரியில் தோன்றிய இளம்பூரணரும் திருக்குறளுக்கு உரை வரைந்தோருள் ஒருவராகிய மணக் குடவரும் ஒருவராக இருக்கலாம் என்பது சான்றோர் சிலருடைய துணிபு.

இளம்பூரணர் திருக்குறளுக்கு அருளிய உரையும், தெரியாத சொற்களும் பொருள்களும் பலவாக வந்துள்ள கொங்குவேள் மாக்கதைக்கு அருளிய குறிப்புரையும் இக்காலை நமக்குக் கிட்டவில்லை. ஆயினும், அவர் அருளிய தொல்காப்பிய உரையையேனும் நாம் காணும் நல்லூழினைப் பெற்றுள்ளோம். மணக்குடிபுரியை அடுத்ததாகக் கூறப்படும் செல்லூர் கிழக்குக் கடலை அடுத்துக் கடல்வளம் உடைய ஊராக விளங்கிய செய்தி அகநானூற்றுத் தொண்ணூறாம் பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது. பெருவளம் பொருந்திய அவ்வூர் செல்லி என்ற பெயரானும் வழங்கப்பட்டமை அகநானூற்று இருநூற்றுப் பதினான்காம் பாடலில் காணப்படுகிறது. சங்ககாலப் புலவர் பெயர்களில் செல்லூர்கிழார் மகனார், செல்லூர்க்கோசிகன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. இவ்வூர் அக்காலச் சோழ நாட்டைச் சார்ந்தது.

இளம்பூரணர் வரைந்த தொல்காப்பிய உரையில் காணப்படும் சில குறிப்புக்களிலிருந்து இவர் சோழ நாட்டினர் என்று உறுதி செய்யலாம். காவிரி ஆற்றிலிருந்து கல்லணையில் வெண்ணாறு பிரிந்து கிழக்கு நோக்கித் தஞ்சாவூருக்கு வடபுறமாக ஓடுகிறது. இன்று தஞ்சாவூருக்குக் குடிநீர் வெண்ணாற்றிலிருந்தே வழங்கப்படுகிறது. ‘தொழிற்பெயரெல்லாம்’ என்னும் எழுத்துப்படலத்து 307ஆம் நூற்பா உரையுள் இவர் ‘எல்லாம்’ என்ற மிகையினால், தொழிற்பெயர் அல்லனவும் உகரமும் வல்லெழுத்தும் பெறுவன கொள்க என்று கூறி ‘வெண்ணுக்கரை’ என்ற எடுத்துக்காட்டினைத் தருகிறார். இவ்வெண்ணாறு தஞ்சாவூர் மாவட்டத்துப் பாவநாசம் வட்டத்திலுள்ள முன்னியூர் அகத்தீசுரர் கோயில் கல்வெட்டு ஒன்றால் வெண்ணு என்ற பெயரொடு, வெண்ணுக்கு வடகரை, வெண்ணுக்குக் கிழக்கு என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

சொற்படலத்துத் 'தகுதியும் வழக்கும்' என்ற 17ஆம் நூற்பா உரையுள் இலக்கணத்தொடு பொருந்தாத மரூஉ வழக்கிற்குச் 'சோழன் நாடு என்பதனைச் சோணாடு என்பது மரூஉ வழக்கு' என்று குறிப்பிடுகிறார். 'நான்காகுவதே' என்று தொடங்கும் 74ஆம் நூற்பா உரையுள் 'சிறப்பு' என்பதற்கு எடுத்துக்காட்டாக 'வடுகர் அரசர்க்கு சிறந்தார் சோழிய அரசர் என்பது' என்பதனைக் குறிப்பிடுகிறார். 'வினையே குறிப்பே' என்று தொடங்கும் 253ஆம் நூற்பா உரையுள் எனவென் எச்சம் குறிப்பிடும் பொருள்களுள் பெயரைக் குறிப்பிடுவதற்கு எடுத்துக்காட்டுக்களாக ''ஊர் எனப்படுவது உறையூர் எனவரும், நாடு எனப்படுவது சோணாடு என்பதும் அது'' என்று கூறுகிறார். ஒப்பில்போலி பற்றிய 273ஆம் நூற்பா 'ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும்' என்பது. இதற்கு எடுத்துக்காட்டாக ''மங்கலம் என்பதோர் ஊர்உண்டு போலும், மழநாட்டுள்'' என்று ஆனாய நாயனாரின் அவதாரத் திருத்தலமான மங்கலம் என்பதனையும், அது சோழ நாட்டின் உட்பிரிவாகிய மழநாட்டுள் உள்ளது என்பதனையும் தெரிவிக்கிறார். இவற்றை எல்லாம் நோக்கச் சோழநாட்டுக் கிழக்குக் கடற்கரையை அடுத்த செல்லூர் மணக்குடியைச் சார்ந்த இவர் தமிழ்ப்பற்றோடு நாட்டுப் பற்றும் நாடாள் அரசுப்பற்றும் உடையவராய்ச் சோழநாட்டில் வாழ்ந்தவர் என்று உறுதி செய்யலாம்.

இவர் 'அந்தணன் துறவோன் அருமறை உணர்ந்த இளம்போதி பயந்த புனிதன்' என்று கூறப்படுவதால், வைதிகமரபில் தோன்றித் துறவறத்தில் வாழ்ந்த புனிதர் என்பது பெறப்படும். துறவிகள் தம் அருள் உள்ளத்தால் மொழித்தொண்டு வாயிலாக நாட்டு மக்களுக்குச் செய்த தொண்டு சமணத் துறவியர்களாகிய இளங்கோவடிகள், திருத்தக்கதேவர், பவணந்தி முனிவர் முதலியோரிடம் காணப்பட்டமை போலவே, வைதிகத் துறவியரிடமும் காணப்பட்டது. வைதிக மரபில் வீடுபேறு ஆண்மக்களுக்கே உரியது என்று கொள்ளப்படுகிறது. சமணர்களுக்கும் இஃது உடன்பாடு.

அடிகள் என்பது மரியாதைக்கு உரிய சொல். அஃது இறைவனையும், தந்தையையும், தாயையும், கணவனையும், அண்ணனையும், அரசனையும், அடியவர்களயும், துறவியரையும் வழங்கப் பயன்படுத்தப்படுகிறது.

'ஐயாறு உடைய அடிகள்' தேவாரம்

'பிற்காலத்துப் பெருமான் அடிகள் களவியல் செய்தாங்கு' (பொ. 649. பேரா.) என இறைவனையும்,

'அடிகள் முன்னர் யான்அடி வீழ்ந்தேன்' சிலப்.

எனத் தந்தையையும் கணவனையும்,

'அடிகளுக்கு இறைஞ்சி' - சீவக. 1279,
'பகைவரோ அடிகள் என்ன' - சீவக. 2893

எனத் தந்தையையும்,

'அடியன் யான் அடிகள்' - சீவக. 1918
'நடலையுள் அடிகள் வைக' - சீவக. 1922

எனத் தாயாரையும்,

'ஆக்கமும் கேடும் உற்றீர் அடிகளே அல்லீர்' - சீவக. 1734

எனத் தமையனையும்,

'அடிகளை இன்றி நீரே உண்ணவும் வல்லீ ராணீர்' - சீவக. 1751

எனக் கணவனையும்,

'அடிகட்கு அடிகள் அருளிற்று' - சீவக. 2874

என இளவரசனையும் பேரரசனையும்,

அப்பூதி அடிகள், ஐயடிகள், அதிராஅடிகள் என அடியார்களையும்,

'அடிகள் வாழி' - சீவக. 3024
'அடிகளுக்கு இடமருங்கு இருந்த' - சீவக. 3066

எனத் துறவியரையும் குறிக்குமாற்றை நோக்கி, இளம்பூரண அடிகள் வைதிக அந்தணத் துறவியாக வாழ்ந்தமை அறியலாம். சைவ சமயத்திலும் வைணவ சமயத்திலும் ஆண்களைப் போலவே பெண்களும் வீடுபேறு அடையலாம் என்ற கொள்கை உண்டு. வைதிக மதத்தில் அஃது இல்லை என்பது உளங்கொளத்தக்கது.

பொருட் படலத்தின் தொடக்கத்தில் இவர், 'நிலம் எனவே, நிலத்துக்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றுக்குக் காரணமாகிய ஆகாயமும் பெறுதும்' என்று கூறுவது சமண சமயக் கருத்துக்கு மாறாய், 'ஆகாயம் செயற்பாடு இல்லாதது' என்ற சமண சமயக்கருத்து இவருக்கு உடன்பாடு அன்று என்பதனை உணர்த்துகிறது. இவர் பொருட்படலக் களவியல் முதல் நூற்பா உரையுள், 'இதனால் சொல்லியது ஈண்டுக் களவு என்று ஓதப்படுகின்ற ஒழுக்கம் அறம் பயவாத புறநெறி அன்று; அது வேதவிதி ஆகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு' என்று கூறுவதால், இவர் வைதிக அந்தணத்துறவி என்று கொள்வதில் தடையில்லை. இவர் பொருட்படலப் பொருளியல் முதல் நூற்பா உரையுள் 'கார்விரி கொன்றை' என்ற அகநானூற்றுக் கடவுள்வாழ்த்துப் பாட்டினை எடுத்துக் காட்டி, 'யாழ்கெழு மணிமிடற்று அந்தணனது சிவானு பூதியில் பேருலகம் தங்கிற்று' என்று உரை கூறியுள்ளார். சைவ சித்தாந்த சாத்திரங்களின் தொடக்க காலத்தை ஒட்டி வாழ்ந்த இவர் சைவ சமய ஞான நூற்புலமையராகவும் வாழ்ந்தார் என்றே கருதலாம். இங்ஙனமே இவரை அடுத்து அடுத்த நூற்றாண்டுகளில் வாழ்ந்த அடியார்க்குநல்லாரும் நச்சினார்க்கினியரும் சிவபெருமானையே பரம்பொருளாகக் கொண்டு அப்பெருமானைக் குறிப்பிடவே 'இறைவன்' என்ற பெயரைப் பயன்படுத்தியதைக் காண்கிறோம்.

அடியார்க்குநல்லார் சிலப்பதிகார உரையுள் (1-8-1, 2) 'உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள்' என்று குறிப்பிடுகிறார். போதகாசிரியர்கள் வாய்மொழி வாயிலாகவே தொடர்ந்து வழங்கிவந்த தொல்காப்பிய உரைக்கு எழுத்து வடிவம் வழங்கிய இளம்பூரணரைச் சான்றோர் 'உரையாசிரியர்' என்ற சிறப்புப்பெயரை இயற்பெயர்முன் புணர்த்து வழங்கலாயினர். நாளடைவில் சிறப்புப் பெயரே இயற்பெயரின் இடத்தைப் பெற அவர் இயற்பெயர் மறையலாயிற்று என்று கருதுகிறோம். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இளம்பூரணரை 'உரையாசிரியர்' என்ற பெயராலேயே குறிப்பிடுகின்றனர். நச்சினார்க்கினியர் எழுத்துப்படலத்துக்குத் தாம் வரைந்த காண்டிகையுரையுள் இளம்பூரணர் கருத்துக்கு வேறுபடும் இடங்களும் உண்டு. அவ்விடங்களுள் சிலவற்றில் அவர் பெயரைக் குறிப்பிடுவார். சில இடங்களில் குறிப்பிடாமலும் செல்வார். ஆனால் குறிப்பிடும் இடங்களிலெல்லாம் அவரை 'உரையாசிரியர்' என்ற பெயராலேயே குறிப்பிடுவார். 'மெய்யோடு இயையினும் உயிர்இயல் திரியா' - எ. 10 என்ற நூற்பா உரையுள் 'ஒன்றரை மாத்திரையும் இரண்டு மாத்திரையும் உடைய உயிர்மெய்க் குறிலும் உயிர்மெய் நெடிலும் ஒரு மாத்திரையும் இரண்டு மாத்திரையும் ஆயவாறு என்னை எனில், நீர் தனித்து அளந்துழியும் நாழியாய் அரைநாழி உப்பிற் கலந்துழியும் கூடி ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதொரு பொருட்பெற்றி என்று கொள்வதல்லது, காரணம் கூறலாகாமை உணர்க. ஆசிரியன் ஆணை என்பாரும் உளர்.

'விளங்காய் திரட்டினார் இல்லை; களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்' - நாலடி. 103

என்பதே காட்டினார் உரையாசிரியரும். என்று குறிப் பிட்டுள்ளார். உரையாசிரியர் காட்டியதாகக் கூறிய செய்தி இப்பொழுது பதிப்பிலுள்ள எழுத்துப் படல உரையாசிரியர் உரையில் இல்லை.

பத்துப்பாட்டுக்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையுள் 'தமிழ்நாட்டை இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க.'- (மதுரைக் காஞ்சி- 40-42 உரை) என்று குறிப்பிட்டுள்ளார். அதுவும் இப்பொழுது காணப்படும் எழுத்துப்படல உரையாசிரியர் உரையில் காணப்படவில்லை. இங்ஙனமே சேனாவரையர் உரையாசிரியர் உரை என்று குறிக்கும் உரைப்பகுதிகள் சில சொற்படல இளம்பூரணர் உரையில் காணப்படவில்லை. இவை எல்லாம் ஏடு எழுதுவோர் அயர்ச்சியால் ஏற்பட்ட தவறுகள் என்றே கருதவேண்டியவராக உள்ளோம். சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் உரையாசிரியர் உரை என்று குறிப்பிடும் உரைப்பகுதிகள் பலவும் இளம்பூரணர் உரையில் காணப்படுகின்றன. பிரயோக விவேக நூலார் தம் நூலின் ஐந்தாம் காரிகை உரையில் 'வடநூலார் சையோகம் ஒருமொழியினும் புணர்மொழியினும் கொள்வர். அது பற்றிச் சூத்திரம் செய்தபடி **இளம்பூரணரும்** நன்னூலாரும் அவ்வாறே கொள்வர்' என்று குறிப்பிடுகிறார். எட்டாம் காரிகை உரையில் 'இனி **உரையாசிரியரும்** நச்சினார்க்கினியரும் பெயர் தனித்து நின்றகாலை எழுவாய் வேற்றுமை ஆகாது என்று உரைத்தனர்' என்று குறிப்பிட்டுள்ளார். இவை இளம்பூரணர் உரையில் உள்ளன. ***பிரயோக விவேக நூலார் கூற்றினால் இளம்பூரணரும் உரையாசிரியரும் ஒருவரே என்பது உறுதியாகிறது.***

சிவஞான முனிவர் சிறப்புப்பெயர் பற்றி உரையாசிரியர் என்றே குறிப்பிடுகிறார். அரசஞ்சண்முகனார் இயற்பெயர் பற்றி இளம்பூரணர் என்றே குறிப்பிடுகிறார். இருவரும் சிறப்புப்பெயர் பற்றியும் இயற்பெயர் பற்றியும் வழங்குபவர் ஒருவரே என்று துணியலாம். இக்கால அறிஞர் சிலர் இருவரும் வேறுவேறு ஆனவர் என்ற கருத்துடையவர்கள். அவர்கள் அங்ஙனம் குறிப்பிடுவதற்குக் காரணம் சேனா வரையரும் நச்சினார்க்கினியரும் குறிப்பிடும் உரையாசிரியர்

உரைப்பகுதிகள் சில இப்பொழுது அச்சில் காணப்படும் இளம்பூரணர் உரையில் இல்லை என்பதே. இங்ஙனம் கொள்ளுவதில் சிறப்பு இருக்குமேல், இதனை நன்மக்கள் ஆய்ந்து கொள்வாராக.

சிவஞான முனிவர் ''தமிழ் ஒன்றே வல்ல உரையாசிரியரை உள்ளிட்டோர்'' என்று இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் குறிப்பிட்டுள்ளார். அவ்விருவரும் தமிழில் வல்லவராய் உள்ள அளவு வடமொழியில் வல்லவர் அல்லர் என்பதே முனிவர் கருத்து. 'மூன்றாகுவதே' என்ற சொற்படல 73ஆம் நூற்பா உரையுள், 'இன்னான்' என்பதற்கு 'ஏநாங்கவிகார:' 'ஹேதௌ' என்ற பாணினியார் சூத்திரங் களை மனத்துக்கொண்டு 'கண்ணான் கொத்தன்; காலான் முடவன் என 'இன்னான்' என்புழியும் ஏதுவின் கண்ணும் மூன்றாம் வேற்றுமை வரும்' என்று குறிப் பிட்டுள்ளதையும், பொருட்படல 656ஆம் நூற்பா உரையுள் ''வேற்றுமை ஏழெனப் பாணினியார் கூறினமையின் அவர் விளியை முதல் வேற்றுமையில் அடக்கினார்'' என்றும், ''இரண்டாம் வேற்றுமை செயப்படு பொருட்கண் வரும் எனப் பாணினியார் ஓதினார். அஃது இவர்க்கும் உடன்பாடு'' என்றும் குறிப்பிட்டுள்ளதையும் கொண்டு இவர் வட நூற்புலமை உடையவராயிருந்தும் தமிழ் மரபு கெடாமல் உரை வரைதலையே உட்கொண்ட சான்றவர் என்பது தெளியலாம்.

அதிராசேந்திரன் ஆட்சிக்குப்பின் சோழமண்டலத்தை முதல் இராசராசன் மகள்வழி உறவுகொண்ட கீழைச்சளுக்கிய மரபினைச் சார்ந்த முதல் குலோத்துங்கன் மரபுவழி வந்த மன்னர்கள் ஆட்சி புரிந்தனர். சிறந்த வீரர்களாகி விளங்கிய அச்சோழமன்னர்கள் வடுகர் அரசர்களாகிய கீழைச்சளுக்கிய மன்னர்களுக்கு உறுதுணையாக வாழ்ந்தனர். அவருள் இறுதியில் மேம்பட்ட மன்னவனாகத் திகழ்ந்த மூன்றாம் குலோத்துங்கன் (1178-1218) காலத்தின் தொடக்கத்தில் இளம்பூரணர் சிறந்து விளங்கியிருக்கலாம். ஆதலின் இவர்

சொற்படல 73ஆம் நூற்பா உரையுள் 'வடுகர்அரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்' என்று அக்கால அரசியல் சூழ்நிலையை மனங்கொண்டு இந்த எடுத்துக்காட்டினைத் தந்துள்ளார்.

இனி, இளம்பூரணருடைய உரைத்திறம் பற்றிச் சிறிது நோக்குவோம். தொல்காப்பிய நூற்பாக்களுக்குச் சொற்பொருள் உரை எழுதியவர் நச்சினார்க்கினியர். இளம்பூரணருடைய உரை பொழிப்புரையாகும். இது விருத்திக் காண்டிகை எனவும் கூறப்படுகிறது. இவர் முன்னர் நூற்பாக் கருத்தினைத் கூறிப் பின்னர்ப் பொழிப்புரையும் வேண்டும் விளக்கமும் எடுத்துக்காட்டும் கூறுவர்; சில இடங்களில் சான்றோர்களிடை வழங்கும் ஒன்றற்கு மேற்பட்ட கருத்துக் களையும் குறிப்பிடுவர்; பெரும்பாலும் ஆற்றொழுக் காகவே பொருள்வரைவர்; சில இடங்களில் வினாவை எழுப்பி அதற்கு விடை கூறுபவரைப் போல உரை வரைவர். இவர் சொற் படலத்துக்கு வரைந்த உரை அமைப்பை நோக்குவோம்.

இளம்பூரணர் துறவியாக இருந்ததனால் நன்மக்கள் பலராலும் போற்றப் பட்டவர் ஆவார். அவர் தமிழகத்துப் பல ஊர்களுக்கும் யாத்திரை செய்யும் வாய்ப்புடையவராய் இருந்ததனால் பல ஊர்களிலும் பிரசித்தமாக இருந்த தொல்காப்பியப் போதகாசிரியர் பலரையும் காணும் வாய்ப்புப் பெற்றிருக்கலாம்; அவர்களோடும் அவர்கள் வாயிலாகப் பிற போதகாசிரியர் பலரையும் கண்டு பேசவும் வாய்ப்புப் பெற்றிருக்கலாம்; இம்முயற்சியின் பயனாகப் பலர் கூறும் உரைகளையும் உணர்ந்து தாம் எழுத்துவடிவில் தொல்காப்பியஉரையை வெளியிட்டிருக்கலாம்.

இளம்பூரணர் தொல்காப்பிய நூலுக்கு உரை வகுக்குங்கால், முதலில் நூற்பா நுதலியதைத் தொகுத்துச் சுட்டிப் பின்னர் சொற்றொடர்களையும் சொற்களையும் பிரித்துக்காட்டி, 'என்பது' என்று தொடங்கி உரை வகுத்து, ஈற்றில் 'என்றவாறு' என்று முடிப்பது பெருவழக்கு.

சிறுபான்மை வேறுவகையாகவும் உரைப்பர்; சில நூற்பாக்கள் நுதலிய செய்திகளைக் கூறாமலும் விடுப்பர்; சில நூற்பாக்களுக்குப் பொழிப்புரையும் கூறுவர்; சில இடங்களில் நூற்பாக்களுக்கு முடிவுகாட்டி இலக்கணம் கூறுவர்; இன்றி யமையாத சில சொற்களுக்குச் சிறப்பாக உரையும் வரைவர்;

சில நூற்பாக்களுக்குக் கருத்துரை மாத்திரம் கூறுவர்; சில நூற்பாக்களின் பகுதியைப் பிரித்துக்காட்டி வரலாற்று முறையான் விளக்குவர்; சில இடங்களில் மிக விரிவாகவும் உரை வரைவர்; சில நூற்பாக்களுக்கு வரலாறு காட்டி உரை விரிப்பர்; சிலவற்றிற்கு முடிவிடங்களைத் தொகுத்துக்கூறி ஏனைய பகுதிகளுக்கு வரலாற்றின் வாயிலாக உரை விரிப்பர்; சில இடங்களில் சில நூற்பாக்களை இணைத்துக் கூறி ''உரை இயைபு நோக்கி இவ்வாறு கூறப்பட்டது'' என்பர்; சில நூற்பாக்களில் மொழியை மாற்றி அமைத்து முடிவிடம் கூறும் வாயிலாக மற்றொருவர் கருத்தினையும் எடுத்து இயம்புவர்; சில நூற்பாக்களின் ஒருபகுதிக்குப் பொழிப்புரை கூறி மற்றைப் பகுதிக்குச் சொல்லாற்றல் தோன்றப் பொருள் விரிப்பர். சில நூற்பாக்களுக்கு வரலாறு காட்டி அதனையே உரையாக விடுப்பர். தம் கருத்துக்குச் சில மேற்கோள் ஒவ்வாவாயின் அவற்றைப் ''பாடம் அறிந்து திருத்திக் கொள்க'' (நூற்பா - 35) என்று இவர் அருகிக் கூறுவதும் உண்டு.

கல்வியினானாய காரணம் வந்தவழிக் கண்டுகொள்க (நூற்பா - 41) எனவும்,

வழக்குப் பெற்றுழிக் கண்டுகொள்க (நூற்பா - 107) எனவும்,

ஓகாரஈறும் ஏகாரஈறுமாய் வருவன விரவுப்பெயர் உளவேல் கண்டுகொள்க (நூற்பா - 147) எனவும்,

இனிப் பல இனத்து எச்சம் அடுக்கி வருமாறு வழக்கினகத்துக் கண்டுகொள்க (நூற்பா - 228) எனவும்,

இதுவும் மெய்யுரைபோலும் என்பது (நூற்பா - 443) எனவும்,

'இன்றிவர்' என்பது இத்துணைவர் என்னும் பொருட்டுப்போலும் (நூற்பா - 162) எனவும்,

'செய்ம்மன' என்பது இப்போது வழக்கு அரிது (நூற்பா-217) எனவும்,

உண்ணூ வந்தான் என்பது இப்பொழுது உண்ணா வந்தான் என வழக்கினுள் நடக்கும் (நூற்பா - 225) எனவும்,

''அதற்கு மெய்யுரை வல்லோர்வாய்க் கேட்டு உணர்க'' (நூற்பா - 223) எனவும்,

அழாஅன், புழாஅன் என்பன அக்காலத்து அவை உண்மையான் ஆசிரியன் ஓத முடிவு காட்டப்பட்டன (நூற்பா- 446) எனவும்,

இப்பெருமகனார் நூலின் பலவிடத்தும் கூறுவதனால், இவருக்குப் போலவே இவர் உசாவி அறிந்த போதகாசிரியர் பலருக்கும் ஐயப்பாட்டிற்கு இடமான செய்திகள் பல இருந்திருக்கவேண்டும் என்ற செய்தி புலனாகிறது.

ஒருவன் (நூற்பா - 1, 25, 38)
ஒருதிறத்தார் (நூற்பா - 1, 56, 58, 455)
ஒருவன் சொல்லுவது (நூற்பா - 4, 18)
ஒருசார் ஆசிரியர் உரை (நூற்பா - 18, 44, 57)
என்பாரும் உளர் (நூற்பா - 30, 33)
ஒரு கருத்து (நூற்பா - 68, 71, 447)
இருதிறத்தார் ஆசிரியர் (நூற்பா - 122)
ஒருசாரார் (நூற்பா - 445, 456)
இப்பகுதியர் ஆசிரியர் (நூற்பா - 421)

என்று இவர் சொற்படல உரையில் குறிப்பிட்டுள்ளனவற்றை நோக்கின், இவர் காலத்தில் போதகாசிரியர் பலர் தொல்காப்பியத்தை மாணாக்கருக்குப் பயிற்றி வந்தனர் என்பதும், அவர்கள் தாம் பயிற்றிய உரைகளுக்குக் குறிப்பு எழுதி வைத்திருக்கலாம் என்பதும், உணரக் கிடக்கின்றன. இளம்பூரணருக்கு முன்னரோ அவர் காலத்திலோ எழுத்து வடிவில் தொல்காப்பியத்துக்கு உரை பல எழுதப் பெற்றிருத்தல் கூடும் என்று கருதுவது பொருத்தமாக இல்லை.

அரிதின் முயன்று பலரோடு உசாவிப் பலருடைய கருத்துக்களையும் உட்கொண்டு இளம்பூரணர் வரைந்த தொல்காப்பிய உரையில் சொற்படலத்துக்கு வரைந்த உரையில், தம் கருத்துக்கு ஏலாதனவாகிய பல செய்திகளை அடுத்த நூற்றாண்டில் தோன்றிய சேனாவரையர் பல இடங்களில் காரணம் காட்டி மறுத்துத் தம் கருத்துக்கு ஏற்ற விளக்கம் கூறுவார். அதனை அடுத்து நோக்குவோம்.

**சேனாவரையர் இளம்பூரணர் கூற்றைத் தழுவிக் குறிப்பிடும் இடங்கள்**

நூற்பா - 1.உரையாசிரியரும் எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து என்பார் 'எழுத்தொடு புணர்ந்து' என்றார் ஆதலின் ஒருபுடை ஒப்புமையே கூறினார்.

நூற்பா - 2. உரையாசிரியரும் உயர்திணை எனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணையல்லது விரிபடாது என்பது ஈண்டுக் கூறியது என்று உரைத்ததூஉம் என்க.

நூற்பா - 13 உரையாசிரியர் 'அறிபொருள் வினா'வை அறிவு ஒப்புக் காண்டலும், அவன்அறிவு தான் காண்டலும், மெய் அவற்குக் காட்டலும், என விரித்து ஏனைய கூட்டி ஐந்து என்றார்.

நூற்பா - 250

இவற்றால் சேனாவரையர் இளம்பூரணராகிய உரையாசிரியரிடம் வைத்திருந்த பெருமதிப்பு வெளிப்படுகிறது.

**சேனாவரையர் உரையாசிரியர் குறிப்பிடுவனவற்றை மறுத்துக் கூறும் இடங்கள்**

குறிப்பு-சிற்சில நூற்பாக்கள் இளம்பூரணரால் இரண்டாகப் பிரிக்கப் படவும் சேனாவரையரால் இணைத்துக் கொள்ளப் படுவதனால் நூற்பா எண்ணிக்கையில் இருவர் உரையிலும் வேறுபாடுள்ளது.

***நூற்பா - 1*** என்ப என்னும் முற்றுச் சொல்லினது பகரம் குறைத்து மன்னும் ஆரும் என இரண்டு இடைச்சொல் பெய்து விரித்தார் என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் - என்மனார் என்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது இந்நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசைநிறை என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசைநிறை என்றல் மேற்கோள் மலைவு ஆகலானும், அவர்க்கு அது கருத்து அன்று என்க. மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்து உணர வைத்தல் அவர்க்கு இயல்பு ஆகலான், செய்யுள் முடிபு என்று கூறாராயினார்.

***நூற்பா - 1*** இன்சாரியை வேற்றுமை உருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று உரையாசிரியர் இரண்டாவது விரித்தாரால் எனின் - 'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும், சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்' (எ. 158) என இரண்டாவதற்குத் திரிபு ஓதினமையானும், 'செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்' (சொ. 28) என்புழியும் பிறாண்டும் எல்லாம் ஏழாவது விரித்தற்கு ஏற்பப் பொருள் உரைத்தமையானும் ***அவ்வுரை போலியுரை*** என்க.

***நூற்பா-4*** சுட்டிய என்பது செய்யிய என்னும் வினையெச்சம் என்றும், ஆண்மை திரிதல் சொற்கு இன்மையின் பெயர்நிலைக்கிளவி என்பது ஆகுபெயராய்ப்

பொருள்மேல் நின்றது என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் - ஆண்மை திரிதல் பெண்தன்மை எய்துதற்பொருட்டு அன்றிப் பேடிக்கு இயல்பாதலின், பெண்மை சுட்டவேண்டி ஆண்மை திரிந்த என்றல் பொருந்தாமை யானும், பொருளே கூறலுற்றாராயின், ஆசிரியர் 'பேடியும் தெய்வமும்' என்று தாம் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கிய வாய்பாட்டான் சூத்திரிப்பார் ஆகலானும், அவர்க்கு அது கருத்து அன்மையான் ***உரையாசிரியருக்கும் அது கருத்து அன்று*** என்க.

***நூற்பா-5*** ஏகாரம் அசைநிலை; உரையாசிரியர் பிரிநிலை என்றாரால் எனின் - பிரிநிலையாயின் ஆடுஉ அறிசொற்கு இலக்கணம் கூறுதலன்றிப் பிரித்ததன் சிறப்பு உணர்த்துதலே கருத்தாம் ஆகலின் ***அவ்வுரை போலியுரை*** என்க.

***நூற்பா - 13*** வினா எதிர்வினாதல், ஏவல், மறுத்தல், உற்றது உரைத்தல், உறுவது கூறல், உடம்படுதல் எனச் செப்பு அறுவகைப்படும் என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் - உயிர் எத்தன்மைத்து என்றவழி, உணர்தல் தன்மைத்து என்றல் முதலாயின அவற்றுள் அடங்காமையானும், மறுத்தலும் உடம்படுதலும் ஏவெப்பட்டார்கண்ண ஆகலானும் 'அறுவகைப்படும்' என்று ***பிறர்மதம் மேற்கொண்டு கூறினார்*** என்பது.

***நூற்பா - 13*** வினா வழீஇயின இடத்து அமையாது என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் - அற்றன்று; 'யாதுஎன வருஉம் வினாவின் கிளவி' (சொ. 32) எனவும், 'வன்புஉற வருஉம் வினாவுடை வினைச்சொல். (சொ. 239) எனவும் முன்னர் வழுஅமைப்பார் ஆகலான் அது ***போலியுரை*** என்க.

***நூற்பா - 17*** பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றலும் வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும் முதலாகிய குழூவின் வந்த குறிநிலை வழக்கும், 'கண்கழீஇ வருதும்', 'கால்மேல் நீர்பெய்து வருதும்' என்னும் தொடக்கத்து இடக்கர்அடக்கும் தகுதி என்றும், மரூஉ முடிபை வழக்காறு என்றும் உரையாசிரியர் அமைத்தாரால் எனின், குழூவின் வந்த குறிநிலை வழக்குச் சான்றோர் வழக்கின்கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படா ஆகலானும், இடக்கர் அடக்கு 'அவைஅல் கிளவி' எனவும் 'மறைக்குங் காலை' எனவும் (சொ. 436, 437) முன்னர் அமைக்கப்படுதலானும், மரூஉ முடிபு எழுத்ததி காரத்துக் கூறப்பட்டமையானும், அவர்க்கு அது கருத்து அன்றுஎன்பது. (கருமை முதலாயின ஒருநிகரன அன்மையின் காக்கையொடு சார்த்திக் களம்பழத்தை விதந்த துணை யல்லது, காக்கைக்கு வெண்மை நேராமையின் காக்கையின் கரிது களம்பழம் என்புழிக் கரிது வெளிதாயிற்று அன்று. கிழக்கு மேற்கு என்பன வரையறை இன்றி ஒன்றனொடு சார்த்திப் பெறப்படுவன ஆதலின், ஒன்றற்குக் கீழ்ப் பாலதனைப் பிறிதொன்றற்கு மேல்பாலது என்றலும் வழுவன்று. சிறுவெள்வாய் என்பது இடுகுறி. அதனான் இவை வழக்காறு என அமைக்கப்படா ஆயினும் உரையாசிரியர் ***பிறர்மதம் உணர்த்திய கூறினார்*** என்பது.) அடைப்புக்குறியகத்து உள்ள பகுதி இக்காலத்து அச்சிடப் பட்ட இளம்பூரணர் உரையில் காணப்படவில்லை.

***நூற்பா - 24*** பன்மை கூறல் உயர்திணைப் பால்ஐயத்திற்கு உரித்து என்றும், உருவென மொழிதல் திணைஐயத்திற்கு உரித்து என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் - அவை அவற்றிற்கே உரியவாயின் 'அஃறிணைப் பிரிப்பு' என்றாற் போல 'உயர்திணைப் பால்மயக்குற்ற' என்றும் 'திணை ஐயத்து' என்றும் விதந்து ஓதுவர் ஆசிரியர்; அவ்வாறு ஓதாமையானும், நடையுள் அவை பொதுவாய் வருதலானும் அவை ***போலியுரை*** என்க.

***நூற்பா - 26*** 'பெருந்தோள்சிறுநுசுப்பின்பேரமர்க்கட் பேதை' என்புழி, மூன்றாம்வழி முதல் கிடவாது பின்னும் அடையும் சினையும் புணர்த்தமையான் வண்ணச் சினைச்சொல் செய்யுளுள் மயங்கி வந்தது என்று உரையாசிரியர் கூறினாரால் எனின், மூன்றாம்வழிப் புணர்க்கப்படும் பேதை என்னும் முதற்சொல் பேரமர்க்கண் என்னும் தொகையொடு வேற்றுமைப்பொருள்படத் தொக்கு, அத்தொகை சிறுநுசுப்பு என்னும் தொகையோடும் அப்பொருள்படத் தொக்கு, ஒரு சொல்லாய், 'பெருந்தோள் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போல மூன்றாம் வழிப் பிறசொல் அடுத்துப் பேதை என்னும் முதல் கிடந்தது எனவேபடுதலின் மயக்கம் இன்மையான் அவர்க்கு ***அது கருத்து அன்று*** என்க. அன்றிப் பெருந்தோள் முதலாய மூன்றும் பலபெயர் உம்மைத் தொகைபடத் தம்முள்தொக்கு ஒருசொல்லாய்ப் பின் பேதை என்பதனொடு வேற்றுமைத் தொகைபடத் தொக்கன எனினும், அவை உம்மைத் தொகைபடத் தொகாது நின்று பேதை என்பதனொடு வேற்றுமைத்தொகைபட ஒருங்கு தொக்கன எனினும், தம்முள் இயையாது பேதை என்பதனோடு இயைதலின், ஆண்டும் மயக்கம் இன்மை அறிக. அஃதேல் இவ்வாறு வருதல் வழக்கிற்கும் உரித்தோ எனின், அடுக்கிய அடையும் சினையும் பொதுமை நீக்குதற்கு அன்றி அணிகுறித்து நிற்றலின், செய்யுட்கே உரித்து என்பது. 'சிறுபைந்தூவி' எனச் சினையொடு குணம் இரண்டு அடுக்கி வருதல் செய்யுட்கு உரித்து என்றும், இளம்பெருங்கூத்தன் என முதலொடு குணம் இரண்டு அடுக்கிவருதல் வழக்கிற்கு உரித்து என்றும், ***பிறர் மதம் மேற்கொண்டு கூறினார்.*** ஒன்றாக பலவாக, இனம் சுட்டாதன செய்யுட்கு உரியவாம், இனம்சுட்டி நின்றன வழக்கிற்கு உரியவாம் என்பதே உரையாசிரியர் கருத்து என்க. அன்றிப் 'பிறநூல் முடிந்தது தான் உடன்படுதல்' என்பதனான், 'சினையொடு குணம் இரண்டு அடுக்கல் செய்யுளாறு' என்று கொள்ளினும் அமையும், 'முதலொடு குணம் இரண்டு அடுக்கல் வழக்கியல், சினையோடு அடுக்கல் செய்யுள் ஆறே' என்றார் ஆகலின்.

***நூற்பா - 29*** இந்நான்கும் கொடைப்பொருளன என்று உரையாசிரியர் கூறினாரால் எனின், 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா. 36) என்பதனை அமைத்தார் ஆகலின் ***அவர்க்கு அது கருத்து அன்று*** என்க.

***நூற்பா - 35*** அல்லது என்பதற்குத் தன்னுழை உள்ளது அல்லது என்றும், 'அப்பொருள் அல்லாப் பிறிது பொருள்கூறல்' என்பதற்கு இனப்பொருள் கூறுக என்றும் உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - 'பயறு உளவோ' என்று வினாயவழிப் 'பயறு இல்லை' என்றால் படும் வழு இன்மையானும், உள்ளது அல்லது என்றல் கருத்தாயின், ஆசிரியர் 'அல்லது' எனக் குறித்த பொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியார் ஆகலானும், பாம்பு உணிக் கருங்கல்லும் பயறும் விற்பான் ஒருவன்உழைச் சென்று 'பயறுஉளவோ?' என்றவழிப் 'பாம்பு உணிக்கருங்கல் அல்லது இல்லை' என்றால் இனப்பொருள் கூறாமையான் பட்ட இழுக்கு இன்மையானும் அவை போலியுரை என்க. அல்லதூஉம், இனப்பொருள் கூறுக என்பதே கருத்தாயின் 'அப்பொருள் அல்லா இனப்பொருள் கூறல்' என்னாது, 'பிறிதுபொருள் கூறல்' என்னார் ஆசிரியர். அதனானும் **அஃது உரையன்மை உணர்க.**

***நூற்பா - 40*** பொருள் பற்றாது பண்பு முதலாயின பற்றி வந்த சுட்டு ஆதலின் வேறு ஓதப்பட்டது என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் - சாத்தன் வந்தான்; அஃது அரசர்க்குத் துப்பு ஆயிற்று என்றும், 'கிழவன் பிரிந்தான்; அதனைக் கிழத்தி உணர்ந்திலள்' என்றும், எழுவாயாயும், ஏனை வேற்றுமை ஏற்றும் அச்சுட்டுப் பயின்றுவருதலான், பண்பு முதலாயினவற்றைச் சுட்டும் சுட்டு எனப் பொதுவகையான் கூறாது 'காரணக் கிளவி' என ஒருசார் வேற்றுமைக்கு உரிய வாய்பாடு பற்றி ஓதுதல் குன்றக்கூறல் ஆகலானும், சுட்டுப் பெயராயின் 'சுட்டு முதலாகிய காரணக் கிளவி' என்றும் 'சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்' என்றும் கூறுதல் பொருந்தாமையானும் ***அது போலியுரை*** என்க.

***நூற்பா - 45*** 'எண்என்றா உறழ்என்றா ஆயிரண்டும் இனன் ஒன்றல் என்பது இலக்கணம் ஆகலான், 'யானும் என் எஃகமும் சாறும்' என்புழியும், 'ஆவும் ஆயனும் செல்க' என்புழியும் இனன் அல்லன உடன் எண்ணப்படுதலின் வழு என்றாரால் உரையாசிரியர் எனின்-திணைவேறுபாடு உண்டேனும், 'யானும் என் எஃகமும்' என்புழி வினை முதலும் கருவியும் ஆகிய இயையும், 'ஆவும் ஆயனும்' என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவுமாகிய இயையும் உண்மையான் உடன் எண்ணப்படுதலானும், 'யானை தேர் குதிரை காலாள் எறிந்தான்' என முன்னர் உதாரணம் காட்டுப ஆகலானும், பிறாண்டும் 'எண்ணுத் திணை விரவுப் பெயர் அஃறிணை முடிபின' (சொ. 51) என ஆசிரியருக்கு ஆராய்ச்சி முடிபுகோடற்கண்ணது ஆகலானும், அவர்க்கு அது கருத்து அன்று என்க. அல்லதூம் திணை விராய் எண்ணல் வழூ என்பதே கருத்தாயின், 'நெடுநல் யானையும் தேரும் மாவும், படைஅமை மறவரும் உடையம் யாம்' (புறநா. 72) என்றும், 'இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்' (குறள்-920) என்றும், படர்க்கைச் சொல்லும் அஃறிணைக் கிளவியும் விராய் எண்ணுதல் வழக்குப் பயிற்சி உடைமையான் அவையும் அடங்க 'உயர்திணைச் சொல்லே அஃறிணைக் கிளவி' எனப் பொதுப்பட ஓதாது, 'தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி' எனத்தன்மைச் சொல்லையே விதந்து ஓதல் குன்றக்கூறலாம் ஆகலானும் ***அவர்க்கு அது கருத்து அன்மை*** அறிக.

***நூற்பா - 50*** 'இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் அறம் கறக்கும்; உழவு ஒழிந்தன' என உரையாசிரியர் காட்டினாராலோ எனின் - பெற்றம் என்னும் பொதுப்பெயர் கறத்தலும் உழுதலும் ஆகிய சிறப்பு வினையான் பொதுமை நீங்குதல் வழுவன்மையான், ஈண்டைக்கு எய்தாமையின், ***அவர்க்கு அது கருத்து அன்று*** என்பது.

***நூற்பா - 51*** 'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று, அந்நான்கு அல்லது குடியும் இல்லை' (புறநா. 335) என இருதிணைப்பெயரும் விரவி வாராது உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணை முடிவு கொண்டன என உரையாசிரியர் கூறினாராலோ எனின் - பாணன் முதலாயி னாரைக் 'குடி' என்று சுட்டியவழிக் குடிக்கு ஏற்ற தொகை கொடுத்தல் வழு அன்மையான் ***அவ்வுரை போலியுரை*** என்க.

***நூற்பா-54*** 'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என ஒரு சூத்திரமாக உரையாசிரியர் பிரித்தாரால் எனின் - அங்ஙனம் பிரிப்பின் ஒன்று வினை மருங்கின் ஒன்றித் தோன்றுதலும் வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொற்கே இலக்கணமாய் மாறுகோடலானும், வினை வேறுபடுவனதாமே பொதுவினை கொண்டவழி வினை வேறுபடாதனவாம் என்பது அதனான் பெறப்படாமை யானும், ***அது போலியுரை*** என்க.

***சேனா - நூற்பா - 60; இளம் - 61*** அஃதேல், 'மேலைச் சேரிக் கோழி அலைத்தது' எனக் கீழைச்சேரிக் கோழி அலைப்புண்டது என்றும், 'குடம்கொண்டாள் வீழ்ந்தாள்' எனக் குடம் வீழ்ந்தது என்றும் இவை இனம் செப்பின என்றும், 'ஆவாழ்க; அந்தணர் வாழ்க' என்பன இனம் செப்பா என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் - அற்று அன்று; கீழைச்சேரிக்கோழி அலைப்பு உண்டல் இன்றி மேலைச் சேரிக் கோழி அலைத்தல் அமையாமையானும், குடம் வீழ்தல் இன்றிக் குடம்கொண்டாள் வீழ்தல் அமையாமை யானும், கீழைச்சேரிக் கோழி அலைப்புண்டலும், குடம் வீழ்தலும் சொல்லான் அன்றி இன்றியமை யாமை ஆகிய பொருள் ஆற்றலான் பெறப்படும் ஆகலான் ஈண்டைக்கு எய்தா, இது சொல்லாராய்ச்சி ஆகலான் என்பது. இன்னோரன்ன சொல்ஆற்றலான் பெறப்பட்டன எனின், புகை உண்டு என்றவழி எரியுண்மை பெறுதலும் சொல் ஆற்றலான் பெறப்பட்டதாம் என்பது. இனி, 'ஆவாழ்க; அந்தணர் வாழ்க' என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங்கும் ஒழிந்த மக்களும் சாக என்னும் கருத்தினனாயின் இவையும் இனம் செப்புவன அன்றோ என்பது; அதனான் அவை ***போலியுரை*** என்க.

***சேனா - 62; இளம் - 61*** பொது இலக்கணம் உணர்த்திச் சிறப்பு இலக்கணம் உணர்த்துதல் முறை ஆகலின், முதற்கண்ணது ஆகிய பெயர்ச்சொற்குப் பயனிலை கோடலும் உருபு ஏற்றலும் காலம் தோற்றாமையும் ஆகிய இலக்கணம் உணர்த்துவார், இயைபுபட்டமையான் வேற்றுமை இலக்கணம் உணர்த்தினார் என மேல்ஓத்தினோடு இவ் வோத்திடை இயைபு கூறினாரால் உரையாசிரியர் எனின் - அற்றன்று; இவ்வோத்துப் பெயர் இலக்கணம் நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டதாயின், பயனிலை கோடலும் உருபு ஏற்றலும் காலம் தோற்றாமையுமாகிய பெயர் இலக்கணம் முன்ஓதி, இயைபுபடுதலான் வேற்றுமை உணர்த்தும் கருத்தினராயின், அவற்றையும் இன்ன இலக்கணத்த என்று உணர்த்திப் பின்னும் எடுத்துக்கொண்ட பெயர்இலக்கணமே பற்றி ஓதிப் பெயரியல் என ஓர் ஓத்தான் முடியற்பாற்று அன்றே? அவ்வாறு அன்றி, வேற்றுமை இலக்கணமே முன்கூறி, 'அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலையே' (சொ. 66) எனவும், 'ஈறு பெயர்க்கு ஆகும் இயற்கைய என்ப' (சொ.69) எனவும் வேற்றுமை இலக்கணம் கூறி, அச்சூத்திரத்தான் பயனிலை கோடலும் உருபு ஏற்றலும் பெயர்க்கு இலக்கணம் என்பது உய்த்து உணரவைத்துப் பின்னும் வேற்றுமை இலக்கணமே உணர்த்தி, இதனை, 'வேற்றுமை ஓத்து' என்றும், அவற்றது மயக்கம் உணர்த்திய ஓத்தை, 'வேற்றுமை மயங்கியல்' என்றும், சிறப்பிலா விளிவேற்றுமை உணர்த்திய ஓத்தை 'விளிமரபு' என்றும் நுதலியதனான் பெயர் கொடுத்து, மூன்று ஓத்தாக வைத்துப் 'பெயரியல்' என வேறோர் ஓத்திற்குப் பெயர் கொடுத்தமையானும், 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (சொ. 155) என்பது முதலாகிய ஐந்து சூத்திரமும் பெயர் இலக்கணம் உணர்த்தும் ஓத்தின்முன் வையாது, இடைவைத்தல் பொருந்தாமையானும், இவ்வோத்துப் பெயர் இலக்கணம் நுதலி எடுத்துக் கொள்ளப்பட்டது அன்று; வேற்றுமை இலக்கணமே நுதலி எழுந்தது எனவேபடும்; அதனான் அவர்க்கு ***அது கருத்து அன்று*** என்க.

***சேனா - 67; இளம் - 68*** 'பெயரி னாகிய தொகையும்' என்ற உம்மையான் வினையினாகிய வினைத்தொகை தழுவப்பட்டது என்றும், 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' (சொ. 420) என்பதனான், தொகைச்சொல் எல்லாம் எழுவாய் வேற்றுமையாதல் பெறப்படுதலின், ஈண்டு 'அவ்வும் உரிய அப்பாலான' (சொ. 67) என்றது தொகைச் சொற்குப் பயனிலைகோடல் மாத்திரம் எய்துவித்தற்கு என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் - அற்றன்று; வினைத் தொகைக்கு நிலைமொழி வினை என்பது உரையாசிரியர்க்குக் கருத்தன்மை 'வினையின் தொகுதி காலத்து இயலும்' (சொ. 415) என்னும் சூத்திரத்துள் சொல்லுதும். இனி, 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' (சொ. 420) என்பதற்கு ஒருசொல் நடையவாம் என்பதுஅல்லது எழுவாய்வேற்றுமை ஆம் என்னும் கருத்து இன்மையானும், அக்கருத்து உண்டாயின், அவையும் எழுவாய் வேற்றுமையாய் நின்று, 'அன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொ. 66) என்பதனான் பயனிலை எய்தும் ஆகலின், 'அவ்வும் உரிய அப்பாலான' (சொ. 67) என்றல் கூறியது கூறிற்றாம் ஆகலானும், அதுவும் ***உரையாசிரியர் கருத்து அன்று*** என்க.

***சேனா - 68; இளம் - 69*** எவ்வயின் பெயரும் பயனிலை கோடல் செவ்விது அன்றாம் என உரைத்து, அவ்வாய் நீயிர் என்பன உருபு ஏலா என்று காட்டினாரால் உரையாசிரியர் எனின் - அவ்வாய் என்பது இடைச்சொல்லாய் ஆண்டு என்னும் பொருள்பட நின்றவழி, உருபே அன்றிப் பயனிலையும் ஏலாதாம். இனி, அவ்வழிக்கண் நும் என்பது திரிந்து நீயிர் என நின்ற திரிபைப் பெயர் எனக்கொண்டு உருபு ஏலாது என்றாராயின், நீ என்பதன் திரிபு ஆகிய நின் என்பதனையும் பெயராகக் கொண்டு பயனிலை கொள்ளாது என்றும் கூறல் வேண்டும்; அன்றி, நும்மின் திரிபு ஆகிய நீஇர் என்பதனை 'எல்லாம் நீஇர் நீஎனக் கிளந்து' (சொ. 174) என இயற்கைப் பெயரோடு ஒருங்குவைத்தது, நீஇர் என்னும் திரிபே இயல்பாக, வேற்றுமைக்கண் நும் எனத் திரியினும்

அமையும் என்னும் கருத்தினராய் அன்றே? அதனான் இயல்பாகக் கொள்ளப்பட்ட நிலைமைக்கண் நீஇர் என்பதனை உருபு ஏலாது என்றாராயின், நும் எனத் திரிந்து உருபு ஏற்பதனை உருபு ஏலாது என்றல் பொருந்தாதாம்; அதனால் அது **போலி உரை** என்க.

***சேனா - 74; இளம் - 73*** அதனின் இயறல்' என்பதற்குத் 'தச்சன் செய்த சிறுமா வையம்' (குறுந். 61) என்றும், 'இன்னான்' என்பதற்குக் 'கண்ணான் கொத்தை' 'காலான் முடவன்' என்றும் உதாரணம் காட்டினாரால் உரையாசிரியர் எனின் - அற்றன்று; 'தச்சன் செய்த சிறுமா வையம்' என்பது, 'வினைமுதல் கருவி அனைமுதற்று' (சொ.73) என்புழி அடங்குதலான், ஈண்டுப் பாற்படுத்த வேண்டாமையானும், சினை விகாரத்தை முதல்மேல் ஏற்றிக் கூறும் பொருண்மை 'இன்னான்' என்பதனான் பெறப் படாமையானும் ***அது போலியுரை*** என்க.

***சேனா - 82; இளம் - 77*** கண் முதலாயின எல்லாம் உருபு என்றாரால் உரையாசிரியர் எனின் - உருபு ஆயின் ஏழாவதற்குக் கண் என்பது உருபுஆதல் மேலே பெறப் பட்டமையான் பெயர்த்தும் 'கண்கால்' என்றல் கூறியது கூறிற்றாம் ஆகலானும், ஊர்ப்புறத்து இருந்தான், ஊர் அகத்து இருந்தான், கைவலத்து உள்ளது கொடுக்கும் எனப் புறம் அகம் வலம் என்பனவற்றுவழி அத்துச் சாரியை கொடுத்து உதாரணம் காட்டினமையானும், ***அவர்க்கு அது கருத்து அன்று*** என்க.

***சேனா-83; இளம்-78, 79*** உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர் மத விகற்பம் கூறித் தம் மதம் இது என்பதே போதர, .ஒன்றாக உரைப்பாரும் உளர். என்றார். இரண்டாய் ஒன்றாயவழிப் பிறிது உரை இன்மையின், உரையாசிரியர் கருத்து இதுவே ஆம்.

***சேனா - 102; இளம் - 98*** "சாத்தன் தாயைக் காதலன்', 'நாய் தேவன் ஆயிற்று' என்புழி, தாயை, தேவன் என்பன காதலன், ஆயிற்று என்னும் பயனிலைக்கு அடையாய் இடைநின்றாற்போல, 'கோட்டை நுனிக்கண் குறைத்தான்', 'தினையின் கிளியைக் கடியும்' என்புழி, நுனிக்கண், கிளியை என்பன, குறைத்தான், கடியும் என்னும் முடிக்கும் சொல்லிற்கு அடையாய் இடைநின்ற வாகலின், அவை அடுக்கு அன்மையின் அவை உதாரணம் ஆதல் ***உரையாசிரியர் கருத்து அன்று*** என்க.

***சேனா - 114; இளம் - 110*** தொல்காப்பியனானும் கபிலனானும் செய்யப்பட்ட நூலைத் தொல்காப்பியம், கபிலம் என்றல் 'வினைமுதல் உரைக்கும் கிளவி' என்றாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; ஆசிரியர் ஒருமொழி இலக்கணம் ஈண்டுக் கூறார் ஆயினும், வெற்பு, சேர்ப்பு, என்னும் பெயர் இறுதி இதனை உடையான் என்னும் பொருள் தோன்ற அன் என்பது ஓர் இடைச்சொல் வந்து வெற்பன், சேர்ப்பன் என நின்றாற்போல, தொல்காப்பியன், கபிலன் என்னும் பெயர் இறுதி இவனான் செய்யப்பட்டது என்னும் பொருள் தோன்ற, அம் என்பது ஓர் இடைச்சொல் வந்து, அன் கெடத் தொல்காப்பியம், கபிலம் என நின்றன என்பது ஆசிரியர் கருத்தாம். அதனான் அவை உதாரணமாதல் ***உரையாசிரியர் கருத்து அன்று*** என்க.

'அனைமரபின' என்றது, அவ்வாறு யாதானும் ஓர் இயைபு பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆதல் என, ஆகுபெயர் இலக்கணத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறு. ஒன்றன் பொருட்கண் ஒன்று சேறல் என்னும் ஒப்புமையான் இவற்றை ஈண்டுக் கூறினார். அஃதேல் ஆகுபெயர் எழுவாய்வேற்றுமை மயக்கம் ஆகலான் ஈண்டுக்கூறினார் என்றாரால் உரையாசிரியர் எனின் - ஆகுபெயர் ஏனை வேற்றுமையும் ஏற்று நிற்றலானும் , எழுவாய் வேற்றுமையாய் நின்றவழியும் அது பிறிது ஓர் வேற்றுமைப் பொருட்கண் சென்று மயங்காமையின் வேற்றுமை மயக்கம் எனப்படாமை யானும் ***அது போலியுரை*** என்க.

***சேனா - 115; இளம் - 112*** அஃதேல், இதனைப் பிரித்து ஒரு சூத்திரமாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அங்ஙனம் பிரிப்பின், தம்மொடு சிவணலும், பிறிது பொருள் சுட்டலும் ஆகிய இவற்றது வேறுபாட்டின்கண் என்பது இனிது பெறப்படாமையானும், எழுத்து ஓத்தினுள் 'புள்ளி இறுதியும் உயிர்இறு கிளவியும்' (எ. 157) என்னும் சூத்திரத்து இந்நிகர்ப் பாதுகாவலைப் பிரியாது ஒன்றாகவே உரைத்த லானும், அவர்க்கு **அது கருத்து அன்று** என்க.

***சேனா - 120; இளம் - 133*** விரவுப்பெயரை உயர்திணைப் பெயரொடு மாட்டு எறிப ஆதலின், மாட்டேற்றான் முறைப்பெயர் ஆகாரமும் ஏகாரமும் பெற்று விளி ஏற்றல் எய்தாமையின் ஈண்டுக் கூறினார் என்றாரால் உரையாசிரியர் எனின் - அக்கருத்தினராயின் அஃறிணை என்னும் சொல் ஒழித்துக் 'கிளந்த இறுதி விரவுப் பெயரே, விளம்பிய நெறிய விளிக்குங்காலை' (சொ. 150) எனவும், இதன்பின் 'முறைப்பெயர் மருங்கின் ஐஎன் இறுதி, ஆவொடு வருதற்கு உரியவும் உளவே' (சொ. 126) எனவும், இதன்பின், னகாரளகார ஈற்று இருவகை விரவுப் பெயரும் அடங்கப் 'புள்ளி இறுதி ஏயொடு வருமே' எனவும் ஓதுவார்மன் ஆசிரியர்; என்னை? மயங்கக்கூறல் என்னும் குற்றமும் நீங்கிச் சூத்திரமும் சுருங்கும் ஆகலான். அவ்வாறு ஓதாமையானும், முறைப்பெயரே அன்றித் தான், நீஇர் என்பனவும் ஈண்டுக் கூறப்பட்டமையானும் உரை யாசிரியர்க்கு **அது கருத்து அன்று** என்க.

***சேனா - 161; இளம் - 158*** 'மற்று, நஞ்சு உண்டான் சாம் என்பது ஒருபாற்கு உரிய சொல் ஆயினும், நஞ்சு உண்டாள் சாவாள், நஞ்சு உண்டார் சாவார், நஞ்சு உண்டது சாம், நஞ்சு உண்டன சாம் என ஏனைப் பாற்கும் உரித்து ஆம் அச்சொல் என இப்பொருண்மை உணர்த்துகின்றது இச்சூத்திரம்' என்றாரால் உரையாசிரியர் எனின் - நஞ்சு உண்டல் சாதற்குக் காரணம் என்பான் அதனை ஒருபால்மேல் வைத்து நஞ்சு உண்டான் சாம் என்றது அல்லது, ஆண்டுத் தோன்றும்

ஆண்மையும் ஒருமையும் சாதற்குக் காரணம் என்னும் கருத்தினன் அல்லன்; அதனான் சொல்லுவான் கருத்தொடு கூடிய பொருள் ஆற்றலான் சாதல் ஏனைப் பாற்கும் ஒக்கும் எனச் சேறல் சொல் இலக்கணத்தில் கூறப்படாமையான், ஆசிரியர் 'ஒருபாற் கிளவி ஏனைப் பாற்கண்ணும், வருவன தாமே வழக்கு என மொழிப' (பொ.222) என இப் பொருண்மை பொருளியலில் கூறினார் ஆகலின், இச்சூத்திரத்திற்கு அஃது உரையாதல் ***உரையாசிரியர் கருத்து அன்று*** என்க. அல்லதூஉம் 'பார்ப்பான் கள் உண்ணான்' என்றவழிக் கள் உண்ணாமை சாதி பற்றிச் செல்வது ஒன்று ஆகலின், பார்ப்பனிக்கும் பார்ப்பார்க்கும் அல்லது பிற சாதியருக்கும் அஃறிணைக்கும் செல்லா மையின், ஐம்பால் கிளவிக்கும் உரிய என்றல் பொருந்தாமை யானும், அவர்க்கு ***அது கருத்து அன்மை*** அறிக. இஃது இப்பொழுது உள்ள இளம்பூரணர் உரையில் இல்லை. இதனைச் சேனாவரையர் கூறிய கருத்தாகக் கொண்டே நச்சினார்க்கினியர் மறுத்துள்ளார்.

***சேனா - 174; இளம் - 171*** 'பிறவும்' என்றதனான், மக, குழவி போல் வனவும் கொள்க. இவற்றை உயர்திணைப் பெயர் என்றாரால் உரையாசிரியர் எனின் - மரபியலுள் 'மகவும் பிள்ளையும் பார்ப்பும் பறழும், அவையும் அன்ன அப்பா லான' (பொ. 569) எனவும், 'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை' (பொ. 574) எனவும், அவை அஃறிணைக்கு ஆதல் கூறி, 'குழவியும் மகவும் ஆயிரண்டு அல்லன, கிழவ அல்ல மக்கட் கண்ணே' (பொ. 578) என உயர்திணைக்கும் ஓதிவைத்தார் ஆகலின், அவை விரவுப்பெயரேயாம்; அதனான் ***அது போலியுரை*** என்க.

***சேனா - 182: இளம்-179*** அஃறிணை ஒருமையும் அத்திணைப் பன்மையும் உயர்திணை ஒருமையும் ஆகிய பலவற்றை உணர்த்தலான் பன்மை சுட்டிய பெயர் என்பாரும் உளர். அஃது உரையாசிரியர் ***கருத்து அன்மை*** அவ்வுரையான் விளங்கும்.

***சேனா - 187; இளம் -184*** ‘ எல்லாப் பார்ப்பாரும், எல்லாச் சான்றாரும் எனப் படர்க்கைக்கண் வருதலும் கோடற்குத் ‘தன் உள்ளுறுத்த பன்மைக்கு ஆங்கால், உயர்திணை மருங்கின் அல்லது ஆகாது’ என மொழிமாற்றி உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - படர்க்கைக்கண் வருதல் இட வழுவமைதி என்றவழிப் படும் இழுக்கு இன்மையானும், ‘தன்மைச் சொல்லே அஃறிணைகிளவி’ (சொ. 43) ‘யான் யாம் நாம் என வரூஉம் பெயர்’ (சொ. 162) எனப் பிறாண்டும் ஓதியவாற்றான், தன்மைச்சொல் அஃறிணைக்கு இன்மை பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டாமையானும், எழுத்ததிகாரத்துள், ‘உயர்திணை யாயின் நம்இடை வருமே’ (எ. 191) எனத் தன்மைக்கு உரிய சாரியையயே கூறலானும் அது ***போலியுரை*** என்க. இச்செய்தி இப்பொழுதுள்ள இளம் பூரணத்தில் இல்லை.

***சேனா - 255; இளம் 250*** உரையாசிரியர் ‘[illegible]டிய[illegible]னும் வலியனும் ஆயினான்’ என்புழி உம்மை ஆக்கம் குறித்து நிற்[illegible]ின் ஆக்க உம்மை என்றார். இது சேனாவரையரான் மறுக்கப்படவில்லை.

***சேனா - 272; இளம் - 267*** அஃதேல் இதனை நிரல்நிறைப் பொருட்டாகக் கொண்டு ‘ஏ இசைநிறை; குரை அசைநிலை’ என்றாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; மற்று, அந்தில் என்பன போலப் பொருள் வகையான் வேறுபடுவனவற்றை இரண்டாம் என்பதுஅல்லது, சொல் வகையான் இரண்டாகிய சொல்லை இரண்டாம் என்பதனான் ஒருபயன் இன்மையின், அவர்க்கு அது கருத்து அன்று என்க. அல்லதூஉம், ஒரு சொல்லே இசைநிறையும் அசை நிலையும் ஆகல் உடைமையான் அவற்றை உடன்கூறினார் என்னாக்கால், இசைநிறையும் அசைநிலையும் ஒருங்கு மயங்கக் கூறலாம் ஆகலானும், அவர்க்கு அது ***கருத்து அன்மை*** உணர்க.

**சேனா-288: இளம்-283** பிறஎண் ஓடாநின்றவழி ஏகாரஎண் இடைவந்தது ஆயின் ஓடாநின்ற பிறஎண்ணேயாம் என உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அவ்வாறு விராய் எண்ணியவழிப் பிற எண்ணான் பெயர் கொடுப்பின் அதனை ஏகார எண் என்பாரையும் விலக்காமையானும், பிற எண்ணாம் என்பதனான் பெறப்படுவதொரு பயன் இன்மையானும், அவர்க்கு அது **கருத்து அன்று** என்க.

**சேனா - 291; இளம் - 286** 'யானை தேர் குதிரை காலாள் எறிந்தார்' என உம்மையும் உருபும் தொக்க வழி உம்மைத்தொகை என்னாது உருபுத்தொகை என்க என்பது இச்சூத்திரத்துக்குக் கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் அஃது உம்மைத்தொகை ஆகலின் ஒருசொல் நடைத்தாய் உருபு ஏற்றானும் பயனிலை கொண்டானும் நிற்கும். அத்தொகையிடை உருபு இன்மை சிற்றறிவி னார்க்கும் புலனாம்; அதனான் அஃது அவர்க்குக் **கருத்து அன்மை** சொல்லவேண்டுமோ என்பது.

**சேனா - 293; இளம் - 288** 'சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையான் கலியாணம் பொலிந்தது' என வினைச்சொல் செவ்வெண் தொகை பெற்று வந்தது என்றாரால் உரையாசிரியர் எனின் - அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறுதலின் எண்ணப் படாமை யானும், மூவர் என்பது சாத்தன் முதலாயினோர் தொகை ஆகலானும், **அது போலி உரை** என்க.

**சேனா - 294; இளம் - 289** இவை மூன்றும் பொருளின் பிரிந்து எண்ணின்கண் அசையாய் வருதலுடைய என்பது உரையாசிரியர்க்குக் கருத்து என்பாரும் உளர். அசைநிலை என்பது இச்சூத்திரத்தான் பெறப்படாமையானும், 'கண்இமை நொடி' (எ. 7) என்னும் சூத்திரத்து எனவைக் 'கண் இமை' என்பதனொடும் கூட்டுக என்று உரைத்தலானும் அவர்க்கு **அது கருத்து அன்று** என்க.

***சேனா-401; இளம்-395*** வடசொல்லாவது வட சொல்லோடு ஒக்கும் தமிழ்ச்சொல் என்றாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; ஒக்கும் என்று சொல்லப்படுவன ஒருபுடையான் ஒப்புமையும் வேற்றுமையும் உடைமையான் இரண்டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடு இன்மை ஆகிய ஒரு சொல்லிலக்கணம் உடைமையான் இரண்டு சொல் எனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது? ஒரு சொல்லேயாம் என்பது. ஒரு சொல் ஆயினும், ஆரியமும் தமிழுமாகிய இடவேற்றுமையான் வேறு ஆயின எனின், அவ்வாறாயின் வழக்கும் செய்யுளும் ஆகிய இடவேற்றுமையான் சோறு கூழ் என்னும் தொடக்கத்தனவும் இரண்டு சொல் ஆவான் செல்லும்; அதனான் இடவேற்றுமை உடையவேனும் ஒரு சொல்லிலக்கணம் உடைமையான் ஒரு சொல்லேயாம். ஒரு சொல்லாயவழித் தமிழ்ச்சொல் வடபாடைக்கண் செல்லாமையானும், வடசொல் எல்லாத் தேயத்துக்கும் பொது ஆகலானும், இவை வடசொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டன எனல் வேண்டும்; அதனான் **அது போலியுரை** என்க. அல்லதூஉம், அவை தமிழ்ச் சொல் லாயின், 'வட எழுத்து ஒரீஇ' என்றல் பொருந்தாமையானும், வடசொல் ஆதல் அறிக.

***சேனா - 408; இளம் 402*** 'எருத்துவயின்' என்பதற்கு ஈற்று அயல் சீர்வயின் என்று பொருள் உரைத்து, 'சூரல் பம்பிய சிறுகான் யாறே, சூர்அர மகளிர் ஆர்அணங் கினரே, சாரல் நாட நீவரு தீயே, வாரல் எனினே யான்அஞ் சுவலே' என்புழி, அஞ்சுவல் யான் என இறுதிச்சீர் ஈற்று அயல் சீர்வயின் சென்று திரிந்தது என்று உதாரணம் காட்டினாரால் உரையாசிரியர் எனின் - 'யான் அஞ்சுவல்' என நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லும் ஆகலின், இவ்வாறு திரிதல் பொருந்தாமையின், அவர்க்கு ***அது கருத்து அன்று*** என்க.

***சேனா - 415; இளம் 409*** 'பெயரெச்சம் நின்று தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்கப் படா, வழங்கியவாறே கொள்ளப்படும் என்றது, பிரித்தவழித் தொகைப்பொருள் சிதைதலான் அன்றே? கொன்ற யானை என விரித்தவழியும் அப்பொருள் சிதைவு இன்றேல், 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' (எ. 482) என்பதற்கு ஒரு காரணம் இல்லையாம். அதனான் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்து அன்மையின், உரையாசிரியர்க்கும் அது ***கருத்து அன்று*** என்க. அல்லதூம், ஆகுபெயர் உணர்த்தியவழி வினைத்தொகை உளப்பட 'இருபெயரொட்டும்' (சொ. 113) என்றார் ஆகலானும், வினை நின்று தொகுதல் அவர்க்குக் ***கருத்து அன்மை*** அறிக.

***சேனா - 416; இளம் 410*** கரியது என்னும் பண்பு கொள்பெயர் கருங்குதிரை எனத் தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின் - அதனைப் பெயரெச்சம் வினைத் தொகைக்கு நிலைமொழி என்றதற்கு உரைத்தாங்கு உரைத்து மறுக்க. பிற சொல் கொணர்ந்து விரிக்குங்கால், கரிய குதிரை, கரிது ஆகிய குதிரை, கரியது குதிரை என அத்தொகைப் பொருள் உணர்த்துவன எல்லாவற்றானும் விரிக்கப்படும்.

***சேனா - 422; இளம் 416*** 'நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது' என்பன காட்டினாரால் உரையாசிரியர் எனின்- அவை சொலல் பொருள அன்மையின், அவை காட்டல் ***அவர் கருத்து அன்று*** என்க.

***சேனா - 426; இளம் 420*** 'முன்னிலை அல்வழி' என்பதற்கு 'முன்னைய போல வினாவொடு சிவணி நில்லாதவழி' என்று உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; வினாவொடு சிவணல் இவற்றிற்கு ஒன்றான் எய்தாமையின் விலக்கல் வேண்டா; அதனான் அவர்க்கு அது கருத்து அன்று என்க.

***சேனா -427;இளம் 421*** 'உரையாசிரியர் வினையியலுள் ஓதப் பட்டன சில வினைச்சொற்கு முற்றுச்சொல் என்று குறியிடுதல் நுதலிற்று இச்சூத்திரம் என்றாரால் எனின் - குறியிடுதல் கருத்தாயின் 'அவ்வாறு என்ப முற்று இயல் மொழியே' என்னாது, 'அவ்வாறு முற்று இயல் மொழி என்ப' எனல் வேண்டும் ஆகலான், அது **போலியுரை** என்க. 'முற்று இயல்மொழி அவ்வாறு என்ப' என்று மொழிமாற்றவே, குறியீடு ஆம் எனின், குறியீடு ஆட்சிப் பொருட்டு ஆகலின், குறியான் அதனை ஆளாமையான், மொழிமாற்றி இடர்ப் படுவது என்னையோ என்பது. அல்லதூஉம் 'முற்று இயல் மொழி' எனக் குறியிட்டாராயின், இவை 'பெயரெஞ்சு கிளவி' எனவும், இவை 'வினை எஞ்சுகிளவி' எனவும் குறியிடல் வேண்டும். அவ்வாறு குறியிடாமையானும் ***அது கருத்து அன்றாம்.*** அதனான் வினைச்சொல்லுள் இருவகை எச்சம் ஒழித்து ஒழிந்த சொல் முற்றி நிற்கும் என்றும், அவை இனைத்துப் பாகுபடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்துக்குக் கருத்தாகக் கொள்க.

***சேனா - 428; இளம் 422*** முற்றுச் சொல்லே அன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் காலமும் இடமும் உணர்த்தும் என்பது இச்சூத்திரத்துக்குப் பொருளாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அவை இடவேறுபாடு உணர்த்தாது மூவிடத்துக்கும் பொதுவாய் நிற்றலின், அது ***போலியுரை*** என்க.

***சேனா - 431; இளம் 425*** பிரிநிலையொடு முடிதலாவது, அவனே கொண்டான் என்றவழி, அவனே என்பது கொண்டான் எனப் பிரிக்கப்பட்ட பொருளே வினை எனக் கொண்டு முடிதல் என்றாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; அவனே கொண்டான் என்புழி, அவன் என்னும் எழுவாய் - வேற்றுமை கொண்டான் என்னும் பயனிலை கொண்டது; ஏகாரம் பிரிவு உணர்த்திற்று; ஆண்டு எச்சமும் எச்சத்தை முடிக்கும் சொல்லும் இன்மையான், அவர்க்கு ***அது கருத்து அன்று*** என்க.

**சேனா - 440; இளம் 434** 'பசப்பித்துச் சென்றாரை யாம் உடையேம்' என்னும் தொடக்கத்தன குறிப்பின் தோன்றலாய் அடங்குதலின், விண்ணென விசைத்தது என்பது குறிப்பு எச்சம் என்றும், .அதுபோல. என்னும் தொடக்கத்தன விகார வகையான் தொக்கு நின்றமையான், 'ஒல்லென ஒலித்தது' என்பது இசை எச்சம் என்றும், இவை தத்தம் சொல்லான் முடிதல் அல்லது பிறசொல்லான் முடியாமையின், இவற்றை 'மேல்வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவி இல' என்றார் என்றும் உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று; 'தெரிபு வேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்' (சொ. 157) எனச் சொற்பொருள் பாகுபாடு உணர்த்தினார்; குறிப்பின் தோன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சம் ஆதல் உடைமையான் 'எச்சம்' என்றார்; அதனான் ஆண்டு அடங்காது. இனி, விசைத்தது ஒலித்தது என்பன தம்சொல் எனப்படா; படினும் விண்ணென வீங்கிற்று, துண்ணெனத் துளங்கினான் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிறசொல்லானும் முடிதலின், எஞ்சு பொருட்கிளவி இல என்றல் பொருந்தாதாம்; என்னை? தம் சொல் அல்லாதன எஞ்சு பொருட்கிளவியாம் ஆதலின். இனி, அதுபோல என்பது 'தொகுக்கும் வழித் தொகுத்தல்' என்பதனான் தொக்கதாயின், அதனைச் 'சுட்டிக் கூறா உவமை' என அணியியலுள் ஆசிரியர் ஓர் உவமை வேறுபாடாகக் கூறல் பொருந்தாது. 'தொகுக்கும் வழித் தொகுத்தல்' ஒரு மொழிக் கண்ணதாகலின், பல சொல் தொகும் என்றலும் பொருத்தம் இன்று; அதனான் அவர்க்கு **அது கருத்து அன்று**. விண்ணென விசைத்தது, ஒல்லென ஒலித்தது என்னும் தொடக்கத் தனவற்றை எனஎன்எச்சம் என அடக்கிக் குறிப்புஎச்சத்திற்கும் இசைஎச்சத்திற்கும் வேறு உதாரணம் காட்டல் கருத்து என்க. அல்லதூஉம், என என் எச்சம் என அடக்காது இசையும் குறிப்பும் பற்றி வருவனவற்றை வேறு ஓதின், வெள்ளென வெளுத்தது எனப்பண்பு பற்றி வருவதனையும் வேறு ஓதல் வேண்டும்; அதனை வேறு ஓதாமையானும் என என் எச்சம் என அடக்குதலே கருத்தாகக் கொள்க. குறிப்புப் பொருளைப் 'பசப்பித்துச் சென்றாரை உடையையோ?' 'இளைதாக

முள்மரம் கொல்க' (குறள். 879) என்பன முதலாகிய தொடர்மொழியே உணர்த்தலான் எஞ்சு பொருள் எனப்படா ஆயினும், அப்பொருள் பிற சொல்லான் அல்லது வெளிப்படாமையின், அச்சொல் எச்சம் ஆயிற்று. குறிப்புப் பொருளே அன்றி எஞ்சு பொருளும் சொல்லுவான் குறிப்பொடு படுத்து உணர்ந்து தமக்கு ஏற்ற சொல்லான் உணர்த்தப்படுதலின், குறிப்பான் எச்சம் செப்பல் மூன்றற்கும் ஒத்தவாறு அறிக.

***சேனா - 448; இளம் 442*** ''உயர்ந்தான் தமன் ஒருவனைக் காட்டி 'இவற்குக் கொடு' என்னும்'' என்றாரால் உரையாசிரியர் எனின் - ஆண்டுப் படர்க்கைச்சொல் படர்க்கைச்சொல்லோடு இயைதலான் வழூஇன்மையின் அமைக்கல் வேண்டாவாம்; அதனான், அது **போலியுரை** என்க.

***சேனா - 450; இளம் 444*** 'செய்யாய் என்னும் முன்னிலை, எதிர்மறை படாது செய் என் விதிவினை ஆதலும் உரித்து' என்று உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - அற்று அன்று. செய்யாய் என்னும் எதிர்மறை வினையும், செய்யாய் என்னும் விதிவினையும் முடிந்த நிலைமை ஒக்குமாயினும், எதிர்மறைக்கண் மறை உணர்த்தும் இடைநிலையும் உண்மையான், முடிக்கும் சொல் வேறு எனவே படும். மறை உணர்த்தும் இடைநிலை ஆவன: உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன் என்புழி வரும் அல்லும் இல்லும் ஆவும் ஏயும் பிறவுமாம். உண்ணாய், உண்ணேன் என்புழி எதிர்மறை ஆகார ஏகாரம் கெட்டு நின்றன எனல் வேண்டும்; அல்லாக்கால் மறைப்பொருள் பெறப்படாமையின். அதனான் எதிர்மறைச் சொல்லே விதிவினைச்சொல் ஆகாமையின், அவர்க்கு ***அது கருத்து அன்று*** என்க. அல்லதூஉம் ஆசிரியர் அக்கருத்தினராயின், 'செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல்' என்று ஓதுவார்மன்; அவ்வாறு ஓதாமையான், அவர்க்கு அது கருத்து அன்மையான், உரையாசிரியருக்கும் ***அது கருத்து அன்மை*** அறிக.

***சேனா - 457; இளம் 450*** 'பெயர்த்தனென் முயங்க' (குறுந்-84) என்பது முதலாயின செய்து என் எச்சம் முற்றாய்த் திரிந்தன என்றும், 'ஓடித்து உண்டு எஞ்சிய யா' (குறுந்-232) என்பது முதலாயின செய என் எச்சம் செய்து என் எச்சமாய்த் திரிந்தன என்றும், முன்னர் உரைத்தாரால் உரையாசிரியர் எனின் - 'பெயர்த்தனென் முயங்க' என்பது முதலாயின எச்சத்திரிபாயின், எச்சப் பொருள் உணர்த்துவதுஅல்லது இடமும் பாலும் உணர்த்தற்பால அல்ல; எச்சப் பொருண்மை யாவது மூன்று இடத்திற்கும் ஐந்துபாற்கும் பொதுவாகிய வினை நிகழ்ச்சி அன்றே? அவ்வாறு அன்றி முற்றுச்சொற்கு ஓதிய ஈற்றவாய் இடமும் பாலும் உணர்த்தலின், அவை முற்றுத்திரிசொல் எனவே படும். சொல்நிலை உணர்ந்து வினைகோடல் மாத்திரத்தான் வினையெச்சம் எனின், மாரைக்கிளவியும் வினையொடு முடியும் வேற்றுமையும் பிறவும் எல்லாம் வினையெச்சம் ஆவான் செல்லும். அதனான் அவர்க்கு அது ***கருத்து அன்று*** என்க. அல்லதூஉம் 'கண்ணியன் வில்லன் வரும்' (கலி-37) என வினைக் குறிப்புமுற்றாய்த் திரிதற்கு ஏற்பதொரு வினையெச்சம் இன்மையானும் அது ***கருத்து அன்மை*** அறிக.

ஓடித்து உண்டு எஞ்சிய' என்பதூஉம், 'ஞாயிறு பட்டு வந்தான்' என்பதூஉம் பிறவினை கொண்டன ஆயினும், செய்து என் எச்சத்திற்கு உரிய இறந்த காலம் உணர்த்தலான், ஏனைக் காலத்திற்கு உரிய செய என் எச்சத்தின் திரிபு எனப்படா; செய என் எச்சத்திரிபாயின், செய என் எச்சத்திற்கு உரிய காலம் உணர்த்தல் வேண்டும். மழை பெய்ய மரம் குழைத்தது எனச் செய என் எச்சத்திற்கு இறந்த காலமும் உரித்து எனின், காரணகாரியப் பொருண்மை உணர்த்தும்வழி அல்லது, செய என் எச்சம் இறந்தகாலம் உணர்த்தாது; ஓடித்து உண்டலும், ஞாயிறு படுதலும் எஞ்சுதற்கும் வருதற்கும் காரணம் அன்மையான், ஆண்டு இறந்தகாலம் உணர்த்தா

மையின், செய்து என் எச்சமாய் நின்று தமக்கு உரிய இறந்தகாலம் உணர்த்தின எனப்படும். அதனான் செய என் எச்சம் செய்து என் எச்சமாய்த் திரிந்தன என்றலும் **அவர் கருத்து அன்று** என்க. ஞாயிறு பட்டுவந்தான் என்பது ஞாயிறு பட்டபின் வந்தான் என இறந்தகாலம் உணர்த்தலும், ஞாயிறு பட வந்தான் என்பது ஞாயிறு படாநிற்க வந்தான் என நிகழ்காலம் உணர்த்தலும் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க.

***சேனா - 460; இளம் 453***

வையைக் கிழவன் வயங்குதார் மாண்அகலம்
தையலாய் இன்றுநீ நல்கினை; நல்காயேல்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கெளவை ஒருங்கு (முத்தொள்.)

என்புழி வையைக் கிழவன், கூடலார்கோ என்பன ஒருபொருளை வரைந்து உணர்த்தலான் பிரிவில ஆகலின் வரையப்படா என்றும்,

கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே - கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணஎம்
சாலேகம் சார நட (முத்தொள்.)

என்புழிக் காலேகவண்ணன் என்பது அச்சாந்து பூசினார் எல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப்பெருஞ்சேந்தனையே வரைந்து உணர்த்தாமையின், அவை பிரிவு உடையவாம் என்றும் உரையாசிரியர் உரைத்தாரால் எனின் - அற்று அன்று.

'நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினென் அல்லனோ? மகிழ்ந! வானத்து
அணங்கருங் கடவுள் அன்னோள்நின்
மகன்தாய் ஆதல் புரைவதால் எனவே' (அகநா - 16)

என்புழி, 'வானத்து அணங்கருங் கடவுள் அன்னோள்' என்பது மகளிர்க்கு எல்லாம் பொதுவாய் நாணி நின்றோளை வரைந்து உணர்த்தாது ஆயினும், சொல்லுவான் குறிப்பான் அவளையே உணர்த்தினாற் போலச் காலேகவண்ணன் என்பதூஉம் பொதுவாயினும் சொல்லுவான் குறிப்பான் கூத்தப்பெருஞ்சேந்தனையே உணர்த்திப் பிரிவிலதாய் நிற்றலான், அவர்க்கு **அது கருத்து அன்று** என்க.

சேனாவரையர் உரையாசிரியரை மறுக்கும் 50 இடங்களில்

''அஃது அவர்க்குக் கருத்துஅன்று'' என 28 இடங்களிலும்,

''அது போலியுரை என்க'' என 18 இடங்களிலும்,

''அவர் பிறர்மதம் மேற்கொண்டு கூறினார்'' என 3 இடங்களிலும்,

''அஃது உரையன்மை அறிக'' என 35ஆம் நூற்பாவாகிய ஓரிடத்திலும் குறிப்பிடுகிறார்.



# சேனாவரையர்

தொல்காப்பியச் சொற்படலத்திற்கு கி. பி. 12ஆம் நூற்றாண்டுக்கும் 15ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், கல்லாடர், தெய்வச்சிலையார் என்ற பெருமக்கள் ஐவர் இயற்றிய உரையைக் காணும் பேற்றினை நாம் இக்காலத்தில் பெற்றுள்ளோம். இவர்கள் உரையை அடியொற்றிச் சென்ற நூற்றாண்டில் அறிஞர்பெருமக்கள் சிலரால் குறிப்புக்கள் சில நூல்வடிவில் வழங்கப்பட்டுள்ளன. பாவலர். பாலசுந்தரனார் உரை நூல் முழுமைக்கும் வரையப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்துக்கு எழுத்து வடிவில் உரையைத் தமிழுலகத்திற்கு முதற்கண் வழங்கிய பெருமை இளம் பூரணரையே சாரும். இளம்பூரணரை அடுத்துச் சொற் படலத்துக்கு உரை வரைந்த பெருமைக்கு உரியவர் சேனா வரையரே. இவர் ஏறத்தாழ 50 இடங்களில் இளம்பூரண ரொடு வேறுபடுகிறார். இவர் வரைந்துள்ள உரை 'சூத்திரத்து உட்பொருள் அன்றியும் ஆண்டைக்கு, இன்றியமையாது இயைபவை எல்லாம், ஒன்ற உரைக்கும் உரை'யாகத் திகழ்கிறது. சேனாவரையர் உரையைப் பயின்றாலே, அதன்கண் இளம்பூரணர் உரையும் அடங்கி யுள்ளது என்று கருதும் அளவில் சேனாவரையர் உரை அமைந்திருப் பதான், சேனாவரையர் உரை வந்தபின் சொற்படலத்துக்கு இளம்பூரணர் உரையைப் பயில்வார் எண்ணிக்கை குறைந்து விட, சேனாவரையர் உரையே பெரிதும் பயிலப்படுவ தாயிற்று. இவர் இயற்றிய உரை 'ஆனா இயல்பின் சேனாவரையம்' என்று இலக்கணக் கொத்துரைச் சிறப்புப் பாயிரத்தில் இயம்பப்பட்டுள்ளது. சிவஞானமுனிவர் தம் சூத்திர விருத்தியில் இப் பெருமகனாரை, 'வடநூற்கடலை நிலைகண்டு அறிந்த சேனாவரையர்' என்று போற்றுகிறார். தொல்காப்பியச் சொற்படலம் பயில்வோர் சேனாவரையர் உரையையே பயிறல் வேண்டும் என்ற கருத்து அறிஞர் களிடையே வேர் ஊன்றிவிட்டது.

சேனாவரையர் என்ற பெயர் முருகப் பெருமானுடைய திருப்பெயர்களுள் ஒன்றாகக் கொள்ளப்படுகிறது. 'வானோர் வணங்குவில் தானைத்தலைவன்' என்று அப்பெருமான் திருமுருகாற்றுப்படையில் போற்றப் பெறுகிறான். தெய்வத்தின் பெயரை மக்களுக்கு இயற் பெயராக வழங்கும் மரபினை ஒட்டி இவருக்கு முருகனுடைய பரியாயப் பெயராகிய 'சேனாவரையன்' என்ற பெயர் இவருடைய பெற்றோரால் இடப்பட்டிருக்கலாம். 'நூலறிபுலவன்' எனவும், 'பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறு' எனவும் முருகாற்றுப்படையுள் போற்றப்படும் முருகனுடைய பரியாயப் பெயரான இளம்பூரணன் என்பதும் முருகனுடைய பெயருள் ஒன்றாகவே கொள்ளத்தக்கது. இவ்வாறே அடியார்க்குநல்லார், நச்சினார்க்கினியர் என்ற பெயர்கள் தேவாரத் தொடர்களை உட்கொண்டு சிவபெருமானுடைய பரியாயப் பெயரான் மக்களுக்கு வழங்கப்பட்ட இயற்பெயர்களே. தெய்வச்சிலையார் என்ற பெயர், திருமங்கை மன்னனுடைய பெரியதிருமொழிப் பதிகத்தில் காணப்படும்

'பவ்வத் திரைஉலவு புல்லாணி கைதொழுதேன்,
தெய்வச் சிலையாற்கு என்சிந்தைநோய்
செப்புமினே' - திவ். பிர. 1780

என்ற திருமாலின் பரியாய நாமத்தை அடியொற்றி வழங்கப்பட்ட இயற்பெயரே. இவற்றை நோக்க, இளம்பூரணன், சேனாவரையன், நச்சினார்க்கினியன், தெய்வச்சிலையான் என்ற பெயர்கள் யாவும் வேத நெறிப்பட்ட தெய்வங்களின் திருப்பெயர்களே என்று தெளியலாம். இவர்கள் நால்வரும் வேதநெறிப்பட்ட சமய ஒழுக்கினர் என்று கொள்வதிலும் தடையில்லை.

13ஆம் நூற்றாண்டில் சேனாவரையர் என்ற பெயர் பெரிவாரியாக மக்களின் இயற்பெயராக விளங்கியமை கல்வெட்டுச் சான்றுகளால் புலனாகிறது. சேனாவரையர்

என்பதனைக் கொண்டுள்ள கல்வெட்டுத் தொடர்கள் பலவற்றில் 'ஆற்றூர்ச் சேனாவரையர்' என்ற தொடர் இவ்வாசிரியரைக் குறிப்பிடுவதாகலாம் என்பது மு.இராகவய்யங்கார் அவர்கள் கண்ட முடிவு. ஆற்றூர் என்பது தென் பாண்டிய நாட்டின் கடற்கரைத் துறைமுகமான கொற்கைக்கு அருகில் தாமிரபரணி ஆற்றின் கரையில் உள்ளதோர் ஊர். இவ்வூரிலுள்ள திருமால் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்று சேனாவரையர் என்பவர் தம் முன்னோர்களின் வழிவழியாக வந்த புலமைநலத்தான் தமக்குக் கிட்டிய நிலம் மனைகள் என்பனவற்றை அவ்வூர்ச் சோமநாதசுவாமிக்குப் பஞ்சகவ்வியப் புறமாக இறையிலியாக்கி வழங்கிய செய்தியைக் குறிப்பிடுவதுகொண்டு இவர் சிவ பெருமானிடம் கொண்ட ஈடுபாடு புலப்படும்.

புறத்துப்போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளைக் கொற்கை என்ற ஊரைச் சுற்றியுள்ளதாய் மாறோக்கம் என்று சங்ககாலம்தொட்டுப் பெயரிட்டு அழைக்கப்படும் நாட்டினர் தம் காலத்திலும் 'பெண்மகன்' என்ற பெயரான் அழைத்த செய்தியைக் குறிப்பிடுதலானும், திசைச்சொல்லிற்கு எடுத்துக்காட்டுக்களாகத் தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழங்குப என்று தென்பாண்டிநாட்டு வழக்குச் சொற்களைக் குறிப்பிடுத லானும் இவர் பாண்டி நாட்டவர் என்று கருதப்படுகிறார்.

அக்காலத்து வாழ்ந்த தமிழறிஞர் யாவரும் வட மொழியிலும் போதிய புலமை உடையவராகவே இருந்தனர். ஆனால் சேனாவரையர் தமிழ்ப்புலமை நிரம்பியிருந்தமை போலவே, வடமொழியிலும் நிறைந்த புலமை உடைய வராய் வாழ்ந்தார் என்பதே அறிஞர் கண்டமுடிவு.

சேனாவரையரைப் பற்றி, பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் குறிப்பிடும் கீழ்க்கண்ட செய்திகள் உளம் கொளத்தக்கன:

''தமிழ்மொழியில் இவர்பெற்ற அறிவுடன் வடமொழி வியாகரணம், பூர்வமீமாம்ஸை, தருக்கம், வேதாந்தம் என்ற சாத்திரங்களிலும் ஆழ்ந்த அறிவு இவருக்கு உண்டு என்பது இவர் உரையால் நன்கு விளங்குகிறது. செயப்படுபொருள் இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப் படுவதும் என மூன்றாம் (சொ. 71 - சே.) என்றும், ''மாணாக்கர்க்கு நூற்பொருள் உரைத்தான் எனக் கொடைப் பொருளவாகிய சொல்லான் அன்றிப் பிற வாய்பாட்டான் கூறப்படுவனவும், மாணாக்கர்க்கு அறிவு கொடுத்தான் எனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கண் செல்லாது ஆண்டுத் தோன்றும் பொருளும் எல்லாம் அடங்குவதற்கு 'எப்பொருளாயினும்' என்றார்'' என்றும், வடமொழி வாக்கிய பதீயம், அதன் உரையாகிய ஹேலா ராஜீயம் இவற்றிலுள்ள சொற்றொடரை மொழிபெயர்த்து உரைத்தலானும், 'வடநூலாரும் பிரியாத் தொகையும் பிறசொல்லான் விரிக்கப்படும் என்றார்' (சொ.416- சே.), 'இவற்றை வடநூலார் தாது என்பர்' (சொ.415-சே.), இயற்பெயராவன சாத்தன் கொற்றன் என வழங்குதற் பயத்தவாய் நிமித்தமின்றிப் பொருளே பற்றி வரும்' (சொ.174- சே), 'இயைபின்மை நீக்கலும் பிறிதின் இயைபு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து' (சொ.182-சே.), 'ஞாபகம் ஆயிற்று', 'அநுவாதம் ஆயிற்று' (சொ. 10 - சே.) முதலிய கூற்றுக்களானும் சேனாவரையருக்கு வடமொழி வியாகரணத்தில் உள்ள புலமை பெறப்படும். 'இவ்வாறு ஒரு பொருள் நுதலிற்றாக உரையாக்கால் சூத்திரம் ஒன்றாமாறு இல்லை' (சொ. 1-சே), 'இரு தொடர்ப்படச் சூத்திரித்து' (சொ.67-சே.), 'இரண்டு வேற்றுமையும் எய்துவதனை நியமித்தவாறு' (சொ. 87 - சே.), 'ஏனை இடத்து வாராது என்பதனை நியமித்தற்கு என்பது' (சொ. 260 - சே.) முதலியவற்றான் பூர்வமீமாம்ஸைக்குக் கண்களாய் உள்ள வாக்கியபேதம், நியமவிதி இவ்விரண்டனையும் நன்கு அறிந்தவர் என்பது புலனாகிறது. 'பண்போடு இவற்றிடை வேற்றுமை என்னை எனின், இன்மை பொருட்கு மறுதலையாகலின் பொருளின்கண் கிடக்கும் பண்பு

எனப்படாது; அன்மையும் உண்மையும் பண்பிற்கும் ஒத்தலின் பண்பு எனப்படா; என்னை? குணத்திற்குக் குணம் இன்மையின்' (சொ. 214 - சே.) என்ற வாக்கியத்தால் தருக்க சாத்திரத்தில் இவருக்கு உள்ள அறிவு வெளிப்படுகிறது. 'முயற்சியும் தெய்வமும் ஆகிய காரணங்களுள், தெய்வம் சிறந்தமையான்' என்ற வாக்கியத்தான் இவருக்கு வேதாந்த சாத்திர அறிவு உண்மையும் அறியப்படுகிறது.

தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர் எழுதிய உரையை உட்கொண்டு இயற்றப்பட்ட சின்னூல் நன்னூல் என்பனவற்றுள் சேனாவரையர் கருத்துக்கள் இடம்பெற்றி லாமையான், சேனாவரையர் சின்னூல் நன்னூல் என்பன இயற்றப்பட்ட காலத்துக்குப் பிற்பட்டவராய்ப் பதின் மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்திருக்கலாம் என்பது அறியப்படுகிறது. ஆற்றூர்க் கல்வெட்டும் இக் காலத்தை உறுதி செய்கிறது.

வடமொழியில் பெயரொடு பெயர் தொக்கதே தொகை. தமிழில் பெயரொடு வினை தொக்கதும் தொகையாகும் என்ற தமிழ்மரபை 420ஆம் நூற்பாவில் 'பெயரும் தொழிலும்' (எ. 132) என்ற எழுத்துப்படல நூற் பாவைக் கொண்டு சேனாவரையர் நிறுவுதலால் இவர் தமிழுக் குரிய தனிச்சிறப்புக்களைப் பகுத்தறிந்து தெரிவிப் பதிலும் வல்லவர் என்பதனைக் காண்கிறோம். இவர் சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் தரும் விளக்கங்கள் இவருடைய நுண்ணறிவைவெளிப்படுத்துவனவாய் உள்ளன.

**அடுக்கு** - ஒருசொல் முழுவதும் இரண்டு மூன்று நான்குமுறை அடுக்கி வருதல்.

**அதிகாரம்** - 1. ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களொடு சென்று இயைதல்.

2. ஒரு பொருள் நுதலிவரும் பல ஓத்தினது தொகுதி.

**அவை அல் கிளவி** - உரிய சொல்லான் அன்றி மறைத்த வாய்பாட்டானேயே சொல்ல வேண்டுவது

**அறிபொருள் வினா** - அறியப்பட்ட பொருளையே ஒருபயன் நோக்கி வினவுவது.

**அறியான் வினா** - பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப் படாததனை வினவுவது.

**அறுத்தல்** - சிறிதும் இழவாமல் சினையை ஆயினும் முதலை ஆயினும் இருகூறு செய்தல்.

**அன்மொழி** - தொகைநிலைத்தொடரில் தொக்க சொல் அல்லாத மொழி.

**ஆகுபெயர்** - யாதானும் ஓர்இயைபு பற்றி ஒன்றன் பெயர் பிறிது ஒன்றற்கு ஆவது.

**இயல்பு** - பொருட்குப் பின் தோன்றாது பொருளுடன் நிகழும் தன்மை.

**இரட்டைக்கிளவி** - சொல் முழுதும் அடுக்கி வாராது முற்பட்ட சொல் குறைச் சொல்லாய்ப் பிற்பட்ட சொல் முழுச்சொல்லாய், இலை இரட்டை, பூ இரட்டைபோல வருவது.

**இனம்** - ஒரு சாதிக்கண் அணைந்த சாதி.

**இனம் சுட்டல்** - இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல்.

**உருபு மயக்கம்** - தன் பொருளின் தீர்ந்து பிறிது ஒன்றன் பொருட்கண் சேறல்.

**உறழ் பொருள்** - ஒப்புமை கூறாது மாறுபடக் கூறும் பொருள்.

| | |
|---|---|
| **எச்சம் -** | பிறிது ஒரு சொல் பற்றியல்லது நிற்றல் ஆற்றா வினைச்சொல் பெயர்வினை எச்சமாம். |
| **ஐயப்பொருள் -** | சிறப்பு இயல்பான் தோன்றாது பொதுஇயல்பான் தோன்றிய பொருள். |
| **கருமச்சார்பு -** | ஒன்றனை ஒன்று மெய்யுறுதலான் ஏற்படும் தொடர்பு. |
| **கருமம் அல்லாச் சார்பு -** | ஒன்றனை ஒன்று மெய்யுறுதலின்றி மனத்தான் தொடர்பு கோடல். |
| **கருவி -** | வினைமுதல் தொழில்பயனைச் செயப்படுபொருட்கண் உய்ப்பது. |
| **குணம் -** | பொருளின்கண் கிடந்து தனக்கு ஒரு குணம் இன்றித்தொழிலின் வேறாவது. |
| **குழுவின் பெயர் -** | ஒரு துறைக்கண் உரிமை பூண்ட பல்லோர்மேல் எக்காலத்தும் நிகழ்வது. |
| **குறிப்பு -** | மனத்தான் குறித்து உணரப்படுவது. |
| **குறைச்சொல் -** | ஒரு சொல்லில் சிறிது நிற்பச் சிறிது கெட்டு நிற்பது. |
| **குறைத்தல் -** | ஒரு பொருளைச் சுருக்குதலும் சிறிது இழக்கச் சிதைத்தலும் ஆம். |
| **கூடிவரு வழக்கின் ஆடு இயற்பெயர் -** | ஆடல்குறித்துஇளையார் பகுதிப்படக் கூடியவழி அந்நேரத்தில் மாத்திரம் வழங்கப்படுவது. |
| **சார்பு -** | சாதியைப் போன்ற நெருக்கமான இயைபு இன்றி ஒருவாற்றான் இயைபு உடையது. |
| **செப்பு -** | வினாய பொருளை அறிவுறுப்பது. |

**செயப்படுபொருள்** - வினைமுதல் தொழிற்பயன்உறுவது.

**செயற்கை** - ஒரு காரணத்தான் ஒரு பொருளின் தன்மை திரிதல்.

**தகுதி** - ஒரு பொருளை அப்பொருட்கு உரிய சொல்லான் சொல்லுதல் நீர்மை அன்று என்று அது களைந்து தக்கதொரு வாய்பாட்டான் கூறுதல்.

**துணைப்பொருள்** - ஒப்புமை கூறப்படும் பொருள்.

**தொகுக்கும் வழி தொகுத்தல்** - ஒருசொல் முழுதும் கெட்டு நிற்பது.

**பண்பு** - பொறியான் உணரப்படும் குணம்.

**பொருள்நிலை** - சொற்கள் தம் எச்சமாகிய பெயரையும் வினையையும் கொண்டல்லது அமையா நிலை.

**பொருள் மயக்கம்** - தன் பொருளின் தீராது பிறிது ஒன்றன் பொருட்கண் சேறல்.

**முதுமை** - பிறிதொரு காரணம் பற்றாது காலம் பற்றி ஒருதலையாக ஒரு பொருட்கண் தோன்றும் நிலை.

**முற்று** - பிறிதொரு சொல்லோடு இயையாது தாமே தொடராதற்கு ஏற்கும் வினைச்சொல்.

**முறை** - பிறவியான் ஒருவரோடு ஒருவர்க்கு வரும் இயைபு.

**முன்தேற்று** - புறத்தின் அன்றித் தெய்வம் முதலாயினவற்றின் முன் நின்று தெளித்தல்.

**வழக்கு** - காரணம் இன்றி வழங்கற்பாடே பற்றி வருவது.

**வழுவமைந்தல் -** குறித்த பொருளுக்கு உரிய சொல் அன்று ஆயினும் ஒருவாற்றான் அப்பொருளை விளக்குதலின் அமைக என்றல்.

**வழுவற்க எனல் -** குறித்த பொருளை அதற்குரிய சொல்லான் சொல்லுதல் வழுவற்க என்பதாம்.

**வினா -** அறியலுறவினை வெளிப்படுப்பது.

**வினைமுதல் -** கருவி முதலான காரணங்களைத் தொழிற்படுத்துவது.

இவர் சில நூற்பாக்களுக்கு ஒன்றற்கு மேற்பட்ட உரை கூறுதலும் உண்டு. தேவைப்பட்ட இடங்களில் எழுத்துப்படல பொருட்படல நூற்பாக்களை அருகி மேற்கோள்காட்டுவதும் உண்டு.

சேனாவரையர் நூற்பாக்களுக்கு உரை வரையும் செய்தி இளம்பூரணர் மேற்கொண்ட ஒழுங்கில்இருந்து சற்று வேறுபட்டது. நூற்பாக்களின் தொடக்கத்தில் இன்ன நூற்பா இன்னது நுதலிற்று என்று கூறும் வழக்கமும் பதவுரை வரைந்து நூற்பாவின் பொருளைக் குறிப்பிடும் வழக்கமும் இவரிடம் இல்லை. பொழிப்புரை எழுதி உரிய எடுத்துக்காட்டுக்களைத் தருதலும், தாமே வினாவை எழுப்பிக்கொண்டு அதற்கு விடை இறுத்தலும், ஒரோவழி இலக்கிய மேற்கோள்காட்டும் இடங்களில் அவற்றுக்குத் தக்க வகையில் இலக்கிய நயம்பட உரை வகுத்தலும், தம் காலத்தில் வழக்கு ஒழிந்த சொற்களை எடுத்துக் கூறுதலும், நூற்பாச் செய்திகளின் முறைவைப்புக் கூறுதலும், உவமை காட்டி விளக்குதலும், பிறர் கருத்திற்கு விளக்கம் தருதலே அன்றி, அவர் அங்ஙனம் கொள்ளுதற்குரிய காரணத்தைக் கூறுதலும், சொற்பொருளை விளக்கி உரைத்தலும் போல்வன இவர் உரையுள் காணப்படுவனவாம். அஃறிணை இயற்பெயர்களைப் பயன்படுத்தும் இடங்களுள் அருகி

அன்றிக் 'கள்'விகுதியை இணைத்துப் பன்மையை அமைக்காமையும், ஆல் என்ற உருபினை விடுத்து யாண்டும் ஆன் என்ற உருபினையே கோடலும் போல்வன இவருக்கே உரிய தனி இயல்புகளாகக் காணப்படுகின்றன. விருத்திக் காண்டிகைக்கு உரிய இலக்கணங்கள் அனைத்தையும் இவர்உரை கொண்டு விளங்குகிறது. உவம வாயிலாகச் செய்தியை விளக்கும் இவர் உரையில் 'ஆறு போயினார் எல்லாம் கூறை கோட்பட்டார்' என்ற உவமை நான்கு நூற்பாக்களில் இடம்பெறுகிறது. தொல்காப்பியச் சொற் படலம் என்பது சேனாவரையமே என்று சான்றோர் மனம்கொள்ளும் அளவிற்கு இவ்வுரை சிறந்து விளங்குகிறது.



# நச்சினார்க்கினியர்

தமிழில் நல்ல புலமை அடைய விரும்புவர்கள் நச்சினார்க்கினியருடைய உரைகளில் தோய்ந்தாலன்றிப் புலமை நிரம்பாது என்று கூறுகின்ற அளவிற்கு உரையாசிரியர்களுள் தலைநின்ற சிறப்புடையவர் நச்சினார்க்கினியர். தொல்காப்பியம், சீவகசிந்தாமணி, கலித்தொகை, பத்துப்பாட்டு என்பனவற்றிற்கு இவர் வரைந்த உரைகள் நமக்குக் கிட்டியுள்ளன.

சீவகசிந்தாமணிக்கு அரிய சொற்றொடர்களை விளக்கி, அக்காப்பியத்தை வரைந்த ஆசிரியரின் கருத்துக்கு அரண் சேர்க்கும் வகையில் இவர் இயற்றிய நயவுரையும், கலித்தொகைக்குப் பொழிப்புரையொடு கூடிய விளக்கவுரையும், பத்துப்பாட்டுக்குப் பதவுரையொடு கூடிய விளக்கமும் தமிழ் அறிஞர்களுக்குப் பெருவிருந்தாக உள்ளன. தொல்காப்பியம் முழுமைக்கும் இவர் பதவுரை எழுதி 'மேவாங்கு அமைந்த மெய்ந்நெறிக் காண்டிகை உரை' வரைந்துள்ளார். இக்காலத்தில் இவர் பொருட்படலத்தின் மெய்ப்பாட்டியல், உவமவியல், மரபியல் என்ற பகுதிகளுக்கு வரைந்த உரை கிடைத்திலது. எனினும், இவர் அவற்றிற்கும் உரை வரைந்திருக்கலாம் என்று உறுதி செய்வதற்குரிய செய்திகள் இவர் கலித்தொகை, பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி என்ற நூல்கட்கு வரைந்த விளக்கவுரைச் செய்திகளான் உறுதி செய்யப்படுகிறது.

இவர் சீவக சிந்தாமணிக்கே முதலில் உரை எழுதினார் என்பதும், அவ்வுரையில் சமண சமயக் கருத்துக்கள் பல நன்கு விளக்கப்பெறாமையான் அவ்வுரை சமணச் சான்றோருடைய இசைவினைப் பெற்றிலது என்பதும், பின்னர்ச் சமண சமயக் கருத்துக்களைக் கற்றுத் தேர்ந்தபின் அவற்றையும் விளக்கி இவரான் இரண்டாம் முறையாக இயற்றப்பட்ட சிந்தாமணி உரை சமண சமயச் சான்றோரின் போற்றுதலைப் பெற்றது என்பதும் செவிவழிச் செய்திகளாகக் கூறப்படுகின்றன. இவர்

*சீவகசிந்தாமணிக்கு முதலில் உரை எழுதிய பின்னர்த் தொல்காப்பியத்திற்குக் காண்டிகை உரை வரைந்தார் எனவும், அதன் பின்னர்ச் சிந்தாமணிக்கு இரண்டாம் முறையாகச் சமண சமயக் கருத்துக்களுக்கெல்லாம் விளக்கம் தந்து உரை வரைந்தார் எனவும் கருதுவதற்குச் சான்றாகத் தொல்காப்பிய உரையில் 'சிந்தாமணியுள் யாம் கூறிய உரையான் உணர்க' (தொ. சொ. 210, 211) என்று குறிப்பிட்டிருப்பதனையும், சிந்தாமணி 72ஆம் பாடல் உரையில் 'ஈங்கு' தன்மையை உணர்த்துதல் 'செலவினும் வரவினும்' என்னும் சூத்திரத்துக் கூறினாம் என்றாற்போலக் குறிப்பிட்டிருக்கும் செய்திகளையும் கொள்ளலாம்.*

*'தொல்காப் பியத்தில் தொகுத்த பொருள்அனைத்தும்*
*எல்லார்க்கும் ஒப்ப இனிதுரைத்தான் - சொல்லார்*
*மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்*
*கதிரின் சுடரெறிப்பக் கண்டு.'*

*'கரைபெற்ற தோர்பஞ்ச லட்சண மானதொல் காப்பியமும்*
*தரைமுற்றும் போற்றிய சிந்தா மணியுந் தமிழ்ச்சங்கத்தில்*
*நிரைபெற் றுயர்பத்துப் பாட்டும் விளங்க நிசவுரையை*
*வரைநச்சி னார்க்கினி யன்ஐயன் பாண்டிய மண்டலமே.'*

*'பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்*
*ஆரக் குறுந்தொகை ஐந்நான்கும் - சாரத்*
*திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்*
*விருத்திநச்சி னார்க்கினிய மே.'*

*'பச்சைமால் அனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற*
*எச்சில்நால் திசையும் உண்ணும் அமிழ்தென எழுநா எச்சில்*
*மெச்சிநா ணாளும் விண்ணோர் மிசைகுவர் வேத போதன்*
*நச்சினார்க் கினியன் எச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.'*
*என்பன நோக்கத்தகும்.*

இவர் பெருமைகளை விளக்கிக்கூறும் ஆசிரியப் பாவான் அமைந்த நீண்ட செய்யுள் ஒன்றும் உளது. அதன்கண்,

தொல்காப் பியம்எனும் தொடுகடற் பரப்பை
மறுவும் குறைவும் இன்றி என்றும்
கலையின் நிறைந்த கதிர்மதி என்ன
நிலையுடை கலத்தின் நெடுங்கரை காணாக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்
உரையிடை இட்ட காண்டிகை உரைத்தும்

என்று இவருடைய தொல்காப்பியஉரை போற்றப் பட்டுள்ளது.

மதுரையில் அந்தணர்வருணத்தில் பாரத்துவாச கோத்திரத்தில் தோன்றிய இச்சான்றவர், சிவபெருமானுடைய பெயர்களுள் ஒன்றாகிய நச்சினார்க்கினியர் என்று பெயரிடப்பெற்று, தமிழிலுள்ள பலவகை நூல்களிலும் பயிற்சி மிக்குடையவராய்ப் போதகாசிரியராக வாழ்ந்தவர். சிவபெருமானையே பரம்பொருளாக வழிபட்டவர். இவருடைய சைவ சமயப்பற்று இவர் தாம் உரை எழுதிய நூல்களில் திருவாசகம், திருக்கோவையார், திருஉலாப்புறம் முதலிய நூல்களிலிருந்து இலக்கிய இலக்கணப் பொருள்களுக்கும் தத்துவப் பொருள் களுக்கும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருத்தலானும், தம் உரைகளில் சிவபெருமான் ஒருவனையே 'இறைவன்' என்ற பெயரான் குறிப்பிடுவதனானும் அறியலாம்.

மாணாக்கருக்கு உய்த்துணர்வு இன்று என்ற கருத்துடைய இவர் மாணாக்கர் ஐயுறவு இன்றித் தொல்காப்பியத்தைக் கற்பதற்கு வாய்ப்பாக அந்நூல் முழுமைக்கும் பதவுரை எழுதியுள்ளார். எழுத்ததிகாரத்துள் இளம்பூரணர் மாணாக்கர் உய்த்துணருமாறு சுருக்கமாகக் குறிப்பிட்ட செய்திகளை எல்லாம் நச்சினார்க்கினியர் நன்கு

விளக்கி உரை வரைந்தமையின் எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையே பெரும்பாலும் பயிலப்படுவதாயிற்று.

பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய நச்சினார்க் கினியருக்குத் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர் வரைந்த உரையும் சேனாவரையர் வரைந்த உரையும் பயிலும் வாய்ப்பும் பயிற்றும் வாய்ப்பும் ஏற்பட்டன. சேனாவரையர் வரைந்த உரைநயங்களை எல்லாம் நயந்து சுவைத்தவர் நச்சினார்க்கினியர். ஆனால் அவர் வரைந்த உரையில் சில இடங்கள் நச்சினார்க் கினியருக்கு உடன்பாடாக இல்லை. அவர் இளம்பூரணர் உரையை மறுத்த இடங்களில் சில நச்சினார்க்கினியருக்குப் பொருத்தம் அற்றவையாகத் தோன்றின. சில இலக்கியங் களுக்குத் தொல்காப்பியத்தில் விதிகள் இருப்பனவாகக் காட்ட வேண்டிய விருப்பமும் அவருக்கு இருந்தது. இவற்றான் அவர் தாமும் தொல்காப்பியச் சொல்லதி காரத்திற்கு உரை வரைந்தார். சேனாவரையர் பல நூற் பாக்களுக்கு விளக்கமாக உரை வரைந்துள்ளார். அவற்றையே நச்சினார்க்கினியர் தாமும் மீண்டும் வரையாமல் அச்செய்தி களைச் சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளார். எனவே, சேனாவரையர் உரையைப் பயின்ற பின்னரே, அதன் பிற்சேர்க்கைபோல நச்சினார்க்கினியர் உரையைப் பயில்வதே ஏற்றது. அப்பொழுதே செய்திகளை ஐயம் திரிபின்றி அறிந்துகொள்ள இயலும். நச்சினார்க்கினியர் நடை எளிமையானது, தெளிவானது. அவர் சில இடங்களில் சேனாவரையர் கருத்துக்களை அவருடைய பெயரைக் குறிப்பிட்டே மறுத்திருக்கிறார். சில இடங்களில் பெயரைக் குறிப்பிடாமலேயே மறுத்திருக்கிறார். சில இடங்களில் சேனாவரையரால் மறுக்கப்பட்ட செய்திகள் மறுக்கத்தக்கன அல்லனவாகத் தமக்குத் தோன்றவே, அவற்றைத் தம் உரையில் இடம்பெறச் செய்துள்ளார். அவற்றை மறுத்த சேனாவரையர் கூற்றை மறுக்கவில்லை. சேனாவரையர் கூறுவது பொருந்தாது என்பதனை அந்நூல் பயில்பவர்தாமே, பிறரை உசாவி அறிய வேண்டாமல் அறிய இயலும் என விடுத்தார்போலும்.

இளம்பூரணர் உரையை நோக்கச் சேனாவரையர் உரை விரிவானது. சேனாவரையர் உரையை நோக்க, நச்சினார்க்கினியர் உரை இளம்பூரணர் உரையைப் போலச் சுருக்கமானதே. அதன் காரணம், சேனாவரையம் கற்ற பின்னரே தம் உரையைப் பயிலவேண்டும் என்பதே நச்சினார்க்கினியர் எண்ணமாகும்.

## நச்சினார்க்கினியர் சேனாவரையரைப் பெயரைக் குறிப்பிட்டும் குறிப்பிடாமலும் மறுக்கும் இடங்கள் :

இளம்பூரணர் சேனாவரையர் இவ்விருவருக்கும் பின்னர்த் தோன்றிய நச்சினார்க்கினியர் தாம் வரைந்த சொற்படல உரையில் இவ்விருவர் உரைகளையும் பயிலும் மாணாக்கருக்கும் பயிற்றும் ஆசிரியர்க்கும் பெரிதும் பயன்படும் வகையில், அவர்கள் விரித்துரைக்கும் செய்திகளையே தாமும் மீண்டும் குறிப்பிடாமல் சுருக்கமாகக் குறிப்பிட்டு அவர்களுடைய கருத்துக்குத் தம் கருத்து வேறுபடும் இடங்களை மாத்திரம் விரித்துரைத்துத் தம் சொற்படல உரையை அமைத்துள்ளார். இவருடைய சொற்படல உரையைப் பயில்பவர்கள் முன்னைய இருவருடைய உரைகளையும் பயின்ற பின்னரே இவருடைய உரையையும் பயின்றால்தான் இவருடைய உரையை முழுமையாகப் பயன் கொள்ளலாம். அவ்வகையில் இச்சொற்படல உரையை அமைத்துள்ளார். இவர் தம் உரையில் சில இடங்களில் சேனாவரையர் பெயரைக் குறிப்பிட்டு அவருடைய உரையை மறுத்துள்ளார்; சில இடங்களில் அவருடைய பெயரைக் குறிப்பிடாமலேயே அவர் உரைத்த உரையை மறுத்துள்ளார்; சில இடங்களில் அவர் மறுத்த செய்திகளைத் தாம் மறுக்காமலேயே உடன்பட்டுக் குறிப்பிட்டுள்ளார்; அவ்விடங்களில் எல்லாம் தாம் குறிப்பிடாமலேயே போதகாசிரியர் வாயிலாக அம்மறுப்புக்களின் பொருத்தமின்மையை மாணக்கர் அறிதல்கூடும் என வாளாவிடுத்தார் போலும். அவற்றை நிரலே காண்போம் :

**சேனாவரையர் பெயரைக் குறிப்பிட்டு மறுக்கும் இடங்கள் :**

*நூற்பா 1, 25, 55, 83, 159, 163, 203, 226, 237, 410, 412, 414, 415, 440, 448, 450, 455 என்பன. - (17)*

***நூற்பா -1.*** *சேனாவரையர் சொல் பொருள் குறித்துவரும் என்றாரால் எனின், ஒருவன் பொருள் தன்மையை உணர்தற்குச் சொல் கருவியாய் நிற்றல் அன்றித் தனக்கு ஓர் உணர்வு இன்மையின் தான் ஒரு பொருளைக் கருதி நிற்றல் இன்று என மறுக்க.*

***நூற்பா-1.*** *சேனாவரையர் 'மக்கட்சுட்டு' என்பதனைப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்றாராலோ எனின், இருபெயர் ஒட்டு ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்கும் வேறுபாடு உணராமல் கூறினமையின் அது பொருந்தாது. 'என்னை வேறுபாடு?' எனின், ஈண்டு ஆகுபெயராய் நின்ற நன்கு மதிக்கும் பொருளும் மக்களையே உணர்த்திநிற்கும்; அன்மொழித் தொகை அவ்வாறு அன்றி, வெள்ளாடை என்றால் வெண்மையும் ஆடையும் அன்றி உடுத்தாளையே உணர்த்தி நிற்கும். இது தம்முள் வேற்றுமை.*

*'அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்' (சொ. 419) என்புழி ''வெள்ளாடை என்புழித் தொக்க இரு மொழிமேலும் நில்லாது உடுத்தாள் என்னும் அன்மொழி மேல் நின்றது'' என்று உதாரணம் காட்டினார் சேனாவரை யரும் என்று உணர்க.*

***நூற்பா-1.*** *இனிச் சேனாவரையர் 'மக்கட்சுட்டு' என்பதற்கு 'மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும் அது மக்கட்சுட்டு' என்று பொருள்கூறினாரால் எனின், முன்னர், 'மக்கள் என்று கருதப்படும் பொருளை உயர்திணை என்ப' என்று அவர் கண்ணழிவு கூறியது, ஒரு பொருளிடத்து நின்ற மக்கள் தன்மையானே ஒருவர்க்கு அப்பொருள் மக்கள் என்று கருதப்பட்டது என்று பொருள் தந்து நின்றது. பின்னர்*

'மக்களாகிய சுட்டு யாதொரு பொருட்கண் தோன்றும்?' என்று நோக்குகின்றவர்களுக்கு 'மக்களாகிய கருத்து யாதொரு பொருட்கண் தோன்றும்?' என்று பொருள் தந்தால், வெள்ளாடை என்னும் பண்புத்தொகை போல, அக்கருத்து மக்கள் ஆகாமையின், பண்புத்தொகை அன்றாம்; அது 'மக்கட்சுட்டு' என்பதற்கு 'அப்பொருள் மக்கட்சுட்டு' என்று அவர் கூறிய பொருளானும் மக்களையே தோற்றுவித்து நிற்றலின், அன்மொழித்தொகை அன்றாம்.

***நூற்பா-1.*** 'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' என்பதற்குச் சொல்நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாகலின், 'ஆயிரு திணையின்கண்' என ஏழாவது விரிக்க என்று சேனாவரையர் பொருள் கூறினாரால் எனின், 'இசைப்பு இசையாகும்' (சொ. 310) என்பதனான், திணை இடமாகச் சொற்கள் நின்று பிறவற்றை இசைத்தல் வேண்டும். அதனான் அது பொருந்தாது. அன்றியும் ஆசிரியர்க்கு அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தாயின் 'ஆடூஉ அறிசொல்' (சொ. 2) முதலிய சூத்திரங்கள் எல்லாம், சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாக, 'ஆடூஉவின்கண் நிகழும் சொல்; மகடூஉவின்கண் நிகழும் சொல்' என்றே சூத்திரம் செய்வார். அங்ஙனம் செய்யாது, 'ஒருவன் ஆண்மகனை அறியுஞ் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும்' என, அறியும் என்றும் பெயரெச்சம் 'சொல்' என்றும் கருவியைக் கொண்டு முடியச் சூத்திரம் செய்தலின், ஆசிரியர்க்கும் அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தன்மை அறிக.

***நூற்பா-1.*** 'மறங்கடிந்த அருங்கற்பின்' (புறநா. 166-13) 'சில்சொல்லின் பல்கூந்தல்' (புறநா. 166-16) எனவும் பிறாண்டும் சான்றோர் செய்யுளில் இன்சாரியை உருபு பற்றாது நிற்றல்நோக்கி உரையாசிரியரும் 'ஆயிரு திணையினையும்' என இரண்டாம் உருபு விரித்துப் பொருள்கூறினார்.

***நூற்பா-25.*** சேனாவரையர் முன்னிற் சூத்திரத்தில் (24) உருபு என்பதனை 'ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இத்தோன்றாநின்ற உருபு' எனப்பால் ஐயத்திற்கு 'உருபு' என்னும்

ஐயப்புலப் பொதுச்சொல் உரித்து என்று உதாரணம் காட்டி, இச்சூத்திரத்தில் 'அன்மைக்கிளவி மறுக்கப்படும் பொருள்மேல் ஆம்' என்றுகூறினாரால்எனின், அவர்உதாரணம்காட்டியவற்றில் ஆண்மகன் என்று துணிந்தவழிப் 'பெண்டாட்டி அல்லள் ஆண்மகன்' என்றும், பெண்டாட்டி என்று துணிந்தவழி 'ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி' என்றும் மறுக்கப்படும் பொருள்மேல் அன்மைகூறி, அவற்றிற்கு 'இவ்வுருவு பெண்டாட்டி அல்லள் ஆண்மகன் என்றும், 'இவ்வுருவு ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி' என்றும் 'உருவு' என்னும் சொல்கூட்டியே பொருள்முடிக்கவேண்டுதலின், உருவு என்னும் அஃறிணைப் பெயர் அல்லன் அல்லள் என்னும் உயர்திணை வினைக்குறிப்பொடு முடியாமை உணர்க. அன்றியும் 'இவன் பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்; இவள் ஆண்மகன் அல்லன், பெண்டாட்டி' என அவர் சொல் முடித்தற்குக் கூட்டிய சுட்டுப்பெயர் கூட்டினும் முடியாமை அறிக.

**நூற்பா-55.** ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள்ஒருசொல்

என ஒரு சூத்திரமாக்கி 'வேறுபடாத வினை கொண்டவழி வேறுபடாது தோன்றும் வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்' என்று பொருள்கூறி, வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல்லாகிய 'மா' என்பதுதானே 'வீழ்ந்தது' என்னும் பொதுவினை கொண்டவழி வினை வேறு படாததாய் நின்றதற்கு 'மாமரம் வீழ்ந்தது' என்று கிளந்து கூறுக என்றார் சேனாவரையர். அங்ஙனம் பொருள்கூறின், 'வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்' என வேறு ஒருசொல் இன்றி 'ஆயிரு வகைய' (சொ. 52) என்பதனொடு மாறுபடும் எனமறுக்க.

**நூற்பா-83.** இனி, கண் கால் முதலியன, உருபை விளக்குதற்கு அவ்வுருபின் பொருளாய் நின்று, 'கண் என்னும் உருபு விரித்துக்கொண்டு நிற்கும்' எனின், கண் என்னும் உருபின் பொருளாவது, 'கண் என்னும் இடைச்சொல்லான்

உணர்த்தப்படும் இடப்பொருண்மை' என்று பொருள் உரைத்தால், பின் வருகின்ற இடப்பொருண்மையை முன்னும் கூறிற்றேயாம் ஆகலின் கூறியது கூறிற்றாம். அல்லதூஉம், 'கண் அகல் ஞாலம்' என்புழிக் 'கண்' என்னும் இடைச்சொல்லான் உணர்த்தும் இடப்பொருண்மைக்கும் இடத்துக்கண் எனக் கூறிய இப்பொருளுக்கும் வேறு கண் என் உருபு மீண்டும் கூறல் வேண்டும். அல்லதூஉம், 'கண்நின்று கூறுதல் ஆற்றான் அவனாயின்' (கலி. 37-8) என்பதற்கு, 'என்கண் நின்று' எனத் தோன்றா எழுவாயாய் நின்று கண் என் உருபு ஏற்று நின்றதாம். 'வடக்கண் வேங்கடம்' என்புழிக் கண் உருபு விரித்தலின், ஒழிந்தவற்றிற்கு ஒவ்வாதாம். அல்லதூஉம் 'ஆலின்கீழ்க் கிடந்த ஆ - மரத்தின்மேல் இருந்த குரங்கு' என்பன முதலியவற்றிற்குக் கண்உருபு கொடுத்து உலகம் வழங்காமை உணர்க. முன்னர் இரண்டாவது முதலிய உருபுகளை முடித்தற்கு எடுத்து ஓதிய காப்பு முதலிய பொருள்களைப் போல உருபை முடித்து நில்லாது ஈண்டுக்கூறிய பொருள்கள் கண் என்னும் உருபையே உணர்த்தி நின்றன என்றலின், சேனாவரையரும் இப்பொருள்களை உருபு என்றே கூறினார் ஆயிற்று. அங்ஙனம் கூறி அத்துச்சாரியை கொடுத்து உதாரணம் காட்டவே, உருபின் பின்னரும் அத்துச்சாரியை வருதல் தாமும் நேர்ந்தார் ஆயிற்று.

***நூற்பா-159.*** குறிப்பின் தோன்றலுக்குச் சேனாவரையர் காட்டிய

> இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்
> கைகொல்லும் காழ்த்த இடத்து - குறள் 879

என்னும் உதாரணம் செய்யுளாதலின், செய்யுளியலில்,

> சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
> புல்லிய கிளவி எச்சம் ஆகும் - செய்யுளியல். 206

என்னும் சூத்திரத்துள் ஆசிரியர் 'குறிப்பெச்சம்' எனக் கூறியவாறு காண்க.

ஒருவர் வந்தார் என்றாற் போல்வனவும் ஆகுபெயராய் வருவனவும் குறிப்பின் தோன்றலாம் எனக் கொள்க.

***நூற்பா-163.*** சேனாவரையர் 'இருதிணைப் பிரிந்த ஐம்பால் கிளவி ஆதற்கும் பெயருள் உரியன உரியவாம்' என்று பொருள்கூறி, 'அவன், பெண்மகன், சாத்தன் என னகர ஈறு ஆடூஉவிற்கும் மகடூஉவிற்கும் அஃறிணைப் பாற்கும் உரித்தாய் வருதலின், 'உரியவை உரிய' என்றார் என்பது இச்சூத்திரத்துக்குக் கருத்து' என்றாரால் எனின், ஆசிரியர் வினைச்சொல் ஈற்றான் அடங்கும் என்று கருதி ஈறு பற்றி ஓதி, பெயர்ச்சொல் ஈற்றான் அடங்காது பல்வேறு வகையான் வரும் என்று கருதிச் சொல்லாகத் தனித்தனியே எடுத்து ஓதினார் ஆதலின், இவ்வெடுத்தோதிய சொற்களான் இவர் கூறிய பொருள் விளங்குதலின், இச்சூத்திரத்திற்கு இதுவே பொருள் என்று உணர்க. அன்றியும்,

ஒருபாற் கிளவி எனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்குஎன மொழிப - பொ. 222

என்னும் பொருளியல் சூத்திரத்தான் 'நஞ்சுண்டான் சாம்' என்பது அடங்கும் என்று கூறல் அச்சூத்திரத்தின் கருத்து அறியாது கூறிற்றாம். என்னை? அஃது

'ஒத்த கிழவனும் கிழத்தியும்' - பொ. 93

என்ற களவியல் சூத்திரத்தில் பன்மை கூறா வழுவை அமைத்தற்கு எழுந்த சூத்திரம் ஆதலின்.

***நூற்பா-203.*** இனிப் பின்னுள்ளோர் கூறினார் என்பது பற்றியும், மாணாக்கர்க்கு உய்த்து உணரும் உணர்வு இன்று என்பது பற்றியும், யாமும் அவ்வெழுத்துக்களைப் பிரித்துக்காட்டுதும். சேனாவரையர் அவ்வாறு பிரித்துக் காட்டுகின்றவர் 'நெறிப்படத் தோன்றி' (203) என்பதனான் பிரித்துக் காட்டுவர். அது பொருந்தாது; ஆசிரியர் எடுத்து ஓதாமல் 'மயங்கும்' எனப் போதலின். இதனைச் 'செய்யுள் மருங்கினும்' (சொ. 463) என்னும் அதிகாரப் புறனடையில் 'பிரித்தனர் காட்டல்' (463) என்பதனான் பிரித்துக் காட்டுதும்.

***நூற்பா-226.*** 'நடவாய், வாராய், உண்ணாய், தின்னாய்' என்னும் சொற்கள், ஆய் ஈறு கெட்டு, 'நட, வா, உண், தின்' என நிற்கும் என்று சேனாவரையர் கூறினாரால் எனின், அது பொருந்தாமை எச்சஇயலுள் 'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்' (சொ. 450) என்னும் சூத்திரத்துள் கூறுதும்.

***நூற்பா-237.*** 'வினைமுற்றுக்கள் பெயர் பற்றி நில்லாது தாமேயும் தொடர்ப்பொருள் முற்றிநிற்கும்' என்று சேனாவரையர் கூறினாரால் எனின், 'சாத்தற்குச் சோறு இடுக' என ஒருவன் ஏவியவழி, அவ்வேவப்பட்டான் அவற்கு அதனை ஈத்து வந்து 'உண்டான்' என்றவழி, 'யான் கூறிய சாத்தன் உண்டான்' என வினைமுதல் தொடர்ப்பொருள் அவன் மனத்தின்கண் உணர்த்தி நிற்பது அல்லது, நன்மக்கள் குழீஇயவழி ஒருவன்வந்து நின்று 'உண்டான்' என்றவழி அவ்வினைமுதல் தொடர்ப்பொருள் உணர்த்தாது பால் மாத்திரம் உணர்த்தி நிற்கும் என்பது கருதி,

'எத்திறத் தானும் பெயர்முடி பினவே' - சொ. 429

என்றார் ஆகலின், அது பொருத்தம் இன்று என்க.

***நூற்பா - 410.*** சேனாவரையர் 'தங்கிளை, நங்கிளை, நுங்கிளை, எங்கிளை' என்பனவற்றை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்கும் என்றாரால் எனின்,

'தாம்என் கிளவி பன்மைக்கு உரித்தே' - சொ. 186
'யான்யாம் நாம்என வரூஉம் பெயரும்' - சொ. 164

என இவ்வதிகாரத்து எடுத்து ஓதிய பன்மைச் சொற்களை எழுத்ததிகாரத்துள் அவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும்வழித் திரியாது புணரும் என்றுகூறி,

'தாம்நாம் என்னும் மகர இறுதியும்' - எ. 188

என்னும் சூத்திரத்தான் உருபு ஏற்கும்வழித் திரிந்து புணரும் என்றுகூறி, நும் என்பதனை.

'நும் என் ஒருபெயர்' - எ. 325

என்னும் சூத்திரத்தான் உருபு ஏற்குமாறுகூறி, 'அல்லதன் மருங்கின்' - (எ. 326) என்னும் சூத்திரத்தான் அஃது எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும்வழி 'நீயிர்' எனத் திரிந்து பன்மையாகவே நிற்கும் எனவும் கூறிப்போந்தார் ஆதலின், ஈண்டும் அதற்கு ஏற்பத் தம்முடைய கிளை, எம்முடைய கிளை எனப் பன்மை உணர்த்துதல் அன்றி ஒருமை உணர்த்தாமை உணர்க. ஏனையவும் அன்ன.

'தம்பொருள் என்ப தம்மக்கள்' - குறள் 63
'நம்ம னோர்க்கே'- மலைபடு. 402
'நும்ம னோரும்மற்று இனையர் ஆயின்
எம்ம னோர்இவண் பிறவலர் மாதோ'- புறம். 210 - 3, 4

எனவும் இந்நாற்சொல்லும் அம்முடிபு பெற்று, முதல்நிலை திரிந்துநின்று, பன்மைப்பொருள் உணர்த்தியவாறு காண்க.

**நூற்பா - 412.** 'அதுவென் வேற்றுமை' (சொ. 95) என்னும் சூத்திரத்து 'அதுவென் உருபு கெட' என்றதனான், அது என் உருபு நின்றாலல்லது கெடுதல் இன்மையின், அது நின்று கெட்டது என்னும் பொருள்தரல் ஆண்டுக் கூறிப்போந்தாம். அதனான் ஈண்டுச் சேனாவரையர் கூறிய பொருட்கு விடையின்மை அறிக.

**நூற்பா - 414.** சேனாவரையர் இவற்றை உவமஉருபு அல்ல என்றும், உவம உருபுகளை இரண்டாவது கொண்டு முடியாது என்றும் கூறினாரால் எனின், அவர் ஆசிரியர் கருத்தும் சான்றோர் செய்யுள் வழக்கமும் உணராமல் கூறினார் என்பது இக்கூறியவற்றான் உணர்க.

**நூற்பா - 415.** 'கொல்யானை' என்பதன்கண் இரண்டு ஈறும் ஒருங்கு தொக்கு நின்றன என்றற்கு விதி

'செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும்'
- எழு. 482

என்றது ஆம். இத்தொடரின் பொருள் 'செய்யும் செய்த என்னும் பெயரெச்சச் சொற்களினுடைய காலம் காட்டும் உம்மும் அகரமும் ஒரு சொற்கண்ணே சேர நடக்கும் புடைபெயர்ச்சி தொக்கு நிற்கும் சொற்கள்' என்றவாறு. இங்ஙனம் பெயரெச்ச வாசகம் இரண்டும் சேரத் தொக்கு நிற்றலான், ஆசிரியர் இரு சொல்லாக்கிப் புணர்க்கலாகாது என்று 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' (எ. 482) என்றார். இவ்வெழுத்ததிகாரச் சூத்திரத்தானே, பெயரெச்சம் நின்று தொக்கது என்னாது, 'பெயரெச்சப் பொருளவாய் நின்று இரண்டு சொல் தொகும்' என்று சேனாவரையர் கூறியது பொருந்தாமை உணர்க.

***நூற்பா- 440.*** சேனாவரையர் குறிப்பெச்சத்திற்கு 'இளைதாக முள்மரம் கொல்க' (குறள் 879) என்னும் குறள்வெண்பாவும், இசையெச்சத்திற்கு 'அகர முதல' (குறள் 1) என்னும் குறள்வெண்பாவும் காட்டினாரால் எனின், அவர் காட்டிய குறிப்பெச்சம் செய்யுள் இலக்கணம் கூறுகின்ற செய்யுளியலில் 'சொல்லொடும் குறிப்பொடும்' (செய். 206) என்னும் சூத்திரத்தான் பல சொல் தொடர்ந்ததொரு செய்யுள் முடிந்தக்கால் வரும் என்று கொண்ட குறிப்பெச்சம் ஆதலின், அதனைச் சொல் இலக்கணத்தில் கூறுகின்ற குறிப்பெச்சத் திற்குக் காட்டினால் ஆண்டைக் குறிப்பு எச்சத்திற்கு வேறு பொருள் இன்றாம் ஆகலானும், அவர் இசையெச்சம் என்ற 'அகர முதல' (குறள் 1) என்பதன்கண் 'அதுபோல' என விரிந்த உவமச்சொல், துணியுமாறு விரியாது, இரண்டற்கும் பொதுவாய் 'வேறுபட வந்த உவம'த்தின்பால் படுதல் அல்லது இசையான் பிறவாமையானும் அவை பொருந்தாமை உணர்க.

***நூற்பா-448.*** சேனாவரையர், '' 'கொடு' என்பதுதானே தன்னைப் பிறன் போல் கூறும் குறிப்பினையும் உணர்த்தும்'' என்று, அதற்குச் 'சாந்து கொடு' என்பதனை உதாரணமாகக் காட்டினாரால் எனின், 'கொடு' என்பது கொடுப்பதொரு பொருளை ஏற்றற்கு உரிய நான்கன் உருபு வந்தால் அதனை

முடித்தற்குவந்த சொல் ஆதலின், 'அவற்கு இவற்கு உவற்கு' என்னும் சொற்களை அவாய், அவற்றை முடித்தே நிற்றல்வேண்டும்; வேண்டவே, 'அவற்குக் கொடு' என்பது 'ஏனை இரண்டும்' (சொ. 30) என்புழிக் கூறியதாம். 'எனக்குக் கொடு' என்பது தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பு இல்லாதது ஆயிற்று. ஆதலான், தன்னைப் பிறன் போல் கூறும் குறிப்பிற்றாய் வழுவமைதியும் ஏற்று நிற்பது 'இவற்குக் கொடு' என்னும் உதாரணமே ஆயிற்று என்க.

**நூற்பா-450.** சேனாவரையர் " 'செய்யாய்' என்னும் முன்னிலை முற்றுச் சொல் 'ஆய்' என்னும் ஈறுகெடச் செய் என்னும் ஏவல்முற்றாய் நிற்கும்' என்று பொருள்கூறி 'உண்ணாய், தின்னாய், நடவாய், கிடவாய்' என்பன ஈறு கெட்டு, 'உண், தின், நட, கிட' என நிற்கும்" என்றாரால் எனின், உண்ணாய் என்பதும் உண் என்பதும் தம்மில் பொருள் வேறுபாடு உடைமையின், உண்ணாய் என்பதன் பொருளை உண் என்பது உணர்த்தி ஈறுகெட்டு நிற்கும் என்றல் பொருந்தாதாம். 'நீ கலாய்த்திராது உண்ணாய்' என்ற பொருளை 'உண்' என்பது தாராது, ஏவல் பொருட்டாய் நின்றவாறு காண்க. அன்றியும் இவ் 'உண், தின், நட, கிட' என்பனவற்றை முதல்நிலை என்றே தாமும் கூறிப் போந்தார் ஆதலின், இவை முதல்நிலையாய் நிற்கும்இடத்துக் 'கரு, செவ்,வெள்' என்னும் முதல்நிலைகள் பண்புமாத்திரையே உணர்த்தி, ஈறு கெடுதலும், பொருள் உணர்த்துதலும் இன்றி நின்றாற் போல, இவையும் வினைமாத்திரையே உணர்த்தி ஈறு கெடுதலும் பொருள் உணர்த்துதலும் இன்றி நிற்றல் வேண்டும். இவை அங்ஙனம் நில்லாது ஆய் என்னும் ஈறு கெட்டு முன்னிலை ஏவற்பொருண்மையே உணர்த்தி நிற்கும் என்றலின், முதல்நிலை என்றல் பொருந்தாதாம். ஆகவே வினைச்சொற்கு முதல் நிலைகள் 'உண், தின், நட, கிட' முதலிய என்ற இவர் ஈண்டுப் பிறர்மதமே கூறினார். இஃது ஆசிரியர்க்குக் கருத்து அன்மை உணர்க. அன்றியும் 'உண், தின், நட, கிட' முதலியன முன்னிலை உணர்த்தி நிற்குமேல், 'உண்டான் உண்டேன்' என 'உண்' என்னும் முதல்நிலையில்

விரிந்து நின்ற ஈற்றான் உணர்த்தும் படர்க்கைக்கும் தன்மைக்கும் வழுவாமாறு காண்க.

***நூற்பா - 455.*** சேனாவரையர் இடைச்சொற்கள் எல்லாம் விசேடித்து நிற்கும் என்றாரால் எனின்,

'கொன்ஊர் துஞ்சினும்' - குறுந். 138
'கொன்னே கழிந்தன்று இளமையும்' - நாலடி. 55

என்றாற்போல்வன சில இடைச்சொற்கள் விசேடித்தல் அன்றி, எல்லா இடைச்சொற்களும் விசேடித்து நில்லாமை ஆண்டு அவர் காட்டிய உதாரணங்களை நோக்கி உணர்க.

**நச்சினார்க்கினியர் சேனாவரையர் பெயரைக் குறிப்பிடாமலே அவர் கருத்தை மறுத்துள்ள இடங்கள்**

நூற்பா - *24, 34, 35, 37, 46, 51, 57, 58, 61, 103, 230, 237, 252, 282, 283, 285, 291, 293, 295, 318, 342, 412, 431, 434, 449, 458, 459, 463- (28)*

***நூற்பா - 24.*** உருபு எனப் பகர உகரமாக ஓதின், அது வேற்றுமை உருபிற்கும், உவம உருபிற்கும் பெயராய் வடிவை உணர்த்தாது என உணர்க. 'அது என் உருபுகெட' (சொ. 95) எனவும், 'உருபினும் பொருளினும் மெய்தடுமாறி' (சொ. 102) எனவும், 'உருபு தொடர்ந்து அடுக்கிய' (சொ. 103) எனவும், 'உருபு தொக வருதலும்' (சொ. 105) எனவும், 'மெய் உருபு தொகாஅ' (சொ. 106) எனவும், 'யாதன் உருபின்' (சொ. 107) எனவும் பிறாண்டும் வேற்றுமைக்கு உருபு என்றே சூத்திரம் செய்தவாறு காண்க. உவம உருபு என்றல் அவ்வோத்தில் கூறிய உரைகளான் அறிக. அன்றியும் சான்றோர் செய்யுட்களிலும்,

'உருவுகிளர் ஏர்வினை பொலிந்த பாவை' - அகநா. 142
'ஞாயிற்று உருவுகிளர் வண்ணம் கொண்ட' - பதிற். 52
'உருவக் குதிரை மழவர்' - அகநா. 1
'வேண்டுஉருவம் கொண்டதுஓர் கூற்றங்கொல்' - கலி. 56

எனவும் பிறாண்டும் கூறுமாற்றான் உணர்க.

*நூற்பா - 34.*

'மன்னுக பெருமநீ நிலம்மிசை யானே' - புறநா. 6 எனவும்,
'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்' - புறநா. 165எனவும்,
'மன்னாப் பொருட்பிணி முன்னி' - நற். 71
எனவும் மன்னாமை நிலையாமையை உணர்த்துதல் அன்றி இன்மையை யாண்டும் உணர்த்தாமை காண்க. மன்னாப் பொருள் - இல்லாப்பொருள் என்று இளம்பூரணரும் சேனாவரையரும் கூறுவர். 'மன்னாப் பொருளும்' (சொ. 34) என்ற எச்சஉம்மையான் உலகத்து நிலை யில்லாத பொருள்களொடு கூட இல்லாத பொருளையும் நச்சினார்க்கினியர் கொள்வர்.

***நூற்பா - 35.*** பயற்றான் முடிக்குங் குறை உழுந்தான் முடித்தல் அன்றிப் பாம்புஉணிக் கருங்கல்லான் முடித்தல் ஆகாமையின், 'பயறு உளவோ?' என்றார்க்குப் 'பாம்புஉணிக் கருங்கல் அல்லது இல்லை' என்றல் பொருந்தாமை உணர்க.

***நூற்பா - 37.*** இச்சூத்திரத்துக்குப் பலரும் கூறும் பொருள்கள் எல்லாம் 'அப்பொருள் கூறின்' (சொ. 36) என்ற முன்னிற் சூத்திரத்தான் பெறப்பட்டவாறு காண்க.

*நூற்பா - 46*

'மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி' - கலி. 50 எனவும்,
'நளிபுகை கமழாது இறாயினிர் மிசைந்து'-மலைபடு. 249எனவும்,
'இடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த' - அகநா. 29 எனவும்,
'கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்' - பரிபா. 5 எனவும்,

மிசைந்து, அயின்று என்பன தின்று எனவும் விழுங்கி எனவும் பெரும்பான்மை வருதலின் மிசைந்தார் அயின்றார் என்பன உதாரணம்காட்டல் பொருந்தாமை உணர்க.

**நூற்பா - 51.**

'பாணன் பறையன் துடியன் கடம்பன்என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை' - புறநா. 335

என்றது, பாண்குடி, பறைக்குடி எனக் குடியைச் சுட்டி நில்லாது, 'பாணன் பறையன்' எனப் பால்காட்டி நிற்றலான், உயர்திணைப் பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்.

**நூற்பா - 57.** இனி, குடிமை ஆண்மை முதலியவற்றை ஆகுபெயர் என்பாரும் உளர். 'குடிமை' என்னும் குணப் பெயர் ஆகுபெயராய்க் குடிமகனை உணர்த்திற்றேல், குடிமை நல்லன் என உயர்திணையான் முடியும்; அன்றித் தனக்கு உரிய குடிமை என்னும் பண்பை உணர்த்தி நிற்குமேல், பின்னர் 'அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்' (சொ. 57) என வேண்டா; தானே அஃறிணையாய் முடியும். ஆதலின் 'ஆகுபெயர்' என்றலும், 'பண்பு உணர்த்தி நிற்கும்' என்றலும் பொருந்தாமை உணர்க.

**நூற்பா - 58.** உலகம் என்பது வடசொல் அன்று. உலோகம் என்பது வடமொழித்திரிபு.

**நூற்பா - 61.** 'ஆ வாழ்க! அந்தணர் வாழ்க!' என்பன இனம் செப்பாதன. அருத்தாபத்தி இனம்செப்புமாறு, தன்னொடு மறுதலைப்பட்டு நிற்பது ஒன்று உள்வழியே ஆயிற்று; மறுதலைப்பாடு பல உள்வழிச் செப்பாது. ஆவிற்கு மறுதலை எருமை, ஒட்டகம் எனப் பல உள; அந்தணர்க்கு மறுதலை அரசர், வணிகர், வேளாளர் எனப் பிறரும் உளர். அங்ஙனம் பல மறுதலை உள்வழிச் செப்பாது.

**நூற்பா-103.** கோட்டை நுனிக்கண் குறைத்தான் என்புழி முன்மொழிக்கண் பொருள் நிற்றலானும், 'தினையின் கிளியைக் கடியும்' என்புழிப் பின்மொழிக்கண் பொருள் நிற்றலானும், இவற்றை அடை என்று கூறுதல் பொருந்தாது என்று உணர்க.

**நூற்பா - 230.** ஆகு, போகு எனக் குற்றுகர ஈற்றான் முதல்நிலை ஆயிற்று எனின், ஆகினான் போகினான் என முற்றும் அதன்கண்ணே தோன்றுதல் வேண்டும். அங்ஙனம் வழங்காமையின், ஆ போ என்பன முதல்நிலையாய்க் காலம் காட்டும் யகரஒற்றுப் பெற்று, ஆயினான் போயினான் என முற்றும் அதன்கண்ணே தோன்றுதலின், ஆகு போகு எனக் குற்றுகர ஈற்று முதல்நிலை இன்றாம் என உணர்க. இதனானே வினையெச்சம் முற்றாய்த் திரியும் என்பதும் உணர்க.

**நூற்பா - 237.** ஈண்டுக் கூறிய விதி எச்சத்திற்கும் ஆண்டு விலக்கிய விதி (சொ. 229) முற்றிற்கும் என்று உணர்க. இனி அவற்றிற்கு வேறுபாடு கூறுதும். இருதிணைக்கும் பொதுவாகிய 'செய்யும்' என்றும் சொல், 'உண்ணும்' என நின்றுழித் தானே தன் தொடர்ப்பொருளை உணர்த்தி, எடுத்தல் ஓசையான் மற்றொரு சொல் நோக்காது, செப்பு மூயினாற் போல அமைந்துமாறி நிற்றல் முற்றிற்கு சொல் நோக்காது, செப்பு மூயினாற் போல அமைந்துமாறி நிற்றல் முற்றிற்கு இலக்கணம். அச்செய்யும் என்னும் சொல் 'வாழும் இல்' எனப் படுத்தல் ஓசையான் கூறியவழி அம்முடிக்கும் சொல்லான் அமையாது 'நன்று' என மற்றொரு சொல் நோக்கி நிற்றல் எச்சத்திற்கு இலக்கணம்.

**நூற்பா - 252.** 'அனையை ஆகல் மாறே' (புறநா. 4), 'சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே' (நற். 40) என்புழி, மாறு என்னும் இடைச்சொல் வினையை அடுத்துக் காரணப் பொருள் உணர்த்தி நிற்றலின், மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தி நின்றது அல்லாமை உணர்க. அது மூன்றாவதன் பொருள் உணர்த்திற்றேல், 'கூறாய் தோழியான் வாழு மாறே' என்புழி, வாழுமாற்றை என இரண்டாவது விரியாதாம். 'மந்திர விதியின் மரபுளி வழாஅ' (முருகு. 95) என்புழி, முறைமையின் வழுவாத அந்தணர் என ஐந்தாவது விரிதலானும், 'இயல்புளிக் கோலோச்சும் மன்னவன்' (குறள்545) என்புழி, முறைமையிலே செங்கோல் நடாத்தும் என ஏழன் உருபு விரிதலானும், உளி என்பது மூன்றன் பொருள்பட வந்தது அன்று; பகுதிப் பொருள் விகுதியாய் நின்று தனக்கு ஏற்ற உருபை ஏற்று நின்றது.

***நூற்பா - 282.*** இவை தாம் சார்ந்த சொல்லை அசைத்தே நிற்கும் என்றலின் 'பிரிவில் அசைநிலை' என்றார். இங்ஙனம் நில்லாது வழக்கின்கண் 'ஆக ஆக' என அடுக்கி வந்து, உடன்படாமையும், ஆதரம் இன்மையும் ஆகிய பொருள் தந்து நிற்கும் என்றல் அசைநிலைக்கு ஆகாமையின், அவ்வாறு கூறுதல் பொருள் அன்மை உணர்க.

***நூற்பா - 283.*** 'உயிர்ஔ எஞ்சிய இறுதி யாகும்' (எ. 69) என்றமையான், 'ஆயியல் நிலையும் காலத் தானும், அளபெடை நிலையும் காலத் தானும்' (சொ. 283) என்னும் இரண்டற்கும் 'ஔஉ, ஔ' என உயிரையே உதாரணமாகக் காட்டுதல் மாறுகொளக் கூறலாம் என்று உணர்க. இனி, ஔகாரம் அளபெடுத்துழி உகர ஈற்றாய் நிற்றலின், 'ஔ' என்னும் உகர ஈறாகிய ஔகாரம் ஈண்டுக் கோடும். இது வியப்பு உணர்த்தும். அளபெடா ஔகாரம் ஆகாது என்று உணர்க.

***நூற்பா - 285.*** 'சாத்தனும் வந்தான்; இனிக் கொற்றனும் வரினும் வரும்' என்புழிச் சாத்தனும் கொற்றனும் என்னும் எச்ச உம்மைகள் 'வரினும்' என்னும் எதிர்மறை உம்மையொடு தொடர்ந்து நின்று ஒருவினை கொள்ளாது, இறப்பும் எதிர்வும் பற்றிவரும் வேறுவினை கொண்டவாறு காண்க. இங்ஙனம் உலக வழக்கு உண்மையானும், ஆசிரியர் 'மயங்கி உடன்நிலை இல' என்னாது 'மயங்கும் உடன்நிலை இல' எனச்சூத்திரம் செய்தமையானும் இதுவே பொருள் என்று உணர்க. இவ்விரண்டு உம்மையும் எச்சம் ஆதலின், இவற்றிற்கே மயக்கம் உளது என்று கூறினார்.

***நூற்பா - 291.*** 'உம்மை தொக்க' என்பதற்கு எண்ணும்மை அடுக்கி நின்ற என்பது பொருள். இனி, 'உம்மை தொக்க' என்பதற்கு 'நிலன் எனாவும்' என ஈற்று நின்ற உம்மை தொக்கு 'நிலன் எனா' என்றல் வழக்கம் இன்மையானும், எனாவும் என்றாவும் எண்ணிடைச்சொல் ஆதல் மேலிற் சூத்திரத்தான் (292) பெறப்படுதலானும், இதுவே ஆசிரியர் கருத்து.

**நூற்பா - 293** உம்மை தொக்குழியும் விரிந்துழியும்
உருபுதொகுதல் கொள்க.
'குன்றி கோபம் கொடிவிடு பவளம்
ஒண்செங் காந்தள் ஒக்கும் நின்நிறம்'
என்னும் பல பெயர் உம்மைத்தொகைக்கும் உம்மையும் உருபும் விரித்தே பொருள் உரைக்க. இக்குன்றி முதலியவற்றைச் செவ்வெண் ஆக்கி 'இவற்றை' எனத் தொகை கொடுத்து உருபு விரித்துழியும் அச்சுட்டு அக்குன்றி முதலியவற்றையே சுட்டுதலின், அக்குன்றி முதலியன செயப்படுபொருளாயே நிற்குமாறும் உணர்க. அன்றி அவை செவ்வெண்ணாயின் 'நிலம்நீர் வளிவிசும்பு என்ற நான்கின் அளப்பு அரியை' (பதிற். 14) என்றாற் போல உம்மையும் உருபும் விரித்தற்குப் பொருந்தாது எழுவாயாய், நான்கு என்னும் தொகைச்சொற் பயனிலை கொண்டு நிற்றல் வேண்டும் என்று உணர்க. இவை உம்மைத்தொகைக்கண் உருபு தொக்கன. இங்ஙனம் இரண்டு தொக்கனவற்றை என்ன தொகை என்று கோடும் எனின், 'புலியையும் வில்லையும் கெண்டையையும் வைத்தான்' என விரித்துழி எண்ணுப்பொருள் தரும் உம்மையினும், சொற் றொடர்ப் பொருளை உணர்த்தி நிற்கும் உருபு சிறந்தது ஆதலின், அச்சிறப்பு நோக்கி உருபுதொகை என்றே கோடும்.

**நூற்பா - 295.** சிறுபான்மை முற்றும் தொகைபெற்று வருதலின், 'சாத்தன் வந்தான்; கொற்றன் வந்தான்; வேடன் வந்தான்; மூவரும் வந்தமையான் கலியாணம் பொலிந்தது' என முற்றுச்செவ்வெண் தொகைபெற்று வரும். 'இவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்றலின், எண்ணப்படா' எனின், ஒரு பொருள்வேறுபாட்டான் எண்ணினார். இதனை, 'இம்மூவரும் வரின் கலியாணம் பொலியும்' என்று இருக்கின்றான் கூற்றாகக் கொள்க. என்னை? 'முன்னர்ச் சாத்தன் வந்தான்; அதன் பின்னர் வேடன் வந்தான்; இவர்கள் ஒருங்கு வந்திலரேனும் முடிவில் வந்து நிற்றலின் இது முடிவுபோயிற்று' என்று கூறினான் ஆகலின். 'இம்மூவர்' என்றமையான் பெயர் தொகை பெற்றதேனும், 'வந்தமையான்' என்றதனான் வினையும் தொகைபெற்று, அவ்வினையான் கலியாணம் முடிந்தவாறும் உணர்க. இம்முற்று அடுத்து வந்தனவும் செவ்வெண்ணாம்.

**நூற்பா - 318.** 'தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டு ஆகும்.' இதனானே விடல் என்னும் உரிச்சொல் அடியாகப் பிறக்கும் பெயரும் வினையும் தன் வினையும் பிறவினையும் பற்றிப் பிறக்கும் என்பது உணர்த்தற்கு 'விடற்பொருட்டு' என்றார். 'இயைபு' என்பதற்கு 'இயைப்பு' என வழங்காது 'இயைக்க' 'இயைவிக்க' என வேறுபட்டு வழங்கலின், தன்வினை பிறவினையுடன் ஓதாராயினார்.

**நூற்பா -342.** 'எய்யாமையே அறியாமையே': அறிதல் என்னும் உடன்பாட்டிற்கு மறையாகிய அறியாமை என்றும் உரிச்சொல்லான் எய்யாமையை உணர்த்தவே, அவ்வெய்யாமை மறைச்சொல் என்பதூஉம் அதற்கு எய்த்தல் என்னும் உடன்பாட்டுச்சொல் உளது என்பதூஉம் பெற்றாம். அவ்வுடன்பாட்டை ஓதாது மறையை ஓதினார், மறைச் சொல்லும் உரிச்சொல்லாய் வரும் என்பதற்கு.

'எய்த்து நீர்ச்சிலம்பின் குரல் மேகலை' சீவக. 2481

என்புழி, 'எய்த்து' என்பது அறிந்து என்னும் பொருள் உணர்த்திற்று.

**நூற்பா - 412.**

'ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்' -எ. 482 எனவும்,
'செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும்'-எ.488 எனவும்,
'உருபுதொக வருதலும்'- சொ. 105 எனவும்,
'மெய்உருபு தொகாஅ இறுதி யான' - சொ. 106 எனவும்,
'பண்புதொக வரூஉம் கிளவி யானும்' - சொ. 418 எனவும்,
'உம்மை தொக்க பெயர்வயினானும்' - சொ. 418 எனவும்,
'வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்'-சொ. 418 எனவும்,
'உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி' எ.223 எனவும்,

ஆசிரியர் தொக்கே நிற்கும் எனச் சூத்திரம் செய்தலின், வேற்றுமை உருபும், உவம உருபும், உம்மும், வினைச்சொல் ஈறும், பண்பு உணர்த்தும் ஈறும், இத்தொகைக்- கண் அல்லாததொரு சொல்லும் தொக்கு நிற்றலின் தொகை என்பதே அவர் கருத்து ஆயிற்று.

'ஆயின், கேழற் பன்றி (புறநா. 152) வேழக் கரும்பு (பெரிய. ஏனாதி. 2) என்பனவற்றிற்குத் தொக்கன இன்மையின் தொகைச்சொல் ஆமாறு என்னை?' எனின், அவற்றிற்கும் ஒன்றை ஒன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்கு வரும் 'ஆகிய' என்னும் வாசகம் தொக்கு நின்றது என்றே கோடும். 'அன்றித் தன்கண் தொக்கன இன்றி அங்ஙனம் வாசகம் தொக்கு நின்றது தொகை என்றற்குச் சாலாமையின் அதனை ஒட்டி ஒருசொல்லாய் நின்று தம் பொருள் உணர்த்தும் என்று கொண்டு ஏனையவற்றையும் அவ்வாறு கோடும்' எனின், எடுத் தோத்தினும் இலேசு சிறத்தல் யாண்டும் இன்மையின், அது பொருந்தாது. என்னை? அவ்விருபெயரொட்டுப் பண்புத் தொகை அறுவகைத் தொகைச் சூத்திரங்களுள் எடுத்தோத்து இன்றி 'என்ன கிளவியும்' என்ற இலேசினான் கொண்டது ஆகலின். ஆயின் 'வண்ணத்தின் வடிவின்' (சொ. 416) என்பதன்கண் இருபெயர் ஒட்டாய் ஐம்பால் அறியாத வடிவினையும் எடுத்து ஓதினாரால் எனின்,வடிவு முதலிய வற்றிற்கும் அறுவகைத்திரிபினுள் ஏற்பன கொணர்ந்து முடித்தலின், குன்றலும் தொகையாம் என்று உணர்க. 'என்ன கிளவியும்' (சொ. 416) என்பதனான் கொள்வன வருமொழி இன்றி நிலைமொழியும் பொருள் உணர்த்தி நிற்கும் என்பது ஆண்டுக் கூறுதும்.

அன்றியும் 'செய்தான் பொருள்; இருந்தான் குன்றத்து' என வழங்குவன ஒட்டி ஒருசொல் ஆகாமையும் செய்யுட்கண், 'கழூஉ விளங்குஆரம் கவைஇய மார்பே' (புறநா. 19), 'மாற்றுமைக் கொண்ட வழி' (கலி. 12) என இறுதிக்கண் இரண்டாவது தொக்கன, 'முயங்கினென்

அல்லனோ' (புறநா. 19) எனவும், 'போற்றாய்' (கலி. 12) எனவும் வரும் முடிக்குஞ் சொல்லோடு ஒட்டி ஒரு சொல் ஆகாமையும், 'தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே' (யா. கா. மேற்.) எனவும், 'சிறுகுரல் நெய்தல்என் பெருங்கழி நாட்டே' (அகநா. 120) எனவும், இறுதிக்கண் எழாவது தொக்கன, 'தோன்றும்' எனவும் 'சேர்ந்தனை செலினே' (அகம். 120) எனவும் முடிக்கும் சொற்களோடு ஒட்டி ஒரு சொல் ஆகாமையும் உணர்க. இன்னும், 'வல்லே, மறவல் ஓம்புமதி எம்மே' (அகநா. 19) என இடைக்கண் தொக்கனவும்,

பொன்ஓடைப் புகர்அணிநுதல்
துன்அருந்திறல் கமழ்கடாஅத்து
எயிறுபடை யாக எயிற்கதவு இடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கின்
பெருங்கை யானை - புறநா. 3

என அடுக்கிவருவனவும் ஒட்டி ஒருசொல் ஆகாமையும் உணர்க.

**நூற்பா - 431.** 'சோற்றைப் பசித்து உண்டான்' என்றாற் போல அவன் என்ற சுட்டுப் பெயரும் இடைநின்ற ஏகார ஓகாரமும் 'கொண்டான்' என்பதனொடு முடிந்தனஅன்றி, அவன் என்பது 'கொண்டான்' என்பதனொடு முடிய, ஏகார ஓகாரங்கள் 'பிறர் கொண்டிலர்' என்பதனொடு முடிந்தன என்றல் பொருத்தம் உடைத்து எனின், வினையெச்சமும் பெயரெச்சமும் ஒழித்து இடைச்சொல்லான் வரும் எச்சங்கள் பொருள் தருமாறு இடைச்சொல் ஓத்தினுள்கூறி ஈண்டு அவற்றிற்கு முடிபுசொல் கூறுகின்றார். ஆதலின், 'கொண்டான்' என்னும் சொல் வந்து அவ்வெச்சங்களை முடித்தால் அல்லது 'பிறர் கொண்டிலர்' என்னும் பொருண்மைமுடிபு தோன்றாது ஆதலின் 'கொண்டான்' என்பதே முடிக்கும் சொல்லாய் நிற்பப் 'பிறர் கொண்டிலர்' என்னும் பொருண்மைமுடிபு தோன்றிற்று என்றலே பொருத்தம் உடைத்து என்று கோடும். அன்றியும் மும்மை

எச்சத்திற்கும் உள்நின்ற பொருண்மை முடிபு முன்னர்க் கூறி, அதனை நீக்கிச் சொன்மை முடிபு ஈண்டுக் கூறு கின்றதனானும், இஃதே ஆசிரியர் கருத்து என்று உணர்க.

***நூற்பா - 434.*** 'கொளலோ கொண்டான்' என்பது 'கொண்டான்' என்பதனொடு முடியும். அது 'கொண்டு உய்யப் போமாறு அறிந்திலன்' என்பதனொடு முடிந்தது எனின், 'கொண்டான்' என்பது வந்து முடியாக்கால் அப்பொருண்மை முடிபு தோன்றாமை உணர்க.

***நூற்பா - 449.*** நம்பி, நங்கை என அஃறிணையைக் கூறுவனவும், 'எழுது வரிக்கோலத்தார்' என்னும் பிரேளிகைச் செய்யுளில் திணைவழுவும், 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்' (சொ. 27) என்னும் சூத்திரத்துள் அடங்குமாறும், புலியான், பூசையான் என்பன திசைச்சொற்கண் அடங்குமாறும் உணர்க. 'வெண்கொற்றப் படைத்தலைவன்' என்பது சிறப்பினாகிய பெயர்க்கண் அடங்கும்.

***நூற்பா - 458.*** 'இந்நாழிக்கு (இந்நாழி) சிறிது பெரிது' என்புழி அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப் பொருளாய் அடங்குதலானும், சிறிது என்பது பெருமையை விசேடித்து நின்றவாறும், அதுதான் முன்னர்ப் பெறப் பட்டமையானும், இவ்வெச்சமயக்கம் கூறுதலே ஆசிரியர் கருத்து என்று உணர்க.

***நூற்பா - 459.*** இச்சூத்திரத்திற்குச் 'சொல்லுவான் குறிப்பால் பொருள் உணரப்படும் சொற்களும் உள, இப்பொருள் இத்தன்மைத்து என்று கூறுதற்கண்' எனப் பொருள்கூறிச் 'செஞ்செவி, வெள்ளைக்கலர்' என்று காட்டுவது குறிப்பின் தோன்றலினது வேறுபாடாம் என மறுக்க.

***நூற்பா - 463.*** 'என்னால் கூறப்படாத இலக்கணங்கள் முதல்நூல்களான் கூறிக்கொள்க' எனின், அது குன்றக்கூறல் என்னும் குற்றமாம் என்று உணர்க.

## சேனாவரையரால் மறுக்கப்பட்ட உரையாசிரியர் கருத்துக்களை மறுக்கத்தக்கன அல்ல என்று உட்கொண்டு அவை ஏற்புடையன என்பதற்குக் காரணம் காட்டாது நச்சினார்க்கினியர் குறிப்பிடுவன

**குறிப்பு** : நச்சினார்க்கினியர் உட்கொண்ட காரணங்கள் அவர் வரைந்த உரையில் ஆங்காங்கு விளக்கப்பெறும்.

***நூற்பா - 4.*** 'ஆண்மைதிரிந்த பெயர்' என்பதற்குப் 'பெயர்ப்பொருள்' என்று இளம்பூரணர் குறிப்பிட்ட பொருளை இவர் ஏற்றுள்ளார்.

***நூற்பா - 13*** இறை பயப்பனதாம் வினா எதிர் வினாவலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும் என்பனவற்றொடு, சொல் தொகுத்து இறுத்தலும் சொல்லாது இறுத்தலும் என்பன கூட்டி எண்வகைய என்கிறார்.

***நூற்பா-15.*** செப்பு வழுவினும் அமைக; வினா வழீஇயின இடத்து அமையாதாம்.

***நூற்பா-23*** 'பால் மயக்குற்ற' என்பதனை உயர்திணைப் பால் ஐயத்திற்கே கொள்கிறார்.

***நூற்பா - 24*** 'உருவு என மொழிதலை' உயர்திணைப் பால் ஐயத்துக்குக் கொள்ளாமல் திணைஐயத்துக்கே கொள்கிறார்.

***நூற்பா-26.*** 'பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கட் பேதை' என்பதனைச் செய்யுளுள் 'அடைசினை' முதல் என்ற மூன்றும் மயங்கி வந்தன என்றே குறிப்பிடுகிறார்.

***நூற்பா - 54*** 'ஒன்று வினை மருங்கின்' என்பதனைத் தனி நூற்பாவாகவே கொள்கிறார்.

***நூற்பா - 69*** அவ்வாய், நீயிர் என்பன உருபு ஏற்றற்குச் செவ்விய அல்ல என்று குறிப்பிடுகிறார்.

***நூற்பா - 83*** ஏழாவதற்கு முடிக்க வரும் பொருள் வேறுபாடு இன்றி உருபின் பாகுபாடே கூறுகின்றார்.

***நூற்பா - 117*** 'வேற்றுமை மருங்கின்' என்ற அடியைத் தனி நூற்பாவாகக் கொள்கிறார்.

***நூற்பா-119*** இவ்வாகுபெயர்கள் எழுவாய் வேற்றுமை மயக்கம் என்றே குறிப்பிடுகிறார்.

***நூற்பா-128*** இவை விரவுப்பெயரேனும் ஈண்டு உயர்திணைப் பெயரிடைவைத்தார், மேல் விரவுப்பெயரை இவற்றொடு மாட்டெறிதலின், அம்மாட்டேற்றிற்கு ஏற்ப விளிஏற்பன உயர்திணைப்பெயர்களுள் வேறு இன்மையான்.

***நூற்பா - 145*** 'ஏனைப் புள்ளி' (சொ. 131) என்பதனுள் இர் ஈறு கோடலின், ஈண்டு நீயிர் என்பதனை எடுத்து ஓதி விலக்குகிறார்.

***நூற்பா - 427*** வினைசொல்லுள் ஒரு சாரனவற்றிற்கு ஆட்சிவேண்டி அதன் குணம் காரணமாகக் கொண்டு ஒரு குறியீடு கூறுகின்றது என்று இளம்பூரணரைப் பின்பற்றிக் கூறுகிறார்.

***நூற்பா-428*** இளம்பூரணரைப் பின்பற்றி மூன்றிடத்தும் வரும் வினையெச்சமும் பெயரெச்சமும் அம்முற்று இயல்பிலே நிற்கும் என்கிறார்.

*சேனாவரையர் இளம்பூரணரைப் பின்பற்றி உரைவரையும் இடங்களில் நூற்பா எண் 283, 440, 455, 457, 458, 459 என்ற இவை பெரும்பாலும் நச்சினார்க்கினியரால் இளம்பூரணரின் பெயரைச் சுட்டி மறுக்கப்பட்டுள்ளன.*

**நச்சினார்க்கினியர் சிறப்பாக உரைவரையும் நூற்பாக்கள் :** *37, 50, 51, 71, 83, 95, 113, 153, 171, 206, 215, 216, 222, 226, 233, 279, 288, 360, 399, 400, 410, 417, 441 முதலியன.*

# தெய்வச்சிலையார்

பதினேழாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற இலக்கணக் கொத்து உரை என்னும் நூலில் சிறப்புப்பாயிரம்

ஒல்காப் பெருந்தவத் தொல்காப் பியமுனி
தன்பெய ரால்உலகு இன்புறத் தருநூல்
உளங்கூர் உரையாம் இளம்பூரணமும்
ஆனா இயல்பின் சேனா வரையமும்
உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க் கினியமும்

என மூவர் உரைகளையே குறிப்பிட்டுள்ளது. 13ஆம் நூற்றாண்டில் தோன்றியதெனவும் 14ஆம் நூற்றாண்டில் நச்சினார்க்கினியர் உரையை அடுத்துத் தோன்றியது எனவும் ஆராய்ச்சியாளர்களால் குறிப்பிடப்படும் தெய்வச்சிலையார் உரை, முன்னர்க் குறிப்பிடப்பட்ட மூவர் உரைகளையும் ஒத்த சிறப்பினதாக அமைந்தும் யாது காரணம் பற்றியோ அறிஞர்களிடையே பிரசித்தமாகவில்லை. தமிழ் மக்களின் நல்லூழினால் தெய்வச்சிலையார் உரைச் சுவடிகள் ஒருசில தமிழகத்தில் கிட்டவே, அவ்வுரையும் அச்சேற்றப்பட்டது.

தெய்வச்சிலையார் குறிப்பிடும் செய்திகளில் பல மற்ற உரையாசிரியர்கள் குறிப்பிடும் செய்திகளில் இருந்து வேறுபட்டுள்ளன. அவற்றுள் எவையும் அவ்வுரை யாசிரியர்களால் குறிப்பிடப்படவுமில்லை, மறுக்கப்படவும் இல்லை. எனவே, தெய்வச்சிலையார் அம்மூவருக்கும் பிற்பட்டவராக இருக்கலாம் என்ற கருத்துப் பொருத்தமாகத் தோன்றுகிறது. அம்மூவர் காலத்தை அடுத்துத் தோன்றிய கல்லாடர் சொல்லதிகாரத்துக்கு வரைந்துள்ள விருத்தியுரை அம்மூவர் உரைகளின் கதம்பமாகவே அமைந்துள்ளது. கல்லாடரும் தெய்வச்சிலையாரைப் பற்றி எதுவும் குறிப்பிட வில்லை. அவர் கருத்துக்களில் எதனையும் தாம் எடுத்துக் குறிப்பிடவில்லை. இதனை நோக்கத் தெய்வச்சிலையார் கல்லாடருக்கும் பிற்பட்ட காலத்தவரோ என்று கருதவும் தோன்றுகிறது.

முன்னர்க் குறிப்பிட்ட மூவர் போலவே தெய்வச் சிலையாரும் நுண்ணிய அறிவினர் என்பது அவர் உரையால் அறியக்கிடக்கிறது. தொல்காப்பிய நூற்பாக்களை நன்கு ஆராய்ந்ததன் விளைவாக முன்னைய மூவரும் குறிப்பிடாத பல செய்திகள் இவர் உரையில் இடம்பெற்றுள்ளன. இவர் சேனாவரையரை ஒப்ப வடமொழி இலக்கணங்களிலும் வல்லவர் என்பதும் புலனாகின்றது. இவருடைய தனித்த புலமை, கிளவியாக்கத்தின் தொடக்கத்தில் சொல்லதி காரத்தின் இயல்களுக்கு உரிய இயைபைப் புலப் படுத்துவதனானும், கிளவியாக்கத்தில், 'தகுதியும் வழக்கும்' (சொ. 17), 'உருபென மொழியினும்' (சொ. 24), 'தன்மை சுட்டலும்' (சொ. 25) போன்ற நூற்பாக்களுக்கு இவர் வரைந்துள்ள உரையானும், வேற்றுமை மயங்கியலில் 'ஒருவினை ஒடுச்சொல்' (சொ. 87), 'பிறிது பிறிது ஏற்றலும்' (சொ. 100), 'யாதன் உருபின்' (சொ. 102) முதலிய நூற்பாக்களின் உரையானும், இடையியலில் 'ஈரளபு இசைக்கும்' (276), 'உம்மை எண்ணின்' (286) என்பனவற்றின் உரையானும், எச்சவியலில் பத்துவகை எச்சங்களைப் பற்றிய 422 முதல் 438 ஈறாக உள்ள நூற்பாக்களுக்கு இவர் வரைந்துள்ள உரையானும் புலனாகிறது.

எடுத்துக்காட்டுக்களில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலம்பு, மணிமேகலை, சிந்தாமணி, சூளாமணி, கீழ்க்கணக்கு நூல்கள் முதலியவற்றி லிருந்து மற்ற உரையாசியர்கள் குறிப்பிடாத பல மேற்கோள்கள் இவர் உரையில் இடம்பெறுவதால் இவருடைய சிறந்த இலக்கியப் புலமையும் வெளிப்படுகிறது.

இவர் வடமொழியில் பாணினி வியாகரணத்தில் தோய்ந்தார் என்ற செய்தி 'ஒருவினை ஒடுச்சொல்' (சொ. 87) என்ற நூற்பா உரையுள், இருபொருட்கண் ஒருதலை பற்றி வரும் ஒடு உருபு அத்தொழிற்குச் சிறவாத பொருட்கண் வரும் என்ற பொருள் பாணினியார்க்கும் ஒக்கும் என்கிறார். தொகைகளைப் பற்றிப் பேசும் இடத்தில் 'வேற்றுமைத்

தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை' என்பன தம்மில் ஒருபுடை ஒற்றுமை உடைய ஆதலின் பாணினியார் தற்புருடசமாசம் என்று குறியிட்டார் என்று சொ.410 உரையில் குறிப்பிட்டுள்ளார். எழுத்ததிகாரத்தில் உரிச்சொல்லைக் 'குறைச்சொற்கிளவி' (எ. 482) என்று ஓதினமையான் வடநூலாசிரியர் 'தாது' என்று குறியிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும், அவையும் குறைச்சொல் ஆகலான் - என்று மற்றவர் குறிப்பிடாத நுட்பமான இன்றியமையாத செய்தியை, சொல்-292ஆம் நூற்பா உரையுள் குறிப்பிட்டுள்ளார்.

இவர் நுட்பமாக ஆராய்ந்து சொற்படலத்திலுள்ள நூற்பாக்களின் வரிசையை இக்கால அறிஞர்களும் போற்றும் வகையில் இடம் மாற்றியுள்ளார். வேற்றுமை மயங்கியலில் 'இரண்டன் மருங்கின்' 'தடுமாறு தொழிற்பெயர்க்கு' 'ஈற்றுப்பெயர் முன்னர்' 'ஓம்படைக் கிளவிக்கு' 'குத்தொக வரூஉம்' 'அச்சக் கிளவிக்கு' 'அதுவென் வேற்றுமை' 'ஆறன் மருங்கின்' (சொ. 89-96) என்ற நூற்பாக்கள் முறையே 2, 3, 5; 2, 3; 2, 3; 4, 6; 5, 2; 6, 4; 6, 7 - என்ற வேற்றுமைகளின் மயக்கம் என்பதனை உளங்கொண்டு, பொருள் கருதி, அவற்றை முன்னவர் கொண்ட முறைகளை விடுத்து வேறுவகையில் வரிசைப்படுத்தியுள்ளார்.

எச்சவியலில் இடம்பெறும் வினைமுற்றுப் பற்றிய 'இறப்பின் நிகழ்வின்' 'எவ்வயின் வினையும்' 'அவைதாம், தத்தம் கிளவி' என்ற மூன்று நூற்பாக்களையும் வினையியலின் இறுதியில் 242, 243, 244ஆம் நூற்பாக்களாக அமைத்து, 241ஆம் நூற்பா உரையின் இறுதியில், ''வினைச்சொற்கள் முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் என மூவகைப் படும். அவற்றுள் பெயரெச்சம் வினையெச்சம் என்பன இத்தன்மைய என்று எடுத்துஓதி முற்றுச்சொல்லாவது இத்தன்மையது என்று ஓதிற்றிலர். அதற்கு இலக்கணம் யாங்குப் பெறுதும் எனின், எச்சவியலுள் பெறுதும். வினைக்கு இன்றியமையாத முற்றினை ஒழிபியல்

கூறுகின்றுழிக் கூறிய அதனான் பெற்றது என்னை எனின், அஃது எமக்குப் புலனாயிற்றன்று. அஃதேல் வினை யிலக்கணம் அறிந்தோர் ஆகும் காலம் முற்றிலக்கணமும் அறிதல்வேண்டும் அன்றே? அதனான் அதனை ஆண்டுக் கூறியவாறு ஈண்டுரைத்தல் வேண்டும்'' என்று விளக்கம் கூறி அவற்றை வினையியல் இறுதியில் அமைத்துள்ளார்.

இவர்தாமே பாடல் இயற்றுவதில் வல்லவர்போலும் என்று கருதும் நிலையில் இவர்

'உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக்கிளவி
ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கே' (சொ.98)

என்ற நூற்பா விளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள நான்கு வெண்பாக்கள் மற்றவர் உரையிலோ வேற்று இலக்கண நூல்களின் உரைகளிலோ காணப்படாதவை. அவை பின்வருமாறு :

தேம்பைந்தார் மாறனைத் தென்னர் பெருமானை
வேந்தனை வேந்தர்மண் கொண்டானை -
யாம்சிறிதும்
அங்கோல் வளைகவர்ந்தான் என்னலும் ஆகுமோ,
செங்கோல் சிறுமை உற ?

இஃது ஐகாரஉருபு அடுக்கி ஒருபொருட்கண் வந்தது.

கொல்லிப் பொருப்பனால் கொங்கர் பெருமானால்
வில்லின் பகைகடிந்த வேந்தனால் - அல்லியந்தார்க்
கோதையால் வையம் குளிர்தூங்க என்கொலோ,
பேதையார் எய்துவது பேது ?

இது மூன்றாவது அடுக்கி வந்தது.

நான்காவது அடுக்கியதற்கு நெய்தற்கலி 4ஆம் பாடல் அடிகளை எடுத்துக் காட்டியுள்ளார்.

*வீரப் புலியானின் வெல்போர் வளவனின்*
*கோரப் பரிஉறந்தைக் கோமானின் - ஆர்அலங்கல்*
*மற்படுதோள் செம்பியனின் மல்லல் மணிநேரி*
*வெற்பனின் தீர்ந்துளவோ வேந்து?*

*இஃது ஐந்தாவது அடுக்கி வந்தது.*

*பெற்றி திரிந்து பெருவறங் கூரினும்*
*மற்றுயிர்கள் நோயால் வருந்தினும் - கொற்றக்*
*குடையான்கண் நீதிபுரி கோமான்கண் ஆழிப்*
*படையான்கண் நிற்கும் பழி.*

*இஃது ஏழாவது அடுக்கி வந்தது.*

*'பிறிது பிறிது ஏற்றலும்' (சொ. 100) என்ற நூற்பா உரையுள் எடுத்துக்காட்டாகும் பாடல் பின்வருமாறு :*

*காதலியைக் கொண்டு, கவுந்தி யொடுகூடி,*
*மாதரிக்குக் காட்டி, மனையின் அகன்றுபோய்,*
*கோதில் இறைவனது கூடற்கண்*
*கோவலன்சென்று*
*ஏதம் உறுதல் வினை.*

இவற்றை நோக்கத் தெய்வச்சிலையார் பாடல் இயற்று வதிலும் வல்லவர் என்று கருதுகிறோம்.

'மன்னாப் பொருளும் அன்ன இயற்றே' (சொல். 32) என்ற நூற்பா உரையுள், ''வேதாகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்துமிடத்து, உலகும் உயிரும் பரமும் அநாதி; பதியும் பசுவும் பாசமும் அநாதி என வரும். உலகும் உயிரும் பரமும் பசுவும் பொருந்தும் பொருள் ஆனவாறும், பாசமும் பதியும் இவற்றொடு பொருந்தாத பொருள் ஆனவாறும் காண்க'' என்று குறிப்பிடும் செய்தி தெய்வச் சிலையாரின் சைவசித்தாந்தச் சாத்திர அறிவுக்கு எடுத்துக்காட்டாகும்.

'பெயர் நிலைக் கிளவியின் ஆஅ குநவும்' (சொ. 438) என்ற நூற்பா உரையுள், மெய்ந்நிலை மயக்கத்துள் எழுத்திற்கு வேறு பெயரிட்டு வழங்குவதற்கு எடுத்துக்காட்டாக,

'மண்ணைச் சுமந்தவன் தானும், வரதராசன் மகன் தானும்,
எண்ணிய வரகாலி மூன்றும், இரண்டு மரமும், ஓர் யாறும்
திண்ணம் அறிய வல்லார்க்குச் சிவகதி யதனைப்
பெறலாமே'

| | |
|---|---|
| இதனுள், மண்ணைச் சுமந்தவன் | - ந |
| வரதராசன் மகன் | - ம |
| வரகாலி மூன்று | - சி |
| இரண்டு மரம் | - வா |
| ஓர் யாறு | - ய |

என்று கூற 'நமசிவாய எனப் பொருளாயிற்று' என்பதனைத் தந்து இசையெச்சத்தை விளக்கியுள்ளார். இஃது இவர் சிவபெருமானிடம் கொண்ட பற்றினை விளக்குவதும் ஆகும். 'அவற்றுள், வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல' (சொ. 407) என்ற நூற்பா உரையுள்,

"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரும்
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்" - முருகு. 1-6

என்பது பல சொல்லாகி வந்து கணவன் என்பதனொடு முடிந்து கிடத்தலான், இரண்டு சொல் ஒருதொகையாம் என்றல் பொருந்தாதால் எனின், எவ்வாறு வரினும் இரண்டு சொல்லாகி வந்தல்லது ஒட்டுப்படாது என்று கொள்க. அஃது ஆயவாறு என்னை எனின், பூத்தொடைபோலக் கொள்க. அஃது இரண்டாயவாறு என்னை எனின், முற்பட இரண்டு பூவை எடுத்து ஒன்றாகக் கட்டும். அதன்பின் அவ்விரண்டும் ஒன்றாகி நின்ற தொடையோடே கூடப் பின்னும் ஒரு பூவை

எடுத்து ஒன்றாகக் கட்டும்; அம்மூன்று பூவும் ஒன்றாகக் கட்டப்பட்ட தொடையோடே பின்னும் ஒரு பூவை எடுத்துக் கட்டும்; இவ்வாறே எல்லாப் பூவும் இரண்டு ஒன்றாக இணைத்தலாம். சொற்றொடையும் ஒட்டுப்படுங்கால் அவ்வாறு வருமெனக் கொள்க'' என்று கூறித் திருமுருகாற்றுப்படை அடிகளின் பொருளை விளக்குவதனை நோக்க இவர் முருகப்பெருமானிடம் கொண்டிருந்த ஈடுபாடு புலப்படும்.

பாண்டிநாட்டில் தோன்றியவராய்த் திருப்புல்லாணி என்ற வைணவத் திருப்பதியில் உகந்தருளியிருக்கும் பெருமானுடைய திருப்பெயரைத் தம் இயற்பெயராக உடையவராய், தமிழ் வடமொழி இரண்டிலும் வல்லவராய், சைவ சித்தாந்த நோக்குடையவராய்த் தம் கூர்ந்த நுண்ணறிவினாலே தொல்காப்பியத்தின் பல நூற்பாக்களுக்குப் புது உரை வரைந்த இவ்வறிஞர் வரைந்த உரை பாண்டிய நாட்டவரான சாமிநாத தேசிகர், சுப்பிரமணிய தீக்கிதர், சிவஞானமுனிவர் ஆகியோருக்குக் கிட்டவில்லை என்ற செய்தி வியப்பாகவே உள்ளது.

செந்தமிழ் நிலம் 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைப்பட்ட பரப்பு முழுதும்' எனவும் *(393)*, செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலம் குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும், கொல்லமும், கூபகமும், சிங்களமும், சையத்தின் மேற்குப் பட்ட கொங்கணமும், துளுவமும், குடகமும், குன்றகமும், கிழக்குப் பட்ட கருநாடகமும், வடுகும், தெலிங்கும், கலிங்கமும் என்று கொள்ளப்படும் *(395)* என்று கூறி, இவர் கூறும் எடுத்துக்காட்டுக்கள் பொருத்தமாகவும், சிறப்பாகவும் உள்ளன. கிளவியாக்கம் அல்வழித் தொடரையும், அடுத்த மூன்று இயல்கள் வேற்றுமைத் தொடரையும் விளக்க எழுந்தன என்ற இவர் கூற்று மொழியியல் அறிஞராலும் பாராட்டப்படுகிறது. இவர் உரை இயல்தோறும் கிரந்த வகையால் இவ்வளவு என்று, காரிகை உரை போலக் கணக்கிட்டு உரைக்கப்பட்டுள்ளது.



# கல்லாடனார்

கல்லாடனார் என்ற பெயருடைய சங்கப்புலவர், கல்லாடம் என்ற அரிய நூலை வரைந்த கல்லாடர் என்ற இருவரினும் தொல்காப்பியச் சொற்படலத்துக்கு உரை வரைந்த கல்லாடர் வேறானவர். கல்லாடம் என்ற திருத்தலம் பாண்டி நாட்டில் உள்ளதாகக் கூறுவர். கல்லாடர் என்பது இயற்பெயரோ, கல்லாடம் என்ற ஊரில் வாழ்ந்து கல்வி கேள்விகளான் சிறப்புற்ற பின்னர் இவர்க்கு மக்களான் வழங்கப்பட்ட சிறப்புப் பெயரோ என்பது உறுதியாகப் போதரவில்லை.

'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' (சொ. 13) என்னும் நூற்பா உரையுள், 'செப்பு, வினா என்றவற்றுள் செப்பு, மறுத்தலும் உடன்படுதலும் என இருவகைப்படும்; ''நும் நாடு யாது?'' என்றாற்குப் ''பாண்டிநாடு'' என்றாற் போல்வன இவ்விரண்டனுள் அடங்காது எனினும் ஒருவகையான் அடக்கிக் கொள்ளப்படும்' என்ற குறிப்பையும், ஆறாம் வேற்றுமை உருபு ஏற்ற சொல் கொண்டுமுடியும் சொற்களின் பட்டியலில் உள்ள 'தெரிந்து மொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்' (சொ.81) என்ற அடியிலுள்ள 'நிலை' என்பதற்கு எடுத்துக்காட்டாகப் 'பெண்ணாகடத்துப் பெருஞ்சங்கரனாரது நிலை' இஃது ஒன்றிய தற்கிழமை' என்று கூறியுள்ள எடுத்துக்காட்டையும் கொண்டு இவர் பாண்டி நாட்டினர் என்றும் சைவ சமயச் சார்புடையவர் என்றும் கொள்ளலாம்.

இளம்பூரணர் உரை 'விருத்திக்காண்டிகை' எனவும், சேனாவரையர் உரை 'உரை' எனவும், நச்சினார்க்கினியர் உரை 'காண்டிகையுரை' எனவும், தெய்வச் சிலையார் உரை 'உரை' எனவும் வழங்கப்படவும், இவர் வரைந்த உரை 'கல்லாடனார் விருத்தியுரை' என்று வழங்கப்படுகிறது. விருத்தியுரை என்ற பெயருக்கு ஏற்ப முதல் மூவர் உரையில் காணப்படாதன வாகிய செய்திகள் சிலவற்றை இவர் உரையில் காணலாம்.

எடுத்துக்காட்டாக, 'பெண்மை சுட்டிய உயர்திணைமருங்கின்' (சொ.4) என்றநூற்பாஉரையுள், 'உயர்திணைப்பால் ஆயின், பொருள்முகத்தான் ஆண்பால், பெண்பால், ஆண் அலி, பெண் அலி, பேடிப்பால், ஆண்பால் பன்மை, பெண்பால் பன்மை, ஆண் அலிப்பால் பன்மை, பெண் அலிப்பால் பன்மை, பேடிப்பன்மை, ஆண்பாலொடு பெண்பால் கூடிய பன்மை, பெண்பாலோடு ஆண்பால் கூடிய பன்மை, ஆண்பால் சிலர், பெண்பால் சிலர் என விகற்பித்து நோக்கப் பலவகைப்படும். இப்பலவகையும் சொல்வகை மூன்று அல்லது இன்மையின் மூன்றே ஆயின. இவ்வாற்றானே தேவர் நரகர் என்பனவற்றது பாகுபாடும் அறிந்துகொள்க.

''இனி, அஃறிணை உயிர்உடையதூஉம் உயிர் இல்லதூஉம் என இரண்டாய், அவற்றுள் உயிர் உடையது ஆணும் பெண்ணும், ஆண் சிலவும் பெண் சிலவும், ஆண் பன்மையும் பெண் பன்மையும், அவ்விரண்டும் தொக்க சிலவும் அவ்விரண்டும் தொக்க பலவும், உயிர் அல்லவற்றது ஒருமையும், சிலவும் பலவும் என இவ்வாற்றான் பல பகுதிப்படுமேனும் சொல்வகை நோக்க இரண்டல்லது இன்மையின், இரண்டே ஆயின என்பது'' என்ற இன்னோரன்ன செய்திகளை விரித்து உரைத்து எடுத்தியம்பும் சிறப்பினையே இவர் உரையில் காணலாம். இவர் உரை பற்றி, பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் கூறுவன பின்வருமாறு :

''கல்லாடனார் உரை கிளவியாக்கம் தொட்டு, 'வினையே குறிப்பே இசையே பண்பே' என்ற இடையியல் பத்தாம் நூற்பா முடிய நமக்குக் காணக் கிடக்கிறது.

***கிளவியாக்கத்தில்*** 15 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 2 சூத்திரங்களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்,

***வேற்றுமையியலில்*** 6 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 3 சூத்திரங்களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்,

**வேற்றுமை மயங்கியலில்** 15 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்,

**விளிமரபில்** 12 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்,

**பெயரியலில்** பெரும்பாலும் நச்சினார்க்கினியர் உரையும்,

**வினையியலில்** 6 சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், 2 சூத்திரங் களுக்குச் சேனாவரையர் உரையும், ஏனைய சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும்,

**இடையியலில்** சில சூத்திரங்களுக்கு உரையாசிரியர் உரையும், சில சூத்திரங்களுக்கு நச்சினார்க்கினியர் உரையும் கொடுக்கப்பட்டுச் சொல்லதிகாரத்து 260 சூத்திரம் முடியக் கல்லாடர் விருத்தியுரை அமைந்துள்ளது.''

எனவே, தாம் உரைவரைந்த 260 நூற்பாக்களில் 190 நூற்பாக்களுக்குக் கல்லாடனார் நச்சினார்க்கினியர் உரையை மேற்கொண்டுள்ளார் என்று கருதலாம்.

பிரயோக விவேகம் 12ஆம் காரிகை உரையில் அதன் ஆசிரியர் சுப்பிரமணிய தீக்கிதர் ''சோற்றைக் குழைத்தான், தீக்கனாவைக் கண்டான், வழிசெலப் புகுந்தான் வாணியனைக் கண்டான், 'ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்' (குறள்-932) இவை அநபிகிதத்துள் அநீச்சித கருமம். இவற்றைக் கல்லாடர் முதலாயினார் கருத்து உள்வழிச் செயப்படுபொருள், கருத்து இவ்வழிச் செயப்படுபொருள் என்பர்'' என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, பிரயோக விவேகத்தின் காலமாகிய 17ஆம் நூற்றாண்டுக்குக் கல்லாடனார் முற்பட்டார் என்பது தெளிவு. 'கருத்து உள்வழிச் செயப்படுபொருள், கருத்து இல்வழிச் செயப்படுபொருள்'

என்பன, 'காப்பின் ஒப்பின்' (சொ. 73) என்ற நூற்பா உரையுள் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டதனை எடுத்துக்கொண்டு கல்லாடனார் குறிப்பிடவும், பிரயோகவிவேக நூலார் நச்சினார்க்கினியரைக் கல்லாடர் முதலாயினார் என்று குறிப்பிடுவது வியப்பாக உள்ளது.

மேலும், பிரயோக விவேகம் 22ஆம் காரிகை உரையில் ''மக்கட்சுட்டு என்பதனைக் கல்லாடரும் பின்மொழி ஆகுபெயராய் நின்ற இரு பெயரொட்டுப் பண்புத்தொகை என்பர்'' என்று குறிப்பிடுகிறார். இச்செய்தி இப்பொழுது உள்ள கல்லாடர் உரையில் காணப்படவில்லை. கல்லாடர் உரை சொல்லதிகாரம் முழுமைக்கும் கிட்டியிருப்பின், கல்லாடர் மக்கட் சுட்டினைப் பின்மொழி ஆகுபெயர் என்று கூறிய செய்தி எச்சவியலில் கூறப்பட்டிருக்கலாம்.

'மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப' (சொ. 210)

என்ற நூற்பா உரையுள்,

''பாடுஇல் மன்னரைப் பாடன்மார் எமரே' (புறநா.375)
என்றும்,
'நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே'(நற். 64) என்றும்,

பெயர்கொண்டு முடிந்தனவால் எனின், அவை நிலவுக, பாடுக எனவரும் வியங்கோளிற்கு எதிர்மறை; இதன் மறை அல்ல என்று போகலும் ஒன்று. வினைகொள்ளும் என்பது பெரும்பான்மை; சிறுபான்மை பெயர் வரும் என்பதும் ஒன்று. இவற்றுள் நல்லன தெரிந்து உரைக்க'' என்று குறிப்பிடு கிறார். 'மார்' பெயரொடு முடிதலேயன்றி வினையொடும் முடியும் என்பர் தெய்வச்சிலையார். அவருக்குக் 'காலக் கிளவியொடும் முடியும் என்ப' என்பது பாடம். தெய்வச் சிலையார் கொண்ட கருத்தும் கல்லாடர் காலத்தில் நிலவி யிருந்தமையின், இரண்டனையும் குறிப்பிட்டு நல்லன கொள்ளுமாறு குறிப்பிடுகிறார்.

'இன்று இல உடைய' (சொ. 222) என்ற நூற்பா உரையுள், ''பொருட் பெயர் முதலிய அறுவகைப் பெயரினும் வரும் வரவினைத் தொகுத்தானும் விரித்தானும் ஓதாது, சிலவற்றை விரித்தும் சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றைக் கூறாதும் 'அப்பாற் பத்தும் குறிப்பு' என்று விட்ட கருத்து என்னை எனின், இவை பெரும்பான்மையன என்றவாறு. பிறிது காரணம் உண்டாயினும் அறிந்திலம்'' என்ற பகுதியில், மற்ற உரையாசிரியர் கூறாத செய்திகளை எடுத்து விளக்கப் புக்கு இவர் உறுதியாக ஏதும் கூறமுடியாமல் இடர்ப் படுவதனைக் காண்கிறோம்.

மற்ற உரையாசிரியர்கள் குறிப்பிடாத செய்திகளைத் தாம் ஆராய்வதற்கு எடுத்துக்கொண்டு, அவற்றுள் தம்மால் உறுதியாக இன்னது என்று துணிதற்கு இயலாத செய்திகளை இவர் 'போலும்' என்ற ஒப்பில் போலிச் சொல்லைப் பயன்படுத்திக் குறிப்பிடுவதனை இவர் உரையில் ஏறத்தாழ 40இடங்களில் காணலாம்.

கிளவியாக்க முதல் நூற்பா உரையுள் 'மக்கள் என்னாது சுட்டு என்றது தாம் உயர்திணை என இடுகின்ற குறியீட்டிற்குக் காரணம் இது என்பது விளக்கல் வேண்டிப்போலும்' எனவும்,

'அதனின் இயறல்' (சொ. 75) என்னும் வேற்றுமை இயல் நூற்பா உரையுள், ''அன்ன பிறவும்' என்றது, சூத்திரத்தில் எடுத்து ஓதின பாகுபாட்டின் ஒழிந்தனவும் பிறபொருட் பாகுபாடுகளும் கருதிப் போலும்'' எனவும்,

'மூன்றனும் ஐந்தனும்' (சொ. 94) என்னும் வேற்றுமை மயங்கியல் நூற்பா உரையுள், ''கிளவி என்றதற்கு 'ஆக்கமொடு புணர்ந்த' என விசேடித்துக் கூறினமையின் ஆக்கம் அல்லாதது ஒத்த கிழமைத்து அன்று என்பது போலும் கருத்து'' எனவும்,

'அளபெடைப் பெயரே அளபெடை இயல' (சொ. 138) என்னும் விளிமரபு நூற்பா உரையில், ''இதற்கு எடுத்துக்காட்டு அழாஅஅன், புழாஅஅன் என வரும்; மற்று இஃது 'ஆன் என் இறுதி இயற்கையாகும்' (சொ. 135) என்றவழியே அடங்காதோ எனின், அளபெடுத்த ஆன் என் இறுதியாதலின் வேறு கூறிற்றுப் போலும்'' எனவும், பெயரியலின் 'இயற்பெயர் சினைப்பெயர்' (சொ. 177) என்னும் நூற்பா உரையுள், ''பிறவும் ஆஅங்கு அன்னவை தோன்றின்' என்புழிப் 'பிறவும்' என்றதனான் கொள்வன யாவை எனின், குறவன் இறவுளன் குன்றுவன் எனவும், காடன் காடி எனவும், நாடன் நாடி எனவும், துறைவன் சேர்ப்பன் தரையன் திரையன் எனவும், ஒருமைத் திணைப்பெயராய் வருவனவும், ஆண் பெண் என்பனவும் பிறவும் இன்னோரன்னவும் போலும்'' எனவும்,

'அதுச்சொல் வேற்றுமை' (சொ. 216) என்னும் நூற்பா உரையுள், ''ஒப்புமைப்பண்பு குணப்பண்பினுள் அடங்காதோ எனின், அஃது ஒரு பொருட்கண்ணே கிடப்பதன்றி அவ்விருபால் பொருட்கண்ணும் கிடத்தலின் வேறு ஆயிற்றுப் போலும்'' எனவும், (அதே நூற்பா உரையுள் 'கருதிப்போலும்' என வேறு நான்கு இடங்களில் குறிப்பிட்டுள்ளார்).

'இடை எனப்படுப' (சொ. 251) என்னும் நூற்பா உரையுள், ''ஈண்டும் இருவகையானும் இடை வரும் என்பதற்கு இலேசு கூறினார் போலும்'' எனவும், குறிப்பிடுதலான், ஒவ்வோர் இயலிலும் இவரால் இஃது என்று உறுதியாகக் கூறமுடியாதன வற்றைப் போலும் என்னும் சொல்புணர்த்து உரைப்பது வழக்கம் என்பதும், அவ்வாறு இவர் துணியாது கூறிய இடங்கள் இவர் உரையில் ஏறத்தாழ 40 இடங்கள் உள என்பதும் அறியக் கிடக்கின்றன.

வேற்றுமை மயங்கியலின் முதல் நூற்பாவாகிய ‘கருமம் அல்லா’ (சொ. 86) என்பதன் உரையில், இவர் ‘‘இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், உருபும் பொருளும் உடன் மயங்குதலும், ஒருவழி உருபே மயங்குதலும், ஒன்றற்கு உரியதனோடு ஒன்று மயங்குதலும், இரண்டும் ஒத்து மயங்குதலும், ஒரு பொருண்மை ஒன்றற்கே உரியது ஆகாது பலவற்றொடு மயங்குதலும், ஒன்றனது ஒரு பொருளோடு ஒன்று மயங்குதலும், ஒன்றனது பல பொருளோடு ஒன்று மயங்குதலும், ஒன்றற்கு உரிமை பூண்டு எடுத்தோதின பொருள்வழி மயங்குதலும், ஓதாத பொருள்வழி மயங்கு தலும், ஒன்று தன் மரபாய் மயங்குதலும், இலக்கண வழக்கு உள்வழி மயங்குதலும், இலக்கணம் இல்வழி மயங்குதலும், மயக்க வகையான் மயங்குதலும், ஒன்றனொடு பொருள் முடிந்து தொடர்ந்து அடுக்கி மயங்குதலும், ஒன்றனொடு பொருள் முடியாது தொடர்ந்து அடுக்கி மயங்குதலும், தொகையுள் மயங்குதலும், தொகையில் மயங்குதலும், உருபு வேற்றுமையாய் மயங்குதலும், உருபும் உருபும் மயங்குதலும் - என்று இன்னோரன்ன வேற்றுமை மயக்கம் பல கூறலின் வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்து ஆயிற்று’’ என்று கூறியுள்ளார். இந்தச் செய்திகளை எல்லாம் இவர் அந்த அந்த நூற்பாக்களில் விளக்கியிருப்பதாகத் தெரியவில்லை. ஒரு சிலவற்றிற்கே நூற்பாக்களின் உரையில் விளக்கம் உள்ளது.

வினையெச்ச வாய்பாடுகளைக் குறிப்பிடும் நூற்பா

> ‘செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினைஎஞ்சு கிளவி’(சொல். 230)

என்பதாகும். இவ்வாய்பாடுகளின் முறைவைப்பை இவர் விளக்கியுள்ளார். ‘‘அவற்றுள் செய்து என் எச்சம் முதலாகச் செய்தென என்பது ஈறாக அந்நான்கும் இறந்தகாலத்த ஆகலான் முன்னே உடன்வைக்கப்பட்டன. அவற்றுள் செய்து என்பது பெருவழக்கிற்று ஆகலின் அவற்றுள்ளும் முன் வைக்கப்பட்டது. அவற்றுள் செய்தென என்பது அவற்றிற்கு

எல்லாம் சிறு வழக்கிற்று ஆதலானும், பிறவினை கோடலானும் பின்வைக்கப்பட்டது. இனிச்செய்யியர் என்பது முதலாகச் செயற்கு என்பது ஈறாக ஐந்தும் எதிர்காலத்த ஆகலானும், பிறவினையும் கோடல் உண்மையானும், பிறவினை கோடலும் உடைய செய்தெனஎன்னும் வினையின் பின்னர் உடன்வைக்கப்பட்டன. செயின் என்பது வாய்பாட்டு வேற்றுமையொடு பொருள் வேற்றுமையும் உடைமையின் அவற்றின் பின்னர் வைக்கப்பட்டது. செய என்பது எதிர் காலத்ததே அன்றிப் பிறகாலத்தும் சிறுபான்மை வருதலான் அதன்பின் வைக்கப்பட்டது. செயற்கு என்பது அவைபோல வழக்குப் பயிற்சி இன்மையின் எல்லாவற்றினும் பின் வைக்கப்பட்டது.

''இதன் முன் செய்து என்று ஓதிய வாய்பாடு, குற்றியலுகரத்தான் ஆராயப்பட்ட கடதற என்னும் நான்கு ஈறும், இகரஈறும், யகரஈறும் என்னும் அறுவகைப்பட்டது. அவ்வறுவகையும் செய்து எனப் பொருண்மையான் ஒன்றாக வைக்கப்பட்டன.

''அஃதேல் செய்யூ, செய்பு, செய்தென என்பனவும் இதனுள் அடங்காவோ எனின், அவ்வாறு அடங்குமேனும் இவற்றிற்கு வேறுபாடு உண்டு என்று அறிவித்தற்கு வேறு ஓதினார் என்பது. யாதோ வேற்றுமை எனின், செய்து என்றதன் ஈறு செய்தல் என்னும் தொழிற்கண்ணே செய்து எனத் தகர உகர ஈறாகவும், உண்டல் என்னும் தொழிற்கண்ணே உண்டு என டகர உகர ஈறாகவும், தின்றல் என்னும் தொழிற் கண்ணே தின்று என றகர உகர ஈறாயும், புகுதல் என்னும் தொழிற் கண்ணே புக்கு எனக் ககரஉகர ஈறாயும் ஓடல் என்னும் தொழிற்கண்ணே ஓடி என இகர ஈறாயும், தாவுதல் என்னும் தொழிற்கண்ணே தாய் என யகர ஈறாயும் ஒரு தொழிற்கண்ணே வேறுபட வந்தவாறு. ஒரு தொழிற்கண்ணே வேறுபட வாராமையுடையன செய்யூ, செய்பு, செய்தென என்பன'' என்றாற் போன்ற விளக்கங்கள் மாணாக்கருக்குப் பெரிதும் பயன்தருவன.

கல்லாடனார் தம்மிடம் தமிழ் பயின்ற மாணாக்கருக்குத் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தைப் பாடம் சொல்வதற்கு மூவர் உரையிலும் தமக்குச் சிறந்தனவாகத் தோன்றிய வற்றைக் கொண்டு அவற்றை விளக்கி எழுதிவைத்த உரையே 'கல்லாடனார் விருத்தியுரை' என்று அவருடைய மாணாக்கரால் பிரசித்தமாயிற்று என்றே கருதுகிறோம். பாண்டிய நாட்டவ ராகிய கல்லாடனாருக்குப் பாண்டிய நாட்டவரான தெய்வச் சிலையார் உரை கிட்டாமையின், தெய்வச்சிலையார் கல்லாடனாருக்குப் பிற்பட்டவர் போலும்.



# ஒருவர் உரை

தொல்காப்பியச் சொற்படலத்திற்கு உரை வரைந்த சான்றோர் ஐவருடைய பெயரும் நம்மால் அறியப் படுகின்றன. ஆனால் கிளவியாக்கம்தொட்டு வேற்றுமை மயங்கியல் இறுதி இரண்டு நூற்பாக்கள் நீங்கலான ஏனைய பகுதிகள் முடிய, 117 நூற்பாக்களுக்குச் சுருக்கமாக வரையப்பட்ட ஏட்டுச்சுவடியில், வரையப்பட்ட உரை யாவர் இயற்றிய உரை என்பதனை அறிய முடியாமையான் அதனைப் பழைய உரை என்று பெயரிட்டுப் பதிப்பித் துள்ளனர். பழைய உரை என்று பெயரிட்டால் இளம் பூரணருக்கும் முற்பட்ட சான்றவர் ஒருவர் இயற்றிய உரையோ என்று ஐயுறுதலும் கூடும் ஆதலின், பெயர் அறியப்படாத அவ்வுரையாசிரியரை ஒருவர் என்றே குறிப்பிடுதல் ஏற்புடையதாகும்.

'செப்பும் வினாவும்' (சொ. 13) என்ற நூற்பா உரையுள் ''நும் நாடு யாது? என்றக்கால் பாண்டிய நாடு என்பது'' என்று எடுத்துக்காட்டுதலான் இவர் பாண்டிய நாட்டவராகலாம். 'வண்ணம் வடிவே' (சொ. 79) என்ற ஐந்தாம் வேற்றுமையின் முடிக்குஞ் சொற்பட்டியலில் உள்ள நாற்றம் என்பதற்குப் 'பூதிநாற்றம், என்பு நாற்றம் முதலியன' என்று குறிப்பிடுவது கொண்டு இவர் சைவ சமயப் பற்றுடையவர் என்று கொள்ளலாம்.

'செப்பும் வினாவும்' (சொ. 13) என்ற நூற்பா உரையுள் ஐவகை வினாக்களுக்குக் கல்லாடர் ஆசிரிய வடிவில் அமைந்த நூற்பா ஒன்றினைக் காட்டவும், இவர் வெண்பா வடிவில் அமைந்த

'அறியான் வினாதல் அறிவொப்புக் காண்டலே
ஐயம் அறுத்தல் அவனறிவு தான்கண்டல்
மெய்யவற்குக் காட்டலோ டைந்து'

என்று நூற்பாவைக் காட்டுகிறார்.

ஆறாகுவதே (சொ. 80) என்னும் நூற்பா உரையுள் தற்கிழமை ஐந்து வகைப்படும் என்பதற்கு நூற்பா ஒன்றனை இவர் எடுத்துக் காட்டுகிறார்.

> 'ஒன்றுபல குழீஇயதும் வேறுபல குழீஇயதும்
> ஒன்றியற் கிழமையும் உறுப்பின் கிழமையும்
> மெய்திரிந் தாகிய தும்மென ஐம்பால்
> உரிமை யும்அ தன்தன் கிழமை' என்பது அது.

'இனைத்தென அறிந்த' (சொ. 33) என்னும் நூற்பா உரையுள் 'ஒண்குழை ஒன்றுஒல்கி எருத்தலைப்ப' என்ற அடி வந்துள்ள பாடல் முழுதையும் இவர் குறிப்பிட்டுள்ளார். 'தன்மை சுட்டலும்' (சொ. 25) என்ற நூற்பா உரையுள் ''அன்மையைத் துணியப்படாத பொருளிடத்து ஏற்றி உரைப்பவர் சொல்முறை அறியார். ஆகலான் அஃது உரையன்மை அறிக'' என்கிறார்.

மற்றவர் குறிப்பிடாத சில எடுத்துக்காட்டுக்கள் இவர் உரையில் உள்ளன. மாணாக்கருக்குப் பாடம் சொல்ல முன்கூட்டி ஆயத்தம் செய்துவைத்த குறிப்பேடு எனவே இவ்வுரையைக் கருதலாம். இவ்வுரை இளம்பூரணர் முதலிய மூவர் உரையில் தமக்கு விருப்பமானவற்றை எடுத்துத் தொகுத்துச் சுருக்கமாக வரையப்பட்ட உரையாகும்.



# தொல்காப்பியம் - சொல்லதிகாரம் உரைக்கொத்து

## கிளவியாக்கம்

## இளம்பூரணர் உரை

### சொல்லும் பொருளும்

1. *உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே;*
*அஃறிணை என்மனார் அவர்அல பிறவே;*
*ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.*

- என்பது சூத்திரம்

இவ்வதிகாரம், சொல்லிலக்கணம் உணர்த்தினமை காரணத்தான் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து.

சொல் என்பது, எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசையை. அதிகாரம் என்பது முறைமை.

மற்று, அச்சொல் எனை(த்து) வகையான் உணர்த்தினா னோவெனின், எட்டு வகைப்பட்ட இலக்கணத்தான் உணர்த்தினான் என்க.

அவையாவன : இரண்டு திணை வகுத்து, அத்திணைக் கண் ஐந்து பால் வகுத்து, எழுவகை வழு வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறு ஒட்டு வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டு இடத்தான் ஆராய்தல்.

இரண்டு திணை யென்பன : உயர்திணையும் அஃறிணையும்.

ஐந்து பாலென்பன : ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என இவை.

எழுவகை வழுவென்பன : திணைவழு, பால்வழு, இடவழு, காலவழு, செப்புவழு, வினாவழு, மரபுவழு என இவை.

எட்டு வேற்றுமையாவன : பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என இவை.

அறுவகை ஒட்டாவன : வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினையின்தொகை, பண்பின்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என இவை.

மூன்று இடமாவன : தன்மை, முன்னிலை, படர்க்கை என இவை.

இரண்டு இடமாவன : வழக்கிடம், செய்யுளிடம் என இவை.

இனி இவ்வதிகாரத்து முதற்கண் ஓத்து என்ன பெயர்த்தோ எனின், கிளவிகள் பொருள்மேல்ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து. என்னை? ஒருவன் மேலாமாறு இது, ஒருத்தி மேலாமாறு இது, பலர் மேலாமாறு இது, ஒன்றன் மேலாமாறு இது, பலவற்றின் மேலாமாறு இது,வழு ஆமாறு இது, வழுவமைதி ஆமாறு இது எனப் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் அப்பெயர்த்தாயிற்று.

இவ்வோத்தின் தலைக்கண் கிடந்த சூத்திரம் என் நுதலிற்றோ எனின், சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்** : உயர்திணை என்மனார் மக்கட் சுட்டு என்பது உயர்திணையென்று சொல்லுவர் ஆசிரியர், மக்களென்று சுட்டப்படும் பொருளை என்றவாறு. அஃறிணை என்மனார் அவர் அல பிறவே என்பது, அஃறிணை யென்று சொல்லுவர் ஆசிரியர், மக்கள் அல்லாத பிற பொருளை என்றவாறு. ஆயிரு திணையின் இசைக்கும் மன் சொல்லே என்பது அவ்விரு திணையையும் இசைக்கும் சொல் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் உயர்திணைப் பொருளும், அஃறிணைச் சொல்லும் அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின. உலகத்தில், மக்கள் என்ற பொருளை உயர்திணை யென்றது கூறுபாடு இன்மையின். அஃறிணை கூறுபாடு உடைமையின் 'அஃறிணை என்மனார் அவர் அல' என்னாது, 'பிற' என்றான், அவை உயிர் உடையனவும், உயிர் இல்லனவும் என இரண்டு கூற்ற என்பதற்கு. அவற்றது கூறுபாடெல்லாம் அறிந்துகொள்க.

மற்று, உயர் என்னுஞ் சொல் முன்னர்த் திணை என்னுஞ் சொல் வந்து இயைந்தவாறு யாதோவெனின்? ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்கால், தொகை நிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலுமென மூன்று வகையான் அடங்கும்.

அவற்றுள் தொகைநிலை வகையான் வந்தது 'யானைக்கோடு' என்பது; எண்ணுநிலை வகையான் வந்தது 'நிலனும் நீரும்' என்பது; பயனிலை வகையான் வந்தது 'சாத்தன் உண்டான்' என்பது. அவற்றுள் இஃது உயர்திணையென இறந்தகாலம் தொக்க வினைத்தொகை.

இனி, என்மனார் என்பது, என்ப என்னும் முற்றுச் சொல்லைக் 'குறைக்கும்வழிக் குறைத்தல்' (எச்ச. 7) என்பதனான் பகரங் குறைத்து, 'விரிக்கும் வழி விரித்தல்' (எச்ச. 7) என்பதனான் மன்னும் ஆரும் என்பன இரண்டிடைச் சொல் பெய்து விரித்தான்.

என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று, 'முற்றுச் சொல் எச்சப்பெயர் கொண்டு முடியும்' (இறை. கள. 1) என்பவாகலின்; இது செய்யுள் நோக்கித் தொகுத்துக் கூறினான் என்பது.

இனி, 'மக்கட் சுட்டே' என்றது, 'மக்களென்று வரைந்து சுட்டுதெற்குக் காரணமாகிய தன்மை' என்னும் ஒருவன். இனி, 'மக்கள் எனினும் சுட்டு எனினும் அவரையே சொல்லியவாறு' என்ப ஒருதிறத்தார். சுட்டு என்பது கருத்து;

அக்கருதற்பாடுடைமையின் சுட்டு எனவும்படும் மக்களென்பது.

இனி, 'சுட்டே' என்புழி ஏகாரம் ஈற்றசை ஏகாரம். 'அஃறிணை' என்பது, அல் திணை என்றவாறு. அல்லதும் அதுவே, திணையும் அதுவே. மேற்சொல்லப் பட்ட உயர்திணை அல்லாத திணை அஃறிணையெனக் கொள்க. ஈண்டும் என்மனார் என்பதற்கு மேல் சொல்லியவாறே சொல்லுக.

இனி, அவர் என்னுஞ் சொல்லின்முன்னர், அல்ல என்னுஞ் சொல் வந்து இயைந்தவாறு யாதோவெனின், அவரின் அல்ல என்பான் 'அவரல்ல' என்றான்; ஐந்தாம் வேற்றுமைப் பொருள் என்பது.

இனி, அல்ல பிற என்பது, அல்லவும் பிறவும் என உம்மைத்தொகை என்றலும் ஒன்று.

இனி, அவ்வுயர்திணை அல்லன எல்லாம் அவ்வுயர்திணை போல ஓரினத்த அல்ல; தத்தம் வகையான் வேறுபட்டன, உயிருடையனவும் உயிரில்லனவும் என்பது. ஏகாரம் ஈற்றசை ஏகாரம்.

'ஆயிரு திணையின் இசைக்கும்' என்புழி, ஆயிரு திணையினையும் என ஐகார வேற்றுமை விரித்துரைக்க. இன்:சாரியை. இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம். மன் என்பது இடைச்சொல். ஏகாரம் ஈற்றசை ஏகாரம். *(1)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**1. 'உயர்திணை என்மனார்'**

எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை-எழுத்து ஒலியொடு கூடி யாதேனும் ஒரு பொருளைத்

தெரிவிக்கும் ஒலி. சொல் பொருளைத் தெரிவிப்பதற்குக் கருவி என்பதே இளம்பூரணர் கொள்கை. ஆடூஉ அறிசொல் - ஆடூஉவினை அறிவார்க்குக் கருவியாம் சொல்; மகடூஉ அறிசொல் - மகடூஉவினை அறிவார்க்குக் கருவியாம் சொல் என்று 5, 6 ஆம் நூற்பாக்கள் உரையில் கூறியதனான் அறியலாம்.

அதிகாரம் என்பது முறைமை. அதிகாரத்தான் வழிக் கிளத்தல் *(38)* வினைக்கு ஒருங்கு இயலும்வழிக் கொள்க-மேல்நின்ற அதிகாரத்தான் உயர்திணைக்கண்ணும் அஃறிணைக் கண்ணும் பெயரினானும் தொழிலினானும் பிரிந்து வருபவை *(50)* - என்பனவற்றில் அதிகாரம் என்பது ஓரிடத்து நின்ற சொற்றொடர் மற்ற இடத்தும் சென்று இயைதலைக் குறிப்பிடுகிறது.

மேல் தொகையதிகாரம் கூறினார் *(416)* என்ற இடத்து, அதிகாரம் என்பது ஒரு பொருள் பற்றி வரும் பல நூற்பாக்களின் தொகுதியை உணர்த்துகின்றது.

இவற்றான் ஓரிடத்து நின்ற சொல் பல நூற்பாக்களொடு சென்று இயைதலும், ஒன்றன் பொருள் பற்றி வரும் பல நூற்பாக்களின் தொகுதியுமே முறைமை என்ற சொல்லின் விளக்கமாக இளம்பூரணர் கருதியமை புலப்படும். தொல்காப்பியனாரை ஆசிரியன் என ஆண்பால் ஒருமையான் சுட்டுதல் இவருக்கும் பேராசிரியருக்கும் கல்லாடனாருக்கும் இயல்பு.

ஆறு ஒட்டு : இரண்டு சொற்கள் ஒட்டி ஒருசொல் நீர்மைப்படுதலின் தொகைகளை ஒட்டு என்கிறார், 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' *(414)* ஆகலான்.

எட்டு வகைப்பட்ட பாகுபாடு: இளம்பூரணர் குறிப்பிடும் எட்டு வகைப்பட்ட சொல்லிலக்கணப் பாகுபாடுகள் நேமிநாதத்திலும் வீரசோழிய உரையிலும் கூறப்பட்டுள்ளன.

***ஏற்ற திணையிரண்டும் பால்ஐந்தும் ஏழ்வழுவும்***
***வேற்றுமை எட்டும் தொகைஆறும் - மாற்றரிய***
***மூன்றிடமும் காலங்கள் மூன்றும் இரண்டிடத்தான்***
***தோன்ற உரைப்பதாம் சொல்.*** (நேமி. சொ. 1)

வீரசோழியம் கிரியாபத படலத்தின் ஈற்றில் இவற்றான் சொல் ஆராயப்படும் என்னும் தலைப்பில்

***வேற்றுமை எட்டும் திணைஇரண்டும் பால்ஐந்தும்***
***மாற்றுதற் கொத்த வழுஏழும் - ஆறெட்டும்***
***ஏற்றமுக் காலம் இடம்முன் றிரண்டிடத்தால்***
***தோற்ற உரைப்பதாம் சொல்***

இவ்வண்ணம் எட்டு வகைப்படுத்துச் சொல் ஆராய்ந்தார் தொல்காப்பியனார் என்று கூறப்பட்டுள்ளது.

கிளவிகள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம்: இதனை நேமிநாத உரையாசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் முதலியோர் உடன்பட்டுத் தம் உரையுள் குறித்துள்ளனர். பேராசிரியர் மரபியலில் 'மேற்கிளந்தெடுத்த' (பொ. 655) என்ற நூற்பா உரையுள் 'வழு அமைக்கின்ற கிளவியாக்கத்து முதற்கண்ணே' என்று குறிப்பிடுகிறார். கிளவியாக்கம் வழுவமைக்க வந்தது என்ற கருத்தைச் சேனாவரையர் சிறப்பாக முதலில் எடுத்துக்கூறிப் பிறகு இளம்பூரணர் கருத்தினையும் ஏற்றுக்கொள்கிறார்.

கூறுபாடு இன்மையின் : மக்கள் என்ற இனத்தவரின் உடல் அமைப்பில் பொதுவாக வேறுபாடு இல்லை ஆதலின்.

கூறுபாடு உடைமையின் : அஃறிணை எனப்படும், மக்கள் அல்லாத உயிரினங்கள் பலவாகப் பாகுபட்டு உலகில் கோடிக்கணக்காக இயங்குதலான்.

தொகைநிலை, பயனிலை, எண்ணுநிலை என்ற தொடர்மொழி இலக்கணமும், என்மனார் என்ற சொற்பகுப்பும் இறையனார் களவியல் முதல் நூற்பா உரையுள் சொல்லப்பட்ட செய்திகளே.

'முற்றுச்சொல் எச்சப்பெயர் கொண்டு முடியும்' என்பது இறையனார் களவியல் முதல் நூற்பாவின் உரையில் காணப்படும் செய்தி. 'அவைதாம், தத்தம் கிளவி அடுக்குநவரினும் எத்திறத்தானும் பெயர்முடிபினவே' (சொ. 423) என்பது தொல்காப்பியம்.

உயர்திணை இறந்தகால வினைத்தொகை என்பது நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதர் என்பவர்களுக்கு உடன்பாடாகும். சேனாவரையரும் சங்கர நமச்சிவாயரும் பண்புத்தொகை என்று விளக்கிக் கூறுவர்.

| | | |
|---|---|---|
| உயர்திணை : | உயர்ந்த சாதி | - சேனாவரையர் |
| | உயர்ந்த ஒழுக்கம் | - நச்சினார்க்கினியர் |
| | உயர்ந்த பொருள் | - தெய்வச்சிலையார் |
| | உயர்ந்த பொருள் | - மயிலைநாதர் |
| | உயர்வாகிய குலம் | - சங்கர நமச்சிவாயர் |

திணை என்பது நிலன், குலன், ஒழுக்கம் முதலிய பலபொருள் தருவது - சங்கரநமச்சிவாயர்.

'பால்மயக் குற்ற ஐயக் கிளவி
தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்' (சொ. 23)

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் திணைவயின் என்பதனைப் 'பொருள்வயின்' என்றே குறிப்பிடுதலின், பொருளைத் திணை என்பது தொல்காப்பியர் கருத்துக்கு ஏற்றது.

இசைக்கும் சொல் : பெயரெச்சத்தொடர் என்பது இளம்பூரணர் கருத்து. பேராசிரியர் 'விட்டகல்வின்றி' (பொ. 657) என்ற நூற்பா விளக்கத்தில் 'அவ்விரு திணைமேலும் இசைக்கும் சொல்லினை' என்று குறிப்பிடுவதால் அவரும் இதனைப் பெயரெச்சத் தொடராகவே கொண்டுள்ளார். நச்சினார்க்கினியர் 'அவ்விரு திணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்களாம் என்றவாறு' என்று முடிக்காமல், வாளா சொற்கள் என்றே விடுத்தமையின் அவருக்கும் இது பெயரெச்சத்தொடர் ஆகலாம். 'இருதிணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்களை உயர்திணைச் சொற்கள் எனவும் அஃறிணைச்சொற்கள் எனவும் கூறுவார்கள்' என்பதே அவர்கள் கொண்ட கருத்தாகும். இதனான் சொல்லுக்கே சிறப்புக் கொடுத்தமையும் பின்னர் எடுத்து வகைப்படுத்துவதற்கு ஏற்புடைமையும் புலப்படும். சேனாவரையருக்கு இசைக்கும் என்பது வினைமுற்று. தெய்வச்சிலையாருக்கு இசைக்குமன என்பது தொழிற்பெயர்.

'உயர்திணை என்று சொல்லுப ஆசிரியர், மக்கட்சுட்டின்கண்; அஃறிணை என்று சொல்லுப ஆசிரியர் அவரல பிறவற்றுக்கண், அவ்விரு திணைப்பொருள் மேலும் இசைக்கும் சொல்லினை' என்பர் பேராசிரியர். (பொ. 657)

## சேனாவரையருரை

தன்தோள் நான்கின் ஒன்று கைம் மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன்று அளியவென் நெஞ்சே.

ஆதியில் தமிழ்நூல் அகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.

தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவளைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே.

சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே.

# 1

## கிளவியாக்கம்

(எழுத்துக்கள் பொருள்தரும் முறையில் சொற்களாகும் வகை உணர்த்துவது)

### 1. திணை

### உயர்திணையும் அஃறிணையும்

1. ***உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே***
***அ:றிணை என்மனார் அவர்அல பிறவே;***
***ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே.***

நிறுத்த முறையானே சொல்லுணர்த்திய எடுத்துக் கொண்டார்; அதனான் இவ்வதிகாரம் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று.

சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது. உரையாசிரியரும் எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து என்பார், 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின், ஒருபுடையொற்றுமையே கூறினார். தன்மையொடு புணர்ந்து என்னாக்கால், ஓரெழுத் தொருமொழிக்கு எழுத்தொடு புணர்தல் இன்மையின் சொல்லாதல் எய்தாதென்க. பொருள் குறித்து வாராமையின் அசைநிலை சொல்லாகா எனின், 'ஆவயின் ஆறும் முன்னிலை யசைச்சொல்' (சொல். 274) என்றும், 'வியங்கோளசைச்சொல்' (சொல். 273) என்றும் ஓதுதலான், அவையும் இடம் முதலாகிய பொருள் குறித்து வந்தன என்க. 'யா கா பிற பிறக்கு' (சொல். 279) என்னுந் தொடக்கத்தனவோ எனின், அவையும் மூன்றிடத்திற்கும் உரியவாய்க் கட்டுரைச்சுவைபட வருதலின் பொருள்

குறித்தனவேயாம். இக்கருத்தே பற்றியன்றே ஆசிரியர் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (சொல். 155) என்று ஓதுவாராயிற்றென்க.

சொல்தான் இரண்டு வகைப்படும், தனிமொழியும் தொடர்மொழியும் என. அவற்றுள் தனிமொழியாவது, சமய ஆற்றலான் பொருள் விளக்குவது. தொடர்மொழியாவது, அவாய்நிலையானும் தகுதியானும் அண்மைநிலையானும் இயைந்து பொருள் விளக்கும் தனிமொழி ஈட்டம்.

பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும், இடைச் சொல்லும், உரிச்சொல்லுமெனத் தனிமொழி நான்கு வகைப்படும். 'மரம்' என்பது பெயர்ச்சொல். 'உண்டான்' என்பது வினைச்சொல். 'மற்று' என்பது இடைச்சொல். நனி என்பது உரிச்சொல்.

இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் எனத் தொடர்மொழி இரண்டுவகைப்படும். சாத்தன் வந்தான் என்பது இருமொழித்தொடர். 'அறம் வேண்டி அரசன் உலகம் புரந்தான்' என்பது பன்மொழித் தொடர்.

அதிகாரம் என்னும் சொற்குப் பொருள் பல உளவேனும், ஈண்டு அதிகாரம் என்றது ஒரு பொருள் நுதலி வரும் பல ஓத்தினது தொகுதியை என்க. வடநூலாரும் ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களொடு சென்றியைதலையும், ஒன்றனது இலக்கணம் பற்றி வரும் பல சூத்திரத் தொகுதியையும் அதிகாரம் என்ப. சொல்லதிகாரம், சொல்லையுணர்த்திய அதிகாரம் என விரியும். அச்சொல்லை யாங்கனம் உணர்த்தினாரோ எனின், தம்மையே எடுத்தோதியும், இலக்கணங் கூறியும் உணர்த்தினார் என்பது.

வழுக்களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையான், இவ்வோத்துக் 'கிளவியாக்க' மாயிற்று. ஆக்கம் - அமைத்துக் கோடல்; நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசி அமைத்தாரை அரிசியாக்கினார் என்ப ஆகலின். சொற்கள் பொருள்கள்மேல்

ஆமாறு உணர்த்தினமையான், கிளவியாக்கமாயிற்று எனினும் அமையும். பொதுவகையான் 'கிளவி' என்றமையான், தனிமொழியும் தொடர்மொழியும் கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி என்னுந்தொடக்கத்தக்கன வெல்லாம் ஒரு பொருட்கிளவி.

**இதன் பொருள் :** மக்களென்று கருதப்படும் பொருளை ஆசிரியர் உயர்திணையென்று சொல்லுவர்; மக்களென்று கருதப்படாத பிற பொருளை அஃறிணையென்று சொல்லுவர்; அவ்விரு திணைமேலும் சொற்கள் நிகழும் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எனச் சொல் இரண்டு என்றவாறாம். மக்கட்சாதி சிறந்தமையான், 'உயர்திணை' என்றார்.

என்மனார் என்பது செய்யுள் முடிபு எய்தி நின்றதோர் ஆர் ஈற்று எதிர்கால முற்றுச் சொல். என்றிசினோர், கண்டிசினோர் என்பன முதலாயின அவ்வாறு வந்த இறந்தகால முற்றுச்சொல். என்ப என்னும் முற்றுச் சொல்லினது பகரம் குறைத்து மன்னும் ஆரும் என இரண்டு இடைச்சொல் பெய்து விரித்தார் என்று ***உரையாசிரியர்*** கூறினாரால் எனின், 'என்மனார்' என்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, இந்நூலுள்ளுஞ் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், 'இசைநிறை' என்பது மறுத்துப் பொருள்கூறுகின்றார், பின்னும் இசைநிறை என்றல் மேற்கோள் மலைவாகலானும், அவர்க்கது கருத்தன்றென்க. மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலான் செய்யுள் முடிபென்பது கூறாராயினார்.

என்மனார் ஆசிரியர் எனவே, உயர்திணை அஃறிணை என்பன தொல்லாசிரியர் குறியாம். ஆசிரியர் என்னும் பெயர் வெளிப்படாது நின்றது.

மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும், அது 'மக்கட்சுட்டு' எனப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஈண்டு மக்கள் என்றது, மக்கள் என்னும் உணர்வை. எனவே, மக்களேயாயினும், மக்களென்று சுட்டாது பொருளென்று சுட்டிவழி, உயர்திணை எனப்படாது என்பதாம்.

இனி 'அவரல' என்னாது 'பிற' என்றேவிடின், யாதல்லாத பிற என்று அவாய் நிற்குமாகலின், 'அவரல' என்றார். 'மக்கட்சுட்டே' என்று மேல் நின்றமையின் மக்களல்லாத பிற என்று உணரலாம் எனின், ஆற்றல் முதலாயினவற்றாற் கொள்வது சொல் இல்வழி என மறுக்க. இனி 'அவரல' என்றே ஒழியின், அவற்றது பகுதியெல்லாம் எஞ்சாமல் தழுவாமையின், எஞ்சாமல் தழுவுதற்கு 'அவரல பிற' என்றார்.

செய்யுள் ஆகலான் ஆயிருதிணை எனச் சுட்டு நீண்டது. வரையறை யின்மையின் ஈண்டு யகரம் உடம்படுமெய் ஆயிற்று.

சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாகலின், ஆயிருதிணையின்கண் என ஏழாவது விரிக்க. இன்சாரியை வேற்றுமையுருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று உரையாசிரியர் இரண்டாவது விரித்தாராலெனின், 'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும், சாரியை உள்வழித் தன் உருபு நிலையலும்' (எழுத். 157) என்று இரண்டாவதற்குத் திரிபு ஓதினமையானும் 'செலவினும் வரவினும் தரவினுங் கொடையினும்' (சொல். 128) என்புழியும் பிறாண்டும் எல்லாம் ஏழாவது விரித்தற் கேற்பப் பொருளுரைத்தமை யானும், அவ்வுரை போலியுரை யென்க. ஆயிரு திணையினும் என்னும் உம்மை விகார வகையான் தொக்குநின்றது.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். மன் என்னும் இடைச்சொல் மன என ஈறு திரிந்து நின்றது. மன் என்று பாடம் ஓதுவாருமுளர். ஏகாரம் ஈற்றசை.

சொல் வரையறுத்தலே இச்சூத்திரத்திற்குக் கருத்தாயின், 'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்' என்றாற்போல 'உயர்திணைச் சொல்' 'அஃறிணைச் சொல்' என அமையும்; 'உயர்திணை மக்கள் அஃறிணை பிற' எனல் வேண்டா எனின், உயர்திணை அஃறிணை என்பன தொல்லாசிரியர் குறியாகலான், ஆடூஉ மகடூஉப் போல வழக்கொடு படுத்துப் பொருள் உணரலாகாமையின், 'உயர்திணை மக்கள் அஃறிணை பிற' எனல் வேண்டும் என்பது. இவ்வாறு ஒரு பொருள் நுதலிற்றாக உரையாக்கால், சூத்திரம் ஒன்றாமாறில்லை என்க. *(1)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

***'தன்தோள்'***- இரங்கத்தக்க என் நெஞ்சம், யானைகள் உலவும் இருண்ட பெருங்காடாக இருப்பினும், நான்கு கைகளுக்கு மேல் துதிக்கையை மிகுதியாகக் கொண்டுடைய விநாயகப்பெருமானாகிய களிறு, என் நெஞ்சகத்தில் உலவுவதலால் ஞானமாகிய ஒளி மிகவும் கொண்டு சிறந்து விளங்குகிறது.

***'ஆதியில் தமிழ் நூல்'*** - உண்மை அறிவாகிய சிறப்பினை மிகவும் பெறுதற்காக, பண்டொரு காலத்தில் தமிழ் இலக்கணத்தை அகத்தியனாருக்கு அறிவுறுத்திய அம்மையப்பனை வணங்கிப் போற்றுகின்றேன்.

***'தவளத்தாமரை'*** - மேம்பட்ட தமிழ்மொழி பற்றிய அறிவினைப் பெறல் வேண்டி வெண்டாமரை ஆகிய மகரந்தத்துகள் நிறைந்த கோயிலிலுள்ள நாமகளைப் போற்றுகின்றேன்.

**'சந்தனப் பொதிய'** - சந்தன மரங்கள் நிறைந்த பொதியம் என்ற பெயரிய மலையில் தங்கியிருக்கும், செந்தமிழுக்கு மேம்பட்ட ஆசிரியராகிய அகத்தியனா ருடைய திருவடிகளைப் புகழொடு விளங்குதலைக் கருதித் தலைமேற்கொள்கின்றேன்.

[ஏனைய மூன்று பாடல்களும் தன்மைப் பன்மை வினைமுற்றை முடிக்குஞ் சொல்லாகக் கொண்டிருப்பினும், முதற்பாடலை நோக்கித் தன்மை ஒருமை வினைமுற்றாக உரை வரையப்பட்டுள்ளது.]

**1. உயர்திணை . . . சொல்லே.**

நிறுத்தமுறை - தொல்காப்பியத்தை முற்ற நோக்கி அந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் வரைந்த பனம்பாரனார், தொல்காப்பியனார் உள்ளக் கிடக்கையை உளங்கொண்டு 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என்று குறிப்பிட்டமையின், முறையே எழுத்து, சொல், பொருள் என்பனவற்றை விளக்குதல் தொல்காப்பியனார் கருத்து என்பதனை உட்கொண்டு, பாயிரத்துள் 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என்று நிறுத்தமுறை என்பது பேராசிரியர் (செய்-1) நச்சினார்க்கினியர் (சொ-1) கல்லாடனார் (சொ-1) என்பவர்கள் கருத்தாகும். அதுவே சேனாவரையருக்கும் ஒக்கும். சேனாவரையர் அதனை வெளிப்படையாகக் கூறாமையின் 'தொல்காப்பியனார் தம் உள்ளத்தே நிறுத்தமுறை' எனவும், 'தொல்லாசிரியர் நிறுத்தமுறை' எனவும் பொருள் கொள்வாரும் உளர்.

உணர்த்திய - செய்யிய என்னும் வினையெச்சம்; உணர்த்தும் பொருட்டு - என்பது பொருள்.

சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையான் ஒற்றுமை உடையது : நெடில் 2 மாத்திரை; குறில் 1 மாத்திரை; ஒற்று ½ மாத்திரை என்றாற்போலத் தனி எழுத்துக்களுக்கு மாத்திரை கணக்கிட்டு உரைக்கப்பட்டுள்ளது. சொல்லை

ஒலிக்கும்போது அதன்கண் எழுத்துக்களின் ஒலிகள் திரிபின்றிக் காணப்படுகின்றன. ஆனால் நெடில் இருமாத்திரை முதலிய மாத்திரைக்கணக்குப் பின்பற்றப் படுவதில்லை. இதனை உட்கொண்டே எழுத்தொடு சிறுபான்மை ஒற்றுமை உடையது என்று கூறப்பட்டுள்ளது.

உரையாசிரியர் 'எழுத்தொடு புணர்ந்து' என்று கூறிய சொற்றொடருக்கு எழுத்தொடு எழுத்து இணைந்து என்று பொருள் செய்தால், ஓரெழுத்து ஒருமொழி ஒரே எழுத்தாலாகியது ஆதலின், அதற்கு எழுத்தோடு எழுத்து இணைதல் இன்மையின், 'எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து' என்றே அச்சொற்றொடருக்குப் பொருள் செய்யவேண்டும்.

மாணாக்கருக்கு ஆராய்ச்சி அறிவு மிகுதலுக்காக அவர்கள் தம் அறிவைச் செலுத்த வாய்ப்பு அளித்தல் உரையாசிரியருக்கும் சேனாவரையருக்கும் இயல்பு. நச்சினார்க்கினியர் மாணாக்கருக்கு உய்த்துணர்வு இன்று என்பதைத் தம் அனுபவத்தால் அறிந்தவர் ஆதலின் எதனையும் விளக்கியே கூறுவார் (சொ. 203). சேனாவரையர் சொல் பொருள் குறித்து வருவது என்றார். சொல் பொருள் உணர்வதற்குக் கருவி என்றார் நச்சினார்க்கினியர். இதுவே இளம்பூரணர், நன்னூல் உரையாசிரியர்களாகிய மயிலைநாதர், சங்கர நமச்சிவாயர் முதலியவர்கள் கருத்தும் ஆகும்.

சொல்லைக் காரணமாகவும், கொள்வோனாகவும், இடமாகவும், கருத்தாவாகவும் தொல்காப்பியனார் கூறுமாற்றை விளக்கிப் பிரயோக விவேகம் 18ஆம் காரிகை உரையில் அவை யாவும் உபசார வழக்கு என்றும், சொல்லும் பொருளும் அபேதம் என்பதே தொல்காப்பியனார் கருத்து என்றும் எடுத்துக்காட்டுக்களொடு நிறுவுகிறது. சேனாவரையர் சொல்லாவது எழுத்தொடு புணர்ந்து பொருள் குறித்து வருவது என்றும்,

'ஆயிருதிணையின் இசைக்குமன சொல்லே' (சொல்-1) என்னும் சூத்திரத்தினும்,

'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்' என்னும் சூத்திரத்தினும் முறையே,

'செலவினும் வரவினும்' (சொ - 28) என வருதலானும், 'ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி' (சொ - 12) என ஒற்றுமைப்பட்டு வருதலானும், சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமேயாம் என்றும், இரண்டும் ஒன்றேயாம் என்றும், மொழிப் பொருள் காரணம் விழிப்பத்தோன்றா' (சொ - 394) என்னும் சூத்திரத்தில் 'பொருளொடு சொற்கு இயைபு இயற்கையாகலான்' என்றும் கூறுவர். ஆறாவதன் சூத்திரத்துத் 'திரிந்துவேறு படூஉம்' (சொ-80) என்பதற்கு உதாரணம் சொல்லது பொருள் என்பதனைக் காட்டி 'முழுவதும் திரிந்தது' என்று கூறுவதால் சொல் தன்னைச் சுட்டாது பொருளைச் சுட்டுதலின், சொல் திரிந்து வேறுபட்டுப் பொருளாகும் என்பதனையும் குறிப்பிட்டுள்ளார். சேனாவரையர் சொல்லின் இலக்கணத்தை வடமொழிச் சந்த நூலார் உரைத்தாங்கு உரைத்துள்ளார். இனி, நச்சினார்க்கினியர் சத்த நூலாரொடு மாறுபடச் சொல்லைப் பொருள் உணர்தற்குக் கருவி என்பர். தார்க்கிகர் சுவரூப சம்பந்தம் (யாதானும் ஒரு தொடர்பு ) என்பர். (பி. வி. காரிகை எண். 18)

அசைநிலைகளுக்குத் தனியே பொருள் புலனாகாது எனினும், அவையும் தன்மை முன்னிலை படர்க்கை என்றே மூவிடங்களையும் சார்ந்து செய்யுட்கண் ஓசை இன்பம் தோன்ற வருதலின், ஒருவகையில் பொருளுடையனவே.

சமய ஆற்றல் - சொல் தோன்றிய காலத்திலேயே இச்சொல் இப்பொருளை உணர்த்துவதாகுக என்ற இறைவன் திருவுள்ளப்படி பொருள் உணர்த்திவரும் ஆற்றல்.

**அவாய்நிலை, தகுதி, அண்மைநிலை**

"ஆக்கிய சொற்கள் தகுதி அவாய்நிலை அண்மை நிலை நோக்கிய மூன்றும் பெறச்சேர்வது தொகை; நுண்புலவோர் வாக்கியமும் அது (பி.வி.கா. 19)

'தகுதி அவாய்நிலை அண்மைநிலை மூன்றும்
புணரப் புணர்வது புணர்ப்பு எனப் புகல்வர்.'
(இல. கொ.சூ. 105)

'வாக்கியங்களும் தகுதி முதலிய மூன்றும் தோன்ற வரும். தூரான்வயம் முதலிய நான்கும் அண்மைநிலையோடு அல்லது வாரா. . . . இக்கருத்தே பற்றித் தொல்காப்பியரும்

'நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியும்' (எ. 107) என்றார்" (பி. வி. 19 உரை) என்பதனை நோக்குக.

'தகுதி - சோற்றை உண்டான் என்புழிச் சோறு என்னும் பதம் உருபு வருமொழிகளொடு புணர்தற்கு முன்பே, தானே தனித்து ஓர் ஆதாரம் இன்றியே நிற்பினும், இறிஞி, மிறிஞி போலப் பொருள் அற்ற சொல் அன்றாய், பொருளும் வினைமுதலும் கருவியும் முதலிய பொருள் அன்றாய், இன்னும் பல குணங்களொடு கூடிநிற்றல். அஃதாவது சோறு என்பது உண்ணப்படுவது என்னும் பொருளதாய்த் தன் பொருள் முடிதற்கு ஏற்ற வினைக்குச் செயப்படுபொருளாய் வருதல் முதலிய தகுதியோடு இருக்கும் என்பது.

அவாய்நிலை - சோறு என்னும் அத் தனிப்பதம், தனக்கு உரிய ஐ உருபையே விரும்புதல் அன்றி, ஒரு வினைச்சொல்லினையும் விரும்புதல் முதலிய அவாவொடுகூடி நிற்றல். அஃதாவது ஒரு சொல் தன்பொருள் நிரம்புதற்கு வேறு சொல்லையோ சொற்களையோ அவாவி நிற்பதாம்.

அண்மைநிலையாவது - 'சோறு கடல் முழங்கிற்று உண்டான்' என இடையில் பிற சொற்கள் வந்து பொருந்தற்கு இடம் கொடாமல் தம்முள் அணுகிச் 'சோற்றை உண்டான்' என நிற்றல்.

இவ் அண்மைநிலை இலக்கணம் உணராதார், இடையில் பொருத்தில் அதனைச் சான்றோர் 'ஒன்றனையும் குற்றம் கூறேம்' என்னும் நியமத்தால், 'யாப்பு விதி நோக்கி வந்தது' என்றும், 'மொழிமாற்று முதலிய பொருள்கோள் இலக்கணம் நோக்கி வந்தது' என்றும், இன்னும் யாதானும் ஒரு பெயரை இட்டுச் சோற்றை உண்டான், கடல் முழங்கிற்று எனப் பிரித்து வேறு தொடராக்குவர்..... இவ் அண்மை நிலைவிதியானது தகுதி அவாய்நிலையைக் காட்டிலும் மிகவும் விரியும் என்க. தொல்காப்பியர் இம்மூன்றனையும் உள்ளடக்கி 'நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியும்' (எ. 107) என்றார். (இ. கொ. 105 உரை)

காரி ரத்தினக் கவிராயர் தாம் திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்கமாக இயற்றிய 'நுண்பொருள்மாலை'யில்

'கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை' (குறள். 15)

'எல்லாம் மழை - இவை எல்லாம் வல்லது மழை' என்று பரிமேலழகர் கூறிய உரையை உட்கொண்டு, "குறட்பா 'வல்லது' என்னும் சொல் பெறாமையின், வல்லது என்பது அவாய் நிலையான் வந்தது என்றார். அவாவி நிற்பது இச்செய்யுட்கண் நின்ற 'எல்லாம்' என்னும் சொல். அவாவப்படுவது பரிமேலழகர் 'வல்லது' என வருவித்து எழுதியது. அஃது 'உடைத்தம் வலியறியார்' (குறள். 473) 'நகைவகையர் ஆகிய நட்பின்' (குறள். 817) என்பவற்றுள் விரிக்கப்படுதல் காண்க. அவாய்நிலை, தகுதி, அண்மைநிலை என்ற மூன்றானும் ஒரு சொல்லோடு ஒரு சொல் புணர்ந்து நிற்கும். ..... முயற்கோடு, ஆமை

மயிர்க்கம்பலம், துன்னூசிக்குடர் என்பன அவாய்நிலை, தகுதிகளை ஒழித்துப் புணர்ந்தன. 'வல்லம் எறிந்த நல்லிளங்கோசர் தந்தை மல்லல் யானைப் பெருவழுதி' : இஃது அண்மைநிலை ஒழித்துச் சேய்மை நிலையாய்ப் புணர்ந்தது. பொருள்கோள்வகையும் மாட்டுறுப்பும் அது. இனி வனைந்தான் என்பது கருவியையும், செயப்படுபொருளையும், கருத்தாவையும், இன்னதற்கு இது பயனாக என்பனவற்றையும் அவாய் நின்றது என்றார், 'அதுச் சொல் வேற்றுமை' என்னும் சூத்திரத்துள் நச்சினார்க்கினியர் முதலாயினார் என்க. ஆதலான் இவ்வுரையாசிரியர் தோன்றா எழுவாயும், வினைமுற்றும், வினையெச்சமும், கருவியும், செயப்படுபொருளும் முதலாகிய பல சொற்களையும் வருவிக்குமிடத்தும் அவாய்நிலையான் வந்தது என்பர். 'இது சொல்லெச்சம்; இது தோன்றா எழுவாய்' என்பனவும் அவாய் நிலைக்குப் பரியாயம் என்க" என்று குறிப்பிடுகிறார்.

இவற்றான் அவாய்நிலை, தகுதி, அண்மைநிலை என்பனவற்றின் இலக்கணத்தை உணரலாம்.

அவாய்நிலை - ஒரு சொல் தன் பொருள் நிரம்புவதற்குப் பிறிதொரு சொல்லையோ பிற சொற்களையோ எதிர்பார்த்து நிற்றல்.

தகுதி - தலையே! நீ வணங்காய்; கண்காள்! காண்மின்களோ; வாயே! வாழ்த்து கண்டாய் என்றாற்போலப் பொருள் பொருத்தமுடைய சொற்களோடு இணைந்து பொருள் நிரம்புதல்.

அண்மைநிலை - முடிக்கப்படும் சொல்லும் முடிக்கும் சொல்லும், இடையே பொருளை மாற்றுதற்குரிய பிற சொற்கள் வாராது, இணைந்து வருதல்.

அதிகாரம் - 1. ஒன்றனது இலக்கணம் பற்றி வரும் பல சூத்திரத் தொகுதி; சொல் இலக்கணமே பற்றி வரும் 463 சூத்திரங்களின் தொகுதி சொல்லதிகாரம் என்று கூறப்படுவது போல்வன.

2. ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களொடு சென்று இயைதல். இச்சொல்லதிகாரத்து 23ஆம் நூற்பாவில் உள்ள 'ஐயக்கிளவி' என்ற சொற்றொடர் 24ஆம் நூற்பாவிலும், 35ஆம் நூற்பாவில் உள்ள 'அல்லது இல்' என்ற சொற்றொடர் 36, 37ஆம் நூற்பாவிலும், 49ஆம் நூற்பாவிலுள்ள 'உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்' என்ற சொற்றொடர் 50ஆம் நூற்பாவிலும் இணைந்து பொருள் தரும் செய்தி இவ்விரண்டாம் வகைக்கு எடுத்துக்காட்டு.

அதிகாரம் என்பதற்கு 'முறைமை' என்று பொருள்கூறும் உரையாளர்களும் ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களொடு சென்று இயைதலை 'அதிகாரம்' என்ற சொல்லாலேயே குறிப்பிடுதலை அவர் உரைகளில் காண்க.

சொற்களை எடுத்து ஓதி விளக்குதல் - 'ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி' (சொ. 71) போல்வன.

சொற்களை இலக்கணங்கூறி விளக்குதல் - 'ஆடூஉ அறிசொல்' (சொ. 2) போல்வன.

நொய் - பல கூறுகளாக உடைந்த அரிசி. நுறுங்கு - குருணை. (உமி முதலிய கலந்தது.)

வழுக்களைந்து சொற்களை ஆக்கிக்கோடல் இவ்வியல் 11ஆம் நூற்பா முதல் இயல் முடிய.

சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு - இவ்வியல் முதல் 10 நூற்பாக்கள்.

இந்நூற்பா சொல் இருவகைப்படும் என்பதனை விளக்க எழுந்ததாம்.

திணை - சாதி. உயர்திணை - உயர்ந்ததாகிய சாதி. இதனை விரிப்புழிக் காலம் காட்டுதலின் இது வினைத் தொகை. உயர்வாகிய சாதி என்று விரிப்பது, வாமனன் சினேந்திரன் மதம் பற்றிப் பண்புத்தொகைக்கு இலக்கணம் கூறிய நன்னூலுக்கு ஏற்புடையதே அன்றி, பண்புத்தொகை 'உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும், ஐம்பால் அறியும் பண்பு தொகு மொழி' (எ. 482) என்று குறிப்பிடும் தொல்காப்பிய நெறிக்கு ஏலாது.

என்மனார் என்பது செய்யுளுக்காக அமைக்கப்பட்ட ஆர் ஈற்று எதிர்கால முற்றுச்சொல் என்று சேனாவரையர் குறிப்பிட்டாரே அன்றி அதனைப் பகுதி விகுதி இடைநிலை முதலவாகப் பிரித்து ஏதும் விளக்கம் கூறவில்லை.

என்மனார் என்பது செய்யுள் அமைப்புக்கு இழுக்கு வரும் இடத்துச் செய்யுள் அமைப்பு வழுவின்றி அமைவதற்காகத் திரித்துக் கொள்ளப்பட்ட சொல் அன்று. இலக்கண நூல்களுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் மிகுதியாக வழங்கப்படும் சொல் என்பது சேனாவரையர் கருத்தாகும். அச்சொல் தொல்காப்பியத்திலேயே அறுபது இடங்களுக்கு மேலாக வழங்கப்பட்டுள்ளது. தொல் காப்பியத்துக்கு முற்பட்டனவாகச் சான்றோர் குறிப்பிடும் நூல்களில் அச்சொல் காணப்பட்டிலது. தொல் காப்பியத்துக்கும் பிற்பட்ட நூலான இறையனார் அகப்பொருளுள்ளும் அச்சொல் முதல் நூற்பாவிலேயே காணப்படுகிறது. பாட்டும் தொகையும் சான்றோர் செய்யுள். 2300 பாடல்களுக்கு மேல் உள்ள அவற்றில் என்மனார் என்ற சொல் குறுந்தொகை 234 ஆம் பாடலிலும், கலித்தொகை 119ஆம் பாடலிலுமே காணப்படுகிறது. எனவே, என்மனார் என்பது தொல்காப்பியனாரால் படைக்கப்பட்டுத் தொல்காப்பியத் திலேயே பயின்று வரும் சொல்லாகும்.

உரையாசிரியர் என்ப என்பதன் பகரத்தைக் குறைத்து மன்ஆர் என்பனவற்றை இசை நிறைத்தற்குக் கொண்டார் என்று கருதுவர். தொல்காப்பியனார் 'மன்' என்ற இடைச்சொல் கழிவு ஆக்கம் ஒழியிசை என்ற மூன்று பொருள்களிலேயே வரும் என்று சொ. 252 ஆம் நூற்பாவில் கூறியுள்ளார். அவரே மன் இசை நிறைப்பொருளிலும் வரும் என்று கூறாது தாம் இசை நிறைக்காக மன் என்பதனை இணைத்து என்மனார் என்ற சொல்லை அமைத்தார் என்பது பொருந்துவதாக இல்லை.

சேனாவரையருக்கு அன்மொழித்தொகை ஆகு பெயருள் ஒருவகை. எனவே மக்கட்சுட்டு என்பது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்றார்.

மக்கள் என்னும் உணர்வு என்பது, வடிவு பற்றி மக்கள் என்று முடிவு செய்யும் கருத்தினை. இதனைப் 'பால் மயக்குற்ற' (23) 'உருபு என மொழியினும்' (24) 'தன்மை சுட்டலும்' (25) என்ற நூற்பாக்களின் உரையில் இவர் காட்டியுள்ள எடுத்துக்காட்டுக்களால் தெளியலாம்.

பொருள் என்ற பெருந்தலைப்பில் உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் அடங்கும் ஆதலின் மக்கட்பொருள் என்ற தொடர் அஃறிணை முடிபே கொள்ளும்.

அஃறிணையில் உயிருடைய பொருள்கள் பல்லாயிர இனத்தனவாக உள்ளன. அவை அனைத்தையும், உயிரற்ற பொருள்களையும் குறிப்பிட 'அவர் அல பிற' எனப்பட்டது.

' நீட வருதல் செய்யுளுள் உரித்தே ' (எ. 208) என்ற விதியினான் அ+இரு-ஆ+இரு என நீண்டு, தொல்காப்பியத்தில் உடம்படுமெய் புணர்த்தற்கு 'இ ஈ ஐ வழி' (நன். 162) என்றாற்போன்ற வரையறை இன்மையின் யகர உடம்படுமெய் பெற்று ஆயிருதிணை என்று ஆயிற்று. அ+அறுமூன்றும் - 'ஆவறு மூன்றும் உளப்பட' (சொ. 56) என வருவதும் காண்க.

இன்சாரியை வேற்றுமை உருபு பற்றி வருதலை 'வண்டினைக் கொணர்ந்தான்' முதலிய சொற்றொடர்களில் காண்க. உருபு பற்றாது வருதலை 'செலவினும் வரவினும்' (சொ. 28) முதலிய இடங்களில் காண்க.

'ஆயிரு திணையின்' என்பதற்கு அவ்விரு திணை யினையும் என்று உரையாசிரியர் இரண்டன் உருபை விரித்துப் பொருள் செய்தார். இரண்டாம் வேற்றுமைக்குத் தனிவிதி உள்ளது. சாரியை வந்தால் இரண்டன் உருபு விரிந்தே இருக்கவேண்டும் (எ-157) என்பது விதி ஆதலின், இரண்டன் உருபினை உரையாசியர் விரித்தது பொருந்தாது என்பதும், 'செலவினும் வரவினும்' (சொ. 28) முதலிய இடங்களில் ஏழாவதை விரித்தமை போலவே, ஈண்டும் ஏழாவது விரித்தல் வேண்டும் என்பதும் சேனாவரையர் கருத்து. தொல்காப்பிய முதல் நூற்பா உட்பட ஏறத்தாழ நாற்பது இடங்களுக்குமேல் இரண்டன் உருபு இன்றிச் சாரியை மட்டும் வருதலை உடம்பொடுபுணர்த்துக் கூறியிருப்பதனைச் சேனாவரையர் நோக்காத செய்தி வியப்பாக உள்ளது. சேனாவரையர் மறுப்பை மனங்கொள்ளாது நச்சினார்க்கினியர் முதலாயினார் இரண்டாவதையே விரித்தமை நோக்குக. 'மன்' என்று பாடம் ஓதுவார் உரையாசிரியர், நச்சினார்க்கினியர் முதலியோர்.

உயர்திணை, அஃறிணை என்பன இலக்கணக் குறியீடுகள் ஆகையான் அவை விளக்கப்பட்டன.

சொல்லை உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல் என வரையறுக்கும் ஒரே செய்தி இந்நூற்பாவில் கூறப்பட்டுள்ளது. 'ஒரு பொருள் நுதலிய சூத்திரத்தானும்' (பொ-480) என்ற விதியான் ஒவ்வொரு நூற்பாவும் ஒரே செய்தியைத்தான் கூறவேண்டும். இரண்டு முதலிய செய்திகளைக் குறிப்பிடின் வாக்கிய பேதம் என்ற குற்றம் ஏற்படும் என்பது கூறப்பட்டது.

தொல்காப்பிய நூற்பாக்கள் பலவற்றில் உட்டொடர் பலவாய்ப் பலவேறு செய்திகளைக் கூறினும் அவற்றான் ஆகிய பெருந்தொடர் ஒன்றேயாய் அச்செய்திகளை எல்லாம் ஒரே தலைப்பில் அடக்குமாறு அமைதலின், வாக்கிய பேதம் என்று குறைகூறும் வாய்ப்பினைத் தவிர்க்கலாம். 'பிறிது பிறிது ஏற்றலும்' (சொல். 104) என்ற நூற்பா உரையுள் சேனாவரையர் பிறிது பிறிது ஏற்றல், உருபுதொக வருதல் என்ற இரண்டு வேறு வேறு செய்திகள் வழுவமைதி என்ற தலைப்பில் அடக்கப்பட்டுக் கூறப்பட்டன என்று கூறுவது நோக்கத்தக்கது.

## கிளவியாக்கம்
## நச்சினார்க்கினியர் உரை

### சொற்பொருள் வரையறை

*1. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே;*
*அஃறிணை என்மனார் அவர்அல பிறவே;*
*ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.*

என்பது சூத்திரம். இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், மேல் பாயிரத்துள் 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என நிறுத்தமுறையானே, எழுத்து உணர்த்திச் சொல் உணர்த்துகின்றார் ஆதலின் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து. அது சொல்லை உணர்த்திய முறைமை என விரியும்.

சொல் என்றது எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையை. இங்கு ஆக்கப்படுதல் என்றது, ஒரு சொல் கூறும் இடத்து ஓர் எழுத்துப்போக ஓர் எழுத்துக் கூறுவதுஅல்லது, ஒரு சொல்லாக முடியும் எழுத்து எல்லாம் சேரக்கூறல் ஆகாமையின், அவ்வெழுத்துக்கள் கூறிய அடைவே போயினவேனும், கேட்டோர் கருத்தின்கண் ஒரு தொடராய் நிலைபெற்று நின்று பொருளை அறிவுறுத்தலை. ஆயின்,

ஓரெழுத்து ஒரு மொழிக்கு ஆக்குதல் இன்றால் எனின், ஓரெழுத்து ஒரு மொழியைக் கூறியக்கால், அதுவும் செவிப்புலனாய்க் கருத்தின்கண் நிகழ்ந்து பின்னர்ப் பொருளை ஆக்குதலின், அதுவும் ஆக்கும் தன்மை உடையது ஆயிற்று.

இருதிணைப் பொருளும் ஆவன, ஐம்பாற்பொருளின் பகுதியாகிய காட்சிப் பொருளும், கருத்துப்பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்கு திணையும் நிலைத்திணையும் ஆம். இவை எல்லாம் ஐம்பாலாய் அடங்கின.

இனிப் பொருள் தன்மையாவது, மக்கள் தன்மையும், இயங்குதிணைத் தன்மையும், நிலைத்திணைத் தன்மையும் ஆம். இத்தன்மை ஒரு பொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடு இன்றித் தான் ஒன்றேயாய்ப் பலவகைப்பட்ட பொருள்தோறும் நிற்கும் என்று உணர்க.

கருவியாவது அப்பொருள் தன்மையை ஒருவன் உணர்தற்கு அவ்வோசை கருவியாய் நிற்றல். இதனை ஐம்பொறிகள் ஒருவன் பொருளை உணர்தற்குக் கருவியாய் நின்றாற்போலக் கருவியாய் நிற்கும் என்று உணர்க.

இனி, ஓசையைச் சொல் என்றீரேல், கடல் ஒலி, சங்கு ஒலி, விண் ஒலி முதலியனவும் சொல் ஆகாவோ எனின், சொல், 'இது முன்பு யான் உணர்ந்த எழுத்து' என்றே பின்பு கூறியக்காலும் உணரநிற்றலின், கேடு இன்றி நிலைபேறு உடையது ஆயிற்று. இவை அங்ஙனம் உணர்தல் ஆற்றாமையானும், எழுத்தினான் ஆக்கப்படாமையானும் நிலைபேறு இல ஆயின; ஆதலின் சொல் எனப்படா. அன்றியும் 'ஓசை, அரவம், இசை' என்பனபோல் அன்றிக் 'கிளவி, சொல், மொழி' என்பன எழுத்தினான் ஆகிய ஓசையை உணர்த்தும். முற்கு, வீளை முதலியன, எழுத்தினான் ஆக்கப்படாமையின், சொல் ஆகா.

இனி, ஒரு சாரார் எழுத்தினான் ஆகிய ஓசையையும் கெடும் என்பர். உரையாசிரியரும் 'சொல் என்பது எழுத்தினான் ஆக்கப்பட்டுத் திணை அறிவுறுக்கும் ஓசை' என்றும், 'தன்னை உணர நின்றவழி எழுத்து எனப்படும்; தான் இடைநின்று பொருள் உணர்த்தியவழிச் சொல் எனப்படும்' என்றும் கூறினார், இக்கருத்தேபற்றி.

இனி, சேனாவரையர் 'சொல் பொருள் குறித்துவரும்' என்றாரால் எனின், ஒருவன் பொருள்தன்மையை உணர்தற்குச் சொல் கருவியாய் நிற்றல் அன்றித் தனக்கு ஓர் உணர்வு இன்மையின், தான் ஒரு பொருளைக் கருதி நிற்றல் இன்று என மறுக்க.

அச்சொல்லை எட்டுவகையானும், எட்டு இறந்த பலவகையானும் உணர்த்துப. இரண்டு திணையும், ஐந்து பாலும், எழுவகை வழுவும், எட்டு வேற்றுமையும், ஆறு ஒட்டும், மூன்று இடமும், மூன்று காலமும், வழக்கும் செய்யுளும் ஆகிய இரண்டு இடமும் என எட்டுவகையான் உணர்த்துப. இனி எட்டு இறந்த பலவகையாவன - சொல் நான்கு வகைய என்றலும், அவற்றையே பலவாகப் பகுத்தலும், விகார வகையும், பொருள்கோள் வகையும், செய்யுட்கு உரிய சொல் நான்கு என்றலும் பிறவும் ஆம்.

அச்சொல்தான், தனிமொழியும் தொடர்மொழியும் என இருவகைப்படும். தனிமொழி பொருள் விளக்குமாறு,

'நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவுஇல் சொல்லொடு தழாஅல் வேண்டும்' -பொ.644

என்னும் மரபியல் சூத்திரத்தான் உணர்க.

தொடர்மொழி இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இருவகைப்படும். அவை தொடருங்கால்,

பயனிலைவகையானும், தொகைநிலை வகையானும், எண்ணுநிலைவகையானும் தொடரும். இனி, வடநூலார் கூறியவாறே, அவாய்நிலையானும், தகுதியானும், அண்மைநிலையானும் தொடரும் என்றலும் ஆம்.

| | |
|---|---|
| உதாரணம் : | சாத்தன், உண்டான், மன், நனி என்பன தனிமொழி. |
| சாத்தன்வந்தான் | - இது பயனிலைத்தொடர். |
| யானைக்கோடு | -இது தொகைநிலைத் தொடர். |
| நிலம் நீர் | - இஃது எண்ணு நிலைத்தொடர். |

அறம்வேண்டி அரசன் உலகம் புரக்கும் - என்பது பன்மொழித் தொடர்.

வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடலின், இவ்வோத்துக் கிளவி ஆக்கம் என்னும் பெயர்பெற்றது. இனிச் சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின், கிளவி ஆக்கம் என்னும் பெயர் பெற்றது என்றும் ஆம், 'ஒருவன்மேல் ஆமாறு இது; ஒருத்திமேல் ஆமாறு இது; பலர்மேல் ஆமாறு இது; ஒன்றன்மேல் ஆமாறு இது; வழு ஆமாறு இது; வழு அமையுமாறு இது' எனப் பொருள்கள் மேல் ஆமாறு உணர்த்தினமையின்.

இனி, இத்தலைச் சூத்திரம் சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துகின்றது. இதன்பொருள் : மக்கட்சுட்டே - மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை; உயர்திணை என்மனார் - உயர்திணை என்று கூறுவர் தொல்லாசிரியர். அவர் அல பிறவே - அம்மக்கள் அல்லாத பிறபொருளை; அஃறிணை என்மனார் - அஃறிணை என்று கூறுவர் தொல்லாசிரியர். ஆயிரு திணையின் இசைக்கும் மன் சொல்லே - அவ்விருதிணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்கள் என்றவாறு.

ஏகாரம் மூன்றும் ஈற்றசை. இனைத்து என அறிந்த உம்மை விகாரத்தால் தொக்கது.

'இசைப்பு இசையாகும்' (சொல். 310) என்றதனான் இசைப்பு ஒலிக்கும் என்னும் பொருள் தந்தது எனின், சொல்லுக்குப் பொருள் உணர்த்தும்வழி அல்லது ஒலித்தல் கூடாமையின், 'உணர்த்தும்' என்னும் தொழிலினை 'இசைக்கும்' என்னும் தொழிலினான் கூறினார். இதுவும் ஒரு மரபு வழுவமைதி. பொருளை உணர்த்துவான் ஒரு சாத்தனே எனினும், அவற்கு அது கருவியாகஅல்லது உணர்த்தல் ஆகாமையின், அக்கருவிமேல் தொழிலை ஏற்றிச் 'சொல் உணர்த்தும்' என்று கருவிக் கருத்தாவாகக் கூறினார். இவ்வாசிரியர் எவ்விடத்தும் சொல்லைக் கருவிக் கருத்தாவாகக் கூறுமாறு மேலே காண்க. அஃது 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே (சொல். 157) என்றாற்போல்வது. இச்சூத்திரத்தான் 'பொருள் இரண்டு; சொல் இரண்டு' என வரையறுத்தார்.

உயர்திணை என்பது உயர்ந்த ஒழுக்கம் என இறந்தகால வினைத்தொகை. அஃது ஆகுபெயராய் அப்பொருளை உணர்த்தி நின்றது. இதனைப் பண்புத்தொகை என்பாரும் உளர். அது பொருந்தாது. என்னை ? இது காலம் தோன்றி நிற்றலின்.

'மக்கட்சுட்டு' என்பது மக்களாகிய சுட்டு என இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை. சுட்டு - நன்குமதிப்பு. அஃது ஆகுபெயராய் மக்கட்பொருளை உணர்த்தி நின்றது.

சேனாவரையர் இதனைப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை என்றாராலோ எனின், இருபெயர் ஒட்டு ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்கும் வேறுபாடு உணராமல் கூறினமையின், அது பொருந்தாது. 'என்னை வேறுபாடு?' எனின், ஈண்டு ஆகுபெயராய் நின்ற நன்கு மதிக்கும் பொருளும் மக்களையே உணர்த்திநிற்கும். அன்மொழித்தொகை, அவ்வாறு அன்றி, 'வெள்ளாடை' என்றால் வெண்மையும் ஆடையும் அன்றி உடுத்தாளையே உணர்த்தி நிற்கும். இது தம்முள் வேற்றுமை.

'அம்மொழி நிலையாது அல்மொழி நிலையலும்'
சொல்.419

என்புழி, 'வெள்ளாடை' என்புழித் தொக்க இருமொழிமேலும் நில்லாது 'உடுத்தாள்' என்னும் அன்மொழிமேல் நின்றது என்று உதாரணம் காட்டினார் சேனாவரையரும் என்று உணர்க.

அஃறிணை, 'அவ்வொழுக்கம் அல்லதாகிய ஒழுக்கம்' எனப்பண்புத் தொகை. அது பொருளை உணர்த்தி நின்றது ஆகுபெயராய்.

'என்மனார்' என்பது ஓர் ஆர் ஈற்று நிகழ்கால முற்று வினைத்திரிசொல்.

'என்றிசினோர்' என்பது, அவ்வாறு வந்த இறந்தகால முற்றுவினைத் திரிசொல்.

'மக்கள் தாமே ஆறு அறி உயிரே' பொ - 588.

என்று மக்கள் உயர்ந்தமை மரபியலில் கூறுப. அவர்அல என்னாது பிற என்றார், அஃறிணையின் உயிர் உடையனவும் இல்லனவும் ஆகிய இருகூறும் அடங்குதற்கு.

'மறம் கடிந்த அருங்கற்பின்' புறநா. 166-13
'சில் சொல்லின் பல்கூந்தல்' புறநா. 116-16

எனவும், பிறாண்டும் சான்றோர் செய்யுளில் 'இன்' சாரியை உருபுபற்றாது நிற்றல் நோக்கி, உரையாசிரியரும் 'ஆயிரு திணையினையும்' என இரண்டாம் உருபு விரித்துப் பொருள் கூறினார்.

இனிச், சேனாவரையர் 'மக்கட்சுட்டு' என்பதற்கு 'மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும், அது மக்கட்சுட்டு' என்றும், 'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' என்பதற்குச் சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடம் ஆதலின், 'ஆயிரு திணையின்கண்' என ஏழாவது விரிக்க என்றும் பொருள் கூறினாரால் எனின், முன்னர் 'மக்கள் என்று

கருதப்படும் பொருளை உயர்திணை என்ப' என்று அவர் கண்ணழிவு கூறியது, ஒரு பொருள் இடத்து நின்ற மக்கள் தன்மையாலே ஒருவற்கு அப்பொருள் மக்கள் என்று கருதப்பட்டது என்று பொருள் தந்து நின்றது; பின்னர் 'மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும்?' என்று நோக்குகின்றவர்க்கு 'மக்களாகிய கருத்து யாதொரு பொருளிடத்துத் தோன்றும்?' என்று பொருள் தந்தால் 'வெள்ளாடை' என்னும் பண்புத்தொகைபோல அக்கருத்து மக்கள் ஆகாமையின் பண்புத்தொகை அன்றாம்; அது 'மக்கட் சுட்டு' என்பதற்கு 'அப்பொருள் மக்கட்சுட்டு' என்று அவர்கூறிய பொருளானும் மக்களையே தோற்றுவித்து நிற்றலின், அன்மொழித்தொகை அன்றாம்; அன்றியும், ஆசிரியர் ஈண்டு ஒரு பொருள் நின்று தன்னை ஒருவற்கு உணர்த்துமாறும், ஒருவன் அதனை உணருமாறும் ஆராய்கின்றார் அல்லர்; 'உயர்ந்த ஒழுக்கம்' என்று முதல்நூல் ஆசிரியர் கூறிய குறி உலகத்தார்க்கு விளங்கப் பொருள்கூறக் கருதி, அதன்பயன் எய்துவிப்பத் தாமும் 'மக்கள் ஆகிய நன்கு மதிக்கும் பொருள்' என்று அச்சொற்குப் பொருள்கூறினார் என்று உணர்க. அவர் கூறிய உயர்ச்சி தோன்றத் தாமும் 'நன்கு மதிப்பு' என்று பொருள்கூறினார், தாமும் உயர்திணை என்றே ஆளுதல்பற்றி.

இனி 'இசைப்பு இசையாகும்' (சொல். 310) என்பதனான், திணை இடமாகச் சொற்கள் நின்று, பிறவற்றை இசைத்தல் வேண்டும். அதனான் அது பொருந்தாது. அன்றியும் ஆசிரியர்க்கு அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தாயின், சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாக 'ஆடூஉவின்கண் நிகழும் சொல், மகடூஉ வின் நிகழும் சொல்' என்றே சூத்திரம் செய்வர்; அங்ஙனம் செய்யாது 'ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும்' என அறியும் என்னும் பெயரெச்சம் 'சொல்' என்னும் கருவிப்பொருளைக் கொண்டு முடியச் சூத்திரம் செயதலின், ஆசிரியர்க்கு அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்து அன்மை அறிக.

'மன்' என்பது வினைபற்றிய அசைநிலை இடைச் சொல்லாய் நின்றது. (1)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**1. உயர்திணை என்மனார் -**

தொல்காப்பியனார் வரைந்த நூல் முழுதையும் நோக்கி அவர் பின்பற்றிய முறையை அறிந்து பனம்பாரனார் அவர் உள்ளக்கிடக்கையை வழிமொழிந்தமையான், பாயிரத்துள் கூறப்பட்டதும் தொல்காப்பியனார் கூறியதாகிய ஒற்றுமை நயத்தான் கொள்ளப்பட்டமையின் நிறுத்தமுறை பாயிரத்தை உட்கொண்டு கூறப்பட்டது. கல்லாடனாரும் இதுவே கூறினார்.

"மேல், பாயிரத்துள்

**வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்**
**எழுத்தும் சொல்லும் பொருளும்**

ஆராய்வல் என்று புகுந்தமையான், எழுத்தினும் சொல்லினும் வழக்கிற்கும் செய்யுட்கும் வேண்டுவன விராய்க்கூறி" என்று பேராசிரியர் (பொ-313) குறிப்பிடுகிறார்.

சேனாவரையர் 'நிறுத்தமுறையானே சொல் உணர்த்திய எடுத்துக்கொண்டார்' என்று கூறுவதும் பாயிரச் செய்தியை உட்கொண்டேயாம் என்று கருதலாம்.

"சொல் என்றது, எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப்பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையாம்" என்ற கருத்து விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

காட்சிப்பொருள்களும் கருத்துப்பொருள்களும், ஐம்பெரும்பூதங்களான் ஆகிய இயங்குதிணையும்

நிலைத்திணையுமாய், இருதிணை ஐம்பாலுள் அடங்கும். காட்சிப்பொருள்-கண்ணால் காணப்படுவன. கருத்துப் பொருள்-காட்சிக்கு இலக்காகாது, மனத்தால் குறித்து உணரப்படுவன.

பொருள்தன்மை - பசுவுக்கு இலக்கணம் கொம்பும் அலைதாடியுமாம். ஒரு பசு இறந்தாலும் உலகில் பசு இனங்கள் உள்ள வரை அப்பசுத்தன்மை அழியாது. பசு இனங்களே முற்றும் அழிந்து போனாலும், பசுத்தன்மை கருத்துப்பொருளாம் மனத்தின்கண் நிலைபெற்றிருத்தலின் ஒருபோதும் அழியாது என்பதாம். பசு இனமே மறைந்தாலும் அதன் தன்மை பேச்சு வழக்கில் நிலையாக இருக்கும் என்பது. இதனை, சொ. 67ஆம் நூற்பா உரையுள் 'பொருண்மை'யை நச்சினார்க்கினியர் விளக்கிக்கூறி இருப்பதனாலும் அறியலாம்.

விண்ஒலி என்பது இடி. சொல் என்பது எழுத் தொலியான் ஆக்கப்படுவது. எழுத்து ஒலியான் ஆக்கப்படாத ஓசைகள் சொல் ஆகா. முற்கு - முக்குங்கால் ஏற்படும் ஒலி. விளை - நாவை மடித்து உண்டாக்கப்படும் சீழ்க்கை என்னும் ஒலி. தோன்றிய பொருள் யாதாயினும் அது கெடும் என்ற கருத்தில், உண்டாக்கப்பட்ட எழுத்து ஒலியும் கெடும் என்பர். மணிமேகலை 29:69-75 காண்க.

உரையாசிரியரும் 'சொல் என்பது... ...எனப்படும் ' என்று கூறியதாகக் குறிப்பிடப்பட்டன பதிப்பில் உள்ள இளம்பூரணத்தில் இல்லை.

நூலாசிரியருக்குப் பலவகை விதி விலக்குகள் உண்டு. உரை எழுதுவோருக்கு அவை இல்லை. எனவே, நூலாசிரியர் கருவிக்கருத்தாவாகக் கூறுவனவற்றை உரையாசிரியரும் கூறமுடியாது. சொல் தானாகவே பொருள் குறித்துவரும் என்பது வடமொழிச் சத்தநூலார் கருத்து. அதனையே சேனாவரையர் எடுத்து மொழிந்துள்ளார் என்பது பிரயோகவிவேக உரையில் கூறப்பட்டுள்ளது. சொல்லைப்

பொருள் உணர்த்தும் கருவியாகச் சேனாவரையர் கொள்ளவில்லை என்பதே நச்சினார்க்கினியர் குறிப்பிடும் செய்தி.

எழுத்ததிகாரத்தில் எழுத்தை எட்டுவகையானும் எட்டு இறந்த பலவகையானும் ஆராய்ந்தார் என்று கூறுவது போலவே, சொல்லினையும் எட்டுவகையானும் எட்டு இறந்த பல வகையானும் ஆராய்ந்தார் என்று கூறுவர். பொருளதிகாரத்தில் பொருள் பற்றியும் இவ்வாறே கூறுவர். **வீரசோழியம்** அவிநயனார் சொல்லினைப் பதின்மூன்றுவகையான் ஆராய்ந்தார் என்று கூறும். 'திணைபால் மரபு வினாச்செப்பு இடம்சொல், இணையா வழுத்தொகையோடு எச்சம்-அணையாக், கவினையபார் வேற்றுமையும் காலமயக் கும்கொண்டு, அவிநயனார் ஆய்ந்தார் சொல்' (வீர-85). திணை, பால், மரபு, வினா, செப்பு, இடம், சொல், வழுக்கள், தொகை, எச்சம், ஆக்கவினை, வேற்றுமை, காலமயக்கு என-13

**நிலம் தீ நீர்வளி** (பொ.644) என்ற **நூற்பா**

'நிலம்வலிது, தீவெய்து, நீர்தண்ணிது, வளி எறிந்தது, விசும்பு அகலியது' என்ற ஐம்பூதங்களும் அஃறிணை வழங்கின ஆயினும், இவை கலந்த மயக்கமாகிய உலகில் உள்ள பொருள்களை அவ்வாறு அஃறிணை வாய்பாட்டான் வழங்காது, உயர்திணை வாய்பாடு வேறாகவும், அஃறிணை வாய்பாடு வேறாகவும் அவைதம்முள் பகுதியாகிய ஐந்துபாற் சொல்லும் வெவ்வேறாகவும் வழங்குகின்ற வழக்கிற்குக் காரணம் மரபு அன்றிப் பிறிது இல்லை என்று மரபினை வலியுறுத்துகிறது. எனவே தனிமொழியாகிய எழுத்துஒலி பொருளைத் தெரிவிப்பதற்கு மரபே காரணம் என்பது.

பயனிலைவகை, தொகைநிலைவகை, எண்ணு நிலைவகை என்பனவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் உள. "இனி, வடநூலார் கூறியவாறே அவாய் நிலையானும் அண்மை நிலையானும், தகுதியானும் தொடரும்

என்றுமாம்" என்று நச்சினார்க்கினியர் கூறியிருப்பின், அவற்றையும் எடுத்துக்காட்டுத் தந்து விளக்கியிருப்பர். அவற்றை எடுத்துக்காட்டுத் தந்து விளக்காமையின் 'இனி, வடநூலார்.....என்றுமாம்' என்பது இடைச்செருகல் ஆகலாம்.

'மருமகன் வலந்ததும் மங்கை ஆக்கமும்' - சீவக.187 என்ற பாடல் உரையில் "தந்தையும் தாயும் மருமகன் கூறியதனையும், மங்கை அவனிடத்தில் அன்பை அமைத்துக் கோடலையும்" என்று பொழிப்புத் தந்து, "ஆக்கம் கிளவியாக்கம் போல நின்றது" என்று விளக்கம் தருவதனான், 'கிளவியாக்கமாவது வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடல்' என்ற கருத்தே நச்சினார்க்கினியர் உள்ளத்தில் முதலிடம் பெறுகிறது.

ஆயிருதிணையின் இசைக்கும்மன் சொல்லே- 'அவ்விருதிணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்கள்' என, 'சொற்களாம்' என்று மற்ற இடங்களில் கூறுவதுபோலக் கூறாமல், வாளாவிடுத்தலின், உணர்த்தும் சொற்கள் என்பது பெயரெச்சத்தொடர் ஆகலாம். இளம்பூரணர் உரையிலும் 'இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம்' என்றே உள்ளது.

"இருதிணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்களை, மக்கட் சுட்டுடைய உயர்திணைச்சொல் எனவும், மக்களல்லாத பிறவற்றைச் சுட்டும் அஃறிணைச்சொல் எனவும் சான்றோர் இருவகையாகப் பகுப்பர்" என்பதே நச்சினார்க்கினியர் உரையின் கருத்தாகும். இங்ஙனம் கூறுவதில் சொல்லுக்குச் சிறப்புத் தரப்பட்டுள்ளது. நூற்பாவும் ஒரேபொருள் நுதலியது ஆகும்.

'ஒருபொருள் நுதலிய சூத்திரத்தானும்' (பொ. 480) என்பது விதி. 'ஆயிரு திணையின் இசைக்கும்சொல்' எனச் சொல்லினை ஆசிரியர் கருவிக்கருத்தாவாகக் கொண்டு குறிப்பிடுகிறார் என்பதும், 'உணர்த்தும்' என்னும்

தொழிலினை 'இசைக்கும்' என்றும் சொல்லினான் கூறியது ஒருமரபு வழுவமைதி என்பதும் விளக்கப்பட்டுள்ளன.

மக்கட் சுட்டு இருபெயரொட்டு ஆகுபெயர் என்பதும், அன்மொழித் தொகை அன்று என்பதும் விளக்கப் பட்டுள்ளன.

'என்மனார்' என்பது ஓர் ஆர்ஈற்று நிகழ்கால முற்றுவினைத்திரிசொல் என்று குறிப்பிடும் நச்சினார்க்கினியர் அஃது அமைந்தவாறு பற்றி யாதும் குறிப்பிடவில்லை. ஆசிரியர் ஒருமொழி இலக்கணம் பற்றித் தம் நூலுள் குறிப்பிடாமையான், நச்சினார்க்கினியர் ஒருமொழி இலக்கணம் கூறுவதில் ஈடுபடவில்லை. இதனைத் தம் எழுத்ததிகாரத்தில் 482ஆம் நூற்பா உரையுள் குறிப்பிட்டுள்ளார். பேராசிரியரும் பொ. 663 ஆம் நூற்பா உரையுள் 'தன்னான் ஒருபொருள் கருதிக்கூறல்' என்னும் சிதைவிற்கு எடுத்துக்காட்டாகப் 'பதமுடிப்பு என்பதோர் இலக்கணம்' கூறலைக் குறிப்பிட்டுள்ளார். செய்ம்மன என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தோடு ஆர்விகுதி இணைத்துத் தொல்காப்பியனாரே என்மனார் என்ற வினைமுற்றுச் சொல்லைப் படைத்து வழங்கியிருக்கலாம். என்மனார் தொல்காப்பியத்தில் 60 இடங்களுக்குமேலாக வந்துள்ளது. சங்க இலக்கியத்தில் அச்சொல் குறுந்தொகை 234: 3, கலித்தொகை 119 : 16 என்ற இரண்டே இடங்களில் வந்துள்ளது என்பதும் நோக்குக.

ஆயிருதிணையின் - இரண்டாம் வேற்றுமை உருபோடு இணையாது இன்சாரியை வந்துள்ளது. தொல்காப்பியத்தில் இன்சாரியை இரண்டன் உருபு பற்றாது வந்துள்ள இடங்கள் ஏறத்தாழ நாற்பது உள்ளன.

மக்கள் என்று கருதப்படும் பொருளை உயர்திணை என்ப - ஒருவன் உயர்திணையை உணரும் வகையைக் கூறுவது.

மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும், அது மக்கட் சுட்டு- எப்பொருள் மக்கள் என்று சுட்டப்படுகிறதோ, அது தன்னை மற்றவருக்கு உணர்த்தும் என்பது.

ஒருவன் ஒருபொருளைக்கண்டு தானே உணர்வது என்றும், ஒருபொருள் தன்னை ஒருவனுக்கு உணர்த்துவது என்றும் ஒரே தொடருக்குக் குழப்பமான விளக்கம் தரப்பட்டுள்ளது.

வெள்ளாடை என்பது வெண்மையதாகிய ஆடை எனப் பால்காட்டும் விகுதியும் ஆகிய என்ற இணைப்புச்சொல்லும் விரிந்து பொருள் தரும்.

மக்கட்சுட்டு என்பதனை விரித்தால் பால்காட்டும் ஈறுவிரியாமல் ஆகிய என்ற இணைப்புச்சொல்லே விரியும். ஆதலின் அது பண்புத்தொகை அன்று; பண்புத்தொகை போல இணைப்புச்சொல் விரிக்கப்படும் இருபெயரொட்டே.

மக்கட்சுட்டு என்பது மக்களையே உணர்த்தி வேறு பொருளை உணர்த்தாமையின் அன்மொழித்தொகை அன்று. இந்நூற்பாவில் ஆசிரியர் உயர்திணை, அஃறிணை என்ற இலக்கண மரபுச் சொற்களை அறிமுகம் செய்துவைத்தற்கு வேண்டியனவே கூறுகின்றார். ஒருபொருள் நின்று தன்னை ஒருவனுக்கு உணர்த்துவதனையும் அவன் அறிவதனையும் இந்நூற்பாவில் ஆசிரியர் ஆராயவில்லை.

'இசைப்பு இசையாகும்' சொல். 310

இசைப்பு என்ற சொல் இசை என்ற பொருளை உணர்த்தும்.

'ஆயிருதிணையின்' என ஏழன்உருபு விரித்தால் சொற்கள் திணைகளை இருப்பிடமாகக்கொண்டு பொருளைத் தெரிவிக்கவேண்டும். திணையை இருப்பிடமாகக் கொள்ளாமலேயே சொற்கள் பொருளை அறிவிக்கும் ஆதலின் ஏழன்உருபு விரித்தல் பொருந்தாது. அது

பொருந்துமாயின், ஆடூஉ அறிசொல் - மகடூஉ அறிசொல்- என்று நூற்பா அமைக்காமல் ஆடுஉவின் கண் நிகழும் சொல், மகடூஉவின்கண் நிகழும் சொல் என நூற்பா அமைத்திருத்தல் வேண்டும். அவ்வாறு அமைக்காமல் ஆடூஉவை அறியும் சொல், மகடூஉவை அறியும் சொல் என இரண்டன் உருபு விரிக்குமாறே சொற்றொடர்களை அமைத்திருத்தலின், ஆயிருதிணையின் என்ற தொடருக்கும் அவ்விருதிணை யினையும் என்று இரண்டன் உருபு விரித்தலே ஏற்றது.

வினை பற்றிய அசைநிலை - வினைச்சொல்லொடு சேர்ந்தே வரும் அசைநிலையாகிய இடைச்சொல்.

## கிளவியாக்கம்

# தெய்வச்சிலையார் உரை

### சொல் இலக்கணம்

1. ***உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே***
***அஃறிணை என்மனார் அவர்அல பிறவே***
***ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே.***

என்பது சூத்திரம்

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், மேல் சொல்லப்பட்ட எழுத்தினான் இயன்று பொருள் அறிவிக்கும் சொற்களைப் பாகுபடுத்தலான், சொல் அதிகாரம் என்னும் பெயர்த்து. அஃது யாங்கனம் உணர்த்தினார் எனின், சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தொடர்மொழி, தனிமொழி என இருவகைப்படுத்து, அத்தொடர்மொழியை அல்வழித்தொடர், வேற்றுமைத் தொடர் என இரு வகைப்படுத்து, அவ்விருவகைத் தொடரும் செப்பும் வினாவும் ஆக நிகழ்தலான், அவற்றை வழுவாமல் கூறுதற்காக முற்படச் சொல் நிலைமையான் பொருளை உயர்திணை அஃறிணை என இருவகைப்படுத்து, அவ் உயர்திணை உணர்த்தும் சொற்களை ஒருவனை அறியும் சொல், ஒருத்தியை அறியும் சொல், பலரை அறியும் சொல்

என மூவகைப்படுத்து, அஃறிணை உணர்த்தும் சொற்களை ஒன்றனை அறியும் சொல், பலவற்றை அறியும் சொல் என இருவகைப் படுத்து (. . . . . . வகைப்பட்ட சொல்லும் பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொற்கண்ணும் வினைச்சொற் கண்ணும் வருதலின் பெயரான் பால் அறியப்படும் சொல்லினானும்) அமைக்கவேண்டும் சொற்களை எடுத்து ஓதி, அதன்பின் வேற்றுமைத்தொடர் கூறுவார் மயங்கா மரபின ஆகி வருவன எழுவகை வேற்றுமை உணர்த்தி, அதன்பின் அவ் வேற்றுமைக்கண் மயங்குமாறு உணர்த்தி, அதன்பின் எட்டாவது ஆகிய விளிவேற்றுமை உணர்த்தி, அதன்பின் தனிமொழிப் பகுதி ஆகிய பெயர்ச்சொல் பாகுபாடும், வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் பாகுபாடும் உணர்த்தி, அதன்பின் சொற்கள் விகாரப் படுமாறும், ஒட்டுமாறும், எஞ்சுமாறும், பிறவும் உணர்த்தினார் என்க. அவற்றுள் அல்வழித்தொடர் கிளவிஆக்கத்துள்ளும், வேற்றுமைத்தொடர் வேற்றுமை ஒத்துள்ளும், வேற்றுமைமயங்கியல், விளிமரபு என்பன வற்றுள்ளும், தனிமொழிப் பகுதி ஆகிய பெயர்இலக்கணம் பெயரியலுள்ளும், வினைஇலக்கணம் வினையியலுள்ளும், இடைச்சொல் இலக்கணம் இடைச்சொல்ஓத்தினுள்ளும், உரிச்சொல் இலக்கணம் உரிச்சொல் ஓத்தினுள்ளும், எஞ்சிய எல்லாம் எச்ச இயலுள்ளும் உணர்த்தினார் என்று கொள்க. இவ்வகையினான் ஓத்தும் ஒன்பது ஆயிற்று.

பொருள் உணர்த்துவன தனிமொழி ஆதலால், தொடர்மொழி என வகுத்ததனான் பயன் என்னை எனின், பொருள் உணர்த்துதற்குச் சிறப்பு உடையன தொடர்மொழி என்று கொள்க. என்னை சிறந்தவாறு எனின், சாத்தன் என்றவழிப் பொருண்மை மாத்திரம் உணர்த்துதல் அல்லது கேட்டார்க்கு ஒரு பயன்பட நில்லாமையின், சாத்தன் உண்டான் எனப் பயன்பட வரூஉம் தொடர்மொழியே பொருள் இனிது விளக்குவது என்க. சொல் இலக்கணம் அறிந்ததனான் பயன், தொடர்மொழி ஆகிய வாக்கியத் தினைப் பிரித்துப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்

சொல், உரிச்சொல் எனக் குறிஇட வேண்டுதலின் அதன்பின் கூறப்பட்டது.

இனி, எழுவாய் வேற்றுமையையும் விளிவேற்றுமையையும் எழுத்து அதிகாரத்துள் அல்வழிக்கண்ணே முடித்தார் ஆதலான், அவற்றை வேற்றுமைத்தொடர் என்றல் அமையாது எனின்:- அவை 'வேற்றுமை' என்று குறிபெறுதலானும், எழுவாய் வேற்றுமை கிளவிஆக்கத்தொடு மணந்து கிடப்ப வைத்தலானும், விளிவேற்றுமை எழுவாயது திரிபு ஆதலானும் அமையும் என்க.

இவ்வதிகாரத்துக் கூறப்பட்ட ஒன்பது ஓத்தினுள்ளும் முதற்கண்ணது கிளவி ஆக்கம். அது கிளவியது ஆக்கம் என விரியும். அதற்குப் பொருள் சொல்லினது தொடர்ச்சி என்றவாறு. சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள்மேல் ஆகும் நிலைமையைக் 'கிளவிஆக்கம்' என்றார். அது வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை ஆகி, அதனை உடைய ஓத்திற்குப் பெயர் ஆயிற்று.

இவ்வோத்தினுள் இச்சூத்திரம் என்நுதலிற்றோ எனின், சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதனுள், உயர்தல் என்பது மிகுதல். திணை என்பது பொருள். என்மனார் என்பது என்று சொல்லுவார் என்றவாறு. 'மக்கள்' என்பது மக்கள் என்னும் பொதுப் பொருண்மை. சுட்டு என்பது குறிப்பு. 'இனச்சுட்டு இல்லா' எனவும், 'தெய்வம் சுட்டிய' எனவும் ஓதினார் ஆகலின், அது சுட்டப்படும் பொருள்மேல் ஆகுபெயராய் நின்றது. ஏ என்பது ஈற்றசை. அல் என்பது அல்லாமை. திணை என்பதற்கும், என்மனார் என்பதற்கும் மேல் உரைத்தவாறே கொள்க. 'அவர் அல' என்பது மக்கள் அல்லாத பொருள். பிற என்பது பிறபொருள். மக்கள் அல்லாதவும் பிறவும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஆ என்பது அ என்னும் சுட்டு நீண்டு இசைத்தது. இருதிணையின் என்பது இரண்டுதிணையின்

கண்ணும் என்றவாறு. கண் என்னும் உருபும் உம்மும் தொக்குநின்றன. இசைக்குமன சொல் என்பது ஒலிப்பன சொல் ஆவன என்றவாறு.

**இதன் பொருள்** : உலகத்துப் பொருள் எல்லாவற்றிலும் மக்கள் என்று சுட்டப்படும் பொருளை உயர்திணை என்று சொல்லுவர்; அவர் அல்லாத பொருளையும் பிற பொருளையும் அஃறிணை என்று சொல்லுவர் ஆசிரியர். அவ்விரு திணையின்கண்ணும் ஒலிப்பன சொல் ஆவன என்றவாறு.

எனவே, உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல் எனச் சொல் இருவகை ஆம் என்பது பெறுதும். அஃதேல், திணை இடமாக, அத்திணைக்கண் பிறவற்றை இசைத்தல் வேண்டும் எனின், ஒக்கும். அவ்விருதிணைக்கண்ணும் உள ஆகிய பாலினையே சொற்கள் இசைப்பன என்ப. மேல் எழுத்து அதிகாரம் கூறி, இனிச் சொல் அதிகாரம் கூறுவார். சொல்ஆவது இத்தன்மையது என அதன் இலக்கணம் கூறவேண்டுதலின், இச்சூத்திரம் முன் கூறப்பட்டது. அஃது அற்றுஆக, தேவரை அறியும் சொல் அஃறிணை ஆகுமோ எனின், அஃது ஆகாவாறு முன்னர்க் கூறப்படும்.

உயர் என நிற்பத் திணை என வந்தசொல் எவ்வாறு வந்தது எனின், ஒரு சொல் முன் ஒரு சொல் வருங்கால், தொகைநிலை வகையான் வருதலும், தொகாநிலை வகையான் வருதலும் என இரண்டுஅல்லது இல்லை. அவற்றுள் தொகைநிலை வகையான் வந்தன : யானைக் கோடு, பொன்மேனி, கொல்யானை, கருங்குதிரை, உவாப்பதினான்கு, பொற்றொடி என்பன. தொகாநிலை வகையான் வந்தன: சாத்தன் உண்டான், சாத்தனை வெட்டினான், உண்டான் சாத்தன், உண்டு வந்தான், நிலம் நீர் தீ வளி ஆகாயம் என்பன. அவற்றுள் இது தொகைநிலை வகையான் வந்தது. தொகைதாம் பல. அவற்றுள் இஃது எத்தொகையான் வந்தது எனின், பண்புத்தொகையான் வந்தது

என்க. மற்று உள்ள பொருள் எல்லாவற்றினும் உயர்பொருள் என விசேடித்து நின்றமையின், 'உயர்வானம்' என்றாற்போல வினைத்தொகை ஆகாதோ எனின், 'வினையின் தொகுதி காலத்து இயலும்' (எச். 18) என்றார் ஆதலின், ஈண்டுக் காலம் தோன்றாமையின் ஆகாது என்க. எற்றுக்கு? உயர்ந்த மக்கள், உயராநின்ற மக்கள், உயரும் மக்கள் என நல்வினை ஏதுஆக மூன்று காலமும் கொண்டால் ஆகுமோ எனின், அவ்வாறு கருதுவார்க்கு வினைத்தொகையும் ஆம்.

உயர்பொருள் என்னாது திணை என்றது என்னை எனின், அவ்வாறு ஆடல் வேண்டி ஆசிரியன் இட்டது ஒரு குறி என்று கொள்க.

'என்மனார்' என 'என்ப' என்னும் முற்றுச்சொல் திரிந்து நின்றது. குறைக்கும் வழிக் குறைத்தல் என்பதனான் பகாரம் குறைத்து, விரிக்கும்வழி விரித்தல் என்பதனான் மன்னும் ஆரும் என இரண்டு இடைச்சொல் பெய்து என்மனார் என்று ஆயிற்று எனப் பொருள் உரைப்பவால் எனின், பகரம் குறைக்கின்றது செய்யுள் இன்பம் வேண்டி அன்றே? ஆண்டுக் குறைத்தவழிப் பின்னும் இரண்டு எழுத்து விரித்தல் வேண்டுமாயின், குறைத்ததனான் பயன் இன்மையின், இவ்வாறு எழுதும் உரை குற்றம் என்க. இஃது எதிர்காலச் சொல் ஆயினும் இறந்தகாலம் குறித்து நின்றது, இறப்பும் எதிர்வும் மயங்கப்பெறும் ஆகலின். அஃது ஆசிரியர் என்னும் பெயர் கொண்டுமுடியும். ஈண்டு அப்பெயர் எஞ்சி நின்றது.

மக்கள் என்னாது சுட்டு என்றது என்னை எனின், மக்கள் ஆவார் ஒரு நீர்மையர் அன்றி, ஆணும் பெண்ணும் அலியும் ஆகிய வடிவு வேற்றுமை உடையார் ஆகலின், அவர் எல்லார்மாட்டும் பொதுவாகக் கிடக்கும் மக்கள்தன்மையைக் குறித்து மக்கள் இவர் என்னும் பொதுப் பொருண்மை உயர்திணை ஆவது என்பது அறிவித்தற்குச் 'சுட்டு' என்றார்.

அவர் அல்லாத அஃறிணை என்னாது, பிற என்றது என்னை எனின், 'மக்கள் அல்லாத' என்றவழி, உயிர்

உடையனவற்றையே சுட்டும் என்று ஐயுற்று, உயிரில் பொருளும் அஃறிணை என்பது அறிவித்தற்குப் 'பிற' என்றார்.

இசைக்குமன என்பது செய்ம்மன என்னும் தொழில்பெயர். அது செய்யுமன என விரிந்து நின்றது. அது சொல் என்னும் பெயர்ப் பயனிலை கொண்டு முடிந்தது.

இனி, இச்சூத்திரத்திற்குப் பிறவாற்றானும் கடாவிடை உள்ளுறுத்து உரைப்பின் பெருகும். (1)

## தெய்வச்சிலையார் உரை விளக்கம்

### 1. உயர்திணை என்மனார்

சொல்லைப் பல பல பகுதிப்படுத்தி விளக்குதலான் சொல்லதிகாரம் எனப்பட்டது. சொற்களின் பொருளை நோக்கித் தொடர்மொழி தனிமொழி எனப்பகுத்தார். தொடர்மொழியைப் பொருள்நோக்கி அல்வழித்தொடர் வேற்றுமைத் தொடர் எனப்பகுத்தார். அவ் இருவகைத் தொடரும் செப்பும் வினாவுமாக அமைதலின் அவற்றை வழூ ஏற்படாமல் கூறுவதற்காகச் சொல் அமைப்பை உட்கொண்டு உயர்திணை அஃறிணை என இருவகைப் படுத்தினார். உயர்திணையை ஆண் - பெண் - பலர் -எனவும், அஃறிணையை ஒன்று, பல - எனவும் ஐந்து பகுதியாகப் பகுத்தார். அவை பெயர்ச்சொற்கண்ணும் வினைச் சொற்கண்ணும் வருதலின், வழுவாயினும் ஏற்றுக்கொள்ள வேண்டியவற்றை எடுத் தோதினார். அதன்பின் மயங்காமல் வரும் ஏழு வேற்றுமைகளை உணர்த்தி, அவை மயங்கி வருவனவற்றை அடுத்துக்கூறி அடுத்து எட்டாவதாகிய விளி வேற்றுமையை உணர்த்தினார்.

அதன்பின் தனிமொழியாகிய பெயர்- வினை- இடை- உரி -என்பனவற்றை உணர்த்தி, இறுதியில் சொற்கள் பெறும் விகாரங்கள், அறுவகைத் தொகைகள், பத்துவகை எச்சங்கள் போல்வனவற்றை உணர்த்திச் சொல்லதிகாரத்தை நிறைவு செய்துள்ளார்.

அல்வழித் தொடரைக் கிளவியாக்கத்தும், வேற்றுமைத் தொடரை வேற்றுமை இயல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு என்ற மூவியல்களிலும், பெயர் வினை இடை உரிச்சொற்களைத் தனித்தனி இயல்களிலும், எஞ்சியவற்றை எல்லாம் எச்சவியலிலும் உணர்த்திச் சொல்லதிகாரத்தை ஒன்பது இயல்களாக அமைத்தார்.

தனிமொழியைக் கொண்டு நினைத்த செய்தியை முழுமையாகச் சொல்ல முடியாது. ஆதலின் பொருள் உணர்த்துதற்குச் சிறப்புடைய தொடர்மொழிகளையே முதற்கண் எடுத்துவிளக்கினார். சொல்லிலக்கணம் அறிவதன் பயன் வாக்கியத்திலுள்ள நால்வகைத் தனிமொழிகளையும் அறிதலாம்.

எழுவாய்வேற்றுமையும் விளிவேற்றுமையும் எழுத்ததி காரத்தில் அல்வழிக்கண்ணே முடிக்கப்பட்ட போதிலும், அவற்றிற்கும் வேற்றுமை என்ற பெயர் இருப்பதனானும், கிளவி ஆக்கத்தில் விளக்கப்படும் செப்பிற்கும் வினாவிற்கும் எழுவாய் வேற்றுமை மிகவும் பயன்படுதலினானும், விளிவேற்றுமை எழுவாய் வேற்றுமையின்திரிபே ஆதலானும் அவை சொல்லதி காரத்தில் வேற்றுமை பற்றிய இயல்களில் விளக்கப்பட்டன.

கிளவி ஆக்கம் - சொல்லினது தொடர்ச்சி; சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள்கள்மேல் ஆகுமாறு கிளவியாக்கமாகும். அஃது அதனைக் குறிப்பிடும் இயலை உணர்த்தியமையின் ஆறாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

இனச்சுட்டு இல்லா - இனத்தைக் குறிக்கும் செயல் இல்லாத. தெய்வம் சுட்டிய - தெய்வத்தைக் குறித்த. எனவே சுட்டு என்பது குறிப்பு என்னும் பொருளது.

சுட்டு என்பது சுட்டப்படும் மக்கள் இனத்தாரைக் குறித்தலின் ஆகுபெயர். அ என்னும் சுட்டு ஆ என நீண்டு நின்றது.

இருதிணையின் - இருதிணையின்கண்ணும் எனக் கண்உருபும் உம்மும் தொக்கு நின்றன.

திணையிடமாக அத்திணைக்கண் உள்ள பால்களைச் சொற்கள் குறிப்பிடும்.

இந்நூற்பா சொல்லிலக்கணம் கூற எழுந்தது. திணை இடமாகச் சொற்கள் பால்களைத் தெரிவிக்கக் கருவியாக உதவும். அறிசொல் - அறிவார்க்குக் கருவியாகிய சொல் (சொ. 2) என்ற குறிப்பினை நோக்குக. இவர் சேனாவரையரைப் போல வடமொழி இலக்கணத்தில் வல்லவர். எனினும் அம்மரபினை ஈண்டுக் கொள்ளவில்லை. சொல்லே பொருளை உணர்த்தும் என்பது வடநூல் மரபு.

தொடர்மொழி, தொகைநிலை-தொகாநிலை-என்ற இருவகையாக வரும் என்பது இவர் கோட்பாடு. தொகை நிலைக்கு அறுவகைத் தொகைகளையும் எடுத்துக் காட்டுகிறார். தொகாநிலைக்கு எழுவாய்த் தொடர், இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர், வினை முற்றுத் தொடர், வினையெச்சத் தொடர், செவ்வெண் தொடர் என்பனவற்றை எடுத்துக்காட்டுகிறார். செவ்வெண் யாண்டும் தொகை பெற்றே வரும் என்றலின் 'நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என ஐந்து' என்று தொகை குறிப்பிடப்பட்டிருத்தல் வேண்டும்.

உயர்திணை - உயர்வானதாகிய திணை என ஐம்பால் அறியும் பண்பு விரிக்கப்படும் பண்புத்தொகை என்கிறார். உயர்ந்த திணை என விரிப்பின் வினைத்தொகையுமாம் என வினைத்தொகையையும் உடன்படுகிறார்.

திணை என்பதற்குப் 'பொருள்' என்று இவர் பொருள் செய்கிறார்.

**பால்மயக் குற்ற ஐயக் கிளவி**
**தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்**-(சொ. 23)

என்ற இடத்து ஆசிரியர் திணை என்பதனைப் பொருள் என்ற சொல்லான் குறிப்பிடுதல் காண்க.

திணை என்பது இலக்கண மரபுச்சொல் என்பதனை உணர்த்தப் பொருள் என்னாது திணை என்றார். என்மனார் என்பது செய்யுள் முடிபு எய்திய 'என்ப' என்பதன் திரிசொல் என்றார். 'என்ப' என்பது பகரம் குறைந்து, 'மன், ஆர்' இணைந்து என்மனார் என்றாயிற்று என்ற கருத்தை மறுக்கிறார். இறப்பும் எதிர்வும் மயங்கும் (சொ. 240) ஆதலின் எதிர்காலச் சொல்லாகிய என்மனார் இறந்தகாலம் குறிக்கின்றது என்கிறார். ஆண், பெண், அலி என்ற எல்லோரையும் குறிக்க 'மக்கட் சுட்டு' என்றார். மக்கள் அல்லாத உயிர்ப்பொருள், உயிரில்பொருள் எல்லா வற்றையும் குறிக்க 'அவரலபிற' என்றார். இசைக்குமன: செய்ம்மன - செய்யுமன என்னும் தொழிற்பெயர்.

இசைக்குமவை என்ற எழுவாய் சொல் என்ற பெயர்ப் பயனிலை கொண்டது. 'செய்ம்மன' பற்றிய இவர் கருத்தினை சொ. 218 ஆம் நூற்பா உரையுள் காண்க.

## கிளவியாக்கம்

## கல்லாடனார் விருத்தி உரை

### உயர்திணை அஃறிணை

1. ***உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே***
***அஃறிணை என்மனார் அவர்அல பிறவே***
***ஆஇரு திணையின் இசைக்குமன சொல்லே.***

என்பது சூத்திரம்.

இவ் அதிகாரம் என்நுதலி எடுத்துக்கொள்ளப் பட்டதோ எனின், அதிகாரம் நுதலியதூஉம் அதிகாரத்தினது பெயர் உரைப்பவே விளங்கும். இவ் அதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், சொல் அதிகாரம் என்னும் பெயர்த்து. அஃது

இடுகுறியோ காரணக்குறியோ எனின், காரணக்குறி. என்னை காரணம் எனின், சொல் உணர்த்தினமை காரணத்தின் என்பது. என்னை? கிளவி ஆக்கம் எழுவாயாக எச்ச இயல் இறுதியாகக் கிடந்த ஒன்பது ஓத்துக்களுள்ளும் சொல்லின்கண் கிடந்த விகற்பம் எல்லாம் ஆராய்ந்தான் எனக்கொள்க.

அதிகாரம் என்றதன் பொருண்மை என்னை எனின், முறைமை. அவ் ஓத்துக்களுள்ளும் எனைத்து வகையான் உணர்த்தினானோ எனின், எட்டு வகைப்பட்ட இலக்கணத்தான் உணர்த்தினான் என்பது. அவை உணரச் சொல் உணர்ந்தான் ஆம்.

அவை யாவை எனின், இரண்டு திணை வகுத்து, அத்திணைக்கண் ஐந்து பால் வகுத்து, ஏழு வழு வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறு தொகை வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டு இடத்தான் ஆராய்ந்தானாம் என்பது. இவற்றுள் வழு என்பது அமையாச் சொல்லிற்கு இலக்கணம் ஆமாறு என்னையோ எனின், இன்மை முகத்தான் இலக்கணமாம் என்று உணர்க.

அவற்றுள் இரண்டு திணை ஆவன உயர்திணையும் அஃறிணையும் என இவை.

ஐந்து பால் ஆவன : ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என இவை.

ஏழு வழு ஆவன : திணைவழூஉ, பால்வழூஉ, இடவழூஉ, காலவழூஉ, மரபுவழூஉ, செப்பு வழூஉ, வினாவழூஉ என இவை.

வேற்றுமை எட்டு ஆவன : எழுவாய் வேற்றுமை முதல் ஆக விளி வேற்றுமை ஈறுஆகக் கிடந்த இவை.

தொகை ஆறு ஆவன : வேற்றுமைத்தொகை, உவமத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித்தொகை என இவை.

மூன்று இடம் ஆவன: தன்மை, முன்னிலை, படர்க்கை என இவை.

மூன்று காலம் ஆவன : இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என இவை.

இரண்டு இடம் ஆவன : வழக்கும் செய்யுளும் ஆகிய இவை.

இவ்வாறு சொல் இலக்கணம் எட்டு என்றற்கு விதி உரையிற்கோடல் என உணர்க.

இனிப் பிற இலக்கணம் உண்டு எனினும், இவை பெரும்பான்மைய என்று ஆதல், அவையும் இவற்றுள் அடங்கும் என்று ஆதல் கொள்ளப்படும் என்க.

மற்றுச் சொல் என்றதற்குப் பொருண்மை என்னை எனில், ஓசை என்றவாறு. ஆனால் கடல் ஒலியும், கார் ஒலியும், விண் ஒலியும் சொல்ஆம் பிற எனின், அற்று அன்று. ஓசை எனினும், அரவம் என்னும், இசை எனினும், ஒலி எனினும் எழுத்தான் ஆம் ஓசைக்கும் எழுத்துஅல் ஓசைக்கும் பொது. கிளவி எனினும், மாற்றம் எனினும், மொழி எனினும் இவை எல்லாம் எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசைக்குமேல் நிற்கும்.

எனவே, எழுத்தொடு புணராது பொருள் அறிவுறுக்கும் ஓசையும் உளவோ எனின், உள. அவை முற்கும், வீளையும், இலதையும், அனுகரணமும் என்று இத்தொடக்கத்தன. அவை சொல் எனப்படா. பொருள் அறிவுறுக்கும் எழுத்தொடு புணரா ஓசை மேலது அன்று ஆராய்ச்சி. எனவே எழுத்துஅல் ஓசையும், எழுத்தொடு புணராது பொருள் அறிவிக்கும் ஓசையும், எழுத்தொடு புணர்ந்து பொருளை அறிவிக்கும் ஓசையும், எழுத்தொடு புணர்ந்தே பொருளை அறிவுறுத்தாது இறிஞி, மிறிஞி என்றாற்போல வரும் ஓசையும்- என ஓசை நான்கு வகைப்படும். அந்நான்கனுள் பின்நின்ற இரண்டும் இவ்வதிகாரத்து ஆராயப்படுகின்றன.

மேல் அதிகாரத்தோடு இவ் அதிகாரத்திடை இயைபு என்னையோ எனின், மேல் பாயிரத்துள் எழுத்தும் சொல்லும் பொருளும் என நிறுத்தார். நிறுத்த முறையானே எழுத்து உணர்த்திச் சொல் உணர்த்திய எடுத்துக்கொண்டார் என்பது.

எழுத்தொடு சொல்லிடை வேற்றுமை என்னை எனின், தன்னை உணர்த்தி நின்றவழி எழுத்து எனப்படும்; தான் இடை நின்று பொருள் உணர்த்தியவழிச் சொல் எனப்படும்.

இம்முதல்ஓத்து என்நுதலி எடுத்துக்கொள்ளப் பட்டதோ எனின், ஓத்து நுதலியதூஉம் ஓத்தினது பெயர் உரைப்பவே விளங்கும். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், கிளவி ஆக்கம் என்னும் பெயர்த்து.

கிளவி என்பது சொல்; ஆக்கம் என்பது சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு. சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவி ஆக்கம் என்னும் பெயர்த்து. ஒருவன்மேல் ஆமாறு இது, ஒருத்திமேல் ஆமாறு இது, பலர்மேல் ஆமாறு இது, பலவற்றின்மேல் ஆமாறு இது, வழு ஆமாறு இது, வழு அமையுமாறு இது - எனப் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவி ஆக்கம் என்னும் பெயர்த்து ஆயிற்று. மற்று ஏனை ஓத்துக்களுள்ளும் பொருள்கள் மேல் ஆமாறே அன்றோ உணர்த்தினது? பொருள் அல்லவற்றின்மேல் ஆமாறு உணர்த்தியது இல்லை எனின், ஏனை ஓத்துக்களுள் பொருள்கள் மேலாய் நின்றவற்றின் இலக்கணம் உணர்த்தினார்; ஈண்டு அவைதம்மை ஆமாறு உணர்த்தினார் என்க.

மற்றுப் பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும், இடைச்சொல்லும், உரிச்சொல்லும் எனச் சொல்லும் நான்கே ஆதலான் ஓத்தும் நான்கே ஆகற்பால எனின், ஆகா. என்னை? நான்கு வகைப்பட்ட சொல்லிற்குப் பொது இலக்கணம் இவ்வோத்தினுள் உணர்த்தினார். அவற்றுள் முதற்கண்ணது பெயர்ச்சொல் ஆதற்கு இலக்கணம் வேற்றுமை ஓத்துள்ளும், வேற்றுமை மயங்கியலுள்ளும், விளிமரபினுள்ளும்

உணர்த்தினார். உணர்த்திய இலக்கணம் உடைய பெயரைப் பெயர்இயலுள் உணர்த்தினார். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த வினையை வினைஇயலுள் உணர்த்தினார். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த இடைச்சொல்லை இடைச்சொல் ஓத்தினுள் உணர்த்தினார். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த உரிச்சொல்லை உரிச்சொல் ஓத்தினுள் உணர்த்தினார். பின்னை எல்லா ஓத்தினுள்ளும் எஞ்சி நின்ற சொற்களை எச்ச இயலுள் உணர்த்தினார். இவ்வகையால் எல்லாம் உணர்த்தினார் ஆகலின் இவ்வோத்து எல்லாம் வேண்டிய தூஉம், இம்முறையே கிடந்ததூஉம் ஆயிற்று.

இதன் முதல்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள் :** இனி உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே என்பது உயர்திணை என்று சொல்லுப ஆசிரியர், மக்கள் ஆகிய நன்கு மதிக்கப்படும் பொருளை என்றவாறு. அஃறிணை என்மனார் அவர்அல பிறவே என்பது அஃறிணை என்று சொல்லுப ஆசிரியர், அவரின் நீங்கிய அல்ல ஆகிய பிற பொருளை என்றவாறு. ஆஇருதிணையின் இசைக்குமன சொல்லே என்பது அவ் இரண்டு பொருளையும் உணர்த்தும் சொற்கள் என்றவாறு. எனவே உயர்திணைச் சொல்லும், உயர்திணைப் பொருளும், அஃறிணைச் சொல்லும், அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின.

உயர் என்னும் சொல்லின் முன்னர்த் திணை என்னும் சொல் வந்து இயைந்தவாறு யாதோ எனின், ஒருசொல்முன் ஒருசொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என இம்மூன்றுவகை அல்லது இல்லை. இதற்கு விதி உரையிற்கோடல் என்னும் தந்திர உத்தி. அவற்றுள் தொகைநிலை வகையான் வந்தது யானைக்கோடு என்பது. எண்ணுநிலை வகையான் வந்தது நிலனும் நீரும் என்பது. பயனிலை வகையான் வந்தது சாத்தன் உண்டான் என்பது.

மற்று எச்சவகை, அடுக்குவகை, பொருள்கோள்வகை, ஆக்கவகை, இடைச்சொல்வகை, உரிச்சொல்வகை என்றாற்போலப் பிறவும் வகை உள எனின், நால்வகைச் சொல்லினும் சிறப்புடைய பெயரினையும் வினையின் சிறப்பு உடைய முற்றுச் சொல்லினையும் பற்றி, வழக்கு இடத்தும் பெரும்பான்மையும் வருவன அவையே ஆகலின் அம்மூன்று அல்லது இல்லை என்றார்போலும்.

அவை ஆவன, எச்சவகை : உண்டுவந்தான், உண்ட சாத்தன் என்றாற் போல்வன. அடுக்குவகை : 'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ' என்றாற் போல்வன. பொருள்கோள்வகை : 'சுரைஆழ அம்மி மிதப்ப' என்றாற் போல்வன. ஆக்கவகை : சாத்தன் தலைவன் ஆயினான் என்றாற் போல்வன. இடைச்சொல்வகை: 'யானோ தஞ்சம் பெரும' என்றாற்போல்வன. உரிச்சொல்வகை : 'செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப' என்றாற்போல்வன.

அவற்றுள் இது தொகைநிலை வகையான் வந்தது; தொகைநிலை ஆறனுள்ளும் வினைத்தொகை; வினைத் தொகை மூன்றனுள்ளும் இறந்தகால வினைத்தொகை.

என்மனார் என்றது, என்ப என்னும் முற்றுச் சொல்லினைக் 'குறைக்கும் வழிக் குறைத்தல்' என்பதனால் பகரம் குறைத்து, 'விரிக்கும்வழி விரித்தல்' என்பதனால் மன்னும் ஆரும் என்பன இரண்டு இடைச்சொல் பெய்து விரித்து என்மனார் என்றார் ஆயிற்று.

இம்முற்றுச் சொற்கும், பெயர் ஆகிய ஆசிரியர் என்பது செய்யுள் விகாரத்தால் தொக்கது. இஃது எச்சவகை.

'என்றார்' எனற்பாலதனைக் காலமயக்கத்தால் 'என்ப' என்றார் என உணர்க.

இனி, உயர்திணை என்பதற்குமுன் என்ப என்னும் சொல், முதல்நூல் ஆசிரியனது கூற்றினைப் பின் தான் கூறுகிற

மக்கள்சுட்டு என்பதனோடு இயைவித்தற்குக் கொண்டுகூறும் நிலைமைக்கண் வந்தது ஆகலின், உயர்திணை என்னும் சொல்லும் என்ப என்னும் சொல்லும், பின் வருகிற மக்கள்சுட்டு என்னும் சொல்லினொடு வேற்றுமைத் தொகையுள் இறுதி உருபுத் தொகைநிலை வகையான் வந்தது எனப் பொருள்இயைபு கூறுவதுஅல்லது தம்முள் சொல்இயைபு இல என உணர்க.

மக்கள்சுட்டு என்பது மக்கள் ஆகிய சுட்டு; இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகை. சுட்டு என்பதன் பொருள் நன்கு மதிப்பு. அஃது ஆகுபெயரான் மக்கள்மேல் நின்றது. மக்கள் என்னாது சுட்டு என்றது, தான் உயர்திணை என இடுகின்ற குறியீட்டிற்குக் காரணம் இஃது என்பது விளக்கல் வேண்டிப்போலும்.

இனி, ஆசிரியர் என்பதனொடு மக்கள் சுட்டு என்பதூஉம் பொருள் இயைபு அல்லது சொல் இயைபு இன்று என உணர்க. ஏ என்பது ஈற்று அசை.

அஃறிணை என்பது, அல்லது ஆகிய திணை எனக் குணப்பண்பு பற்றி வந்த பண்புத்தொகை. உயர்திணை அல்லது ஆகியது என மேல்நின்ற உயர்திணை என்னும் சொல் வருவித்துக்கொள்க. உயர்திணை என்பதற்கு ஏற்ப, இழிதிணை என்றிலனேனும், பொருள் நோக்கும் என உணர்க.

முன்நின்ற சுட்டு என்பதன்முன் அஃறிணை என வந்த சொல்லும் சூத்திரத்துள் பொருட்படை என்னும் வினைமுடிவின் இறுதிக்கண் வந்தது. ஆகலின், பொருள்இயைபுஅல்லது சொல்இயைபு இன்று என உணர்க.

ஈண்டும் என்மனார் என்பது மேற்சொல்லியவாறே நின்றது என உணர்க.

'அவர்அல' என்பது நீக்கப்பொருண்மைக்கண் தொக்க ஐந்தாம் வேற்றுமைத் தொகை. 'அல்லபிற' என்பது அல்ல

ஆகிய பிற என இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகை என உணர்க. 'பிறவற்றை' என்னும் இரண்டாம் வேற்றுமை இறுதிக்கண் தொக்கு நின்றது.

'அவர்அல' என்னாது 'பிற' என்றது, அஃறிணை உயிர்உடையனவும், உயிர் இல்லனவும் என இருகூறாய், அவ்விருகூறும் தத்தம் வகையானும் வேறுபட்டு நின்றமை விளக்கிய என்பது. ஏ என்பது ஈற்றசை.

அ என்னும் சுட்டு 'நீட வருதல் செய்யுளுள் உரித்தே' என்பதால் நீண்டு, பிறவும் வேண்டும் செய்கைப்பட்டு, 'ஆயிருதிணை' என நின்றது.

இருதிணை என்பதனோடு அ என்பது பெயர் பற்றி வந்த 'தத்தம் குறிப்பின் பொருள் செய்யும் இடைச்சொல்' என்பதுஅல்லது, மூவகையுட் சொல் இயைபு கூறப்படாது. இருதிணை என்பது இரண்டு ஆகிய திணை என இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை.

'பிற' என்பதனோடு 'ஆயிருதிணை' என்பதூஉம் பொருட்படை ஆகிய வினைமுடிவின்கண் வந்தது ஆகலின், சொல் இயைபு இன்று என்பது.

'திணை' என்பதனோடு 'இசைக்கும்' என்பது தொகைநிலையான் வந்தது. தொகையுள் இரண்டாம் வேற்றுமைப் பொருள் நிற்ப உருபு தொகுதலின் உருபுத் தொகை எனப்படும்.

இனி, 'பெயரும் தொழிலும்' என்று எழுந்த பொதுவிதியை இரண்டாவதற்கு விலக்கிச் 'சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்' என்று சிறப்பு விதி ஓதுதலின், செய்யுள் விகாரத்தான், சாரியை நிற்ப உருபு தொக்கது போலும். ஆயிரு திணையினையும் என்னும் முற்றும்மையும் செய்யுள் விகாரத்தான் தொக்கது.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். அது பின்நின்ற சொல் என்பதனொடு பயனிலை வகையான் வந்தது.

'இசைப்பு இசை ஆகும்' (உரி இயல்-12) என்பதனான், இசைக்கும் என்பதன் பொருள் ஒலிக்கும் என்பதே ஆயினும், சொல்லிற்குப் பொருள் உணர்த்தும்வழிஅல்லது ஒலித்தல் கூடாமையின், உணர்த்தும் என்னும் தொழிலை இசைக்கும் என்னும் தொழிலான் கூறியவாறாகக் கொள்க. இதுவும் ஒரு மரபுவழு அமைதி போலும்.

பொருளை உணர்த்துவான் ஒரு சாத்தனே எனினும் அவற்கு அது கருவிஆக அல்லது உணர்த்தல் ஆகாமையின், அக்கருவிமேல் தொழில் ஏற்றிச் 'சொல் உணர்த்தும்' என்று கருவி கருத்தாவாகச் சொல்லிற்றாக உணர்க.

'மன' என்பதூஉம் வினைபற்றிய அசைநிலை இடைச்சொல் ஆகலின் அதனோடு இயைபு கூறப்பட்டது. மன் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

இச்சூத்திரத்தான் சொல்லியபொருள் இவ்வதிகாரத்துச் சொல்லுகிற சொல்லது தொகைவரையறையும், அதனை வரையறுக்குங்கால், பொருளான் அல்லது வரையறை இன்மையின், அப்பொருளது தொகை வரையறையும், பொருட்கு நூலகத்து ஆட்சி பெற்ற குறியீடும் உணர்த்தினவாறு ஆயிற்று. (1)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**1. 'உயர்திணை . . . சொல்லே'-**

அதிகாரம் என்பதற்கு இளம்பூரணரையும் நச்சினார்க்கினியரையும் பின்பற்றி முறைமை என்று பொருள்கூறினும் 24ஆம் நூற்பா உரையிலும் 62ஆம் நூற்பா உரையிலும், ஓரிடத்து நின்ற சொல் பல நூற்பாக்களொடு

சென்று இயைதலையும், ஒரு பொருள் பற்றி வரும் பல நூற்பாக்களின் தொகுதியையும் முறையே அதிகாரம் என்று குறிப்பிடுதலைக் காணலாம். சொல் இலக்கணத்தை இன்மை முகத்தான் உரைத்தலாவது 'பெயர்நிலைக்கிளவி காலம் தோன்றா' (71) 'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது' (201) என்பன போல்வது. உண்மை முகத்தான் உரைத்தலாவது 'இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்' (19) 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' (20) என்பன போல்வது.

ஆசிரியன் குறிப்பிடாதிருக்கவும் சொல்லிலக்கணத்தை எட்டு வகையாகப் பகுத்துக்கோடற்கு விதி 'உரையிற் கோடல்' என்ற உத்தி வகையாகும்.

சொல் என்பதற்குப் பொருள் ஓசை என்று குறிப்பிடும் இவர், ஓசை ஒலி என்பன ஒரு பொருட்கிளவிகளாய் எழுத்தான் ஆகும் ஓசைக்கும் எழுத்து அல்லா ஓசைக்கும் பொது என்கிறார். 'ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே' என்ற தேவாரத் தொடரில் ஓசையும் ஒலியும் வெவ்வேறாகக் குறிக்கப்பட்டுள்ளன. எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுத்தும் ஓசையே கிளவி, மாற்றம், மொழி எனக் கூறப்படும் என்கிறார்.

முற்கு -முக்குதலால் ஏற்படும் ஒலி.

வீளை - நாவினை மடித்து உதட்டைக் குவித்து எழுப்பப்படும் சீழ்க்கை ஒலி.

இலதை - அடி நாவின் அடியிலிருந்து எழுப்பப்படும் ஒலிக்குறிப்பு.

அனுகரணம் - வேறு ஒன்றன் ஒலிபோல எழுப்பும் ஒலிக்குறிப்பு.

காரொலி - மேகத்தின் இடியோசை.

விண் ஒலி - ஒருவர் ஒலித்ததன் எதிரொலியாய் விண்ணில் இயங்கிச் செவிப்படும் ஓசை.

எழுத்து அல் ஓசை - கடல் ஒலி, கார் ஒலி போல்வன.

எழுத்தொடு புணராது பொருள் அறிவிக்கும் ஓசை - முற்கு, வீளை, இலதை போல்வன.

எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவிக்கும் ஓசை - நாம் பேசும் பலவகைச் சொற்கள்.

எழுத்தொடு புணர்ந்தே பொருள் அறிவுறுத்தாத ஓசை - இசைநிறை, அசைநிலைச் சொற்கள்.

பொருளொடு புணரும் சொற்களும், இசைநிறை அசைநிலை முதலாகப் பொருளொடு புணராச் சொற்களுமே இச்சொல்லதிகாரத்து ஆராயப்படுகின்றன. இறிஞி, மிறிஞி என்றாற்போல எழுத்தினான் ஆக்கப்பட்ட ஒலிகள் இங்கு ஆராயப்படவில்லை.

பாயிரத்துள் 'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' என்று குறிப்பிட்டவர் பனம்பாரனார் எனினும், அவர் நூல் முழுவதையும் உற்றுநோக்கித் தொல்காப்பியனார் கருத்தை உட்கொண்டு, தொல்காப்பியனார் நூல் முழுமையாக இயற்றிய பின்னரே பாயிரம் கூறினார் ஆயினும், தொல்காப்பியனார் கருதியதனை உட்கொண்டு கூறினார் ஆதலின், ஒற்றுமைநயத்தான் பாயிரத்துள் கூறப்பட்டது தொல்காப்பியனார் தம் மனத்துள் நிறுத்தியதாகவே கொள்ளப்படும்.

ஏனை ஓத்துக்களுள் பொருள்களை உணர்த்தும் சொற்களின் இலக்கணம் உணர்த்தினார். கிளவியாக்கத்துள் சொற்கள் பொருள்கள்மேல் ஆமாற்றை உணர்த்துகிறார். பெயர்ச் சொற்களின் இலக்கணத்தை வேற்றுமை இயல் முதலிய மூன்று இயல்களிலும் உணர்த்திப்

பெயர்ச்சொற்களின் பட்டியலைப் பெயரியலில் உணர்த்தினார் ஆசிரியர் என்பதே இவர் கருத்து.

திணையின் என்பதற்கு இவர் இரண்டன்உருபு விரித்தல் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் கருத்தை உட்கொண்டேயாம். இசைக்குமன என்று பாடம் ஓதி அது முற்று என்று கொண்டார். தொடர் மொழிகள் தொகை நிலை, எண்ணுநிலை, பயனிலை வகையான் வருவன என்பதனையே இவர் குறிப்பிடுகிறார். எச்சவகை, அடுக்குவகை போல்வனவும் இவற்றுள் அடங்கும் என்று குறிப்பிடுகிறார்.

வினைத்தொகை மூன்று : இறந்தகால - நிகழ்கால - எதிர்கால வினைத்தொகைகள். முற்றுச்சொற்கள் 'எத்திறத்தானும் பெயர் முடிபினவே' (429-சே.) ஆதலின் முடிக்கும் பெயராகிய ஆசிரியர் என்பது விகாரத்தான் தொக்க செய்தி எச்சவகையின் பாற்படும் என்கிறார்.

என்றார் என இறந்தகாலத்தான் சொல்ல வேண்டியதனை என்மனார் எனக் காலமயக்கத்தான் எதிர்காலத்தான் குறிப்பிட்டார் என்கிறார். உயர்திணை என்ற இலக்கணக் குறியீட்டுச் சொற்குக் காரணத்தை விளக்குவதற்காக மக்கட்சுட்டு என்றார். உயர்திணை என்பதற்கு ஏற்ப, அதன் மறுதலைப் பொருள் இயைபுபற்றி இழிதிணை எனப்படல் வேண்டும். பொருள் இயைபு பற்றியே சொற்பொருள் விளக்கம் தருகிறார்.

அவர் அல பிற - அவரின் நீங்கிய அவரல்லாத பொருள் களாகிய பிற என இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

அ+இருதிணை - ஆயிருதிணை. அ - சுட்டு இடைச் சொல்.

ஆயிரு திணையின் என்புழி உருபும் உம்மையும் விகாரத்தான் தொக்கன. இசைக்கும் என்பது மரபு

வழுவமைதி என்பதும், பொருளை உணர்த்தும் கருவியாகிய சொல் கருவிக் கருத்தாவாக வந்தது என்பதும், இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்று என்பதும் விளக்கப்பட்டன.

இந்நூற்பாவான் உயர்திணை அஃறிணை என்ற இலக்கணக் குறியீடுகள், உயர்திணைச்சொல் அஃறிணைச் சொல் என்ற சொற்பாகுபாடுகள், உயர்திணைப் பொருள் அஃறிணைப்பொருள் என்ற பொருட்பாகுபாடுகள் ஆகியவை விளக்கப்பட்டன.

பெரும்பாலும் இளம்பூரணர் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டசெய்திகள் உரையில் இடம்பெறுகின்றன.

### கிளவியாக்கம்

## ஒருவர் உரை

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின், சொல் அதிகாரம் என்னும் பெயர்த்து. சொல் அதிகாரம் என்பது இடுகுறியோ காரணக் குறியோ எனின், காரணக்குறி. என்னை? சொல் உணர்த்தினமையான் பெற்றாம் என்க. அதிகாரம் ஆவது முறைமை என்றவாறாம்.

இனிச் சொல் என்ற பொருண்மை என்னை எனின், ஓசை என்றவாறாம். ஓசையைச் சொல் என்றீரேல், கடல் ஒலியும் சங்கு ஒலியும் விண் ஒலியும் சொல் ஆகாவோ எனின், இசை எனினும், அரவம் எனினும், கிளவி எனினும், மொழி எனினும் எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசைமேல் நிற்கும். முற்கும், வீளையும், இலதையும் என்னும் தொடக்கத்தனவோ எனின், அவை எழுத்தொடு புணராமையின் சொல் ஆகா; அவையும் பொருள் அறிவுறுக்கும் என அறிக.

இனி, எழுத்தொடு புணர்ந்த ஓசையே சொல் எனப்படுவது என்று அறிக. அச்சொல் எழுத்தினான்

ஆகி வருதலான், ஆக்குவதை முன் உணர்த்தி, ஆக்கப்பட்டதனைப் பின் உணர்த்தினார். வரி எழுத்தும் சொல்லாம். பிறவாமையின் சொல் முன் வைக்கற்பாலீர் எனின், அகரம் என்ற இடத்து நான்கு சொல்லின் ஒன்று மூன்று சொல்லின் . . . . . . . . என்பது இயற்றிற்கும்.

இனி, அச்சொல் எனைத்து வகையான் உணத்தினாரோ எனின், எட்டு வகையான் உணர்த்தினார். அவ் எட்டுவகையும் யாவை எனின், இரண்டு திணை வகுத்து, அத்திணைக்கண் ஐந்து பால் வகுத்து, எழுவகை வழூஉ வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறுவகைப்பட்ட தொகை வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டு இடம் வகுத்தலான் இவை சொல் ஆராய்ந்த எட்டு இலக்கணமும் ஆவன.

அவற்றுள், இரண்டு திணை என்பன : உயர்திணை, அஃறிணை.

ஐந்து பால் என்பன : ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல.

ஏழ் வழூஉ ஆவன : திணைவழூஉ, பால் வழூஉ, இட வழூஉ, கால வழூஉ, மரபு வழூஉ, செப்பு வழூஉ, வினா வழூஉ.

எண் வகை வேற்றுமை ஆவன : எழுவாய்வேற்றுமை முதலாக விளி வேற்றுமை ஈறாக ஓதப்பட்டன.

அறுவகைப்பட்ட தொகை ஆவன : வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்பன.

மூன்று இடம் என்பன: தன்மை, முன்னிலை, படர்க்கை.

மூன்று காலம் என்பன : இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம்.

இரண்டு இடம் என்பன : வழக்கு இடம், செய்யுள் இடம் என இவ்வாறு சொல்லுப.

இவ்எட்டன் புடைபெயர்ச்சியே கிளவிஆக்கம் முதலாக எச்சஇயல் இறுதி ஆகக் கிடந்த ஒன்பது ஓத்தினுள்ளும் ஆராயப்பட்டது எனக்கொள்க.

இனி, கிளவி ஆக்கம் என்பது இடுகுறியோ, காரணக் குறியோ எனின், காரணக்குறி. என்னை காரணம் எனின், கிளவி என்பது சொல்; ஆக்கம் என்பது அமைத்துக்கோடல்; சொற்களை அமைத்துக் கொள்ளப்பட்டமையின் கிளவி ஆக்கம் என்னும் பெயர் பெற்றது, அரிசி ஆக்கிக்கொண்டார் என்பதுபோல. மற்று அரிசி ஆக்குமிடத்து, நொய்யும் நுறுங்கும் களைந்து கொள்ளப்படுவதுபோல ஈங்கும் களைந்துகொள்ளப்படும் சொல் உளவோ எனின், உள. அவை வழீஇயின சொல் களைந்து, வழுவாதன கொள்ளப்பட்டன இவ்வோத்தினுள் என்பது.

இன்னமும் ஒன்று : கிளவி என்பது சொல். ஆக்கம் என்பது சொற்களைப் பொருள்மேல் ஆமாறு உணர்த்தினமையின், சொல் ஆக்கம் என்று பெயர் பெற்றது. என்னை? ஒருவன்மேல் ஆமாறு இது, ஒருத்திமேல் ஆமாறு இது, பலர்மேல் ஆமாறு இது, ஒன்றன்மேல் ஆமாறு இது, பலவற்றின்மேல் ஆமாறு இது, வழு ஆமாறு இது, வழு அமையுமாறு இது - எனப் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவிஆக்கம் என்று பெயர் பெற்று, மற்று ஏனை ஓத்தின் உணரும் பொருள் மேலாய் நின்றவாறு இலக்கணம் உணர்த்தினார். ஈண்டும் அவை தம்மையே ஒன்பது ஓத்தினால் உணர்த்தினார் என்பது.

இனிப் பெயர் முதலாகிய நான்கு வகைப்பட்ட சொல்லிற்கு இவ் ஓத்தினுள் பொது இலக்கணம் உணர்த்தினார். பெயர்ச்சொல்லது இலக்கணம் வேற்றுமை ஓத்தினுள்ளும், வேற்றுமை மயங்கியலுள்ளும், விளிமரபி னுள்ளும் உணர்த்திப் பெயர்முதல் உரி ஈறாக அவற்றது இலக்கணம் அடைவே விரித்து உணர்த்தி, எஞ்சி நின்ற

சொற்களை எச்ச இயலான் உணர்த்தினார் என்க. இவ்வகையான் எல்லாம் உணர்த்தினார் ஆகலின் ஒன்பது ஓத்தும் வேண்டிற்று என்க.

## சொல், பொருள்-வரையறை

1. ***உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே***
***அஃறிணை என்மனார் அவர்அல பிறவே;***
***ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.***

என்பது மக்கள் என்று சுட்டப்படும் பொருளை உயர்திணை என்று சொல்லுப ஆசிரியர். மக்கள் அல்லாத பிற பொருளை அஃறிணை என்று சொல்லுப ஆசிரியர். அவ்விரு திணையினையும் சொல்லும் சொல்லும், உயர்திணைச் சொல்லும் அஃறிணைச்சொல்லும் ஆம்.

எனவே, சொல்லும் பொருளும் வரையறுக்கப்பட்டன.

உயர்திணை என்றது பிறப்பினில் சிறப்பு எய்துதற்கு மக்கள் நிலைமை மிக்க சார்வு ஆகலான்.

என்மனார் என்பது என்ப என்னும் முற்றுச்சொல் 'குறைக்கும்வழிக் குறைத்தல்' என்பதனான் பகரத்தைக் குறைத்து, விரிக்கும்வழி விரித்தல் என்பதனான் மன்னும் ஆரும் என்பன இரண்டு இடைச்சொல் பெய்து விரித்தார்.

'என்றார்' என்பதனை 'என்மனார்' என எதிர்காலத்தால் சொல்லியது என்னை?

'இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி'
(வினை-49)

என்பது ஆகலான் கூறினார்.

இசைக்கும் என்பது செய்யும் என்னும் முற்றுச் சொல். 'மன்' என்ற இடைச்சொல் 'மன' என ஈறு திரிந்தது. 'மன்' என்று பாடம் ஓதுவாரும் உளர். உயர்ந்த திணை என்னும் இறந்தகாலத் தொகாநிலை உயர்திணை எனத் தொக்கது.

ஆசிரியர் என்பது இச்சூத்திரத்து இல்லை எனின், என்ப என்னும் முற்றுச் சொல்லே பெறும், முற்றுச்சொல் எச்சப்பெயர் கொண்டு முடியும் என்பது ஆகலான்.

அவ்விருதிணையினை-என இரண்டாவது விரித்து உரைக்க. (1)

## ஒருவர் உரைவிளக்கம்

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவர் உரையையும் ஆங்காங்குத் தழுவிச் சில விளக்கங்களைத் தந்து வரையப்பட்டுள்ள கல்லாடனார் உரையையே பெரும்பாலும் உட்கொண்டு வரையப்பட்ட இவ்வுரை விளக்கத்தில், பெரும்பாலும் இவ்வுரையிலேயே இடம்பெறும் செய்திகளே விளக்கப்படுகின்றன. ஏனைய செய்திகளின் விளக்கங்கள் அவ்வவ்வுரைகளில் முன்பே கூறப்பட்டுள்ளன.

'பிறவாமையின் சொல்முன் வைக்கற்பாலீர் . . . இயற்றிற்கும்' என்ற தொடர் பிழைபட்டுள்ளது.

**1. 'உயர்திணை . . . சொல்லே.'**

சொல்லின் எட்டுவகைகளின் வினை நிகழ்ச்சியே கிளவியாக்கம் முதலாக எச்சவியல் இறுதியாகக் கிடந்த ஒன்பது ஓத்தினுள்ளும் ஆராயப்பட்டது என்று குறிப்பிடுகிறார்.

கிளவியாக்கத்திற்குச் சேனாவரையர் தந்த விளக்கத்தை முதலிற்கூறி இளம்பூரணர் தந்த விளக்கத்தை அடுத்துக்கூறி இரண்டனையும் உடன்படுகிறார்.

'உயர்திணை என்றது பிறப்பினில் சிறப்பு எய்துவதற்கு மக்கள் நிலைமை மிக்க சார்வாகலான்' என்று விளக்கம் தருகிறார்.

## பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார் உரை

### 1. 'உயர்திணை . . . சொல்லே.'

வழுக்களைந்து சொற்களை ஆக்கிக்கொண்டமையான் கிளவியாக்கம் ஆயிற்று என்ற காரணம் இவ்வோத்தின் முதல் 12 சூத்திரங்கள் நீங்கலான ஏனைய சூத்திரங்களுக்குப் பொருந்தும். சொற்கள் பொருள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் ஆயிற்று என்ற காரணம் இவ்வோத்தின் முதல் 12 சூத்திரங்களுக்கும் பொருந்தும்.

அல்வழித்தொடர் கிளவியாக்கத்துள்ளும், வேற்றுமைத் தொடர் வேற்றுமையியல்-வேற்றுமை மயங்கியல்-விளிமரபு என்ற இயல்களுள்ளும் கூறப்பட்டன என்ற தெய்வச்சிலையார் கூறிய கருத்து பாராட்டப் பட்டுள்ளது.

மக்கட்சுட்டு என்பதற்கு மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருள் என்று பொருள் கூறிப் பின் 'மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும், அது மக்கட்சுட்டு' என்று சேனாவரையர் விளக்கியிருப்பது பொருந்தாது என்பது நச்சனார்க்கினியர் கருத்து.

சேனாவரையர் கருத்துப்படி, தூணை மகன் எனக்கருதினும் அஃது உயர்திணை. அதனுள், அவர் கொண்ட பொருள் மெய் உணர்விற்கும் திரிபு உணர்ச்சிக்கும் பொருந்தும். நச்சினார்க்கினியர் கொண்ட பொருளோ மெய் உணர்விற்கே பொருந்தும். அதனான், அவர் மதப்படி தூணைக் கண்டு மகன் என்று கருதியவழியும் அஃறிணையே வழங்கவேண்டும். உலக வழக்கிலோ உயர்திணையே காணப்படுகிறது. 'மக்கள் என்று கருதப்படும் பொருள்' - 'கருதப்படும்' என்னும் சொல்லின் தாற்பரியத்தை ஊன்றிநோக்கின், இருவகையாய்க் கூறியவற்றுக்கும் பொருளில் மாறுபாடு இல்லை என்று தோன்றுகிறது.

உயர்திணை : சேனா. பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. திணை - சாதி.

நச். இறந்தகால வினைத்தொகை; அஃது ஆகுபெயராய் அப்பொருளை உணர்த்தி நின்றது. திணை - ஒழுக்கம்.

தெய். பண்புத்தொகை; வினைத்தொகையும் ஆம். திணை - பொருள்.

திணை என்பதற்குச் சாதி என்று பொருள் கொள்ளின், சமய ஆற்றலால் கிடைக்கும் அப்பொருளைக் கொண்டே, சேனாவரையர் கூறியவாறு தொகையை விரிப்பது சாத்தியமாயிருக்க, எளிதான அவ்வழியை விடுத்து ஆகுபெயரால் வந்த பொருளை நச்சினார்க்கினியர் கொள்வது கௌரவம் அல்லது மிகை என்னும் குற்றத்துக்கு இடமாகும். உயர்திணை அஃறிணை இரண்டையும் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்து அன்மொழித்தொகையாகவே கொள்ளுதல் நேரிதாகும்.

என்மனார் : சே. செய்யுள் முடிபு எய்தி நின்றது ஓர் ஆர்ஈற்று எதிர்கால முற்றுச்சொல்.

ந. ஆர் ஈற்று நிகழ்கால முற்றுச்சொல்.

தெ. என்ப என்னும் முற்றுச்சொல் திரிந்து நின்றது.

நச்சினார்க்கினியர் 'இச்சூத்திரத்தான் பொருள் இரண்டு சொல் இரண்டு என வரையறுத்தார்' என்று கூறுவதில் 'வாக்கியபேதம்' என்னும் குற்றம் வருகிறது.

சூத்திரப்பொருள் : சொல் மக்களைச் சுட்டும் உயர் திணை, மக்கள் அல்லவற்றைச் சுட்டும் அஃறிணை என்ற இவ்விரண்டு திணையின் கண்ணும் இசைக்கும் என்றவாறு.

இச்சூத்திரத்தில் சொல் என்பது உத்தேசியம். மக்களைக் குறிக்கும் உயர்திணைக்கண்ணும், மக்கள் அல்லாத பிறவற்றைக் குறிக்கும் அஃறிணைக்கண்ணும் இசைக்கும் என்பது விதேயம். விதிக்கப்படுவது விதேயம். எதனைப் பற்றி

வேறொன்று விதிக்கப்படுகிறதோ அஃது உத்தேசியம். உத்தேசியம் முன்னரே அறியப்படின்அன்றி அதனைப் பற்றி மற்றொன்று விதித்தல் இயலாது. இச்சூத்திரத்தில் உள்ள சொல் 'ஓரெழுத்து ஒருமொழி' (எழு. 45) என்ற எழுத்ததிகாரச் சூத்திரத்தான் முன்னரே பெறப்பட்டது. அதனை உத்தேசித்து இங்கு உயர்திணை அஃறிணை இவற்றின்கண் இசைத்தல் விதிக்கப்பட்டது. உத்தேசியம் எழுவாயாயும், விதேயம் பயனிலையாயும் வரும்.

இச்சூத்திரத்தில் உயர்திணை அஃறிணை இவற்றின் இலக்கணம் கூறாது, முன்னோர் கூறிய இலக்கணத்தையே அனுவதித்து, சொல் என்பது உயர்திணை அஃறிணையின்கண் இசைக்கும் என்பது விதிக்கப்படும் என்க.

தெய்வச்சிலையார் 'இசைக்குமன' என்பதனைத் தொழிற்பெயராகக் கொண்டு எழுவாயாக்கிச் சொல் என்பதனைப் பெயர்ப் பயனிலையாகக் கொள்கின்றார். உத்தேசியம் சொல் ஆதலின் அதனையே எழுவாயாகக் கொள்ளுவதே மேலானது.

அவாய்நிலையாகக் கொள்ளப்படும் பெயரை அவாவி நிற்கும் சொல் எச்சப்பெயராகும். இங்கு 'என்மனார்' என்னும் சொல் எச்சப் பெயர் என்பது அவிநயனார் மதம். இச்செய்தி சொல். 425-இன் தெய்வச்சிலையார் உரையானும், நன்னூல் 359-இல் உள்ள மயிலைநாதர் உரையானும் உணர்த்தப்படும்.

'இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம்' என்று இளம்பூரணர் உரையில் உள்ள செய்தி இக் குறிப்புரையாசிரியருக்குப் பொருந்துவதாகத் தோன்ற வில்லை. இஃது எழுதியவர் தவறாகலாம் என்பது இவர் கருத்து.

# பாலசுந்தரனார் உரை

**1. 'உயர்திணை . . . சொல்லே.'**

முகவுரை - தொல்லாசிரியர் நிறுத்த முறையானே இரண்டாவதாகிய 'சொல்' இலக்கணம் பற்றிய மரபுகளை வரைந்து உணர்த்தலின் இவ்வதிகாரம் சொல்லதிகாரம் எனப் பெயர் பெற்றது.

சொல்லான் ஆகும் தொடர்கள் வழுவின்றி ஆக்கம் பெறுமாறும், பெயர்ச் சொற்கள் வேற்றுமை எய்துமாறும், எண்வகை வேற்றுமைகளின் இயல்பும், நால்வகைச் சொற்களின் இயல்பும், அவை செய்யுட் சொல்லாக அமைந்து நிற்குமாறும், அவை தொகையுற்று வருமாறும், பொருள் கோளும் பத்துவகை எச்சமும் பிற மரபுகளும் இவ்வதிகாரத்துள் கூறப்பெறுதலின், சொல் இலக்கணத்தைக் கிளவியாக்கம் முதல் எச்சவியல் ஈறாக ஒன்பது இயல்களாகப் பகுத்துக்கூறுகின்றார்.

சொல் என்பதற்கு 'நாவால் ஒலிக்கப்பெறும் தொடரிசை' என்பது பொருள்.

மொழி, சொல், கிளவி என்பவை வெவ்வேறு சிறப்புப் பொருள் உடையவை எனினும், யாப்பினுள் ஒரு பொருட்கிளவி போல ஆளப்படும்.

கிளவியாக்கம் என்பது மூன்றாம் வேற்றுமைத்தொகை. அஃது கிளவியான் ஆகும் ஆக்கம் என விரியும். ஈண்டு அஃது அன்மொழித்தொகையாய் ஆக்கம் பற்றிய மரபுகளைக் கூறும் இயலுக்கும் பெயராயிற்று.

கிளவி என்ற சொல் 'சகரக்கிளவி'-'வகரக்கிளவி'-என எழுத்தையும், உரையசைக்கிளவி-மாரைக்கிளவி-என அசையையும், பெயர்நிலைக்கிளவி - வினையெஞ்சுகிளவி-எனச் சொல்லையும், இருநான்குகிளவி- தொல்லோர்கிளவி

எனச் சொற்றொடரையும் குறிக்கும் ஆதலின், ஈண்டுக் கிளவி என்பது தனிமொழி தொகைமொழி தொடர்மொழி களுக்கும் பொதுவாக நின்றது.

ஆக்கம் - ஆக்கிக்கொள்ளுதல். அஃதாவது ஒரு பெயரிலிருந்து ஐம்பாற் சொற்களைப் படைத்துக்கோடல். 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' (சொ. 20) என்பதனான் அறிக.

இவ்வியலுள் 'னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்' என்பது முதலாகச் சொற்களை ஆக்கிக் கொள்ளுமாறும், 'வினையின் தோன்றும் . . . மயங்கல்கூடா' (சொ. 11) என்பது முதலாகத் தொடர்களை வழுவின்றி அமைத்துக் கொள்ளு மாறும் கூறலின், இது கிளவியாக்கம் எனப் பெயர் பெற்றது.

யாதானும் ஓர் அடிப்படைச் சொல்லை இருதிணை ஐம்பாலுள் ஒன்றற்கு உரியதாக ஆக்கிக் கொள்ளுதலும், செப்பும் வினாவுமாக வரும் தொடர்மொழிகளை வழுவின்றி ஆக்கிக் கொள்ளுதலும் ஈண்டு ஆக்கமாம்.

சொற்கள் தொடருங்கால் பயனிலையும் தொகை நிலையும் எண்ணுநிலையுமாகத் தொடரும். அவை இயைபும் தகுதியுமாகத் தொடரின் வழாநிலையாம்; இயை பின்றித் தொடரின் வழுவாம். இலக்கண வரையறையின் சிறிது பிறழ்ந்துவரினும், சான்றோர் வழக்காய்ப் பொருள் உணர்ச்சி திரியாமல் மரபாக வருவனவற்றை வழாநிலையாக மேற்கொள்ளுதல் ஆக்கமாம்.

சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தின மையின் கிளவியாக்கம் எனப்பட்டது எனின், பிற இயல் களில் கூறப்பெறுவனவும் பொருள்கள்மேல் ஆமாறே கூறுதலின் அது பொருந்தாது. வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடல் கிளவியாக்கம் எனின், வழுவை நீக்கிக் கொள்ளுதல் இலக்கண முறையாதல் அன்றி ஆக்கம் ஆகிய படைப்பு ஆகாமையின் அதுவும் ஒவ்வுமாறு இல்லை.

இயற்கையாகிய ஓசை ஒலிகளைக் கொண்டு செயற்கையாகச் சொற்களையும் தொடர்களையும் மக்கள் ஆக்கிக்கொண்டமையின் மொழி என்பது மக்கள் ஆக்கப்பொருளாம். அங்ஙனம் முன்னோர்கள் ஆக்கிக் கொண்ட நிலைமையைச் சுட்டி அம்மரபானே சொற்களை ஆக்கிக்கொள்ளவேண்டிய முறைமையைக் கூறுதலே இவ்வியலின் நோக்கமாம்.

மக்களாகிய கருத்து நிலைபெறும் பொருளை உயர்திணை என்று கூறுவர் தொல்லாசிரியர். மக்கட் சுட்டுடையர் அல்லாத பொருளையும் பிற பொருளையும் உயர்வு அல்லாதனவாகிய திணை என்று கூறுவர். அங்ஙனம் அவர்கூறும் அவ்இரு திணைப் பொருள்கள் மேலும் நிலைபேறுடையனவாகிய சொற்கள் தோன்றி இசைக்கும்.

**மண்ணும் மணலும் செறிவுற்று நிற்றலின் நிலம் 'திணை' எனப்பட்டது.**

**பண்புகளான் செறிதலின் நற்குலம் 'திணை' எனப்பட்டது.**

***'தெறுவது அம்மஇத் திணைப்பிறத் தல்லே'*** **(குறுந்.45)**

**என்பது காண்க.**

மக்கட்சுட்டுடையாரின் அறிவும் ஆற்றலும் ஒழுக்கமுறையும் காலந்தொறும் வளர்ந்து வருதல் கண்கூடாதலின், உயர்திணை என்பது வினைத்தொகையாம். அஃறிணை என்பது பண்புத்தொகை. என்மனார் என்பது மரூஉ முடிபு கொண்டதொரு முற்றுவினைச்சொல். அஃது என்னும்+அன்னார் ஆகிய இருசொற்களின் மரூஉவாம். என்ம்+ அனார் = என்மனார் ஆயிற்று.

மக்கட்சுட்டு என்பது மக்களாகிய கருத்து நிலைபெறும் பொருள்மேல் நின்றமையான் இருபெயரொட்டுப் பண்புத் தொகை அடியாகப் பிறந்த அன்மொழித்தொகை. மக்கள் என்றது மக்கள் தன்மையாகிய ஒழுக்கத்தை. சுட்டு என்பது

கருதி உணரப்படும் உணர்வை. மக்கள் உடம்பு பெற்றிருப்பினும் மக்கள் என்று கருதப்படாதவழி அஃறிணை மருங்காகும். பண்பாடிலாதவரை மரம் எனவும் விலங்கு எனவும், கொடியரைப் பேய் எனவும் கூறும் வழக்கினை நோக்குக. மக்கள் உடம்பினர் அல்லாதவழியும், மக்கட்சுட்டுடையராகக் கருதின் உயர்திணையாம். அநுமன் வந்தான், சாம்பவன் வந்தான், அசுவத்தாமன் வந்தான் என்ற வழக்கினை நோக்குக. இந்நுண்மையை ஓர்ந்து உணர்தல் வேண்டித் தொல்லாசிரியர் மக்கள் உயர்திணை என்னாது 'மக்கட்சுட்டு' எனத்தெரித்து ஓதினர்.

'அவரல' என்பது காட்சிப் பொருளையும் 'பிற' என்பது கருத்துப் பொருளையும் குறிக்கும் என்பது. காலம் புணராதவழி எல்லாச் சொற்களும் பெயர் மருங்காய் நிகழும்.

இச்சூத்திரத்தான் பொருளையும் வரையறுத்தார் எனக்கூறுவது நூல் நெறிக்கு ஏற்குமாறு இல்லை.

சொல் ஆயிருதிணையின்கண் தோன்றி அவற்றை இசைக்கும் என்க. சொல் தன்னை உணர்த்திப் பின் பொருளையும் அறிவிக்குமாறு போல, முதற்கண் சொல் பொருளை இடமாகக் கொண்டு தோன்றிய பின் அப்பொருளை அறிவிப்பது அதன் தன்மையாம். ஆகவே திணை இடமாக நிகழ்வதே சொல் என்பதும், அதனான் சொல்லும் இருவகைப்பட்டது என்பதும் பெறப்படும்.

அகக்கரணங்களான் தோன்றும் ஆறாவது அறிவையும் உடையவர் மக்கள் என்பதும், அவ்வறிவே மக்கள் ஒழுகலாற்றிற்கு அடிப்படை என்பதும், அது காரணமாகவே தமிழ் நூலார் மக்களை உயர்திணையாகக் கொண்டார் என்பதும், மக்கள் தேவர் நரகர் ஆகியோர் உயர்திணை என்று நன்னூலார் கூறுவது தமிழ் மக்களுக்கு உடன்பாடு அன்று என்பதும் உணரப்படும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

1. இவ்வியலுள் 'ஙஂகான் ஒற்றே' (5) என்பது முதலாக 'இருதிணை மருங்கின்' (10) என்பது ஈறாகச் சொற்களை ஆக்கிக்கொள்ளுமாறும், 'வினையின் தோன்றும்' (11) என்பது முதலாக இவ்வியல் இறுதிகாறும் தொடர்களை வழுவின்றி அமைத்துக்கொள்ளுமாறும் கூறலின், இவ்வியல் 'கிளவி ஆக்கம்' என்னும் பெயர் பெற்றது. உரையாசிரியன்மார் கூறிய விளக்கங்களின் போந்த பொருளும் இதுவே எனக் கொள்ளவேண்டும்.

தொல்காப்பியனார் கருத்தின்படி வினைத்தொகை காலம் தோன்ற விரிக்கப்படும் (எ. 483). பண்புத்தொகை 'இன்னது இது' எனத் திணையும் பாலும் தோன்ற விரிக்கப்படும் (எ. 483). உயர்திணை உயர்ந்ததாகிய திணை எனக் காலம் தோன்ற விரிக்கப்படுதலின், உயர்திணை வினைத்தொகை என்று விரித்தலே ஏற்றது.

தொல்காப்பியம் எழுத்தினும் சொல்லினும் செய்ம்மன என்னும் வாய்பாட்டுச் சொல்லைக் குறிப்பிடுகிறது. சேனாவரையர் அதனை வினைமுற்று என்பர். நச்சினார்க்கினியர் அதனைச் செய்யும் என்னும் பொருள்தரும் பெயரெச்சம் என்பர். அவர் குறிப்பிடும் செய்ம்மன என்னும் வாய்பாட்டுச்சொல் என்மன என்ற பெயரெச்சத்தோடு ஆர்விகுதி இணைய, பெயரெச்ச நிலைமாறி நிகழ்கால வினைமுற்று ஆயிற்று என்று கொள்ளலாம். என்மனார் என்ற சொல் தொல்காப்பியனார் தாமே படைத்துத் தம் நூலில் 60க்கு மேற்பட்ட இடங்களில் கையாண்ட சொல் ஆகும்.

மக்கட்சுட்டு என்பதற்கு ஆகுபெயர்ப் பொருளாக மக்களாகச் சுட்டப்படுவோர் என்றே பொருள் கொள்ளவேண்டும். அவ்வாறு கொண்டால்தான் அவர்அல என்ற சுட்டுப் பெயர்க்கு ஏற்புடையதாக அமையும்.

சொல் பொருளிடமாகத் தோன்றியது எனினும் அதனை மக்கள் மனம் கொள்ளாது சொல்லைப் பொருளைத் தெரிவிக்கும் கருவியாகவே கொண்டனர். ஆசிரியர் சொல் பொருளிடத்துத் தோன்றும் என்று குறிப்பிடாமல் சொல் பொருளைத் தெரிவிக்கும் என்று கூறுதலால், ஆயிரு திணையின் என்புழி இரண்டன் உருபு விரித்தலே பொருத்தமாகத் தோன்றுகிறது. ஆடூஉ அறிசொல் என்புழி இரண்டன் உருபு செய்யுள் விகாரவகையான் தொக்கது என்று கூறுவது போலவே, சாரியை உள்வழி வரவேண்டும் இரண்டன் உருபும் செய்யுள் விகாரவகையான் தொக்கது என்று கூறுவதும் பொருத்தம் உடையதே. விதிகள் தொகக்கூடாது என்று குறிப்பிடவும், அவற்றிற்கு மாறாகத் தொக்கு வருவனவற்றைத் தொகை எனக் கூறாது விகாரவகையான் தொக்கன என்று கூறலே மரபு.

## இளம்பூரணர் உரை

### உயர்திணைப் பால்பகுப்பு

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

இஃது உயர்திணைப்பாலைப் பகுக்கின்றது.

இ-ள்: ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் - ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும்; பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி- பல்லோரை அறியும் சொல்லொடு சிவணுகையினாலே; அம்முப்பாற்சொல்-அம்மூன்று கூறாகிய சொல்லும்; உயர்திணைய- உயர்திணையை உடையவாம் என்றவாறு.

ஆண் பன்மையும், பெண் பன்மையும், அவ்விருவரும் தொக்க பன்மையும் அன்றிப் பன்மைப்பொருள் வேறு இன்மையின், ஆடூஉவும் மகடூஉவும் பல்லோர் அறியும் சொல்லொடு சிவணுகையினானே மூன்று கூறு ஆயின என்றார். எனவே, அல்லுழி இரண்டே ஆம் என்பது கருத்து.

செய்து என் எச்சம் காரண காரியப் பொருட்டாய் நின்றது. 'உயர்திணைய' என்ற, ஆறாம் வேற்றுமையாய் நிற்கும் சொல், ஈண்டுப் பெயர் ஆகாது வினைக்குறிப்பாய் நின்றது.

இனி, சிவண எனத் திரிப்பாரும் உளர்.

இவ்வாறு அன்றிச் 'சிவணி உயர்திணைய'வாம் என்பார்க்கு, முப்பாற் சொற்குப் பயனிலையாய் நின்ற 'உயர்திணையவாம்' என்னும் வினைக்குறிப்பு - ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் என்னும் இரண்டன் வினையாகிய 'சிவணி' என்னும் செய்து என் எச்சத்திற்கு வினைமுதல் வினை ஆயிற்று, உயர்திணைய ஆகல் ஆடூஉ அறிசொற்கும் மகடூஉ அறிசொற்கும் எய்துதலின். ஆடூ, மகடூ என்பன பண்டையார் வழக்கு. அறிசொல்-அறிதற்குக் கருவியாகிய சொல். (2)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**2. 'ஆடூஉ அறிசொல்'-**

பல்லோர் - தனியே ஆண்மக்கள் தொக்க பன்மையும், தனியே பெண்மக்கள் தொக்க பன்மையும், இருபாலரும் தொக்க பன்மையும் ஆகிய மூன்றும் பல்லோர் என்பதனுள் அடங்கும்.

தந்திரவுத்தி வகைமை - தந்திர உத்தி வகையுள் ஒன்றாகிய அதிகார முறைமை. அதிகாரமுறைமையாவது, முன்னம் பல பொருளை அதிகரித்தவழிப் பின்னும் அம்முறையினானே விரித்துரைத்தல்; அஃதாவது உயர்திணை அஃறிணை என்று அதிகரித்து, 'ஆடூஉ அறிசொல்' (2) என்ற சூத்திரத் தான் நிறுத்தமுறை பிறழாமல் உயர்திணை கூறல். (பொருள் 656-இள.)

**சேனாவரையர் உரை**

**2. பால்**

**உயர்திணை முப்பால்**

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

(இ-ள்) ஆடூஉ அறிசொல்லும் மகடூஉ அறிசொல்லும், பல்லோர் அறியுஞ் சொல்லொடு பொருந்தி, அம்மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணையனவாம் எ-று.

ஆண்மகனை 'ஆடூஉ' என்றலும், பெண்டாட்டியை 'மகடூஉ' என்றலும் பண்டையார் வழக்கு.

அறிவு முதலாயினவற்றான் ஆண்மகன் சிறந்தமையின் 'ஆடூஉ அறிசொல்' முற்கூறப்பட்டது. பன்மை இருபாலும் பற்றி வருதலின் 'பல்லோரறிசொல்' பிற்கூறப்பட்டது.

இரண்டாம் வேற்றுமை உயர்திணைக்கண் சிறுபான்மை தொகப்பெறுதலின், தொக்கு நின்றது; திரிந்த புணர்ச்சி யன்மையின் விகார வகையான் தொக்கது என்பாரும் உளர்.

சிவணி என்னும் வினையெச்சம், உயர்திணைய என்னும் வினைக்குறிப்புக்கொண்டது, ஆறாம் வேற்றுமை ஏற்று நின்ற சொல் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்குமாகலான். உயர்திணையவாம் என்னும் முப்பாற் சொல்லின் வினை, 'ஆடூஉ அறிசொல்' 'மகடூஉ அறிசொல்' என்னும் இரண்டன் வினையாகிய சிவணி என்னும் செய்தென் எச்சத்திற்கு வினைமுதல்வினை யாயினவாறு என்னையெனின், உயர்திணையவாதல், ஆடூஉ அறிசொல் மகடூ அறிசொல் என்பனவற்றிற்கும் எய்துதலான், வினைமுதல்வினையாம் என்க; 'முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின' (சொல்.) 230 என்புழி, வினை

முதல்வினையென்னுந் துணையல்லது, பிறிதொன்றற்குப் பொதுவாகாது வினை முதற்கே வினையாதல் வேண்டும் என்னும் வரையறை யின்மையின். அல்லாக்கால், 'இவளும் இவனும் சிற்றில் இழைத்தும் சிறுபறை யறைந்தும் விளையாடுப' என்பன போல்வன அமையாவாம் என்க.

ஆடூஉ அறிசொல் முதலாயினவற்றை உணர்த்தியல்லது அவற்றது இலக்கணம் உணர்த்தலாகாமையின், "பால் உணர்த்தும் எழுத்து வகுப்பவே அவை தாமும் பெறப்படும்; இச்சூத்திரம் வேண்டா" என்பது கடா அன்மை உணர்க.

உயர்திணைச்சொல் உணர்த்தி அதனது பாகுபாடு கூறுகின்றார் ஆகலின், 'அம் முப்பாற்சொல் உயர்திணைய' என்றாராயினும், உயர்திணைச்சொல் மூன்று பாகுபாடு படும் என்பது கருத்தாகக் கொள்க. இக் கருத்தானன்றே, ஆசிரியர் அம்முப்பாற் சொல்லும் என 'இனைத்தென அறிந்த பொருள் தொகுதிக்கு' (சொல்.33)க் கொடுக்கும் உம்மை கொடாராயினும், உரையாசிரியரும் "உயர்திணை யெனப் பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணையல்லது விரிபடா தென்பது ஈண்டுக் கூறியது" என்றுரைத்ததூஉம் என்க. 'ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே' (சொல். 3) என்பதற்கும் ஈதொக்கும். (2)

## சேனாவரையர் உரைவிளக்கம்

### 2. ஆடூஉ . . . உயர்திணை யவ்வே-

அறிவு முதலியவற்றான் ஆண்மகன் பெண்மகளின் சிறந்தான் என்பது பழந்தமிழர் கருத்து. அஃறிணையில் ஆணினும் பெண் மக்கள்இனத்திற்கு மிகுதியாக உதவும் சிறப்புப்பற்றி விரவுப்பெயரை விளக்குமிடத்துப் பெண்மை இயற்பெயர், பெண்மை சினைப்பெயர், பெண்மை சினை முதற்பெயர், பெண்மை முறைப்பெயர் (சொ. 176-9) என்பனவற்றை ஆண்மை இயற்பெயர் முதலியவற்றிற்கு முன்னம் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.

'உயர்திணைப் பெயர்க்கு ஒழியாது வருதலும்' (எ. 157) என்பது இரண்டாம் வேற்றுமைக்கு உரிய விதி. இவ் விதியை நெகிழ்த்துத் தொல்காப்பியனார் உயர்திணைக்கண் இரண்டாம் வேற்றுமை உருபுதொக யாத்த நூற்பாக்கள் பல உள்ளன. அவற்றை உட்கொண்டு 'இரண்டாம் வேற்றுமை உயர்திணைக்கண் சிறுபான்மை தொகப்பெறுதலின் தொக்குநின்றது' என்றார்.

'ஐந்தவித்தான் ஆற்றல்' (குறள். 25) என்புழி நான்காம் உருபு, செய்யுள் தொடையும் இன் ஒலியும் காரணமாக வந்த செய்யுள் விகாரத்தான் தொக்கது. செய்யுள் விகாரமாவது இன் ஒலியும், பதத்துள் அடிப்பாடும், செய்யுள் தொடையும் நோக்கிவரும்.

" 'அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை' (சொ. 403) என்னும் சூத்திரத்து அறுவகை விகாரமும், தலை இடை கடை குறைத்தல் என்னும் மூவகை விகாரமும் செய்யுள் விகாரம் (சொ. 453, 54) என்க. அது தொல்காப்பியத்தின் நச்சினார்க்கினியர் உரையுள் காண்க. புணர்ச்சி விகாரமாவது தோன்றல் திரிதல் கெடுதல் என்க" - என்ற நுண்பொருள் மாலைப் பகுதியை நோக்குக.

உயர்திணைக்கண் இரண்டாம் வேற்றுமை உருபு மறைந்தால் 'மகனைப் பெற்றாள்' என்பது 'மகற்பெற்றாள்' எனவும், 'கொழுநனைத் தொழுது' என்பது 'கொழு நற்றொழுது' எனவும் 'பெற்றியாரைப் பேணிக்கொளல்' என்பது 'பெற்றியார்ப் பேணிக்கொளல்' எனவும் திரிந்து காணப்படும். இங்கு 'ஆடூஉ' என்பதனை அடுத்து வருமொழியாக 'அறிசொல்' என்ற இயல்பு கணம் வந்தமையின் நிலைமொழிஈற்றில் திரிபு ஏற்பட வாய்ப்பு இல்லை. ஆகவே இங்குத் திரிந்த புணர்ச்சி இல்லாமையால்

இரண்டன் உருபு செய்யுள் விகாரத்தான் தொக்கது என்ற கருத்தும் உண்டு.

'சிவணி' என்னும் செய்து என் எச்சம் 'உயர்திணைய' என்ற வினைமுற்றைக் கொண்டு முடிந்தமை தன் வினைமுதல்வினையைக் கொண்டு முடிந்த செய்தியே என்பது எடுத்துக்காட்டுடன் விளக்கப்பட்டது.

உயர்திணை ஆடூஉ அறிசொல் முதலாக மூன்று பகுதிப்படும் என்று குறிப்பிட்ட பின்னரே ஒவ்வொரு பகுதியையும் விளக்கவேண்டும் ஆதலின், உயர்திணையின் பகுப்புக்கள் இவை என்பதனை விளக்கும் இந்நூற்பா இன்றியமையாதது.

இந்நூற்பா உயர்திணையின் பகுதிகளை விளக்க எழுந்ததாகலின், உயர்திணையை எழுவாயாக்கி 'உயர்திணை முப்பகுதிப்படும்' என்று கூறுவதே இந்நூற்பாவின் கருத்து. முப்பாற்சொல் என்பது எழுவாயாயின் முப்பாற் சொல்லும் என முற்றும்மை நூற்பாவின் இடம்பெற்றிருக்கும். அது முடிக்குஞ்சொல் ஆதலின் உம்மை கொடுக்கப்படவில்லை. இந்நூற்பாவின் சாத்திரியார் குறிப்பை நோக்குக. 'அஃறிணை ஆயிருபாற்சொல்' என்று அங்கும் மாற்றிப் பொருள் கொள்க.

ஆறாம் வேற்றுமை ஏற்று நின்ற சொல் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்கும் என்பது சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலியவர் மதம். கணேசையர் விளக்கம் காண்க. உயர்திணைய என்பது வினையாலணையும் பெயராயவழி உயர்திணையை உடையவை எனவும், குறிப்பு முற்றாயவழி உயர்திணையை உடையவாயுள்ளன எனவும் பொருள்படும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**உயர்திணைப் பால்பகுப்பு**

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

இஃது உயர்திணைப்பாலைப் பகுக்கின்றது.

இ-ள்: ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் - ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும்; பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி-பல்லோரை அறியும் சொல்லொடு சிவணு கையினாலே; அம்முப்பாற்சொல்-அம்மூன்று கூறாகிய சொல்லும்; உயர்திணைய- உயர்திணையை உடையவாம் என்றவாறு.

ஆண் பன்மையும், பெண் பன்மையும், அவ்விருவரும் தொக்க பன்மையும் அன்றிப் பன்மைப்பொருள் வேறு இன்மையின், ஆடூஉவும், மகடூஉவும் பல்லோர் அறியும் சொல்லொடு சிவணுகையினானே மூன்று கூறு ஆயின என்றார். எனவே, அல்லுழி இரண்டே ஆம் என்பது கருத்து.

செய்து என் எச்சம் காரண காரியப் பொருட்டாய் நின்றது. 'உயர்திணைய' என்ற, ஆறாம் வேற்றுமையாய் நிற்கும் சொல், ஈண்டுப் பெயர் ஆகாது வினைக்குறிப்பாய் நின்றது.

இனி, சிவண எனத் திரிப்பாரும் உளர்.

இவ்வாறு அன்றிச் 'சிவணி உயர்திணைய'வாம் என்பார்க்கு, முப்பாற் சொற்குப் பயனிலையாய் நின்ற 'உயர்திணையவாம்' என்னும் வினைக்குறிப்பு ஆடூஉ அறிசொல், மகடூஉ அறிசொல் என்னும் இரண்டன்

வினையாகிய 'சிவணி' என்னும் செய்து என் எச்சத்திற்கு வினைமுதல் வினை ஆயிற்று, உயர்திணைய ஆகல் ஆடூஉ அறிசொற்கும் மகடூஉ அறிசொற்கும் எய்துதலின். ஆடூ, மகடூ என்பன பண்டையார் வழக்கு. அறிசொல்-அறிதற்குக் கருவியாகிய சொல். (2)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

### 2. ஆடூஉ அறிசொல்

பலர்பால், தனித்த ஆண்பன்மையும் - தனித்த பெண் பன்மையும்- ஆண்பெண் இருவரும் கலந்த பன்மையும்- என மூவகைப்படும்.

உயர்திணை ஒருமையில் ஆண்பெண் என்ற இரண்டே பகுப்பு உள்ளது.

'கார்முற்றி இணர் ஊழ்த்த' கலி-67

'கார்காலம் முற்றுகையினாலே பூங்கொத்துக்கள் அலர்ந்த' என்பது பொருள். முற்றி என்னும் செய்தென் எச்சம் காரணப்பொருளிலே ஊழ்த்த என்ற பிறவினைகொண்டு முடிந்தது. சிவணி என்பது சிவணுகையினாலே என்ற காரணப் பொருளில் வந்து 'உயர்திணைய' என்ற பிறவினை கொண்டு முடிந்தது என்று கூறலாம். அன்றேல், சிவண என்ற செயவெண் எச்சமாகத்திரிந்து உயர்திணைய என்ற பிறவினை கொண்டது எனலாம். அன்றேல், சிவணி என்பது ஆடூஉ அறிசொல், மகடூஉ அறிசொல் என்பனவற்றின் வினை; 'உயர்திணைய' என்பது ஆடூஉ மகடூஉ பல்லோர் என்பனவற்றின் வினை; 'உயர்திணைய' என்பது ஆடூஉமகடூஉ என்ற இரண்டிற்கும் எய்துதலின் தன் வினைமுதல்வினை என்றும் கொள்ளலாம்.

சிவணி என்ற வினையெச்சம் பற்றி நச்சினார்க்கினியர் மூவகைக் கருத்துக்களைக் குறிப்பிடுகிறார். இவற்றுள்

சிவணுகையினாலே என்று பொருள் செய்யும் முதற்கருத்தே அவருக்கு உகந்தது. அவர் ஏனைய கருத்துக்களையும் ஏற்றுக்கொள்கிறார்.

அறிசொல்-அறிதற்குக் கருவியாகிய சொல். இவ்வாறே இளம்பூரணரும் கொள்கிறார்.

## தெய்வச்சிலையார் உரை

### உயர்திணைச் சொல் பாகுபாடு

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

நிறுத்தமுறையானே உயர்திணைச்சொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள் :** ஆடூஉ அறிசொல் என்பது ஆண்மகனை அறியும் சொல் எ-று. அறிவார்க்குக் கருவி ஆகிய சொல் அறிசொல் ஆயிற்று. மகடூஉ அறிசொல் என்பது பெண்டாட்டியை அறியும் சொல் எ-று. பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி என்பது பலரை அறியும் சொல்லொடு கூடி எ-று. அம்முப்பால் சொல் உயர்திணை யவ்வே என்பது அம்மூன்று கூற்றுச்சொல் உயர்திணை இடத்த எ-று.

உயர்திணைப் பொருள்பற்றி வரும் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் மூன்று பகுதிய என்றவாறு ஆயிற்று. எற்றுக்கு? ஆண், பெண், அலி; ஆண் பன்மை, பெண் பன்மை, அலிப் பன்மை, இவர் எல்லாரும் தொக்க பன்மை எனப் பலவகைப்படுமால் எனின், பொருள் நோக்கிக் கூறினார் அல்லர்; சொல் முடிபு மூவகை என்று கூறினார் என்க. என்னை? அலிப் பன்மை மகடூஉ அறிசொல்லானும் கூறப்படும் ஆதலானும், ஆண் பன்மையும் பெண் பன்மையும் எல்லாரும் தொக்க பன்மையும் 'வந்தார்' எனவே முடிதலானும் மூவகைஆகி அடங்கிற்று என்க. பல்லோர் அறியும் சொல் என்னாது சிவணி என்றதனான் பெற்றது

என்னை எனின், ஒன்று, இரண்டு, பல என வடமொழிப் புலவர் கூறியவாறு போலப் பாகுபடும் வழக்கு இன்மையின், ஒன்று, பல எனத் தமிழ்நடை இரண்டு பால் ஆம். அவற்றுள், உயர்திணை ஒருமை, ஆடூஉ அறிசொல் - மகடூஉ அறிசொல் - என இரு முடிபு உடைத்து ஆகலின், அச்சொற்கள் பலர் அறிசொல்லொடு கூடி மூன்று பால் ஆயின அல்லது, பால் உள்ளன இரண்டு என்பது அறிவித்தற்கு எனக் கொள்க. சிவணி என்பது வினைஎச்சம் அன்று; ஒடுவின் பொருண்மை தோன்ற வந்தது, தாயொடு கூடி மூவர் என்றாற்போல. அம்முப்பால் சொல்லும் என உம்மை கொடாதது என்னை எனின், பால் ஐந்து உள ஆதலின் கொடாமையும் அமையும் என்க. (2)

### தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

#### 2. ஆடூஉ அறிசொல்

அறிசொல் - அறிவதற்குக் கருவியாகிய சொல் என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறுவது போலவே இவரும் அறிவார்க்குக் கருவியாகிய சொல் என்கிறார்.

பொருள் வகையான் பலவாயினவாற்றை விளக்கிச் சொல் முடிபு வகையான் மூவகையுள் அவை அடங்குமாற்றை விளக்குகிறார்.

ஒன்று, இரண்டு, பல என்பது வடமொழி மரபு. வடமொழியில் வேற்றுமை உருபு ஏற்கும்போது இரண்டு ஒரு வகையாகவும், பல ஒருவகையாகவும் திரியும். வினைமுடிபும் இரண்டற்கு வேறு; பலவற்றிற்கு வேறு. அந்நிலை தமிழுக்கு இன்மையின் ஒன்றல்ல வெல்லாம் பல எனப் பாகுபடுத்தப்பட்டது. எனினும்,

'ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்;
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்'
(புறநா. 101)

'ஒன்று இரண்டு அல பல கழிந்து'
(பதிற். 41) என வரும்.

'ஓரெழுத்து ஒருமொழி ஈரெழுத்து ஒருமொழி
இரண்டு இறந்து இசைக்கும் தொடர்மொழி' (எ.45)

என்ற பகுப்பு குற்றியலுகரத்து ஈரெழுத்து ஒருமொழியை நோக்கி அமைந்தது.

பலரறி சொல் உயர்திணையில் ஆண் பன்மையையும், பெண் பன்மையையும், இரண்டும் கலந்த பன்மையையும் உணர்த்துவதனான் உயர்திணையில் பால் காட்டுவன இரண்டே என்கிறார்.

சிவணி என்பது வினையெச்சம் அன்று; தாயொடு கூடி மூவர் என்றாற்போல ஒடுவின் பொருளில் வந்துள்ளது என்கிறார். ஒடு உருபு முதலிலேயே வந்துள்ளமையான் சிவணி என்பது தேவைதானா என்று கருதவும் இடன் உண்டு.மேலும் சிவணி என்பதற்கு இவர் இந்நூற்பா உரையிலும், சொ. 54ஆம் நூற்பா உரையிலும் கூடி எனவும் பொருந்தி எனவும் உரை கூறுதல் வினையெச்சமாகவே உள்ளது. 'சிவணி' என்பதனை 'ஒடு' உருபினை முடிக்கும் சொல்லாகிய வினையெச்சமாக உரையாசிரியருள் ஏனையார் கூறுவதுபோலவே கூறுதலே பொருத்தமாகத் தோன்றுகிறது. பால் ஐந்து ஆகலின் முப்பாற்சொல்லும் என்று முற்றும்மை கொடுக்கப்படவில்லை.

**கல்லாடனார் உரை**

**உயர்திணைப் பால்பாகுபாடு**

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

என்-எனின், மேல் திணை கூறுசெய்தார்; இனி அத்திணைக்கண் பால் கூறுசெய்தல் நுதலிற்று.

இ-ள் : ஆண்மகனை அறியும் சொல்லும், மகளினை அறியும் சொல்லும், பலரை அறியும் சொல்லொடு கூடி, அம்மூன்று பாலினை உணர்த்தும் சொல்லும் உயர்திணையன என்றவாறு.

அறிசொல் என்புழிச் சொல்லிற்கு அறிதல் கூடாமையின் ஒரு சாத்தன் அறியும் சொல் என ஒரு பெயர் வருவித்துக் கொள்க. ஏ : ஈற்றசை. அவ்வே என வகரம் செய்யுள் விகாரத்தான் வந்தது.

சிவணி என்பது, பல்லோர் அறியும் சொல்லொடு கூட என ஒரு தொகைப் பொருண்மை தோன்ற நின்றதொரு சொல் என்று சொல்லுக. இவ்வாறு அன்றிச் சிவணி என்பது செய்து என்னும் வினைஎச்சம் ஆகி, 'உயர்திணைய' என்னும் ஆறாம் வேற்றுமை ஒரு வினைக்குறிப்பு நீர்மையும் உடைமையின், அதனொடு முடிந்தது என முடிப்பாரும் உளர்.

இதனான் சொல்லியது, மேற்கூறிய உயர்திணை என்பது, விரிவரையறையான் ஆண்பால், பெண்பால், பன்மைப்பால் என மூன்று கூறுபடும் என்பதூஉம், அப்பொருள் முக்கூறுபடும் எனவே தந்திர உத்தி வகையான் மேற்கூறிய உயர்திணைச்சொல் என்பது விரிவரையறையான் ஆண்பால் சொல், பெண்பால் சொல், பன்மைப்பால் சொல் என மூன்று கூறுபடும் என்பதூஉம் கூறியவாறு ஆயிற்று. (2)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**2. ஆடூஉ அறிசொல்-**

சொல் பொருள் உணர்தற்குக் கருவி என்று உட்கொண்ட இவர், அறிசொல் என்பதற்கு அறிதற்குக் கருவியாகிய சொல் என்று பொருள் செய்தலை விடுத்துச் சாத்தன் அறியும் சொல் என ஒருபெயரை வருவித்து முடிக்கிறார்.

உயர்திணைய-உயர்திணையவே-உயர்திணையவ்வே-ஏகாரம் ஈற்றசை. வகரம் செய்யுளில் விரித்தல் விகாரமாக ஈரசைச்சீரை அமைக்க வந்தது. தொல்காப்பியத்தில் எந்த நூற்பாவிலும் ஓரசைச்சீர் வாராது என்பதனை அறிக.

சிவணி என்பது 'கூட' என்ற பொருளில் வரும் இடைச்சொல் என்பது தெய்வச்சிலையார் கருத்தை உட்கொண்டது. சிவணி என்பதனை வினையெச்சமாக்கி அது உயர்திணைய என்ற முற்றினைக் கொண்டு முடிந்தது என்பதும், ஆறாம் வேற்றுமை ஏற்று நின்ற பெயர் செய்யுள் இறுதியில் வந்தால் அது குறிப்பு வினைமுற்றாகும் என்பதும் முன்னை மூவரின் கருத்தை உட்கொண்டன.

**ஒருவர் உரை**

2. ***ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்***
***பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி***
***அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.***

என்பது : ஆண்மகனையும், பெண்டாட்டியையும், அவ்விருவரது பன்மை ஆகிய பல்லோரையும் அறிவிக்கும் சொல்லொடு பொருந்திய அம்மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணையை அறிவிக்கும் சொல்லாம்.

'அவ்வே' என ஆறாவதன் பன்மையாகக் கொள்க. (2)

**ஒருவர் உரைவிளக்கம்**

**2. 'ஆடூஉ அறிசொல் . . . யவ்வே.'**

'உயர்திணையவ்வே' என ஆறாவதன் பன்மையாகக் கொள்க என்றுகூறி உயர்திணையை அறிவிக்கும் சொல்லாம் எனப் போந்த பொருளாக உரை கூறியுள்ளார்.

## சாத்திரியார் உரை

**2. 'ஆடூ . . . யவ்வே.'**

உயர்திணைச்சொல் ஆண், பெண், பலர் என்று முப்பகுப்பினை உடையது என்பது இதன் கருத்து. அம்முப்பாற்சொல் என்ற இடத்து முற்றும்மை கொடாததற்குக் காரணம் அஃது உத்தேசியமாய் இராது விதேயமாய் இருப்பதேயாம்.

'னஃகான் ஒற்றே' முதலிய மூன்று சூத்திரங்களால் ஆடூஉ அறிசொல் முதலியவற்றின் இலக்கணம் சொல்லப்படுகின்றதே அன்றி, இம்மூன்று சொல்லும் உயர்திணைச்சொல் என்று சொல்லப்படவில்லை. ஆதலின் இச்சூத்திரம் இன்றியமையாதது.

## பாலசுந்தரனார் உரை

**2. 'ஆடூஉ அறிசொல் . . . யவ்வே.'**

ஆடூஉ அறிசொல் முதலிய மூன்றன்கண்ணும் ஐகார உருபு செய்யுள் விகாரத்தான் தொக்கது. அறிசொல் என்பது பிறவினைப் பொருட்டாய்க் கருவிக் கருத்தாவாக நின்றது. பல்லோர் என்பது ஆடூஉமகடூஉ ஆகிய தொகுதி அன்றி வேறில்லை என்னும் நுண்மையை உணர்த்தப் 'பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி' என்றார்.

உயர்திணைய என்பது 'அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்' சொ. 214 என்பதன் அடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று.

மேல்வரும் சிறப்புச் சூத்திரங்களான் உயர்திணைச் சொல்லின் பாகுபாடு பெறப்படுமாயினும், மூன்று என்னும் வரையறை பெறுவதற்காக இச்சூத்திரத்தான் தொகை கூறினார் என உணர்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

2. 'உயர்திணைய' என்பது 'அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்' (சொ. 215) என்பதன் அடியாகப் பிறந்த 'உடைய' (சொ. 222) என்னும் அஃறிணைக் குறிப்பு வினைமுற்று. இதனை உரையாசிரியன்மார் ஆறன் உருபை இறுதியில் ஏற்று நின்ற வினைக்குறிப்பு என்று குறிப்பிடுகின்றனர்.

இந்நூற்பா உயர்திணைச் சொல்லின் பாகுபாடு கூறலின் 'உயர்திணைச் சொல் அம்முப்பால் ஆம்' என்பதனை இந்நூற்பாவின் கருத்தாகக் கொள்க.

## இளம்பூரணர் உரை

### அஃறிணைப் பகுப்பு

3. ***ஒன்றுஅறி சொல்லே பலஅறி சொல்லென்று***
***ஆயிரு பாற்சொல் அ:றிணை யவ்வே.***

எ . . . ன், மேல் அஃறிணை என்றான், அதனை 'இனைத்துப் பால்படும்' என்று அது படு பாலை விரித்துணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்று பல என்னும் இருபாலையும் உணர்த்தும் சொல் அஃறிணை உடையன என்றவாறு. (3)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**3. 'ஒன்றறி சொல்லே' -**

அஃறிணைப் பெயர்களில் ஆண், பெண் என்னும் பால்பாகுபாடு காணப்படினும், வினைக்கண் அப்பாகுபாடு இன்றி, ஆண் பெண் இரண்டும் ஒருமைப்பாலாகவே கொள்ளப்படுதலின், அஃறிணைக்கண் ஒன்றறிசொல், பலவறிசொல் என்ற பாகுபாடே கொள்ளப்பட்டது.

### சேனாவரையர் உரை

### அஃறிணை இருபால்

3. *ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று*
*ஆயிரு பாற்சொல் அ:றிணை யவ்வே.*

(இ-ள்) ஒன்றனை அறியுஞ் சொல்லும், பலவற்றை அறியுஞ்சொல்லும் என அவ்விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையனவாம் எ-று. (3)

### நச்சினார்க்கினியர் உரை

### அஃறிணைப் பால்பகுப்பு

3. *ஒன்றுஅறி சொல்லே பலஅறி சொல்லென்று*
*ஆயிரு பாற்சொல் அ:றிணை யவ்வே.*

இஃது அஃறிணைப்பாலைப் பகுக்கின்றது.

(இ-ள்.) ஒன்றி அறிசொல்லே பல அறிசொல் என்று- ஒருவன் ஒன்றனை அறியும் சொல்லும், பலவற்றை அறியும் சொல்லும் என்று சொல்லப்பட்ட; ஆ- இருபால் அஃறிணைய-அவ்விரண்டு கூற்றுச்சொல்லும் அஃறிணையினை உடையவாம் என்றவாறு. (3)

### தெய்வச்சிலையார் உரை

### அஃறிணைப் பாகுபாடு

3. *ஒன்றுஅறி சொல்லே பலஅறி சொல்என்று*
*ஆயிரு பால்சொல் அ:றிணை யவ்வே.*

அஃறிணைச் சொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்றனை அறியும் சொல்லும், பலவற்றை அறியும் சொல்லும் என அவ் விருகூற்றுச்சொல் அஃறிணை இடத்த எ-று.

அஃறிணைப் பொருண்மை, உயிர்ப்பொருள் உயிர் இல் பொருள் எனவும், உயிர்ப்பொருட்கண் ஆண் பெண் எனவும், அவை எல்லாம் பொருள்தொறும் ஒருமையும் பன்மையும் ஆகியும் பலவகைப்படுமால் எனின், அவை எல்லாம் ஒருமை ஆயின் வந்தது எனவும், பன்மை ஆயின் வந்தன எனவும் வழங்கப்படுதலின் சொல்முடிபு நோக்கிக் கூறினார் என்க. அஃறிணைப் பொருள்பற்றி வரும் பெயர்ச்சொல்லும், வினைச் சொல்லும் இருபகுதிய ஆம் என்றே கொள்ளப்படும். *(3)*

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**3. ஒன்றறி சொல்லே -**

அஃறிணைப் பொருண்மை பல என்பதனை விளக்கி, அவற்றின் சொல்முடிபு ஒருமை பன்மை என்ற இரண்டே என்பதனை விளக்குகிறார்.

**கல்லாடனார் உரை**

**அஃறிணைப் பால்பாகுபாடு**

*3.* ***ஒன்றுஅறி சொல்லே பலஅறி சொல்லென்று***
***ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே.***

என்-எனின், மேல் அஃறிணை என்றார், அதனை இனைத்துப் பால்படும் என்று, அது படும் பால் விரித்தலை நுதலிற்று.

இ-ள்: ஒன்றனை அறியும் சொல்லும், பலவற்றை அறியும் சொல்லும் என்று சொல்லப்பட்ட அவ்விரண்டு பாலினையும் உணர்த்தும் சொல் அஃறிணையன எ-று.

இதனால் சொல்லியது மேற்கூறிநின்ற அஃறிணைப் பொருளினையும், அஃறிணைச் சொல்லினையும் விரி வகையான் ஒருமை பன்மை எனவும், ஒருமைச்சொல் பன்மைச்சொல் எனவும் கூறியவாறு ஆயிற்று. *(3)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**3. அஃறிணை இருபால் - 'ஒன்று அறி . . . யவ்வே.'**

இனைத்து என்பது இத்தனை என்று பொருள்படும் சொல். இனைய என்ற பன்மைச்சொல் இன்றி, இனைத்து என்ற ஒருமைச்சொல்லே பன்மைப் பொருளிலும் வழங்கப்படுகிறது.

அஃறிணைப் பகுப்பு இரண்டு எனவே, அஃறிணைச்சொல்லும் இரு பகுப்புடையது என்பது கொள்ளப்படும்.

## ஒருவர் உரை

3. ***ஒன்றுஅறி சொல்லே பலஅறி சொல்லென்று***
***ஆயிரு பாற்சொல் அ:றிணை யவ்வே.***

எ-து : ஆண் பெண் ஆகிய ஒன்றனையும், அவ் இரண்டினது பன்மை ஆகிய பலவற்றையும் அறிவிக்கும் சொல்லொடு பொருந்திய அவ் இரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையை அறிவிக்கும் சொல்லாம்.

'உயர்திணையவ்வே', 'அஃறிணையவ்வே' என்பன உயர்திணை என அம்முப்பால் சொல், அஃறிணை என ஆயிருபால் சொல் என்றவாறாம். *(3)*

## ஒருவர் உரைவிளக்கம்

**3. 'ஒன்றறி . . . யவ்வே.'**

'உயர்திணை என்பன அம்முப்பாற்சொல், அஃறிணை என்பன ஆயிருபாற்சொல் என்பதாம்.

## பாலசுந்தரனார் உரை

**3. 'ஒன்றறி . . . யவ்வே.'**

அஃறிணையுள் விலங்கு முதலிய ஒரு சாரனவற்றிற்கு ஆண், பெண் வேறுபாடு தெளிவாக உளது எனினும், அவை வினைமுடிபான் வேறுபடுவதில்லை. கருத்துக்கள் பொருள்களின் இயக்கத்தான் விளைவன ஆதலின் வினை முடிபு நோக்கி அஃறிணையுள் ஒன்று பல என்னும் இருபகுப்பே கொண்டார்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

3. 'அஃறிணை ஆயிரு பாலே' என்பதே இந்நூற்பாவின் கருத்து. வினைமுடிபில் ஆண்பெண் என்னும் வேறுபாடு இன்மையின், அஃறிணையில் ஆணும் பெண்ணும் ஒருமையில் அடக்கப்பட்டன.

## இளம்பூரணர் உரை

### பேடியும் தெய்வமும்

***4.*** ***பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்***
***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்***
***தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்***
***இவ்வென அறியும்அந் தம்தமக்கு இலவே***
***உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.***

எ. . . ன், ஐயம் அறுத்தல் நுதலிற்று.

இ-ள்: 'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்' என்பதனை 'உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய' எனக்கொள்க. தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும் என்பது தெய்வத்தைச் சுட்டிய பெயர்ப் பொருளும் என்றவாறு.

இனிப் 'பெயர்நிலைக் கிளவி' என்பதற்கு ஒருவன் சொல்வது : பெயர் என்பதனை ஆகுபெயரான் பொருளாக்கிப் 'பொருள்மேல் நிலைபெற்ற கிளவி' என்னும். இவ்வென அறியும் அந்தம் தமக்கு இலவே என்பது, தம்மை வேறு பால் அறிய நிற்கும் ஈற்றுஎழுத்தினை இல என்றவாறு.

உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும் என்பது, உயர்திணை மருங்கின் முப்பாலினையும் புலப்படுக்கும் எழுத்தினைத் தமக்கு ஈறாக இசைக்கும் என்றவாறு.

(உ-ம்) பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும்; வாசுதேவன் வந்தான், திருவன்னாள் வந்தாள், முப்பத்துமூவரும் வந்தார் எனவும் வரும்.

'இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவே' என்னும் இலேசினானே, நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் என்பன கொள்க. (4)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**4. பெண்மை சுட்டிய -**

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும் - என்ற தொடரின் உரை விடுபட்டுள்ளது. ஆண் தன்மை வேறுபட்ட பெயர்ப் பொருளும் - என்பது உரை.

கிளவி என்பது ஆகுபெயரான் பொருளை உணர்த்திற்று.

'பெயர்நிலைக்கிளவி' என்பதனுள் பெயர் என்பதே ஆகுபெயர் என்பாரும் உளர்.

வேறுபால் அறிதல் - ஆண்பால், பெண்பால் அன்றிப் பேடிப்பால் என்ற பகுப்பை அறிதல். பேடி ஆண்பால் திரிந்த ஆணாகவும், பெண்பால் திரிந்த பெண்ணாகவும் இருத்தலின் பேடி வந்தான் எனவும், பேடி வந்தாள் எனவும் இருபாலானும் சுட்டப்படும்.

வாசுதேவன் - ஆண் தெய்வம் - திருமால். திருவினாள் - திருமகள் என்னும் பெண் தெய்வம். திருவன்னாள், திருவனாள் என்பன திருமகள் போல் வாளாகிய மானுடப் பெண்ணையும் குறிக்கும் ஆதலின், அவை எடுத்துக்காட்டு ஆகா.

'பேடியும் தெய்வமும் உயர்திணை மருங்கின்பால் பிரிந்து இசைக்கும்' எனக் கூறிய அளவிலே 'இவ்வென அறியும் அந்தம் தமக்கு இல' என்பது உய்த்துணரப்படும் ஆதலின், அத்தொடர் மிகையானது. அம்மிகையான தொடரைக் கூறியதனான், நூற்பாவில் சொல்லப்படாததொரு செய்தியும் கொள்ளப்படும் என்பது. இலேசு - மிகைச்சொல்.

'மக்கள் தாமே ஆறுஅறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' (பொ. 588)

இந்நூற்பாவில் உள்ள 'கிளை' என்பதனான் பேராசிரியர் தேவரும், தானவரும் முதலாயினாரைக் குறிப்பிடுகிறார். இளம்பூரணர் நரகரையும் கொண்டார்.

'தேவரும் நரகரும் மேவவும் பெறுமே' -
யா. வி. மேற்கோள்

'மக்கள் நரகரே வானோர் எனும்பொருள்கள்
தொக்க உயர்திணையாம்' - நேமிநாதம் 2

'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' - நன். 261

'வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்
ஆதிசெவி அறிவோடு ஐயறி வுயிரே' - நன். 448

எனத் தொல்காப்பியத்துக்குப் பிற்பட்ட காலத்தில் தேவரும் நரகரும் மக்களை ஒப்ப உயர்திணையாகவே கொள்ளப்பட்டனர்.

## சேனாவரையர் உரை

### பேடியும் தெய்வமும் உயர்திணை ஆதல்

*4. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியும்அந் தம்தமக்கு இலவே;
உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.*

(இ-ள்.) உயர்திணையிடத்துப் பெண்மைத்தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்லும், தெய்வத்தைக் குறித்த பெயர்ச்சொல்லும், இவையெனத் தம் பொருளை வேறு அறிய நிற்கும் ஈற்றெழுத்தினைத் தமக்குடைய அல்ல; உயர்திணையிடத்து அதற்குரிய பாலாய் வேறுபட்டு இசைக்கும் எ-று.

பால் வேறுபட்டு இசைத்தலாவது, தாம் உயர்திணைப் பெயராய் ஆடூஉ அறிசொல் முதலாயினவற்றிற்குரிய ஈற்றெழுத்தே தம் வினைக்கு ஈறாக இசைத்தல்.

(எடு.) பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும் தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும்.

அலிப்பெயரின் நீக்குதற்குப் 'பெண்மை சுட்டிய' என்றும், மகடூஉப் பெயரின் நீக்குதற்கு 'ஆண்மை திரிந்த' என்றும் கூறினார்.

'பெண்மை சுட்டிய' எனவே, பெண்மை சுட்டாப் பேடு என்பதும் ஒழிக்கப்பட்டதாம்.

பெண்மை திரிதலும் உண்டேனும், ஆண்மை திரிதல் பெரும்பான்மை யாகலான் 'ஆண்மை திரிந்த' என்றார்.

பேடியர் பேடிமார் பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடியென்னும் பெயர்நிலைக் கிளவி யென்னாது, 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' என்றார்.

'பெண்மை சுட்டிய' என்னும் பெயரெச்சம் 'பெயர்நிலைக் கிளவி ' என்னும் பெயர் கொண்டது. 'ஆண்மை திரிந்த' என்பது இடைநிலை.

'தன்மை திரிபெயர்' (சொல்.56) என்றாற்போலச் சொல்லொடு பொருட்கு ஒற்றுமை கருதி 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' என்றார்.

'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' எனவே, தமக்கென வேறு ஈறு இன்மை பெறப்படுதலின், 'இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவே' எனல் வேண்டா எனின், தமக்கென வேறு ஈறு உடையவாய் ஆடூஉ வறிசொல் முதலாயினவற்றிற்குரிய ஈற்றானும் இசைக்குங்கொல் என்னும் ஐயம் நீக்குதற்கு, 'அந்தம் தமக்கிலவே' எனல் வேண்டும் என்பது. பாலுள் அடங்காத பேடியையும் திணையுள் அடங்காத தெய்வத்தையும் பாலுள்ளும் திணையுள்ளும் அடக்கியவாறு.

சுட்டிய என்பது செய்யிய என்னும் வினையெச்ச மென்றும், ஆண்மை திரிதல் சொற்கின்மையின் பெயர் நிலைக் கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருண்மேல் நின்றதென்றும் உரையாசிரியர் கூறினாராலெனின், ஆண்மை திரிதல் பெண்மைத்தன்மை எய்துதற் பொருட்டன்றிப் பேடிக்கு இயல்பாகலின், பெண்மை சுட்ட வேண்டி ஆண்மை திரிந்த என்றல் பொருந்தாமையானும், பொருளே கூறலுற்றாராயின் ஆசிரியர் பேடியும் தெய்வமும் என்று தாம் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கியவாய்பாட்டான் சூத்திரிப்பராகலானும், அவர்க்கு அது கருத்தன்மையான், உரையாசிரியருக்கும் அது கருத்தன்றென்க. (4)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**4. பெண்மை . . . . இசைக்கும்-**

'பெண்மை சுட்டிய பெயர்' என்று மாத்திரம் குறிப்பிட்டால் பெண்பாலையே குறிக்கும். 'ஆண்மை சுட்டிய பெயர் ' என்று மாத்திரம் குறிப்பிட்டால் அலியையும் குறிக்கும். பெண்பாலையும் அலியையும் நீக்கிப் பேடியை மாத்திரம் ஒருமையும் பன்மையுமாகக் குறிப்பிடப் 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்' எனப்பட்டது.

'பெண்மை சுட்டிய பெயர்' எனவே, பெண்மையைச் சுட்டாப்பேடு என்பதும் அலி என்பதும் இந்நூற்பாவில் குறிப்பிடப்படவில்லை என்று சேனாவரையர் கருதுகிறார். பேடு அலி என்ற சொற்கள் சங்க இலக்கியத்தில் இல்லை.

'பேடிப் பெண்கொண்டு ஆடுகை கடுப்ப' என அகம் 206இல் வந்துள்ளது.

'காமன் ஆடிய பேடி ஆடலும்' - சிலப். 6 : 57

'பாடகச் சீறடி ஆரியப் பேடியோடு' - சிலப். 27 : 186

'பெண் அணிப் பேடியர் ஏந்தினர் ஒருசார்' - சிலப். 28 : 60

'பேடிக் கோலத்துப் பேடு காண்குநரும்' - மணி. 3 : 125
(பெண்பாற் கோலத்தில் வந்துள்ள பேடி என்பது பொருள்.)
எனப் பேடி என்ற சொல் பயின்று வருகிறது.

பேடு என்ற சொல் பெண்பறவையைக் குறிக்கும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

'மயில் மயில் குளிக்குஞ் சாயல்' - சிறுபாண். 16

(மயில்கள் பேட்டிற்குள்ளே சென்று மறைதற்குக் காரணமான கட்புலனாகிய மென்மை.)

துணைபுணர் அன்னம்-தம் பேட்டைப் புணர்ந்த அன்னச் சேவல்-நெடுநல்.132

குடிஞை இரட்டும்-பேராந்தை பேடும் சேவலுமாக மாறிக் கூப்பிடும். மலைபடு 141. என்பன நோக்குக.

''பேடி, தெய்வம் என்பன தமக்கு எனத் தனிப்பட்ட ஈறுகள் உடையன; அவற்றானும் இசைக்கும்; அவற்றை விடுத்து ஆடூஉ மகடூஉ முதலியவற்றிற்குரிய ஈற்றானும் இசைக்கும்'' என்று கருதக்கூடாது என்பதைத் தெளிவாகக் கூறத் தமக்கெனத் தனிப்பட்ட ஈறுகளை உடையன அல்ல, உயர்திணைக்குரிய ஆடூஉ அறிசொல் முதலிய ஈறுகளாலேயே இசைக்கும் என்றார்.

ஆண்மை திரிதல் பேடிக்கு இயல்பாக உள்ளதே. பெண்மையைச் சுட்டுவதற்காக அஃது ஆண்தன்மையைத் திரித்துக் கொள்ளவில்லை. எனவே, 'சுட்டவேண்டி' என்று பொருள்படும் செய்பிய என்ற வாய்பாடாகச் 'சுட்டிய' என்ற சொல்லைக் கொள்ளக்கூடாது.

பெயர்நிலைக்கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருளைச் சுட்டியது என்பது பொருந்தாது. பொருளைச் சுட்டுதல் ஆசிரியர் கருத்தாயின் 'பேடியும் தெய்வமும்' என்று சுருக்கமாக நூற்பா இயற்றியிருப்பார் என்பது சேனாவரையர் கருத்து.

'பெண்மை சுட்டிய பெயர்நிலைக் கிளவி' என்ற தொடரின் இடையே 'ஆண்மை திரிந்த' என்ற தொடர் இடைப்பிறவரலாய் வந்தது. சொல்லொடு பொருளுக்கு உள்ள ஒற்றுமை கருதிப் பொருள் 'பெயர்நிலைக்கிளவி' எனப்பட்டது. சொல் ஆகுபெயராய்ப் பொருளைத் தெரிவிக்கவேண்டிய தேவை இல்லை என்பது சேனாவரையர் கருத்து.

## நச்சினார்க்கினியர் உரை

### பேடியும் தெய்வமும் திணைபால்களுள் அமையுமாறு

***4. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்***
***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்***
***தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்***
***இவ்என அறியும்அந் தம்தமக்கு இலவே;***
***உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.***

இஃது ஐயம் அறுக்கின்றது, மேல் தொகையுள் ஒழிந்த தெய்வத்தையும், வகையுள் ஒழிந்த பேடியையும் இவ்வாறு ஆம் என்றலின்.

இ-ள்: உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய-ஒருவன் உயர்திணை யிடத்துப் பெண்பாற்கு உரிய அமைதித் தன்மையைக் கருதுதற்குக் காரணமான; ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்-ஆண்பாற்கு உரிய ஆளும் தன்மை திரிந்த பெயர்ப் பொருளும்; தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்-தெய்வத் தன்மையைக் குறித்த பெயர்ப் பொருளும்; இவ் என அறியும் அந்தம் தமக்கு இலவே-இவை எனத் தம் பெயர்ப் பொருளினை வேறு அறிய நிற்கும் ஈற்றெழுத்தினை உடைய சொற்களைத் தமக்கு உடைய அல்ல; உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும்-உயர்திணை இடத்திற்கு உரிய பாலாய் வேறுபட்டு இசைக்கும் என்றவாறு.

'அலி அன்று' என்றற்குப் 'பெண்மை சுட்டிய' என்றார். 'பெண் அன்று' என்றற்கு 'ஆண்மை திரிந்த' என்றார். இரண்டு இடத்துப் பெயர்நிலைக் கிளவியும் சொல்லினான் பொருள் அறியப்படுதலின், ஆகுபெயராய் அப்பொருள் உணர்த்தி நின்றன.

'சுட்டிய' என்பது 'நிலம் பூத்த மரம்' (கலி. 27:9) என்பது போலும் பெயரெச்சம். அது 'பெயர் நிலைக்கிளவி ' என்பதனொடு முடியும். 'ஆண்மை திரிந்த' என்பது இடைநிலை.

இதன் பொருள் - ஆண்பாற்கு உரிய ஆளுந்தன்மை முற்பிறப்பில் தான் செய்த தீவினையால் தன்னிடத்து இல்லையான பெயர்ப் பொருள் என்க. என்றது, 'நல்வினை செய்யாத பொருள்' என்றவாறு. இதற்குப் பெண்மை திரிதலும் உண்டேனும், ஆண்மை திரிதல் பெரும்பான்மை.

பால் பிரிந்து இசைத்தலாவது தாம் உயர்திணைப் பொருளாய், அவற்றின் ஈற்றினான் இசைத்தலாம்.

பேடியைப் பாலுள்ளும் தெய்வத்தைத் திணையுள்ளும் அடக்கினார்.

உதாரணம் : பேடி வந்தாள், பேடியர் வந்தார், தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவரும்.

பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடி என்னாது 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி' என்றார்.

'பெண்அவாய் ஆண் இழந்த பேடி அணியாளோ' (நாலடி. 251) என்பதனான், பேடி பெண் அவாய் நிற்றல் கொள்க.

'அந்தம் தமக்கு இல' என்றதனான், நிரயப்பாலர், அலி, மகண்மா முதலியவற்றையும் இம்மூவீற்றின் ஏற்பதனான் முடிக்க.

உதாரணம் : நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார், அலி வந்தான், அலியர் வந்தார், மகண்மா வந்தாள் எனவரும். (4)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**4. பெண்மை கட்டிய -**

தொகையுள் ஒழிந்த தெய்வம்-உயர்திணை அஃறிணை என்ற தொகையுள் இடம்பெறாத தெய்வம். வகையுள் ஒழிந்த பேடி-ஆண், பெண், பலர் என்ற பால்களுள் இடம் பெறாத பேடி.

பேடியைப் பாலுள்ளும், தெய்வத்தைத் திணையுள்ளும் அடக்கினார் என்று கூறுவதும் நோக்குக.

'நிலம் பூத்த மரம்' - (கலி. 27) நிலம் பொலிவு பெறுதலுக்குக் காரணமாகிய மரம்.

'கலம்பூத்த அணியவர்' (கலி. 27) தாம் அணிந்த அணிகலன்கள் பொலிவு பெறுதலுக்கும் காரணமான அழகினையுடைய பரத்தையர்.

இங்ஙனம் பெயரெச்சத்தையும், வினைத்தொகையையும் காரணப் பொருளில் நச்சினார்க்கினியர்தாம் உரைத்த நூல்களில் 60 இடங்களுக்கு மேல் விளக்கியுள்ளார்.

குளன் அணி தாமரை - குளம் அழகு பெறுதலுக்குக் காரணமான தாமரை. பெண்மை சுட்டிய பெயர் நிலைக்கிளவி-பெண்மையைச் சுட்டுதற்குக் காரணமான பெயர்ப்பொருள். 'ஆண்மை திரிந்த' என்பது இடைப் பிறவரல்.

பெண்மை சுட்டிய பெயர்நிலைக்கிளவி, ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி எனத் தனித்தனியே கூட்டிப் பொருள்செய்க.

'கிளவி' ஆகுபெயராய்ப் பொருளை உணர்த்திற்று என்பதற்கு ஏற்ப, 'அந்தம்' என்பதற்கு ஆகுபெயராய் ஈற்றெழுத்தினை உடைய சொற்கள் என்றார்.

பெண்மை திரிதலும் உண்டேனும் பேடிக்கு ஆண்மை திரிதல் பெரும்பான்மை என்பது, பெண்இயல்பு சற்றே திரிந்து சுருளிடு தாடி முதலியன கொண்டிருத்தல்.

ஆண்மை திரிதல் ஆண்பாற்குரிய புறத்தோற்றமும் அகப்பண்பும் பெரும்பான்மையும் இன்றிக் காணப்படுதல்.

'சுருளிடு தாடி மருள்படு பூங்குழல்
அரிபரந்து ஒழுகிய செழுங்கயல் நெடுங்கண்
விரிவெண் தோட்டு வெண்நகைத் துவர்வாய்
சூடக வரிவளை ஆடுஅமைப் பணைத்தோள்
வளர்இள வனமுலை தளர்இயல் மின்இடை
பாடகச் சீறடி அரியப் பேடி' - (சிலப்-17 : 181-6)

'வேயே திரள்மென்தோள் வில்லே கொடும்புருவம்
வாயே வளர்பவளம் மாந்தளிரே மாமேனி
நோயே முலைசுமப்பது என்றார்க்கு அருகுஇருந்தார்
ஏஏ இவள்ஒருத்தி பேடியோ என்றார்' சீவக. 652.

மற்ற சிறப்பெல்லாம் இருப்பினும் மார்பகம் சுருங்கியிருத்தல் பெண்மைக்குக் குறைவு தருதலின், மார்பகம் கரந்து இருப்பவளையும் பேடி எனக் கருதுவராயினர்.

'**பெண்அவாய்**' - ஆண் தன்மையை இழந்ததனான் வேறு வழியின்றிப் பெண் தன்மையை விரும்பி மேற்கொண்ட பேடி ஏனைய பெண்களைப் போலவே பல அணிகலன்களையும் அணிவாள் என்பது.

நிரயபாலர் - நரகத்தைப் பாதுகாக்கும் தலைவர்கள்.

நிரயப்பாலர் - நரகமாகிய உலகில் துன்புறும் தீவினையாளர்கள்

அலி என்ற சொல் சங்க இலக்கியங்களில் வழங்கப்படவில்லை.

'மைந்தரைப் பார்ப்பன மாமகண் மாக்குழாம்'
சீவக-1902

மைந்தரைப் பார்ப்பவை ஆகிய பெரிய
மகண்மாக் குழாமும்- நச்.

மகண்மா: விலங்கின் சாதியுள் ஒன்று. நீலகேசி -
சாங்கிய. 47 உரை.

'அலி என்பது ஆணும் அல்லாதது, பெண்ணும் அல்லாதது' என்ற செய்தி, 'ஆண் அல்லன் பெண் அல்லன் அல்லாஅலியும் அல்லன்' நாலா. திவ். 2838 என்ற அடியில் விளக்கப்பட்டுள்ளது. 'ஆண்அலி, பெண்அலி' (பொ.605-பேரா.)

'**நரகன்** உயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி இழக்கும் பண்புஈங்கு இல்லை'
(சிலப். 15 : 84, 85)

'விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்குஅஞர் **நரகரைக்** காணினும் காணும்'
(சிலப்.28:163-4)

'நகுவர் நாளும் நாளும் **நரகரை** நாம வேலோய்'
(சீவக - 2770)

நரகன், நரகர் என்ற வழக்கிற்கு இலக்கியச்சான்று இருந்தபின் நரகி என்பதும் கொள்ளப்பட்டது போலும்.

பிற்கால இலக்கியங்களில் அலி, மகண்மா என்பன ஒன்றன்பால் வினையே கொள்வனவாக உள்ளன.

'அலிக்கொற்றன்' எழு. 158. நச். எடுத்துக்காட்டில் அலி ஆண்பாலாகக் கொள்ளப்பட்டுள்ளது.

## தெய்வச்சிலையார் உரை

### பேடியும் தெய்வமும் உயர்திணை ஆதல்

4. ***பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்***
***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்***
***தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்***
***இவ்என அறியும்அந் தம்தமக்கு இலவே***
***உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.***

எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் என்பது : பெண்மையைக் குறித்த உயர்திணைப் பெண் பிறப்பினுள் எ-று. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும் என்பது: ஆண்மைத் தன்மையின் திரிந்த பெயர்க்கண் நிற்கும் சொல்லும் எ-று. தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும் என்பது: தெய்வப் பொருண்மையைச் சுட்டிய பெயர்க்கண் நிற்கும் சொல்லும் எ-று. இவ் என அறியும் அந்தம் தமக்கு இலவே என்பது : இவை என அறிய நிற்கும் ஈற்று எழுத்தினைத் தமக்கு என இல எ-று. உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும் என்பது : உயர்திணை மருங்கின் பால் ஆகிப் பிரிந்து இசைக்கும் எ-று.

ஆண்மை திரிந்த பெயர் ஆவது பேடி, அச்சத்தின் ஆண்மையின் திரிந்தாரைப் பேடி என்ப ஆகலான். ஈண்டு அப்பெயர் பெற்றது அலி என்று கொள்க. அலி மூவகைப்படும். ஆண் உறுப்பில் குறைவு இன்றி ஆண்தன்மை இழந்ததூஉம், பெண் உறுப்பில் குறைவு இன்றிப் பெண்தன்மை இழந்ததூஉம், பெண் பிறப்பில் தோன்றிப் பெண் உறுப்பு இன்றித் தாடி தோற்றி ஆண்போலத் திரிவதூஉம் என்க. அவற்றுள் பின் கூறியது ஈண்டுப் பேடி எனப்பட்டது. அதன்கண் நிற்கும் சொல் ஆவது வினைச்சொல்.

இப்பேடி என்னும் சொல்லொடு தொடரும் வினைச்சொல்லும், தெய்வப் பொருண்மை குறித்த

பெயரொடு தொடரும் வினைச்சொல்லும், உயர்திணை ஆண்பால்அறி சொல்லானும், பலர்அறி சொல்லானும் ஒலிக்கும் என்றவாறு ஆயிற்று. உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

தேவரும் மக்களும் விலங்கும் ஆகிய கதிப்பொருண்மை கூறி நரக கதிப் பொருண்மை கூறாதது என்னை எனின், அக்கதிமேல் நிகழ்வது ஓர் வழக்கு இன்மையின் கூறார்ஆயினார். நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் என வழங்குபவால் எனின், அக்கதியுள் தோன்றுவார் ஆணும் பெண்ணும் ஆகிப் போகம் நுகர்வர் என்னும் இலக்கணம் இன்மையான், மக்களில் தூய்மை இல்லாதாரை உலகத்தார் வழங்குமாறு அவை என்க. 'நரகர் துயர் உழப்பர்' என அக்கதிமேல் தோற்றுவார் மேலும் வருமால் எனின், அவ்வாறு வருவன பால் கூறப்படுதல் இன்றி, ஆணும் பெண்ணும் வரையறுக்கப்படாத பொருளை உயிர்த்தன்மையைக் குறித்து உயர்திணைப் பன்மையான் வழங்கினார் என்க. *(4)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**4. பெண்மை சுட்டிய -**

உயர்திணைமருங்கின் - உயர்திணைப் பெண் பிறப்பினுள்
பெயர்நிலைக்கிளவி - பெயர்க்கண் நிற்கும் சொல்
அந்தம் தமக்கு இல - ஈற்றெழுத்தினைத் தமக்கு என இல.

பேடி என்பது அலியின் மூவகையுள் மூன்றாம் வகையுள்அடங்கும் என்கிறார்.

பேடியும் தெய்வப் பெயர்களும் ஆண்பால், பலர்பால்வினைகொண்டு முடியும் என்கிறார்.

பேடியும் தெய்வப்பெயர்களும் பெண்பால் வினைகொண்டு முடிதல் இவர்க்கு உடன்பாடு அன்றுபோலும். 'பெண்பால்' என்பது உரையில் விடுபட்டிருக்கலாம் என்றும் கருதலாம்.

*கதி நான்கு - தேவகதி, மக்கள் கதி, விலங்குகதி, நரககதி என்பன. சீவக. 2748. நச்.*

*'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தான் அமர்ந்து வரூஉம் மேவற்று ஆகும்' (பொ. 223)*

*'இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்*
*அவைஇல் காலம் இன்மை யான' (பொ. 248)*

என்பனவற்றான் மக்களும் தேவருமே ஆணும் பெண்ணுமாகப் போகம் நுகர்வர் என்றலின் நரகரை ஆசிரியர் குறிப்பிடவில்லை. நரகருள் ஆண் பெண் என்ற வரையறை இல்லை என்பது இவர் கருத்து. மக்களுள் தூய்மையில்லாதாரே 'நரகர்' என்று வழங்கப்படுகின்றனர் என்பது இவர் கருத்து. 'நரகி' என்ற சொற்பகுப்பு இலக்கிய வழக்கில் இன்மை இவர் கருத்துக்கு அரண் செய்கிறது. பின்னுள்ளோர் 'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' என்று உயர்திணையைப் பகுப்பது இவர்க்கு உடன்பாடன்று.

### கல்லாடனார் உரை

### பேடியும் தெய்வமும்

**4. *பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்***
***ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்***
***தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்***
***இவ்என அறியும் அந்தம்தமக்கு இலவே***
***உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.***

என்-எனின், ஐயம் அறுத்தல் நுதலிற்று. என்னை? மேல் தொகையுள் ஒழிந்த தேவரும், நரகரும், வகையுள் ஒழிந்த பேடியும் எவ்வாறு ஆங்கொல் என்று ஐயுற்றாற்கு அவையும் இவ்வாறு ஆம் என்கின்றமையின்.

இ-ள்: உயர்திணை இடத்துப் பெண்மைத்தன்மையை எய்தவேண்டி ஆண்மைத்தன்மையின் நீங்கிய பேடி என்னும் பொருளும், தெய்வத்தன்மையைக் கருதின தெய்வம் என்னும் பொருளும் இவை இரண்டும், இவை எனத் தம்மை வேறுபால் அறிவிக்கும் ஈற்று எழுத்தினை உடைய

சொற்களை உடையஅல்ல; மேற்கூறிய மக்கள் என்னும் உயர்திணையிடத்து முப்பாலினையும் உணர்த்தும் சொற்கள் அவ்விடத்தின்நின்றும் நீங்கி வந்து தம்மை உணர்த்தும் எ-று.

எ-டு: பேடி வந்தாள், பேடியர் வந்தார், வாசுதேவன் வந்தான், திருவினாள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார். சந்திர ஆதித்தர் வந்தார் எனினும் அமையும்.

'அந்தம் தமக்கு இலவே' என்றதனான், மக்களும் தேவரும் அல்லாத நிரயப்பாலரும் மக்களை உணர்த்தும் முப்பால் சொல்லானும் சொல்லப்படுவர் என்பது கொள்க.

எ-டு : நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் எனவரும்.

முன்நின்ற 'சுட்டிய' என்பது செய்யிய என்னும் வினையெச்சம். அதற்கு வினை 'திரிந்த' என்னும் பெயர் எச்சம். பின் நின்ற 'சுட்டிய' என்பது செய்த என்னும் பெயரெச்சம்.

'உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்' என மொழிமாற்றாகக் கொள்க. உயர்திணை மருங்கின் என்னும் ஏழாவதற்குப் பெயர்நிலைக் கிளவி என்பதனை முடிவு ஆக்கி, இடைநின்ற சொல்லைப் பெயர்நிலைக் கிளவிக்கு அடைஆக்கிப் பொருள் உரைத்துக்கொள்க.

இரண்டு இடத்துப் பெயர்நிலைக் கிளவியும் சொல்லினான் பொருள் அறியப்படுதலின், பேடியும் தெய்வமும் என்னும் பொருட்கு ஆகுபெயராய் நின்றன என உணர்க. தெய்வம் என்றது தெய்வத்தன்மையை.

இதனாற் சொல்லியது : முன்சொல்லிநின்ற பொருள் வரையறையுள் அடங்காது நின்ற பொருளினையும் ஒருவாற்றான் அடங்கக் கூறியவாறு ஆயிற்று.

எனவே உயர்திணைப்பொருளும் பொருள் முகத்தான் மக்களும் தேவரும் நரகரும் என மூன்று கூறுபடும். சொல்முகத்தால் மக்கள் என்றதன்மேற்பட்டு ஒன்றேஆம். உயர்திணைப்பால்ஆயின், பொருள்முகத்தான், ஆண்பால், பெண்பால், ஆண்அலி, பெண்அலி, பேடிப்பால், ஆண்பால் பன்மை, பெண்பால் பன்மை, ஆண்அலிப்பன்மை, பெண்அலிப்பன்மை. பேடிப்பன்மை, ஆண்பாலொடு பெண்பால்கூடிய பன்மை, பெண்பாலொடு ஆண்பால் கூடிய பன்மை, ஆண்பால் சிலர், பெண்பால் சிலர் என விகற்பித்து நோக்கப் பலவகைப்படும். இப்பலவகையும் சொல்வகை மூன்று அல்லது இன்மையின் மூன்றே ஆயின. இவ்வாற்றானே தேவர், நரகர் என்பனவற்றது பாகுபடும் அறிந்துகொள்க.

இனி, அஃறிணை உயிர் உடையதூஉம், உயிர் இல்லதூஉம் என இரண்டாய், அவற்றுள் உயிர் உடையது ஆணும் பெண்ணும், ஆண் சிலவும், பெண் சிலவும், ஆண் பன்மையும், பெண் பன்மையும், அவ்விரண்டும் தொக்க சிலவும், அவ்விரண்டும் தொக்க பலவும், உயிர் அல்லவற்றது ஒருமையும் சிலவும் பலவும் என இவ்வாற்றான் பல பகுதிப்படுமேனும், சொல்வகை நோக்க இரண்டு அல்லது இன்மையின் இரண்டே ஆயின என்பது. இனி மக்கள் முதலியவற்றின் வேறுபாடும் அறிந்துகொள்க. *(4)*

### கல்லாடனார் உரைவிளக்கம்

**4. 'பெண்மை சுட்டிய . . . இசைக்கும்.'-**

தொகையுள் ஒழிந்த - உயர்திணை என்ற பகுப்பில் கூறப்படாது எஞ்சிநின்ற

மன்பதையுள் ஒழிந்த -மக்களுள் கூறப்படாது எஞ்சி நின்ற பேடியும்.

சுட்டிய என்பதனைச் சுட்டவேண்டி என்று செய்யிய என்னும் வினையெச்சமாகக் கொள்கிறார்.

அந்தம் - ஈற்றெழுத்தினை உடைய சொற்கள்.

பால் பிரிந்து இசைக்கும்-உயர்திணை ஆண்- பெண்- பலர்பால்களை உணர்த்தும் சொற்கள், தம் தன்மையின் நீங்கிப் பேடிக்கு உரிய பெண்பாலையும் பலர்பாலையும் உணர்த்தும்.

வாசுதேவன் - தெய்வத்தின் ஆண்பால்.

திருவினாள் - தெய்வத்தின் பெண்பால்.

முப்பத்து மூவர்- தெய்வத்தின் பலர்பால். ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், அசுவினிதேவர் இருவர் ஆக முப்பத்து மூவர்.

சந்திராதித்தர் - சந்திரனும் சூரியனும் - தெய்வத்தின் பலர்பால்.

சுட்டிய என்ற வினையெச்சம் திரிந்த என்ற பெயரெச்சத்தைக் கொண்டுமுடிந்தது.

உயர்திணை மருங்கின் பெயர் நிலைக்கிளவி என்க. ஆண்மை திரிந்த என்பது இடைப்பிறவரல். அஃது பெயர் நிலைக் கிளவிக்கு அடையாகும்.

உயர்திணை பொருள்வகையான் பலவாயினும் சொல் வகையான் ஆண் - பெண் - பலர் - என்ற மூன்றே என்பது விளக்கப்பட்டது. அஃறிணையும் பொருள் வகையான் பலவாயினும் சொல்வகையான் ஒன்று, பல என இரண்டே என்பது விளக்கப்பட்டது.

ஒருவர் உரை

4. *பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்*
*ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்*
*தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்*
*இவ்என அறியும்அந் தம்தமக்கு இலவே*
*உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.*

எ-து : பெண்மைத் தன்மை எய்திய உயர்திணையிடத்து ஆண்மை நீங்கிய பெயர்ப்பொருளும், தெய்வம் சுட்டிய பெயர்ப்பொருளும் பால் அறிய நிற்கும் ஈற்றெழுத்து

இத்தன்மையன எனத் தமக்கு உடைய அல்ல. உயர்திணை முப்பாலினையும் விளக்கும் எழுத்தினையே ஈறுஆக இசைக்கும்.

எடுத்துக்காட்டு : பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார், வாசுதேவன் வந்தான், திருவினாள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார் எனவரும்.

'உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய' என்று மொழிமாற்றி உரைக்க.

'அந்தம் தமக்கு இலவே' என்றதனான், நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார்-எனத் தேவரும் மக்களும் அல்லாத நரகர்க்கும் அம்முடிவு கொள்க. *(4)*

## ஒருவர் உரைவிளக்கம்

**4. "பெண்மை . . . இசைக்கும்.'-**

'உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய' என மொழிமாற்றிக் கொள்க என்கிறார். சுட்டிய என்பதனைப் பெயரெச்சமாகக் கொள்கிறார்.

## சாத்திரியார் உரை

**4. 'பெண்மை . . . இசைக்கும் '**

மக்களைக் குறிக்கும் சொல் உயர்திணை என்றும், அஃது ஆண்பால், பெண்பால், பலர்பால் என மூவகைப்படும் என்றும் சொன்னமையின், மக்களைக் குறித்தாலும், ஆண்பால் பெண்பால் பலர்பால் இவற்றுள் அடங்காப்பேடி-பேடர்-பேடியர்-பேடிகள்- பேடிமார்- என்னும் சொற்கள் எப்பாலைக் குறிக்கும் வினையைப் பெற்றுவரும் என்றும், மக்களைக் குறிக்காது தெய்வத்தைக் குறிக்கும் சொற்கள் எத்திணையைக் குறிக்கும் வினையைப் பெற்றுவரும்

என்றும் எழும் ஐயம் நீக்குவான் இச்சூத்திரம் கூறுவார் ஆயினார்.

உயர்திணையில் ஆண்மை திரிந்து பெண்மை சுட்டும் பொருளைக் குறிக்கும் சொல்லிற்கும் தெய்வத்தைக் குறிக்கும் சொல்லிற்கும் தமக்கென ஈற்றெழுத்து இல்லை. ஆதலால் அவை உயர்திணைக்குரிய பாலாய் வேறுபட்டிசைக்கும்.

சேனாவரையர் 'பெண்மை சுட்டிய' எனவே, பெண்மை சுட்டாப் பேடு என்பது ஒழிக்கப்பட்டதாம் என்றுசொல்லிப் பின்னர், பேடர் என்பதனை உதாரணத்தில் கொடுத்ததால் 'பேடன் வந்தான்' என்றும் அவர் உதாரணம் கூறியிருத்தல் வேண்டும். அன்றெனின், பேடர் என்ற எடுத்துக்காட்டு, எழுதியவர் தவற்றான் வந்ததாதல் வேண்டும்.

பேடி என்பதற்குத் தெய்வச்சிலையார் 'பெண் பிறப்பில் தோன்றிப் பெண் உறுப்பு இன்றித் தாடி தோன்றி ஆண்போலத் திரிவது' என்று விளக்கம் கூறுகிறார்.

அவர் 'பெயர்நிலைக்கிளவி' என்பதற்குப் 'பெயர்க்கண் நிற்கும் சொல்' என்று பொருள் கூறுகின்றார். இப்பொருள் மிகப் பொருத்தமானது.

**பாலசுந்தரனார் உரை**

**4. 'பெண்மை . . . இசைக்கும்.'-**

பெண்மையைச் சுட்டியதும் ஆண்மை திரிந்ததுவும் ஆகிய மக்கட் சுட்டுடைய பெயர்நிலைச்சொல்லும், தெய்வத்தன்மையைக் கருதிவரும் பெயர் நிலைச் சொல்லும், இன்ன பால் என்று அறியப்படும் பயனிலை பற்றிய ஈறுகள் தமக்கு இல. ஆதலின், அவை, உயர் திணையிடத்துப் பால் அறிவிக்கும் ஈறுகளொடு பிரிந்து இசைக்கும்.

ஆண்மையும் பெண்மையும் இன்றித் திரிந்து நின்றதைத் 'தன்மை திரிபெயர்' என்று மேற்கூறுகின்றமையின், ஆண்மை திரிந்து பெண்மை சுட்டிய பெயர் மகடூஉவிற்கும் பல்லோருக்கும் உரிய ஈறுகளானும், தெய்வம் சுட்டிய பெயர் ஆடூஉ, மகடூஉ, பல்லோர் ஆகிய மூன்றற்கும் உரிய ஈறுகளானும் இசைக்கும் எனக்கொள்க. தன்மை திரிபெயர் அஃறிணையாய் இசைக்கும் என மேற்கூறுவர் (சொ. 56).

தெய்வப் பெயர்கள், தெய்வம் சுட்டாமல் மக்களுக்கும் அஃறிணைப் பொருள்களுக்கும் இடுபெயராக வைக்கப் பட்டு வழங்குமிடத்து இருதிணைப் பொதுப் பெயராகவும், தெய்வம் சுட்டியவழி உயர்திணை மருங்காயும் இசைக்கும் எனக்கொள்க. இருதிணைக்கண்ணும் பெயர்நிலைக் கிளவிகளில் பால் பாகுபாடு பொருள் தன்மையை அடிப்படையாகக் கொண்டது என்பது பெறப்படும்.

[பேடன் என்ற சொல் அமைப்புப் பொருந்துவதாக இல்லை என்பதனை விளக்கி, திரிபினான் எய்தும் வேறுபாட்டினை நன்கு உணர்த்த தொல்லாசிரியன்மார் அதனை மகடூஉவில் அடக்கினார் என்று கூறுகிறார். தெய்வம் சுட்டிய பெயர்கள் ஈற்று இடைச்சொல் இன்றி வாளா வரும்வழி அவை அஃறிணைச் சொல்லாயே நிற்கும் என்பது பின்னர் (சொ. 57) விளக்கப்படும்.]

## பதிப்பாசிரியர் குறிப்பு

4. சங்க இலக்கியத்தில் பேடி என்ற சொல்லே உள்ளது. பேடு என்ற சொல் மணிமேகலையிலேயே இடம்பெற்றுள்ளது. அலி என்ற சொல் பக்தி இலக்கியங் களிலேயே காணப்பெறுகிறது. உரையாசிரியன்மார் பேடி, பேடு, அலி என்ற எல்லாச் சொற்களுக்கும் தொல்காப்பியத்தில் இலக்கணம் காண விரும்புகின்றனர். தொல்காப்பியம் பேடி, பேடியர், பேடிமார் என்ற சொற்களையே குறிப்பாகத் தெரிவிக்கிறது.

## இளம்பூரணர் உரை

### ஆண்பால் சொல்

**5. *னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.***

எ...ன், ஆடூஉ அறிதற்கு ஈற்றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: னஃகானாகிய ஒற்று ஆடூஉவினை அறிவார்க்குக் கருவியாம் சொல் என்றவாறு.

உதாரணம் : உண்டான் என்னும் இறந்தகாலத்தானும், உண்ணாநின்றான் என்னும் நிகழ்காலத்தானும், உண்பான் என்னும் எதிர்காலத்தானும்; கரியன், செய்யன் என்னும் வினைக்குறிப்பினானும்; இங்ஙன் னகர இறுதியாய படர்க்கை வினைமுற்றுச் சொல்லான் உயர்திணை ஆண்பால் உணர்த்தப்படும்.

'படர்க்கையிடம்' என்பது, முன்னர் வினையியலுள் பெறுதும். 'வினை' என்பது 'இருதிணை மருங்கின் ஐம்பாலறிய' (சொ. 10) என்னும் சூத்திரத்தான் பெறுதும். 'உண்டான்' என்றவிடத்து நான்கு எழுத்து உளவே ஆயினும் னகரத்தை 'ஆடூஉ வறியும் சொல்' என்றார், அதன்கண் தலைமை நோக்கி.

ஏகாரம் பிரிநிலை. (5)

### இளம்பூரணர் உரைவிளக்கம்

**5. 'னஃகான் ஒற்றே' -**

இளம்பூரணர் ஆன் என்ற மூன்றன் உருபையே பயன்படுத்துகிறார். எனவே, ஏடு எழுதுவோரான் ஆல் எனக் குறிப்பிடப்பட்டவற்றை ஆன் எனத் திருத்திக் கொள்ள வேண்டும்.

வினையியலில் உள்ள நூற்பா

'அன்ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கின் படர்க்கைச் சொல்லே' - சொ. 202

என்பதும் 203ம் 204ம் படர்க்கை உயர்திணை வினையையும் 212ம் 213ம் படர்க்கை அஃறிணை வினையையும் குறிப்பிடுவன.

உண்டான் என்பதன்கண் னகரம் நீங்கலான எழுத்துக்கள் உண்டாள், உண்டார், உண்டது, உண்டன என ஏனைய பால்களுக்கும் பொது. ஆண்பாலை உணர்த்துவது னகர ஒற்றே என்பது.

ஏனைய ளகர ரகர ஒற்றுக்களிலிருந்து பிரித்து னகர ஒற்றையே சிறப்பித்தலின் ஏகாரம் பிரிநிலை.

## சேனாவரையர் உரை

### ஆண்பால் ஈறு

**5. *ன:கான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.***

*(இ-ள்) : னஃகான் ஆகிய ஒற்று ஆடூஉ அறிசொல்லாம் எ-று.*

*(எ-டு) உண்டனன், உண்டான்; உண்ணாநின்றனன், உண்ணாநின்றான்; உண்பன், உண்பான்; கரியன், கரியான் என வரும்.*

ஆடூஉ அறிசொல்லாவது னகார ஈற்றுச் சொல்லாயினும், பால் உணர்த்துதற் சிறப்பு நோக்கி 'னஃகான் ஒற்றே' என்றார். 'அறமாவது அழுக்காறின்மை' என்றாற்போல, னஃகான் ஒற்று ஆடூஉ வறிசொல் என்றாராயினும், ஆடூஉ அறிசொல்லாவது னஃகான் ஒற்றென்பது கருத்தாகக் கொள்க. 'ளஃகான் ஒற்று' முதலாயினவற்றிற்கும் இவை ஒக்கும். ஏகாரம் அசைநிலை.

உரையாசிரியர் ஏகாரம் பிரிநிலை யென்றாராலெனின், பிரிநிலையாயின் ஆடூஉ அறிசொற்கு இலக்கணங் கூறுதலன்றிப் பிரித்ததன் சிறப்புணர்த்துதலே கருத்தாம் ஆகலின் அவ்வுரை போலியுரை என்க. (5)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**5. னஃகான் . . . அறிசொல்-**

இந்நூற்பாவுள் ஆடூஉ அறிசொல் விளக்கப்பட்டுள்ளது. ஆதலின் நூற்பாவின் அமைப்பை 'ஆடூஉ அறிசொல் னஃகான் ஒற்றே' என்று மாற்றிக் கொள்ளவேண்டும். அங்ஙனம் கொள்ளாக்கால் இந்நூற்பா னஃகான் ஒற்றின் சிறப்பு உணர்த்துவதாகவே அமையும். னஃகான் ஒற்றின் சிறப்பு உணர்த்த வேண்டிய இடம் இஃது அன்று. இதனை எடுத்துக்காட்டான் விளக்குகிறார்.

பலவகை அறங்களுள் அழுக்காறின்மையும் ஒன்று. 'அறமாவது அழுக்காறின்மை' என்றால் அழுக்காறின்மை ஒன்றே அறம் என்ற கருத்து வலியுறுத்தப்படும். அழுக்காறின்மையாவது அறம் என்றால் பலவகை அறங்களுள் அழுக்காறின்மையும் ஒன்று என்ற கருத்துப் பெறப்படும்.

'னஃகான் ஒற்றே' என்ற ஏகாரத்தைப் பிரிநிலை ஏகாரம் என்று கொண்டால் அவ்வேகாரம் மற்ற ஒற்றுக்களிலிருந்து பிரிக்கப்பட்டதாகிய னஃகான் ஒற்றின் சிறப்பைக் கூறுவதாக அமையும். இந்நூற்பா ஆடூஉ அறிசொல் பற்றியதே ஆதலின் ஏகாரம் அசைநிலையே.

## நச்சினார்க்கினியர் உரை

### ஆடூஉ அறிசொல்

*5. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.*

இஃது ஆடூஉ அறிசொல் உணர்த்துகின்றது.

இ-ள்: னஃகான் ஒற்று-னஃகான் ஆகிய ஒற்றினை ஈறாக உடைய சொல்; ஆடூஉ அறிசொல்-ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லாம் என்றவாறு.

ஏகாரம் தேற்றேகாரம்.

உதாரணம் : உண்டனன், உண்டான்
உண்ணாநின்றனன், உண்ணாநின்றான்
உண்பன், உண்பான்
கரியன், கரியான்

எனவரும். உண்டனன், உண்டான் என்புழி னகரம் ஒழிந்த எழுத்துக்களும் ஏனைப்பாற்கும் வருதலின், னகரத்தின் சிறப்பு நோக்கி, 'னஃகான் ஒற்றே' என்றார். அன், ஆன் என்னும் இரண்டனையும் தொகுத்து 'னஃகான்' என்றார். மேலனவற்றிற்கும் இஃது ஒக்கும். (5)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**5. னஃகான் ஒற்றே -**

வினைமுற்றுள் திரிபின்றி ஆண்பாலை உணர்த்துவது னகர ஒற்று ஈறே ஆதலின், னஃகான் ஒற்றே என்ற ஏகாரம் தெளிவுப்பொருள் தரும் தேற்றேகாரம் எனப்பட்டது.

'ஆடூஉ அறிசொல் னஃகான் ஒற்றே' என மொழி மாற்றிப்பொருள் செய்யின் நிறுத்த முறையானே ஆடூஉ அறிசொல் எடுத்து விளக்கப்பட்டதாகும்.

'தங்கா விருப்பின் தம் பெருமான் பாதம் முடிதீட்டி' சிந்தா. 2608.

[குறைவற்ற விருப்பொடு விசயையின் அடியிலே தன்முடியைத் தீண்டுவித்து. பெருமான் - னஃகான் ஒற்று மகடூஉ உணர்த்திற்று - என்பர் நச்.]

என்பதனான், பெயர்க்கண் னஃகன் ஒற்று திரிபின்றி ஆண்பாலையே உணர்த்த வேண்டும் என்றவரையறை இல்லை.

## தெய்வச்சிலையார் உரை

### ஆடூஉ அறிசொல்

*5. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.*

நிறுத்த முறையானே ஆடூஉ அறிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: னகாரம் ஆகிய ஒற்றை அந்தம்ஆக உடைய சொல் ஆண்பால் உணரவரும் சொல் என்றவாறு.

ஏகாரம் ஈற்று அசை. அந்தம் என்பது மேலைச் சூத்திரத்தின்நின்றும் தந்து உரைக்கப்பட்டது. இவ்வுரை வருகின்ற சூத்திரங்கட்கும் ஒக்கும்.

உ-ம்: உண்டான், உண்ணாநின்றான், உண்பான்-இவை வினைச்சொல். கரியன், நெடியன்-இவை வினைக்குறிப்பு. பாண்டியன், மாயவன் - இவை பெயர்.

அஃதேல் வினையியலுள்ளும், "அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும் - ஒருவர் மருங்கின் படர்க்கைச் சொல்லே" (வினை. சூ.- 8) என ஓதுகின்றார் ஆகலின், ஈண்டுக் கூறுதற்குக் காரணம் என்னை எனின், "வினையின் தோன்றும் பால்அறி கிளவியும், பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும், மயங்கல் கூடா" (சூ. 11) என வழூஉக் காக்கின்றார் ஆகலின், அவை வழுவாமல் கூறுங்கால், அச்சொற்களின் இயல்பு அறியவேண்டும் அன்றே? அதற்காக ஈண்டுத் தோற்றுவாய் செய்தார் என்க. ஆண்மைப் பொருண்மைக்கண் வரும் பெயர்ச்சொற்கும் வினைச்சொற்கும் ஈற்று எழுத்துப் பல ஆயினும் அவை எல்லாம் கூறாது, னகரஒற்று ஒன்றனையும் கூறினமையானும் தோற்றுவாய் செய்தவாறு உணர்க. இவ்வுரை முன்வருகின்றவற்றிற்கும் ஒக்கும். (5)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**5. னஃகான் ஒற்றே -**

னஃகான் ஒற்றே - னகாரமாகிய ஒற்றே அந்தமாக உடைய சொல். அந்தம் என்ற சொல் சென்ற நூற்பாவிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டது.

னஃகான் ஒற்றுக்கு இவரே பெயர்ச்சொல் உதாரணங்களும் தருகிறார். பாண்டியன் மக்களுக்கும், மாயவன் தெய்வத்திற்கும் உதாரணம்.

இச்செய்திகள் (சொ. 5-9) வினையியலுள் கூறப் படினும், வினைச் சொல்லும் பெயர்ச்சொல்லும் மயங்கல்கூடா என்று சொல்லும்முன் அவற்றின் இயல்பு அறியப்படவேண்டும் என்பதற்காக இங்கும் கூறப்பட்டன.

ஆண்மைப் பெயர்ச்சொல் ஈறு - நம்பி, ஆடூ, விடலை, குரிசில், வேள், அவன் முதலியவற்றில் உள்ள இ, ஊ, ஐ, ல், ள், ன் போல்வன.

ஆண்மை வினைச்சொல் ஈறு - சாத்தன் வருக, வரும், வந்தான் முதலியவற்றில் உள்ள அகரம், ம், ன் போல்வன.

பெண்மை பெயர்ச்சொல் ஈறு - தோழி, மகடூ, நங்கை, தையல் முதலியவற்றில் உள்ள இ, ஊ, ஐ, ல் போல்வன.

பெண்மை வினைச்சொல் ஈறு - வருக, வரும், வந்தாள் என்பனவற்றில் உள்ள அ, ம், ள் போல்வன.

வழுவற்க என்பதற்குத் தேவையானவையே ஆடூஉ அறிசொல் முதலியவற்றில் கூறப்பட்டுள்ளன.

### கல்லாடனார் உரை

### ஆண்பால் ஈறு

5. *ன:கான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.*

*என்-எனின், நிறுத்த முறையானே மேற்கூறிய உயர்திணைச் சொல்லுள் ஆடூஉ அறிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: ஆடூஉ அறியும் சொல்லாவது னகாரம் ஆகிய ஒற்றினை ஈறுஆக உடைய சொல் எ-று.*

*எ-டு: உண்டான், உண்ணாநின்றான், உண்பான்: இவை தெரிநிலை வினை. கரியன், செய்யன்: இவை குறிப்புவினை.*

சூத்திரம் 'னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்' எனப் பொதுப்பட நின்றமையின், புதன், குபேரன், உண்டேன், உண்மின் என்பனவும் ஆண்பால் உணர்த்துதற்குச் சென்றனவேனும், பொதுமை விலக்கி மேற்சொல்லுகின்ற விதிகளால் படர்க்கை இடத்து முற்றுச்சொற்கு ஈறாய் அல்லது வாராது என்க. இது மேற்கூறுவனவற்றிற்கும் ஒக்கும்.

உண்டான் என்புழி நான்கு எழுத்துக்கூடி ஆண்பால் உணர்த்திற்றே ஆயினும், பிற எழுத்துக்கள் பிறபால் உணர்த்தும்வழியும் வருதலான், னகர ஒற்றையே தலைமை பற்றி ஆடூஉ அறிசொல் என்றார். (5)

### கல்லாடனார் உரைவிளக்கம்

5. **'னஃகான் . . . அறிசொல்'**-

நிறுத்தமுறை - 2ஆம் நூற்பா.

புதன், குபேரன் - னகர ஒற்றில் முடியும் பெயர்கள்.

உண்டேன் - னகர ஒற்றில் முடியும் தன்மை ஒருமை வினை; ஆண்பால், பெண்பால் இரண்டற்கும் பொது.

உண்மின் - னகர ஒற்றில் முடியும் முன்னிலைப் பன்மைவினை.

னகர ஒற்று படர்க்கை ஆண்பாலைக் குறிக்கும் அன், ஆன் என்ற விகுதிகளின் னகர ஒற்றே என்பது சொ. 205 - சே. என்ற நூற்பாவில் கூறப்பட்டுள்ளது.

**ஒருவர் உரை**

**5. *னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.***

*எ-து : னகர ஒற்றே ஆண்மகனை அறிவிக்கும் சொல்.*

*எ-டு : உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என மூன்று கால வினையானும், கரியன், செய்யன் எனக் காலம் தோன்றாத வினைக்குறிப்பானும் அறிக. (5)*

**சாத்திரியார் உரை**

**5. 'னஃகான் . . . சொல்.'**

*ஆடூஉ அறிசொல்லாவது னஃகான் ஆகிய ஒற்று என்பது இச்சூத்திரத்துக்குப்பொருள்.*

*னஃகான் ஒற்று மாத்திரம் தனியாய் வந்து பொருள் குறிக்க இயலாமையின், னஃகான் ஒற்று என்பது னஃகான் ஒற்றை ஈற்றில் கொண்ட சொல் என்றே கொள்ளப்படும்.*

*இவ்வாறு சொ. 102இல் 'வேற்றுமைக்கிளவி' 103இல் உருபு என்பவை வேற்றுமை உருபை ஈற்றில் கொண்ட சொற்களையே குறிக்கும். 128இல் ன ர ல ள என்பன அவ்வவ் வீற்றைக் கொண்ட சொற்களைக் குறிக்கும். அவ்வாறே 202, 203, 205, 206, 216, 217 என்பன அம் ஆம் முதலியனவற்றை ஈற்றில் கொண்ட வினைமுற்றுக்களைக் குறிக்கும்.*

*இச்சூத்திரம் ஆடூஉ அறிசொல்லின் இலக்கணத்தையே விதித்தலானும், னஃகான் ஒற்று முற்சூத்திரங்களான் பெறப்படாமையானும், சேனாவரையரும் தெய்வச் சிலையாரும் குறிப்பிட்டமைபோல ஏகாரம் அசைநிலை என்றலே பொருந்தும்.*

## பாலசுந்தரனார் உரை

**5. 'னஃகான் . . . சொல்.'**

னகர ஒற்றினை ஈறாகக் கொண்டு இசைப்பதுவே ஆடூஉவை அறிவிக்கும் சொல்லாகும். னஃகான் ஒற்று என்பது அன்னும் ஆனுமாகிய ஈற்று இடைச்சொற்களை என்பது வினையியலுள் (சொ. 206) பெறப்படும். இவை இறுதிக்கண் நின்று இசைக்கும் என்பது சொ. 10இல் பெறப்படும். பின் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

னஃகான் ஒற்று உயர்திணைப் பெயரொடு வருதல் 'தோற்றம் தாமே வினையொடு வருமே' (சொ. 11) என்ற சூத்திர அடியின் 'தாமே' என்ற மிகையான் கொள்ளப்படும்.

உரையாளர் யாவரும் ஆடூஉ அறிசொல்லாவது னகர ஒற்றை இறுதியாக உடைய சொல் என உரை கண்டனர். அவ்வுரை ஆடூஉ அறிசொல்லின் இலக்கணம் கூறியதாகுமே அன்றி, ஆடூஉ அறிசொல்லை ஆக்கும் ஆறு இது என ஆக்க இலக்கணம் கூறுவது ஆகாது, இவ்வியலுள் கிளவிகளை ஆக்கிக்கொள்ளும் முறைமை பற்றியே ஆசிரியர் கூறுகின்றார் ஆதலின்.

அன், ஆன் என்னும் னஃகான் ஒற்றைக் கொண்டு ஆக்கிக்கொள்ளுமாறு யாங்கனம் எனின், உண், செல் முதலிய தொழிற்சொற்களொடு கால இடைநிலைகளின் பின், அன், ஆன் என்பனவற்றைக் கூட்டி உண்டனன், உண்டான், சென்றனன் எனவும், மலை, நாடு, அகம், வேனில், கண், கருமை, செம்மை, ஊண் என்றாற்போல வரும் பொருள் முதலாகிய பெயர்களொடு கூட்டி, மலையன், நாடன், அகத்தன், வேனிலான், கண்ணன், கரியன், செய்யன், ஊணன் எனவும் ஆடூஉ அறிசொல்லாக ஆக்கிக்கொள்ளுதலாம். பிற ஈறுகளுக்கும் இஃது ஒக்கும்.

இங்ஙனம் பாலறி கிளவிகளை ஆக்கிக் கொள்ளுதற்கண் திரிபின்றி இருதிணை ஐம்பாலுள் ஒன்றை அறிவிப்பதற்கு ஏற்றது படர்க்கை வினைமுற்றேயாம். பிற சார்புகள் உணர்த்தும் இதற்கு வினைமுற்றுக்களை மட்டுமே உதாரணம் காட்டின் அன், ஆன் இறுதிகள் பெயர்க்கு ஈறாகா என்பது பட்டு, 'வினையின் . . . மரபினவே' (சொ. 11) என்பதனொடு மாறுகொள்ளும்.

கோ, வேள், குரிசில் - நம்பி, நங்கை முதலாயினவும் ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொற்கள் ஆயினும், அவற்றின் ஈறுகள் பிற முதனிலைகளொடுகூடி ஆடூஉ அறிசொல் முதலியவற்றை ஆக்காமையின் அவை வழக்கு நோக்கிய மரபாகக் கொள்ளப்படும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

*5. ஆடூஉ அறிசொல்லை ஆக்குமாறு இது என்பதனைக் குறிப்பிடுதலின் 'ஆடூஉ அறிசொல் னஃகான் ஒற்றே' என்று நூற்பாவை மொழிமாற்றிப் பொருள் கொள்ளல்வேண்டும்.*

## இளம்பூரணர் உரை

### பெண்பால் சொல்

**6. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.**

எ. . . ன், மகடூஉ அறிதற்கு ஈற்றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ளஃகான் ஆகிய ஒற்று மகடூஉவினை அறிவார்க்குக் கருவியாம் சொல் என்றவாறு.

உதாரணம் : உண்டாள், உண்ணா நின்றாள், உண்பாள்; கரியள், செய்யள் எனவரும் வினையானும், வினைக் குறிப்பானும் மகடூஉவை விளக்கியவாறு அறிக. (6)

## சேனாவரையர் உரை

### பெண்பால் ஈறு

**6. *ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.***

*(இ-ள்)* ளஃகானாகிய ஒற்று மகடூஉ அறிசொல்லாம் எ-று.

*(எ-டு) :* உண்டனள், உண்டாள்; உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள்; உண்பள், உண்பாள்; கரியள், கரியாள் என வரும். *(6)*

## நச்சினார்க்கினியர் உரை

### மகடூஉ அறிசொல்

**6. *ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.***

இது மகடூஉ அறிசொல் உணர்த்துகின்றது.

இ-ள்: ளஃகான் ஒற்று - ளஃகான் ஆகிய ஒற்றினை ஈறாக உடைய சொல்; மகடூஉ அறிசொல் - ஒருவன் மகடூஉவினை அறியும் சொல்லாம் என்றவாறு.

உதாரணம் : உண்டனள், உண்டாள்
உண்ணா நின்றனள், உண்ணாநின்றாள்
உண்பள், உண்பாள்; கரியள், கரியாள்
எனவரும். *(6)*

## தெய்வச்சிலையார் உரை

### மகடூஉ அறிசொல்

**6. *ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.***

மகடூஉ அறிசொல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ளகாரம் ஆகிய ஒற்றை அந்தம்ஆக உடைய சொல் பெண்பால் உணரவரும் சொல் என்றவாறு.

ஏகாரம் ஈற்று அசை.

உ-ம் : உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் - இவை வினை. கரியள், குறியள் - இவை வினைக்குறிப்பு. அவள், திருவினாள் - இவை பெயர். (6)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**6. ளஃகான் ஒற்றே -**

ளஃகான் ஒற்றே - ளகார ஒற்றை அந்தமாக உடைய சொல்.

ளகர ஈற்றுப் பெயருக்கு உதாரணம் - அவள், திருவினாள் என்பன. அவள் மக்களுக்கும் திருவினாள் தெய்வத்திற்கும் உதாரணம்.

## கல்லாடனார் உரை

### மகடூஉ அறிசொல்

*6. ள:கான் ஒற்றே மகடூஉ அறிசொல்.*

என்-எனின், மகடூஉ அறிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மகடூஉவினை அறியும் சொல்லாவது ளகாரம் ஆகிய ஒற்றினை ஈறாக உடைய சொல் எ-று.

எ-டு : உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் : இவை தெரிநிலை வினை. கரியள், செய்யள் : இவை குறிப்புவினை. வேறுபாடு அறிந்துகொள்க.

இனி முன் சூத்திரத்து உரையில் விரித்தாங்கு, 'னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல் எனச் சூத்திரம் பொதுப்பட நின்றமையின்' என்று தொடங்கி உரைத்தவைகள் எல்லாம் ஈண்டும் விரித்து உரைத்துக்கொள்க. (6)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**6. 'ளஃகான் . . . அறிசொல்'-**

'வேறுபாடு அறிந்து கொள்க' என்ற மிகைத்தொடர் நீக்கப்படலாம்.

மக்கள் புத்தேள் முதலிய சொற்களும், கள் ஈறு பெறும் அஃறிணை இயற்பெயர்களாகிய ஆக்கள் குதிரைகள் முதலிய பெயர்களும், ளகர ஈற்றில் முடியினும் அவை பெண்பால் அல்ல என்பது.

## ஒருவர் உரை

***6. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.***

எ-டு : உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் என மூன்று கால வினையானும், கரியள், செய்யள் எனக் காலம் தோன்றாத வினைக்குறிப்பானும் உணர்க. *(6)*

## பாலசுந்தரனார் உரை

**6. 'ளஃகான் . . . சொல்.'-**

அண்ணி, பொன்னி, தோழி, செவிலி, தலைவி எனப் பெண்பாற்பெயர்கள் பெரும்பான்மையும் இகர ஈறாக வரும். வருமேனும் அவை இருதிணைக்கும் ஏற்ப விரவுப் பெயராய் நிற்றலானும், தொழிற்சொற்கள் இகர ஈற்றான் மகடூஉ அறிசொல்லாக ஆக்கப்பெறாமையானும் 'ளஃகான் ஒற்றே' என ளகரத்தையே கூறினார்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

6. 'மகடூஉ அறிசொல் ளஃகான் ஒற்றே' எனக்கொள்க.

## இளம்பூரணர் உரை

### பலர்பால் சொல்

*7. ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட மூன்றும்*
*நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.*

எ. . . ன், பல்லோரை அறியுஞ் சொற்கு ஈறு ஆமாறு எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ரஃகான் ஒற்றும் - ரஃகானும் அதுவே, ஒற்றும் அதுவே; பகர இறுதியும் - பகரமும் அதுவே, இறுதியும் அதுவே; மாரைக் கிளவி உளப்பட மூன்றும் என்பது - மார் என்னும் சொல் அகப்பட மூன்றும் என்றவாறு. நேரத்தோன்றும் என்பது - நிரம்பத் தோன்றும் என்றவாறு. பலரறி சொல்லே என்பது - பலரை அறிதற்குக் கருவியாம் சொல் என்றவாறு.

'நேரத் தோன்றும் பலரறி சொற்கு' என்பான், உருபு தொகுத்துச் 'சொல்லே' என்றான் என்பது. ஏகாரம் ஈற்றசை ஏகாரம்.

உதாரணம் : உண்டார், உண்ணாநின்றார், உண்பார் எனவும், கரியர், செய்யர் எனவும், ரகர விறுதியாகி நின்ற படர்க்கை வினைமுற்றுச் சொல்லானும், குறிப்பானும் உயர்திணைப் பன்மைப்பால் உணர்த்தப்படும். (7)

இனி உண்ப, தின்ப, என்ப - என்பன முதலாய எதிர்காலத்துப் பகர இறுதி முற்றுச்சொல்லான் உயர்திணைப் பன்மைப் பாலுணர்த்தப்படும்.

*ஆர்த்தாகொண் மார்வந்தார் பூக்குழாய் (என்நினைதி)*
*என்னையர்கண் நில்லாத தீது*

என, மார் இறுதியாக நின்ற எதிர்காலத்துப் படர்க்கை வினைமுற்றுச் சொல்லான் உயர்திணைப் பன்மைப் பால் உணர்த்தப்படும். (7)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**7. 'ரஃகான் ஒற்றும்' -**

ரஃகானும் அதுவே, ஒற்றும் அதுவே - ரகாரம் வேறு, ஒற்று வேறு அல்ல; ரகரமாகிய ஒற்று என்க.

பகரமும் அதுவே இறுதியும் அதுவே - பகரம் வேறு, இறுதி வேறல்ல ; பகர உயிர்மெய் ஆகிய இறுதி என்க.

'பலர் அறி சொற்கு மூன்றும் நேரத் தோன்றும்' என்று வினைமுடிபு கொள்க.

உண்ப, தின்ப, என்ப முதலிய எதிர்காலத்துப் பகர இறுதி முற்றுச்சொல்லான் பன்மைப்பால் உணர்த்தப்படும் என்றிருந்திருக்கலாம்.

> ஆர்த்தாகொண் மார்வந்தார் பூக்குழால்(என்நினைதி)
> என்னையர்க ணில்லாத தீது

என்று இப்பாடலை அடிகளாசிரியர் குறள்வெண்பாவாகக் கொண்டு, "இது தலைவன் தலைவியை நோக்கி உடன் போக்கில் கூறியது. வந்தவர் ஆகொண்மார் வந்தார்; நம்மைத் தேடிவந்த நமரல்லர் என்பது கருத்து" என்று குறிப்பிடுகிறார்.

நேமிநாதம் 7ஆம் நூற்பா உரையுள் 'ரஃகான் ஒற்றும்' என்ற நூற்பா எடுத்துக்காட்டப்பட்டு,"இந்நிலை மண்டில ஆசிரியப்பாவின்கண் ரகாரம் முதலாக உச்சரித்த வாறு கண்டுகொள்க" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. தொல்காப்பியனார் னஃகான், ளஃகான், ரஃகான் என்ற மூன்று ஈற்றையும் 'பாலறி மரபின்' அம்மூ ஈறு, என்று சொ. 208 ஆம் நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார்.

## சேனாவரையர் உரை

### பலர்பால் ஈறு

7. *ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட மூன்றும்*
*நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.*

*(இ-ள்:)* ரஃகானாகிய ஒற்றும் பகரமாகிய இறுதியும் மார் என்னும் இடைச்சொல்லும் இம்மூன்றும் பலரறி சொல்லாம். ஏ என்பது ஈற்றசை எ-று.

*(எ-டு:)* உண்டனர், உண்டார்; உண்ணாநின்றனர், உண்ணாநின்றார்; உண்பர், உண்பார்; கரியர், கரியார் எனவும் கூறுப, வருப எனவும் கொண்மார், சென்மார் எனவும் வரும்.

மார் எதிர்காலம் பற்றிவந்த ஆரேயாம், ரஃகான் ஒற்றென அடங்குமெனின், அற்றன்று; ஆரேயாயின், கொண்மார் என்புழி மகரம் காலம் பற்றி வந்ததோர் எழுத்தாகல் வேண்டும். உண்பார் வருவார் எனக் காலம் பற்றி வரும் எழுத்து முதனிலைக்கு ஏற்றவாற்றான் வேறுபட்டு வருமன்றே? அவ்வாறன்றி, உண்மார் வருமார் என எல்லா முதனிலைமேலும் மகரத்தொடு கூடி வருதலானும், வினை கொண்டு முடிதற்கேற்பதொரு பொருள் வேறுபாடுடைமை யானும் ஆர்ஈறு அன்று, வேறெனவேபடும் என்பது.

மூன்றுகாலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதல் ஒப்புமை நோக்கி, அர் ஆர் என்னும் இரண்டு ஈற்றையும் 'ரஃகான்' என அடக்கி ஓதினார். அன் ஆன் அள் ஆள் என்பனவற்றையும் இவ்வொப்புமை பற்றி னஃகான், ளஃகான் என அடக்கி ஓதினார்.

ரகாரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றிப் பெருவழக்கிற்றாய் வருதலின், முன்வைத்தார்; மார் பகரவிறுதியின் சிறுவழக்கிற்று ஆகலின், பின்வைத்தார்.

உண்கும், உண்டும், வருதும், சேறும் என்னும் தொடக்கத்தனவும் பலரறி சொல்லாயினும், அவை 'எண்ணியல் மருங்கின் திரி' (சொல். 209)தலின் நேரத் தோன்றா ஆகலான், இவற்றை 'நேரத் தோன்றும் பலரறி சொல்' என்றார்.

மூன்றும் பலரறி சொல் என்றாராயினும், பலரறி சொல்லாவது இம்மூன்றும் என்பது கருத்தாகக் கொள்க. (7)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**7. ரஃகான் ஒற்றும் . . . சொல்லே-**

மார்ஈறு ஆர்ஈற்றில் அடங்காது. பகுபதம் பகுதி விகுதி இடைநிலை முதலியவை கொண்டு அமையும். எதிர்காலம் காட்டும் இடைநிலைகள் ப் வ் என்பன. சில பகுதிகள் பகர இடைநிலையும் சில பகுதிகள் வகர இடைநிலையும் பெற்று எதிர்காலம் காட்டும். எடுத்துக்காட்டாக உண், நட, கொடு என்பன உண்பார், நடப்பார், கொடுப்பார் எனவரும். வா, செல், ஓடு, பாடு எனபன வருவார், செல்வார், ஓடுவார், பாடுவார் எனவரும். ஆனால் மார் என்ற விகுதி தன்னிடத்துள்ள மகர இடைநிலையான் எதிர்காலம் காட்டி உண், நட, கொடு, வா, செல், ஓடு, பாடு என எல்லா வற்றோடும் உண்மார், நடமார், கொடுமார், வருமார், சென்மார், ஓடுமார், பாடுமார் எனவரும். மேலும் மற்ற வினைமுற்றுக்கள் பெயரைக் கொண்டு முடியவும் (சொ. 429) மார் ஈற்று வினைமுற்று வினையையே கொண்டுமுடியும் (சொ. 207) ஆதலின், மார் ஈறு ஆர் ஈற்றுள் அடங்காது.

தொல்காப்பியனாருக்குத் தன்மை உயர்திணை யாம். ஆகவே தன்மைப் பன்மை வினைமுற்றும் பலர் பாலைக் குறிக்கும் வினைமுற்றாம். ஆயினும் தன்மைக்குத் தனிப்பன்மை இல்லை; முன்னிலையையோ படர்க்கையையோ உளப்படுத்தே பன்மை அமைய வேண்டும். அங்ஙனம் உளப்படுக்கும்போது அஃறிணை யையும் தன்மை உளப்படுக்கும் (சொ. 43) ஆதலின் தன்மை 'நேரத் தோன்றும், பலர் ஆகாது.

## நச்சினார்க்கினியர் உரை

### பலர் அறிசொல்

7. *ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட[1] மூன்றும்*
*நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.*

இது பலர் அறிசொல் உணர்த்துகின்றது.

இ-ள்: ரஃகான் ஒற்றும் - ரஃகான் ஆகிய ஒற்றினை ஈறாக உடைய சொல்லும்; பகர இறுதியும் - பகரமாகிய இறுதியை உடைய சொல்லும்; மாரைக்கிளவி உளப்பட மூன்றும் - மார் என்னும் இடைச்சொல்லை ஈறாக உடைய சொல் உட்பட மூன்றும்; நேரத் தோன்றும் பலர் அறிசொல்லே-நிரம்பத் தோன்றும் பலர் அறிசொல்லாம் என்றவாறு.

அகரத்தொடு புணர்ந்த பகரம்அல்லது உயர்திணைப் பன்மையை உணர்த்தாது என்றற்கு ஈண்டுப் பகரம் என்றும், மேல் அ ஆ வ (சொல். 9) என்றும் பகர வகர உயிர்மெய் ஈறாய் நிற்றல் உடம்பொடு புணர்த்துக் கூறினார் ஆயிற்று.

உதாரணம் : உண்டனர், உண்டார்
உண்ணா நின்றனர், உண்ணா நின்றார்
உண்பர், உண்பார்
கரியர், கரியார்
கூறுப, வருப
'ஆர்த்து ஆக்[2] கொண்மார் வந்தார்'

எனவரும்.

மார்ஈறு ஆர்ஈறு என அடங்கும் எனின், மகர ஒற்றுக் காலம்காட்டும் எழுத்தாய் முதல்நிலைக்கு ஏற்றவாற்றான் உண்பார், வருவார் என்றாற்போல வேறுபட்டு வரல் வேண்டும்; அங்ஙனம் வேறுபடாமையானும், வினை கொண்டு முடிதலானும் மார் ஈறு ஆர் ஈற்றின் அடங்காது

ஆயிற்று. ஏனைப் பன்மை ஈறுகள் திரிபு உடைமையின், இவற்றையே 'நேரத்தோன்றும்' என்றார். பகர இறுதி என்றது,

'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்' - பொ. 666

என்பதற்கு இனம். (7)

பாடபேதம் : 1. உட்பட; 2. ஆர்த்தார்

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**7. ரஃகான் ஒற்றும் -**

'பகர இறுதியும் ' என்ற தொடரில் உள்ள 'இறுதியும்' என்பதனை முன்னும் பின்னும் கூட்டி ரஃகான் இறுதியும் பகர இறுதியும் மாரைக்கிளவி இறுதியும் உடைய வினைமுற்றுச் சொற்கள் என்று உரை செய்துள்ளார். ஒற்றீற்று இறுதிச் சொற்களிடையே பகரம் எனவும் வகரம் (சொ.9) எனவும் உயிர்மெய் ஈற்றுச் சொற்களை நூற்பாவில் இணைத்துக்கூறியுள்ளார் ஆசிரியர்.

ப், வ் என்பன போல மகர ஒற்றும் காலம் காட்டும் எழுத்தாகலாம். சில பகுதிகளொடு பகர ஒற்றும், சில பகுதிகளொடு வகர ஒற்றும் இணைந்துவரும். ஆனால் மகர ஒற்று எல்லாப் பகுதிகளுடனும் திரிபின்றி இணைந்து வருதலானும், மார் ஈறு வினையைக்கொண்டு முடிதலானும் பெயர்கொண்டு முடியும் ஆர்ஈற்றில் அடங்காது.

ஏனைப் பன்மை ஈறுகள் - தன்மை, முன்னிலைப் பன்மை ஈறுகள்.

'பகர இறுதி ' என்று கூறவே, அதற்கு முன் உள்ள ரஃகான் ஒற்றும், பின் உள்ள மாரைக் கிளவியும் சொல் இறுதியில் வருவன என்ற செய்தி, 'எடுத்து ஓதிய பொருண்மைக்கு ஏற்ற வகையான், அப்பொருண்மைக்கண் சொல்லாதவற்றையும் கொள்ளவைத்தல்' என்னும் உத்திக்கு இனமாகும். (பொ. 665 - பேரா.)

## தெய்வச்சிலையார் உரை

### பலர் அறிசொல்

*7. ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட மூன்றும்*
*நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.*

பலர்அறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ரகாரம் ஆகிய ஒற்றும், பகாரம் ஆகிய உயிர்மெய் இறுதியும், மார் என்னும் சொல் உளப்பட இம்மூன்றும் பொருந்தப் பலர்அறிசொல் தோன்றும் என்றவாறு.

மூன்றும் பொருந்த என்றார் ஆயினும், பால் காட்டுவது தனித்தனி என்று கொள்க.

பகரம் என்னாது இறுதி என்றது, பகரம் ஒற்று ஆக வரின் மொழிக்கு ஈறு ஆகாமையின், உயிர்ஈறு என்பது தோற்றுதற்கு. 'கானம் தகைப்ப செலவு' (கலி. பாலை 2) எனப் பகரம் அஃறிணைக்கும் உரித்து ஆகலின், உயர்திணைக்கே உரித்து ஆமாறு என்னை எனின், அஃறிணைக்கண் ஓதுகின்ற அகரம் எல்லாப் புள்ளியினும் ஏறி முடிதலின், ஆண்டு அகர ஈறுஆகி வந்தது. ஈண்டுப் பகர ஒற்றின்மேல் அல்லது வாராமையின் பகரம் என வேறுபட்டு நின்றது. ['கானம் தகைப்ப செலவு' எனவும், 'நயந்துதாம் கொடுப்பபோல்' (கலி. பாலை 27) எனவும் அஃறிணைக் கண்ணும் வந்தது என எடுத்துக் காட்டினார் உளரால் எனின், தாழிசை மூன்றனுள்ளும் தகைப்பன என ஓதிய வண்ணம் சுரிதகத்துக்கண்ணும் வாராதது, வண்ணக்கேடு குறித்துக் குறைக்கும் வழிக் குறைத்தது என்க. 'நயந்து தாம் கொடுப்ப போல்' என்பது விரும்பிக் கொடுப்பாரைப் போல் என மாந்தரோடு உவமை குறித்து வந்தது.]

மார் என்பது ரகாரத்துள் அடங்காதோ எனின், வினைக்கண் ஏனைய போல முற்றி நில்லாது எச்சம்போல வருதலானும், பெயர்க்கண் ஆர் ஈறுஆகி வரும் இடத்துப்

பன்மை உணர்தாத சொற்கள் மார் ஈறுஆகி வரவேண்டுத லானும் வேறுபடுத்து ஓதப்பட்டது என்க.

உ-ம் : உண்டனர், உண்ணாநின்றனர், உண்பர், உண்ப, ஆகொண்மார் வந்தார்: இவை வினை. கரியர், நெடியர்: இவை வினைக்குறிப்பு. அவர், இவர், நம்பியர், நங்கையர், தாய்மார், தந்தைமார்: இவை பெயர். பகர இறுதி அஃறிணைப் பெயராய் அல்லது வாராது. (இது பொருந்துவது அன்று) [பகர ஈறு உற்றது யாதும் உயர்திணைப் பெயராய் அல்லது வாராது. இஃது இரண்டாம் ஏட்டில் உள்ளது சிறிது மாற்றப் பட்டுள்ளது.] (7)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**7. ரஃகான் ஒற்றும் -**

ரஃகான் ஒற்று - ரகார ஒற்றை அந்தமாக உடைய சொல்.

பகர இறுதி - பகரமாகிய உயிர்மெய்யை இறுதியாக உடைய சொல்.

மாரைக்கிளவி - மார் என்னும் இடைச்சொல்லை இறுதியாக உடைய சொல்.

பகர இறுதி - பகர ஒற்று மொழி ஈறாக வாராது. ஆதலின் பகரம் உயிர்மெய்.

'கானம் தகைப்ப செலவு' - தகைப்ப : அகர ஈறு. பலர்பால் வினைமுற்று பகர ஈறு.

மற்ற வினைமுற்றுக்கள் பெயரைக் கொண்டு முடிவன. ஆனால் மார் ஈற்று வினை வினையைக் கொண்டுமுடிகிறது. பெயர்ச்சொல்லுள் ஆர் ஈறு தாயார் என்புழிப்போல மரியாதைப் பன்மையைக் காட்டுமிடத்து, தாய்மார் என்றாற்போல மார் ஈறே பன்மை காட்டுகிறது.

அவர், இவர் : ஆண் பெண் பொதுப்பன்மை; தம்பியர் : ஆண் பன்மை. நங்கையர் : பெண் பன்மை : இவை ரகர ஒற்று ஈறு. தாய்மார், தந்தைமார் : ஆண் பெண் பன்மை - மார் ஈறு. உண்ப வருகின்றனர் - உண்பவர்களாகிய மக்கள் என வினையாலணையும் பெயர் : பகர ஈறு.

## கல்லாடனார் உரை

### பலர் அறிசொல்

7. *ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்*
*மாரைக் கிளவி உளப்பட மூன்றும்*
*நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.*

என்-எனின், பலரை அறியும் சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ரஃகான் ஒற்றும் - ரஃகானும் அதுவே, ஒற்றும் அதுவே; பகர இறுதியும் - பகரமும் அதுவே, இறுதியும் அதுவே; மாரைக் கிளவி உளப்பட மூன்றும் என்பது - மார் என்னும் சொல் அகப்பட மூன்றும் என்றவாறு.

பலரை அறியும் சொல்லாவன ரகரம், பகரம், மார் என்பனவற்றை ஈறாக உடைய சொற்கள் எ-று.

எ-டு : உண்டார், உண்ணாநின்றார், உண்பார், கரியர், செய்யர், உண்ப, தின்ப, 'ஆர்த்தார் கொண்மார் வந்தார் பூக்குழலாய் என் ஐயர்கண் இல்ஆக தீது' எனவரும்.

ரகர ஒற்று மூன்றுகாலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலான் முன் வைக்கப்பட்டது. பகரம் எதிர்காலம் ஆகிய ஒருகாலம் பற்றி வருதலான் உயிர்மெய் எழுத்தேனும் அதன்பின் வைக்கப்பட்டது. மார் என்பதூஉம் எதிர்காலம் பற்றிவரினும் ஒற்றாய் வருதலானும் பெருவழக்கிற்று அன்று ஆதலானும் பகரத்தின் பின் வைக்கப்பட்டது.

'நேரத்தோன்றும்' என்றதனான், உண்டனம், உண்ணா நின்றனம், உண்குவம், கரியம், செய்யம் என மகர ஈறும் காட்டுவார் உண்மையின், 'யானும் என் எஃகமும் சாறும்' என்புழி அம்மகரம் அஃறிணையும் உட்படுத்துத் திரிவுபட நிற்றலின் அந்நிகரன திரிபுஉடைய, இவையே திரிபு இல்லன என்பது கொள்ளப்பட்டது. சொற்கு என்பது 'சொல்' என செய்யுள் விகாரத்தால் தொக்கது என உணர்க.

நான்காவது விரியாது, 'நேரத்தோன்றும் பலர் அறி சொல் மாரைக்கிளவி உளப்பட மூன்றும்' என எழுவாயும் பயனிலையும் ஆக்கிக் கொள்ளின், நேரத் தோன்றும் பலர்அறிசொல் இவை என, நேரத் தோன்றாதனவும் பலர்அறிசொல் உள எனக் கருத்து அருத்தாபத்திப்பட்டு, அவையும் தனக்கு உடன்பாடாய் மேற்கூறுவான்போல நிற்பதொரு சொல்நோக்கம் படுதலானும், 'தோன்றும்' என நின்ற செய்யும் என்ற சொல் முற்றுஓசைப்பட்டு, பயனிலைவகை ஆதற்கு இயையாது நிற்றலானும் அவ்வாறு கூறலாகாது என உணர்க.

மேல் 'ஈற்றில் நின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்' என்று பொதுவாக ஈறு என்று கூறுகின்றார் ஆகலின், ஈண்டுப் பகரஇறுதி என்றும் கூறியது என்னை எனின், ஆண்டுக் கூறுகின்றது மொழியது ஈறு என்பது அன்றே ? ஈண்டு அகரம் உயர்திணைப் பன்மையை உணர்த்துங்கால் தானே நின்று உணர்த்தாது, பகர ஒற்றின்மேல் ஏறி அதன் பின்நின்று உணர்த்தும் என்றற்குக் கூறியது என உணர்க. இக்கருத்து மேற்கூறுவனவற்றிற்கும் பொருந்தும்.

ரஃகான் ஒற்று, பகரஇறுதி என்பன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அகரம் பகர ஒற்றொடு புணர்ந்து நிற்றலான் 'பகரம்' எனவும் பட்டது. அவ்வாறு நிற்புழி அதன் இறுதி நிற்றலின் 'இறுதி' எனவும் பட்டது. (7)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**7. 'ரஃகான் . . . சொல்லே '-**

*'ஆர்த்தார் கொண்மார் வந்தார், பூக்குழாய் !*
*என்னையர்கண் இல்லாத தீது' -*

*(இது குறட்டாழிசை.)*

*இப்பாடலின் செம்மையான வடிவம் இளம்பூரணர் உரையில் உள்ளது. ஆங்குக் காண்க. ஒன்றாய் வருதல் - மார் என்பது மகர ஒற்றுப் பிரிக்கப்படாமல் மார் என்றே யாண்டும் வருதல். உண்டனம் முதலிய மகர ஈற்றுத் தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள் அஃறிணையையும் உளப்படுத்தலின் அவை பலர் அறிசொல்லாதற்கு இடர்ப்பாடு உள்ளது.*

*பலர் அறிசொல் என்பது நான்கன் உருபு தொக்கது என்பது இளம்பூரணர் கருத்து. இங்ஙனம் நேர்மையான பலர் அறிசொற்கள், இவை எனவே, நேர்மையற்ற பலர் அறிசொற்களும் உள எனவும் கருத இடம் ஏற்படும். தோன்றும் என்பது இவர் கருத்தான் பெயரெச்சமாகாது முற்றாய் உள்ளது. எனவே, மூன்றும் எழுவாய்; தோன்றும் பயனிலை . இச்செய்தி மற்றவர் கருத்துக்கு வேறுபட்டது.*

*பகர இறுதி என்றது, அகர உயிர் பகர ஒற்றொடு கூடியே பலர்பாலை உணர்த்தும் என்றற்கு.*

## ஒருவர் உரை

***7. ர:கான் ஒற்றும் பகர இறுதியும்***
***மாரைக் கிளவி உளப்பட மூன்றும்***
***நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே.***

*எ-டு : உண்டார், உண்ணாநின்றார், உண்பார் என்னும் மூன்று கால வினையானும், கரியார், செய்யார் என்னும் வினைக்குறிப்பானும், உண்ப, தின்ப, கொண்மார் வந்தார் என எதிர்கால முற்றுச்சொல்லானும் அறிக.* *( 7)*

## ஒருவர் உரைவிளக்கம்

**7. 'ரஃகான் . . . சொல்லே.' -**

'கொண்மார் வந்தார்' என்று தொடராக எடுத்துக் காட்டுத் தந்து மார் ஈற்று வினைமுற்று எதிர்கால முற்றுச்சொல் என்று விளக்கியுள்ளார்.

## பாலசுந்தரனார் உரை

**7. 'ரஃகான் . . . சொல்லே.'-**

இவை பெயர்ச்சொல் ஆக்கத்தின்கண் சேரர், சோழர், பாண்டியர், மன்னர், வேந்தர், பாணர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் எனவும் - தாய்மார், தந்தைமார், அண்ணன்மார், ஆசிரியன்மார், நம்பிமார், நங்கைமார் எனவும் வரும்.

பகர உயிர்மெய் பெயர்க்கண் ஆக்கம் பெறுதல் இல்லை.

மாரைக் கிளவி ரகர ஈற்றுள் அடக்கின் மகரம் காலம் காட்டும் எழுத்தாகக் கொள்ளவேண்டும். கொள்ளின், தாய்மார் தந்தைமார் முதலிய பெயர்கள் காலம் உணர்த்து வனவாக மாறுகொள்ளும். மற்றும் எச்சமாகத் திரியாமல் நின்று வினையொடு முடிதல் ஆர்ஈற்றுக்கு ஒவ்வாது ஆகலின் என்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

7. பலர் அறிசொல் ஆதற்கு ரஃகான் ஒற்று முதலிய மூன்றும் நேரத் தோன்றும் என்று கொள்க. பெண்டிர், மகளிர், புத்தேளிர் முதலிய சொற்களை நோக்க, ரஃகான் ஒற்றுப் பெயர்களுக்கு அர் ஈறு, ஆர் ஈறுகளோடு இர் ஈற்றையும் கொள்ளவேண்டும்.

## இளம்பூரணர் உரை

### ஒன்றன்பால் சொல்

*8. ஒன்றுஅறி கிளவி தறட ஊர்ந்த*
*குன்றியல் உகரத்து இறுதி ஆகும்.*

எ . . .ன், இஃது அஃறிணை ஒருமைப்பாற்குரிய எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்றனை அறிவிக்குஞ் சொல் த ற ட க்களை ஊர்ந்த குற்றியலுகரத்து ஈறாகும் என்றவாறு.

உதாரணம் : உண்டது, உண்ணாநின்றது, உண்பது எனவும்; கரியது, செய்யது எனவும், வினையானும் வினைக்குறிப்பானும் தகரம் ஊர்ந்த குற்றியலுகரத்தான் அஃறிணை ஒருமைப்பால் விளங்கும்.

கூயிற்று தாயிற்று எனவும், கோடின்று குளம்பின்று எனவும் வரும் றகரம்.

குண்டுகட்டு, குறுந்தாட்டு என வரும் டகரம். *(8)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**8. 'ஒன்றறி கிளவி' -**

கூயிற்று, தாயிற்று - கூவினது, தாவினது என உடன்பாட்டுவினை.

கோடு இன்று, குளம்பு இன்று - எதிர்மறைவினை.

குண்டுகட்டு - குழிந்த கண்களை உடையது.

குறுந்தாட்டு - குட்டையான கால்களை உடையது.

## சேனாவரையர் உரை

### ஒன்றன்பால் ஈறு

*8. ஒன்றறி கிளவி த ற ட ஊர்ந்த*
*குன்றிய லுகரத்து இறுதி யாகும்.*

(இ-ள்) ஒன்றறி சொல்லாவது த ற ட என்னும் ஒற்றை ஊர்ந்த குற்றியலுகரத்தை இறுதியாகவுடைய சொல்லாம் எ-று.

எ-டு : வந்தது, வாராநின்றது, வருவது, கரிது எனவும் கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று எனவும் குண்டுகட்டு, கொடுந்தாட்டு, குறுந்தாட்டு எனவும் வரும்.

கிடக்கை முறையாற் கூறாது, 'த ற ட' எனச் சிறப்பு முறையாற் கூறினார்.

'குன்றியலுகரம்' என மெலிந்து நின்றது. தகரஉகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலும், றகர உகரம் இறந்தகாலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலும், டகர உகரம் வினைக்குறிப்பே பற்றி வருதலுமாகிய வேறுபாடுடைமையான், குற்றியலுகரமென ஒன்றாகாது மூன்றாயின. (8)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**8. ஒன்றறி . . . ஆகும்-**

கிடக்கைமுறை-நெடுங்கணக்கில் வரிசைப் படுத்திய படி, ட த ற என்றமுறை.

சிறப்புமுறை - காலம் காட்டும் சிறப்பு நோக்கி த ற ட என்று மாற்றிக்கொண்ட முறை.

## நச்சினார்க்கினியர் உரை

### ஒன்று அறி சொல்

***8. ஒன்றுஅறி கிளவி தறட ஊர்ந்த***
***குன்றியல் உகரத்து இறுதி ஆகும்.***

இஃது அஃறிணைக்கண் ஒன்று அறி சொல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்று அறி கிளவி - ஒருவன் ஒன்றனை அறியும்சொல்; தறட ஊர்ந்த குன்றியல் உகரத்து இறுதி ஆகும்- தறட என்ற ஒற்றுக்களை ஊர்ந்து வந்த குற்றியலுகரத்தினை ஈறாக உடைய சொல்லாம் என்றவாறு.

உதாரணம் : வந்தது, வாரா நின்றது, வருவது, கரியது;
கூயிற்று, தாயிற்று, கோடுஇன்று,
குளம்புஇன்று; குண்டுகட்டு, குறுந்தாட்டு
எனவரும். (8)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**8. ஒன்றறி கிளவி -**

'னஃகான் ஒற்றே' (சொ.5) முதலியவற்றிற்குத் தெரிநிலைவினை, குறிப்புவினை இரண்டற்கும் எடுத்துக்காட்டுக்கள் தந்திருப்பனபோலவே இதற்கும் தரப்பட்டிருப்பினும், இதன்கண் றுகர ஈற்றிற்கு உடன்பாடு எதிர்மறை என்ற இருதிறத்து எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

கூயிற்று-ஒலித்தது; தாயிற்று-தூண்டியது; கோடின்று-கொம்புகளை உடையது அன்று; குளம்பின்று-குளம்புகளை உடையதன்று. டு-குறிப்பு வினைக்கே இறுதியாகவரும். குண்டுகட்டு-குழிந்த கண்களை உடையது; குறுந்தாட்டு-குட்டையான கால்களை உடையது.

மதிபாய் சடைமுடித்து, மாசுணப்பைம் பூட்டு
சதிபாய் குறுந்தாட்டுத் தான - நதிபாய்
இருகவுட்டு, முக்கட்டு, நால்வாய்த்துஎன் உள்ளம்
உருகவிட்டு நின்ற ஒளி.

இப்பாடலில் உள்ள வினைகள் யாவும் குறிப்புவினை முற்றாகவே உள்ளன. அவற்றுள் பெரும்பாலன டகர உகர ஈற்றன என்பது காண்க.

## தெய்வச்சிலையார் உரை

### அஃறிணை ஒருமை

**8. *ஒன்றுஅறி கிளவி தறட ஊர்ந்த***
***குன்றியல் உகரத்து இறுதி ஆகும்.***

அஃறிணை ஒருமை உணர வரும் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: த ற டக்களை ஊர்ந்த குற்றுகரத்தினை ஈறு ஆக உடையன ஒன்றனை அறியும் சொற்களாம் எ-று.

உ-ம் : உண்டது, உண்ணாநின்றது, உண்பது, கூயிற்று, உண்டு : இவை வினை. கரிது, கோடின்று, குண்டுகட்டு: இவை வினைக்குறிப்பு. அது, ஒன்று, இரண்டு : இவை பெயர். *(8)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**8. ஒன்றறி கிளவி -**

கரிது - கருநிறத்தை உடையது.

கோடு இன்று - கொம்பு இல்லாததாய் உள்ளது - இஃது எதிர்மறைவினை. (சொ. 213)

குண்டுகட்டு - குழிந்த கண்களை உடையது.

பெயருள், அது - துகர ஈறு; ஒன்று - றுகர ஈறு; இரண்டு - டுகர ஈறு.

## கல்லாடனார் உரை

### ஒன்றனை அறியும் சொல்

*8. ஒன்றுஅறி கிளவி தறட ஊர்ந்த*
*குன்றியல் உகரத்து இறுதி ஆகும்.*

என்-எனின், உயர்திணைச்சொல் ஆமாறு உணர்த்தி, இனி அஃறிணைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒன்றனை அறியும் சொல்லாவது தடறக்கள் என்கிற ஒற்றுக்களை ஊர்ந்துவருகிற குற்றியலுகரம் ஆகிய எழுத்தினை ஈறாக உடைய சொற்கள் எ-று.

எ-டு : உண்டது, உண்ணாநின்றது, உண்பது, கரியது, செய்யது எனவரும். இவை தகரம் ஊர்ந்து வந்த குற்றியலுகர ஈற்றவாம். கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று எனவரும். இவை றகரம் ஊர்ந்து வந்த குற்றியலுகர ஈற்றவாம். குண்டுகட்டு, கொடுந்தாட்டு எனவரும். இவை டகரம் ஊர்ந்து வந்த குற்றியலுகர ஈற்றவாம்.

மற்று டதற என்ற எழுத்துக் கிடக்கைமுறையான் கூறாதது என்னை எனின், தகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் கோடலான் முன்வைக்கப்பட்டது. றகரம் இறந்தகாலம் ஒன்றும் வினைக்குறிப்பும் கோடலான் அதன்பின் வைக்கப்பட்டது. டகரம் வினைக்குறிப்புஅல்லது கோடல் இன்மையின் அதன்பின் வைக்கப்பட்டது.

உகரத்து இறுதி உகரம் ஆகிய இறுதி எனப் பண்புத்தொகை. அத்து : அல்வழிச்சந்தி. உகர ஈற்றுச் சொல்லிற்கு உகரஇறுதி என்பது இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை நிலைக்களமாய் நின்றது. குற்றியலுகரம் என்பது மெலிந்து நின்றது. (8)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**8. 'ஒன்றறி . . . ஆகும்.'-**

தறட என்ற முறைவைப்பின் காரணம் கூறப்பட்டது.

உகரத்து இறுதி - உகரத்தை இறுதியாக உடைய சொற்கள்.

## ஒருவர் உரை

***8. ஒன்றுஅறி கிளவி தறட ஊர்ந்த***
***குன்றியல் உகரத்து இறுதி ஆகும்.***

எ-டு : உண்டது, உண்ணாநின்றது, உண்பது - கரிது, செய்யது - எனக் காலம் மூன்றானும், வினைக்குறிப்பானும்; கூயிற்று, தாயிற்று - கோடின்று, குளம்பின்று, உகிரின்று, மயிரின்று - என இறந்தகாலத்தானும், வினைக் குறிப்பானும்; குண்டுகட்டு, கொடுந்தாட்டு என வினைக்குறிப்பானும், தறடக்களை ஊர்ந்து வந்த குற்றியலுகரத்தான் ஒன்றுஅறி சொல் என்று அறிக. *(8)*

## ஒருவர் உரைவிளக்கம்

**8. 'ஒன்றறி . . . யாகும்.'-**

கூயிற்று, தாயிற்று - இறந்தகால முற்றுச்சொல். கோடுஇன்று, குளம்பு இன்று, உகிர் இன்று, மயிர் இன்று - இவற்றுள், இன்று என்பது எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.

## பாலசுந்தரனார் உரை

**8. 'ஒன்றறி . . . ஆகும்.'**

றகர டகரங்கள் தகரத்தின் திரிபே ஆகலின், அம்முறை பற்றி ஓதினார் எனினும் அமையும். உகர இறுதி என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

## இளம்பூரணர் உரை

### பலவின்பால் சொல்

*9. அ ஆ வ என வரூஉம் இறுதி*
*அப்பால் மூன்றே பலஅறி சொல்லே.*

எ. . . ன், இஃது அஃறிணைப் பன்மைப் பாற்கு ஈறு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அ, ஆ, வ என்று சொல்லப்படுகிற இறுதிகளையுடைய அக்கூற்று மூன்று சொல்லும் பலவற்றை அறியுஞ்சொல் என்றவாறு.

உதாரணம் : அகரம் : உண்டன, உண்ணாநின்றன, உண்பன எனவும், கரிய செய்ய எனவும் வரும்.

ஆகாரம் : உண்ணா, தின்னா என வரும். இது மூன்று காலத்தையும் எதிர்மறுக்கும் எதிர்மறைக்கண்அல்லது பால் விளங்கி நில்லாது.

வகாரம்: உண்குவ, தின்குவ என எதிர்காலம் பற்றிவரும்.

'வரூஉம் இறுதி அப்பால் மூன்று' என்பது, இறுதியை உடைய அக்கூற்று மூன்று என்றவாறு. (9)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**9. 'அ ஆ வ' -**

மூன்று காலத்தையும் எதிர்மறுத்து வினைநிகழ்ச்சி இன்மையைக் குறிப்பிடும் எதிர்மறை வினைமுற்று மூன்று காலத்துக்கும் பொதுவானது.

***இது . . . . . . . நில்லாது*** என்றிருப்பதே ஏற்றது.

## சேனாவரையர் உரை

### பலவின்பால் ஈறு

9. *அ ஆ வ என வரூஉம் இறுதி*
*அப்பால் மூன்றே பலவறி சொல்லே.*

(இ-ள்) பலவறி சொல்லாவன அ ஆ வ என வரும் இறுதியையுடைய அக்கூற்று மூன்று சொல்லாம் எ-று.

எ-டு : உண்டன, உண்ணாநின்றன, உண்பன, கரியன எனவும் உண்ணா, தின்னா எனவும்- உண்குவ, தின்குவ எனவும்- வரும்.

உண்ட, உண்ணாநின்ற, உண்ப, கோட்ட என்னுந் தொடக்கத்தனவும் அகர வீற்றுப் பலவறிசொல். அவற்றுள், உண்ப என்பது பகர வீற்றுப் பலரறி சொல்லன்றே? அஃறிணைக்கு ஆயினவாறு என்னை யெனின், பகர இறுதியாயினன்றே உயர்திணைக்காவது? ஈண்டுக் காட்டப் பட்டது 'கானந் தகைப்ப செலவு' (கலி. 12) 'சினையவுஞ் சுனையவும் நாடினர் கொயல் வேண்டா நயந்துதாங் கொடுப்பபோல்' (கலி. 28) என நின்றனபோல, எதிர்காலத்து வரும் பகரம் ஊர்ந்து நின்ற அகர ஈறாதலின், அஃறிணைச்சொல்லேயா மென்பது. செய்யுளாகலின், தகைப்பன கொடுப்பன என்னுஞ் சொற்கள் தகைப்ப கொடுப்ப என விகாரவகையான் அவ்வாறு நின்றன ஆகலான் வழக்கு முடிவிற்கு அவை காட்டல் நிரம்பாதெனின், தகைத்தன, தகையாநின்றன-தகைத்த, தகையாநின்ற எனவும் கொடுத்தன, கொடாநின்றன - கொடுத்த, கொடாநின்ற எனவும் இறந்தகாலத்தும் நிகழ்காலத்தும் அகரஈறு முதனிலைக் கேற்றவாற்றான் அவ்வக்காலத்திற்குரிய எழுத்துப்பெற்று அன்பெற்றும் பெறாதும் முடியுமாறு போல, எதிர்காலத்தும் முதனிலைக் கேற்றவாற்றான் அக்காலத்திற்குரிய எழுத்துப் பெற்று அன்பெற்றும் பெறாதும்

முடியும். எதிர்காலத்துக்குரிய எழுத்தாவன பகரமும் வகரமுமாம். அவற்றுட் பகரம் பெற்று அன்பெற்றும் பெறாதும் முடிவுழி, தகைப்பன தகைப்ப - கொடுப்பன கொடுப்ப எனவும் - வகரம்பெற்று அவ்வாறு முடிவுழி, வருவன வருவ- செல்வன செல்வ எனவும் - இவ்வாறு முடியுமாகலின், தகைப்ப கொடுப்ப என்பன விகாரமெனப்படா, இயல்பேயாம் என்பது. கொடுப்பன யாவை அவைபோல என உவமை கருதாது, அவைதம்மையே சுட்டி நிற்றலின், கொடுப்ப என்பது பெயரன்மையறிக. அன்பெறாது எதிர்காலத்துவரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகரமாய் வகர ஈறு அடங்கும் எனின், வினை கொண்டு முடிதல் ஒழித்து மார் ஈற்றிற்கு உரைத்தது உரைக்க. அவ்வாறு உரைக்கவே, குகரம் பெற்றவழி அன்பெறற்கு ஏலாமையின், உண்குவ தின்குவ என்னுந் தொடக்கத்தன வகர ஈறேயாம். வருவ செல்வ எனக் குகரம் பெறாதவழி, வகர ஈறாதலும் அகர ஈறாதலும் என இரு நிலைமையும் உடையவாம்; என்னை? எல்லா வினைக்கண்ணும் சேறன்மாலைத்தாகிய வகரஈறு ஆண்டு விலக்கப்படாமையானும், அத்தன்மைத்தாகிய அகர ஈறும் ஆண்டுவந்து அன் பெறாதவழிக் கால வகரம் ஊர்ந்து அவ்வாறு நிற்றலுடைமையானும் என்பது.

வரும் என்னும் உகரம் விகாரவகையான் நீண்டு நின்றது.

ஈற்று வகையான் மூன்றாகிய சொல் என்பார் 'அப்பால் மூன்று' என்றார். *(9)*

### சேனாவரையர் உரைவிளக்கம்

**9. அ ஆ வ என . . . சொல்லே-**

**'*சினையவும்*' :** கிளைகளில் உள்ளனவும் சுனைகளில் உள்ளனவும் ஆகிய பூக்களை ஆராய்ந்து பறித்தலும் வேண்டாவாகித் தாம் கொடுக்கவேண்டும் என்று விரும்பிக் கொடுப்பன போல.

'***கானம் தகைப்ப செலவு***' - நீ செல்லும் காடுகள் நின்போக்கைத் தடுப்பன. தகைப்ப என்பது அன்சாரியை பெறாது நின்ற அகர ஈற்றுப் பலவறிசொல். தகைப்ப, கொடுப்ப என்பன எதிர்காலம் காட்டும் பகர இடைநிலை பெற்ற அகர ஈற்றுப்பல வறிசொல்.

'கொடுப்பபோல் ' என்ற தொடரில் போல் என்பது உவம உருபு அன்று; தற்குறிப்பு ஏற்றத்தைக் குறிக்கும் சொல். கொடுப்ப என்பது வினை.

இடையே குகரச் சாரியை வந்த இடத்து உண்குவ, தின்குவ என வகர ஈறே வரும். அங்ஙனம் அல்லாது வருவ, செல்வ என்பனபோல வரின், அவற்றை வகர ஈற்றனவாகவும் கொள்ளலாம், அகர ஈற்றனவாகவும் கொள்ளலாம். அகர ஈறாயவழி வகரம் கால இடைநிலை; வகர ஈறாயவழி வகரமே காலத்தையும் காட்டும்.

எல்லா வினைக்கண்ணும் சேறல் மாலைத்து- எல்லா வினைப்பகுதிகளோடும் இணையும் இயல்பு உடையது.

**நச்சினார்க்கினியர் உரை**

**பல அறிசொல்**

***9. அ ஆ வ என வரூஉம் இறுதி***
***அப்பால் மூன்றே பலஅறி சொல்லே.***

*இஃது அஃறிணைக்கண் பல அறி சொல் உணர்த்துகின்றது.*

இ-ள் : பல அறி சொல் - ஒருவன் பலவற்றை அறியும் சொல்லாவன; அ ஆ வ எனவரூஉம் இறுதி அப்பால் மூன்று - அஆவ எனவரூஉம் இறுதியை உடைய அக்கூற்று மூன்று சொல்லாம் என்றவாறு.

*உதாரணம் :* *உண்டன, உண்ட*
*உண்ணா நின்றன, உண்ணா நின்ற*
*உண்பன, உண்ப*
*கரியன, கரிய, கோட்டன, கோட்ட*

*எனவரும்.*

*'உண்ப என்பது பலர் அறி சொல் அன்றோ?' எனின், 'தகைத்தன, தகையா நின்றன, தகைப்பன' என அன்பெற்றும், 'தகைத்த, தகையாநின்ற, தகைப்ப' என அன் பெறாதும் நின்றாற்போலவும், 'கானம் தகைப்ப செலவு' (கலி. 3 : 22) என்றாற் போலவும், உண்ப என்பது அன் பெறாது நின்ற அகர ஈற்றுப் பல அறி சொல்; பகர ஈற்றுப் பலர் அறி சொல் அன்று.*

*ஆ - உண்ணா, தின்னா எனவும்,*
*வ - உண்குவ, திண்குவ எனவும் வரும்.*

*இவை 'அன்' பெறாது எதிர்காலத்து வரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகரஈறு ஆகாவோ?' எனின், குகரம் பெறுதலின் வகர ஈறேயாம். வருவ, செல்வ எனக் குகரம்பெறாத வழி அகரஈறு ஆதலும், குகரம் பெற்றவழி வகரஈறு ஆதலும் உடையவாம். (9)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**9. அஆவ -**

*'கானம் தகைப்ப செலவு' கலி. 3 : 22.*

*நின்போக்கைத் தடுப்பன நீ சொல்லுங் காடு. தகைப்ப என்பது அன்சாரியை பெறாதுநின்ற அகர ஈற்றுப் பலவறி சொல் ஆகிய வினைமுற்று - நச்.*

*உண்குவ, தின்குவ எனக்-குகரச்சாரியை பெற்றவழி வகர ஈறாகவும், வருவ-செல்வ-எனக்குகரச்சாரியை பெறாதவழி அகர ஈறாகவும் கொள்ளப்படும். வகர ஈறு ஆயவழி வகரமே எதிர்காலமும் காட்டும்.*

## தெய்வச்சிலையார் உரை
## அஃறிணைப் பன்மை

9. *அ ஆ வ என வரூஉம் இறுதி*
*அப்பால் மூன்றே பலஅறி சொல்லே.*

பலஅறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பலவற்றை உணரவரும் சொல் அ, ஆ என்னும் உயிர் எழுத்தினையும், வ என்னும் உயிர்மெய் எழுத்தினையும் ஈறுஆக உடைய அக்கூற்று மூன்று எ-று.

உ-ம் : உண்டன, உண்ணாநின்றன, உண்பன, உண்ணா, உண்குவ: இவை வினை. கரிய, நெடிய: இவை வினைக்குறிப்பு. பல, சில, யா, வருவ: இவை பெயர்.

வ என்பது அகரத்துள் அடங்காதோ எனின், அடங்காது. என்னை? உண் என்னும் தொழிற்சொல் இறந்தகாலம் குறித்துழி உண்டு எனவும், நிகழ்காலம் குறித்துழி உண்கின்று எனவும், எதிர்காலம் குறித்துழி உண்பு எனவும் நின்று, அன், அள், அர், அது, அ என்னும் பால் உணர்த்தும் எழுத்தொடு கூடிப் புணருழி, அன்சாரியை மிக்கும், இயல்பு ஆகியும் இறந்த காலத்துக்கண் உண்டனன், உண்டனள், உண்டனர், உண்டது, உண்டன, உண்ட எனவும்; நிகழ்காலத்துக்கண் உண்கின்றனன், உண்கின்றனள், உண்கின்றனர், உண்கின்றது, உண்கின்றன எனவும், எதிர்காலத்துக்கண் உண்பன், உண்பள், உண்பர், உண்பது, உண்பன எனவும் வரும். உண்கு என நின்ற எதிர்காலச்சொல் பன்மை உணர்த்தும் அகரம் ஏறியவழி உண்க என வியங்கோள் பொருண்மைப்படும் ஆகலின், ஆங்கு உண்குவ என வகரஉயிர்மெய் கொடுக்கவேண்டுதலின் வகரம் எள ஓதல் வேண்டும் என்க. 9

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

9. **'அ ஆ வ' -**

உண்ணா - எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று.

உண்குவ - பலவின்பால் எதிர்கால வினைமுற்று.

பெயருள், பல சில - அகர ஈறு; யா-ஆகார ஈறு; வருவ - வகர ஈறு. யா - வினாப்பெயர் (சொ. 162)

உண் என்னும் வினைப்பகுதி எதிர்கால இடைநிலையொடு கூடியவழி உண்பு என நின்று விகுதி பெற்றவழி உண்பன், உண்பள், உண்பர், உண்பது, உண்பன எனவரும் என்கிறார். உண்பு என நிற்கும் எதிர்கால இடைநிலை இணைந்த பகுதியை இவர்தாம் குறிப்பிட்டுள்ளார். அதற்கு ஏற்ப உண்கு+அ என இணைந்தால் உண்க என வியங்கோளாகிவிடும் ஆதலின் உண்கு+வ= உண்குவ என வகர இறுதிநிலையையும் கோடல் வேண்டும் என்கிறார். மற்ற உரையாசிரியர்கள் குகரத்தைச் சாரியை யாகவே கொண்டுள்ளனர். 'உண்கு' தன்மை ஒருமை வினைமுற்றாகவே தொல்காப்பியம் சொ. 97ஆம் நூற்பாவில் குறிப்பிடுகிறது.

### கல்லாடனார் உரை

### பலவற்றை அறியும் சொல்

**9. *அ ஆ வ என வரூஉம் இறுதி***
***அப்பால் மூன்றே பலஅறி சொல்லே.***

என்-எனின், பலஅறிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அ, ஆ, வ என்று சொல்ல வருகிற இறுதிகளை உடைய அக்கூற்று மூன்று சொல்லும், பலவற்றை அறியும் சொல் எ-று.

எ-டு : உண்டன, உண்ணாநின்றன, உண்பன, கரிய, செய்ய - என இவைகள் அகரஈற்றன; உண்ணா, தின்னா என இவை ஆகார ஈற்றன. உண்குவ, தின்குவ என இவை வகர ஈற்றன.

அகரம் மூன்று காலமும், வினைக்குறிப்பும் கோடலின் முன்வைக்கப் பட்டது. ஆகாரம் எதிர்காலம் ஆகிய ஒரு காலமே கோடலானும், எதிர்மறை வினைக்கண்அல்லது வாராமையானும் அதன்பின் வைக்கப்பட்டது.

வகரம் அகரம் என அடங்குமே எனினும், அவ் அகரம்போல மூன்று காலத்தும் வினைக்குறிப்பினும் வாராது, உண்டல் தின்றல் இவை முதலாகிய தொழில் தொறும் உண்குவ தின்குவ என எதிர்காலம் பற்றி வேறு ஒரு வாய்பாடாய் வருதலான், அவ்வகரத்தோடு அடங்கா நிலைமைச் சிறப்புடைய அகரத்தை முன்கூறி, இதனை அதன்பின் வைத்தார் என்பது. இக்கடா ஈற்றிற்கும் ஒக்கும்.

'பல அறிசொல்' என்னும் எழுவாய்க்கு 'இறுதி' என்பது பயனிலை ஆக்கின், 'அப்பால் மூன்று' என்பது நின்று வற்றும் ஆகலின், மூன்று என்பதையே பயனிலை ஆக்கி, இறுதியை உடைய மூன்று எனப் பயனிலைக்கு அடை ஆக்கி உரைக்க. (9)

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**9. 'அ ஆ வ என . . . சொல்லே.'-**

அப்பால் மூன்று - அக்கூற்று மூன்று சொற்கள்.

அ ஆ வ என்று வைத்த முறைவைப்பு விளக்கப்பட்டது.

எதிர்மறையில் வரும் ஆகாரம் எதிர்காலத்துக்கே உரியது என்பது இவர்கருத்து.

வகரம் குகரம் அடுத்து உண்குவ என்றாற்போல எதிர்காலத்திற்கே வரும்.

இக்கடா ஈற்றிற்கும் ஒக்கும் - என்ற தொடர் தேவையற்ற இடைச்செருகல்.

பலர் அறிசொல் - எழுவாய். மூன்று - பயனிலை.

ஏனைய சொற்கள் பயனிலைக்கு அடை.

## ஒருவர் உரை

**9. அ ஆ வ என வரூஉம் இறுதி**
**அப்பால் மூன்றே பலஅறி சொல்லே.**

எ-டு : உண்டன, உண்ணாநின்றன, உண்பன - கரிய, செய்ய - என முக்காலங்களானும், வினைக்குறிப்பானும்; உண்ணா, தின்னா என எதிர்மறைச் சொல்லானும்; உண்குவ, தின்குவ என எதிர்காலத்தானும் ஆக, அ ஆ வ என்னும் அம்மூன்று சொல்லானும் பலஅறிசொல் உணரப்படும் என்று அறிக. (9)

## ஒருவர் உரைவிளக்கம்

**9. 'அ ஆ வ . . . சொல்லே.'-**

உண்ணா, தின்னா - எதிர்மறைப் பலவின்பால் முற்று.

உண்குவ - எதிர்காலப்பலவின்பால் தெரிநிலைமுற்று.

## பாலசுந்தரனார் உரை

**9. 'அ ஆ வ . . . சொல்லே.'**

ஆசிரியர் நூல் செய்த காலத்துப் பகர உயிர்மெய் ஈறு உயர்திணைப் பல்லோர் அறியும் சொல்லையும், வகர உயிர்மெய் ஈறு அஃறிணைப் பலவறி சொல்லையுமே உணர்த்தினவாதல் நுணுகி நோக்கின் புலனாகும். பகர வகரங்கள்காலம் காட்டும் எழுத்தாதற்கண் உண்பன செல்வன என்றே வரும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

9. பல அறிசொல் அப்பால் இரண்டு எனக்கொள்க. ஆசிரியர் நூல் செய்த காலத்துப் பகர உயிர்மெய் ஈறு பலர்பாலையும், வகர உயிர்மெய் ஈறு பலவின் பாலையுமே உணர்த்தின என்ற நுட்பமான செய்தி உளம்கொளத்தக்கது.

வள்ளுவனார் காலத்தில் இம்மரபு நெகிழ்க்கப்பட்டது என்பதனை 'எண்என்ப ஏனை எழுத்தென்ப' முதலிய குறள்களில் காண்கிறோம்.

**இளம்பூரணர் உரை**

**பால்காட்டும் வினை ஈறுகள்**

*10. **இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய**
**ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்**
**தோற்றம் தாமே வினையொடு வருமே.***

எ. . . ன், மேல் பாலுணர்த்தப்பட்ட எழுத்து இனைய என்பதூஉம், அவை வினைக்கண் நின்று உணர்த்தும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இருதிணையிடத்து ஐந்து பாலையும் அறிய இறுதிக்கண் நின்று உணர்த்தும் பதினோர் எழுத்தும் வினையொடு வந்து புலப்படும் என்றவாறு.

'வினையொடு வருமே' என்றான், பெயர்க்கண் திரியவும் நிற்கும், திரியாமையும் நிற்கும் ஆகலான் என்பது.

உண்டான் என்றக்கால் திரிவில்லை. கொற்றன் என்பது இருதிணை ஒருமைப்பாற்கும் ஏற்கும் என்பது.

மற்று, 'பதினோரெழுத்தும், என்றது என்னை, னஃகானொற்றும், ளஃகானொற்றும், ரஃகானொற்றும், குற்றுகரமும், அவ்வும், ஆவும் என அவை ஆறெழுத்தான் அடங்கும் பிறவெனின், அடங்குமே யெனினும், ஈண்டுப் பதினொன்று என்று வேண்டினான். என்னை? பளிங்கு செம்பஞ்சி அடுத்தால் செம்பளிங்கு எனப்படும்; கரும் பஞ்சி அடுத்தால் கரும்பளிங்கு எனப்படும். அதுபோலச் சார்ந்து வந்தவற்றது வேற்றுமை பற்றி வேறு பெயர் கொள்ளப்பட்டது என்பது. *(10)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**10. 'இருதிணை மருங்கின்' -**

'இனைத்து' ஒருமையாதலின் 'எழுத்து' இனைய என்றிருப்பது பொருந்தும்.

கொற்றன் - விரவுப்பெயர் - கொற்றன் வந்தான் என்றால், உயர்திணை; கொற்றன் வந்தது என்றால் அஃறிணை.

எனவே, கொற்றன் என்ற பெயர் உயர்திணை ஆண் பாலாகவும் அஃறிணை ஒன்றன்பாலாகவும் கொள்ளத்தகும்.

செம்பஞ்சி - செந்நிறப்பஞ்சு. கரும்பஞ்சி - கருநிறப் பஞ்சு. குற்றுகரம் - து று டு. அகரம் - அகர உயிரும் பகர அகரமும், வகரஅகரமும். மார் - ரஃகான் ஒற்றுள் அடக்கப் படும் . படவே ன, ள, ர, குற்றுகரம், அ, ஆ என ஈறு ஆறாம். இளம்பூரணர் இந்த நூற்பாவை 'இனைத்தென அறிந்த' *(சொ.33)* என்ற நூற்பா உரையுள் உம்மை விகாரத்தால் தொக்கதற்கு உடம்பொடு புணர்த்தலாகிய எடுத்துக் காட்டாகத் தந்துள்ளார்.

### சேனாவரையர் உரை

### இவ்வீறுகள் வினையொடு வருதல்

***10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய***
***ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்***
***தோற்றம் தாமே வினையொடு வருமே.***

*(இ-ள்) :* உயர்திணை அஃறிணையென்னும் இரண்டு திணைக்கண்ணும் உளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்துபாலும் அறிய அவ்வச் சொல்லின் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோரெழுத்தும் புலப் படுதற்கண் வினைச்சொற்கு உறுப்பாய்ப் புலப்படும் எ-று.

திணை இரண்டே, பால் ஐந்தே என வரையறுத்தற்கு 'இருதிணை மருங்கின் ஐம்பால்' என்றார்.

னகாரமும், ளகாரமும், ரகாரமும், மாரும் இறுதி நின்றுணர்த்தும் என்பதற்கு 'ஈற்றின் நின்றிசைக்கும் பதினோரெழுத்தும்' என்பது ஞாபகமாயிற்று. அல்லன வற்றிற்கு *அநுவாத* மாத்திரம் என்றார்.

தாமே என்பது கட்டுரைச்சுவைபட நின்றது. வினை எனப் பொதுப்படக் கூறினார் ஆயினும், ஏற்புழிக்கோடல் என்பதனான் படர்க்கை வினை என்று கொள்ளப்படும்.

இவை பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால் விளக்காமையின் 'வினையொடு வரும்' என்றார். *(10)*

### சேனாவரையர் உரைவிளக்கம்

**10. இருதிணை . . . வருமே-**

திணை இரண்டே, பால் ஐந்தே என்று வரையறுக்கிறது. ன், ள், ர், மார் என்பன இறுதியில் வரும் என்று முன்னைய நூற்பாக்களில் கூறப்படவில்லை. அதனை இந்நூற்பாவில் அறிவுறுத்தியது ஞாபகம் எனப்படும். பகர இறுதி, துறுடு இறுதி, அ ஆ வ இறுதி என்பன முன்னரே இறுதியில் வரும் என்பது கூறப்பட்டுள்ளது. அவற்றையும் ஏனையவற்றோடு இணைத்து ஈற்றில் வருவன பதினோரெழுத்து என்பது அனுவாதம். அனுவாதம் ஆவது முன்கூறியவற்றையே ஒரு காரணம் பற்றி மீண்டும் கூறல்.

இவை பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால் விளக்கா.

***ன:கான் ஒற்று*** -

'தம்பெருமான் பாதம் முடிதீட்டி' சீவக. 2608 பெருமான் - பெண்பால். பெண்மகன் - பெண்பால்; அலவன், கடுவன் - அஃறிணை.

***ள:கான் ஒற்று -***

பெருமாள் - ஆண்பால்; மக்கள் - பலர்பால்.

***ர:கான் ஒற்று -***

மாதர் - பெண்பால்; இடங்கர் - ஒன்றன்பால் முதலியன நோக்குக.

**நச்சினார்க்கினியர் உரை**

**வினையில் இருதிணை ஐம்பாலை உணர்த்தும் ஈற்றெழுத்து**

***10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய***
***ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்***
***தோற்றம் தாமே வினையொடு வருமே.***

இது, மேல் பால் உணர்த்திய எழுத்து இனைய என்றும், அவை வினைக்கண் நின்று உணர்த்தும் என்றும் உணர்த்துகின்றது.

இ-ள்: இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய - உயர்திணை அஃறிணை என்றும் இரண்டு திணைக்கண்ணும் உளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்து பாலினையும் அறிய; ஈற்று நின்று இசைக்கும் பதினோர் எழுத்தும் - அவ்வச்சொல்லின் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோர் இடைச்சொற்களும்; தாற்றம் தாமே வினையொடு வருமே - பால் உணர்த்துதற்குப் புலப்படுதற்கண் வினைச் சொற்கு ஈறாய்ப் புலப்படும் என்றவாறு.

பதினோர் இடைச்சொல்லையும் எழுத்து என்றார், எழுத்தினான் சொல் ஆதல்பற்றி. இது கருத்து ஆதல் 'மாரைக்கிளவி' (சொ. 7) என்றதனான் பெற்றாம். 'ஈற்றின் நின்று இசைக்கும்' என்றது, னகரம் முதலிய நான்கற்கும் ஞாபகம்; அல்லனவற்றிற்கு அனுவாதம். அவை னகாரமும், ளகாரமும், ரகாரமும், பகாரமும், மாரும், துவ்வும், றுவ்வும், டுவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும். இது விரித்தது

தொகுத்தது. வினையியலுள் வினைக்கு ஈறுபற்றி ஓதிப் பெயரியலுள் பெயர்கள்தம்மையே எடுத்து ஓதினமை யானும், இப்பதினோர் ஈறும் பெயர்க்கண் திரிபு உடையவாய் வருதலானும், பெயர்க்கு இவ்வீறுகள் கோடல் ஆகாமை உணர்க. *(10)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**10. இருதிணை மருங்கின் -**

பதினோர் இடைச்சொல் என்ற தொகுப்பில் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப, மார், து, று, டு, அ, ஆ, வ என்பன அடங்கும். னஃகான், ளஃகான், ரஃகான் என்பன அன், ஆன், அள், ஆள், அர், ஆர் என்ற விகுதி இடைச்சொற்களைக் குறிக்கும். 'மாரைக்கிளவி' (சொ.7) என மார் என்பதனைச் சொல்லாகக் குறிப்பிட்டமை போலவே, ஏனைய ஈறுகளும் இடைச்சொற்களாகக் கொள்ளத்தக்கன.

னஃகான் ஒற்றும் ளஃகான் ஒற்றும் ஈற்றில் வரும் என்று கூறப்படாமையான், அவை ஈற்றில் வருவன என்று கொள்ளப்படும் செய்தி, 'அறிவுறுத்தல்' என்று குறிப்பிடும் 'ஞாபகம் கூறல்' என்ற உத்திவகை. நச்சினார்க்கினியர் ரஃகான் ஒற்று, மாரைக்கிளவி என்பனவற்றிற்கு ரஃகான் ஆகிய ஒற்றினை ஈறாக உடைய சொல், மார் என்னும் இடைச்சொல்லை ஈறாக உடையசொல் என்று பொருள் செய்து, னஃகான், ளஃகான் என்பனவற்றிற்கு னகரத்தை ஈறாகஉடையசொல், ளகரத்தை ஈறாகஉடைய சொல் என்று பொருள் செய்யாமையின், அவ்விரண்டனை மாத்திரம் ஞாபகத்தான் கொண்டார். ஏனைய ஒன்பதாகிய ரஃகான் இறுதி, பகர இறுதி, மாரை இறுதி, துறுடு இறுதி, அஆவ இறுதி என்பன ஈற்றில் வருவன என்று மீண்டும் கூறியமை வழிமொழிதல் எனப்படும் அனுவாதமாம். ஐந்து நூற் பாக்களுள் விரித்துக் கூறப்பட்டன இந்நூற்பாவுள் தொகுத்துக் கூறப்பட்டன. எனவே, இந்நூற்பா விரித்தது தொகுத்ததாகும்.

பெயர்க்கண், னஃகான் ஒற்று பெருமான் என்று பெண்பாற்கும், அலவன் கள்வன் என ஒன்றன்பாலிற்கும், ளஃகான் ஒற்று பெருமாள் என ஆண்பாலிற்கும் வருவன போல்வன இவ்வீறுகள் பெயர்க்கண் திரிபுடையவாய் வருதற்கு உதாரணம் எனலாம்.

பெயர்க்கண்ணும் இவ்வீறுகளை எடுத்துக்காட்டிப் பாண்டியன், அவள், நம்பியர், தாய்மார், அது, ஒன்று, இரண்டு, பல, யா, வருவ என்றாற்போல்வனவற்றைக் குறிப்பிடும் தெய்வச்சிலையார், பகர ஈறு அஃறிணைப் பெயராய் அல்லது வாராது என்று கூறி, இந்நூற்பாவில் 'தோற்றம்தாமே' என்பதற்குப் பெரிதாக என்று விளக்கம் கூறிப் பெயரொடு வருகை சிறுவரவிற்று என்றார். *(10)*

## தெய்வச்சிலையார் உரை

### இருதிணை ஐம்பால் உணர்த்தும் ஈறுகள்

***10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய***
***ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்***
***தோற்றம் தாமே வினையொடு வருமே.***

மேல், பால் உணர்த்தப்பட்ட எழுத்திற்கு எல்லாம் உரியது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டு திணைக்கண்ணும் ஐந்து பாலும் விளங்க இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோர் எழுத்தும் தாம் தோற்றம் ஆக வினையொடு வரும் எ-று.

தோற்றம் ஆக என்பது பெரிதாக என்பது குறித்து நின்றது. எனவே, பெயரொடு வருகை சிறுவரவிற்று என்று கொள்ளப்படும்; ஆடூஉ, மகடூஉ, மக்கள், மரம், அவை - எனப் பெயர்க்கண் பிறவாற்றானும் வரும் ஆதலின். உதாரணம் மேல் காட்டப்பட்டன. *(10)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**10. 'இருதிணை மருங்கின்' -**

தோற்றம் தாமே - பெரும்பாலும். எனவே, னகாரம் முதலிய பதினோரெழுத்தும் பெயரொடு வருதல் சிறு வரவிற்று. ஆடூஉ, மகடூஉ - இவை தொல்காப்பியனாருக்கு ஆடூ, மகடூ என ஊகார ஈற்றுப் பெயர்களாம். (எ. 271) ஆடூ, மக்கள், மரம், அவை என - ஊ, ள், ம், ஐ என்பன பெயர்க்கு ஈறாகக் காட்டப்பட்டுள்ளன.

### கல்லாடனார் உரை

**பால் உணர்த்தும் பதினோர் ஈறுகள்**

*10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய*
*ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்*
*தோற்றம் தாமே வினையொடு வருமே.*

என் - எனின், மேல் பால் உணர்த்தும் எனப்பட்ட எழுத்து இனைத்து என்பதூஉம், அவை வினைக்கண் நின்று உணர்த்தும் என்பதூஉம், வினைக்கண்ணும் ஈற்றில்நின்று உணர்த்தும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டு திணையிடத்தும் உளஆகிய ஐந்து பாலினையும் அறியும்படி மொழியது ஈற்றுக்கண்ணே நின்று உணர்த்தும் மேற்சொல்லப்பட்ட பதினொருவகை எழுத்தும், அவைதாம் பால் உணர்த்துதற்குப் புலப்படுமிடத்து, வினைச்சொல்லொடு வந்து புலப்படும் எ-று.

பதினோரெழுத்தும் ஆவன னஃகான் ஒற்றும், ளஃகான் ஒற்றும், ரஃகான் ஒற்றும், பகரமும், மாரும், துவ்வும், றுவ்வும், டுவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும் என இவை. இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சமாக உணர்த்தும் என்னும் பொருள்படும்.

மேற்கூறிய திணையினையும், பாலினையும் வரையறுத்து, 'இருதிணை மருங்கின் ஐம்பால்' எனக் கூறிய காரணம் என்னை எனின், உயர்திணைப் பொருளுள் தேவரும் நரகரும் எனவும், உயர்திணைப் பாலுள் பேடியும் அலியும் எனவும் விரிந்து நின்றனவும் பொருள்கள் உண்மையின், இப்பொருட்பகுதி எல்லாம் சொற்பகுதி பிற இன்மையின் ஐந்தாய் அடங்கினவே எனினும், அப்பொருட்பாகுபாடு பற்றி நூலகத்து வேறு திணையும் பாலுமாக வழங்கவும் கூடும் கொல்லோ என்று மாணாக்கண் ஐயுறுவானாம் என்று 'இவை அல்லது இல்லை' என 'விரித்துத் தொகுத்தல்' என்னும் இலக்கணத்தான் வரையறுத்து, 'இருதிணை ஐம்பால்' என்றாராகக் கொள்க.

முதற்சூத்திரத்துட் கூறப்பட்ட சொல் இலக்கணம் எட்டினுள்ளும் திணைபால் என்பனவற்றது இலக்கணமே இத்துணையும் கூறியது என உணர்க.

முன்நின்ற நான்கு சூத்திரமும் திணையும் பாலும் சொல்லும் பொருளும் பற்றிய வரையறை இலக்கணம் கூறின எனவும், பின்நின்ற ஆறும் அத்திணையும் பாலும் உணர்த்தும் சொற்களின் இலக்கணம் கூறின எனவும் உணர்க. *(10)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**10. 'இருதிணை . . . வருமே.'-**

இனைத்து என்பது இத்தனை என்னும் பொருளுடைய சொல். இது பெரும்பாலும் பன்மைப் பொருளிலேயே வருகிறது.

முன்னர் 'இசைக்கும்' என்ற சொற்கு முற்றாகப் பொருள் உரைத்துப் பின் பெயரெச்சமாகவும் பொருள் செய்யலாம் என்கிறார்.

பொருள் பற்றிய பாகுபாடுகள் பல உளவேனும் சொல் பற்றிய பாகுபாடுகள் இவை ஐந்துமே என்பது விளக்கப்பட்டது.

முதல் நான்கு நூற்பாக்கள் சொல், பொருள் இலக்கணம் பற்றியன.

அடுத்த ஆறு நூற்பாக்கள் சொல் இலக்கணம் பற்றியன.

**ஒருவர் உரை**

***10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய***
***ஈற்றுநின்று இசைக்கும் பதினோர் எழுத்தும்***
***தோற்றம் தாமே வினையொடு வருமே.***

எ-து : உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும், ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல - என்னும் ஐந்துபாலும் அறிய, இறுதியில் நின்று உணர்த்தும் பதினோர் எழுத்தும் புலப்படுமிடத்து வினையொடு நடக்கும்.

அவையாவன : னகாரமும், ளகாரமும், ரகாரமும், பகாரமும், மாரும், தவ்வும், றவ்வும், டவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும் என இவை முன்சொன்ன சூத்திரங்களின் வினையொடு நடக்குமாறு கண்டுகொள்க. *10*

**சாத்திரியார் உரை**

10. **'இருதிணை . . . வருமே.'**

பெயரொடு வருங்கால் திரிபொடு வருவதற்கு உதாரணம் :- பெண்மகன், அலவன்; பெருமாள், மக்கள்; தாயார் முதலியன.

**பாலசுந்தரனார் உரை**

**10. 'இருதிணை . . . வருமே.'-**

பதினோரெழுத்தாவன னகரம் முதல் வகரம் ஈறாகக் கூறப்பட்ட இடைச்சொற்களாம். எழுத்து என்றது ஆகுபெயர்.

வினை எனப் பொதுப்படக் கூறினாராயினும் திரிபின்றி ஐம்பால் அறிய நிற்கும் படர்க்கை வினையே கொள்ளப்படும். ஈண்டு வினை என்றது முதனிலைத் தொழிற்பெயர்ச்சொற்களை.

வினையின்கண் வரும் என்னாது 'வினையொடு வரும்' என்றதனான், பெயர்ச் சொற்கள் படர்க்கை வினையொடு வந்து பால் அறிய நிற்கும் என்பது கொள்ளப்படும். இஃது இரட்டுற மொழிதற் குறிப்பு.

'தாமே' என்றதனான், வினையொடு வருதல் அன்றிச் சுட்டுப் பெயர் வினாப்பெயர்களொடும் தோன்றிப் பால் அறிய நிற்கும் எனவும் கொள்க.

(எ-டு.) சாத்தன் அவன், சாத்தன் யாவன் -எனவரும்.

அவன், யாவன் என்பவை ஒருமொழிப் புணர்ச்சியாய்ப் பால் அறியநிற்றல் இதனான் உணர்ந்துகொள்க.

திணை இரண்டே, பால் ஐந்தே என்ற வரையறை உணர்த்துதற்காக 'இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய' என வழிமொழிந்து கூறினார்.

இதுகாறும் கூறப்பெற்ற தனிமொழி ஆக்கம் பற்றிய சூத்திரங்கள், இனி வரும் தொடர்மொழி ஆக்கம் பற்றிய இலக்கணத்திற்குக் கருவிகளாகும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

*10.* 'தோற்றம் தாமே வினையொடு வருமே' என்பதனான் பெயர்ச்சொற்கள் படர்க்கை வினையொடு வந்து பால் அறிய நிற்றலும், பெயர்ச்சொற்கள் சுட்டுப்பெயர் வினாப்பெயர் இவற்றுடன் இணைந்து, சாத்தன் அவன்; சாத்தன் யாவன்? என்றாற்போலப் பால் அறிய நிற்றலும் பெறப்படும்.

4 முதல் 10ஆவது எண் முடிய உள்ள நூற்பாக்கள் தனிமொழி ஆக்கம் பற்றியன. இனி, இவை இவ்வியல் முழுவதும் கூறப்படும் தொடர்மொழி ஆக்கம் பற்றிய இலக்கணத்துக்குக் கருவிகள் ஆகும்.

## இளம்பூரணர் உரை

### பால்அறி கிளவியின் மரபு

***11. வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***மயங்கல் கூடா; தம்மர பினவே.***

எ . . . ன், வழுக்காத்தலை நுதலிற்று. வழுக் காக்குமிடத்து, வழுவற்க என்று காத்தலும், வழீஇயினும் அமைக என்று காத்தலுமென இரண்டு. அவற்றுள் இது வழுவற்க என்று காத்தது.

இ-ள்: 'வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்' என்பது வினையின் பால் அறியப்படும் பொருளும் என்றவாறு. ஈண்டுப் பொருளைக் 'கிளவி' என்றார் என உணர்க. 'பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்' என்பது பெயரினான் பால் அறியப்படும் பொருளும் என்றவாறு. 'மயங்கல் கூடா' என்பது அவை விரவுதல் பொருந்தா என்றவாறு. 'தம்மரபினவே' என்பது தத்தம் இலக்கணத்தவே யாகும் என்றவாறு.

அவை தம் மரபினான் வருமாறு : உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை என, இவை வினை நின்று பெயர்மேல் தத்தம் மரபினான் வந்தன. இனிப் பெயரை முன் நிறீஇ, வினையைப் பின்னே கொணர்ந்து காட்டினும் அமையும்.

இனி, மயங்கல் கூடா எனவே, மயக்கமும் உண்டு என்பது சொல்லப்பட்டதாகும். அம்மயக்கம் எழுவகைப் படும்; திணை மயக்கம், பால் மயக்கம், இட மயக்கம், கால மயக்கம், மரபு மயக்கம், செப்பு மயக்கம், வினா மயக்கம் என.

மயக்கம் எனினும் வழு எனினும் ஒக்கும். அவை வருமாறு :

அவன் வந்தன, அவன் வந்தது, அவள் வந்தன, அவள் வந்தது; அவர் வந்தன, அவர் வந்தது - இவை உயர்திணை அஃறிணைமேற் சென்று வழீஇயின.

இனி, அஃறிணை உயர்திணைமேற் சென்று வழீஇயின வருமாறு : அது வந்தான், அது வந்தாள், அது வந்தார் எனவும்; அவை வந்தான், அவை வந்தாள், அவை வந்தார் எனவும் வரும். இவை பன்னிரண்டும் திணை வழூஉ.

இனிப் பால் வழூஉ வருமாறு : அவன் வந்தாள், அவன் வந்தார், அவள் வந்தான், அவள் வந்தார் என இவை உயர்திணைப் பால் வழூஉ. அது வந்தன, அவை வந்தது என இவை அஃறிணைப் பால் வழூஉ. இவை யெல்லாம் பெயர் நின்று வினைமேல் வழீஇய. இவ்வாறு வினை நின்று பெயர்மேல் வழீஇயன, வினை முன்நிறீஇப் பெயர் பின் தந்து கூட்டி உரைத்துக் கொள்க.

இச்சூத்திரப்பொருள்மேல் 'மயங்கற்க' என்றான் ஆதலான், அவற்றுக்கண் கிடந்த எல்லா மயக்கமும் வேண்டினமை கூறினானாம் என்பது. அவை திணை பற்றியும் பால் பற்றியும் அன்றி வருமாறில்லை.

செப்பு வழூஉ, வினா வழூஉ முன்னர்ச் சொல்லுதும்; ஒழிந்தன ஈண்டு உணர்த்துதும்.

இனி, இட வழூஉ வருமாறு : உண்டேன் நீ, உண்டேன் அவன், உண்டாய் யான், உண்டாய் அவன், உண்டான் யான், உண்டான் நீ என இவை.

இனிக் காலவழூஉ வருமாறு : செத்தானைச் சாம் என்றலும். குளம் நீர் புகுந்து நிறையும் எனற்பாலதனை நிறைந்தது என்றலும் ஆம்.

இனி, மரபு வழூஉ வருமாறு : இனி மேய்த்தல் ஒப்புமையான் யானை மேய்ப்பானை இடையன் என்றும், யாடு மேய்ப்பானைப் பாகன் என்றும் சொல்லுதல். (11)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**11. 'வினையின் தோன்றும்' -**

வழீஇ அமைக-வழீஇயினும் அமைக என்றிருத்தலே பொருத்தம்.

உண்டான் அவன் - வினைமுற்று முன்னர், அதனை முடிக்கும் பெயர் பின்னர் வந்தன.

அவன் உண்டான் - பெயர் முன்னரும் முடிக்கும் வினை பின்னரும் வந்தன.

எல்லா வழுக்களுக்கும் திணைவழுவும் பால்வழுவுமே அடிப்படையாகும்.

***ஒழிந்தது*** ஈண்டு உணர்த்துதும் - ***ஒழிந்தன*** என்று இருப்பது நன்று.

## சேனாவரையர் உரை

### பெயரும் வினையும் பால் மயங்கலாகாமை

11. ***வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***மயங்கல் கூடா; தம்மர பினவே.***

கோபலய்யர் - 11

ஒரு திணைச்சொல் ஏனைத் திணைச் சொல்லொடு முடியும் திணை வழுவும், ஒருபாற்சொல் அத்திணைக்கண் ஏனைப் பாற் சொல்லொடு முடியும் பால்வழுவும், பிறிதொரு காரணம் பற்றாது ஒரு பொருட்குரிய வழக்கு ஒரு பொருண்மேற் சென்றது எனப்படும் மரபுவழுவும், வினாயதற்கு இறையாகாச் செப்புவழுவும், வினாவப்படாத பொருளைப் பற்றி வரும் வினாவழுவும், ஓர் இடச்சொல் ஓர் இடத்துச் சொல்லொடு முடியும் இடவழுவும், காலக் கிளவி தன்னோடியையாக் காலமொடு புணரும் காலவழுவும் என வழு எழுவகைப்படும். வழுவற்க என்றலும் வழுவமைத்தலும் என வழுக்காத்தல் இருவகைப்படும். குறித்த பொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லுக என்றல் வழுவற்க என்றலாம். குறித்த பொருட்குரிய சொல்லன்றாயினும் ஒருவாற்றான் அப்பொருள் விளக்கு தலின் அமைக என்றல் வழுவமைத்தலாம். இச்சூத்திரம் முதலாக இவ்வோத்து வழுக் காக்கின்றது.

(இ-ள்) கூறப்பட்ட பதினோர் ஈற்றவாய் வினைபற்றி வரும் பால் அறி சொல்லும், அவன் இவன் உவன் என்பன முதலாகப் பெயர்பற்றி வரும் பால் அறி சொல்லும், தம்முள் தொடருங்கால், ஒரு பாற்சொல் ஏனைப் பாற்சொல்லொடு மயங்கா, தம்பாற் சொல்லொடு தொடரும். எனவே, பிற பாற்சொல்லொடு தொடர்வன வழு என்பதாம் எ-று.

ஈண்டுப் பெயரென்றது பொருளை. திணை யுணராக்கால் அதன் உட்பகுதி யாகிய பால் உணர்தலாகா மையின், பால் அறி கிளவி எனவே திணையறிதலும் பெறப்படும்; படவே, 'மயங்கல்கூடா' என்றது திணையும் பாலும் மயங்கற்க என்றவாறாம்.

இன்னும் 'மயங்கல்கூடா' என்றதனான், வினைப் பாலறிசொல்லும் பெயர்ப் பாலறி சொல்லுள் ஒரு சாரனவும் இடமுங் காலமும் உணர்த்துமாகலின், அவ்வாறு உணர்த்து வனவற்றானும் மயங்கற்க என்றவாறாம்; ஆகவே, இடமும் காலமும் மயங்காது வருதலும் கூறப்பட்டதாம்.

(எ-டு) அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார், அது வந்தது, அவை வந்தன எனவும் யான் வந்தேன், நெருநல் வந்தான் எனவும் திணையும் பாலும் இடமும் காலமும் வழுவாது முடிந்தவாறு. அவ்வாறன்றி அவன் வந்தது, அவன் வந்தாள், யான் வந்தான், நாளை வந்தான் என மயங்கி வருவனவெல்லாம் வழுவாம்.

'சிறப்புடைப் பொருளைத் தான் இனிது கிளத்தல்' என்பதனான் ஐம்பால் உணர்த்துதற் சிறப்புடைய படர்க்கை வினை பற்றி ஓதினாரேனும், 'தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி' (சொல். 43) என்றும், 'முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி' (சொல். 462) என்றும் பெயர் வழுவமைப்பாராகலின், தன்மை முன்னிலைப் பாலறி கிளவியும் மயங்கற்க என்பது ஈண்டைக் கொள்ளப்படும்.

(எ-டு) யான் வந்தேன், யாம் வந்தோம் எனவும் நீ வந்தாய், நீயிர் வந்தீர் எனவும் வரும். யான் வந்தோம், நீயிர் வந்தாய் என்னுந் தொடக்கத்தன வழுவாம்.

'மயங்கல் கூடா' என்றது மயங்குதலைப் பொருந்தா என்றவாறு. 'மயங்கல் கூடா தம்மர பினவே' என்பனவற்றுள், ஒன்றனது ஆற்றலான் ஏனையதன் பொருளும் உணரப் படுதலின் ஒன்றே அமையுமெனின், சொல்இல்வழியது உய்த்துணர்வதென்க.

'தம் மரபினவே' என்பதனைப் பிரித்து வேறொரு தொடராக்கிச் சொற்கண் மரபு பிறழா; தம் மரபினவே என மரபுவழுக்காத்ததாக உரைக்க. இது ***யோகவிபாகம்*** என்னும் நூற்புணர்ப்பு. முன் இரு பொருள்பட உரைப்பனவெல்லாம் இந் நூற்புணர்ப்பாகக் கொள்க. யானை மேய்ப்பானைப் பாகன் என்றலும், யாடு மேய்ப்பானை இடையன் என்றலும் மரபு. மேய்த்தல் ஒப்புமையான் யானை மேய்ப்பானை இடையன் என்றலும், யாடு மேய்ப்பானைப் பாகன் என்றலும் மரபுவழு.

செப்புவழாநிலையும், வினாவழாநிலையும், சிறப்பு வகையான் ஓதப்படும் இடவழாநிலையும், இவ்வாறு ஓதப்படும் மரபுவழாநிலையும் ஒழித்து, ஒழிந்தன இச்சூத்திரத்தாற் காத்தார். *11*

### சேனாவரையர் உரைவிளக்கம்

**11. வினையின் . . . மரபினவே**

வினைப்பாலறி சொல்லும், பெயர்ப்பாலறி சொல்லுள் ஒரு சாரனவும் காலம் காட்டும். காலம் காட்டும் பெயர்ச்சொற்கள் வினையாலணையும் பெயர் எனப்படும். (சொ.70). படர்க்கை வினைமுற்றே இருதிணை ஐம்பால் களை உணர்த்தும் சிறப்புடையன. தன்மை உயர்திணை யாயினும் அஃறிணையையும் உளப்படுக்கும். தன்மையிலும் முன்னிலையிலும் ஒருமை, பன்மைப்பாலே வினை முற்றான் அறியப்படும். யோகவிபாகம்-கூட்டிப் பிரித்தல்; விபாகயோகம்- பிரித்துக்கூட்டல். 250ஆம் நூற்பாவில் 'வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்' என்ற தொடரை 'வேற்றுமை உருபு ஆகுநவும்' எனவும் 'வேற்றுமைப் பொருள்வயின் ஆகுநவும்' எனப் பிரித்துப் பொருள் செய்தல் யோகவிபாகம் ஆகும்.

### நச்சினார்க்கினியர் உரை

#### பால்அறி கிளவிகள் மயங்காமை

*11. வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்*
*பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்*
*மயங்கல் கூடா; தம்மர பினவே.*

இது 'வழுவற்க' என்று காத்தலும், 'வழுவினும் அமைக' என்று காத்தலும் ஆகிய காத்தல் இரண்டனுள், 'வழுவற்க' என்று காக்கின்றது.

இ-ள்: வினையின் தோன்றும் பாலறி கிளவியும் - வினைச்சொல்லான் விளங்கும் பால் அறியப்படும்

பொருளும்; பெயரின் தோன்றும் பால் அறி கிளவியும் - பெயர்ச்சொல்லான் விளங்கும் பால் அறியப்படும் பொருளும்; மயங்கல் கூடா - ஒன்றனோடு ஒன்றை மயங்கச் சொல்லுதல் பொருந்தா; தம்மரபின - தத்தம் இலக்கணத் தானே சொல்லுதல் உடைய என்றவாறு.

'சொல்' என்றார், அதனான் உணரும் பொருளை. பால் மயங்காது எனவே, திணை மயங்காமையும் கூறிற்றாம்.

உதாரணம் : உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை - இவை வினை நின்று பெயர்மேல் தத்தம் மரபினான் வந்தன.

அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அது உண்டது, அவை உண்டன - இவை பெயர் நின்று வினை மேல் தத்தம் மரபினான் வந்தன.

'வினைச்சொல்லான் விளங்கும்' எனவே அதனில் உள்ள காலமும் இடனும் மயங்காமையும் பெற்றாம். அவை உண்டேன் நெருநல், உண்ணாநின்றேன் இன்று, உண்கு நாளை; யான் வந்தேன், நீ வந்தாய்- யாம் வந்தோம், நீயிர் வந்தீர் - எனவரும்.

இனி, உய்த்துக்கொண்டு உணர்த்தல் (பொ. 666) என்பதனான், தம்மரபின என்பதனைப் பிரித்து வேறொரு தொடர்ஆக்கி, மரபு மயங்காமையும் கொள்க. அவை யானை மேய்ப்பானைப் பாகன் என்றலும், யாடு மேய்ப்பானை இடையன் என்றலும் ஆம்.

இச்சூத்திரத்தான், திணையும், பாலும், இடமும், காலமும், மரபும் வழுவாமல் காத்தார். இனி 'மயங்கல் கூடா' என்பதனானே, 'மயங்குதலும் உண்டு' என்பது பெற்றாம். அம்மயக்கம் எழுவகைய என்பது உரையிற்கோடும். அவை திணை மயக்கமும், பால் மயக்கமும், கால மயக்கமும், இட மயக்கமும், செப்பு மயக்கமும், வினா மயக்கமும், மரபு மயக்கமும் என ஏழாம். இவை மயங்கும் எனவே, வழு ஆதல் பெற்றாம்.

உண்டான் அது, உண்டான் அவை, உண்டாள் அது, உண்டாள் அவை, உண்டார் அது, உண்டார் அவை, உண்டது அவன், உண்டன அவன், உண்டது அவள், உண்டன அவள், உண்டது அவர், உண்டன அவர் - இவை திணைவழு.

உண்டான் அவள், உண்டான் அவர், உண்டாள் அவன், உண்டாள் அவர், உண்டார் அவன், உண்டார் அவள், உண்டது அவை, உண்டன அது - இவை பால்வழு. இவை வினை நின்று பெயர்மேல் வழீஇயின.

அவன் வந்தது, அவன் வந்தன, அவள் வந்தது, அவள் வந்தன, அவர் வந்தது, அவர் வந்தன, அது வந்தான், அவை வந்தான், அது வந்தாள், அவை வந்தாள், அது வந்தார், அவை வந்தார் - இவை திணைவழு.

அவன் வந்தாள், அவன் வந்தார், அவள் வந்தான், அவள் வந்தார், அவர் வந்தான், அவர் வந்தாள், அது வந்தன, அவை வந்தது - இவை பால்வழு. இவை பெயர் நின்று வினைமேல் வழீஇயின.

செத்தானைச் 'சாம்' என்றல் காலவழு.

யான் உண்டான், யான் உண்டாய் என்றாற்போல்வன இடவழு.

இவை பெயர் வினைகளைப் பற்றிவரும் விகற்பமும் கொள்க.

யானை மேய்ப்பானை இடையன் என்றலும், யாடு மேய்ப்பானைப் பாகன் என்றலும் மரபுவழு.

செப்பும் வினாவும் வழூவாமையும் வழுவு மாறும் மேலே கூறுப. வினையியலுள் கடைக்கண் கால வழுவமைதியும், மரபியலுள் மரபு வழுவமைதியும் கூறி, ஏனைய வழீஇ அமையுமாறு இவ்வோத்தினுள் கூறுப. *(11)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**11. வினையின் தோன்றும் -**

**வழுவி** அமைக என்பது **வழுவினும்** அமைக என்றிருப்பது நன்று.

சேனாவரையர் யோகவிபாகம் என்று கூறியதனை நச்சினார்க்கினியர் உய்த்துக்கொண்டு உணர்தல் என்ற உத்திவகையாகக் கொண்டுள்ளார். உய்த்துக் கொண்டு உணர்தலாவது முதலில் கூறிய ஒருபொருளுக்கு மேலாக வேறொரு பொருளும் கொள்ளுதல்.

அதனைச் சொல்லதிகார 460ஆம் நூற்பா உரை, பொருளதிகார 213, 226 ஆம் நூற்பாக்கள் உரை-இவற்றின்கண் காணலாம்.

உய்த்துக்கொண்டு உணர்தல்-ஒருவழி ஒருபொருள் சொல்லியக்கால், அதன்கண்ணே மற்றொரு பொருளையும் கொணர்ந்து அறியுமாறு தோன்றச் செய்தல் என்பது பேராசிரியர் உரை (பொ. 665).

வினையியலுள் கடைக்கண் காலவழுவமைதி 242, 243, 244, 246, 247, 249, 250 என்ற எண்ணுடைய நூற்பாக்களில் கூறப்பட்டுள்ளது. மரபுவழுவமைதி, மரபியலில் சிதைவு பற்றிய நூற்பாவிலும் (பொ.663) உத்திவகை பற்றிய நூற்பாவிலும் (பொ.665) கூறப்பட்டுள்ளது. பொ. 623, 624 என்ற நூற்பாக்களை மரபு வழுவமைதிக்குக் கோடலும் ஆம்.

## தெய்வச்சிலையார் உரை

### வழுப்படாமல் கூறுமாறு

11. ***வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***மயங்கல் கூடா தம்மர பினவே.***

வழுப்படாமல் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இவ் ஓத்தினுள் செப்பும் வினாவும் வழுவாமல் கூறுதல் பயன் ஆதலின், அவை வழுவாமல் கூறுங்கால் வினையின் தோன்றும் பால்அறி சொல்லும், பெயரின் தோன்றும் பால்அறிசொல்லும் தம்முள் மயங்குதல் பொருந்தா, தத்தம் மரபினை உடைய ஆதலான் எ-று.

ஆதலால் என்பது எஞ்சி நின்றது.

பெயர் என்றதனால் தன் பொருண்மை ஆகிய திணை பெறுதும். பால் அறிசொல் என்றதனால் பால் பெறுதும். வினை என்றதனால் அதற்கு இன்றியமையாத காலமும் இடனும் பெறுதும். தம் மரபின என்றதனால் மரபு பெறுதும். மயங்கல் கூடா என்பதனால் வழூஉப்படுதல் குற்றம் என்பது பெறுதும்.

திரிபு இன்றிப் பால் உணர்த்துவது வினை ஆதலின் சிறப்பு நோக்கி முன்கூறினார். அன்றியும் மேல்நின்ற சூத்திரம் வினை அதிகாரப்பட்டு வருதலின் அதனொடு சேர வைத்தார் எனினும் அமையும்.

உ-ம் : அவன் நெருநல் உண்டான் என்பது, அவன் என்னும் உயர்திணைப் பெயர் உயர்திணை வினைகொண்டு முடிதலின், திணை வழுவாது ஆயிற்று. ஆடூஉப் பெயர் ஆடூஉ வினை கொண்டு முடிதலின் பால் வழுவாது ஆயிற்று. படர்க்கைப் பெயரொடு படர்க்கை வினை முடிதலின் இடம் வழுவாது ஆயிற்று. நெருநல் என்னும் இறந்த காலப் பெயரோடு இறந்தகால வினை முடிதலின் காலம் வழுவாது ஆயிற்று. உண்டல் தொழிற்கு உரியானை உண்டான் என்றமையான் மரபு வழுவாது ஆயிற்று. பிறவும் அன்ன.

இனி, வழு ஆமாறு : உயர்திணை மூன்று பாலும் அஃறிணை இரண்டு பாலொடு மயங்குதல் திணைவழுஆம்.

அவை தம்முள் தாம் மயங்குதல் பால் வழு ஆம். தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்று இடமும் ஒன்றோடு ஒன்று மயங்குதல் இடவழு ஆம். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலமும் தம்முள் மயங்குதல் காலவழு ஆம். எல்லாப் பொருளையும் பயின்ற மரபினான் கூறாதது மரபுவழு ஆம்.

உ-ம் : அவன் உண்டது : திணைவழூஉ. அவன் உண்டனள் : பால் வழூஉ. நீ உண்டனன் : இடவழூஉ. நாளை உண்டேன் : கால வழூஉ. அவன் மேய்ந்தான் : மரபு வழூஉ. பிறவும் அன்ன.

திணை வழூஉப் பன்னிரண்டு. பால் வழூஉ எட்டு. இட வழூஉ ஆறு. கால வழூஉ ஆறு. மரபு வழூஉ வரம்பு இல. *(11)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**11. 'வினையின் தோன்றும்' -**

'பெயர்' எனவே அது குறிப்பிடும் திணையும் பாலும் பெறப்படும்.

'வினை' எனவே அது குறிப்பிடும் காலமும் இடமும் பெறப்படும்.

'தம்மரபின' எனவே பெயரும் வினையும் குறிப்பிடும் மரபு பெறப்படும்.

சென்ற நூற்பா வினைமுற்றுப் பற்றியதாகலானும் வினைமுற்றே திரிபின்றிப் பால் உணர்த்தலானும் இந்நூற் பாவில் வினை முதற்கண் கூறப்பட்டது.

திணை, பால், இடம், காலம், மரபு என்பன வழுவாமல் அமைந்ததற்கும், வழுவி வருதலுக்கும் உதாரணங்கள் தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| உயர்திணை ஆண், பெண், பலர் x<br>அஃறிணை ஒருமை, பன்மை - | 3 x 2 = 6 |
| அஃறிணை ஒருமை, பன்மை x<br>உயர்திணை ஆண் பெண் பலர் - | 2 x 3 = 6 |
| ஆகத்திணை வழு | 12 |

| | |
|---|---|
| உயர்திணை ஆண்பால் x அஃறிணை ஒருமை+பன்மை | 2 |
| உயர்திணைப் பெண்பால் x அஃறிணைஒருமை+பன்மை | 2 |
| உயர்திணைப் பலர்பால் x அஃறிணைப் பன்மை | 1 |
| அஃறிணைப் பலவின்பால் x உயர்திணைப் பலர்பால் | 1 |
| அஃறிணை ஒன்றன்பால் x ஆண்பால் | 1 |
| அஃறிணை ஒன்றன்பால் x பெண்பால் | 1 |
| பால் வழு | 8 |

அவன் வந்தது, அவன் வந்தன; அவள் வந்தது, அவள் வந்தன; அவர் வந்தன; அவை வந்தார்; அது வந்தான்; அது வந்தாள் - என எட்டனையும் முறையே காண்க.

| | | |
|---|---|---|
| தன்மை x முன்னிலை, படர்க்கை | 2 | யான் வந்தாய்,<br>யான் வந்தான். |
| முன்னிலை x தன்மை, படர்க்கை | 2 | நீ வந்தேன்,<br>நீ வந்தான். |
| படர்க்கை x தன்மை, முன்னிலை | 2 | அவன் வந்தேன், |
| | 6 | அவன் வந்தாய். |

இறப்பிற்கு நிகழ்வும் எதிர்வும், நிகழ்விற்கு இறப்பும் எதிர்வும், எதிர்வுக்கு இறப்பும் நிகழ்வும் ஆகிய காலங்களை வழங்குதலாகிய காலவழு ஆறு.

### கல்லாடனார் உரை

#### பாலறிசொற்கள் தம்முள் மயங்காமை

11. ***வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்***
***மயங்கல் கூடா; தம்மர பினவே.***

என்-எனின், வழுக் காத்தல் நுதலிற்று. வழுக் காக்கும் இடத்து வழுவற்க என்று காத்தலும், வழு அமைக என்று காத்தலும் என இரண்டாம். அவற்றுள் இது வழுவற்க என்று காத்தல்.

இ-ள்: வினைச்சொல்லான் அடங்கும் பால் அறியப் படும் பொருளும், பெயர்ச்சொல்லான் அடங்கும் பால் அறியப்படும் பொருளும் என இவ்விருவகைப் பொருளும் ஒன்றோடு ஒன்றை மயங்கச் சொல்லுதல் பொருந்தா; தத்தம் இலக்கணத்தானே சொல்லுதல் உடைய எ-று.

எ-டு : உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை - இவை வினை. அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அது உண்டது, அவை உண்டன - இவை பெயர்.

'பால் அறி கிளவி' என்றதனை ஈண்டும் பொருள்மேற் கொள்க. அவ்வாறு பொருள் மேற்கொள்ளவே, பொருள் பற்றி நிகழும் வழுவெல்லாம் படாமல் கூறுக என்பதாம். அவ்வழுக்களின் பெயரும் முறையும் தொகையும் ஓர் இடத்தும் கூறிற்றிலரே ஆயினும், 'உரையிற் கோடல்' என்பதனான் இச்சூத்திரத்து உரையுள் கொள்ளப்படும்.

அவையாவன : திணைவழூஉ, பால் வழூஉ, இட வழூஉ, கால வழூஉ, மரபு வழூஉ, செப்பு வழூஉ, வினா வழூஉ என இவை.

இவை எல்லாம் மரபுவழு என ஒன்றே ஆகற்பால எனின், அவ்வாறு ஒன்றாய் அடங்குமே எனினும், அம்மரபினைப் பகுத்துத் திணைபற்றிய மரபினைத் திணை எனவும், பால் பற்றிய மரபினைப் பால் எனவும், இடம் பற்றிய மரபினை இடம் என்றும், காலம் பற்றிய மரபினை காலம் என்றும், செப்புப் பற்றிய மரபினைச் செப்பு எனவும், வினாபற்றிய மரபினை வினா எனவும் பகுத்து, இவ்வாறு ஒன்றனையும் பற்றாது வருவதனை மரபு என ஒன்று ஆக்கி இலக்கணமும் வழுவும் கூறினார் என்பது.

அவற்றுள் திணைவழூஉ : உயர்திணைப்பால் மூன்றும் அஃறிணைப்பால் இரண்டனொடு மயங்கி உயர் திணை வழூஉ மூவிரண்டு ஆறாம். இனி அஃறிணைப்பால் இரண்டும் உயர்திணைப் பால் மூன்றனொடு மயங்கி அஃறிணைத் திணைவழூஉ இருமூன்று ஆறாம். இவை பெயர் வினை என்னும் இரண்டனோடு உறழ இருபத்து நான்காம்.

எ-டு : அவன் வந்தது, அவன் வந்தன என்றாற் போல்வன பெயர் பற்றிய உயர்திணைத் திணைவழூஉ. அது வந்தான், அது வந்தாள், அது வந்தார் என்றாற் போல்வன பெயர் பற்றிய அஃறிணைத் திணைவழூஉ. இனி, வந்தான் அது, வந்தான் அவை என்றாற் போல்வன வினைபற்றிய உயர்திணைத்திணைவழூஉ. உண்டது அவன், உண்டது அவள், உண்டது அவர் என்றாற்போல்வன வினைபற்றிய அஃறிணைத் திணைவழூஉ.

இனிப் பெயரொடு பெயர் பற்றிய திணைவழூஉ, வினையொடு வினைபற்றிய திணை வழூஉ என விகற்பிக்கப் பலவுமாம்.

எ-டு: அவன் அது, அவன் அவை என்றாற் போல்வன பெயரொடு பெயர் பற்றிய திணைவழூஉ. உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன் என ஒருவன்மேல் பலவினை கூறுகின்றுழி உண்டான் தின்றது, ஓடினான் பாடினது - என்றாற் போல்வன வினையொடு வினைபற்றிய திணைவழூஉ.

இனிப்பால் வழூஉ : உயர்திணைப் பால் மூன்றும் ஒன்று இரண்டனொடு மயங்கி மூவிரண்டு ஆறாம். அஃறிணைப்பா இரண்டும் ஒன்றனோடு ஒன்று மயங்கி ஓர் இரண்டு ஆயின. ஆகப் பால் வழூஉ எட்டுவகைப்படும். அவை பெயர் வினை என்னும் இரண்டனோடு உறழப் பதினாறாம்.

எ-டு : அவன் உண்டாள், அவன் உண்டார் என்பன உயர்திணைப்பெயர் பற்றிய பால்வழூஉ. அது வந்தன, அவை வந்தது என்பன அஃறிணைப் பெயர் பற்றிய பால்வழூஉ. உண்டான் அவள், உண்டான் அவர் என்பன உயர்திணை வினைபற்றிய பால்வழூஉ. வந்தது அவை, வந்தன அது என்பன அஃறிணை வினைபற்றிய பால்வழூஉ.

இனிப் பெயரொடு பெயரும், வினையொடு வினையும் பற்றிய வழூ ஆவனவும் உள.

எ-டு : அவன் யாவள், அது யாவை என இவை பெயரொடு பெயர் பற்றிய பால்வழூஉ. உண்டான் தின்றாள் ஓடினான் பாடினாள் சாத்தன் எனவும், உண்டது தின்றன வந்தது கிடந்தன ஓர் எருது எனவும் இவை வினையொடு வினை பற்றிய பால்வழூஉ.

இனி, இட வழூஉ தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றும் ஒன்று இரண்டனொடு மயங்கி மூவிரண்டு ஆறாம்.

எ-டு : யான் உண்டாய், யான் உண்டான் என்பன. பெயர் வினைகளைப் பற்றிவரும் விகற்பம் இவற்றிற்கும் ஒக்கும் என உணர்க.

கால வழூஉ, இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்ற மூன்றும் ஒன்று இரண்டனொடு மயங்கி மூவிரண்டு ஆறாம்.

எ-டு : செத்தானைச் சாகின்றான் எனவும், சாவான் எனவும் கூறினாற்போல வருவன. இவையிற்றிற்கும் பெயர் வினைகளைப் பற்றி வரும் விகற்பம் கொள்க.

மரபுவழூஉ ஒரு பொருட்கு உரிய மரபினை ஒரு பொருட்கு உரித்தாகச் சொல்லுதல்:

எ-டு. : யானை மேய்ப்பானை இடையன் என்றும், ஆடு மேய்ப்பானைப் பாகன் என்றும், யானையுள் பெண்ணை ஆ என்றும், ஆவினுள் பெண்ணைப் பிடி என்றும் கூறினாற்போல்வன.

செப்புவழுவிற்கும் வினாவழுவிற்கும் உதாரணம் மேல் வருகின்ற 'செப்பும் வினாவும்' என்னும் சூத்திரத்தால் கொள்ளப்படும்.

எழுவகை வழுவும் இச்சூத்திரத்துள் 'மயங்கல் கூடா' என்றதனான் பெறுதும் எனின், மேல் 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' எனச் செப்பு வழுவும் வினாவழுவும் கூறல் அமையாது எனின், இதனுள் அடங்கினவற்றையே, உலகத்துச் சொல் எல்லாம் உயர்திணைச் சொல், அஃறிணைச்சொல் என வரையறை உற்றாற்போல், வினா உரையும், செப்பு உரையும் என இரண்டாக வரையறைப் படுத்து ஒரு நிலைமை கண்டு அதனை உணர்த்துதற் பொருட்டு மீட்டும் விளங்கக் கூறினார் என்று சொல்லுப. எழுவகை வழுவிற்கும் இஃதொரு பொதுவிதி கூறியது எனவும், சிறப்புவிதி வேறு வேறு கூறிற்று எனவும் உரைக்கப்படும்.

செப்பு வினா ஒழிந்தவற்றிற்குச் சிறப்பு விதி யாதோ எனின், வினை இயலுள் கடைக்கண் காலவழுவிற்கு விதி பெறுதும். மரபு வழுவிற்கு விதி பொருள் அதிகாரத்து மரபு இயல் என்னும் ஓத்தினுள் கண்டுகொள்ளப்பெறுதும். ஒழிந்த திணைபால் இடங்கட்கு விதி 'னஃகான் ஒற்று' முதலிய சூத்திரங்களால் கூறிற்று என உணர்க. இவ்வாறு நூல்நயம் ஆதல் இச்சூத்திரத்து உரையினுள் கண்டுகொள்க.

இவ்வதிகாரத்துக் கூறப்படும் விதி மாணாக்கன் ஒரு பொருளினைக் கூறும் திறன் அறியாது இடர்ப்படுதல் நோக்கி, இன்னபொருளை இன்னவாறு கூறுக என்று அதன் இலக்கணம் கூறுதலும், அதனை அவ்வாறு ஒழியவும் கூறுதலும் ஆம் என்று (கருதினும்) கருதற்க என்று அதனை வழுவற்க என்று காத்தலும், அவ்வாறு வழுப்படக் கூறிய

வழக்கினுள் சிலவற்றிற்கு அவற்றகத்து அவ்வாறு கூறுதற்கு ஒரு பொருட்காரணம் கண்டாதல் - அஃது அன்றிப் பலரும் பயில வழங்குதல் கண்டாதல் - அமைதி கூறுதலும் என மூவகை. அவற்றுள் இச்சூத்திரம் வழுவற்க என்னும் விதி கூறிற்று என உணர்க. *(11)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**11. 'வினையின் . . . மரபினவே.'-**

எழுவகை வழுக்களுடைய பெயரும் முறையும் தொகையும் தனிப்பட்ட முறையில் தொல்காப்பிய நூற்பா எதன்கண்ணும் கூறப்பட்டில. உரையாசிரியர்களாலேயே கூறப்பட்டன என்பது. திணை வழு 12, பால்வழு 8, இடவழு 6, காலவழு 6 என்பன விளக்கப்பட்டுள்ளன.

செப்பும் வினாவும் பின்னர்ச் சிறப்பாக எடுத்து விளக்கப்பட்டன. ஏனையவும் உரிய இடங்களில் விளக்கம் பெறுகின்றன.

ஒரு பொருளினைக் கூறும் வழாநிலையை உணர்த்தி அதனை வழுவற்க என்று கூறலும், சிலவற்றை வழக்கினுள் பயிலுதல் நோக்கி வழுவினும் அமைக என்று கூறலும் ஆகியவற்றுள் இந்நூற்பா வழுவற்க என்று விதிக்கின்றது.

## ஒருவர் உரை

*11. வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்*
*பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்*
*மயங்கல் கூடா; தம்மர பினவே.*

எ-து : வினையினான் பால் அறியப்படும் பொருளும், பெயரினான் பால் அறியப்படும் பொருளும் மயங்குதலைப் பொருந்தா. அவை தத்தம் இலக்கணத்தவாயே வரும்.

எ-டு : உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை என இவை வினைநிற்ப, பெயர்மேல் தத்ததம் மரபினான் வந்தன.

அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அஃது உண்டது, அவை உண்டன என இவை பெயர் நிற்ப, வினைமேல் தத்தம் மரபினான் வந்தன.

இனி, 'மயங்கல் கூடா' எனவே, அவற்று மயக்கம் உண்டு என்பது சொல்லப்பட்டதாம். அம்மயக்கம் எழுவகைப்படும்.

அவையாவன : . . . . . . . திணைமயங்கி வந்துழி வழு என்று கொள்க. *(11)*

**சாத்திரியார் உரை**

*11.* 'வினையின் . . . மரபினவே.'

உரையாசிரியர், நச்சினார்க்கினியர் இருவரின் கொள்கைப்படி இச்சூத்திரத்தின் பொருள், வினைச் சொல்லில் பால் அறிவிக்கும் சொல்லான் உணர்த்தப்படும் பொருளும், பெயர்ச்சொல்லில் பாலை அறிவிக்கும் சொல்லான் உணர்த்தப்படும் பொருளும் மாறுபடக்கூடா என்பதே. அஃதாவது வினையின் பால்அறி சொல்லான் ஆண்பொருளோ, பெண் பொருளோ, பலர் பொருளோ, ஒன்றன் பொருளோ, பலவின் பொருளோ உணர்த்தப் பட்டால், பெயரின் பாலறி சொல்லானும் அப்பொருளே உணர்த்தப்படவேண்டும் என்பது. இவ்வாறு உரைப்பின் 'தம்மரபினவே' என்பது பொருந்தாது. ஆண் முதலிய பொருள் மற்றைப் பொருளோடு ஒருபோதும் மயங்கா. எப்போதாவது மயங்குதற்கு இடம் இருப்பின் அன்றோ அவை 'தம்மரபின' என்று கூறவேண்டும் ? அன்றியும். கிளவி என்பதற்குச் சொல் என்ற நேர்பொருளே அமைந் திருக்க, அதனை விடுத்து ஆகுபெயர்ப்பொருளை ஏன் கொள்ளவேண்டும் ?

சே. - ஈண்டுப் பெயர் என்றது பொருளை.

இச்சூத்திரத்தில் 'பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்' என்னுமிடத்துப் பெயர் என்பதற்குப் பொருள் 'பெயரைக் குறிக்கும் பெயர்ச்சொல்' அன்று; பொருளைக் குறிக்கும் பெயர்ச்சொல்லே என்பது. 'அவன் சொல்லப் பட்டது' என்னுமிடத்து, அவன் என்பதற்கு அவன் என்னும் சொல் பொருளாயின், அவன் என்னும் சொல்லிலுள்ள 'ன்' ஆணைக் குறிப்பினும், சொல்லப்பட்டது என்ற சொல்லில் உள்ள 'து' ஒன்றனைக் குறிப்பினும் அச்சொற்றொடர் வழுவாகாது என்க.

ந - 'சொல் என்றார் அதனான் உணரும் பொருளை' என்றது, சூத்திரத்தில் சொல் என்னும் பொருளை உடைய 'கிளவி' என்பதை மனத்துக்கொண்டு.

## பாலசுந்தரனார் உரை

**11. 'வினையின் . . . மரபினவே.'**

வினை என்றது, தொழில் உணர்த்தும் சொற்களை. அவற்றின் இடமாகத் தோன்றும் பால் அறிகிளவிகளாவன வினைமுற்றுக்கள். பெயர் என்றது, ஏனைப் பொருட் பெயர்களின் முதனிலைச் சொற்களை. அவற்றின் இடமாகத் தோன்றும் பாலறி கிளவிகளாவன பெயர்ச்சொற்கள்.

பாலறிகிளவி என்னாது 'தோன்றும் பாலறிகிளவி' என்றமையான், ஈண்டுக் கூறிய பதினோர் ஈறுகளே யன்றி, வினையியலுள்ளும் பெயரியலுள்ளும் பாலறிதற்கு உரியவாகக் கூறப்படும் இடைச்சொற்கள் எல்லாம் கொள்க. அவை தன்மை முன்னிலை வினைகட்கு உரியவாக வினையியலுள் கூறும் பாலறி கிளவி ஈறுகளும், னஃகான் ஒற்று முதலிய பதினொன்றனுள் பெயர்ப்பால் அறிவித்தற்

குரிய ன-ள-ர-மார்-து-அ என்பவையும் 'அவன் இவன் உவன்' (சொ. 163) என்பது முதலாகப் பெயரியலுள் கூறப்படும் ஈறுகளுமாம்.

இனி, விலங்கும் புள்ளும் முதலாக வரும் பெயர்கள் பால் அறிவிக்கும் ஈறுகள் இன்றி வருதலின், அவற்றை உணருமாறு யாங்கனம் எனின், அவை எல்லாம் அஃறிணை இயற்பெயர் ஆகலின், வினையானும், கள் என்னும் ஈற்றானும் வழக்கு நோக்கு உணரப்படும்.

'தம்மரபினவே' என்று மிகுத்துக் கூறியது, பாலறி சொற்கள் தம்முள் தொடருங்கால் எடுத்து ஓதப்பட்ட விதிகளுக்குப் புறனாக மயங்கி வருவன எல்லாம் வழு என்று களையப்படா, சான்றோர் வழக்குப் பற்றி வருவனவும், விதிகளுக்கு அடங்காதனவாய் வருவனவும், சிறுபான்மை மொழிவழக்கிற்கு உரிய இயற்கையாகலின், அங்ஙனம் வருவனவும் மரபினவாம் என்று அறிவித்தற்கு என்க. அங்ஙனம் மரபு பற்றி வருவனவற்றைத் தொகுத்து, அவை ஆக்கம் பெறுமாறும், அவற்றை ஆக்கிக்கொள்ளுமாறும் இவ்வியலுள் இனிவரும் சூத்திரங்களான் கூறுவர்.

இம்மரபுகளை ஆசிரியர் மரபியலின்கண் குழவிப் பெயர் முதலாக எடுத்து ஓதுகின்றமையானும், 'பெயரினும்... பட்டன' (சொ. 50) என்னும் தொடக்கத்தனவாய் இவ்வியலுள் பின்னர் ஓதுதலானும் எல்லா மரபும் பற்றிக் கூறலே இவ்வியலின் நோக்கமாதலானும், உரையாசிரியன்மார் கூறுவன குன்றக் கூறலாகும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

11. 'தம்மரபினவே' என்பதன் கருத்து, பால் அறிசொற்கள் தம்முள் தொடருங்கால், எடுத்து ஓதப்பட்ட விதிகளுக்குப் புறனாக மயங்கி வருவன எல்லாம் இலக்கணவழு என்று களையப்படா; சான்றோர் வழக்குப்

பற்றி வருவனவும், விதிகளுக்கு அடங்காதனவாய் வருவனவும் சிறுபான்மை மொழி வழக்கிற்கு உரிய இயற்கை ஆதலின், அங்ஙனம் வருதலும் மரபினவாகும் என்பதனை அறிவித்தலாம்.

## இளம்பூரணர் உரை

### பேடிக்கு வினைமுடிபு

*12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி*
*ஆண்மை யறிசொற்கு ஆகுஇடன் இன்றே.*

எ . . ன், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: ஆண்மையின் திரிந்து பெண்மை நோக்கி நின்ற பெயர்ப் பொருள், ஆண்மகனை அறிவிக்கும் ஈற்றெழுத்தினான் சொலற்பாட்டிற்கு ஏலாது என்றவாறு. ஒழிந்த இரண்டு பெயர்க்கும் ஒக்கும் என்பதாம்.

'ஆகிடனின்றே' என்பதனான் சிறுபான்மை பேடி வந்தான் என ஆண்பாற்கும் ஏற்கும். *(12)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**12. 'ஆண்மை திரிந்த' -**

ஒழிந்த இரண்டு பெயர்க்கும் ஒக்கும் - பெண்பாற் பெயரானும், பலர்பால் பெயரானும் பேடி வந்தாள், பேடியர் வந்தார் என்று குறிப்பிடலாம் என்பது.

## சேனாவரையர் உரை

### 'பேடி' என்னும் சொல் முடிபு

*12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி*
*ஆண்மை அறிசொற்கு ஆகிடன் இன்றே.*

*(இ-ள்) 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' (சொல். 4) என்று மேற்கூறப்பட்ட ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி ஆடூஉ அறிசொல்லொடு புணர்தற்குப் பொருந்தும் இடனுடைத்தன்று எ-று.*

*'ஆண்மை யறிசொற்கு ஆகிடன் இன்று' என்ற விலக்கு, ஆண்மையறி சொல்லொடு புணர்தலெய்திநின்ற பேடிக்கல்லது ஏலாமையின், அலிமேற்செல்லாதென்க.*

*இச்சூத்திரத்தைப் 'பெண்மை சுட்டிய' (4) என்னுஞ் சூத்திரத்தின் பின் வையாது ஈண்டு வைத்தார், இது வழுவற்க என்கின்ற தாகலான்.* *(12)*

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**12. ஆண்மை . . . இன்று-**

*பேடி உயர்திணைச் சொல் கொண்டு முடியும் என்று 4ஆம் நூற்பாவில் கூறப்பட்டது. அங்ஙனம் கொண்டு முடியும் சொல் உயர்திணைப் பெண்பாற் சொல்லே என்று இந்நூற்பாவினான் நிறுவப்பட்டது. அலி ஆண்பால் சொற் கொண்டு முடியும்; அல்லது அஃறிணை முடிபுபெறும் (சொ.56).*

**நச்சினார்க்கினியர் உரை**

**ஆண்மை திரிந்த பெயர் முடிபு**

***12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி***
***ஆண்மை அறிசொற்கு ஆகுஇடன் இன்றே.***

இதுவும் அது.

இ-ள்: ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும் (சொ. 4) என மேற்கூறிய ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்; ஆடூஉ அறி

சொற்கு ஆகு இடன் இன்று - ஆடூஉ அறிசொல்லொடு பொருந்தும் இடன் உடைத்து அன்று என்றவாறு.

இது வழுவற்க என்கின்றதாகலின், ஈண்டுப் போதந்து வைத்தார். (12)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**12. ஆண்மை திரிந்த-**

*அல்வழியை 'வேற்றுமை அல்வழி' எ. 158 ந. எனவும், விரவுப்பெயரை 'அஃறிணை விரவுப்பெயர்' எ. 185 எனவும் அவற்றின் உண்மைத்தன்மைத்தோற்றம் புலப்பட விரித்து உரைக்கும் ஆசிரியர், பேடி என்பதன் உண்மைத் தன்மைத் தோற்றம் புலப்பட, 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி ' (சொ. 4) எனவும், 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' (சொ. 12) எனவும் 'தன்மை திரிபெயர்' (சொ. 57) எனவும் விளக்கிக் கூறியுள்ளார் என்பதனை அறியலாம்.*

## தெய்வச்சிலையார் உரை

### பேடிக்கு வினைமுடிபு

**12. *ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி***
***ஆண்மை அறிசொற்கு ஆகுஇடன் இன்றே.***

ஐயம் அறுத்தலை நுதலிற்று.

இ-ள்: மேல் 'உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும்' (சூ. 4) என்று ஓதப்பட்ட பேடி என்னும் பெயர்க்கண் நிற்கும் சொல் ஆண்மை அறிசொற்கு ஆகும் இடன் இலது எ-று. எனவே பெண்மை அறிசொற்கு ஆகும் என்றவாறு ஆம்.

உ-ம் : 'பெண் அவாய் ஆண்இழந்த பேடி அணி யாளோ- கண்அவாத் தக்க கலம்' (நாலடி. 251) என வரும்.

'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி பெண்மை அறிசொற்கு ஆகும்' என்னாது, 'ஆண்மை அறிசொற்கு ஆகும் இடம் இன்று' என எதிர்மறை வாய்பாட்டான் கூறினமையான், சிறுபான்மை ஆடூஉ அறிசொல்லான் வருவன உளவேல் கொள்க.

இச்சூத்திரம் 'பெண்மை சுட்டிய' என்னும் சூத்திரத்தின் (சூ. 4) பின் வையாது ஈண்டுக் கூறியது என்னை எனின், பெயரும் வினையும் மயங்காமல் கூறுக என்றார் ஆகலின், பேடி என்பது இவ்வாறு சொல்லத்தகும் என இறந்தது காத்து ஈண்டு ஓதப்பட்டது. *12*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**12. 'ஆண்மை திரிந்த' -**

பேடி என்னும் சொல் பெண்மை வினையொடு முடியும் என்கிறார்.

4ஆம் நூற்பாவில் ஆண்பால் அறிவினையான் முடியும் என்று கூறியதற்கு ஏற்பச் சிறுபான்மை பேடி ஆண்மை வினையானும் முடியலாம் என்கிறார்.

***பெண் அவாய்*** - ஆண் தன்மையை இழந்ததனான் பெண் தன்மையை அவாவி நிற்கும் பேடி தன் பெண் தன்மையை உறுதிப்படுத்தக் கண்ணாற்கண்ட அளவில் விரும்பத்தக்க அணிகலன்களை அணியாளோ?

பெயரும் வினையும் மயங்காமல் கூறவேண்டும் என 11ஆம் நூற்பாவில் கூறியதற்கு ஏற்பப் பேடி என்ற சொல் கொண்டுமுடியும் வினையை உறுதியாகக் கூறவேண்டுதலின் ஈண்டு பேடிக்கு முடிபாகிய வினை இது என்று உறுதி செய்கிறார்.

இறந்தது விலக்கல்-முற்கூறிய ஒரு சூத்திரப் பொருண்மையைப் பின் ஒரு சூத்திரத்தான் விலக்குதல். 4ஆம் நூற்பாவில் பேடி என்ற சொல் உயர்திணையின் பால் அறி சொற்களைக் கொண்டு முடியும் என்றார். உயர் திணை முப்பாலையும் அறிவிக்கும் வினைச்சொற்களைக் கொண்டு பேடி என்ற சொல் முடியும் என்று பெறப் பட்டதனை விலக்கிப் பேடி என்னும் சொல் பெண்மை அறிசொல்லையே கொண்டு முடியும் என்று இந்த நூற்பாவான் உறுதி செய்தவாறு.

### கல்லாடனார் உரை

### பேடிக்கு முடிபாகும் வினைமுற்று

*12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி*
*ஆண்மை யறிசொற்கு ஆகுஇடன் இன்றே.*

என்-எனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி உணர்த்துதல் நுதலிற்று. மேல் 'பெண்மை சுட்டிய' (கிளவி. 4) என்றதனுள் பேடியை முப்பாலானும் சொல்லுக என்னும் விதியுள் ஒரு கூற்றை விலக்கியது என உணர்க.

இ-ள்: உயர்திணை இடத்துப் பெண்மையைக் கருதவேண்டி ஆண்மைத் தன்மை நீங்கிய பேடி என்னும் பெயரால் சொல்லப்படும் பொருண்மை, ஆண்மகனை அறியும் சொல்லால் சொல்லுதற்கு ஆம்இடன் இல்லை என்றவாறு. எனவே பெண்பாலானும், பன்மைப்பாலானும் சொல்லுக எ-று.

எ-டு. : பேடி வந்தாள், பேடியர் வந்தார் என இவை.

'இடன்' என்ற மிகுதியால் பேடி வந்தான் என்பதும் சிறுபான்மை அமையும் என்பது. அவ்வாறு அமையும் என விலக்கிப் பெற்றது என்னை எனின், பெரும்பான்மை, சிறுபான்மை உணர்த்துதல் என உணர்க.

இதனைப் பெண்மை சுட்டிய என்றதன்பின் வையாது, இத்துணையும் போதந்து மேற்கூறப்படுகின்ற வழு அமைதி களொடு சொல்லிவைத்த முறையன்றிக் கூற்றினான், பெண்ணும் ஆணும் அல்லதனை அவ்வப்பால் சொல்லால் சொல்லுதலும் வழுஅமைதி என்பது பெறப்பட்டது.

வழுஅமைதிகள்தாம் இலக்கணம் உள்வழிக் கூறும் வழுஅமைதியும், இலக்கணம் இல்வழிக் கூறும் வழு அமைதியும் என இருவகைப்படும். அவற்றுள் இஃது இலக்கணம் இல்வழிக் கூறிய வழுஅமைதி என உணர்க.

இது பால்பற்றிப் பிறந்ததொரு மரபு வழுஅமைதி என உணர்க. *(12)*

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**12. 'ஆண்மை . . . இன்று.'-**

பேடி சிறுபான்மை ஆண்மை வினையையும் கொண்டு முடியலாம் என்கிறார்.

வழுவமைதி - இலக்கணம் உள்வழி, இலக்கணம் இல்வழி என்ற இரண்டனுள், இஃது இலக்கணம் இல் வழிக்கூறும் வழுவமைதி என்கிறார்.

**ஒருவர் உரை**

*12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி*
*ஆண்மை யறிசொற்கு ஆகுஇடன் இன்றே.*

எ-து : ஆண்மை திரிந்து பெண்மை நோக்கி நின்ற பெயர்ப் பொருள் ஆண்மை அறிவிக்கும் ஈற்று எழுத்தினான் சொல்லுதற்கு ஏலாதாம்; எனவே, பெண்பாலானும், பன்மைப்பாலானும் சொல்லுக என்பதாம்.

எ-டு. : பேடி வந்தாள், பேடியர் வந்தார் என வரும்.

'ஆகுஇடன் இன்றே' என்றமையான், சிறுபான்மை பேடி வந்தான் என ஆண்பாலும் கொள்க. *(12)*

## பாலசுந்தரனார் உரை

**12. 'ஆண்மை . . . இன்று.'**

வினையொடு முடியுங்கால் என்பது அவாய் நிலையான் வந்தது. இச்சூத்திரத்தைப் ''பெண்மை சுட்டிய (சொ. 4) என்பதன்பின் வையாமல் ஈண்டு வைத்தார், வழுவற்க என்பதனான்'' என்பார் சேனாவரையர். அற்றன்று; அச்சூத்திரம் 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவி உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்' எனப் பாலுள் அடங்குமாறு கூறிற்று. இச்சூத்திரம் பால் அறிகிளவியாய்த் தொடர்மொழிக்கண் மயக்கமின்றி ஆக்கம் பெறுமாறு கூறிற்று என்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

12. பேடி என்ற சொல் தொடர்மொழிக்கண் மயக்கம் இன்றி ஆக்கம் பெறுமாறு இந்நூற்பாவான் கூறப்படுகிறது.

## இளம்பூரணர் உரை

### விடையும் வினாவும்

***13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.***

எ . . . ன், செப்பு வழுவும் வினா வழுவும் காத்தல் நுதலிற்று.

இ-ள்: 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' என்பது செப்பினையும் வினாவினையும் இழுக்குதலைப் போற்றுக என்றவாறு.

அவை வழுவாது வருமாறு: நும் நாடு யாது ? என்றால், தமிழ்நாடு என்றல்.

இனிச் செப்புத்தான் ஆறுவகைப்படும். வினா எதிர் வினாதலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும் என. அவற்றுள் மறுத் தலும் உடன்படலும் என்பன ஈண்டுச் செப்பு இலக்கண மாவன. ஒழிந்தனவற்றை முன் அமைத்துக் கூறுக என்றவாறு.

வினா ஐந்து வகைப்படும், அறியான் வினாதல், அறிவு ஒப்புக் காண்டல், ஐயம் அறுத்தல், அவன் அறிவு தான் கோடல், மெய் அவற்குக் காட்டல் என.

அவை வழுவாமற் சொல்லுக எனவே, வழுவுதலும் உண்டென்பதாம். அவை வருமாறு : கருவூர்க்கு வழி எது என்றாற்குப் பருநூல் பன்னிரு தொடி யென்பது செப்பு வழூஉ. ஒரு விரற்காட்டி நெடிதோ குறிதோ என்பது வினாவழூஉ.

இதுவும் ஒரு சொல் தொகை உணர்த்தியவாறு. (13)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**13. 'செப்பும் வினாவும்' -**

இளம்பூரணர் 'வழாஅல்' என்பதனைத் தொழிற் பெயராகக் கொண்டு 'இழுக்குதல்' என்று பொருள் காண்பார். மற்றவர் 'வழுவாமல்' என்று வினையெச்சமாகக் கொள்வர்.

மறுத்தலும் உடன்படுதலும் செம்மையான விடை. வினா எதிர்வினாதல் முதலியன வழு அமைத்துக்கொள்ளத் தக்கன.

பருநூல் பன்னிருதொடி - பருமனாக உள்ள நூலின் எடை பன்னிரண்டு தொடியாம். தொடி - ஒருவகை எடை. வினாவின் ஐவகைக்குக் கல்லாடரும், ஒருவரும் நூற்பா ஒன்றனைக் காட்டுகின்றனர்.

'அறியான் வினாதல், அறிவொப்புக் காண்டல்,
ஐயம் அறுத்தல், அவன்அறிவு தான்கோடல்,
மெய்அவற்குக் காட்டலோடு ஐவகை வினாவே.'
*(கல்லாடர் சொ. 13)*

'அறியான் வினாதல் அறிவொப்புக் காண்டலே
ஐயம் அறுத்தல் அவனறிவு தான்காண்டல்
மெய்யவற்குக் காட்டலோ டைந்து'

என்பது பெயர் தெரியா ஒருவர் உரை. (சொ-13)

ஒரு சொற்றொகை - செப்பு, வினா என்ற ஒவ்வொரு சொல்லைப் பற்றியும் தொகுதியான செய்திகள். அஃதாவது செப்பின் அறுவகையும், வினாவின் ஐவகையும்.

## சேனாவரையர் உரை

### வினாவும் விடையும் வழுவலாகாமை

*13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.*

*(இ-ள்)* : செப்பினையும் வினாவினையும் வழுவாமல் போற்றுக எ-று.

செப்பு என்பது வினாய பொருளை அறிவுறுப்பது. அஃது இரண்டு வகைப்படும், செவ்வன் இறையும், இறைபயப்பதும் என. உயிர் எத்தன்மைத்து என்று வினாய வழி, உணர்தல் தன்மைத்து என்றல் செவ்வன் இறையாம். உண்டியோ என்று வினாயவழி வயிறு குத்திற்று என்றல், உண்ணேன் என்பது பயந்தமையின் இறை பயப்பதாம்.

கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா எனப் 'பருநூல் பன்னிரு தொடி' என்பது செப்புவழுவாம். சொல் எப்பொருள் உணர்த்தும் என்று வினாயவழிச் 'சொல் ஒரு பொருளும் உணர்த்தாது' என்பதும் அது, வினாய பொருளை வினாவால் உணர்ந்து வினாய பொருளை அன்றித் தான் குறித்த பொருளைச் செப்பால் உணர்த்துகின்றார் ஆகலின் என்பது.

வினா இன்றியும் செப்பு நிகழ்தலின், வினாய பொருளை எனல் வேண்டா எனின், வினாய பொருளை என்னாது அறிவுறுப்பது செப்பு எனின், அறியலுறவினை அறிவுறுத்தலின் வினாவும் செப்பாய் அடங்குதலானும், செப்பு என்பது உத்தரம் என்பதனோடு ஒரு பொருட்கிளவி ஆகலானும், வினாய பொருளை அறிவுறுத்தலே இலக்கணமாம் என்பது. குமரியாடிப் போந்தேன், சோறு தம்மின் என வினா இன்றி நிகழ்ந்த சொல் யாண்டு அடங்கும்

எனின், அறியலுறுதலை உணர்த்தாது ஒன்றனை அறிவுறுத்து நிற்றலின் செப்பின்பாற்படும்.

வினா எதிர் வினாதல், ஏவல், மறுத்தல், உற்றது உரைத்தல், உறுவது கூறல், உடம்படுதல் எனச் செப்பு அறுவகைப்படும் என்று உரையாசிரியர் கூறினாரால்எனின்: உயிர் எத்தன்மைத்து என்றவழி, உணர்தல் தன்மைத்து என்றல் முதலாயின அவற்றுள் அடங்காமையானும், மறுத்தலும் உடம்படுதலும் வினாவப்பட்டார் கண்ண அன்றி ஏவப் பட்டார்கண்ண ஆகலானும், அறுவகைப்படும் என்று பிறர் மதம் மேற்கொண்டு கூறினார் என்பது.

வினா ஆவது அறியலுறவு வெளிப்படுப்பது. அது மூவகைப்படும், அறியான் வினாவும் ஐய வினாவும் அறிபொருள் வினாவும் என. அறியான் வினா, உயிர் எத்தன்மைத்து என்பது. ஒருபுடையானும் அறியப்படாத பொருள் வினாவப்படாமையின் பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்புவகையான் அறியப்படாமை நோக்கி அறியான் வினா ஆயிற்று.

ஐய வினா, குற்றியோ மகனோ தோன்றுகின்ற உரு என்பது.

அறிபொருள் வினா, அறியப்பட்ட பொருளையே ஒருபயன் நோக்கி அவ்வாய்பாட்டின் ஒன்றான் வினவுவது. பயன், வேறு அறிதலும் அறிவுறுத்தலும் முதலாயின. கறக்கின்ற எருமை பாலோ சினையோ என்பது வினா வழுவாம். ஒரு பொருள் காட்டி, இது நெடிதோ குறிதோ என்பதும் அது.

உரையாசிரியர் அறிபொருள் வினாவை, அறிவு ஒப்புக்காண்டலும் அவன் அறிவு தான் காண்டலும் மெய் அவற்குக் காட்டலும் என விரித்து ஏனைய கூட்டி ஐந்து என்றார்.

இருவகைச் செப்பினும் மூவகை வினாவினும், செவ்வன் இறையும், அறியான் வினாவும், ஐய வினாவும் வழாநிலை ஆகலின், வழாஅல் ஓம்பல் என்பதனான் கொள்ளப்படும். ஏனைய வழூவமைப்புழிக் காணப்படும்.

வினா வழீஇயின இடத்து அமையாது என்று உரையாசிரியர் கூறினாரால் எனில் :- அற்றன்று : 'யாதென வரூஉம் வினாவின் கிளவி' *(சொல்-32)* எனவும், 'வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்' *(சொல்-244)* எனவும் முன்னர் வழூ அமைப்பார் ஆகலான், அது போலி உரை என்க. *(13)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**13. செப்பும் . . . ஓம்பல்**

செப்பு - வினவிய பொருளைத் தெரிவிப்பது.
வினா - ஒரு பொருளைப் பற்றித் தான் அறியவிரும்புவதைத் தெரிவிப்பது.

மறுத்தலும் உடன்படுதலும் ஏவலுக்கு விடையாக அமையுமே அன்றி வினாவுக்கு விடையாக அமையாது என்ற செய்தியைச் சாத்திரியார் குறிப்புரையில் காண்க.

அறியான் வினாவாவது - ஒரு பொருளைப் பற்றிப் பொதுவகையான் அறிந்து சிறப்பு வகையான் அறிதற்காக வினவுதல்.

கறக்கின்ற எருமை பாலோ சினையோ என்பது வினாவழூ என்பர் சேனாவரையர். சினைப்பட்ட எருமையும் சினைப்பட்டபின் பல திங்கள் பால் வழங்குவதனைக் கண்கூடாகக் காண்கிறோம். ஆதலின் இக்காலத்து இவ்வினா வினாவழூ அன்று.

வினாவழுவைச் சேனாவரையர் ‘யாதென வரூஉம்’ (சொ. 32) ‘வன்புற வரூஉம்’ (சொ. 244) என்ற நூற்பாக்களான் ஆசிரியர் வழுவமைப்பதாகக் குறிப்பிடுகிறார்.

செவ்வன் இறை - நேர்விடை

இறை பயப்பது - நேர்விடை அன்று ஆயினும், வினாய செய்திக்கு ஒருவகையில் விடையாக அமைவது.

வினாஇன்றியும் நிகழும் செப்பு தன் மனத்திலுள்ளதொரு செய்தியை அறிவுறுத்துதலின் செப்பினுள் அடக்கிக் கொள்ளப்படும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**செப்பும் வினாவும் வழுவாமை**

***13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.***

இதுவும் அது.

இ-ள்: செப்பும் வினாவும் - வினாய பொருளை அறிவுறுப்பதனையும், அறியலுறுவு வெளிப்படுவதனையும்; வழாஅல் ஓம்பல் - வழுவாமல் போற்றுக என்றவாறு.

செவ்வன் இறையும் இறைபயப்பதுவும் எனச் செப்பு இருவகைத்து. அவற்றுள், இறைபயப்பனதாம், வினா எதிர் வினாவலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும், சொல்தொகுத்து இறுத்தலும், சொல்லாது இறுத்தலும் என எண்வகைய. ‘உயிர் எத்தன்மைத்து?’ என்று வினயவழி, ‘உணர்தல் தன்மைத்து’ என்றல் செவ்வன் இறையாம். ‘உண்டியோ?’ என்று வினாயவழி, ‘வயிறுகுத்திற்று’ என்றல் உற்றது உரைத்தலாய், ‘உண்ணேன்’ என்பது பயத்தலின் இறைபயப்பதாம். ‘கடம்பூர்க்கு வழி யாதோ?’ எனின் ‘இடம்பூணி என் ஆவின் கன்று’ என்றல் செப்புவழுவாம்.

அறியான் வினாவும், ஐய வினாவும், அறிபொருள் வினாவும் என வினா மூவகைத்து. 'உயிர் எத்தன்மைத்து?' என்றல் அறியான் வினா. ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் வினாவப்படாமையின், பொதுவகையான் உணர்ந்து, சிறப்பு வகையான் அறியாமையின் வினாவினான் என்று உணர்க. 'குற்றியோ மகனோ தோன்றுகின்ற உரு?' என்பது ஐயவினா. அறியப்பட்ட பொருளை வேறு அறிதலும், அறிவுறுத்தலும் முதலிய பயன்நோக்கி வினாதல் அறிபொருள் வினா. இவ்வறி பொருள் வினாவின்கண்ணே அறிவு ஒப்புக்காண்டலும், அவன்அறிவு தான் காண்டலும், மெய் அவற்குக் காட்டலும் அடங்கின.

ஒருவிரல் காட்டி 'நெடிதோ? குறிதோ?' என்றலும், 'கறக்கின்ற எருமை சினையோ? பாலோ?' என்றலும், பிறவும் வினாவழுவாம்.

செப்பு ஆசிரியன்கண்ணது ஆகலானும், வினா இன்றியும் செப்பு நிகழ்தலானும் செப்பு முற்கூறினார்.

செவ்வன் இறையும், அறியான் வினாவும் ஐய வினாவும் வழாநிலை ஆதலின், வழாஅல் ஓம்பல் என்பதனான் கொள்க. ஏனைய, வழு அமைப்புழிக் காண்க. *(13)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**13. செப்பும் வினாவும் -**

செப்பினைச் செவ்வன்இறை எனவும் இறை பயப்பது எனவும் இரண்டாகப் பகுத்து, இறை பயப்பனவற்றுள் இளம்பூரணர் குறிப்பிட்டவற்றிற்கு மேலாகச் சொல் தொகுத்து இறுத்தலும், சொல்லாது இறுத்தலும் என்ற இரண்டனை இணைத்து எண்வகை விடைகளைக் கொண்டுள்ளார்.

**இடம்பூணி என் ஆவின் கன்று** - வண்டியின் நுகத்தடியின் இடப்புறத்தே இணைக்கப் பட்டுள்ள காளை என் வீட்டில் வளர்க்கப்படும் பசு ஈன்ற கன்று. அது காளையாகி வண்டியில் பூட்டப் பட்டுள்ளது என்பதாம்.

**அறிபொருள் வினாவில், அறிவு ஒப்புக்காண்டல்** - வினாவப்பட்டானுடைய அறிவினைத் தன் அறிவினோடு ஒப்பிட்டு அவன் அறிவு தன் அறிவை ஒத்ததோ என்று ஆராய்ந்து அறிதல்.

**அவன் அறிவு தான் காண்டல்** - வினாவப்பட்டானுடைய அறிவு ஆழத்தினை அவன் விடை யிறுக்கும் செப்பின் வாயிலாக ஆய்ந்து உணர்தல்.

**மெய் அவற்குக் காட்டல்** - வினாவப்பட்டான் ஒரு பொருளைப் பிறழ உணர்ந்தவழி, அவனுக்கு உண்மையான செய்தியை அறிவித்தல்.

செப்பு ஆசிரியன்கண்ணது - கொள்வோனாகிய மாணாக்கன் கொள்வகையை அறிந்து செய்திகளை ஆசிரியன் திரிபின்றிப் பாடம் சொல்லும் போது மாணாக்கன் செய்தி களை ஐயம்திரிபுகள் இன்றிச் செவ்வனே உணரும் வாய்ப்புக் கிட்டும் ஆதலின், மாணாக்கன் சித்திரப்பாவையின் அத்தக அடங்கிச் செவிவாயாக நெஞ்சுகளனாகக் கேட்ட வற்றை விடாது உள்ளத்தமைத்து ஆசிரியன் 'போ' என்று சொல்லத் தன் இருப்பிடத்துக்கு மீளும் இயல்பினன் ஆதலின், ஒரு செய்தியைப் பற்றிச் செப்பிக்கொண்டே இருக்கும் வாய்ப்பு ஆசிரியனுக்கே உள்ளது என்றார்.

பிச்சைபெற வருபவர் முதலியோர் வினா இன்றியும் செப்பு நிகழ்த்துவர். மறுத்தலும் உடன்படுதலும் ஏவப் பட்டவர்கண் அன்றி வினாவப்பட்டார் கண்ணும், நிகழும் என்பதற்கு உதாரணம் 15ஆம் நூற்பா உரையுள் உள்ளது.

## தெய்வச்சிலையார் உரை

### விடைவினா வழுப்படாமை

**13. *செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.***

இதுவும் வழுப்படாமல் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செப்பினையும் வினாவினையும் வழுவாமல் கூறுக எ-று.

உலகத்துப் பொருள் உணர்த்தும் சொல் எல்லாம் வினாவும் செப்பும் ஆகிய பொருள்மேல் நிகழ்தலின், அவை வழுவாமல் கூறல் வேண்டும் என்றவாறு ஆயிற்று.

எனவே, வழு எழுவகை ஆம் என்பது பெற்றாம். செப்பு வருமாறு : அச்செப்பு நான்கு வகைப்படும்; துணிந்து கூறல், கூறுஇட்டு மொழிதல், வினாவி விடுத்தல், வாய் வாளாது இருத்தல் என. துணிந்து கூறல் ஆவது : தோன்றியது கெடுமோ என்றவழி, கெடும் என்றல். கூறு இட்டு மொழிதல் ஆவது : செத்தவன் பிறப்பானோ என்றவழி, பற்று அறத் துறந்தானோ, பிறனோ என்றல். வினாவி விடுத்தல் என்பது: முட்டை மூத்ததோ பனை மூத்ததோ என்றவழி, எம் முட்டைக்கு எப்பனை என்றல். வாய் வாளாமை ஆவது : ஆகாயப் பூ நன்றோ தீதோ என்றார்க்கு உரையாடாமை. (மணி-30 : 235-249)

இனி, அவற்றுள் வினாவழு ஆவது வினாவிய சொல்லால் பயன் இன்றி நிற்பது. அஃது ஒரு விரல் காட்டி நெடிதோ குறிதோ என்றலும், ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றலும்.

கோபலய்யர் - 13

செப்புவழு ஆவது : துணிந்து கூறும்வழித் தோன்றியது கெடுமோ என்றார்க்குக் கெடாது என்றலும், ஒலி செவிக்குப் புலன் அன்று என்றலும், என் தாய் மலடி என்றலும், பிறவும் இந்நிகரன. இனிக் கூறுஇட்டு மொழிய வேண்டும் வழியும், வினாவி விடுக்க வேண்டும்வழியும், வாளாது இருக்கவேண்டும்வழியும் துணிந்து கூறின் வழுஆம்.

வினா இன்றியும் வருதலின் செப்பு முன்கூறப்பட்டது. அது 'யான் குமரி ஆடிப் போந்தேன், ஒரு பிடி சோறு தம்மின்' என வரும். *(13)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**13. 'செப்பும் வினாவும்' -**

செப்பும் வினாவும் எடுத்தோதிய காரணம், உலகத்துப் பொருள் உணர்த்தும் சொல் எல்லாம் வினாவும் செப்பும் ஆகிய பொருள்மேலேயே நிகழும் என்பதாகும்.

செப்பின் நான்கு வகை - துணிந்து கூறல், கூறிட்டு மொழிதல், வினாவி விடுத்தல், வாய்வாளாது இருத்தல் என்பன. இவை உதாரணங்கள் கொண்டு விளக்கப்பட்டன. இவர்கூறும் செய்தி மணிமேகலை 30 : 235 - 249இல் காணப்படுகிறது. வாய் வாளாமை - விடை கூறாது இருத்தல்.

'வினா விடை நான்கு உள;
துணிந்து சொல்லல், கூறுஇட்டு மொழிதல்,
வினாவின் விடுத்தல், வாய் வாளாமை என;
தோன்றியது கெடுமோ? கெடாதோ? என்றால்
கேடு உண்டு என்றல் துணிந்து சொலல் ஆகும்;
செத்தான் பிறப்பா னோபிற வானோ?
என்று செப்பின்,

பற்று இறந்தானோ? அல்மகனோ? எனல்
மீக்கூறு இட்டு மொழிதல் என விளம்புவர்;
வினாவின் விடுத்தல் முட்டைமுந் திற்றோ?
பனைமுந் திற்றோ? எனக் கட்டுரைசெய்
என்றால் எம்முட் டைக்குளப் பனைஎன்றல்;
வாய்வா ளாமை ஆகா யப்பூப்
பழைதோ? புதிதோ? என்று புகல்வான்
உரைக்கு மாற்றம் உரையாது இருத்தல்
(மணி. 30 : 235-249)

***ஆகாயப்பூ*** - ஆகாயமாகிய பொய்கையில் பூத்துக் காணப்படும் பூ-இஃதுஇல்பொருள்.

***செப்புவழு*** - தோன்றிய பொருள் எதுவும் கெடாது;
ஒலி செவிப் பொறிக்குப் புலனாகாது;
என்னைப் பெற்றவள் பிள்ளைப்பேறு
இல்லாதவள்-

என்பன போல்வன.

'பிள்ளையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்' இராமா. V-4-65 என்பது முன்பு மலடியாய் இருந்தவள் மகப்பேறு எய்தின் பெறக்கூடிய மகிழ்ச்சி பிராட்டிக்கு ஏற்பட்டது என்பது. செப்பு வினா இன்றியும் வருதலின் 'செப்பும் வினாவும்' எனச் செப்பு முற்கூறப்பட்டது. இந்நூற்பாவில் காட்டப்பட்ட செப்பு வகைகள் யாவும் மற்ற உரையாளரால் காட்டப்படாதவை.

### கல்லாடனார் உரை

### செப்பும் வினாவும் வழுவற்க

***13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.***

என்-எனின், செப்புவழுவும் வினா வழுவும் காத்தல் நுதலிற்று.

இ-ள்: செப்பினையும் வினாவினையும் வழுவாமல் ஓம்புக. என்றது, பரிகரித்துக் கூறுக எ-று.

எ-டு. : 'சாத்தா சோறு உண்ணாயோ' என்றாற்கு, 'உண்பேன்' என்றலும் 'உண்ணேன்' என்றலும் எனக்கொள்க.

செப்பு வினா என்றவற்றுள் செப்பு, மறுத்தலும் உடன்படுதலும் என இரண்டு வகைப்படும். 'நும் நாடு யாது' என்றாற்குப் 'பாண்டிநாடு' என்றாற்போல்வன இவ்விரண்டனுள் அடங்காது எனினும் ஒரு வகையான் அடக்கிக்கொள்ளப்படும்.

இனி வினா ஐந்து வகைப்படும்; அறியான் வினாதல், அறிவு ஒப்புக் காண்டல், ஐயம் அறுத்தல், அவன் அறிவு தான் கோடல், மெய் அவற்குக் காட்டல் என. 'அறியான் வினாதல் அறிவொப்புக் காண்டல், ஐயம் அறுத்தல் அவன்அறிவு தான்கோடல், மெய் அவற்குக் காட்டலோடு ஐவகை வினாவே' என்பதும் கண்டு கொள்க.

'வழாஅல் ஓம்பல்' எனவே, வழுவுதலும் உண்டு என்பது பெறப்பட்டது. அவற்றுள் செப்புவழூஉ வினாஎதிர் வினாதலும், ஏவுதலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், சொல்தொகுத்து இறுத்தலும், சொல்லாது இறுத்தலும். பிறிது ஒன்று கூறுதலும் என எழுவகைப்படும். உறுகின்றது கூறல் என்னும் ஒன்று உண்டேல் உற்றது உரைத்தலுள் அடங்கும் எனக்கொள்க. அவற்றுள் பிறிது ஒன்று கூறல் அமையா வழூஉ எனப்படும்; 'கருவூர்க்கு வழி யாது?' எனப் 'பருநூல் பன்னிருதொடி' என்றாற்போல்வன. மற்றைய ஆறும் அமையும் வழு எனப்படும்.

அவற்றுள் வினா எதிர் வினாதல் 'வினாவும் செப்பே' (கிளவி-14) என்றவழிக் கொள்ளப்படும். ஏவலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும் என்னும் மூன்றும் 'செப்பே வழீஇயினும்' (கிளவி-15) என்புழிக் கொள்ளப்படும். சொல் தொகுத்து இறுத்தல் 'எப்பொருள் ஆயினும்' (கிளவி-35)

என்புழியும், 'அப்பொருள் கூறின்' (கிளவி-36) என்புழியும் கொள்ளப்படும். சொல்லாது இறுத்தல் ஆகிய 'பெருமா! உலறினீரால்' என்றாற்கு வாளாதே 'உலறினேன்' என்றாற் போல்வன அதிகாரப் புறனடை ஆகிய 'செய்யுள் மருங்கினும்' (எச்ச-61) என்புழிக் கொள்ளப்படும்.

வினா வழூஉ, தான் வினாவுகின்றதனைக் கேட்டான் இறுத்தற்கு இடம் படாமல் வினாதல் ஒன்றேஆம்.

எ-டு. : ஒரு விரல் காட்டி, 'இது நெடிதோ குறிதோ' என்றாற் போல்வன. வினாவிற்கு அமையா வழூ அல்லது அமையும் வழூஉ என்பது ஒன்று இல்லை.

'வழாஅல்' என்பது வழுவி என்னும் செய்து என் எச்சத்து எதிர்மறை ஆகிய வழாமல் என்னும் சொல் 'குறைக்கும்வழிக் குறைத்தல்' என்பதனால் இடைநின்ற மகரம் குறைந்து நின்றது என உணர்க.

செப்பு முற்கூறிய காரணம், செப்பு ஆசிரியன்கண்ணது ஆகலானும், வினாவினை அறிவிப்பது அஃது ஆகலானும், வினா இன்றியும் அது நிகழும் ஆகலானும், வழூஉப் பன்மை அதன்கண்ணது ஆகலானும் முற்கூறப்பட்டது.

வினா உரையும், செப்ப நிகழ்தலின் செப்பு என ஒன்றேயாய் அடங்காதோ எனின், அங்ஙனம் அடங்கு மாயினும், ஒன்றனை அறியாது கூறல் வினா என்றும், ஒன்றனை அறிவித்தற்குக் கூறல் செப்பு என்றும் இரண்டாகப் பகுத்து ஆராய்ந்தார் என உணர்க. (13)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**13. 'செப்பும் . . . ஓம்பல்.'-**

செப்பு மறுத்தலும் உடன்படுதலும் என்ற இருவகை என்கிறார். வினா ஐவகை என்பதற்கு ஒரு நூற்பாவைக் குறிப்பிட்டுள்ளார். செப்பு வழூ ஏழு என்று குறிப்பிட்டு அவற்றை விளக்கியுள்ளார்.

சொல்லாது இறுத்தல் - காரணம் கூறாது வினாவிய கருத்தை ஏற்றுக்கோடல் என்று கருதி, 'பெருமானே! தலைமயிரைக் காயவைத்துக் கொண்டிருக்கிறீரா ?' என்று வினவியவருக்கு அதற்குரிய காரணம் கூறாது 'ஆமாம்' என்று விடை கூறுதல் எனக்கூறி, அவ்வாறு கூறும் விடைவழு சொல்லதிகார இறுதி நூற்பாவாகிய 'செய்யுள் மருங்கினும்' (463 - ந.) என்பதனான் கொள்ளப்படும் என்கிறார். இது பிறர் கூறுவதிலிருந்து வேறுபட்டது.

பிறிதொன்று கூறுதல் என்ற விடை வழு விளக்கப்படவில்லை. இதற்கு எடுத்துக்காட்டு 'சோறு உண்கிறாயோ?' என்று வினவியவருக்குக் 'கஞ்சி குடிக்கிறேன்' என்று விடை கூறுதல் போல்வன.

செப்பிலேயே வழுவமைதி உண்டு; வினாவில் வழுவமைதி இல்லை என்பது இவர் கருத்து.

'வழாஅல்' என்ற சொல் 'வழுவாமல்' என்ற வினை எச்சத்தின் திரிபு என்பது இவர் கருத்து.

செப்பு இந்நூற்பாவில் முதற்கண் கூறப்பட்டதன் காரணங்களை விளக்கிக் கூறுகிறார். வகுப்பில் மாணாக்கர்கள் சித்திரபபாவையின் அத்தக அடங்கிச் செவி வாயாக நெஞ்சு களனாகப் பாடம் பயின்று செல்பவர் ஆதலின் வகுப்பில் ஆசிரியர் ஒருவரே பேசுதலாகிய அக்கால மரபு பற்றிச் செப்பு ஆசிரியன்கண்ணது என்று குறிப்பிடுகிறார். ஆசிரியர் பாடங்களை ஐயம் திரிபு அறக் கற்பித்தலின், மந்த மதிய ராகிய மாணாக்கர் கூர்த்த அறிவுடைய மாணாக்கரை வினவித் தம் ஐயங்களைப் போக்கிக் கொள்ளுதலும் முற்கால மரபாகும். செப்பு-வினா-இவற்றின் வேறுபாடு விளக்கப் பட்டுள்ளது.

**ஒருவர் உரை**

***13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.***

எ-து : செப்பினையும் வினாவினையும் வழுவாமல் போற்றிச் சொல்லுக.

அவை வருமாறு : நும் நாடு யாது? என்றக்கால், பாண்டிநாடு என்பது. இது வினாவானும் செப்பானும் வழுவாது வந்தது.

'வழாஅல் ஓம்பல்' எனவே செப்பு ஆறுவகைப்படும், வினா எதிர் வினாதலும், ஏவலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும் என.

அவற்றுள், வினா எதிர் வினாதல் ஆவது : 'சாத்தா சோறு உண்ணாயோ?' என்றால், 'உண்ணேனோ?' என்பது.

ஏவல் ஆவது : 'சாத்தா சோறு உண்ணாயோ ?' என, 'நீ உண்' என்பது.

மறுத்தல் ஆவது : 'சாத்தா சோறு உண்ணாயோ ?' என, 'உண்ணேன்' என்பது.

உற்றது உரைத்தல் ஆவது : 'சாத்தா சோறு உண்ணாயோ?' என, 'வயிறு குத்திற்று' என்பது.

உடம்படுதல் ஆவது : 'சாத்தா சோறு உண்ணாயோ?' என, 'உண்பேன்' என்பது.

அவற்றுள் மறுத்தலும் உடம்படுதலும் செப்பு இலக்கணம் ஆகக் கொள்க.

'வழுவாமல் சொல்லுக' எனவே, வழு ஆதலும் உண்டு. அது வருமாறு : 'கருவூர்க்கு வழி எதோ?' எனப் 'பருநூல் பன்னிரண்டு தொடி' என்பது. இது வினாவிற்கு இறைபட வாராமையின் வழு ஆயிற்று. இத்தொடக்கத்தன சொல்லற்க.

இனி, முன்னை இலேசினான் வினா ஐந்து வகைப் படும்.

'அறியான் வினாதல் அறிவுஒப்புக் காண்டல்
ஐயம் அறுத்தல் அவன்அறிவு தான்காண்டல்
மெய்அவற்குக் காட்டலோடு ஐந்து,'

அவற்றுள், அறியான் வினாதல் ஆவது : இச்சூத்திரத்திற்குப் பொருள் என்னையோ? என்பது.

அறிவு ஒப்புக்காண்டல் ஆவது : இச்சூத்திரத்திற்குப் பொருள் யான் அறிந்தாங்கே அறிந்தான் கொல்லோ ? என்று அறிதற்கு வினாதல்.

ஐயம் அறுத்தல் ஆவது : இச்சூத்திரப் பொருள் கேட்டுத் துணியாது நின்றான், அறிந்தானை வினாவி அறிதல்.

அவன் அறிவு தான் காண்டல் ஆவது : 'இவன் இச் சூத்திரத்திற்குப் பொருந்துமாறு உரைத்தல் காண்பல்' என்று, அவன் உணர்வின் பகுதி தான் ஆராய்வான் வினாதல்.

மெய் அவற்குக் காட்டல் ஆவது : 'இவன் இச் சூத்திரத்தின் பொருளைத் திரியக் கொண்டான்' என்பதனைத் தான் அறிந்தான், அன்னவன் பிழைத்து உரைத்தக்கால், அப்பிழையைத் தெருட்டித் தான் நன்கு உரைப்பான் வினாதல்.

இவை ஐந்தும் வினாவுதலே ஆம்.

இனி வினாவழு வருமாறு : 'கருவூரொடு காவிரிப்பூம் பட்டினத்திடை என் உண்டு?' என்பது. காதமே அறியல் உறுவது எனின், 'எனைத்துக் காதம் உண்டு?' எனற்பாற்று. அவ்விடைப் பொருளை அறியல் உறுவது எனின், 'என் உள?' எனற் பாற்று. அவ்வாறு சொல்லாமையின் வழு ஆயிற்று. ஆகையால் இத்தொடக்கத்தன வினாவற்க. *(13)*

**சாத்திரியார் உரை**

**13. 'செப்பும் . . . ஓம்பல்.'-**

சே - வினாய பொருளை அறிவுறுப்பது அல்லது வினாய பொருளை எதிர்பார்த்து ஒன்றனை அறிவுறுப்பது செப்பு என்பதாகும்.

'மறுத்தலும் உடன்படுதலும் ஒருவன் ஏவ வருமே அன்றி வினவ வாரா'. எவ்வாறு எனின், 'நீ செய்' என்று ஒருவன் ஏவ, மற்றொருவன் 'செய்கின்றேன்' என உடம்பாடாகவேனும், 'செய்யேன்' என்று எதிர் மறையாக வேனும் விடையிறுப்பினும் அவை உடம் படுதலும் மறுத்தலும் ஆகா. எங்ஙனம் எனின், 'நீ செய்' என்று ஏவும்போது ஏவுகின்றவனது. எண்ணம் மற்றவன் செய்யவேண்டும் என்பதே ஆதலின், அப்பொழுது 'செய்கின்றேன்' என்பது சொல்லுகின்றவனது எண்ணத்திற்கு உடம்படுதலும், 'செய்யேன்' என்பது அவன் எண்ணத்தை மறுத்தலும் ஆகும். 'நீ போகிறாயா?' என்று வினவும்போது. வினவுவோனின் எண்ணம் மற்றவன் போகவேண்டும் என்றேனும், போகவேண்டா என்றேனும் திண்ணமாய் அறிய இயலாது. அதற்கு விடையாகப் 'போகின்றேன்' என்றாவது, 'போகேன்' என்றாவது கூறுவது, வினாவப்பட்டான் தன் கருத்தை வெளிப்படுத்துவதே அன்றி, வினவுவோனது கருத்தை உடம்பட்டேனும் மறுத்தேனும் கூறியது ஆகாது என்க.

மறுத்தலையும் உடன்படுதலையும் உரையாசிரி யரும் நச்சினார்க்கினியரும் இறைபயப்பதன் பிரிவாகக் கொண்டமை, வினாவிற்கு விடையாக வரும் எதிர் மறைக்கும், ஏவுதலுக்கு விடையாக வரும் எதிர்மறைக்கும் உள்ள நுட்பமான வேறுபாட்டைக் கருதாமையான் ஆகும்.

நச்சினார்க்கினியர் 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' என்னும் இச்சூத்திரத்தின்கண் சேனாவரையரைப் போலச் 'செவ்வன் இறையும் அறியான் வினாவும், ஐய வினாவும் வழாநிலை ஆதலின் 'வழாஅல் ஓம்பல்' என்பதனான் கொள்க. ஏனைய வழு அமைப்புழிக் காண்க' என்றுகூறி, 15ஆம் சூத்திர உரையின் இறுதியில் 'வினா வழீஇயின இடத்து அமையாதாம்' என்று மாறுபடக் கூறினார். 'யாதென வரூஉம்' (32) என்னும் சூத்திரத்து வழுவமைதி கூறப்படவில்லை என்று நச்சினார்க்கினியர் சேனா

வரையருக்கு மாறுபாடாகக் கருதினும் 'வன்புற வரூஉம்' (சொ. 244) என்னும் சூத்திரத்துக்குச் சேனாவரையர் போலவே பொருள்கொண்டு அவர் கொடுத்த உதாரணமே கூறியமையின், வினாவழுவமைதி கொள்ளத்தக்கதே என்க.

**பாலசுந்தரனார் உரை**

**13. 'செப்பும் . . . ஓம்பல்.'**

செப்பாவது யாதேனும் ஒருபயன் விளைவைக் கருதிக் கருத்தை வெளிப்படுத்தலும், வினாவியவழி அதற்கு விடையாகக் கூறுதலுமாம். செப்பு, விடை, இறை, மாற்றம் என்பவை ஒத்த பொருளுடையவை. வினாவாவது யாதானும் ஒன்றை அறிந்துகொள்ளும் விருப்பினைப் புலப்படுத்து வதாகும். வினா எனினும் கடா எனினும் ஒக்கும்.

*(எ-டு.)* 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்'
-குறள்34

'பசி நலிகின்றது; சோறிடுக'

என்பன ஒரு பயன் கருதிக் கருத்தை வெளிப்படுத்த செப்பாம்.

'அந்தணர் என்பர் அறவோர்' - குறள் - 30

'மங்கலம் என்ப மனைமாட்சி' - குறள் - 60

என்றாற்போல்வன, வினாவை உள்ளடக்கி வெளிப்படுத்த செப்பாம்.

'வாய்மையாவது யாதொன்றும் தீமைஇலாத சொலல்' -
குறள் - 291

என்றாற்போல்வன வினாவிற்கு விடையாக வரும் செப்பாம்.

'பேதைமை என்பது யாது?' - குறள் - 831

'வெண்மை எனப்படுவது யாது?' - குறள் - 844

என்றாற்போல வருவன வினாவாம்.

வினா - அறியாமை வினா, ஐய வினா, அறிவுறூஉ வினா என மூவகைப்படும்.

'அறிவொப்புக் காண்டல்' ஐய வினாவுள்ளும், 'அவன் அறிவுதான் கோடல்' அறியாமை வினாவுள்ளும், 'மெய் அவற்குக் காட்டல்' அறிவுறூஉ வினாவுள்ளும் அடங்கும் என்க.

தொடர்மொழி ஆக்கத்தின்கண் 'மயங்கல்கூடா' என விதித்த திணை முதலிய ஐந்தும் செப்பினும் வினாவினும் வழுவாமல் போற்றுக என்பதே இச்சூத்திரத்தின் கருத்து. இதனை ஓராமல் செப்பிற்கும் வினாவிற்கும் இலக்கணம் கூறியதாக உரையாசிரியன்மார் விளக்கம் கூறினர்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

13. தொடர்மொழி ஆக்கத்தின்கண் 'மயங்கல் கூடா' என விதித்த திணை, பால், இடம், பொழுது, மரபு என்பன செப்பினும் வினாவினும் வழுவாமல் போற்றுக என்பதே இந்நூற்பாவின் கருத்து.

## இளம்பூரணர் உரை

### விடை வினா

*14. வினாவும் செப்பே வினா எதிர் வரினே.*

எ . . . ன், வினாவும் இறையாகும் ஓரோவழி என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: 'வினாவும் செப்பே வினாஎதிர் வரினே' என்பது, வினாவும் இறையாகும் அதற்கு இறைபட வரின் என்றவாறு. அது, வினாவெதிர் வினாதல் என்னும் குற்றப்படாது என்பது அதன் கருத்து.

வரலாறு : சாத்தா உண்ணாயோ என்று வினாயினாற்கு உடன்படுதல் மறுத்தல் என்று இரண்டனுள் ஒன்றே கூறற்பாலது. உண்ணேனோ என்று வினாவினான் வினா உண்பல் என்னும் பொருள்பட்டமையின், வினாத்தானும் செப்பாயிற்று. (14)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**14. 'வினாவும் செப்பே' -**

இறை என்பது வினாவுக்கு விடை.

வினாத்தானும் - வினாவும்கூட.

## சேனாவரையர் உரை

### விடை வினா

***14. வினாவும் செப்பே வினாஎதிர் வரினே.***

(இ-ள்) : வினாய பொருளை ஒருவாற்றான் அறிவுறுத்து வினாவிற்கு மறுமொழியாய் வரின், வினாவும் செப்பாம் என்றவாறு.

சாத்தா உண்டியோ என்று வினாயவழி, உண்ணேனோ என வரும். வினா வாய்பாட்டான் வந்தது ஆயினும், உண்பல் என்பது கருத்துப்பொருள் ஆகலின் செப்பு எனப்படும்.

உண்டியோ என்று வினாயவழி, உண்பல் உண்ணேன் என்று இறாது, தான் ஒன்றை வினாவுவான் போலக் கூறலின் வழுவமைதி ஆயிற்று. இது செப்பு வழு வமைதியேல் 'செப்பே வழீஇயினும்' என்புழி அடங்கும் எனின், ஒன்றன் செப்பு ஒன்றற்கு ஆவது அன்றி வினாச்செப்பு ஆயினமையின், வேறு கூறினார். (14)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**14. வினாவும் . . . வரினே-**

ஒரு வினாவுக்கு விடையாக அமைவது வினா வாய்-பாட்டான் அமையினும் விடையின் பொருளைத் தருதலின் அஃது ஏற்றுக்கொள்ளத்தக்கதே.

## நச்சினார்க்கினியர் உரை

### வினாவும் செப்பாக வருதல்

*14. வினாவும் செப்பே வினாஎதிர் வரினே.*

இது வழு அமைகின்றது.

இ-ள்: வினா எதிர் வரின் - வினாப்பொருளை ஒருவாற்றான் அறிவுறுத்து, வினாவிற்கு மறுமொழியாய் வரின்; வினாவும் செப்பே - வினாத்தானும் செப்பாம் என்றவாறு.

'சாத்தா ! உண்டியோ?' என்று வினாயவழி, 'உண்ணேனோ?' எனவரும் வினா, வினா வாய்ப்பாட்டான் வந்ததேனும், 'உண்பேன்' என்னும் பொருள்பட வருதலின், செப்பு ஆயிற்று. இது வினா எதிர்வருதல். (14)

## தெய்வச்சிலையார் உரை

*14. வினாவும் செப்பே வினா எதிர் வரினே.*

செப்பின்கண் கிடந்தது ஒரு வழுஅமைத்தலை நுதலிற்று.

இ-ள்: வினாவும் செப்புஆம் நிலையைப் பெறும், வினாவப்பட்ட சொல்தன்னானே எதிர்த்து வரும் ஆயின் எ-று.

உ-ம் : சாத்தா உண்ணாயோ என வினாயவழி, உண்ணேனோ என்பது, உண்ணேன், உண்பல் எனச் செப்பாது, உண்பேன் என்னும் பொருள்படச் செப்பியமையான் வழுஅமைதி ஆயிற்று. (14)

## கல்லாடனார் உரை

### வினா செப்பு ஆதல்

*14. வினாவும் செப்பே வினாஎதிர் வரினே.*

என்-எனின், செப்பு வழுஅமைதி கூறுதல் நுதலிற்று.

இ-ள்: வினா என்று சொல்லப்படுகின்றதும் ஒரோவழிச் செப்பு என்று சொல்லப்படும், ஒருவன் ஒன்றனை வினாவத் தானும் அதற்கு எதிர் ஒன்றனை வினாவி இறைப்பொருள் படுத்துமே எனின் எ-று.

எ-டு. : 'சாத்தா சோறு உண்ணாயோ?' என்றாற்கு 'உண்ணேனோ ?' என்பது.

இது வினா எதிர் வினாதல் என்னும் வழுஅமைதி அன்றோ எனின், பிறிதொரு வினா வந்து வினாப்பொருள் பயவாது செப்புப்பொருள் பயப்ப நிற்றலின், செப்பு வழுஅமைதி என அடக்கினார். *(14)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**4. 'வினாவும் . . . வரினே.'-**

இறைப்பொருள் படுத்துதல் - செப்பின் பொருளைத் தருதல்.

## ஒருவர் உரை

*14. வினாவும் செப்பே வினா எதிர் வரினே.*

எ-து : வினாவும் செப்பு ஆகும், அதற்கு இறைபட வரின்.

எ-டு: 'சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ?' என்று வினாவினாற்குச் 'செல்லேனோ?' என்று வினாவவே, 'செல்வேன்' என்னும் பொருள்பட்டமையின், வழுவே ஆயினும் செப்பு ஆயிற்று. இது வழு அமைதி. *( 14)*

## இளம்பூரணர் உரை

### விடை வழு அமைதி

*15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவி யான.*

*எ . . . ன், இதுவும் அவ்வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.*

*இ-ள்: 'செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே' என்பது, செப்புத்தான் வழீஇயின இடத்தும் வரைந்து மாற்றப்படாது என்றவாறு.*

*ஏகாரம் பிரிநிலை ஏகாரம். வழீஇயினும் என்ற உம்மை சிறப்பும்மை. எனவே, வினா வழீஇயின விடத்து அமையாது என்றவாறு.*

*'அப்பொருள் புணர்ந்த கிளவியான' என்பது, அப்பொருட்கு இயைபுபட வரின் என்றவாறு.*

*அவ்வாறு வழீஇ அமையும் செப்பாவன :- உற்றது உரைத்தலும் உறுவது கூறலும், ஏவுதலும் என இவை.*

*அவற்றுள் உற்றதுரைத்தல் என்பது, சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ? எனின், 'கால் முள் குத்திற்று; தலை நோகின்றது' என்பது.*

*இனி, உறுவது கூறல் என்பது, சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ எனின் 'கடம் உடையார் வளைப்பார்; பகைவர் எறிவர்' என்பது.*

*இனி, ஏவுதல் என்பது, சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ? எனின், நீ செல் என்பது.*

*இவை மூன்றும் வழுஉமன்; வழூவே எனினும், அப்பொருள்பட வந்தமையின், அமைக என்றது. மற்றுள்ளனவும் மேலே அடங்கின.* *(15)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**15. 'செப்பே வழீஇயினும்' -**

*வழீஇ அமையுமாறு - வழுவாக இருப்பினும் ஏற்றுக் கொள்ளும் நிலை. வரைதல் - நீக்குதல்*

*செப்பு வழுவினாலும் ஏற்றுக்கொள்ளப்படும் என, வழுவுமிடத்தும் ஏற்புடையதாதல் கூறுதலின் 'வழீஇயினும்' என்னும் உம்மை சிறப்பு உம்மை.*

*கடம் உடையார் வளைப்பர் - எனக்குக் கடன் கொடுத்து என்னிடம் கடனைத் திருப்பிப் பெறாதோர் என்னைச் சூழ்ந்து துன்புறுத்துவர்.*

*பகைவர் எறிவர் - எனக்குப் பகைவராகி அங்கு இருப்பவர் என்னை அடிப்பார்கள்.*

*மற்றுள்ளனவும் மேலே அடங்கின. வினா எதிர் வினாதல் 14ஆம் நூற்பாவிலும், மறுத்தலும் உடன்படுதலும் 13ஆம் நூற்பா உரையிலும் சொல்லப்பட்டன.*

*இவை மூன்றும் வழூஉ மன் - இவை மூன்றும் வழு அல்லவோ என்பது பொருள்.*

### சேனாவரையர் உரை

### விடை வினா வழுவமைதி ஆதல்

***15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே***
***அப்பொருள் புணர்ந்த கிளவி யான.***

*(இ-ள்) : செவ்வன் இறை ஆகாது செப்பு வழுவி வரினும் கடியப்படாது, ஒருவாற்றான் வினாய பொருட்கு இயைபுபட்ட கிளவி ஆதற்கண் என்றவாறு.*

சாத்தா உண்டியோ என்று வினாயவழி, நீ உண் என்றும், வயிறு குத்தும் என்றும், பசித்தேன் என்றும், பொழுதாயிற்று என்றும் வரும்; இவை செவ்வன் இறை அல்ல வேனும், வினாய பொருளை ஒருவாற்றான் அறிவுறுத்தலின், அமைந்தவாறு கண்டுகொள்க. அஃதேல், இவை 'தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்' (சொல்-157) என்புழிக் குறிப்பின் தோன்றலாய் அடங்கு மாயினும், 'செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்' (சொல்-13) என்றதனான் அமைக்கல் வேண்டும் என்பது. (15)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**15. செப்பே . . . யான-**

இவை நேர்விடை அல்ல எனினும் ஏதோ ஒரு வழியில் வினாவுக்கு விடையாக அமைதலின் இவை வழுவமைதி யாகக் கொள்ளத்தக்கன.

## நச்சினார்க்கினியர் உரை

### செப்பு வழு அமைதி

***15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான.***

இதுவும் அது.

இ-ள்: செப்பே வழீஇயினும் வரைநிலை இன்று - செவ்வன் இறை ஆகாது, செப்பு வழுவி வரினும் கடியப்படாது; அப்பொருள் புணர்ந்த கிளவியான- ஒருவாற்றான் அவ்வினாய பொருட்கு இயைபுபட்டகிளவி ஆதற்கண் என்றவாறு.

'சாத்தா ! உண்டியோ?' என்று வினாயவழி 'வயிறு குத்திற்று' என உற்றது உரைத்தலும், 'வயிறு குத்துகின்றது' என மறுத்தலும், 'நீ உண்' என ஏவுதலும், 'வயிறு குத்தும்' என

உறுவது கூறலும், 'பசித்தேன்' என்றும், 'பொழுது ஆயிற்று' என்றும் உடம்படுதலும், ஒருவாற்றான் வினாய பொருளை அறிவுறுத்தன.

'குமரி ஆடிப்போந்தேன்; ஒரு பிடிசோறு தம்மின்' என்பது சொல்லாது இறுத்தல். சொல் தொகுத்து இறுத்தல் 'எப்பொருள் ஆயினும்' (சொ. 35) என்புழியும் 'அப்பொருள்' (சொல். 36) என்புழியும் கூறுப.

'செப்பே' என நின்ற ஏகாரம் பிரிநிலை ஏகாரம், வினா நிற்பச் செப்பை வாங்கிக்கொண்டு அமைத்தலின். உம்மை, சிறப்பு உம்மை.

செப்பு வழுவினும் அமைக. வினா வழீஇயினஇடத்து அமையாதாம். (15)

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**15. செப்பே வழீஇயினும் -**

செப்பு வழுவினும் ஏற்றுக்கொள்ளப்படும் என்றலின் உம்மை சிறப்பு உம்மை. 'யாதென வரூஉம்' (32) என்பது எய்தியதன்மேல் சிறப்புவிதி; வழுவமைதி யன்று. 'வன்புற வரூஉம்' (சொ. 246) என்புழி, வினா மறைப்பொருளும் தரும் என்பது 'மாறுகோள் எச்சமும் வினாவும்' (எ.275) என்பனான் கொள்ளப்படுதலின், வழாநிலையே அன்றி வழுவமைதி யன்று. ஆதலின், வினா வழீஇயின இடத்து அமையாது என்ற இளம்பூரணர் கருத்தையே நச்சினார்க்கினியரும் குறிப்பிட்டுள்ளார்.

**தெய்வச்சிலையார் உரை**

**செப்புவழுவமைதி**

*15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவி ஆன.*

இதுவும் அது.

இ-ள்: செப்பு வழீஇயினும் நீக்கப்படாது, அச் செப்புதற்கு உரிய பொருண்மையைப் பொருந்திய சொல்லின்கண் எ-று.

ஏகாரம் சிறப்புப் பற்றி வந்தது, அதிகாரப் புறனடையால் கொள்ளப்படும்.

உ-ம் : உண்ணாயோ சாத்தா என்றவழி, நீ உண் எனவும், வயிறு குத்திற்று எனவும், வயிறு குத்தும் எனவும் இவ்வாறு வருவன. இவையும் உண்ணேன், உண்பல் என வாராமல், உண்ணேன் என்னும் பொருள்பட வருதலின் வழு அமைதி ஆயின. (15)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**15. 'செப்பே வழீஇயினும்' -**

செப்பு ஒன்றே வழுவினும் ஒரோவழிக் கொள்ளப் படும். வினா வழுவின் கொள்ளப்படாது என்பதை விளக்குதலின் ஏகாரம் சிறப்புப் பொருளில் வந்தது. ஏகாரம் சிறப்புப்பொருளிலும் வரும் என்பதனை அதிகாரப் புறனடையாகிய 452ஆம் நூற்பாவான் கொள்ளவேண்டும். ஆனால் அந்நூற்பா உரையுள் இவர் இதனை எடுத்துக் காட்டவில்லை.

## கல்லாடனார் உரை

### செப்பு வழுவமைதி

*15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவி யான.*

என்-எனின், இதுவும் செப்பு வழுஅமைதி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செப்பு என்று சொல்லப்பட்டது வழுவி வரினும் வரைந்து மாற்றப்படாது; எவ்விடத்து எனின், வினாப் பொருண்மையொடு பொருந்திய சொல்லிடத்து எ-று.

எ-டு : 'உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா?' என 'நீ செல்' என்றல் ஏவுதல். 'உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா?' என 'என் கால் முள் குத்திற்று' என்றல் உற்றது உரைத்தல். 'உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா?' என 'என் கடன் உடையார் வளைப்பர், பகைவர் எறிவர்' என்றது உறுவது கூறல்.

செப்பே என்புழி ஏகாரம் பிரிநிலை. அதனைப் பிரித்து வழுஅமைதி கூறினமையின், வினாவிற்கு வழுஅமைதி இல்லை என்பது பெறப்பட்டது. வழீஇயினும் என்ற உம்மை இழிவுசிறப்பு.

இம்மூன்று சூத்திரத்துள் முன்னையது வழுவற்க என்னும் விதி. பின்னைய இரண்டும் வழுஅமைதி கூறியன என உணர்க. (15)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**15. செப்பே . . . கிளவியான-**

என் கடன் உடையார் வளைப்பர் - எனக்குக் கடன் கொடுத்து அக்கடனைத் திருப்பிப் பெறாதவர் என்னைச் சூழ்ந்துகொள்வர்.

பகைவர் எறிவர் - என் பகைவர்கள் என்னைத் தாக்குவர்.

## ஒருவர் உரை

*15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவி ஆன.*

எ-து : செப்புதல் வழீஇயின இடத்து மாற்றப்படாது, பொருளொடு புணர்ந்த சொல்லாயின்.

எ-டு : 'சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ?' என, 'கால் முள் குத்திற்று', 'தலை நோகின்றது' என்றவழியும்; 'சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ?' என, 'கடனுடையார் வளைப்பர்', 'பகைவர் எறிவர்' எனச் சொல்லுதலும்; 'சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ?' என, 'நீ செல்' என்பதும் வழுவே ஆயினும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், ஏவலும் ஆய் வந்து, செல்லேன் என்னும் பொருள்பட்டமையின் அமைக. *(15)*

இதுவும் வழுஅமைதி.

## பாலசுந்தரனார் உரை

**15. 'செப்பே . . . யான.'**

தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும் (சொ.158) ஆகிய இருவகைப் பொருண்மை நிலையுள் இவ்வகைச் செப்பு குறிப்பின் தோன்றலாய் அடங்கலின் வழாநிலையாக் கொள்ளப்படும் என்பது கருத்து.

## இளம்பூரணர் உரை

### செப்பு வினா இவற்றில் சினைமுதல் கிளவிகள்

***16. செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு
அப்பொருள் ஆகும், உறழ்துணைப் பொருளே.***

எ . . . ன், செப்புவானொடு வினாவுவானிடைக்கண் கிடந்தது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: 'செப்பினும் வினாவினும்' என்பது, செப்புமிடத்தும் வினாவுமிடத்தும் என்றவாறு.

'சினை முதல் கிளவிக்கு' என்பது, சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும் என்றவாறு.

'அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே' என்பது, முதலொடு முதலே பொரூஉக; சினையொடு சினையே பொரூஉக என்றவாறு.

வரலாறு: கொற்றன் மயிர் நல்லவோ, சாத்தன் மயிர் நல்லவோ என்று வினாயினான். அவ்விடத்து, கொற்றன் மயிரின் சாத்தன் மயிர் நல்ல; சாத்தன் மயிரின் கொற்றன் மயிர் நல்ல என்று இறுக்க. இது சினையொடு சினை பொரீஇயினவாறு.

இனிக் கொற்றன் நல்லனோ சாத்தன் நல்லனோ என்று கூறியவிடத்து, கொற்றனின் சாத்தன் நல்லன்; சாத்தனின் கொற்றன் நல்லன் என்றிறுக்க. இது முதலொடு முதலே பொரீஇயினவாறு.

'அப்பொருள் ஆகும்' என்றான் ஆதலான், அவ்வச் சினைக்கு அவ்வச் சினையே பொரூஉக என்பது. இது முதற்கும் ஒக்கும்.

இனிச் சினையை முதற் கூறிய முறையன்றிக் கூற்றினான், முதலும் சினையும் உறழ்ந்து வருவனவும் உள, ஒரு மருங்கு பற்றி.

உதாரணம் : இம்மகள் கண் நல்லவோ, இக்கயல் நல்லவோ ? - என்பன போல்வன.

இனி, அப்பொருள் ஆகும் உறழ் பொருள் என அமையும்; துணை என்பது மிகை எனின், துணைக்கும் என்பது உவமித்தல். அவ்வுவமத்துக்கண்ணும் அவ்வினப் பொருளே ஆக என்பது.

உவமம் நான்கு வகைப்படும், வினை, பயன், மெய், உரு என.

புலி பாய்ந்தாங்குப் பாய்ந்தான் என்பது வினை உவமம். மழை போலும் வண்கை என்பது பயன் உவமம். துடி போலும் நடு என்பது மெய் உவமம். பொன் போலும் மேனி என்பது உரு உவமம்.

இன்னும், 'துணை' என்றதனான், எண்ணும்இடத்தும் இனம் ஒத்தனவே எண்ணுக, முத்தும் மணியும் பொன்னும் என. *(16)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**16. 'செப்பினும் வினாவினும்' -**

பொருஉக - ஒப்பிடுக.
பொரீஇயினவாறு - ஒப்பிட்டு வினாவி விடை அறிந்தவாறு.

முதல்சினை என்று கூறாது சினைமுதல் என்று கூறியது முறையல்லாமல் கூறியதாம்.

உறழ்தல் - மாறுபடுதல். ஒருமருங்கு பற்றி- ஒரு காரணம் பற்றி. துணைப்பொருள் - உவமமாகக் கூறும் பொருள். உறழ் துணைப்பொருள் -ஒப்புமையாகக் கூறப்படும் உவமமாகிய பொருள் என்பர் இளம்பூரணர். ஒப்புமை கருதாது மாறுபடக் கூறும் பொருளும், ஒப்புமை கூறப்படும் பொருளும் என்பர் நச்சினார்க்கினியர்.

மெய் உவமம் - வடிவு பற்றிய உவமம்.
உரு உவமம் - நிறம் பற்றிய உவமம்.

## சேனாவரையர் உரை

### சினையும் முதலும் தம்முள் மயங்கலாகாமை

***16. செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு***
***அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.***

(இ-ள்) : செப்பின்கண்ணும், வினாவின்கண்ணும், சினைக்கிளவிக்கும், முதற்கிளவிக்கும் உறழ்பொருளும், துணைப்பொருளும் அவ்வப் பொருளுக்கு அவ்வப் பொருளே ஆம் என்றவாறு.

எனவே, சினையும் முதலும் தம்முள் மயங்கி வருதல் வழு என்பதாம்.

உறழ்பொருளாவது ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது. துணைப் பொருளாவது ஒப்புமை கூறப்படுவது.

(எ-டு) இவள் கண்ணின் இவள் கண் பெரிய, நும் அரசனின் எம் அரசன் முறை செய்யும் எனவும் இவள் கண்ணின் இவள் கண் பெரியவோ, எம் அரசனின் நும் அரசன் முறை செய்யுமோ எனவும் இவள் கண் ஒக்கும் இவள் கண், எம் அரசனை ஒக்கும் நும் அரசன் எனவும் இவள் கண் ஒக்குமோ இவள் கண், எம் அரசனை ஒக்குமோ நும் அரசன் எனவும் வரும்.

'அவன் கோலினும் தண்ணிய தடமென் தோளே' (பட்டினப். 300-1) எனவும், 'துளிதலைத் தலைஇய தளிர் அன்னோளே' (குறுந்தொகை. 222) எனவும் மயங்கி வந்தன வழுவாம் பிற எனின், அவை செய்யுள் பற்றி வரும் உவம வழு ஆகலின் ஈண்டைக்கு எய்தா, அணி இயலுள் பெறப்படும். இம்மகள் கண் நல்லவோ கயல் நல்லவோ என வழக்கின்கண்ணும் மயங்கி வருமால் எனின், உண்மை உணர்தற்கு வினாயதன்றி, ஐயஉவமை வாய்பாட்டான் கண்ணைப் புனைந்துரைத்தல் கருத்தாகலின், அன்னவை எல்லாம் உரை என்னும் செய்யுளாம் என்பது.

இந்நங்கை முலையின் இந்நங்கை கண் நல்ல என்னும் தொடக்கத்தன மயக்கம் இன்மையின் இலக்கண வழக்காம் பிற எனின், அற்றன்று; ஒத்த பண்பு பற்றி அன்றே பொருவுவது? கண்ணொடு முலைக்கு ஒத்த பண்பு

இன்மையால் பொருவுதல் யாண்டையது? ஒத்த பண்பு பற்றிய பொருவுதற்கண்ணது இவ்வாராய்ச்சி என்பது.

காக்கப்பட்டன செப்பு வழாநிலையும், வினா வழாநிலையும் என்பார், 'செப்பினும் வினாவினும்' என்றார். 'வழாஅல் ஓம்பல்' (சொல்-13) என்புழி அடங்கும் ஆயினும், நுண்ணுணர்வு உடையார்க்கு அல்லது அதனான் உணர்தல் ஆகாமையின், விரித்துக் கூறியவாறு. தன்னினம் முடித்தல் என்பதனான், 'பொன்னும் துகிரும் முத்தும் மணியும்' (புறம்-218) என எண்ணுங்காலும் இனமாய பொருளே எண்ணப்படும் என்பது கொள்க. (16)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**16. செப்பினும் . . . பொருளே-**

உறழ்பொருள்-உயர்த்தியோ தாழ்த்தியோ கூறும் பொருள்.

அவன் கோலினும் தண்ணிய தடமென் தோளே (பட்டின. 300-1)

(திருமாவளவன் என்ற மன்னனுடைய செங்கோலை விட இத்தலைவியின் தோள்கள் குளிர்ந்தன வாய் உள்ளன.)

'துளிதலைத் தலைஇய தளிர்அன் னோளே' - குறுந். 222

(நீர்த்துளியைத் தன்னிடத்துக் கொண்ட இளைய இலையை ஒத்து இத்தலைவி காணப்படுகிறாள்.)

'கண் நல்லவோ கயல் நல்லவோ' என்பது கண்களை அளவுக்குமீறிப் புகழ்ந்துரைக்கும் செய்யுள் வழக்காம்.

இந்நங்கை முலையின் இந்நங்கை கண் நல்ல - முலையும் சினை; கண்ணும் சினை. சினையொடு சினையை ஒப்புமை கூறினும் முலைக்கும் கண்ணுக்கும் ஒத்தபண்பு இன்மையான் உவமித்தல் கூடாது.

தளிர் - சினை. தலைவி - முதல். சினை முதலுக்கு உவமையாயிற்று.

செங்கோல் - முதல். தலைவி தோள்கள் சினை. முதல் சினைக்கு உவமையாயிற்று. சினைக்கு முதலையும் முதலுக்கு சினையையும் உவமை கூறுதல் வழுவன்று என்ற செய்தி

'முதலும் சினையும் என்று ஆயிரு பொருட்கும்
நுதலிய மரபின் உரியவை உரிய' (பொ. 281)

என்பதனான் அறியப்படும்.

தன்னினம் முடித்தல் - நூற்பாவுள் கூறப்பட்ட விதியை, அந்நூற்பாவுள் குறிப்பிடப்பட்ட செய்திகளுக்கு இனமான பொருள்கள்மீதும் ஏற்றி, அவ்விதியை அவற்றிற்கும் கொள்ளுதல்.

## நச்சினார்க்கினியர் உரை

### செப்பு வினா மரபு

**16. *செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு***
***அப்பொருள் ஆகும், உறழ்துணைப் பொருளே.***

இது செப்பிற்கும் வினாவிற்கும் மரபு கூறுகின்றது.

இ-ள்: செப்பினும் வினாவினும் - செப்பின்கண்ணும் வினாவின் கண்ணும்; உறழ்துணைப் பொருள் - ஒப்புமை கருதாது மாறுபடக் கூறும் பொருளும், ஒப்புமை கூறப்படும் பொருளும்; அப்பொருள் ஆகும் - அவ்வப் பொருளுக்கு அவ்வப்பொருளே ஆம் என்றவாறு.

தாரணம் : இவள் கண்ணின் அவள் கண் பெரிய
நும் அரசனின் எம் அரசன் முறை செய்யும்
இவள் கண்ணின் அவள் கண் பெரியவோ?

நும் அரசனின் எம் அரசன் முறை செய்யுமோ?
இவள் கண் ஒக்கும் அவள் கண்
எம் அரசனை ஒக்கும் நும் அரசன்
இவள் கண் ஒக்குமோ அவள் கண்?
எம் அரசனை ஒக்குமோ நும் அரசன்?

எனவரும்.

தன் இனம் முடித்தல் என்பதனான், எண்ணுங்காலும், துகிரும் முத்தும் பொன்னும் என இனம் ஒத்தன எண்ணுக; முத்தும் கருவிருந்தையும் கானங்கோழியும், பொன்னும் என எண்ணற்க. *(16)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**16. செப்பினும் வினாவினும் -**

உறழ்துணைப்பொருளே- உறழ்பொருளும், துணைப் பொருளும்- மாறுபடக் கூறப் படும் பொருளும், ஒப்புமை கூறப்படும் பொருளும்.

கருவிருந்தை- கருஇருந்தை - கருநிறம்பொருந்திய, மரம் வெந்து தணிந்த கரி.

'வினைஉடை அரக்கராம் **இருந்தை** வெந்துஉக, சனகிஎன்று ஒருதழல் நடுவண் தங்கலான்' கம்ப. சுந்தர - *5:59*- என்பது காண்க.

**தெய்வச்சிலையார் உரை**

**உறழ்பொருட்கண் வழுக்காத்தும்**

***16. செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.***

செப்பின்கண்ணும் வினாவின்கண்ணும் உறழ்பொருட்கண் வரும் வழுக்காத்தலை நுதலிற்று.

இ-ள்: சினையும் முதலும் ஆகிய பொருள் உணர்த்தும் சொற்கு, செப்பின் கண்ணும் வினாவின்கண்ணும் உறழப்படும் பொருள் அப்பொருள் ஆகும் எ-று.

துணை என்பது இணை. முதல் என்பதனான் பண்பும் தொழிலும் காலமும் இடனும் பொருளும் கொள்க. சினை பற்றி உறழ்தல் பெரும்பான்மை ஆகலான் முன்கூறப் பட்டது. அப்பொருள் என்றது அவ்வப் பொருட்கு அவ்வப் பொருளே உறழப்படுவது எ-று.

அவை ஒரு பொருட்கண்ணும் பிற பொருட்கண்ணும் ஒத்தன கொள்ளப்படும்.

அவை வினாவின்கண் வருமாறு : வலமுலையோ இடமுலையோ பெரிது எனத் தன் பொருட்கண் வந்தது. இவள் முலையோ அவள் முலையோ பெரிது எனப் பிறபொருட்கண் வந்தது. இவை சினை. இந்நிறமோ அந் நிறமோ நல்லது : இது பண்பு. இந்நடையோ அந்நடையோ நல்லது - இது தொழில். இன்றோ நாளையோ வாழ்வு - (நெருநலோ இன்றோ நல்லது) இது காலம். இந்நிலமோ அந்நிலமோ விளைவது - இது இடம். இவளோ அவளோ கற்பு உடையள் - இது பொருள்.

இனிச் செப்பு வருமாறு : இம்முலையின் அம்முலை பெரிது என்றானும், ஒக்கும் என்றானும் வரும். பிறவும் அன்ன.

இனி அப்பொருள் அல்லாப் பிறிது பொருளோடு உறழ்தல் வருகின்ற சூத்திரத்தான் அமைக்கப்படும். *(16)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**16. 'செப்பினும் வினாவினும்' -**

உறழப்படும் பொருள் - உயர்வு தாழ்வு குறித்து மாறுபடும் பொருள்.

துணைப்பொருள் - இணையான பொருள்.

பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்ற அறுவகைப்பட்ட பொருள்களில் சினைப்பொருள் பற்றி ஒப்பிடுதல் பெரும்பான்மை ஆதலின் அது நூற்பாவில் முதலில் கூறப்பட்டது.

வலமுலையோ இடமுலையோ பெரிது? - ஒரே முதற் பொருளில் உள்ள சினைகள் பற்றியது. ஏனைய பண்பு, தொழில், காலம், இடம், பொருள் என்பன பற்றிய உதாரணங்கள் முறையே கொடுக்கப்பட்டுள்ளன. இவை இவ்வுரையிலேயே காணப்படுகின்றன.

**கல்லாடனார் உரை**

**செப்பு வினா மரபு**

***16. செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு அப்பொருள் ஆகும்; உறழ்துணைப் பொருளே.***

என்-எனின், செப்புவானொடு வினாவுவானிடைக் கிடந்ததொரு மரபு இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ-ள்: செப்பின்கண்ணும் வினாவின்கண்ணும் சினைக் கிளவிக்கும் முதல்கிளவிக்கும் அவ்வப்பொருளுக்கு அவ்வப் பொருளே ஆம், ஒன்றனோடு ஒன்றைப் பொருவிக் கூறும் அளவிற்று ஆகிய பொருள் எ-று.

எ-டு : கொற்றன் மயிர் நல்லவோ சாத்தன் மயிர் நல்லவோ என வினாவின இடத்துக் 'கொற்றன் மயிரின் சாத்தன் மயிர் நல்ல' - 'சாத்தன் மயிரின் கொற்றன் மயிர் நல்ல' என்று இறுக்க. பிறவும் அன்ன. இது சினைநிலைக்கிளவி. கொற்றன் நல்லனோ, சாத்தன் நல்லனோ என வினவின இடத்துச் 'சாத்தனின் கொறறன் நல்லன்' -'கொற்றனின் சாத்தன் நல்லன்' என இறுக்க. இது முதல்கிளவி.

சினை என்பது உறுப்பு. முதல் என்பது அவ்வுறுப் பினை உடையது. 'அப்பொருள் ஆகும்' என்றதற்குப்

பொருள் சினைக்குச் சினையும், முதற்கு முதலும் என்பது அன்றி, அவ்வச்சினைக்கு அவ்வச்சினையும் அவ்வம்முதற்கு அவ்அவ் முதலும் என்பது கொள்ளப்படும்.

சினை முற்கூறிய அதனான் அவ்வச்சினைக்கு அவ்வச்சினை கூறாது முதலொடு கூறுதலும் உள என்பது கொள்ளப்படும்.

எ-டு. : இவள் கண் நல்லவோ கயல் நல்லவோ ? என வரும்.

உறழ்பொருள் என்னாது துணை என்ற அதனால் உவமத்துக்கண்ணும் சினைமுதல்கள் தம்மின் மயங்காமல் கூறுக என்பது கொள்ளப்படும். இன்னும் அதனானே, அச்சினை முதல் பொருள்களை எண்ணும் இடத்தும் இனம் ஒத்தனவே எண்ணுக என்பதூஉம் கொள்ளப்படும்.

உவமம், வினை பயன் மெய் உரு என நான்கு வகைப்படும்.

எ-டு. : புலி பாய்ந்தாங்குப் பாய்ந்தான், மழை வண்கை, துடிபோலும் இடை, பொன் போலும் மேனி என வரும்.

இவற்றுள் சினை முதல் மயங்கக் கூறினவும் இவ்விலேசான் அமைத்துக் கொள்ளப்படும்.

இனி எண் : முத்தும், மணியும், பவளமும், பொன்னும் என எண்ணுக. இதற்கு அமைதி உண்டேனும் கொள்க.

இச்சூத்திரத்தான் சொல்லியது, செப்பினையும் வினாவினையும் பற்றிப் பொருவின்கண்ணும், உவமத்தின் கண்ணும், எண்ணின்கண்ணும் பிறக்கும் மரபு இலக்கணமும் மரபு வழூஉ அமைதியும் என உணர்க.

பொரூஉ என்பது ஒன்றை ஒன்றனோடு ஒக்கும் என்பது அன்றி, அதனின் இது நன்று என மிகுத்துக் கூறுவது. உவமம் என்பது ஒப்பு உணர்த்தல் என உணர்க. (16)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**16. 'செப்பினும் . . . பொருளே.'-**

சினை, முதல், உறழ் பொருள், துணை, பொரு, உவமம் என்பன விளக்கப்பட்டுள்ளன.

அப்பொருள் என்பதன் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

சினையை முற்கூறியதனான் ஒரு செய்தி கொள்ளப் பட்டுள்ளது.

இந்நூற்பாவின் கருத்து விளக்கி உரைக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

***16. செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு***
***அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.***

எ-து : செப்பும் இடத்தும் வினாவும் இடத்தும் சினைக்கிளவிக்கும் முதல் கிளவிக்கும் சினையொடு சினையும் முதலொடு முதலும் பொரூஉக.

எ-டு : 'கொற்றன் மயிர் நல்லவோ? சாத்தன் மயிர் நல்லவோ?' என்று வினாவின இடத்துக் 'கொற்றன் மயிரின் சாத்தன் மயிர் நல்ல'; 'சாத்தன் மயிரின் கொற்றன் மயிர் நல்ல' என்று செப்புக.

'இந்நங்கை முலை நல்லவோ? அந்நங்கை முலை நல்லவோ?' என்று வினாவின இடத்து, 'இந்நங்கை முலையின் அந்நங்கை முலை நல்ல'; 'அந்நங்கை முலையின் இந்நங்கை முலை நல்ல' என்று செப்புக.

கண், பல் என்னும் தொடக்கத்தனவும் அவை, இவை சினையொடு பொரீஇயவாறு.

இனி, 'கொற்றன் நல்லனோ? சாத்தன் நல்லனோ?' என்று வினாவின இடத்துக் 'கொற்றனின் சாத்தன் நல்லன்', 'சாத்தனின் கொற்றன் நல்லன்' என்று, செப்புக. அரசர் முதலாயினாரையும் இத்தன்மை கொள்க.

இனி, 'அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருள்' என்றமையான், 'இந்நங்கை கண் நல்லவோ? அந்நங்கை முலை நல்லவோ?' என்றும், 'எம் ஊர் அரசன் நல்லனோ? உம்மூர்க் கோலிகன் நல்லனோ?' என்றும் சினையும் முதலும் பிறழப் பொரூஉவற்க.

1. 'உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான்
உத்தர மாமதுரைக்கு அச்சஎன்ப - இப்பக்கம்
மாதாநு பங்கி மறுஇல் புலச்செந்நாப்
போதார் புனல்கூடற்கு அச்சு.

(திருவள்ளுவமாலை-12)

மாதாநுபங்கி ஆவார் திருவள்ளுவ தேவர்.

2. 'நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
அறநாட்டுப் பெண்டிர் அடி.'

3. 'மேல்தான் இருந்த உயர்சினை கொன்றானின்
தேற்றா ஒழுக்கம் படுவனகொல் - மாற்றார்
உறுமுரண் சாய்த்தான் உயர்குடந்தை யாட்டி
சிறுமருங்குல் செற்ற முலை.'

என்னும் பாட்டுக்கள் முதலும் சினையும் பிறழ்ந்தன ... ம் பிறழ்வு அல்ல என்று இத்துணையின பொரூ...

இந்நங்கை கண் நல்லவோ? கயல் நல்லவோ ... புலிபோலப் பாய்ந்தான் எனவும், மழை வண்கை ... துடிபோல் நடு எனவும், வேய் போலும் தோள் ... பொன்போலும் மேனி, முத்துப் போலும் பல் ... வந்தனவால் எனின், அன்னவை பிற ... அல் ...

'வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்' (உவம - 1)

என்பதனான் உறழ்க.

'அப்பொருள் ஆகும்' என்றதனான், எண்ணுமிடத்தும் முத்தும் பவளமும் மணியும் பொன்னும் என்று எண்ணுக. முத்தும் கருவிளம்பரலும் மணியும் கானங்கோழியும் பொன்னும் என்று எண்ணற்க. (16)

## ஒருவர் உரைவிளக்கம்

**16. 'செப்பினும் . . . பொருளே.'-**

இந்நங்கை கண் நல்லவோ ? அந்நங்கை முலை நல்லவோ ? எம்மூர் அரசன் நல்லனோ ? நும் ஊர்க்கோலிகன் நல்லனோ ? என்று பொரூஉவற்க என்கிறார்.

1. ***'உப்பக்கம்'*** - வடதிசையைக் குறித்தால், நப்பின்னையை மணந்த கண்ணன் வடமதுரைக்குப் பற்றுக் கோடு ஆவான். தென்திசையைக் குறித்தால் மாதா நுபங்கி என்று போற்றப்படும் வாசுகி அம்மையாரை மணந்த செந்நாப்போதாராகிய திருவள்ளுவர் நீர்வளம் பொருந்திய தென்மதுரைக்குப் பற்றுக்கோடு ஆவார். உபகேசி-நப்பின்னை; மாதாநுபங்கி - திருவள்ளுவதேவர் தேவியார்.

இப்பாடலில் நப்பின்னையை மணந்த கண்ணன் வாசுகி அம்மையாரை மணந்த திருவள்ளுவருக்கு உவமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளான்.

2. ***'நறுநீலம்'*** - நறுமணம் கமழும் நீலமலரும் நெய்தல் மலரும் கொட்டி மலரும் தீண்டுதலால், பாரியின் பறம்பு நாட்டில் வாழும் மகளிருடைய அடிகள், அம்மலர்களைத் தலையில் சூடும் பிறநாட்டு மகளிரின் தலைமயிரில் காணப்படும் நறுமணத்தைத் தம்மிடம் கொண்டிருக்கும். பறம்பு நாட்டு மகளிர் அடிகள் பிறநாட்டு மகளிரின் முடியோடு ஒப்பிடப்பட்டன.

*3. 'மேற்றான்'* - 'பகைவருடைய மிக்க மாறுபாட்டை அழித்த தலைவனுடைய மேம்பட்ட குடந்தை நகரில் வாழும் தலைவியின் சிறிய இடையை வருத்திய முலைகள், தான் மேலே தங்கியிருக்கும் உயர்ந்த கிளையின் அடியை வெட்டுபவன் செயல் போலப் பொருந்தாச் செயலை மேற்கொண்டன போலும்' என்ற கருத்து அமைந்த இப்பாடலில் முலைகளுக்குக் கொலைஞன் உவமை ஆயினவாறு.

கருவிளஃய் பரல் - கருவிளங்கனியின் உள்ளே உள்ள விதைகள்.

### பாலசுந்தரனார் உரை

**16. 'செப்பினும் . . . பொருளே.'**

'உறழ் துணைப் பொருள்' என்பதன்கண் உம்மை எஞ்சி நின்றன. உறழ்பொருளும் துணைப்பொருளும் என விரியும். சினை முதற்கிளவிக்கு என்பதும் இவ்வாறே விரியும்.

உறழ்தலாவது - விஞ்சவும் எஞ்சவும் கூறுதல்.

துணையாவது வினை-பயன்-மெய்-உரு-முதலியவற்றான் ஒப்பித்துக் கூறுதல்

### பதிப்பாசிரியர் குறிப்பு

*16.* உறழ்துணைப்பொருள் - உறழ்பொருளும் துணைப் பொருளும். உறழ்தல் - விஞ்சவும் எஞ்சவும் கூறுதல்; துணைப்பொருள் - ஒப்பிட்டுக் கூறும் பொருள்.

### இளம்பூரணர் உரை

**தகுதியும் வழக்கும்**

***17. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்***
***பகுதிக் கிளவி வரைநிலை இலவே.***

எ . . . ன், இதுவும் வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் பொருந்தி நடக்கும் இலக்கணத்தின் பக்கச் சொல் கடியப்படா என்றவாறு.

தகுதி என்பது மூன்று வகைப்படும்; மங்கல மரபினாற் கூறுதலும் , இடக்கரடக்கிக் கூறுதலும், குழூவின் வந்த குறிநிலை வழக்கும் என.

செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும் மங்கல மரபினான் கூறுதல்.

இடக்கர் அடக்கிக் கூறுதல் வருமாறு : கண்கழீஇ வருதும் எனவும், கண் குறியராய் இருந்தார், பொறை உயிர்த்தார் எனவும் வரும்.

இனிக் குழூவின் வந்த குறிநிலை வழக்கு : பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றும் கூறுதல்.

வழக்காறு இருவகைப்படும்; இலக்கண வழக்கும், இலக்கணத்தொடு பொருந்தின மரூஉ வழக்கும் என.

இல்முன் என்பதனை முன்றில் என்று தலைதடுமாறச் சொல்லுதல் இலக்கணத்தொடு பொருந்தின மரூஉ வழக்கு.

இனிச் சோழன் நாடு என்பதனைச் சோணாடு என்பதும் மரூஉ வழக்கு.

வழக்காறு இத்துணை என்பதில்லை; சிதைந்தும் சிதையாதும் பொருந்தி நடப்பன எல்லாம் அவை எனப்படும் என்றலும் ஒன்று. *(17)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**17. 'தகுதியும் வழக்கும்' -**

இலக்கணத்தின் பக்கச்சொல் - நேரே இலக்கணம் அல்லாவிடினும் இலக்கணத்தைச் சார்ந்து நன்மக்களான் ஏற்றுக்கொள்ளப்படும் சொல்.

| | |
|---|---|
| மங்கல மரபு - | உரிய சொல்லால் கூறுதலை விடுத்து ஏற்புடைய நல்ல சொல்லால் குறிப்பிடுதல். |
| இடக்கர் அடக்கு- | சான்றோர்முன் கூறத் தகாத செய்திகளை உரிய சொற்களால் குறிப்பிடாது,அப்பொருள் குறிப்பால் புலப்படும் வகையில், இழிந்த செய்தியை மறைத்துக் கூறுதல். |
| குழுவின் வந்த குறிநிலை வழக்கு - | ஒரு கூட்டத்தார் தமக்கு மாத்திரம் புலப்படும் வகையில் தங்களுக்குள் சில குறிப்பான சொற்களைப்பரிமாறிக் கொள்ளுதல். |
| கண் கழீஇ வருதும்- | பல் துலக்கி ஊத்தை, கோழை இவற்றை நீக்கிக்கொண்டு வருவோம். |
| கண் குறியராயிருந்தார்- | கன்னியின் கன்னிமையைக் கெடுத்தற்கு ஆயத்தமாக இருந்தார் என்பதனை அவளையே குறிப்பிட்டு நோக்கியவாறு இருந்தார் என்னுதல். |
| பொறை உயிர்த்தார் - | மகப்பெற்றார் என்பதனைப் பாரத்தை இறக்கிவைத்தார் என்னுதல். |
| வண்ணக்கர் - | நாணயப் பரிசோதனை செய்வார். |
| காணம் - | பொற்காசு. |
| இலக்கண வழக்கு - | சான்றோர் பேச்சினும் எழுத்தினும் காணப்படும் தூய அமைப்பு. |

இலக்கணத்தொடு

பொருந்திய மரூஉ - திரிந்து வந்தாலும் இலக்கண நூலில் இடம்பெறுதல்.

இல்முன் - முன்றில் என முன்பின் மாறி வருதலுக்குத் தொல்காப்பியத்தில் விதி உள்ளது.

'முன்என் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்என் கிளவிமிசை றகரம் ஒற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே'. (எ. 356)

சோழ நாடு - சோணாடு. இஃது இலக்கணத்தொடு பொருந்தா மரூஉ. சோழன்+நாடு=சோணாடு என்று ஆவதற்கு இலக்கணவிதி இல்லை. இதனைத் தொல்காப்பியர் 'வழங்கியல் மருங்கின் மருவொடு திரிந' (எ. 484) என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறார்.

வழக்காறு என்பதன்கண் சான்றோர் வழக்கு மாத்திரம் அன்றிப் பொதுமக்கள் சிதைத்தும் சிதைக்காமலும் பயன் படுத்தும் சொற்களை எல்லாம் கொள்ளலாம் என்ற கருத்தும் உண்டு.

### சேனாவரையர் உரை

### இயல்பு வழக்கும் தகுதி வழக்கும் அமையும்வகை

17. ***தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்***
***பகுதிக் கிளவி வரைநிலை இலவே.***

*(இ-ள்)* : தகுதி பற்றியும், வழக்குப் பற்றியும் நடக்கும் இலக்கணத்தின் பக்கச் சொல் கடியப்படா என்றவாறு.

தகுதி என்பது, அப்பொருட்கு உரிய சொல்லான் சொல்லுதல் நீர்மை அன்று என்று அது களைந்து தக்கதொரு வாய்பாட்டான் கூறுதல். அது செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், கெட்டதனைப் பெருகிற்று என்றலும் என இத்தொடக்கத்தன.

வழக்கு என்பது, காரணம் இன்றி வழங்கற்பாடேபற்றி வருவது. பண்பு கொள் பெயர் ஆயினும், பண்பு குறியாது சாதிப்பெயராய் வெள்ளாடு, வெண்களமர் கருங்களமர் என வருவனவும், குடத்துள்ளும் பிற கலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிது என்னாது சில என்றலும், அடுப்பின் கீழ்ப்புடையை மீயடுப்பு என்றலும், பிறவும் வழக்காறாம்.

பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றலும் வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும் முதலாகிய குழூவின் வந்த குறிநிலை வழக்கும், கண்கழீஇ வருதும் - கால்மேல் நீர் பெய்து வருதும் - என்னும் தொடக்கத்து இடக்கர் அடக்கும் தகுதி என்றும், மரூஉ முடிபு வழக்காறு என்றும் உரை யாசிரியர் அமைத்தாரால் எனின், குழூவின் வந்த குறிநிலை வழக்குச் சான்றோர் வழக்கின்கண்ணும் அவர் செய்யுட் கண்ணும் வாராமையின் அமைக்கப்படா ஆகலானும், இடக்கர் அடக்கு 'அவையல் கிளவி ' (சொல்-442) எனவும் 'மறைக்குங்காலை' (சொல்-443) எனவும் முன்னர் அமைக்கப் படுதலானும், மரூஉ முடிபு எழுத்ததிகாரத்துக் கூறப்பட்டமை யானும், அவர்க்கு அது கருத்து அன்று என்பது.

கருமை முதலாயின ஒரு நிகரன அன்மையின் காக்கையொடு சார்த்திக் களம் பழத்தை விதந்த துணை யல்லது காக்கைக்கு வெண்மை நேராமையின் காக்கையிற் கரிது களம்பழம் என்புழிக் கரிது வெளிது ஆயிற்று அன்று ஆகலான் வழு அன்று.

கிழக்கு, மேற்கு என்பன வரையறை இன்றி ஒன்றனொடு சார்த்திப் பெறப்படுவன ஆகலின், ஒன்றற்குக் கீழ்ப்பாலதனைப் பிறிதொன்றற்கு மேற்பாலது என்றலும் வழு அன்று.

சிறு வெள்வாய் என்பது இடுகுறி. கருவாடு என்பதும் அது. அதனான் இவை வழக்காறு என அமைக்கப்படா ஆயினும், உரையாசிரியர் பிறர் மதம் உணர்த்திய கூறினார் என்பது.

தத்தமக்குரிய வாய்பாட்டான் அன்றிப் பிற வாய் பாட்டான் கூறுதல் வழுவாயினும், அமைக என மரபுவழு அமைத்தவாறு. (17)

## சேனாவரையர் உரைவிளக்கம்

### 17. தகுதியும் . . . இலவே-

தகுதி - மங்கல வழக்கு

வழக்கு - காரணம் நோக்காது முன்னோர் வழங்கியவாறே கொள்வது.

வெள் யாடு - யாட்டின் ஓர் இனம். இது கருநிறத்ததாகவும் இருக்கும்.

வெண்களமர் - வேளாளர்; கருங்களமர் - புலையர். இவர்கள் முறையே கருநிறத்தவராகவும் வெண்ணிறத்தவராகவும்கூட இருக்கலாம்.

சிறுநீர் என்றால் பொருள் வேறுபடுவதால் சிலநீர் என்பது வழக்கு.

அடுப்பின் கீழ்ப்புறத்து இணையடுப்பை மேற்புற இணையடுப்பு என்று கூறுவதும் காரணம் பற்றாது வழக்காறு பற்றியே அமைவதாம்.

உரையாசிரியர் மங்கலத்தோடு, இடர்க்கர் அடக் கலையும், குழூஉக் குறியையும் தகுதியுள் அடக்கினார். இடக்கர் அடக்கல்பற்றிப் பின் சொ. 442, 443ஆம் நூற்பாக்களில் குறிப்பிடப்படுவதால், அதனை இங்குக் கூறுவது பொருந்தாது. குழூஉக்குறி சான்றோர் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் காணப்படாமையான் அதனை இங்கு எடுத்து விளக்குதலும் பொருந்தாது என்று உரையாசிரியர் கருத்து சேனாவரையரால் மறுக்கப்பட்டது.

உரையாசிரியர் மரூஉ முடிபையும் வழக்காற்றுள் அடக்கினார். மரூஉ முடிபு எழுத்ததிகாரத்தில் 111, 250, 251, 355, 483 ஆம் நூற்பாக்களில் ஆசிரியர் கூறியிருத்தலால் அதனை இங்கு மீண்டும் கூறுதல் கூறியது கூறலாம் ஆதலின் அதுவும் பொருந்தாது என்பர் சேனாவரையர்.

சேனாவரையர் கூறியது பொருத்தம் அன்று என்பது சாத்திரியாரின் சொல்லதிகாரக் குறிப்பினுள் விளக்கப் பட்டுள்ளது. ஆண்டுக் காண்க

'கருமை முதலாயின' என்பது தொடங்கி இந்நூற்பா இறுதிவரை கூறப்பட்டன பதிப்பில் உள்ள உரையாசிரியர் உரையில் காணப்பட்டிலது.

'காக்கையின் கரிது களம்பழம்' என்றால் காக்கை கருநிறத்தது. களம்பழம் காக்கையைவிடக் கருநிறத்தது என்பது பொருளாகுமே அன்றிக் காக்கை வெண்ணிறத்தது என்று பொருள் தாராது. கிழக்கு, மேற்கு என்பன தனிப்பட்ட இடவரையறைச் சொற்கள் அல்ல. ஓர் ஊருக்குக் கிழக்கில் உள்ள இடம் மற்றோர் ஊருக்கு மேற்கில் உள்ளதாகவும் இருக்கலாம். சிறுவெள்வாய் என்பது நீண்ட கரிய தலைமயிருக்கு அமைந்த இடுகுறிப்பெயர். இவை எல்லாம் வழாநிலைகளே. இவற்றை வழுவமைக்க வேண்டிய தேவை இல்லை. இவற்றை உரையாசிரியர் பிறர் கருத்தாகக் குறிப்பிட்டுள்ளார் என்றே கொள்ளுதல் வேண்டும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**மரபுவழு அமையுமாறு**

17. ***தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்***
***பகுதிக் கிளவி வரைநிலை இலவே.***

இது மரபுவழு அமையுமாறு கூறுகின்றது.

இ-ள்: தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும் - ஒரு பொருட்கு உரிய சொல்லால் பட்டாங்கே சொல்லுதல் நீர்மை அன்று என்று அதுகளைந்து அதற்குத் தக்கதொரு வாய்பாட்டான் கூறுதலையும், ஒருகாரணம் இன்றி வழங்கற் பாடே பற்றி வருவதனையும் பற்றி நடக்கும்; பகுதிக்கிளவி - இலக்கணத்தின் பக்கச்சொல் வரைநிலை இல- கடியப்படா என்றவாறு.

செத்தாரைத் துஞ்சினார் என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், கெட்டதனைப் பெருகிற்று என்றலும் போல்வன தகுதி.

பண்பு குறியாது சாதிப்பெயராய், 'வெள்யாடு' 'வெண்களமர்' 'கருங்களமர்' எனவருவனவும், குடத்துள்ளும் பிறகலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிது என்னாது சில என்றலும், அடுப்பின் கீழ்ப்புடை அடுப்பை மீஅடுப்பு என்றலும் போல்வன வழக்காம். *17*

### நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**17. தகுதியும் வழக்கும் -**

தகுதி- உரியசொல்லான் சொல்லப்படுவனவற்றைத் தகுதி பற்றிச் சிறப்பான சொற்களான் சொல்லுதல்.

'**செத்தாரின்** வேறு அல்லர்' - குறள் *926*

'கொடுஞ்சிலையான் **ஓலை**, குணமாலை காண்க *சீவக. 1041*

'ஒவ்வாச் **சுடுகாட்டு** உயர் அரங்கின் நிழல்போல் நுடங்கிப் பேய் ஆட' - *சீவக. 309*

'கெடலருங் குரைய கொற்றம் **கெடப்பிறந்ததுவும்** அன்றி' *சீவ. 1914.*

இவை உரிய சொல்லானும் சொல்லலாம் என்பதற்கு எடுத்துக்காட்டு.

வெள்யாடு என்பது வெண்மை நிறம் குறியாது, யாட்டின் ஓர் இனத்திற்கு உரிய பெயர்.

வெள்யாடு பெரும்பாலும் புலால்உண்பார் உணவுக்குப் பயன்படுதலின் வேள்வி + ஆடு வெள்ளாடு என எதிர்வுபற்றிப் பெயரிடப்பட்டது என்னும் இலக்கணக் கொத்து உரை (நூற்பா 98). "வெண்களமர் - வெள்ளாளர்; கருங்கமளர் - புலையர்" என்னும் ஒருவர் உரை. களமருள் கரியாரை வெண்களமர் என்றும், புலையருள் செய்யாரைக் கருங்களமர் என்றும் கூறுப என்பர் கல்லாடர்.

**களமர் என்ற சொல்**

'கருங்கை வினைஞரும் **களமரும்** கூடி' *(சிலப்-10: 125)* என மருத நில மக்களையும்,

'கள்ஆர் **களமர்** இருஞ்செரு மயக்கமும்' *(மதுரை - 393)* என வீரரையும்,

'**களமர்** கதிர்மணி காலேகம் செம்பொன்
வளமனை பாழாக வாங்கி' - *(பு.வெ.மா.3:15)*
என அடிமைகளையும் குறிக்கும்.

'பன்னீரான் கால்புனல் பரந்துஊட்டி இறந்தபின்,
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற'
*(கலி 34 : 1-2)*-

"அகன்ற யாறுகள் பலவாகிய நீரோடு கால்களாலே தம்மிடத்தே வந்து பரக்கும் நீரைத் தாம் எங்கும் பரந்து ஊட்டி, அந்நீர் வற்றின பின்பு சிலவாகிய நீரொடு கால்களாலே அறல் ஒழுக,அவ்வாறுகள் அழகுபெறும்படியாக.

"பன்னீர், சின்னீர் - ஆகுபெயரான், நீர் ஓடு கால்களை உணர்த்தின. இது தகுதியும் வழக்கும் (சொ.17) என்னும் சூத்திரத்தில் கூறிய மரூஉ - நச்." என்பதனை நோக்குக.

கீழ் என்பது கிழக்கு. மீ என்பது மேற்கு.

அடுப்பின் கிழக்குப் பக்கத்தை மேற்குப்பக்கம் எனல்.

மேற்கு + கரை - மீகரை - எ. 432 நச்.

**தெய்வச்சிலையார் உரை**

**உறழ் பொருட்கண் வழுவமைதி**

**17. *தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே.***

மேல் சொல்லப்பட்ட உறழ்பொருட்கண் வரும் வழூ அமைத்தல் நுதலிற்று.

இ-ள்: சினை முதல் ஆகிய பொருள்களை அவ்வப்பொருளோடு உறழ்தலே அன்றித் தகுதியையும் வழக்கினையும் தழுவினவாய் நடக்கும் ஒரு கூற்றுச்சொல் விலக்கும் நிலைமை இல எ-று.

சினை முதல் கிளவியும், உறழ்பொருளும் அதிகாரத் தான் வந்தன.

தகுதி ஆவது இதற்கு இது தகுமோ எனப் பண்பினான் ஆதல் தொழிலினான் ஆதல் உறழ நிற்பது. வழக்கு ஆவது ஒப்புமை இன்றி உலகத்தார் பயில வழங்கப்படுவது.

அவற்றுள் தகுதிபற்றி வந்த வினா : இந்நங்கை கண் நல்லவோ இக்கயல் நல்லவோ என வருவது - இது பண்பு. இம் முகிலோ இவன் கையோ கொடுக்கவல்லது - இது தொழில்.

செப்பு வருமாறு : கயலின் கண் நல்ல என்றானும், ஒக்கும் என்றானும் உரைப்பது.

இனி, வழக்குப்பற்றி வினா வருமாறு : கரிதோ வெளிதோ, இருப்பேனோ போவேனோ, ஊரோ காடோ, பகலோ இரவோ எனவும், தேவராய் வாழ்தல் நன்றோ நரகத்துள் உறைதல் நன்றோ எனவும், பிறவும் இவ்வாறு ஒன்றின் ஒன்று பொருத்தம் இன்றி உலக வழக்கின்கண் வருவன கொள்க.

செப்பு வருமாறு : கரிது அன்று வெளிது என்றானும், வெளிது அன்று கரிது என்றானும், இவ்வாறே பிறவாற்றானும் உரைப்பன.

இவை மேல் சொல்லப்பட்ட இலக்கணத்தின் வழுவு தலின் அமைதி ஆயிற்று. (17)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**17. 'தகுதியும் வழக்கும்' -**

சினை முதலாகிய பொருள்களை அவ்வப்பொருள்களோடு ஒப்பிடுதலே யன்றி, பண்பினானும் தொழிலினானும் ஒப்பிடும் தகுதியும், ஒப்புமையின்றி உலகத்தார் வழங்கும் இருவகையாக இணைந்த சொற்களும் ஏற்றுக் கொள்ளத் தக்கன என்கிறார்.

இவன்கண் நல்லவோ கயல் நல்லவோ? - பண்பு பற்றி ஒப்பிடுதல்.

இம்முகிலோ இவன்கையோ கொடுக்கவல்லது? - தொழில்பற்றி ஒப்பிடுதல்.

வழக்கின் ஒன்றினொன்று பொருத்தமின்றி வருவன எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

'நரகத்துள் உறைதல் நன்றோ? தேவராய் வாழ்தல் நன்றோ?' - சீவக - 1235

இவை செப்பு வினா இலக்கணத்து வழுவுதலின் அமைக்கப்பட்டன. இச்செய்தியும் இவ்வுரையிலேயே காணப்படுகிறது.

## கல்லாடனார் உரை

### தகுதியும் வழக்கும்

*17. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்*
*பகுதிக் கிளவி வரைநிலை இலவே.*

என்-எனின், மரபு வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தகுதியினையும் வழக்கினையும் பொருந்தி நடக்கும் இலக்கணத்தின் பக்கச் சொல் நீக்கும் நிலைமை உடைய அல்ல என்றவாறு.

தகுதி என்பது மங்கல மரபினான் கூறுதலும், இடக்கர் அடக்கிக் கூறுதலும், குழூவின் வந்த குறிநிலை வழக்கும் என மூன்று கூறுபடும்.

எ-டு. : செத்தாரைத் துஞ்சினார் என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும் மங்கலமரபு. கண் கழீஇ வருதும், கால்மேல் நீர் பெய்து வருதும், கைக் குறியராய் இருந்தார், பொறை உயிர்த்தார், 'புலி நின்று இறந்த நீர் அல் ஈரத்து', கருமுகமந்தி, செம்பினேற்றை என்பன இடக்கர் அடக்கிக் கூறல். பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றலும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும், யானைப்பாகர் ஆடையைக் காரை என்றலும் குழூவின் வந்த குறிநிலை வழக்கு.

வழக்காறு, இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கும்- மரூஉ வழக்கும் -என இருவகைப்படும்.

எ-டு : முன்றில், மீகண் - என்பன இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு. அருமருந்து அன்னானை அருமந்தன் - என்றலும், நட்டு வியந்தானை நட்டியந்தான் என்றலும், பொதுவில் என்பதனைப் பொதியில் என்றலும், மலயமான் நாட்டை மலாடு என்றலும், சோழ நாட்டைச் சோணாடு என்றலும் என இவை மரூஉ வழக்கு.

இவ்வாறு சொல் சிதையச் சொல்லுவன அன்றிப் பொருள் சிதையச் சொல்லுவனவும் மரூஉ வழக்கு என்று கொள்ளப்படும். நீண்ட கரிய மயிரினைச் சிறுவெள்வாய் என்றும், களமருள் கரியாரை வெண்களமர் என்றும், புலைக்களமருள் செய்யாரைக் கருங்களமர் என்றும், நீரினையும் பாலினையும் ஓரோவழிச் சில பல என்றும், அடுப்பின் கீழ்ப்புடையை மீஅடுப்பு என்றும் கூறுவன.

இலக்கண வாய்பாடு இன்றி மருவிய வாய்பாடும் தாமே இலக்கணமாகக் கூறுவன இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ எனப்படும். இலக்கண வாய்பாடும் உள்வழிச் சொல் சிதையவும் வருவன மரூஉ வழக்கு எனப்படும்.

தகுதி என்பது, பட்டாங்குச் சொல்லுதல் நீர்மை இன்மை நோக்கி, அவ்வாய்பாடு களைந்து, இவ்வாறு சொல்லுதும் என்று உடன்பட்டுச் சொல்லி வருவது.

வழக்காறு என்பது வழங்கற்பாடே மேற்கொண்டு ஒரு காரணம் நோக்காது வாய்பாடு படுத்துப் பயிலச் சொல்லி வருவது.

இச்சூத்திரத்தால் சொல்லியது; பரந்துபட்ட மரபு வழூஉக்களுள் சிலவற்றைப் பொருட்காரணம் பற்றியும், நன்மக்கள்தாம் பயில வழங்குதல் ஆகிய காரண வழக்குப் பற்றியும் வழு அமைத்தவாறு என உணர்க.

இவற்றுள் தகுதி என்றது பொருள்பற்றி அமைந்தது. வழக்காறு வழங்குதல் பற்றி அமைந்தது. யானை, யாறு, யாடு என்னும் இன்னோரன்னவற்றை ஆனை, ஆறு, ஆடு என்னும் இன்னோரன்னவாகக் கூறுதலும் வழூக்காறு என இதனுள் கொள்ளப்படும். பிறவும் அன்ன. அவை சான்றோர் சொன்ன செய்யுளுள் பெரும்பான்மை காணப்படாமையின், இதனுள் கொள்ளாது 'கடிசொல் இல்லை காலத்துப் படினே' *(எச்ச-50)* என்புழிக் கொள்ளப்படும். *(17)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**17.'தகுதியும் . . . இலவே.'-**

பக்கச்சொல் - உரிய சொல்லுக்குச் சார்பாக வரும் சொல். நேர்ப்பொருள் ஆகாது போந்த பொருள் ஆதல்.

தகுதி மூன்று - மங்கலம், இடக்கர் அடக்கு, குழூஉக்குறி.

கண் கழீஇ வருதும் - பல் துலக்கி ஊத்தையைப் போக்கிக் கோழையைக் காறி உமிழ்ந்து பின் முகத்தைக் கழுவிக் கண்ணின் பீளை முதலியன நீக்கி வருதும்.

கால்மேல் நீர் பெய்து வருதும் - மலங்கழித்துப் பின் கழுவிக்கொண்டு கைகால்களைக் கழுவி வருதும்.

கை குறியராயிருந்தார் - சிறுநீர் கழித்துக் கொண்டிருந்தார்.

பொறை உயிர்த்தார் - குழந்தையைப் பெற்று வயிற்றுப் பாரத்தை நீக்கினார்.

நீர் அல் ஈரம் - சிறுநீர் கழித்ததால் நிலம் ஈரப்பட்ட நிலை.

கருமுகமந்தி, செம்பின் ஏற்றை - பெண் குறி, ஆண் குறி.

வண்ணக்கர் - நாணயப் பரிசோதனை செய்வார்.

காணம் - பொற்காசு.

குறுநிலை வழக்கு என்பது தவறான பாடம். குறிநிலை வழக்கு என்பதே ஏற்றது.

மங்கலம் முதலிய மூன்றும் விளக்கப்பெறாமல் எடுத்துக்காட்டுக்கள் வாயிலாகவே உணர்த்தப்பட்டுள்ளன.

வழக்கு - இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு, இலக்கணத்தொடு பொருந்தா மரூஉ வழக்கு, சொற் பொருளுக்கு ஏலா மரூஉ வழக்கு என மூவகைப்படும்.

முன்றில், மீகண் - இவை இவ்வாறு வழங்க இலக்கணத்தில் விதி உள்ளது.

ஒலித்தல் எளிமை கருதிச் சில எழுத்துக்களை விடுத்து ஒலிக்கும் சொற்கள் இலக்கணத்தொடு பொருந்தா மரூஉ. சான்றோரொடு நட்புச்செய்து உயர்ந்தான் என்னாது 'நட் டுய்ந்தான்' என்பது போல்வன இது.

கரிய மயிரினைச் சிறுவெள்வாய் என்பதும், வேளாளரை வெண்களமர் என்பதும், புலையரைக் கருங்களமர் என்பதும், சிறிதளவு நீரினைச் சில நீர் எனலும், கொடியடுப்பின் கிழக்குப்புற இணைப்பை மேற்புற இணைப்பு என்று கூறுவதும் சொற்பொருளுக்கு ஏலா மரூஉ வழக்கு. கருநிறமுடைய வேளாளரும் வெண்களமர் எனவும், செந்நிறமுடைய புலையரும் கருங்களமர் என்று வழங்கப் பட்டனர்.

மரூஉ, தகுதி, வழக்காறு என்பன விளக்கப்பட்டன. இச்சூத்திரக் கருத்துத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. யானை முதலியன ஆனை முதலாக வழங்கப் பெறுதல் புதியன புகுதலாம்.

## ஒருவர் உரை

*17. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே.*

எ-து : தகுதி பற்றியும், வழக்குப் பற்றியும் பொருந்தி நடக்கும் இலக்கணப் பகுதிச் சொல் கடியப்படா.

தகுதி இரண்டு வகைப்படும் : மங்கல மரபினான் கூறுதலும், இடக்கர் அடக்கிக் கூறுதலும் என.

செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், விளக்குப் பெருகிற்று என்றலும் இத்தொடக்கத்தன மங்கல மரபு.

கண்கழீஇ வருதும், கால்மேல் நீர் பெய்து வருதும், அந்திதொழுது வருதும், கைக்குறியராய் இருந்தார், பொறை உயிர்த்தார் என்னும் தொடக்கத்தன இடக்கர் அடக்கு.

இனி, வழக்காவது நான்கு வகைப்படும். அவை இலக்கண வழக்கு, இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு, மரூஉ வழக்கு, குழுவின் வந்த குறுநில வழக்கு என. (‘குறிநிலை வழக்கு’ என்றலே பொருந்தும்.)

அவற்றுள் நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், சோறு, கூழ், பால், பாளிதம், மக்கள், மரம், தெங்கு, கமுகு- இத் தொடக்கத்தன இலக்கண வழக்கு.

‘இல்முன்’ என்பதனை ‘முன்றில்’ என்றும், ‘கண்மீ’ என்பதனை ‘மீகண்’ என்றும், ‘யாவர்’ என்பதனை ‘யார்’ என்றும் வழங்குதல் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு.

‘அருமருந்து அன்னான்’ என்பதனை ‘அருமருந்தான்’ என்றும், ‘பொதுவில்’ என்பதனைப் ‘பொதியில்’ என்றும் ‘மலையமான் நாடு’ என்பதனை ‘மலாடு’ என்றும், ‘சோழன் நாடு’ என்பதனைச் ‘சோணாடு’ என்றும் சொல்லுதல் மரூஉ வழக்கு.

பொற்கொல்லர் பொன்னைப் 'பறி' என்றலும், வண்ணக்கர் காணத்தை 'நீலம்' என்றலும், யானைப் பாகர் ஆடையைக் 'காரை' என்றலும், இழிசினர் சோற்றைச் 'சொன்றி' என்றலும் குழுவின்வந்த குறுநில வழக்கு.

இனி, ஒரு சாரார் குழுவின் வந்த குறுநில வழக்கும், இடக்கர் அடக்கலும், மங்கல மரபினான் கூறுதலும் என்ற இம்மூன்றையும் தக்கவாறு சொல்லுதலான் தகுதி என்று ஆக்கி, ஒழிந்தவற்றை எல்லாம் வழக்காறு என்ப.

இனி, அவர் வழக்காறு சொல்லும்படி : கரிது வெளிது என்றும், கிழக்கு மேற்கு என்றும், சிறிது பெரிது என்றும், கருமை செம்மை ஆகிய பண்பினால் அன்றி வெள்ளாளரை வெண்களமர் என்றும், புலையரைக் கருங்களமர் என்றும், சாதிபற்றி வெள்ளாடு என்றும் சொல்லுதல் வழு அன்று, செவ்வழக்கு என்ப, 'தழீஇயின ஒழுகும்' என்றமையான். 17

## ஒருவர் உரைவிளக்கம்

**17. 'தகுதியும் . . . இலவே.'**

தகுதி மங்கலமரபும் இடக்கர் அடக்கலும் என்ற இரண்டே என்கிறார்.

வழக்கு - இலக்கண வழக்கு, இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு, மரூஉ வழக்கு, குழுவின் குறிநிலை வழக்கு என நால்வகைப்படும் என்கிறார்.

விளக்கு அவிந்தது என்பதனை விளக்குப் பெருகிற்று என்றல் மங்கல வழக்கு.

அந்தி தொழுது வருதும் - அந்தியில் மலசலம் கழித்து உடலைத் தூய்மை செய்துகொண்டு இறைவழிபாடு செய்து வருதும் என்னும் பொருளது.

இல்முன் 'முன்றில்' என வருவதற்கும் - 'இல்என் கிளவி' - எ. 375

கண்மீ 'மீகண்' என வருவதற்கும் - 'இடம்வரை கிளவி முன்' - எ. 251

யாவர் என்ற வினாப்பெயர் யார் என வருவதற்கும் - 'பலர் அறிசொல்முன்' - எ. 172 இலக்கண விதிகள் உள்ளன.

அருமந்த, பொதியில், மலாடு, சோணாடு எனத்திரிந்து வழங்குவதற்கு இலக்கண விதி இல்லை. அவை சான்றோர் பேச்சில் பழகி வருவதனான் வழூவமைதியாகக் கொள்ளப் படுகின்றன.

பறி, நீலம், கூறை, சொன்றி - குழூவின் வந்த குறிநிலை வழக்கு.

குழூஉக்குறி, இடக்கர் அடக்கு, மங்கலம் என்பன தகுதி என்றும் பிற எல்லாம் வழக்காறு என்றும் கூறுவாரும் உளர்.

கரிது வெளிது; கிழக்கு மேற்கு; சிறிது பெரிது; காராட்டைச் சாதி பற்றி வெள்ளாடு என்றல் - என்பன செவ்வழக்கைப் பின்பற்றிக் கூறப்பட்டமையால் அவை செவ்வழக்காகிய வழா நிலையே.

## சாத்திரியார் உரை

**17. 'தகுதியும் . . . இலவே.'-**

உரையாசிரியர் கூறியவற்றுள் சேனாவரையர் மங்கல மரபினான் கூறுதலை மட்டும் ஏற்றுக்கொண்டு, இடக்கர் அடக்கிக்கூறுதலும், குழூவின் வந்த குறிநிலை வழக்கும் உரையாசிரியர் சொல்வது பொருத்தம் இல்லை எனக்கூறி, அதற்குக் காரணம். .குழூவின் வந்த குறிநிலை வழக்குச் சான்றோர் வழக்கின்கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படா ஆகலானும், இடக்கர் அடக்கு 'அவை அல்கிளவி மறைத்தனர் கிளத்தல்' (சொ. 442) எனவும், 'மறைக்குங்காலை மரீஇயது ஒராஅல்' (443) எனவும் முன்னர் அமைக்கப்படுதலானும், அவர்க்கு அது கருத்து அன்று. என்று கூறுகிறார்.

குழூவின் வந்த குறிநிலை வழக்குச் சான்றோர் செய்யுட்கண் காணப்படாவிடினும், அவர்தம் வழக்குக்கண் வாரா என்று கொள்வதற்கு இடம் இன்மையான் சேனாவரையர் சொல்லுவது பொருந்துமா? பண்டை உரையாசிரியர் ஒருவர் அதனை வழக்கின் கண்ணும் கொண்டார்.

இடக்கர் அடக்கலைப்பற்றி 'அவையல்கிளவி' என்னும் சூத்திரத்துக் கூறினாராயினும் இச்சூத்திரத்தில் கொண்டுள்ள பொருளுக்கும் அச்சூத்திரத்தில் கூறிய பொருளுக்கும் சிறிது வேறுபாடு உள்ளது. 'அவை அல்கிளவி' என்னும் சூத்திரத்தில் 'அவையில் கூறத்தகாத சொற்களைக் கூறக்கூடாது' என்பது சிறப்புப் பகுதி. இச்சூத்திரத்திலோ 'அச்சொற்களுக்காகக் கூறும் தகுதிச் சொற்கள் தள்ளத் தக்கன அல்ல' என்பது சிறப்புப் பகுதி. 'அவையல்கிளவி' என்னுமிடத்து மறைத்தலைச் சிறப்புப் பகுதியாகக் கொள்ளாக்கால் மறைத்தல்,வேறொன்று கிளத்தல் என்ற இரண்டு விதேயங்கள் கொள்ளவேண்டிவரும். அது வாக்கிய பேதம் என்னும் குற்றத்திற்கு இடனாகும். இனி, இச்சூத்திரத்தானே அவையல் கிளவியைக் கிளக்கவேண்டும் முறை பெறப்படுதலான் 'அவையல்கிளவி' என்னும் சூத்திரம் வேண்டா எனின், செத்தார் என்னும் அமங்கலச் சொல்லும் இலக்கணமாகக் கொண்டு வழங்கப்படுதல் போல, 'அவையல் கிளவி' தகுதிச் சொல்லான் வழங்கப் படுதலன்றி மறைக்கப்படாமலே வழங்குதலும் இலக்கண மாகிவிடும் ஆதலான், அதனை விலக்குதற்கு அவையல் கிளவி என்னும் சூத்திரமும் வேண்டும் என்க.

சேனாவரையர் இலக்கண வழக்கை மட்டும் உடன்பட்டு மரூஉ முடிபு எழுத்ததிகாரத்துக் கூறப் பட்டமையான் இச்சூத்திரத்துக்கு விஷயமாக உரையாசிரியர் உரைத்தது பொருத்தமில்லை என்று கருதினார்.

முன்+இல்=முன்றில். இஃது இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ. (எழு. 355) இல்லும் முன்னும் தொகையாகுங்கால் தலைதடுமாறி முன்றில் என்று ஆகும் என்று அச்சூத்திரத்தில் சொல்லப்படவில்லை. இல்லும் முன்னும் தொகைமொழி ஆகுங்கால் உண்டாகும் மாறுதல் எழுத்ததிகாரத்துக்கு உரிய விஷயம் அன்று; சொல்லதிகாரத்துக்குத்தான் விஷயம். எச்சவியலில் தொகையைப் பற்றிச் சொல்லுமிடத்தோ சொற்கள் தடுமாறி வருவதைப் பற்றிச் சொல்லவில்லை. ஆகையால் உரையாசிரியர் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கை இச்சூத்திரத்தின்கண் அடக்கியது பொருத்தம் என்றே தோன்றுகிறது. இலக்கணத்தொடு பொருந்தா மரூஉ வழக்கு 'வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்' (எ. 483) என எழுத்ததிகாரத்திற்கே உரிய செய்தியாதலின், அதனை இங்குச் சொல்லியிருப்பது பொருத்தமாகத் தெரியவில்லை. மாணாக்கன் படிக்கும் போது இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கைத் தவிர வேறு மரூஉ வழக்கும் உண்டுகொல் என்று ஐயுற, ஆசிரியன் மேற்சொன்ன வாக்கியத்தைச் சொல்லியிருக்கலாம். அதனையும் மாணாக்கன் ஏட்டில் எழுதப் பின்னர் அதுவும் மூலத்தொடு சேர்ந்திருக்கவேண்டும் என்பது எனது துணிபு.

பகுதிக் கிளவி - பகுதி என்பது சார்பு, பாகம் என்னும் பொருளது ஆதலால், சொல் தனக்கு ஆற்றலாக உள்ள பொருளை நேரே காட்டாது சார்பான பொருளைக் காட்டுவது என்று கொள்ளலாம்.

### பாலசுந்தரனார் உரை

**17. 'தகுதியும் . . . இன்றே.'** -

உறழ்ச்சியாகவும் ஒப்பாகவும் செப்பும் வினாவும் பற்றிவரும் தொடர் ஆக்கத்தின்கண் சினைப்பொருளும் முதற்பொருளும் தகுதியினையும் வழக்கினையும் தழுவியன வாய் மயங்கி நிகழும் ஒரு கூற்றுச்சொற்கள் நீக்கப்படும் நிலையிலவாகும்.

(எ-டு.) கூற்றினும் கொடிது அவள் கூர்விழி - கொடிதோ?
அவன் கோலினும் தண்ணிய தடமென் தோளே-
தண்ணியவோ?

இவை தகுதி பற்றி முதலும் சினையும் மயங்கிவந்து ஆக்கம் பெற்றன.

கயல் ஒக்கும் இவள் கண்.
மதி ஒக்கும் இவள் முகம்.
கார் புரையும் இவள் கூந்தல்.
'துளிதலைத் தலைஇய தளிர் அன்னோள்'.

இவை வழக்குப் பற்றி முதலும் சினையும் மயங்கிவந்து ஆக்கம் பெற்றன.

இவை தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் வருதலின் வழாநிலையே.

தகுதியாவது பயன் விளைத்தற்கண் ஒப்ப நிகழ்வது.

வழக்காவது வினை-பயன்-மெய்-உரு-முதலிய உவமை நிலைக்களன்களாகச் சான்றோர் வழங்கும் வழக்கு.

## பதிப்பாசிரியர் உரை

17. தகுதி - பயன் விளைத்தற்கண் ஒப்ப நிகழ்வது; வழக்கு - வினை பயன் மெய் உரு முதலிய உவமை நிலைக்களன்களாகச் சான்றோர் வழங்கும் வழக்கு என்று கூறிச் சினைமுதல் கிளவிகள் மயங்கி வருமாறு கூறுகிறது இந்நூற்பா என்பர் ச. பா. அவர்கள். தெய்வச்சிலையார் உறழ் பொருட்கண் காணப்படும் மயக்கத்தையும் வழக்கின்கண் ஒன்றின் ஒன்று பொருத்தம் இன்றி வருவனவற்றையும் இந்நூற்பா நுவல்கிறது என்னும் கருத்தினர். இப்புதுக் கருத்துக்களும் ஏற்புடையனவே.

## இளம்பூரணர் உரை

### பண்புகொள் பெயர்க்கொடை

***18. இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை வழக்காறு அல்ல செய்யுள் ஆறே.***

எ . . . ன், செய்யுட்கு ஆவது ஒரு முடிவு கூறுதல் நுதலிற்று.

இ-ள்: தமக்கு இனம் சுட்டா ஆகிய பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்களவை, வழக்கினது நெறியல்லன; செய்யுட்கு நெறி என்றவாறு.

உதாரணம் :

'மாக்கடல் நிவந்தெழுதரு
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ' (புறநா. 4)

எனவும்,

'வெண்கோட்டி யானை சோணை படியும்' (குறுந்.75)

எனவும் வரும்.

'வழக்காறல்ல' என்ற விதப்பினான், 'வடவேங்கடம் தென்குமரி' என்பன கொள்க. இதுவும் ஒரு சாராரின் உரை.

இனி, ஒருவன் சொல்லுவது : 'வழக்காறல்ல' என்பதனை வழக்காற்றின் அல்ல என ஐந்தாம் உருபு விரித்து, அல்ல என்பதனைப் பெயர்ப்படுத்துக் கூறும். கூறவே, வழக்கிற்கும் இனன் இல் பண்புகொள் பெயர்கள் உள என்றது போந்ததாம்.

உதாரணம் : பெருங்கொற்றன், பெருங்கூத்தன் என்பன போல்வன, வழக்கிடைப் பண்புப்பெயர் வருங்கால் குணமின்றி விழுமிதாகச் சொல்லுதற்கு வந்து நிற்கும். (18)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**18. 'இனச்சுட்டு இல்லா' -**

***'மாக்கடல்...மாதோ'***-பெரிய கடலினின்றும் மேல் நோக்கி வெளிவரும் சூரியனைப் போன்ற அழகுடையை நீ.

***'வெண்கோட்டு . . . படியும்'*** - வெண்ணிறத் தந்தங்களை உடைய யானைகள் சோணை என்ற ஆற்றில் மூழ்கி நீராடும்.

***வழக்காற்றின் அல்ல*** - வழக்காற்றின் நீங்கிய பெயர் அல்லன. எனவே, இனம்சுட்டாப் பண்புகொள் பெயர்கள் வழக்கினும் வரும். உதாரணமாக ஒரு சாதாரணமான பெருமையில்லா மனிதனை மரியாதை நிமித்தமாக அவனிடத்து இல்லாத பெருமைக்குணத்தை இணைத்துப் பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என்று கூறுதல்.

'அந்நாற் சொல்லும்' (சொ. 397) என்னும் நூற்பா உரையுள், ''இனம் இல்லாததனை இனம் உள்ளது போலச் சொல்லுதலும், இனம் உள்ளதனை இனம் இல்லாதது போலச் சொல்லுதலும், 'இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை' (சொ. 18) என்பதனுள் சொல்லிப்போந்தாம் என்று இளம்பூரணர் குறிப்பிட்டுள்ளார்; 'எடுத்தமொழி இனம்' (சொ.61) என்ற நூற்பாவினை இந்நூற்பாவிற்குப் புறனடையாகக் கொள்கிறார்.

புறனடை -புறன் + அடை = நூற்பாவின் புறத்தே அடுத்து வருவது.
புறநடை -புறம் + நடை = நூற்பாவின் புறத்தே நடைபெற்று வருவது.

இரண்டும் ஏற்ற சொற்களே. 'இது புறநடை; புறனடை என்பாரும் உளர்' என்பது இலக்கணக் கொத்து 96ஆம் நூற்பா உரையில் காணப்படுகிறது.

### சேனாவரையர் உரை

#### பண்புகொள் பெயர்க்கொடை

***18. இனச்சுட்(டு) இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா(று) அல்ல செய்யுள் ஆறே.***

*(இ-ள்)* : இனப் பொருளைச் சுட்டுதல் இன்றிப் பண்பு அடுத்து வழங்கப்படும் பெயர் வழக்குநெறி அல்ல; செய்யுள்நெறி என்றவாறு.

*(எ-டு)* : 'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும், வெண் திங்களுள் வெயில் வேண்டினும்' *(புறம்-38)* என வரும்.

பல பொருட்குப் பொதுவாகிய சொல்லன்றே ஒரு பொருட்குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது? ஞாயிறு, திங்கள் என்பன பொதுச்சொல் அன்மையின், செஞ்ஞாயிறு என்றும் வெண்திங்கள் என்றும் விசேடிக்கப்படா ஆயினும், செய்யுட்கண் அணியாய் நிற்றலின் அமைக்க என்றார்.

பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து வழக்கின்கண் இனம் சுட்டாது வருதலின் செய்யுளாறு என்றல் நிரம்பாது எனின், அவை இனம் சுட்டாமையின் வழுவாயின அல்ல, இல்குணம் அடுத்தலின் வழுவாயின.

இனம் சுட்டலாவது, இனத்தைச் சுட்டி அவற்றி னின்றும் விசேடிக்கப்படுதல். வெண்மை முதலாயின விசேடித்தலாவது அக்குணம் இல்லா இனப்பொருளின் நீக்கி அக்குணம் உடையதனை வரைந்து சுட்டுவித்தலன்றே? சுட்டப்படுவதன்கண் அக்குணம் இல்லை ஆயின் வரைந்து சுட்டுவிக்குமாறு என்னை? அதனான் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றது அன்று ஆகலின் ஈண்டைக்கு எய்தா; 'வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி' *(சொல்-27)* என்புழி ஒன்றென முடித்தல் என்பதனான் அமைக்கப்படும்.

குறுஞ்சூலி, குறுந்தடி என்னும் தொடக்கத்தன சூலி, தடி எனப் பிரிந்து நில்லாமையின் பண்புகொள் பெயர் எனப்படா. பண்பு அடாது, வடவேங்கடம் தென்குமரி, முட்டாழை, கோட்சுறா எனத் திசையும், உறுப்பும், தொழிலும் முதலாய அடை அடுத்து இனம் சுட்டாது வருவன ஒன்றென முடித்தல் என்பதனான் செய்யுளாறு என அமைத்துக் கொள்ளப்படும்.

ஒன்றனது ஆற்றலான் ஒன்று பெறப்படுதலின், வழக்காறு அல்ல என்றானும், செய்யுளாறு என்றானும் கூற அமையுமெனின் , உய்த்துணர்வது சொல் இல்வழி என மறுக்க.

பண்புகொள் பெயர் இனம் குறித்து வருதல் மரபு; அம்மரபு வழக்கின்கண் வழுவற்க என்றும், செய்யுட்கண் வழு அமைக்க என்றும் காத்தவாறு ஆயிற்று. *(18)*

### சேனாவரையர் உரைவிளக்கம்

**18. இனச்சுட்டு . . . ஆறே** -

செஞ்ஞாயிற்று . . . . . வேண்டினும் (புறநா. *38*).

(‘செஞ்ஞாயிற்றின் கண்ணே நிலவு உண்டாக வேண்டினும், வெளிய திங்களின் கண்ணே வெயில் உண்டாக வேண்டினும்’ என்பது பொருள்.)

செஞ்ஞாயிற்றுக்கு இனமான கருஞாயிறு இல்லை. வெண்திங்களுக்கு இனமான கருந்திங்கள் இல்லை. எனவே இவை இனம்சுட்டாதன. எனினும் செஞ்ஞாயிறு, வெண் திங்கள் என்று கூறுவது செய்யுளுக்கு அழகு தருவதால், அவை செய்யுள் வழக்கில் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என்பன மக்களுக்குப் பெரியோர் இட்டு வழங்கும் பெயர்கள். அவற்றைப் பிரித்துப் பொருள் செய்யாமல் ஒரே சொற்களாகிய இயற்பெயர் களாகவே கோடல் வேண்டும். ‘அவற்றுள் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன்று’ - என்ற இத்தொடர் சாத்திரியாரால் நன்கு விளக்கப் பட்டுள்ளது.

குறுஞ்சூலி, குறுந்தடி என்பன இடுகுறிப்பெயர். அவற்றையும் பிரித்துப் பொருள் செய்தல் கூடாது.

***ஒன்றெ௳ முடித்தல்*** - நூற்பாவுள் கூறிய செய்திக்கு இதுவும் தொடர்புடையது என்றுகூறி ஏற்றுக்கொள்ளும் செய்தி.

தாழை என்பது தென்னையையும், தாழம்பூக்களை உடைய முள் மரத்தையும் குறிக்கும். ஆதலின் முட்டாழை என்பது முள் இல்லாத தாழை ஆகிய தென்னையை விலக்குதற்கு வந்த அடையே என்று கொள்ளவும் இடம் உண்டு. ஆதலின் முட்டாழை என்பது இனம் சுட்டும் அடையாகக் கொள்ளப்படலாம்.

### நச்சினார்க்கினியர் உரை

### செய்யுட்கு உரிய மரபுவழு அமைதி

***18. இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை வழக்காறு அல்ல; செய்யுள் ஆறே.***

இது செய்யுட்கு மரபுவழு அமைதி கூறுகின்றது.

இ-ள்: இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர் கொடை- இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப் படுதல் இல்லாத பண்பு அடுத்து வழங்கப்படும் பெயரை ஒரு பொருட்குக் கொடுத்தல்; வழக்காறு அல்ல செய்யுள் ஆறு - வழக்கு நெறி அல்ல; செய்யுள் நெறி என்றவாறு.

உதாரணம் : செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்
வெண்திங்களுள் வெயில்வேண்டினும்
(புறநா-38 : 7, 8)

என இவை, கருஞாயிறும் கருந்திங்களும் ஆகிய இனம் இன்மையின் விசேடிக்கப்படா ஆயினும், செய்யுட்கு அணியாய் நிற்றலின் அமைத்தார்.

எனவே, வழக்கின்கண் பண்புகொள் பெயர் இனம் குறித்து வருதல் மரபு என்பதூஉம் செய்யுட்கண் வழீஇ அமைதல் மரபு என்பதூஉம் கூறியவாறு ஆயிற்று.

பண்பு அடாது, 'வடவேங்கடம் தென்குமரி' (சிறப்புப் பாயிரம்), முள்தாழை, கோள்சுறா எனத் திசையும், உறுப்பும், தொழிலும் முதலிய அடை அடுத்து இனம் சுட்டாது வருவன ஒன்று என முடித்தலான் செய்யுள் ஆறு என அமைக்க. (18)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**18. இனச்சுட்டு இல்லா -**

*சிவந்த ஞாயிற்றினிடத்தே குளிர்ந்த நிலா ஒளியை விரும்பினும்*
*வெள்ளிய சந்திரனிடத்தே கதிரவனின் வெப்ப ஒளியை விரும்பினும்*

*வடவேங்கடம், தென்குமரி - திசை பற்றிய அடை.*

*முள்ளை உடைய தாழை - உறுப்புப் பற்றிய அடை.*

*பிற உயிரைக் கைப்பற்றும் சுறா - தொழில் பற்றிய அடை.*

## தெய்வச்சிலையார் உரை

### பண்புகொள் பெயர் வழங்குமாறு

***18. இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை வழக்குஆறு அல்ல செய்யுள் ஆறே.***

உலகத்துப் பொருள் எல்லாம் இனச்சுட்டு உடையவும், இனச்சுட்டு இல்லவும் என இரு வகைப்படும். அவற்றுள், இனச்சுட்டு உடையன உறழ்ச்சி வகையுள் அடங்குதலின், இனச்சுட்டு இல்லாத பொருள்மேல் செப்பு வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருட்கு இனச்சுட்டு இல்லாத பண்புகொள் பெயரைக் கொடுத்தல் வழக்குநெறி அல்ல; செய்யுள் நெறி எ-று.

பொருட்கு என்னும் வேற்றுமை ஏற்ற பெயர் எஞ்சி நின்றது. 'அல்ல' என்பது வழக்குப் பன்மை குறித்து வந்தது. செய்யுள் நெறி என அமையும், வழக்குநெறி அல்ல எனல் வேண்டா எனின், நன்கு மறுத்தற்குக் கூறினார் என்க.

இனச்சுட்டு இல்லாத பொருள் ஆவன : ஞாயிறு, திங்கள், தீ என்பன. அவை 'மாக்கடல் நிவந்துஎழுதரும் செஞ்ஞாயிற்றுக் கவினை' *(புறநா-4)* எனவும், 'நெடுவெண்

திங்களும் ஊர் கொண்டன்றே' (அகம்-2) எனவும், 'வெவ்வெரி கொளீஇ' எனவும் வரும். இவை வழக்கின்கண் வரின், கருஞாயிறும் கருந்திங்களும் தண்ணெரியும் உளபோலத் தோன்றும். ஆயினும் செய்யுட்கண் அமையும் என்றவாறு.

செம்போத்து என வழக்கின்கண்ணும் இனம் சுட்டாது வந்ததால் எனின், அப்பொருட்கு அது பெயர் என்க. பெருவண்ணான், பெருங்கொல்லன் என வழக்கின்கண் இனம் சுட்டாது வந்ததால் எனின், பண்பு ஆவது தமக்கு உள்ளது ஓர் இயல்பு; ஈண்டு அப்பெருமை இயல்பு அன்மை யான், அஃது உயர்த்துச் சொல்லுதல்கண் வந்தது என்க.

'பண்புகொள் பெயர்' என்று விசேடித்தமையால், ஏனைப் பெயர்கள் இருவகை வழக்கினும் இனம் சுட்டாது வரப்பெறும் எனக்கொள்க. (18)

### கல்லாடனார் உரை

### இனச்சுட்டு இல்லாப் பண்பு வழங்குமாறு

***18. இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை***
***வழக்காறு அல்லாச் செய்யுள் ஆறே.***

என்-எனின், இதுவும் வழக்கிற்கும் செய்யுட்கும் மரபு வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தமக்கு இனம் சுட்டுதல் இல்லாத பண்பு கொண்டு நின்ற பெயர்ச்சொற்கள், வழக்கின்அகத்து நெறி அல்லாத செய்யுட்கு நெறியாம் என்றவாறு.

வழக்காறு ஆவன : பெருங்கொற்றன், பெருங்கூத்தன் என்றாற் போல்வன. இவை சிறியான் ஒருவனை நோக்கி வந்தன அல்ல; பண்பு இன்றி உயர்த்திச் சொல்லிய என்பது.

இனிச் செய்யுள் ஆறு ஆவன: 'மாக்கடல் நிவந்துஎழு தரு செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ' (புறநா-4) எனவும், 'நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே' (அகம்-2)

எனவும், ‘வெண்கோட்டு யானை சோணை படியும் (குறுந்-75) எனவும் வரும். கருஞாயிறும், குறுங்கருந்திங்களும், கருங்கோட்டு யானையும் உண்மைகண்டு சொல்லினான் அல்லன் என்பது.

வழக்கினுள் பண்புகொள் பெயர் வருங்கால், குணம் இன்றி விழுமிதாகச் சொல்லவந்து நிற்கும். செய்யுளுள் வருங்கால் அக்குணம் தன்கண் உடையவாய் வந்து நிற்கும்.

இடுகு கண் மடப்பிடி என்றும், நால்வாய் வேழம் என்றும், மறப்புலி என்றும், மடப்பிணை என்றும், வடவேங்கடம் தென்குமரி என்றும் இனன்இல் பண்புகொள் பெயரே அன்றி, இனன்இல் தொழில் கொள் பெயரும், இனன்இல் பெயர்கொள் பெயருமாய் வருவன உளவால் எனின், அவ்வாறு வருவனவற்றையும் ‘ஒன்று என முடித்தல்’ என்பதனான் இதன்அகத்துச் செய்யுள் விதியாக அமைக்கப்படும்.

பண்புப் பெயர் என்னாது பண்புகொள் பெயர் என்றார்; கரியது, கரியன எனப் பண்பினைப் பிரியாது வருவன ஒழியப் பண்பினைக்கொண்டு செஞ்ஞாயிறு எனவும், பண்பினைக் கொள்ளாது ஞாயிறு எனவும் வருவனவற்றின் மேற்று இவ்ஆராய்ச்சி என்று அறிக என்பது.

இவ்வாறு பண்புகொள் பெயர் என்று கூறவே, குறுஞ்சூலி, குறுந்தடி, குறுமூக்கி, செம்போத்து என்பன அப்பண்பினைப் பற்றியல்லது சூலி, தடி, மூக்கி, போத்து என்று வழங்குதல் இன்மையின் அது வாளாது பெயர் எனப்படும்.

இதனான் சொல்லியன, வழக்கு இடத்தும் செய்யுள் இடத்தும் பண்பு இடனாகப் பிறப்பதொரு வழூஅமைதியும், பண்பு பற்றிப் பிறக்கும் இனன்இல் விதப்பும், இனன் உடைய விதப்பும் என்னும் இருவகைச் செய்யுள் விகாரமும் என உணர்க.

செஞ்ஞாயிறு என்புழிச் செம்மை என்னும் பண்பிற்குக் கருமை வெண்மை என இனம் உளவே எனினும், ஞாயிற்றோடு அடுத்தமையான் இனம் இன்றாய் இனன்இல் விதப்பு ஆயிற்று. ஞாயிறு என்பது இனம் இலதேனும் செம்மை என்னும் பண்பு அடுத்தமையின் கரியதும் ஒரு ஞாயிறு உள்ளதுபோல இனம் உடைத்தாய் இனன்உடை விதப்பு ஆயிற்று. *(18)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**18. 'இனச்சுட்டு . . . செய்யுள் ஆறே.'-**

'பெருங்கொற்றன்' போல்வன சிறியான் ஒருவனை நோக்கி வந்தன. அவனிடம் பெருமையாகிய மேம்பட்ட பண்பு இல்லை என்பது அறிந்தும் உலக வழக்கில் அவனை உயர்த்திச் சொல்லுதற்காகப் பெருமை கூறப்பட்டது.

***'மாக்கடல்'*** - கருங்கடலிலிருந்து மேல்நோக்கி எழும் சிவந்த சூரியனுடைய அழகினை உடையை.

***'நெடுவெண்'*** - பரந்த பரப்புடைய வெள்ளிய சந்திரனும் ஊர்கோளால் சூழப்பட்டது.

***'வெண்கோட்டு'*** - வெள்ளிய தந்தங்களை உடைய யானைகள் சோணை என்ற ஆற்றில் நீராடும்

விழுமிதாகச் சொல்ல - உயர்த்திச் சொல்ல.

இடுங்கின கன்னங்களை உடைய இளைய பெண்யானை.

தொங்குகின்ற வாயை உடைய யானை.

கொடுந்தொழிலை உடைய புலி.

அறியாமையை உடைய பெண்மான்.

இவை, இனம் இல்லாத, தொழில் உடையனவற்றிற்கு எடுத்துக்காட்டு.

வடவேங்கடம் - இனம் இல்லாத பெயருக்கு எடுத்துக்காட்டு.

பண்புப்பெயர் - கரியது, கரியன போன்ற குறிப்பு வினையாலணையும் பெயர்.

குறிய சூலத்தை உடையவள், குறிய தகடு போன்ற இளைத்த உடலினள், சிறிய மூக்கினை உடையவள் - இவை பெண் பேய்கள் முதலியவற்றிற்கு இட்ட இடுகுறிப்பெயர். செம்போத்து - பறவை விசேடம். இவை பண்பினைப் பிரித்தால் பொருள் தாரா.

இந்நூற்பாவின் கருத்துத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

செஞ்ஞாயிறு - இனமுடைய பண்புகொள் பெயர்போல உள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது.

### ஒருவர் உரை

***18. இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்குஆறு அல்ல செய்யுள் ஆறே.***

எ-து : இனத்தைச் சுட்டாது பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்கள் வழக்கு நெறி அல்ல, செய்யுள் நெறியாம்.

எ-டு : செஞ்ஞாயிற்றுக்கவின், வெண்கோட்டு யானை, நெடுவெண் திங்கள், வெண்முத்தம் எனச் செய்யுளுள் வரும்.

இனிக் குறுஞ்சூலி, குறுந்தடி, குறுமூக்கி, குறும்பூழ் என்பனவும் இனம் சுட்டாது வழக்கினில் வந்தனவால் எனின், அவை அவற்றின் பேரே; இனம் சுட்டாது வந்தன அல்ல என மறுக்க. *(18)*

### சாத்திரியார் உரை

**18. 'இனச்சுட்டு . . . ஆறே.'-**

சேனாவரையர் - 'விசேடிக்கற்பாலது விசேடியாது நின்ற தன்று' என்பதன் கருத்து: வெண்தாமரை என்னுமிடத்து வெண்மை என்ற பண்பு தாமரை என்ற பொருளை வெண்மை இல்லாத தாமரையினின்றும் நீக்கி, வெண்மைக் குணம் உடைய தாமரையை விசேடித்தது. செஞ்ஞாயிறு என்னு மிடத்து ஞாயிறு பல இன்மையான், செம்மை என்னும்

குணம் ஞாயிற்றின் இடத்தில் இருப்பினும் வேறு ஞாயிற்றினின்றும் அதனை விலக்கவில்லை. ஆதலால் விசேடிக்கற்பாலதாய செம்மை என்னும் குணம் செஞ்ஞாயிறு என்னுமிடத்தில் விசேடியாது நின்றது. பெருங்கொற்றன் என்பது இயற்பெயர் ஆகையால் பெருமை என்னும் குணம் கொற்றனிடம் இல்லாமையின், பெருமை என்பது விசேடிக்கற் பாலதன்று. ஆகையால் பெருங்கொற்றன் என்னுமிடத்து விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றது அன்று என்றுகூற இயலாது.

**பாலசுந்தரனார் உரை**

**18. 'இனச்சுட்டு . . . ஆறே.'**

'வழக்காறு அல்லாச் செய்யு ளாறே' - என்பதே ஏற்ற பாடம்.

இந்நூலுள் கூறப்படும் இலக்கண விதிகள் பெரும்பான்மையும் இருவகை வழக்கிற்கும் ஏற்கும். ஒரு சில உலகவழக்கிற்கும் ஒருசில செய்யுட்கும் உரியவாய் நிகழும். அவற்றை விதந்துகூறல் நூலோர் நெறி. விதந்து கூறப்படுபவை அவ்வவ் வழக்கிற்கு உரியவை என்பதன்றி ஒன்று மற்றொன்றின்கண் வாராது என்பது அன்று. வரின் ஏற்கப்படும்.

அவற்றுள் ஒருசில மாறிவருதல் கூடாது என்று விலக்கப்படும். அங்ஙனமே கூடாதவற்றுள், இதுவும் ஒன்று ஆதலின், 'வழக்காறு அல்லாச் செய்யுளாறே' என்று எதிர்மறுத்தும் தேற்றேகாரம் கொடுத்தும் கூறப்பட்டது. 'வழக்காறு அல்ல' என்று பாடம் கொள்ளின், 'அல்ல' என்னும் பன்மை 'பெயர்க்கொடை' என்னும் ஒருமையொடு இயையாமை காண்க.

பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன், பெருஞ்சித்திரன் என்பவை இடு பெயர்களாயின் இனம்சுட்டுவன அல்ல; குறுங்கொற்றன், குறுஞ்சாத்தன் என்பனவற்றை நோக்கியவாறாயின் இனச்சுட்டுடைய பெயர்களாம். அதனான் அவை ஈண்டு அடங்கா.

## பதிப்பாசிரியர் குறிப்பு

18. 'வழக்காறு அல்லாச் செய்யுள் ஆறே' என்று திருத்தப்பட்ட பாடத்தின்சிறப்புக் குறித்து உணரத்தக்கது.

## இளம்பூரணர் உரை

### இயற்கைப் பொருள் கிளக்கப்படுமாறு

**19. *இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தல்.***

எ . . . ன், உலகத்துப் பொருளெல்லாம் இருவகைப்படும், இயற்கைப் பொருளும் செயற்கைப் பொருளும் என. அவற்றுள் இயற்கைப் பொருள்மேல் சொல் நிகழ்தற்பால ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உலகத்து இயல்பாகி வாராநின்ற பொருளைச் சொல்லுமிடத்து, இத்தன்மையது என்று சொல்லுக என்றவாறு.

உதாரணம் : நிலம் வலிது, நீர் தண்ணிது என வரும்.(19)

## சேனாவரையர் உரை

### இயற்கைப் பொருள் கிளக்கப்படுமாறு

**19. *இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.***

(இ-ள்): தன் இயல்பின் திரியாதுநின்ற பொருளை, அதன் இயல்பு கூறுங்கால், ஆக்கமும் காரணமும் கொடாது, இற்றெனச் சொல்லுக என்றவாறு.

இயல்பாவது பொருட்குப் பின் தோன்றாது உடன் நிகழும் தன்மை.

(எ-டு) : நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் - என வரும்.

இற்றென்பது வினைக்குறிப்பு வாய்பாடு ஆயினும், உளரும் உணரும் என்னும் தெரிநிலை வினையும் இற்றென்னும் பொருள்பட நிற்றலின், இற்றெனக் கிளத்தலேயாம்.

நிலம் வலிதாயிற்று என இயற்கைப் பொருள் ஆக்கம்பெற்று வருமால் எனின், கல்லும் இட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட நிலத்தை வலிதாயிற்று எனின், அது செயற்கைப் பொருளேயாம். நீர் நிலமும், சேற்று நிலமும் முன் மிதித்துச் சென்று வன்னிலம் மிதித்தான், நிலம் வலிதாயிற்று என்றவழி, மெலிதாயது வலிதாய் வேறுபட்டது என ஆக்கம் 'வேறுபாடு ' குறித்து நிற்றலின், இயற்கைப் பொருள் ஆக்கமொடு வந்தது அன்றாம்.

அல்லது, நிலத்திற்கு வன்மை விகாரம் என்று ஓர்ந்து நிலம் வலிதாயிற்று என்னுமாயின், திங்கள் கரிது என்பது போல பிறழ உணர்ந்தார் வழக்காய் ஆராயப்படாது என்க. *(19)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**19. இயற்கை . . . கிளத்தல்-**

இற்று - இத்தன்மைத்து என்று பொருள்படும் குறிப்புவினைமுற்று.

கல்லும் இட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட நிலம் - கருங்கல் சல்லியையும் செங்கல் சல்லியையும் பெய்து நன்கு இடித்து உறுதி உடையதாகச் செய்யப்பட்ட நிலம்.

நிலத்தின் இயல்பே 'மண் திணிந்த நிலம்' ஆதலின், மண் அணுக்கள் செறிந்து உறுதியாக இருப்பதே நிலத்தின் இயற்கை. நிலத்திற்கு உறுதி செயற்கை என்று கொள்ளுவது 'சந்திரன் கரியது' என்று கூறுவதுபோலப் பொருள்களின் இயல்பைத் தவறாக உணர்ந்தவர் செயலாகும்.

## நச்சினார்க்கினியர் உரை

### இயற்கைப் பொருளில் மரபு வழாமை

*19. இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தல்.*

*இஃது இயற்கைப் பொருட்கண் மரபு வழுவாமை கூறுகின்றது.*

*இ-ள்: இயற்கைப் பொருளை - பொருட்குப்பின் தோன்றாது உடன் நிகழும் தன்மைத்து ஆய பொருளை அதன் இயல்பு கூறுங்கால்; இற்று எனக் கிளத்தல் - ஆக்கமும் காரணமும் கொடாது இற்று எனச் சொல்லுக என்றவாறு.*

*உதாரணம் : நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் எனவரும்.*

*சேற்று நிலம் மிதித்து வன்னிலம் மிதித்தான், 'நிலம் வலிது ஆயிற்று' என்றவழி, மெலிது ஆயது வலிது ஆய் வேறுபட்டது என ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்றலின், இயற்கைப் பொருள் ஆக்கமொடு வந்தது அன்றாம். (19)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**19. இயற்கைப் பொருளை -**

இயற்கை - பொருட்குப்பின் தோன்றாது உடன் நிகழும் தன்மை.

வன்னிலம் - அழுத்தமான தரை.

ஆக்கம், முன்னதற்குப் பின்னது வேறுபட்டது என வேறுபாடு குறித்ததே ஒழிய, இயற்கைப் பொருளுக்குச் செயற்கைத் தன்மையைக் குறிப்பிடவில்லை.

'இயல்பு **ஆகுநவும்** வல்லெழுத்து மிகுநவும்' எ. 158

'நின்ற சொல்முன் இயல்**பா கும்மே** ' *எ. 144*

'ஆள் என் இறுதி இயற்கை **ஆகும்** ' *சொ. 134*

'அயல் நெடிது ஆயின் இயற்கை **ஆகும்** ' *சொ. 147*

இவற்றில் ஆக்கம் வேறுபாடு குறிக்க வந்ததே ஆகும்.

**தெய்வச்சிலையார் உரை**

**இயற்கைப்பொருளைக் கிளக்குமாறு**

***19. இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தல்.***

உலகத்துப் பொருள் எல்லாம் இயற்கைப் பொருள், செயற்கைப்பொருள் என அடங்குதலின், அவற்றுள் இயற்கைப்பொருள்மேல் செப்பு நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இயற்கைப் பொருள் என்பது காரணப்பொருள்; அதனை இத்தன்மைத்து எனச் சொல்லுக எ-று.

அவை நிலம் நீர் தீ வளி ஆகாயம் உயிர் என்பன. அவற்றை நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், ஆகாயம் நிற்கும், உயிர் உணரும் எனக் கூறுக.

நிலம் வலிது ஆயிற்று எனக்கூறல் ஆகாது. என்னை? ஆக்கம் கொடுப்பின் அதற்கு இயல்பு பிறிது ஆவான் செல்லும் ஆதலின் வழுஆம். *(19)*

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**19. இயற்கைப்பொருளை -**

***இயற்கைப்பொருள்*** - காரியப்பொருளாகிய செயற்கைப் பொருள்கள் தோன்றுதற்குக் காரணமாய் இருக்கும் பொருள்கள். சேற்று நிலத்தைக் கடந்து வன்மையான நிலத்தில் நடப்பவன் 'நிலம் வலியதாயிற்று' எனின், ஆண்டு ஆக்கம் வேறுபாட்டைக் குறிக்கும்.

நின்ற சொல்முன் இயல்பு ஆகும்மே - எ. 144

இயல்பு ஆகுநவும் உறழ்வு ஆகுநவும் - எ. 151

இயல்பு ஆகுநவும் வல்லெழுத்து மிகுநவும் - எ. 158

இவ்விடங்களில் ஆக்கம் வேறுபாட்டைக் குறிக்கும்.

**கல்லாடனார் உரை**

**இயற்கைப்பொருளை வழங்குமாறு**

***19. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.***

என்-எனின், உலகத்துப் பொருள் எல்லாம் இருவகைப்படும், இயற்கைப் பொருளும் செயற்கைப் பொருளும் என. அவற்றுள் இயற்கைப் பொருள்மேல் மரபு இலக்கணம் வழாமல் சொல் நிகழ்தற்பாலதாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இயற்கை ஆகிய பொருளை இத்தன்மைத்து எனச் சொல்லுக எ-று.

எ-டு. : நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும் எனவரும்.

இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என்கிறது, அவ்வியற்கை செயற்கை என்னும் பண்பினையோ அப்பண்பு அடைந்த பொருளினையோ எனின், பண்பு அடைந்த பொருளினை என உணர்க.

அஃதே எனின், இயற்கைப் பொருள் இது, செயற்கைப் பொருள் இது என வேறுபட நில்லாது, 'நிலம் வலிது' என்ற வழக்கத்தானே, கல்லும் இட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட இடத்து, நீர் நிலமும் சேற்று நிலமும் மிதித்து அவ்வயின் நின்றான் ஒருவன் அந்நிலம் அல்லாத நிலம் மிதித்த இடத்து, 'நிலம் வலிது ஆயிற்று' என்றலும் வருமாலெனின், ஒரு பொருள்தானே இயற்கையான பண்பு அடுத்த இடத்து இயற்கை என்றும், செயற்கை ஆன பண்பு அடுத்த இடத்துச் செயற்கை என்றும் பண்பால் வேறுபடுதல் அல்லது பொருளால் வேறு அல்ல என்று உணர்க.

முன் நீர்நிலம் மிதித்தான் கூறும் வழக்கினுள் பொருட்கு உண்மை வகையான் வன்மை இன்றே எனினும், அவன் மனக்குறிப்புப் பற்றி, அதுவும் வன்மை ஆயிற்று என உணர்க.

இவ்விலக்கணம் கூறிப் பயந்தது என்னை எனின், மேல் செயற்கைப் பொருளகத்து மரபு வழூஉ அமைத்தல் பொருட்டாக உலகத்துப் பொருளை இயற்கை, செயற்கை என இரு பாகுபாடு செய்து அவற்றைக் கூறும் மரபு இலக்கணம் அறிவித்தார் எனக்கொள்க. *(19)*

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**19. 'இயற்கைப் . . . கிளத்தல்.'**

நிலம் வலிதாயிற்று என்று கூறும் இடங்கள் விளக்கப் பட்டுச் செயற்கையான வேறுபாடுடைய இடத்த ஆயின என்பது விளக்கப்பட்டுள்ளது.

இந்நூற்பாவின் பயன் விளக்கப்பட்டுள்ளது.

**ஒருவர் உரை**

***19. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.***

எ -து : உலகத்து இயல்புஆகி வாராநின்ற பொருள் களைச் சொல்லும் இடத்து இத்தன்மை என்றே சொல்லுக.

எ-டு: நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் - என இவ்வாறு சொல்வது.

இனி, நிலம் வலிது ஆயிற்று, நீர் தண்ணிது ஆயிற்று என்று சொல்லற்க. மற்று நிலம் வலிது ஆயிற்று என்று சொல்லுபவால் எனின், அஃது இயல்பு அன்று, சேற்று நிலம் மிதித்து வன்னிலம் மிதிக்கையால் விகாரம் என்பது. *(19)*

## பாலசுந்தரனார் உரை

**19. 'இயற்கை . . . கிளத்தல்.'-**

இயற்கைப்பொருள் - பிறிதொன்றான் திரிக்கப்படாமல் தத்தம் இயல்பொடு நிற்கும் பொருள்.

(எ-டு.) நிலம் வலியதன்மைத்து என்றாற் போலக் கூறுக.

இனி, நிலம் வலிது, வளி உளரும் என்றாற்போலக் கூறின் அவை ஒருசார் வேற்றுமையையும் காலத்தையும் காட்டி நிற்றலின் பொருந்தாவாம்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

19. நிலம் வலிது என்ற எடுத்துக்காட்டு நிலம் வலியதன்மைத்து என்றாற்போல இருக்கவேண்டும் என்ற கருத்து ஆய்விற்கு உரியது.

## இளம்பூரணர் உரை

### செயற்கைப் பொருள் கிளக்கப்படுமாறு

**20. *செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.***

எ . . . ன், செயற்கைப் பொருள்மேல் சொல் நிகழ்தற்பால ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செயற்கையின் ஆகிய பொருள்களை எல்லாம் ஆக்கம் கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : மயிர் நல்ல வாயின,
பயிர் நல்ல வாயின என வரும்.

ஆயின என்பது ஆக்கம். (20)

## சேனாவரையர் உரை

### செயற்கைப் பொருள் கிளக்கப்படுமாறு

**20. *செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.***

*(இ-ள்)* : காரணத்தான் தன்மை திரிந்த பொருளை, அத் திரிபு கூறுங்கால், ஆக்கம் கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

ஆக்கமொடு கூறல் என்பதனான் திரிபு கூறுதல் பெற்றாம்; என்னை? அதன்கண்அல்லது வாராமையின். இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் என்பன இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. (20)

## நச்சினார்க்கினியர் உரை

### செயற்கைப் பொருளில் மரபு வழாமை

**20. *செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.***

இது செயற்கைப் பொருள்மேல் மரபு வழுவாமை கூறுகின்றது.

இ-ள்: செயற்கைப்பொருளை-காரணத்தான் தன்மை திரிந்த பொருளைத் திரிபு கூறுங்கால்; ஆக்கமொடு கூறல் - ஆக்கம் கொடுத்துச் சொல்லுக என்றவாறு. (20)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**20. செயற்கைப்பொருளை -**

செயற்கைப்பொருள்- யாதானும் ஒரு காரணத்தான் தன் இயல்பான தன்மை திரிந்த பொருள்.

## தெய்வச்சிலையார் உரை

### செயற்கைப்பொருள்மேல் வரும் செப்பு

## *20. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.*

செயற்கைப் பொருள்மேல் செப்பு நிகழும்ஆறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செயற்கைப் பொருள் ஆவது காரியப்பொருள்; அதனை ஆக்கச் சொல்லொடு படுத்துக் கூறுக எ-று.

செயற்கையாய்த் தம் இயல்பின் வேறுபடுவன எல்லாம் செயற்கைப் பொருள் என்று கொள்க.

உ-ம் : மண் குடம் ஆயிற்று, நூல் ஆடை ஆயிற்று, மரம் கதவு ஆயிற்று எனவும், பைங்கூழ் நல்ல ஆயின, மயிர் நல்ல ஆயின எனவும் வரும்.

அஃதேல், பைங்கூழ் நல்ல, மயிர் நல்ல என ஆக்கம் இன்றியும் வருமால் எனின், அவை அக்காலத்து இயற்கை பற்றிக் கூறப்பட்டன; முன்பு நின்ற நிலை கண்டு கூறப்பட்டன அல்ல என்க. அதனானே அன்றே வருகின்ற சூத்திரம் கூறவேண்டியது ? (20)

### தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**20. 'செயற்கைப் பொருளை' -**

மயிர் நல்ல, பயிர் நல்ல - முன் தீயவாய்ப் பின் நல்ல ஆயினவேனும், பண்டை நிலைமை அறியாதவன் அப்பொழுதைய நிலையைக் கண்டபொழுது கூறின், அவன் கருத்தில் அவை இயற்கைப் பொருளே. செயற்கைப் பொருள் என்பதனை அறிய ஆக்கத்தொடு காரணமும் கொடுத்தல் வேண்டும் என்பது.

### கல்லாடனார் உரை

#### செயற்கைப்பொருளை வழங்குமாறு

**20. *செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.***

என்-எனின், செயற்கைப் பொருள்மேல் மரபு இலக்கணம் வழாமல் சொல் நிகழ்தற்பாலதாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செயற்கை ஆகிய பொருளை ஆக்கம் என்னும் வாய்பாட்டொடு சொல்லுக எ-று.

எ-டு. : மயிர் நல்ல ஆயின, பைங்கூழ் நல்ல ஆயின எனவரும்.

மேல்கூறிய 'இற்று எனக் கிளத்தல்' (கிளவி-19) இதற்கும் அதிகாரத்தான் வருவித்துக் கொள்க. (20)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**20. 'செயற்கைப் . . . கூறல்.'-**

செயற்கைப்பொருளை ஆக்கமொடு இற்றெனக் கூறல் என்று பொருள் செய்க.

### ஒருவர் உரை

**20. *செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.***

எ-து : செயற்கை ஆகிய பொருள்களை எல்லாம் ஆக்கம் கொடுத்துச் சொல்லுக.

எ-டு. : மயிர் நல்ல ஆயின; பைங்கூழ் நல்ல ஆயின - எனச் சொல்லுக. ஆயின என்பது ஆக்கம். (20)

### இளம்பூரணர் உரை

#### ஆக்கமும் காரணமும்

**21. *ஆக்கம் தானே காரணம் முதற்றே***

எ . . . ன், மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அவ்வாக்கம்தன்னைச் சொல்லுமிடத்துக் காரணம் முன்வைத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமை யான் மயிர் நல்ல ஆயின எனவரும். *(21)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**21. 'ஆக்கந் தானே' -**

கடுவும் கைபிழி எண்ணெயும் - கடுக்காய்ச் சாறும் கையாந்தகரை என்னும் கரிசலாங்கண்ணி என்ற செடியின் இலைகளைப் பிழிந்தெடுத்த சாறும் கலந்து காய்ச்சி வடித்தெடுத்த எண்ணெய். இவ்வெண்ணெயைத் தடவிப் பேணியதனான் மயிர் நீண்டு செறிந்து நெய்த்து இருண்டு வளரத் தொடங்கியது என்பது.

## சேனாவரையர் உரை

### ஆக்கமும் காரணமும்

***21. ஆக்கம் தானே காரண முதற்றே.***

*(இ-ள்)* : செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுங்கால், காரணத்தை முற்கூறி அதன்வழி ஆக்கம் கூறுக என்றவாறு.

தானே என்பது செய்யுட் சுவை குறித்து நின்றது.

*(எ-டு)* : கடுக்கலந்த கைபிழி எண்ணெய் பெற்றமை யான் மயிர் நல்லவாயின; எருப்பெய்து இளங்களை கட்டு நீர் கால் யாத்தமையான் பைங்கூழ் நல்லவாயின; நீர் கலத்தலான் நிலம் மெலிதாயிற்று; தீச்சார்தலான் நீர் வெய்தாயிற்று என வரும்.

மயிர் நல்ல, பயிர் நல்ல எனச் செயற்கைப் பொருள் ஆக்கம் பெறாது வந்தனவால் எனின், அந்நன்மை

பொருட்குப் பின் தோன்றாது உடன் தோன்றிற்றேல் இயற்கையேயாம்; அவ்வாறு அன்றி, முன் தீயவாய்ப் பின் நல்ல ஆயினவேனும், தீய நிலைமை காணாதான், மயிர் நல்ல பயிர் நல்ல என்றாற் படும் இழுக்கு என்னை? அது செயற்கை ஆவது உணர்ந்தான் ஆக்கம் கொடாது சொல்லினன்றே வழுவாவது என்க.

செயற்கைப் பொருளை ஆக்கமும், காரணமும் கொடுத்துச் சொல்லுக என்பதே கருத்து ஆயின். சூத்திரம் ஒன்று ஆகற்பாற்றெனின், அவ்வாறு ஓதின், ஆக்கமும் காரணமும் செயற்கைப் பொருட்கண் ஒத்த ஆயின என்பது பட்டுக் 'காரணம் இன்றியும் போக்கின்று' (சொல்-22) என்பதனொடு மாறுகோடலானும், காரணம் செயற்கைப் பொருளதோ ஆக்கத்ததோ என ஐயுறப்படுதலானும், ஆக்கம் தானே காரண முதற்றெனப் பிரித்துக் கூறினார் என்பது.

இயற்கைப் பொருள் ஆக்கமும் காரணமும் பெறாது வருதலும், செயற்கைப் பொருள் அவை பெற்று வருதலும் இலக்கணம் எனவே, இவ்வாறு அன்றி வருவன மரபுவழு என்பதாம்.

நுண்ணுணர்வுடையார்க்குத் 'தம்மரபினவே' (சொல்-11) என அடங்குவது ஆயினும், ஏனை உணர்வினர்க்கு இவ்வேறுபாடு உணரல் ஆகாமையின் விரித்துக் கூறினார். (21)

## சேனாவரையர் உரைவிளக்கம்

### 21. ஆக்கம் தானே . . . முதற்றே

கடு - கடுக்காய். கை - கையாந்தகரை என்னும் பச்சிலை.

செயற்கைப் பொருளுக்கு ஆக்கம் இன்றியமையாதது. ஆக்கத்துக்குக் காரணம் பெரும்பான்மை கூறப்படலாம்; சிறுபான்மை காரணம் வெளிப்படையாகத் தெரியின் கூறப்படாமலும் இருக்கலாம்.

## நச்சினார்க்கினியர் உரை

### மேலதற்கு ஒரு புறனடை

**21. ஆக்கம் தானே காரணம் முதற்றே.**

இது, மேலதற்கு ஒரு புறனடை.

இ-ள்: ஆக்கம் தானே - செயற்கைப்பொருளை ஆக்கமொடு கூறுங்கால், அவ்வாக்கச்சொல்தான்; காரணம் முதற்று - காரணச் சொல்லை முன்னாக உடைத்து என்றவாறு.

உதாரணம் : கடுக்கலந்த கைபிழி எண்ணெய் பெற்றமை யான் மயிர் நல்ல ஆயின, எருப்பெய்து இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல ஆயின - எனவரும்.

'மயிர் நல்ல' 'பயிர் நல்ல' என ஆக்கம் இன்றி வந்தன, பொருட்குப் பின் தோன்றாது, உடன்தோன்றி நிற்றலின் இயற்கைப் பொருளாம். அவ்வாறு அன்றி, முன் தீயவாய்ப் பின் நல்ல ஆயினவழி, அத்தீமை காணாதான், 'மயிர் நல்ல' எனினும் இழுக்கு இன்று, அச்செயற்கை உணராமல் கூறலின். (21)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**21. ஆக்கம் தானே -**

| | |
|---|---|
| கடுக்கலந்த கைபிழி எண்ணெய் - | விதையை நீக்கி இடிக்கப்பட்ட கடுக்காய்த் தூளையும் கையாந் தகரை என்னும் பச்சிலைச் சாற்றையும் கலந்து காய்ச்சி வடித்த எண்ணெய் |
| இளங்களை கட்டு - | வளர்ந்த களைகளை இளமையிலேயே வேரொடு களைந்து |

நீர்கால் யாத்தல்- நீரை வயற்பரப்பு முழுமையும் தேக்கி வைத்தல்

மயிர் நல்ல என்புழி, ஒரு கால் செறிவாகவும் நீளமாகவும் இராமல் பின் நல்ல எண்ணெயைத் தடவிப் பேணியதால் மயிர் நீண்டு செறிந்து வளர்ந்திருந்தாலும், மயிரின் பழைய நிலைமையை அறிந்து இந்த வளர்ச்சி செயற்கையான் ஆகியது என்று அறியாதவன், காரணம் கொடாமல் கூறினானாயின், அதன்கண் தவறு இன்று.

## தெய்வச்சிலையார் உரை

### மேலதற்குப் புறனடை

**21. *ஆக்கம் தானே காரணம் முதற்றே.***

மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற்சொல்லப்பட்ட ஆக்கக் கிளவி காரணத்தை முதல்ஆக உடைத்து எ-று.

செயற்கைப் பொருள் எல்லாம் ஆக்கம் கொடுத்துக் கூறப்படா; காரணம் உள்வழியே ஆக்கம் கொடுப்பது என்றவாறு ஆயிற்று. (21)

## கல்லாடனார் உரை

### மேலதற்குப் புறனடை

**21. *ஆக்கம் தானே காரணம் முதற்றே.***

என்-எனின், மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற்கூறிய ஆக்கச்சொல்தானே காரணச் சொல்லை முன்னாக உடைத்து எ-று.

எ-டு : கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல ஆயின - எருப்பெய்து இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல ஆயின - என வரும்.

ஆக்கம் முன்கூறிக் காரணம் பின்கூறியும் வருமால் எனின், பெரும்பான்மையும் முற்கூறிக் கூறப்படுதலின் 'முதற்று' என்றார்போலும். இனி முதல் என்பதனைக் காரணம் ஆக்கிக் கூறலும் ஒன்று. (21)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**21. 'ஆக்கம் . . . முதற்றே.'-**

கடு - கடுக்காய்த்தூள். கை - கையாந்தகரை என்ற பச்சிலை. இவற்றையிட்டுக் காய்ச்சிய எண்ணெய்

நீர்கால் யாத்தல் - நீரோடு காலில் நீரைத்தேக்குதல்.

ஆக்கம் முற்கூறிக் காரணம் பின்னர் வருதல் சிறுபான்மை.

காரியத்தின் முன் நிற்றலின் காரணம் முதல் எனப்படும்.

காரணமாகிய முதல் என்று பொருள் கூறுதலும் உண்டு என்கிறார்.

## ஒருவர் உரை

**21. ஆக்கம் தானே காரணம் முதற்றே**

எ-து : அவ்வாக்கம்தன்னைச் சொல்லும் இடத்துக் காரணம் முன்வைத்து, ஆக்கத்தைப் பின்வைத்துச் சொல்லுக.

எ-டு : 'கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான், மயிர் நல்ல ஆயின' எனவும், 'எருப்பெய்து, இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல ஆயின' எனவும் சொல்லுக. கடுவும், கைபிழி எண்ணெயும் காரணம்; மயிர் நல்ல ஆயின என்பது ஆக்கம். (21)

## இளம்பூரணர் உரை

### வழக்கில் காரணமின்றியும் வருதல்

*22. ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்*
*போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.*

எ . . . ன், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: ஆக்கக் கிளவி காரணம் இன்றியும் சொல்லப் படும் வழக்கினுள் என்றவாறு.

போக்கு என்பது குற்றம்.

உதாரணம் : மயிர் நல்ல ஆயின.

உம்மை எதிர்மறை. மற்று, வாளாது ஓதும் சூத்திரம் எல்லாம் வழக்கே நோக்கும்; செய்யுட்கு ஆயின் கிளந்தே ஓதும். அதனான், 'வழக்கினுள்' என வேண்டா; அம் மிகுதியான், ஆக்கமும் காரணமும் இன்றி வருதலும், காரணம் கொடுத்து ஆக்கமின்றி வருதலும் என இரண்டும் கொள்ளப்படும்.

உதாரணம் : பைங்கூழ் நல்ல எனவும், எருப்பெய்து இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல எனவும் வரும். (22)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**22. ஆக்கக் கிளவி -**

ஆசிரியர் செய்யுளுக்கே உரிய விதிகளை 'இவை செய்யுளுக்கு உரியன' எனத் தனித்துக் கூறுவர். அங்ஙனம் கூறாதன எல்லாம் வழக்கிற்கு உரியனவேயாம். அவ்வாறு இருக்க, 'வழக்காறு அல்ல' என்று ஈண்டுக் கூறியது மிகை. அம்மிகையான், ஆக்கம் காரணம் இரண்டும் இன்றி, இயற்கைப்பொருள் போல 'மயிர் நல்ல' என்று கூறுதலும், காரணம் மாத்திரம் கொடுத்து ஆக்கம் கொடாமல் கூறுதலும் கொள்ளப்பட்டன.

எருப்பெய்து . . . . நல்ல - வயலிலே உழுவதற்கு முன்னும் பயிர் நடப்பட்ட பின்னும் உரிய எருக்களை இட்டு, பயிர் இளமையாய் இருக்கும்போதே சிறியவாக வளரத் தொடங்கிய களைகளை நீக்கி, வயலில் பயிர்ப் பாதுகாப்புக்கு வேண்டிய நீரைத் தேக்கிவைத்தமையான் பசுமையாக வளர்ந்த பயிர்கள் நல்ல.

காரணம் இன்றியும் போக்கு இன்று - காரணம் இன்றி வரினும் குற்றம் இன்று என்பது நச்சினார்க்கினியர் உரை.

## சேனாவரையர் உரை

### வழக்கில் காரணமின்றியும் வருதல்

22. ***ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்***
***போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.***

*(இ-ள்)* : காரண முதற்றெனப்பட்ட ஆக்கச் சொல் காரணம் இன்றி வரினும் குற்றம் இன்று வழக்கினுள் என்றவாறு.

*(எ-டு)* மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின என வரும்.

வழக்கினுள் காரணம் இன்றியும் வரும் எனவே, செய்யுளுள் காரணம் பெற்றே வரும் என்பதாம்

*(எ-டு)*: ‘பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும் குரிசில் வலிய ஆகும்நின் தாள்தோய் தடக்கை’ *(புறம் - 15)*

எனவும்,

“தெரிகணை எஃகம் திறந்தவாய் எல்லாம்
குருதி படிந்து உண்ட காகம் - உருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால்
தப்பியார் அட்ட களத்து” *(களவழிநாற்பது-5)*

எனவும்,

'வருமழைய வாய்க் கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி - திருநுதால் !
இன்றென் குரற்கூந்தல் பெய்தமையான் பண்டைத்தம்
சாயல ஆயின தோள்'

எனவும் காரணம் பெற்று வந்தவாறு கண்டுகொள்க. 'குக்கிற் புறத்த சிரல் வாய' என ஆக்கம் இன்றி வந்தனவால் எனின், தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதனான் ஆண்டு ஆக்கம் தொக்கு நின்றது என்பது.

'அரிய கானம் சென்றோர்க்(கு)
எளிய வாகிய தடமென் றோளே' (குறுந் - 77)

எனவும்,

'நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு' (குறள் - 305)

எனவும் செயற்கைப்பொருள் செய்யுளுள் காரணம் இன்றி வந்தனவால் எனின் , களவுக் காலத்து அரியன இக்காலத்து எளிய ஆயின என்பது கருத்து ஆகலான், இக்காலம் காரணம் என்பது பெறப்படுதலானும், ஊழான் என்பது அதிகாரத்தான் வரும் ஆகலானும், அவை காரணம் இன்றி வந்தன எனப்படா என்பது. (22)

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**22. ஆக்கக்கிளவி . . . உள்ளே.**

***'பரிசிலர்க்கு'*** - நின்னை நாடிவரும் பரிசிலர்க்குப் பெறுதற்கு அரிய அணிகலன்களை வழங்குவதனாலும், நின் முழந்தாள் அளவு நீண்ட பெரிய கைகள் வலிய ஆகும்.

***தெரிகணை எஃகம்*** - சிவந்த கண்களை உடைய திருமாலை ஒத்த கோச்செங்கட் சோழமன்னன் தன்

பகைவர்களை அழித்த போர்க்களத்தில், ஆராய்ந்து எடுக்கப்பட்ட அம்புகளும் ஏனைய படைக்கலன்களும் பிளந்த இடங்களெல்லாம் குருதி பெருக்கெடுத்து ஓட, அக்குருதியில் படிந்து பிணங்களை உண்ட காகங்கள், கருநிறத்தை இழந்து செம்போத்து என்ற பறவை போன்ற செந்நிறப்புறச் சிறகுகளையும், சிச்சிலிப்பறவை போன்ற செவ்வாயினையும் உடைய ஆயின. (ஆயின என்பது தொக்கது).

***வருமழை*** - பருவமழையின் கொடைத் தொழிலை விரும்பி மேற்கொண்ட, குறைபாடு இலாத சிறப்பினை உடைய வண்மை பொருந்திய கைகளை உடைய கடு முருகனாகிய என் தலைவன் சூடிய முடிமாலையை, அழகிய நெற்றியை உடைய தோழியே! இன்று என் கொத்தாக அமைந்த கூந்தலில் சூட்டியதால், என் தோள்கள் தம் பண்டைய மென்மையை உடைய ஆயின.

***'அரியகானம்'*** - கற்புக் காலத்துத் தலைமகன் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லிய 'கடத்தற்கு அரிய பாலை நிலத்தில், என்னைப் பிரிந்து சென்ற தலைவர் திறத்துப் பரந்த மெல்லிய தோள்கள் மெலிந்தன ஆயின' என்ற தொடரில், இவ்வாறு தோள்கள் மெலிய இக்கற்புக்காலமே காரணம் என்பதைக் குறிப்பாகத் தெரிவித்தாள்.

***'நல்லவை எல்லாம்'*** - ஊழ்வயத்தால், செல்வத்தை ஆக்குதற்கு உரிய நல்ல காலமும் இடனும் கருவியும் தொழிலுமெல்லாம் தீயவாய் அழித்தலும் கூடும். அதுவே அன்றித் தீயவைதாமும் நல்லவாய் ஆக்குதலும் கூடும். இப்பாடல் 'ஊழ்' என்ற அதிகாரத்தில் உள்ளதால் ஊழ் என்பது காரணம் என்பது குறிப்பால் போதரும்.

எனவே ஆக்கத்திற்குரிய காரணம் செய்யுளுள் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ இருக்கும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**எய்தியது விலக்கல்**

***22. ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்***
***போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.***

இஃது எய்தியது விலக்கிற்று.

இ-ள்: ஆக்கக்கிளவி-காரணம் முதற்று (சொல். 21) என்ற ஆக்கச்சொல்; காரணம் இன்றியும் - காரணம் இன்றி வரினும்; போக்கு இன்று என்ப - குற்றம் இன்று என்று கூறுப; வழக்கின் உள்ளே - வழக்கு இடத்து என்றவாறு.

உதாரணம் : மயிர் நல்ல ஆயின
பயிர் நல்ல ஆயின

எனவரும்.

எனவே, செய்யுட்குக் காரணம் பெற்றே வரும் ஆயிற்று.

'வருமழைய வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி - திருநுதாஅல் !
இன்றுஎன் குரல்கூந்தல் பெய்தமையான் பண்டைத்தம்
சாயல ஆயின தோள்'

என இது காரணமும் ஆக்கமும் பெற்றது.

'குருதி படிந்துஉண்ட காகம் உருஇழந்து
குக்கில் புறத்த சிரல்வாய' (களவழி-5)

என இதற்கு ஆக்கம் விகாரத்தான் தொக்கது என்று உணர்க.

'அரிய கானம் சென்றோர்க்கு
எளிய ஆகிய தடமென் தோளே' - குறுந். 77

இதற்குக் கற்புக் காலத்தான் தோள் எளிய ஆயின எனக் காலம் காரணம் ஆயிற்று.

உம்மை எதிர்மறை ஆகலான், காரணம் கொடுத்துச் சொல்லுதலே வலியுடைத்து. (22)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

### 22. ஆக்கக்கிளவி-

'**வருமழைய**' "அழகிய நெற்றியை உடைய தோழியே! கைம்மாறு கருதாமல் உலகிற்கு மேகத்தால் வழங்கப்படும் மழையின் தன்மையை விரும்பித் தன்பால் கொண்டுள்ள குறைவுபடாத சிறப்பையுடைய கொடைத்தன்மையை உடைய என் தலைவனாகிய கருமுருகன் சூடிய முடிமாலையைக் கொணர்ந்து என் முடித்த கூந்தலில் சூட்டியமையால், என் தோள்கள் பண்டைய தம் மென்மையை உடைய ஆயின."

'**குருதி**' -கோச்செங்கணான் பகைவரை அட்ட போர்க் களத்தில், இரத்தத்தில் படிந்து புலாலை உண்ட காகங்கள், தம் கருநிறத்தை இழந்து, செம்போத்துப் போன்ற செந்நிறச் சிறகுகளையும், கிச்சிலிப் பறவையைப் போன்ற சிவந்த அலகினையும் உடைய ஆயின.

'**அரிய**'- "கடத்தற்கு அரிய பாலைநிலத்தில் என்னைப் பிரிந்து சென்ற தலைவர்திறத்துப் பரந்த மெல்லிய என் தோள்கள் எளியஆகிவிட்டன" என்று கற்புக்காலத்தில் தலைவன்பிரிவினை ஆற்றாத தலைவி தோழியிடம் கூறினாள்.

## தெய்வச்சிலையார் உரை

### மேலதற்குப் புறநடை

2. ***ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்***
***போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.***

மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆக்கச்சொல் காரணம் இன்றியும் வரும் வழக்கினுள் எ-று.

எனவே, செய்யுள் அகத்து வரப்பெறா என்றவாறு ஆம். போக்கு இன்று என்பது போகுதல் இன்று என்றவாறு. எனவே, வரும் என்று பொருள் ஆயிற்று. உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆடை நன்றாய் இருந்தது, மணி நன்றாய் இருந்தது என நன்று ஆதற்குக் காரணம் குறியாது வந்தன. பைங்கூழ் நல்ல ஆயின - என இடமும் காலமும் இனமும் சுட்டாது, கண்ட காலத்து இயற்கை பற்றி வரும் வழக்குக் கொள்க. *(22)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**22. ஆக்கக் கிளவி -**

ஆக்கக் கிளவி வழக்கினுள் காரணத்தொடும் வரும்; காரணம் இன்றியும் வரும். போக்கு இன்று - வாராது போதல் இல்லை; எனவே வரும் என்பது.

இடமும் காலமும் இனமும் சுட்டாது, தான் பார்த்தபோது இருந்த நிலைமைபற்றிப் பசிய பயிர்கள் நல்லவாயின என்பது வழக்கினுள் வருகின்றது.

## கல்லாடனார் உரை

### எய்தியது விலக்கல்

*22.* ***ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்***
***போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.***

என்-எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: மேற்கூறிய ஆக்கச்சொல்தான் காரணத்தை ஒழியச் சொல்லுதலும் குற்றம் இல்லை என்று சொல்லுப ஆசிரியர் வழக்கினிடத்து என்றவாறு. உம்மை எதிர்மறை ஆகலான் காரணம் கொடுத்துக்கூறல் வலி உடைத்து.

எ-டு. : மயிர் நல்ல ஆயின, பைங்கூழ் நல்ல ஆயின என வரும்.

செய்யுள் விதி உள்வழிச் செய்யுள் என்று கூறி, வாளாதே ஓதும் சூத்திரம் எல்லாம் வழக்கே நோக்குதல் நூல் கிடை ஆகலின் 'வழக்கினுள்' என்பது மிகை; அதனான் செயற்கைப் பொருள் காரணம் கொடுத்து ஆக்கம் கொடாதே சொல்லுதலும், காரணமும் ஆக்கமும் இரண்டும் கொடாதே சொல்லுதலும் கொள்ளப்படும்.

எ-டு. : கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல எனவும், பைங்கூழ் நல்ல எனவும் வரும்.

எனவே செயற்கைப் பொருள் காரணமும் ஆக்கமும் கொடுத்தலும், காரணம் ஒழிய ஆக்கம் கொடுத்தலும், ஆக்கம் ஒழியக் காரணம் கொடுத்தலும், காரணமும் ஆக்கமும் இரண்டும் கொடாதே சொல்லுதலும் என நான்கு வகைத்து. இவற்றுள் முன்னைய விதி ஒன்றும் மரபு இலக்கணம்; பின்னைய மூன்றும் மரபு வழுஅமைதி.

அவற்றுள் இச்சூத்திரத்தால் கூறியது பெரும்பான்மை, இலேசினால் கூறிய இரண்டும் சிறுபான்மை என உணர்க. இவை அமைவதற்குக் காரணம் உணர்வார் உணர்வுவகை பற்றிப் போலும். (22)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**22.'ஆக்கக் . . . உள்ளே.'-**

செய்யுள் என்று விதந்து கூறாவிட்டால் அச்செய்தி வழக்கிற்கே உரித்து என்று கொள்ளப்படும். அவ்வாறாக 'வழக்கினுள்ளே' என்பது மிகை. இம்மிகையால் சில பொருள்கள் கொள்ளப்பட்டன. செயற்கைப் பொருள் பற்றி நான்கு செய்திகள் கூறப்பட, முன்னையது ஒன்றும் மரபு எனவும் ஏனைய மரபு வழுவமைதி எனவும் கூறப்பட்டன. அவற்றுள் நூற்பா குறிப்பிடும் செய்திகள் பெரும்பான்மை.

## ஒருவர் உரை

**22. *ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்***
***போக்கின்று என்ப வழக்கி னுள்ளே.***

எ-து : ஆக்கமொடு புணர்ந்த பொருளைக் காரணம் இன்றியும் சொல்லுதல் வழக்கினுள் குற்றம் இல்லை.

எ-டு : மயிர் நல்ல ஆயின, பைங்கூழ் நல்ல ஆயின - எனக் காரணம் இன்றியே வந்தன.

உம்மையான், காரணம் கொடுத்துச் சொல்லுதல் வலி உடைத்து.

இனிப் 'போக்கு இன்று என்ப வழக்கினுள்ளே' என்ற விதப்பான், செய்யுளகத்தாயின் காரணமும் ஆக்கமும் கொடுத்துச் சொல்லுக என்பதாம்.

வரலாறு : **வெண்பா**

'வருமழைஅ வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி - திருநுதலாய்
இன்றுஎன் குரல்கூந்தல் பெய்தமையான் பண்டைத்தம்
சாயல ஆயின தோள்.'

இதனுள் 'கருமுருகன் சூடிய கண்ணி பெய்தமையான்' என்பது காரணம். 'பண்டைத்தம் சாயல ஆயின தோள்' என்பது ஆக்கம். ஆதலால் இது காரணமும் ஆக்கமும் கொடுத்து வந்தது. அவை இரண்டும் உடன் வரவும், ஒன்று வரவும் பெறும். 22

## ஒருவர் உரைவிளக்கம்

22. "**ஆக்கக் . . . உள்ளே.**'-

***'வருமழை'*** அழகிய நெற்றியை உடைய தோழியே ! பருவத்தே பெய்ய வருகின்ற கார்மேகத்தின் பண்பினை

விரும்பி மேற்கொண்ட, என்றும் குறையாத சிறப்பினை உடைய வண்மைமிக்க கைகளை உடைய, என் தலைவனாகிய கருமுருகன் சூடியிருந்த முடிமாலையை இன்று பூங்கொத்துக் களை அணிந்துள்ள என் கூந்தலில் சூடியதனால் என் தோள்கள் தம் பண்டைய மென்மைத் தன்மையை உடைய ஆயின.

### பாலசுந்தரனார் உரை

**22. 'ஆக்கக்கிளவி . . . உள்ளே.'**

ஈண்டு வழக்கு என்றது பேச்சு வழக்கினையாம். அவ்வழக்கின்கண் வினாவுவானும் செப்புவானும் காரணத்தை உணர்ந்திருத்தலின், காரணக்கிளவியை வெளிப் படக் கூறாவிடினும் குற்றமின்று என்றார்.

செய்யுட்கண் ஆக்கம் இன்றி வந்தன செய்யுள் விகாரத்தான் தொக்கன என்றே கொள்ளப்படும்.

19 - 22 என்ற நான்கு நூற்பாவானும் இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் பற்றி வரும் தொடர் களைச் செப்பின்கண்ணும் வினாவின்கண்ணும் ஆக்கிக் கொள்ளுமாறு கூறப்பட்டது, இம்மரபு மயங்கல் கூடாமையின்.

### இளம்பூரணர் உரை

### உயர்திணைப் பால்ஐயம்

*23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி*
*தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.*

எ . . . ன், உயர்திணைப் பால் ஐயத்துக்கண் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை அறிந்து பால் ஐயம் தோன்றிய அதனை அத்திணைப் பன்மைமேல் வைத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : ஒருவன்கொல்லோ ஒருத்திகொல்லோ தோன்றாநின்றார் என வரும். இதனை உயர்திணைப் பால் ஐயம் என்பதோர் ஒப்பின் கொள்க. *(23)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**23. 'பால்மயக்குற்ற' -**

இஃது உயர்திணைப்பால் ஐயத்துள் வினா நிகழ்த்து மாறு கூறுகிறது. நூற்பாவுள் உயர்திணைப்பால் ஐயம் என்று இல்லையே எனின், பொருள் பொருத்தம் நோக்கி அது கொள்ளப்பட்டது. ஒப்பு என்பது பொருத்தம் என்னும் பொருளில் வருதல் 'முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே' *(பொ. 273)* என்பதனான் அறிக.

இந்நூற்பாவுள் 'தான் அறி திணை' என்பது 'தான் அறி பொருள்' என்று கூறப்பட்டிருப்பதனான் திணை என்பதற்குப் பொருள் என்று பொருள்கோடல் ஆசிரியர் கருத்தாகும்.

## சேனாவரையர் உரை

### பால்ஐயம் உள்ளன அமையும் வகை

***23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி***
***தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.***

*(இ-ள்)* : திணை துணிந்து பால் துணியாத ஐயப் பொருளை அவ்வத் திணைப் பன்மையான் கூறுக என்றவாறு.

கிளவி என்றது ஈண்டுப் பொருளை. ஐயப் பொருளாவது சிறப்பியல்பான் தோன்றாது பொதுவியல்பான் தோன்றிய பொருள்.

*(எ-டு)*: 'ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இஃதோ தோன்றுவார்' எனவும், 'ஒன்றோ பலவோ செய் புக்கன' எனவும் வரும்.

திணைவயின் என்னாது 'தான் அறி பொருள்வயின்' எனப் பொதுப்படக் கூறிய அதனான், 'ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ கறவை உய்த்த கள்வர்' எனவும், 'ஒருத்தி கொல்லோ பலர்கொல்லோ இக்குருக்கத்தி நீழல் வண்டல் அயர்ந்தார்' எனவும், திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை ஒருமைப்பால் ஐயமும் கொள்ளப்படும்.

ஒருமையான் கூறின் வழுப்படுதல் நோக்கிப் 'பன்மை கூறல்' என வழாநிலை போலக்கூறினாரேனும், ஒருமையைப் பன்மையான் கூறுதலும் வழு ஆதலின், ஐயப் பொருள்மேல் சொல் நிகழுமாறு உணர்த்திய முகத்தான் பால்வழு அமைத்தவாறாம். *(23)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**23. பால் மயக்கு . . . கூறல்–**

இந்நூற்பா உரையினும் சேனாவரையர் மக்கள் என்ற கருத்து வடிவு பற்றியே நிகழ்வது என்பதனைத் தெரிவித்துள்ளார். 24, 25 ஆம் நூற்பாக்களும் அன்ன.

இந்நூற்பா இருதிணைப்பால் ஐயத்திற்கும் உரித்து என்பது சேனாவரையர் கருத்து.

சொல்லொடு பொருளுக்கு உள்ள ஒற்றுமைபற்றிப் பொருள் 'கிளவி' எனப்பட்டது.

## நச்சினார்க்கினியர் உரை

### ஐயப் பொருள்மேல் சொல் நிகழ்த்துமாறு

*23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி*
*தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.*

இது, மேல் இயற்கை செயற்கை எனப்பகுத்த பொருள்களுள் திணை உணர்ந்து பால் ஐயம் தோன்றிய அவ்வையப் பொருள்மேல் சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றது.

இ-ள்: பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி - திணை துணிந்து பால் துணியாது நின்ற ஐயப் பொருளை; தான்அறி பொருள்வயின் பன்மை கூறல் - தான் அறிந்த உயர்திணைப் பொருளிடத்துப் பன்மையால் கூறுக என்றவாறு.

ஐயப் பொருளாவது, சிறப்பு இயல்பான் தோன்றாது பொது இயல்பான் தோன்றிய பொருள்.

'ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ தோன்றுகின்றவர்' என வரும்.

'திணைவயின்' என்னாது, 'தான்அறி பொருள் வயின்' எனப் பொதுப்படக் கூறிய அதனான், 'ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ இக்கறவை உய்த்த கள்வர்?' 'ஒருத்தி கொல்லோ பலர்கொல்லோ இக்குருக்கத்தி நீழல் வண்டல் அயர்ந்தார்?' - எனத் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை ஒருமைப்பால் ஐயமும் கொள்க.

அப்பொருட்கு இருபாலுமாய் நிற்றல் இன்மையின், தான் ஒன்றாகிய பொருளைப் பன்மையாகக் கூறினும் அமைக என வழுவமைத்தார். *(23)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**23. பால்மயக்குற்ற -**

இந்நூற்பாவில், ஆண்மை பெண்மைப்பால் ஐயமும், 'தான் அறிபொருள் வயின் ' எனப் பொதுப்படக்கூறிய அதனான் ஆண்மை பெண்மை துணிந்த பன்மை ஒருமைப் பால் ஐயமும் விலக்கப்படுகின்றன.

ஒருமைப்பெயர்கள் பன்மைப்பாலொடு முடிதல் வழுவாதலின் வழு அமைக்கப்பட்டது.

## தெய்வச்சிலையார் உரை

### பால் ஐயம் நீக்குமாறு

*23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி*
*தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.*

மேல் சொல்லப்பட்ட இருவகைப் பொருட்கண்ணும் ஐயக்கிளவி உணர்த்துகின்றனர் ஆகலின், இச்சூத்திரம் அதன்பகுதி ஆகிய பால் ஐயம் திணை ஐயம் என்னும் இரண்டனுள்ளும் பால் ஐயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தான் அறிந்த பொருட்கண் பால் மயக்குஉற்ற ஐயப் பொருண்மையைப் பன்மையான் கூறுக எ-று.

'தான் அறிபொருள்' என்றமையான் திணை அறிந்து பால் அறியாதவழி என்பது பெறப்பட்டது. பால்ஐயம் பெருவழக்கிற்று ஆகலின் முன்கூறப்பட்டது. சேய்மைக்கண் தோன்றுவது ஒரு மக்கள் பிழம்புகண்டு, ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ என ஐயுற்றான், அதனைத் தோன்றுவான் எனவும் ஆகாது, தோன்றுவாள் எனவும் ஆகாது; ஆயிடைத் 'தோன்றுவார்' என்க. பைங்கூழ் அழிவு கண்டான், ஒன்று கொல்லோ பலகொல்லோ செய்புக்கன என்க. (23)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**23. 'பால் மயக்குற்ற' -**

தான் அறிபொருள் - தான் அறிந்த திணை. திணையைப் பொருள் என்ற சொல்லானும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். திணை, பால் என்பது முறையாயினும் பால் ஐயம் பெருவழக்கிற்று ஆதலின் அது திணை ஐயத்தின்முன் கூறப்பட்டது.

பைங்கூழ் அழிவு கண்டான் - வயலில் நட்டிருந்த பசிய பயிர்மாட்டுக் காலடிகளானும் மாடு மேய்ந்ததனானும் பாழானவாற்றைக் கண்டவன்.

## கல்லாடனார் உரை

### உயர்திணைப் பால்ஐயம்

*23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி*
*தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.*

என்-எனின், இன்னும் உலகத்துப் பொருள்தான், ஐயுறும் பொருளும் துணியும் பொருளும் என இருவகைத்து; அவற்றுள் ஐயுறும் பொருட்கண் உயர்திணைப்பால் ஐயத்துக்கண் பால் வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை அறிந்து பால் மயங்கல் உற்ற ஐயச் சொல்தான், அறிந்த உயர்திணைப் பொருளிடத்துப் பன்மை யாகக் கூறும் கூற்று என்றவாறு.

எ-டு : ஒருவன்கொல்லோ ஒருத்திகொல்லோ இதோ தோன்றுவார்? என்பது.

இவ்வையம், கண்ட இடத்து ஐயமும், காணா இடத்து ஐயமும் என இருவகைத்து. இனிக் காணாதவழி, ஒருவனோ பலரோ என்று ஐயுறும் பால் மயக்கமும் கொள்க. இது, தான் அறியான் ஆவது அல்லது அப்பொருள் இருபாலுமாய் நிற்றல் இல்லை. மற்றொன்று ஆகிய அப்பொருளைப் பன்மையான் கூறுதல் வழூஉமன். வழூஉவே எனினும் அமைக எனப் பால்வழூஉ அமைத்தவாறாயிற்று.

இவ்வையத்துக்கு இலக்கண வழக்கு என வேறு காணாமையின், இதுதான் இலக்கணம் ஆகற்பாற்று எனின், வேறு வழக்கு இல்லையே எனினும், இது பொருள்வகை தொக்க வழூஉ எனப்படும்.

'ஒருவனோ ஒருத்தியோ தோன்றுகின்றார்?' எனப் பொதுவாகக் கூறல் இலக்கண வழக்காம் பிற எனின், அவ்வாறு கூறுவார் இன்மையானும், ஆர் என்பது ஆண்பாற்கு அல்லது ஏலாமையானும் ஆகாது என மறுக்க. (23)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**23. 'பால் மயக்குற்ற . . . கூறல்.'-**

கண்ட இடத்து ஐயம், காணாவிடத்து ஐயம் என்பன விளக்கப்பட்டு உள்ளன. காணாதவழிப் பன்மை ஒருமைப் பால் ஐயமும் கொள்ளப்படும்.

இதற்கு இலக்கண வழக்கு இன்று எனினும், இது வழாநிலையாகக் கொள்ளப்படாமல் வழு அமைதியாகவே கொள்ளப்படும்.

ஒருவனோ ஒருத்தியோ தோன்றுகின்றவர் என்பது இலக்கண வழக்கே ஆகும் எனின், அங்ஙனம் கூறுவார் இல்லை. மேலும் தோன்றுகின்றவர் என்பது வழக்கில் ஆண்பாலுக்கே உரியது. ஆதலின் இஃது இலக்கண வழக்கு அன்று, வழுவமைதியே.

## ஒருவர் உரை

***23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி***
***தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.***

எ-து : ஒருவன் திணை அறிந்து பால் மயக்கு உற்றவழி, ஐயப் பொருளைத் தான் உயர்திணை என்பது அறிந்தான், அதனை அத்திணைப் பன்மைமேல் வைத்துச் சொல்லுக.

எ-டு : சேய்த்தாய்த் தோன்றுவதொரு மக்கள் பிழம்பு கண்டு, மக்கள் என்பது உணர்ந்து, ஆண்பால் பெண்பால் உணராதவழிப் பெண்டாட்டி கொல்லோ, ஆண்மகன் கொல்லோ தோன்றுகின்றவர் எனப் பன்மையான் சொல்லுக; அஃது இருபாற்கும் உரித்து ஆதலான்.

'திணைவயின்' என்னாது 'தான் அறி பொருள்வயின்' எனப் பொதுப்படக் கூறிய அதனால், ஒருவன்கொல்லோ, பலர்கொல்லோ கறவை உய்த்த கள்வர் - ஒருத்திகொல்லோ

பலர்கொல்லோ குருக்கத்தி நீழல் வண்டல் அயர்ந்தார் - எனத் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை ஒருமைப் பால் ஐயமும் கொள்க.

இதற்கு வேறும் ஓர் உதாரணம் காட்டுதும் : ஒரு மக்கள் தலைஓடு காட்டுள் கிடந்தது கண்டு, பெண்தலை, ஆண்தலை என்று உணராதான், 'பெண்டாட்டி தலை கொல்லோ, ஆண்மகன் தலைகொல்லோ இஃதோ கிடந்த மக்கள் தலை' என்க.

மக்கள் என்பது இருபாற்கும் பொது ஆகலான், ஐயப்படும் இடத்து ஒருபாற்கு உரிய சொல்லான் சொல்லாது ஒழிக; பன்மையான் சொல்லுக. மயக்குற்றதனைக் கிளவி மேல் வையாது, ஒருவன் மயக்குற்ற இடத்து என்க. (23)

## ஒருவர் உரைவிளக்கம்

**23. 'பால்மயக்கு . . . கூறல்.'-**

மக்கட்பிழப்பு - மனித வடிவம். மக்கட்டலையோடு - மனிதனின் மண்டை ஓடு. தலை - மண்டை ஓடு.

மக்கள் என்பது ஆண் பெண் இரண்டற்கும் பொது வாகிய உயர்திணைச் சொல். மாந்தர், மக்கள் என்பன உயர்திணைப் பன்மைப் பெயர்களே. இவற்றிற்கு ஏற்ற உயர்திணை ஆண்பால் பெண்பால் பெயர்கள் அக்காலத்தில் இல்லை.

மயக்குற்ற கிளவி - ஒருவன் மயக்குற்றவழிக் கூறும் சொல் - என்று பொருள் செய்யப்பட்டுள்ளது.

## சாத்திரியார் உரை

**23. 'பால்மயக்கு . . . கூறல்.'-**

'பால் மயக்குற்ற' என்பதற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் 'உயர்திணைப்பால் மயக்குற்ற' என்ற பொருள் கொண்டதற்கு காரணம் கூறிற்றிலர். பின்வரும்

சூத்திரத்தில் 'அஃறிணைப் பிரிப்பு' என்றிருப்பதால் அப்பொருள் கொண்டனர்போலும். சேனாவரையர் 'ஒன்றோ பலவோ செய்புக்கன' என்னும் உதாரணம் பின்கூறும் சூத்திரத்துக்குப் பொருந்தாது என்று கருதிப் 'பால்மயக்குற்ற' என்பதற்கு 'ஒன்றன்பால், பலவின்பால் மயக்குற்ற' என்னும் பொருள் கொண்டார்.

சூத்திரத்திலுள்ள 'பால் மயக்குற்ற' என்பதனாலேயே, ஆண்பால் பெண்பால், ஆண்பால் பலர்பால், பெண்பால் பலர்பால் என்ற மூவகை ஐயத்தையும் கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

இங்கு 'பன்மை கூறல்' என்பதற்குப் 'பன்மை விகுதி கூறவேண்டும்' என்பது பொருள் அன்று. பன்மைச் சொல்லால் வழங்கவேண்டும் என்பதே பொருள்.

**பாலசுந்தரனார் உரை**

**23. 'பால்மயக்கு . . . கூறல்.'**

இது திணை துணிந்து பால் துணியாவழிச் சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றது. 'பால்' எனமேல் நின்றமையின், பொருள் என்றது திணையையாம். 'தான்அறிபொருள்' என்றமையான் திணை துணிந்தமை பெறப்படும்.

ஆண்மகன் கொல்லோ பெண்மகள் கொல்லோ என்பது காட்சிக்கண் நிகழும் ஐயமாயின் நிகழ்காலச் சொல்லானும், காணாவழியாயின் இறந்தகாலச் சொல்லானும் சொல்லுக. ஒருமைபன்மை ஐயம் காணாவழியே நிகழும்.

ஒருவர் என்றோ ஒன்று என்றோ துணிந்தவழி, ஒருமையைப் பன்மையான் கூறியது வழுப்பட்டது ஆயினும், ஐயப்புலத்தின்கண் சொல் நிகழ்த்தற்கு வேறுவழி இன்மையின் அதுவே மரபாய் வழாநிலை ஆயிற்று.

மயங்கல்கூடா (சொ. 11) என்பதற்கு ஐயக்கிளவிகள் மயங்கியே நிற்கும் என மரபு உணர்த்தியவாறு.

வழாநிலையாக ஒன்று இருப்பின் அன்றோ இது வழுவாவது? ஆதலின் இதனை வழுவமைதி என்பது பொருந்தாது.

## பதிப்பாசிரியர் குறிப்பு

23. ஒருவர் என்றோ ஒன்று என்றோ துணிந்தவழி, ஒருமையைப் பன்மைப் பாலால் கூறுவது வழுப்பட்டதாயினும், ஐயப்புலத்தின்கண் சொல் நிகழ்தற்கு வேறுவழி இன்மையின், அதுவே மரபாய் *வழாநிலை* ஆயிற்று எனக்கொள்க. 'மயங்கல் கூடா' என்பதற்கு மாறாக ஐயக் கிளவிகள் மயங்கியே நிற்கும் என்னும் மரபு உணர்த்தப் பட்டது.

## இளம்பூரணர் உரை

### திணைஐயமும் பால்ஐயமும்

**24. உருவென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்**
**இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.**

எ . . . ன், இது திணைஐயத்துக்கண்ணும் அஃறிணைப் பால் ஐயத்துக்கண்ணும் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: திணை ஐயம் தோன்றினவழி ஒரு வடிவு சொல்லக் கருதினும், அஃறிணையை ஒன்று பல என்று பிரித்துச் சொல்லினும் மேல் அடுத்த போலப் பொதுவினானே சொல்லுக என்றவாறு.

உதாரணம் : குற்றிகொல்லோ மகன்கொல்லோ தோன்றுகின்ற உருவு என வரும். இது திணைஐயம்.

ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய் புக்க பெற்றம் என வரும். இஃது அஃறிணைப் பால்ஐயம்.

உருவு எனவே, திணைஐயம் என்பது ஓர் ஒப்பின் பெற்றாம். பால் ஐயமாயின், தத்தம் பகுதியொடு முடியும் என்பது. *(24)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**24. 'உருவு என மொழியினும்' -**

உருவு என்பது பொருள் பொருத்தம் பற்றித் திணை ஐயத்துக்குக் கொள்ளப்பட்டது. அஃறிணைப் பிரிப்பு - அஃறிணை இயற்பெயராகிய 'பெற்றம்' போன்ற யாவும் ஒருமைக்கும் பன்மைக்கும் பொது. பெற்றம் வந்தது என்றால் ஒருமை; பெற்றம் வந்தன என்றால் பன்மை. பால் ஐயம் என்றால் ஒருமைப் பாலோ பன்மைப் பாலோ என்ற ஐயம். தத்தம் பகுதியொடு முடியும் - ஒருமை என்று பகுத்துக் கொண்டால் ஒருமை வினையுடனும், பன்மை என்று பகுத்துக் கொண்டால் பன்மை வினையுடனும் முடியும்.

தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே.
*(சொ. 168)*

'உருவு' என்ற பாடத்தையே சேனாவரையரையும் தெய்வச் சிலையாரையும் விடுத்த ஏனைய உரையாசிரியர் யாவரும் கொண்டனர். உருவு - வடிவம். உரு - நிறம். ஆகவே உருவு என்பதனையே பாடமாகக் கொள்க.

## சேனாவரையர் உரை

### ஐயப்புலப் பொதுச்சொல் வழங்குமாறு

**24. *உருபென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்றும் உரித்தே சுட்டும் காலை.***

*(இள்)* : உருபு எனச் சொல்லும் இடத்தும், ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச்சொற் கண்ணும், இவ்விரு கூற்றினும் ஐயப்புலப் பொதுச்சொல் ஆதல் உரித்து என்றவாறு.

எனவே 'ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றாநின்ற உருபு' எனவும், 'ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய்புக்க உருபு' எனவும், 'குற்றிகொல்லோ மகன்கொல்லோ தோன்றாநின்ற உருபு' எனவும், 'ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம்' எனவும் சொல்லுக என்பதாம்.

ஐயக்கிளவி என்பது அதிகாரத்தான் பெற்றாம். உருபினும் என்னாது உருபு என மொழியினும் என்றதனான், உருபின் பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டம் என்னும் தொடக்கத்தனவும் கொள்க.

பன்மை கூறல் உயர்திணைப் பால் ஐயத்திற்கு உரித்து என்றும், உருபு என மொழிதல் திணை ஐயத்திற்கு உரித்து என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் :- அவை அவற்றிற்கே உரியவாயின், அஃறிணைப் பிரிப்பு என்றாற் போல உயர்திணைப் பால் மயக்குற்ற என்றும், திணை ஐயத்து என்றும், விதந்து ஓதுவார் ஆசிரியர்; அவ்வாறு ஓதாமை யானும், நடையுள் அவை பொதுவாய் வருதலானும், அவை போலி உரை என்க.

ஒருவன்கொல்லோ, பலர்கொல்லோ என்றல் தொடக்கத்து உயர்திணைப் பன்மைஒருமைப் பால் ஐயத்திற்கு உருபு முதலாயின ஏலாமையும், திணை ஐயத்திற்கும், ஏனைப் பால் ஐயத்திற்கும் ஏற்புடைமையும் சுட்டி உணர்க என்பது போதரச் 'சுட்டுங்காலை' என்றார். சுட்டுதல் - கருதுதல். *(24)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**24. உருபு . . . காலை-**

23ஆம் நூற்பா உயர்திணைப்பால் ஐயத்திற்கே உரியது. உருபு என மொழிதல் திணைஐயத்திற்கே உரியது என்பது உரையாசிரியர் கருத்து. சென்ற நூற்பாவில் 'உயர்திணைப்பால் மயக்குற்ற' என்று விதந்து கூறாமையானும், இந்நூற்பாவில் திணைஐயத்து என்று விதந்து ஓதாமையானும் வழக்கில் அவை பொதுவாய் வருதலானும் உரையாசிரியர் கூறுவது பொருந்தாது என்பது சேனாவரையர் கருத்து.

'சுட்டுங்காலை' என்றதனான் உருபு என மொழிதல் உயர்திணைப் பன்மை ஒருமைப்பால் ஐயத்துக்கு ஏலாது. திணை ஐயத்துக்கும் ஏனைப்பால் ஐயத்திற்கும் ஏற்கும் என்பது சேனாவரையர் கருத்து.

## நச்சினார்க்கினியர் உரை

### இதுவும் அது

***24. உருவஎன மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்***
***இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.***

இதுவும் ஐயப்பொருள்மேல் சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றது.

இ-ள்: இரு வீற்றும் சுட்டுங்காலை - திணை ஐயத்துக் கண்ணும், அஃறிணைப்பால் ஐயத்துக்கண்ணும் கூறும் மரபு கருதும் இடத்து; உருவு என மொழியினும் - திணை ஐயத்துக்கண் உருவு எனச் சொல்லுமிடத்தும்; அஃறிணைப் பிரிப்பினும் - ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணை இயற்பெயர் ஆகிய பொதுச்சொற்கண்ணும்; உரித்து - ஐயத்தைப் புலப்படுத்தும் பொதுவாகிய தன்மை உரித்து என்றவாறு.

உதாரணம் :
குற்றிகொல்லோ மகன்கொல்லோ தோன்றாநின்ற உருவு ?
ஒன்றுகொல்லோ பலகொல்லோ இச்செய்புக்க பெற்றம் ?
எனவரும்.

உருவினும் என்னாது உருவு என மொழியினும் என்றதனான், உருவின் பொருள ஆகிய வடிவு, பிழம்பு, பிண்டம் என்னும் தொடக்கத்தனவும் கொள்க. உருவு முதலியன உயர்திணைப்பால் ஐயத்துக்கு ஏலாமையும், ஏனைத்திணை ஐயத்திற்கும் பால் ஐயத்திற்கும் ஏற்புடைமையும் தோன்றச் 'சுட்டுங்காலை' என்றார்.

உருபு எனப் பகர உகரமாகப் பாடம் ஓதின், அது வேற்றுமை உருபிற்கும் உவம உருபிற்கும் பெயராய், வடிவை உணர்த்தாது என்று உணர்க.

'அது என் உருபுகெட' சொ. 95 எனவும்,
'உருபினும் பொருளினும் மெய் தடுமாறி' சொ. 102 எனவும்,
'உருபு தொடர்ந்து அடுக்கிய' சொ. 103 எனவும்,
'உருபு தொக வருதலும்' சொ.105 எனவும்
'மெய் உருபு தொகாஅ' சொ. 106 எனவும்,
'யாதன் உருபின்' சொ. 107 எனவும்,

பிறாண்டும் வேற்றுமைக்கு உருபு எனவே சூத்திரம் செய்த வாறு காண்க. உவம உருபு என்றல் அவ்வோத்தில் கூறிய உரைகளான் உணர்க.

அன்றியும் சான்றோர் செய்யுள்களிலும்

'உருவுகிளர் ஏர் வினைப் பொலிந்த பாவை' - அகநா. 142 எனவும்,
'ஞாயிற்று, உருவுகிளர் வண்ணம்கொண்ட' -பதிற்.52 எனவும்,
'உருவக் குதிரை மழவர்' - அகநா. 1 எனவும்,
'வேண்டு உருவம் கொண்டது ஓர் கூற்றங்கொல்' - கலி. 56 எனவும்

பிறாண்டும் கூறுமாற்றான் உணர்க.

உருவு என்பது உடல்உயிர் கூட்டப் பொதுமை யாகிய மக்கள் என்னும் பொதுமைக்கு ஏலாது உடலையே உணர்த்துதலானும், பெற்றம் என்பது இயற்பெயர் ஆயினும், ஒருகால் சொல்லுதற்கண் ஒருபால்போல் நில்லாது இருபால் மேலும் நிற்றலானும் வழுவமைதி ஆயின. *(24)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**24. உருபு என மொழியினும் -**

உருவு என்பது வடிவு. உருபு என்பது வேற்றுமை உருபு முதலியன. ஆதலின் 'உருவு' என்ற பாடமே ஏற்றது என்று நிறுவுகிறார். உரு என்பது நிறம். உருவு என்பது வடிவம் ஆதலின் உதாரணத்தில் 'தோன்றாநின்ற உரு**வு**' என்றே இருத்தல் வேண்டும்.

உருவு என்பது அஃறிணையாகிய உடம்பையே உணர்த்துதலான், உயர்திணைப் பன்மை ஒருமைப்பால் ஐயத்துக்கு ஏலாது என்றார்.

உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை - வடிவம் சிறக்க அழகாக அமைக்கப்பட்ட பாவை. ஞாயிற்று உருவுகிளர் வண்ணம் கொண்ட - சூரியனுடைய வடிவத்தில் விளங்கும் நிறத்தைக்கொண்ட. உருவக்குதிரை- அழகிய வடிவினை உடைய குதிரை.

வேண்டுஉருவம் கொண்டதுஓர் கூற்றம்கொல் - தான் வேண்டிய வடிவினை எடுத்த இயமனோ?

## தெய்வச்சிலையார் உரை

### திணை ஐயத்தின்கண் சொல் வழங்குமாறு

***24. உருபுஎன மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்***
***இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.***

திணை ஐயத்தின்கண் சொல் நிகழும்ஆறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணை அஃறிணை என்னும் இரண்டு வேறுபாட்டினையும் சுட்டி ஐயப்படும் காலத்து, உருபு எனச் சொல்லினும் உரித்து, அஃறிணை ஒருமையால் கூறலும் உரித்து அப்பொருள் எ-று.

மேல் 'தான் அறிபொருள்' என்றமையானும், ஈண்டு 'இரு வீற்றும்' என்றமையானும் திணைஐயம் என்பது பெற்றாம். ஐயம் என்பது அதிகாரத்தான் வந்தது. 'இரு வீற்றும் உரித்து' என்பதனை 'உரித்து இரு வீற்றும்' என்று மொழி மாறுக. அஃறிணைப் பிரிப்பு என்றதனான் பொதுமையில் பிரிவது ஒருமை ஆதலின், ஒருமைச் சொல்லான் சொல்லினும் என்றார் ஆகக் கொள்க.

குற்றியோ மகனோ என ஐயுற்றுழி, குற்றியோ மகனோ தோன்றுகின்ற உருபு, தோன்றுகின்ற அது என்க.

உருபு என்றதனான், அப்பொருள் பயக்கும் பிழம்பு, வடிவு, பிண்டம் என்பனவும் கொள்க. (24)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**24. 'உருபென மொழிதல்' -**

இரு வீற்றும் - இரண்டு வேறுபாட்டின்கண்ணும் *(உயர்திணை, அஃறிணை)*

*அஃறிணைப்பிரிப்பு - அஃறிணைப் பொதுமையிலிருந்து பிரிக்கப்பட்ட ஒருமை. ஐயம் என்ற சொல், 'பால் மயக்குற்ற' (23) என்ற நூற்பாவிலிருந்து கொள்ளப்பட்டது. 'ஐயச்சொல் உரித்து இருவீற்றும்' என்று மொழிமாற்றி ஐயச்சொல் என்பதனை உரித்து என்பதற்கு எழுவாய் ஆக்குக.*

குற்றியோ மகனோ தோன்றுகின்ற உருபு, தோன்றுகின்ற அது என்று வினவுக. 'உருபு' என்று இவரும் சேனாவரையரும் பாடம் கொள்வர். ஏனையோர் 'உருவு' எனக் கொள்வர்.

## கல்லாடனார் உரை

### திணைபால் ஐயம் அமையுமாறு

*24. உருவென மொழியினும் அ:றிணைப் பிரிப்பினும்*
*இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.*

என்-எனின், திணை ஐயத்துக்கண்ணும், அஃறிணைப் பால் ஐயத்துக்கண்ணும் வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உருவு எனச் சொல்லும் இடத்தும், அஃறிணைப் பிரிப்பின்கண்ணும் இவ் இரண்டு கூற்றின்கண்ணும், ஐயம் உரித்துக் கருதும் காலத்து என்றவாறு.

என்றது திணை ஐயம் தோன்றியவழி உருபு என்று சொல்லுக. அஃறிணைப்பால் ஐயம் தோன்றியவழி அஃறிணை இயற்பெயர் ஆகிய பொதுப்பெயரால் சொல்லுக எ-று.

ஒருமையும் பன்மையும் வினையால் பிரிக்கப் படுதலின், ஆகுபெயரான் அஃறிணை இயற்பெயர் 'பிரிப்பு' எனப்பட்டது.

ஐயம் என்பது அதிகாரத்தான் வருவிக்க. திணை ஐயம், அஃறிணைப்பால் ஐயம் என்பன சூத்திரத்துள் இல்லை ஆயினும், உருவு என்றும், அஃறிணைப் பிரிப்பு என்றும் கூறிய வாய்பாட்டான் உய்த்துணர்ந்து கொள்ளப்படும்.

எ-டு : குற்றிகொல்லோ மகன்கொல்லோ அதோ தோன்றுகின்ற உருவு என்பது.

'ஒன்று என முடித்தல்' என்பதனால் உருவே அன்றி வடிவு, பிழம்பு, பிண்டம் என்பனவற்றானும் சொல்லுக. இதற்குக் காணாத இடத்து ஐயமும் கொள்க.

இனி, அஃறிணைப்பால் ஐயம் 'ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய் புக்க பெற்றம்?' என்பது. இதற்குக் கண்ட இடத்து ஐயம் என்பது இல்லை.

இதனுள் திணை ஐயத்துக் கூறிய உருவு என்னும் வழக்கு உடல் உயிர் கூட்டப் பொருண்மை ஆகிய மகன் என்னும் நிலைமைக்கு ஏலாது. அவன் உடலைப் பிரிய நின்று உணர்த்தினமையான் அஃதும் ஒரு திணை வழூஅமைதி எனப்படும்.

அஃறிணைப்பால் ஐயத்துக் கூறிய இயற்பெயர் பொது எனினும், சொல்லுதற்கண் ஒருபால்மேல் நிகழற்பாலது அவ்வாறு நில்லாது இருபால்மேலும் நின்றமையின், இஃதும் ஒரு மரபு வழூஉ அமைதி எனக்கொள்க. *(24)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**24. 'உருவு என . . . சுட்டுங்காலை.'-**

'உருவு' திணை ஐயத்திற்கும் 'அஃறிணைப் பிரிப்பு' பால் ஐயத்திற்கும் உய்த்துணர்வால் கொள்ளப்படும். கண்டவிடத்து ஐயமும் காணாவிடத்து ஐயமும் கொள்ளப்படும்.

உருவு திணை வழுவமைதியாதலும், அஃறிணைப் பிரிப்பு மரபு வழுவமைதியாதலும் விளக்கப்பட்டுள்ளன.

## ஒருவர் உரை

***24. உருஎன மொழியினும் அ:றிணைப் பிரிப்பினும் இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.***

எ-து : திணை ஐயம் தோன்றியவழி 'உரு' என்று சொல்லுதலும், அஃறிணையை ஒன்று பல என்று பிரித்துச் சொல்லுதலும் இவையும் மேலதே போலப் பொதுவினானே சொல்லுதலாம்.

'இருவீற்றும் உரித்தே சுட்டும் காலை' என்பது உயர்திணைக்கும், அஃறிணைக்கும், ஒருமைக்கும், பன்மைக்கும் உரித்தான பொதுச்சொல்லான் சொல்லுக, சுட்டிச் சொல்லும் இடத்து.

எ-டு : மும்முழம் கையரைப் போல ஒக்கமும், அதற்குத் தக்க பிழம்பும் மம்மர்மாலைப்பொழுதுகண்டு ஐயுற்றான், 'குற்றிகொல்லோ மகன்கொல்லோ தோன்றுகின்ற உரு என்று இருதிணைக்கும் பொதுவாகச் சொல்லுக.

'உருவினும்' என்னாது, 'உரு என மொழியினும்' என்றதனான், உருவின் பொருள ஆகிய வடிவு எனினும், பிண்டம் எனினும், பிழம்பு எனினும் ஒக்கும்.

தோன்றுவான், தோன்றுவாள், தோன்றுவது என்று சொல்லற்க.

இனி, அஃறிணைப்பால் ஐயத்துக்கண் சொல் நிகழுமாறு : ஒருவன், செய்புக்குத் தின்ற பெற்றச் சுவடு பலவாய்க் கிடந்தன கண்டான். ஒன்று பல சுவடுபடத் திரிந்து தின்னினும், பல ஒருங்கு புக்குத் தின்னினும் சுவடு பல ஆகும். ஆதலான் ஐயுற்று நின்றவழி, 'ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம்?' என்க.

பெற்றம் என்பது இருபாற்கும் உரித்து ஆகலின், புக்கது, புக்கன என்னற்க.

'உரு என மொழியினும்' என்பதற்குத் திணை ஐயம் என்பது ஒப்பினால் கொள்க. (24)

### ஒருவர் உரைவிளக்கம்

**24. 'உருவு என . . . காலை.'-**

மும்முழங்கையரைப் போல ஒக்கமும் அதற்குத் தக்க பிழம்பும் மம்மர் மாலைப்பொழுது கண்டு - மூன்று முழம் அளவு கொண்ட உயரமும், அதற்கு ஏற்ற வடிவமைப்பும் கதிரவன் ஒளி மழுங்கும் மாலைப் பொழுதில் கண்டு. முழம் 1½ அடி, மும்முழம் 4½ அடி.

பெற்றச்சுவடு - மாடு கால் வைத்த அடையாளம்.

செய்புக்குத் தின்ற - வயலிலே புகுந்து மேய்ந்த.

பல சுவடுபடத் திரிந்து - கால் வைத்த அடையாளம் பல இடங்களில் தோன்ற நடந்துசென்று

உரு என்பது திணை ஐயம் என்பது பொருள் பொருத்தத்தான் கொள்ளப்படும். உரு என்பது உடம்பின் வடிவினைக் குறிக்கும் அஃறிணைச் சொல்.

## சாத்திரியார் உரை

**24. 'உருபு என . . . காலை.'**

சேனாவரையர் திணை ஐயத்தோடு ஆண்பால் பெண்பால் ஐயமும் ஒன்றன்பால் பலவின்பால் ஐயமும் கொண்டார். ஓர் உருவைப் பார்த்து அஃது ஆள் என்று அறிந்த பின்னரே, ஆணோ பெண்ணோ என்று ஐயம் தோன்றுவது இயற்கை. ஆதலால் 'ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இதோ தோன்றுகின்ற ஆள்' என்று கூறுவதே நேரிது அன்றி, 'ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றுகின்ற உரு' என்பது நேரிதன்று.

அஃறிணைப்பாலைப் பிரித்து உணர்த்தக் கூடிய சொற்கள் அது, அவை, இது, இவை, உது, உவை முதலியவே. சேய்மைக்கண் உள்ள பொருள்களிலேயே ஐயம் நிகழும் ஆதலின், இங்கு அது, அவை போன்றவையே 'அஃறிணைப் பிரிப்பு' என்பதனால் கொள்ளலாம். பன்மைப் பொருளில் ஐயம் நிகழ்வதைக் காட்டிலும் ஒருமைப் பொருளில் ஐயம் நிகழ்வது மிகுதி ஆதலின், 'அது' என்பதை மாத்திரம் தெய்வச்சிலையார் கொண்டார் போலும்.

உரு முதலிய அஃறிணைச் சொற்களை உயர் திணையாகவும் கொள்ளலாகாதோ எனின், 'இவ்வுரு குற்றி அல்லன் மகன்' என்னுமிடத்தில் உரு ஆண்பாற்கும் உரியது

ஆதலின், அல்லன் என்னும் ஆண்பால் முடிபைப் பெறுவது வழு அன்மையான், அதனை உரைகாரர்கள் அமைக்க வேண்டுவது இன்று. அவர்கள் அவ்வாறு அமைத்தலான் உயர்திணையாகக் கொள்ளுதல் பொருந்தாது.

## பாலசுந்தரனார் உரை

**24. 'உருவு என மொழியினும் . . . காலை.'**

உருவு என்பது, உயர்திணை ஒருமைபன்மைப்பால் ஐயத்தின்கண் வாராது என்பதும் இவ்விருவகைச் சொற்களும் செப்பின்கண் வருதற்கும் உரிய என்பதும் கருதி உணரச் 'சுட்டுங்காலை' என்றார். 23, 24 என்ற இரண்டு சூத்திரத்தானும் வினாப்பற்றிய மரபு கூறப்பட்டது.

## பதிப்பாசிரியர் குறிப்பு

24. 'உருவு' என்பது ஒருமைப்பன்மைப்பால் ஐயத்தின்கண் வாராது என்று அறிக.

## இளம்பூரணர் உரை

### ஐயம் துணிந்தவழிச் சொல் நிகழ்ச்சி

**25. தன்மை சுட்டலும் உரித்துஎன மொழிப**
**அன்மைக் கிளவி வேறுஇடத் தான.**

எ . . . ன், ஐயப்பட்ட அப்பொருளைத் துணிந்தவழிச் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன்மைத் தன்மையைச் சொல்லுதலும் உரித்து, ஐயத்திற்கு வேறாய்த் துணிபொருளிடத்து என்றவாறு.

ஒருத்தி எனத் துணிந்தவழி 'ஒருவன் அல்லள் ஒருத்தி' என வரும்.

ஒருவன் எனத் துணிந்த வழி 'ஒருத்தி அல்லன் ஒருவன்' என வரும்.

இஃது உயர்திணைப் பாலையத்துக்கண் துணிபு தோன்றினவழிச் சொல் நிகழுமாறு.

மற்றையனவும் அன்ன.

இனி ஒருவன் வேறு இடம் என்பதனைத் துணியப்படும் பொருட்கு வேறாகி நிற்கும் பொருள் என்னும்.

அவன் உதாரணம் காட்டுமாறு : குற்றிகொல்லோ மகன்கொல்லோ என ஐயமுற்றான், மகன் என்று துணியின் குற்றியன்று மகன் எனவும், குற்றி என்று துணியின் மகனல்லன் குற்றி எனவும் வரும் என்னும்.

இனி, அல்லாத தன்மையை உடையது துணியப்படும் பொருளன்றே? அதனான் அதன்கண்ணே அன்மையை வைத்துச் சொல்லுப என்ப, முன்னை உதாரணம் காட்டுவர்.

குற்றியல்லன் மகன் என்புழிக் குற்றியின் அல்லன் என்று ஐந்தன் உருபு விரித்து உரைக்க. *(25)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**25. 'தன்மை சுட்டலும்' -**

ஐயம் ஏற்பட்டபொழுது ஐயம் நீங்கித் துணிதலும் உண்டு. துணிந்தவழி அன்மையைத் துணிந்த பொருள்மேல் வைத்தும் கூறலாம். உம்மையால் துணியப்படாத பொருள் மேல் வைத்தும் கூறலாம். துணிந்தவழி 'ஒருவன் அல்லள்; ஒருத்தி' என்றாற்போல வரும். நச்சினார்க்கினியர் 'இவள் ஒருவன் அல்லள்; ஒருத்தி' என இவள் முதலிய சொற்களைச் சேர்த்துத் தெளிவாகக் கூறுகிறார். குற்றியின் அல்லன் - குற்றியின் நீங்கிய அன்மையை உடையன் என விரியும்.

## சேனாவரையர் உரை

### அவை துணிந்தபின் அமையும் வகை

**25. *தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான.***

*(இ-ள்) : ஐயுற்றுத் துணியும்வழி அன்மைக்கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலும் உரித்து என்று சொல்லுவர், துணிந்து தழீஇக் கொள்ளப்பட்ட பொருளின் வேறு ஆய பொருளிடத்து என்றவாறு.*

என்றது, குற்றிகொல்லோ மகன்கொல்லோ என்றானும், ஒருவன் கொல்லோ ஒருத்திகொல்லோ என்றானும், ஒன்றுகொல்லோ பலகொல்லோ என்றானும், ஐயம் நிகழ்ந்தவழித் துணிதலும் உண்டு; பிற நடையுள் துணிந்தவழி மறுக்கப்படும் பொருள்மேல் அனமைத்தன்மை ஏற்றினும் அமையும் என்றவாறு.

மகன் என்று துணிந்தவழிக் குற்றி அன்று மகன் எனவும், குற்றி என்று துணிந்தவழி மகன் அல்லன் குற்றி எனவும், ஆண்மகன் என்று துணிந்தவழிப் பெண்டாட்டி அல்லள் ஆண்மகன் எனவும், பெண்டாட்டி என்ற துணிந்தவழி ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி எனவும், ஒன்று என்று துணிந்தவழிப் பல அல்ல ஒன்று எனவும், பல என்று துணிந்தவழி ஒன்று அன்று பல எனவும் மறுக்கப்படும் பொருள்மேல் அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றவாறு.

உம்மை எதிர்மறை ஆகலான், வேறிடத்துச் சுட்டாமையே பெரும்பான்மை என்பதாம். ஆகவே 'இவ்வுருபு குற்றி அன்று மகன்' என ஐயப் புலமாகிய பொதுப்பொருள் மேலானும், 'குற்றி அல்லன் மகன்' எனத் துணி பொருள் மேலானும் அன்மைக் கிளவி அன்மை சுட்டி நிற்றல் பெரும்பான்மை என்பதாம்; என்னை? வேறிடத்துச் சுட்டாமையாவது ஈண்டுச் சுட்டலே ஆகலான்.

குற்றி அன்று மகன் என்றவழி, மகன் என்பது நின்று வற்றும் எனின்,

'எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்விது என்ப' (சொல்-68)

என்பதனான் எழுவாய் வெளிப்படாது நிற்றலும் உண்மை யான், வெளிப்படாது நின்ற இவன் என்னும் எழுவாய்க்கு அது பயனிலை ஆகலின், நின்றுவற்றுதல் யாண்டையது என்க. அல்லனவற்றிற்கும் ஈது ஒக்கும்.

குற்றி அல்லன் என்புழிக் குற்றி என்பது அல்லன் என்னும் சொல்லோடு இயைந்தவாறு என்னை எனின், இவ்வுருபு குற்றியாம் என்றவழி, ஆம் என்பதனொடு குற்றி என்பதூஉம் எழுவாயாய் நின்றே இயைந்தாற்போல, இவன் குற்றி அல்லன் என்புழி, ஆம் என்பதன் எதிர்மறையாகிய அன்மைக் கிளவியோடும் குற்றி என்பது எழுவாயாய் நின்றே இயையும் என்பது. எழுவாயாய் இயைதலின் அன்றே, யான் நீ அல்லென் என்புழி, நீ என்பது வேற்றுமைக்கேற்ற செய்கை பெறாது நின்றது என்க. 25

## சேனாவரையர் உரைவிளக்கம்

**25. தன்மை . . . தான**

'அன்மைக்கிளவி தன்மை சுட்டலும் உரித்து வேறிடத்தான என மொழிப' என்று அமைத்துச் சேனாவரையர் வேறிடம் என்பது துணிபுக்கு வேறான ஐயப்பொருள் என்று பொருள் கூறுகிறார். உம்மை எதிர்மறை ஆகலான் துணி பொருள்மேல் அன்மைகூறலே பெரும்பான்மை என்கிறார். 'குற்றியன்று மகன்' என்புழி, இவன் என்பது தோன்றா எழுவாயாய் வரும் என்கிறார். எனவே குற்றி அன்று; இவன் மகன் என வாக்கியம் பிழையின்றி அமையும்.

இவன் குற்றி அல்லன் என்புழிக் குற்றி என்பது அல்லன் என்பதன் பகுதியாகிய அன்மையோடு இணைந்து பொருள்

முற்றும். யான் நீ அல்லென் என்புழி நீ என்பது எழுவாயாய் நின்றே அல்லென் என்பதனொடு முடிந்தது. குற்றி அல்லன் என்புழிக் குற்றியின் அல்லன் என ஐந்தாம் வேற்றுமைத் தொகையாகக் கொள்ளலாம் எனின், அவ்வாறு கொள்வ தாயின், யான் நின்னின் அல்லென் என்பது உருபு தொக்கு யான் நின் அல்லென் என வரல் வேண்டும். அவ்வாறு வாராமையின் வேற்றுமைத் தொகை ஆகாமல் எழுவாயாய் நின்றே முடிக்கும் சொல்லோடு இணையும் என்பதே ஏற்புடையது என்பது சேனாவரையர் கருத்து.

**நச்சினார்க்கினியர் உரை**

**ஐயுற்றுத் துணிந்த பொருள்மேல் அன்மை கூறும் மரபு**

***25. தன்மை சுட்டலும் உரித்துஎன மொழிப;***
***அன்மைக் கிளவி வேறுஇடத்து ஆன.***

இது முன்னர்க் கூறிய பால் ஐயத்தையும் திணை ஐயத்தையும் துணிந்து கூறும்வழி அவற்றிற்கு அன்மைத்தன்மை கூறும் மரபு கூறுகின்றது.

இ-ள்: தன்மை சுட்டலும் உரித்து - ஒருவர்க்குப் பால் ஐயமும் திணை ஐயமும் நிகழ்ந்துழி, அங்ஙனம் ஐயுறவே அன்றி, அவர்க்கு அப்பொருளின் உண்மைத்தன்மையைக் கருதுதலும் உரித்து; அன்மைக்கிளவி வேறு இடத்தான என மொழிப - ஆண்டு ஒரு பொருள்மேல் ஒரு பொருள் அன்றாம் தன்மை உணர்த்தும் சொல், ஐயத்துக்கு வேறாய்த் துணிந்து தழீஇக்கொண்ட பொருளின்கண்ணது என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம் : இவன் பெண்டாட்டி அல்லன், ஆண்மகன்
இவள் ஆண்மகன் அல்லள், பெண்டாட்டி
இவன் குற்றி அல்லன், மகன்
இவ்வுருவு மகள் அன்று, குற்றி

இப்பெற்றம் பல அன்று, ஒன்று
இப்பெற்றம் ஒன்று அல்ல, பல

எனவரும்.

'இவன்' என்னும் எழுவாய் 'அல்லன்' என்பதனொடு முடிந்தது. மகன் என்பது இவன் என்னும் சுட்டுப் பெயர்க்குப் பெயர்ப் பயனிலையாய் நின்றது. இவற்றிற்கு ஐந்தாம் உருபு விரித்தலும் ஒன்று, 'பெண்டாட்டியின் அல்லன்' என.

இனிச் சேனாவரையர் முன்னிற் சூத்திரத்தில் உருபு என்றதனை 'ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இத்தோன்றாநின்ற உருபு' என்னும் ஐயப்புலப் பொதுச்சொல் உரித்து என்று உதாரணம் காட்டி, இச்சூத்திரத்தில் 'அன்மைக் கிளவி மறுக்கப்படும் பொருள்மேல் ஆம்' என்று கூறினாரால் எனின், அவர் உதாரணம் காட்டியவற்றில், ஆண்மகன் என்று துணிந்துவழிப் 'பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்' என்றும், பெண்டாட்டி என்று துணிந்தவழி 'ஆண்மகன் அல்லன், பெண்டாட்டி' என்றும், மறுக்கப்படும் பொருள்மேல் அன்மைகூறி, அவற்றிற்கு 'இவ்வுருபு பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்' என்றும், 'இவ்வுருபு ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி' என்றும் உருபு என்ற சொல் கூட்டியே பொருள் முடிக்க வேண்டுதலின், உருபு என்னும் அஃறிணைப் பெயர் அல்லன், அல்லள் என்னும் உயர்திணை வினைக்குறிப்பொடு முடியாமை உணர்க. அன்றியும் 'இவன் பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்; இவள் ஆண்மகன் அல்லன், பெண்டாட்டி' என்ன அவர் சொல் முடித்தற்குக் கூட்டிய சுட்டுப்பெயர் கூறினும் முடியாமை உணர்க. இனிக் குற்றியோ மகனோ என்று ஐயுற்றான் மகன் என்று துணிந்தது, மக்கள் தன்மையை ஆண்டுப் பெற்றன்றே? அது பெறவே, குற்றித்தன்மை ஆண்டு இல்லை ஆயிற்று. ஆண்டு இல்லாத குற்றித்தன்மையன் அல்லன் மகன் ஆதலான், அஃது அல்லாதான்மேல் அன்மை ஏற்றுதலே ஆசிரியர் கருத்து என்று உணர்க. இனிக் குற்றி என்று துணியினும், இஃது ஒக்கும். உம்மை எண்ணும்மை. (25)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**25. தன்மை சுட்டலும் -**

இவன் பெண்டாட்டி அல்லன் ஆண்மகன்:

இவன் அல்லன், இவன் ஆண் மகன் என்று முடியும்.

பெண்டாட்டியின் அல்லன் -பெண்டாட்டியின் நீங்கிய ஆண்மைத் தன்மையை உடையன் என்று பொருள்படும்.

இவ்வுருவு ஆண்மகன் அல்லன், பெண்டாட்டி - இவ்வுரு பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்- என்று கூறின், உருவு என்ற அஃறிணைச்சொல், அல்லன் அல்லள்-என்ற வினைக்குறிப்பொடு முடியாது.

இவன் பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்- இவள் ஆண்மகன் அல்லன், பெண்டாட்டி - என்று சுட்டுப்பெயர் கூட்டி முடிப்பினும் 'இவன் அல்லள்', 'இவள் அல்லன்' என்று முடியா. 'இவன் ஆண்மகன்', 'இவள் பெண்டாட்டி' என்று முடிப்பின் 'பெண்டாட்டி அல்லள்', 'ஆண்மகன் அல்லன்' என்பன நின்று வற்றும்.

குற்றியோ மகனோ என்று ஐயுற்று, மகன் என்று துணிந்தவழி, துணியப்பட்ட மகன்மேல் 'குற்றித்தன்மையன் அல்லன் மகன்' என்று கூறுதலே ஏற்புடையது என்று சேனாவரையர் உரை மறுக்கப்படுகிறது.

## தெய்வச்சிலையார் உரை

### அன்மைச்சொல்லை ஏற்றுமாறு

***25. தன்மை சுட்டலும் உரித்துஎன மொழிப***
***அன்மைக் கிளவி வேறுஇடத்து ஆன.***

மேல் ஐயப்பட்ட பொருள் துணியப்பட்டவழிச் சொல் நிகழும்ஆறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: துணியப்பட்ட பொருளின் வேறு ஆகிய பொருட்கண் வரும் அன்மைக்கிளவி, துணியப்பட்ட பொருளைச் சுட்டலும் உரித்து என்று சொல்லுவர் புலவர் எ-று.

தன்மை என்பதனான் அப்பொருட்கு இயல்பு என்பது பெற்றாம். பெறவே, துணியப்பட்ட பொருள் ஆயிற்று. வேறு இடத்து அன்மைக்கிளவி தன்மை சுட்டலும் உரித்து எனக் கூட்டுக. உம்மை எதிர்மறை ஆதலால் சுட்டாமை பெரும்பான்மை.

உ-ம் : குற்றி அல்லன் மகன்; மகன் அன்று குற்றி; பெண்டாட்டி அல்லன் ஆண்மகன்; ஆண்மகன் அல்லள் பெண்டாட்டி; ஒன்று அல்ல பல; பல அன்று ஒன்று : இவை துணியப்பட்ட பொருளைச் சுட்டி வந்தன. குற்றி அன்று மகன்; மகன் அல்லன் குற்றி; பெண்டாட்டி அல்லள் ஆண்மகன்; ஆண்மகன் அல்லள் பெண்டாட்டி; ஒன்று அன்று பல; பல அல்ல ஒன்று : இவை துணியப்படாத பொருளைச் சுட்டி வந்தன.

குற்றி அல்லன் மகனே எனத் தேற்ற ஏகாரம் கொடுத்துழி, அன்மை துணியப்பட்ட பொருளைச் சுட்டில், குற்றி நின்று வற்றும் ஆதலால், அன்மைக் கிளவி அல்லாத பொருளைச் சுட்டுதல் ஆசிரியர் மதம் என்று கொள்க. (25)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**25. 'தன்மை சுட்டலும்' -**

துணியப்பட்ட பொருளுக்கு அன்மை கொடுத்தும் துணியப்படாத பொருளுக்கு அன்மை கொடுத்தும் எடுத்துக்காட்டுக்கள் தந்து 'இவன் குற்றி அல்லன் மகனே' என்று கூறின் குற்றி என்பதற்கு முடிக்கும் சொல் இன்மையான், துணியப்படாத பொருள்மேல் அன்மையை ஏற்றுதலே ஆசிரியர் கருத்து என்று முடிவு செய்கிறார்.

குற்றியல்லன் என்பதனை குற்றியின் அல்லன் என்பதன் தொகையாக்கி குற்றியின் நீங்கிய அன்மைத் தன்மையை உடையன் என்று இளம்பூரணர் குறிப்பிடுவது இவருக்கு உடன்பாடு அன்று போலும்.

## கல்லாடனார் உரை

### துணிபொருட்கண் சொல்லும் மரபு

25. **தன்மை சுட்டலும் உரித்துஎன மொழிப**
**அன்மைக் கிளவி வேறுஇடத் தான.**

என்-எனின், துணிபொருட்கண் மரபு இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ-ள்: தனது தன்மை ஆகிய அன்மைத் தன்மையைச் சொல்லுதலும் உரித்து என்று சொல்லுப ஆசிரியர்; அவ் அன்மைப்பொருள் எவ்விடத்து எனின், ஐயத்திற்கு மறுதலை ஆகிய துணிபு இடத்து என்றவாறு.

தன்மை சுட்டல் என்புழி இன்ன தன்மை என்பது இன்றேனும், மேல் அன்மைக்கிளவி என்றதனான் அன்மைத் தன்மை என்பது ஓர் ஒப்பின் கொள்க. கிளவி என்பது பொருள்.

எ-டு. : பெண்டாட்டி அல்லன் ஆண்மகன், ஆண்மகன் அல்லள் பெண்டாட்டி, குற்றி அல்லன் மகன், மகன் அன்று குற்றி, பல அன்று ஒன்று, ஒன்று அல்ல பல - என்பன.

பெண்டாட்டி அல்லன் ஆண்மகன் என்புழி, ஆண்மகன் என்னும் பெயர் எழுவாயாய் அல்லன் என்னும் வினைக் குறிப்பினைப் 'பண்புகொள வருதல்' என்னும் பயனிலை ஆக முன்னே கொண்டு நின்றமையின், பெண்டாட்டி என்னும் பெயர்க்கு முடிபு இல்லை எனின், அதற்கு உருபு தொகை ஆக்கி, நீக்கப் பொருட்கண் பெண்டாட்டியின் அல்லன் என ஐந்தாவதனை விரித்து முடிபு கொள்க.

இதனால் சொல்லியது என்னை எனின், இரு பொருள் ஐயுற்றுத் துணியும்வழி, அவ்வையுற்ற பொருள்தன்மை இத்துணிபொருட்கண் இன்மையும், துணி பொருள் தன்மை அவ்வையப்பொருட்கண் இன்மையும் காணுமன்றே? கண்டுழி, இஃது அன்மை அதற்கும், அஃது அன்மை இதற்கும் சேர்க்கப்பட்டுள. யாதானும் ஒன்றன்மேல் அன்மை கொடுப்பினும் அமையும் என்று கருதற்க. இஃது அன்மை அதற்கும் உண்டே எனினும், துணிந்தவழி உள்பொருளாய் நின்று காணப்பட்டது. அஃது அன்மை ஆதலின், இதன்மேல் இறுக்க என மரபு இலக்கணம் கூறியவாறு ஆயிற்று. *(25)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**25. 'தன்மை . . . வேறு இடத்தான.'-**

ஓர் ஒப்பு - ஒருவிதமான பொருத்தம்.

பெண்டாட்டி அல்லன் - பெண்டாட்டியின் நீங்கிய அல்லனாம் தன்மை உடையவன். அன்மையைத் துணி பொருள்மேல் கொள்க என்ற மரபு இலக்கணம் விளக்கப் பட்டுள்ளது.

## ஒருவர் உரை

***25. தன்மை சுட்டலும் உரித்துஎன மொழிப***
***அன்மைக் கிளவி வேறுஇடத் தான.***

எ-து: உண்மைத் தன்மையான பொருளைச் சுட்டல் உரித்தாம் என்பர், அன்மைச் சொல்லைத் துணிந்த பொருள் மேல் வைத்துச் சொல்லின்.

எ-டு: ஆண்மகன்கொல்லோ, பெண்டாட்டிகொல்லோ என்று ஐயுற்றால், ஆண்மகன் என்று துணிந்து சொல்லும் இடத்துப் 'பெண்டாட்டி அல்லன் ஆண்மகன்' என்க.

இனிப் பெண்டாட்டி என்று துணிந்தவழி 'ஆண்மகன் அல்லள் பெண்டாட்டி' என்க. இஃது உயர்திணைப் பால் ஐயம்.

குற்றி, மகன் எனத் திணை ஐயம் தோன்றியவழி, 'மகன் அன்று குற்றி' என்றும், 'குற்றி அல்லன் மகன்' என்றும் சொல்லுக.

அஃறிணைப் பால் ஐயத்துக்கண், 'ஒன்று அல்ல பல' என்றும், 'பல அன்று ஒன்று' என்றும் சொல்லுக.

ஐயப்பட்டுத் துணிந்துழி எல்லாம் துணிபொருள் இடத்து அன்மைச் சொல்லை வைத்துச் சொல்லுக.

இவ்வாறு சொல்லுங்கால் ஐந்தாம் உருபு புலப்படாது நீக்கத்தின்கண்ணே நிற்கும் என்று கொள்க.

யாதோ நின்றவாறு எனின், பெண்டாட்டி அல்லன் என்புழிப் பெண்டாட்டியின் அல்லன் என்றும் குற்றி அல்லன் என்புழிக் குற்றியின் அல்லன் என்றும், ஒன்று அல்ல என்புழி ஒன்றின் அல்ல என்றும், இவ்வாறு மற்றையனவும் அறிக.

இனி, ஒரு சாரார் அன்மைச் சொல்லை ஐயப் பொருளின்கண் வைத்துச் சொல்லுப.

சொல்லுமாறு : பெண்டாட்டி அல்லள் ஆண்மகன் என்றும், ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி என்றும், ஒன்று அன்று பல என்றும், பல அல்ல ஒன்று என்றும் சொல்லுப. அவர் சொல்முறை அறியார்; ஆதலான் அஃது உரை அன்மை அறிக.

இஃது அம்மூன்று இடத்தும் துணிவு தோன்றியவழிச் சொல் நிகழுமாறு கூறிற்று. (25)

## ஒருவர் உரைவிளக்கம்

**25. 'தன்மை . . . வேறிடத்தான.'-**

சேனாவரையர் அன்மைச் சொல்லை ஐயப் பொருட்கண் வைத்துச் சொல்லிய செய்தி 'அவர் சொல் முறை அறியார். அஃது உரையன்மை அறிக' என்று கூறப்பட்டுள்ளது.

பன்மைகூறல், உருவு என மொழிதல், அஃறிணைப் பிரிப்பு என்ற மூன்றிடத்தும் துணிவு தோன்றியவழிச் சொல் நிகழுமாறு இந்நூற்பாவான் கூறப்பட்டது.

## சாத்திரியார் உரை

**25. தன்மை . . . வேறிடத்தான.**

அதோ தோன்றுகின்ற உரு குற்றியோ மகனோ என்ற திணை ஐயமும், அதோ தோன்றுகின்ற ஆள் ஆண்மகனோ பெண்டாட்டியோ என்ற ஆண்பால் பெண்பால் ஐயமும், அதோ தோன்றுகின்ற உரு ஒன்றோ பலவோ என்ற ஒன்றன்பால் பலவின்பால் ஐயமும் தோன்றாநிற்க, அவ் ஐயம் நீங்கித் தெளிவு தோன்றியவுடன் தனக்குள்ளோ, தன்போல் ஐயுற்ற அருகு நின்றார்க்கோ அத்தெளிவை எவ்வாறு கூறுவது வழக்கு என்பதனை இச்சூத்திரம் உணர்த்துகின்றது.

சேனாவரையர் 'இவன் குற்றி அன்று மகன்' முதலிய உதாரணங்கள் கூறுகின்றார். 'இவன் குற்றியன்று மகன்' என்ற உதாரணத்தில் 'மகன்' என்ற சொல்லானே ஐயம் நீங்குத லானும், முன் சூத்திரத்தில் 'இவ்வுரு குற்றியோ மகனோ' என்று கூறியிருத்தலானும், இவன் என்பதற்குப் பிரதியாக 'இவ்வுரு' என்று இருப்பின் ஏற்கும். அவ்வாறு இருப்பின் 'இவ்வுரு குற்றியன்று; மகன்' என்ற வழக்கில் வழு ஒன்றும் இலாமையால் அவர் கூறுவது பொருத்தம் இன்று.

நச்சினார்க்கினியர் 'ஐயக்கிளவியைத் துணி பொருள் மேல் ஏற்றுக' என்ற செய்தியையே கூறினும், அவர் உரையில் வாக்கிய பேதம் என்ற குற்றம் நிகழ்கிறது. மேலும் அவர் கூறும் 'இவன் குற்றி அல்லன்' என்ற உதாரணம் பொருந்தாது. இவன் என்பதற்குப் பிரதியாக இவ்வுரு அல்லது இது என்று இருத்தல் வேண்டும்.

## பாலசுந்தரனார் உரை

**25. 'தன்மை . . . வேறிடத்தானே.'**

***மறுக்கப்பட்ட*** பொருள்மேல் அன்மைத் **தன்மையைக் கூட்டிக்** கூறுங்கால் ஆண்டுத் தோன்றும் 'அவன் குற்றி அன்று, ஆண்மகன்' எனத்தொடர் இரண்டாக நின்று பொருள் விளக்கம் செய்யும். துணியப்பட்ட பொருள்மேல் அன்மைத் தன்மையைக் கூட்டிக் கூறுங்கால் 'அவன் குற்றி அல்லன்' எனத் தொடர் ஒன்றாக நின்று பொருள் விளக்கம் செய்யும். ஆதலின் வேறு இடத்து அன்மைத் தன்மை சுட்டுதல் அத்துணைச் சிறப்பன்று என்பது விளங்க எதிர்மறை உம்மையை இழிவு சிறப்புத் தோன்றக் கூறினார் என்க.

'சாத்தன் சோற்றை உண்ணான்' என்னும் தொடருள் சோறு என்பது செயப்படுபொருளாய் நின்று உண்ணான் என்பதனொடு முடிந்தாற்போல, அவன் குற்றி அல்லன் என்னும் தொடருள் குற்றி என்பது மறுக்கப்படும் (நீங்கல்) பொருளாய் நின்று 'அல்லன்' என்பதனொடு முடிந்தது எனக்கொள்க. பிறவும் அன்ன.

## பதிப்பாசிரியர் குறிப்பு

25. மறுக்கப்பட்ட பொருள்மேல் அன்மைகூறின் 'ஆண்டுத் தோன்றுமவன் குற்றியன்று; ஆண்மகன்' எனத்தொடர் இரண்டாக நின்று பொருள் உணர்த்தும். துணிபொருள்மேல் அன்மைகூறின் 'ஆண்டுத் தோன்றுமவன் குற்றி அல்லன்' எனத் தொடர் ஒன்றாக நின்று விளக்கம்

செய்யும் ஆதலின் அன்மை துணிபொருள்மேல் கோடலே சிறப்புடையது. 'சுட்டலும்' என்னும் எதிர்மறை உம்மை இழிவு சிறப்புத் தோன்றக் கூறப்பட்டுள்ளது.

## இளம்பூரணர் உரை

### வண்ணச்சினைச்சொல் இயல்பு

**26. *அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.***

எ . . . ன், இதுவும் ஒரு சொல்லுதல் வன்மை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அடை சினை முதல் எனப்பட்ட மூன்றும் முறை மயங்காது வருவன வண்ணச் சினைச்சொல் என்றவாறு.

அடை என்பது ஒரு பொருளது குணம். சினை என்பது உறுப்பு. முதல் என்பது அவ்வுறுப்பினை உடையது.

உதாரணம் : பெருந்தலைச் சாத்தன்
செங்கால் நாரை - என வரும்.

'அடைசினை முதலென வரும் மூன்றும்' என்னாது 'முறை' என்றதனான், இருகுணம் அடுக்கி முதலொடு வருதலும், இருகுணம் அடுக்கிச் சினையொடு வருதலும் கொள்க.

''முதலொடு குணமிரண்டு அடுக்குதல் வழக்கியல்;
சினையோடு அடுக்கல் செய்யுள் ஆறே''

என்பது புறச்சூத்திரம்.

உதாரணம் : இளம்பெருங் கூத்தன் என வரும் வழக்கினுள்; 'சிறுபைந் தூவிச் செங்காற் பேடை' (அகநா.57) என வரும் செய்யுட்கண்.

'இளம்பெருங்கூத்தன்' என்றக்கால், இளமை பெருமையை நோக்கி நின்றதன்று; கூத்தன் என்னும் பெயரையே நோக்கி நின்றது என உணர்க. 'நடை

பெற்றியலும்' எனல் வேண்டா எனின், நடை என்பது வழக்கு. வழக்கினுள் மயங்காது வருக எனவே, செய்யுளுள் மயங்கி வரும் என்பதாம்.

உ-ம்: 'பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை' (26)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**26. 'அடைசினை முதல்' -**

சொல்லுதல் வன்மை - சொல்லுகின்ற ஆற்றல். உலக வழக்கில் முதலொடு குணம் இரண்டு அடுக்கி வரும். 'இளம்பெருங்கூத்தன்' - இளமையிலேயே புகழ்பெற்ற கூத்தன். இளங்கூத்தன், பெருங்கூத்தன் எனப் பிரித்து இணைத்துப் பொருள் செய்க.

'சிறுபைந்தூவி': செய்யுளில் சிறுமை, பசுமை என்ற இரண்டு பண்புகள் அடுக்கித் தூவி என்ற சினை வந்தது. 'பெருந்தோள் சிறுமருங்குல் பேரமர்க்கட் பேதை': செய்யுளுள் பண்பும் சினைகளும் பலவாக அடுக்கி முதலைக் கொண்டு முடிந்தன. தோள், மருங்குல், கண் என்பன சினை; பேதை என்பது முதல்.

## சேனாவரையர் உரை

### வண்ணச்சினைச்சொல் அமையும் வகை

***26. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை***
***நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.***

(இ-ள்) : பண்புச்சொல்லும், சினைச்சொல்லும், முதற்சொல்லும் என மூன்றும் கூறப்பட்ட முறை மயங்காமல், வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச் சொல்லொடு தொடர்ந்த சினைச்சொல்லை உடைய முதற் சொல் என்றவாறு.

வடிவு முதலாகிய பிற பண்பும் உளவேனும், வண்ணப் பண்பினது வழக்குப்பயிற்சி நோக்கி 'வண்ணச்சினைச்சொல்' என்றார்.

(எ-டு) : செங்கால் நாரை, பெருந்தலைச் சாத்தன் என வரும். கால் செந்நாரை, தலைப் பெருஞ்சாத்தன் என முறை மயங்கிவரின், மரபு வழூவாம் என்க.

வழக்கினுள் மயங்காது வரும் எனவே,

> 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
> செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
> வாய்வன் காக்கையும், கூகையும் கூடி' (புறம்-238)

எனச் செய்யுளுள் மயங்கியும் வரப்பெறும் என்றவாறாம். செவிசெஞ்சேவல், வாய்வன்காக்கை என்பன, செஞ்செவிச் சேவல், வல்வாய்க்காக்கை என்னும் பொருள்பட நின்றமையின், வண்ணச்சினைச்சொல் மயக்கமாயின. அஃதேல், சினையடையாகிய செம்மையும், வன்மையும் முதலடை ஆயினவாறு என்னை எனின் , சினையொடு முதற்கு ஒற்றுமை உண்மையான் அவை முதலொடும் இயைபு உடைய என்பது.

'பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் பேதை' என்புழி, மூன்றாம் வழி முதல் கிடவாது பின்னும் அடையும் சினையும் புணர்த்தமையான் வண்ணச் சினைச்சொல் செய்யுளில் மயங்கி வந்தது என்று உரையாசிரியர் கூறினாரால் எனின், மூன்றாம்வழிப்புணர்க்கப்படும் பேதை என்னும் முதற்சொல் பேரமர்க் கண் என்னும் தொகையொடு வேற்றுமைப் பொருள்படத் தொக்கு, அத்தொகை சிறு நுசுப்பு என்னும் தொகையோடும் அப்பொருள்படத் தொக்கு ஒரு சொல்லாய், 'பெருந்தோட் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போல மூன்றாம் வழிப் பிற சொல் அடுத்துப் பேதை என்னும் முதல் கிடந்தது எனவே படுதலின், மயக்கம் இன்மையான் அவர்க்கு அது கருத்து அன்று என்க.

அன்றிப் பெருந்தோள் முதலாகிய மூன்றும் பலபெயர் உம்மைத்தொகைபடத் தம்முள் தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை என்பதனொடு வேற்றுமைத் தொகைபடத் தொக்கன எனினும், அவை உம்மைத்தொகைபடத் தொகாது நின்று பேதை என்பதனொடு வேற்றுமைத் தொகைபட ஒருங்கு தொக்கன எனினும், தம்முள் இயையாது பேதை என்பதனோடு இயைதலின், ஆண்டும் மயக்கம் இன்மை அறிக. அஃதேல், இவ்வாறு வருதல் வழக்கிற்கும் உரித்தோ எனின், அடுக்கிய அடையும் சினையும் பொதுமை நீங்குதற்கு அன்றி அணி குறித்து நிற்றலின் செய்யுட்கே உரித்து என்பது. 'சிறுபைந்தூவி' (அகம்-57) எனச் சினையொடு குணம் இரண்டு அடுக்கி வருதல் செய்யுட்கு உரித்து என்றும், 'இளம்பெருங்கூத்தன்' என முதலொடு குணம் இரண்டு அடுக்கி வருதல் வழக்கிற்கு உரித்து என்றும், பிறர்மதம் மேற்கொண்டு கூறினார்.

ஒன்றாக, பலவாக இனம் சுட்டாதன செய்யுட்கு உரியவாம்; இனம் சுட்டி நின்றன வழக்கிற்கு உரியவாம் என்பதே உரையாசிரியர் கருத்து என்க. அன்றிப் 'பிற நூல் முடிந்தது தான் உடன்படுதல்' என்பதனான் சினையொடு குணம் இரண்டு அடுக்கல் செய்யுளாறு என்று கொள்ளினும் அமையும்;

> 'முதலொடு குணம்இரண்டு அடுக்கல் வழக்கியல்;
> சினையோடு அடுக்கல் செய்யு ளாறே'

என்றார் ஆகலின்.

வண்ணச் சினைச் சொல் என்றதனான், வண்ணமும் சினையும் முதலும் கூறுதற்கண்ணது இவ்வாராய்ச்சி என்பதாம். எனவே இளம்பெருங்கூத்தன், பெரும்பலாக் கோடு என்னும் தொடக்கத்தன வேண்டியவாறு வரப்பெறும் என்றவாறு.

மயங்காது வருக என மரபுவழுக் காத்தவாறு. *(26)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**26. அடைசினை . . . சொல்-**

*பண்புச்சொல் - வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலியன. (சொ. 416).*

*இவற்றுள் நிறம் பற்றிய வண்ணப்பண்பே வழக்கில் மிகுதியாக வழங்குகின்றது.*

***கவிசெந்தாழி*** *- பிணமிட்டுப் புதைக்கப்பட்ட கவிக்கப் பட்ட செய்ய தாழியினது குவிந்த புறத்தே இருந்த செவி சிவந்த கழுகின் சேவலும் பொகுவல் என்னும் புள்ளும் அஞ்சாவாய், வாய் வலிய காக்கையும் கோட்டானும் கூடி - என்பது பொருள்.*

*பெருந்தோள் சிறு நுசுப்பின் பேரமர்க்கண் பேதை - இத்தொடரை வண்ணச்சினைச் சொல் செய்யுளுள் மயங்கி வந்ததற்கு உரையாசிரியர் உதாரணமாகக் காட்டினார். சேனாவரையர் அது மயக்கம் அன்று என்பார்.*

*சிறு நுசுப்பின் பேரமர்க்கண் பேதை என்பன ஒருசொல் நீர்மையவாய்ப் பெருந்தோள் என்பதற்கு முடிக்கும் சொல் ஆயின என்றாவது, பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் என்ற உம்மைத்தொகைகள் ஒருசொல் நீர்மையவாய்ப் பேதை என்ற முடிக்குஞ்சொல்லைக் கொண்டன என்றாவது, பெருந்தோட்பேதை, சிறுநுசுப்பின் பேதை, பேரமர்க்கண் பேதை எனத் தனித்தனியே வண்ணச்சினைச் சொற்கள் பேதை என்ற முதற்சொல்லொடு முடிந்தன என்றாவது கொண்டால் மயக்கத்திற்கு இடம் இல்லை என்பது சேனாவரையர் கருத்து.*

*பெருந்தோள் என்பது பேதை என்பதனோடு அண்மை நிலையில் முடிய வாய்ப்பு இல்லாமல் இடையே சிறு நுசுப்பின் பேரமர்க்கண் என்பன இடைப்பிறவரலாக வந்தமையின் இது செய்யுட்கண் அமையக்கூடிய மயக்கமே*

என்பது உரையாசிரியர், நச்சினார்க்கினியர் முதலியோர் கருத்து. இவ்வண்மை நிலையைப் பற்றி நுண்பொருள் மாலைகூறும் செய்திகளை சொ.1 உரை விளக்கத்தில் நோக்குக.

'முதலொடு . . . செய்யுளாறே' என்பது வேற்று நூலார் கருத்தினை உரையாசிரியர் உடன்பட்டுக் கூறிய செய்தியாகும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**வண்ணச்சினைச் சொற்கண் மரபு**

*26. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.*

இஃது வண்ணச் சினைச்சொற்கண் மரபு கூறுகின்றது.

இ-ள்: அடைசினை முதல்என மூன்றும் - பண்புச் சொல்லும் சினைச் சொல்லும் முதற்சொல்லும் என்ற மூன்றும்; முறை மயங்காமை நடைபெற்று இயலும்- கூறப்பட்ட முறை மயங்காமை வழக்கைப் பொருந்தி நடக்கும்; வண்ணச்சினைச்சொல் - வண்ணம் முதலாகிய பண்புகளொடு தொடர்ந்த சினைச் சொல்லை உடைய முதற்சொல் என்றவாறு.

மீட்டும் வண்ணச்சினைச்சொல் என்றது, அச்சொற்குப் பெயர் கூறிற்று.

உதாரணம் : செங்கால் நாரை, பெருந்தலைச்சாத்தன் - எனவரும்

வழக்கினுள் மயங்காது எனவே, செய்யுளுள்,

'கவிசெந் தாழி குவிபுறத்து இருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையும் கூகையும் கூடி' - புறநா. 238

என மயங்கியும் வரும் ஆயிற்று. சினையொடு முதற்கு ஒற்றுமை உடைமையான் முதலோடும் இயைந்தன. 'பெருந்தோள் சிறு நுசுப்பின் பேரமர்க்கட் பேதை' என்பதும் அவ்வாறே மயங்கி வந்தது, செய்யுள் ஆதலின். 'பெரு வழுதுணங்காய்' என்பது பெருமை முதல்மேலே கூறுதலின், சொல்லுவான் கருத்து வேறு ஆயிற்று. இன்னும், வழக்கினுள் மயங்காது என்றதனான், 'சிறுபைந்தூவி' (அகநா. 57) எனச் சினையொடு குணம் இரண்டு அடுத்தல் செய்யுள் ஆறு என்க. 'இளம்பெருங்கூத்தன் என்பது சினை இன்மையின் வேண்டியவாறு வந்தது. (26)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**26. அடைசினை முதல் -**

அடைசினை முதல் என்று முறையாக வருவனவற்றிற்கு இலக்கண மரபு பெயர் 'வண்ணச் சினைச்சொல்' என்பது.

'**கவிசெந்தாழி**' பிணம் இட்டுப்-புதைக்கப்பட்ட கவிக்கப் பட்ட செய்ய தாழியினது குவிந்த புறத்தே இருந்த செவிசிவந்த கமுகின் சேவலும் பொகுவல் என்னும் புள்ளும் அஞ்சாவாய், வாய் வலிய காக்கையும் கோட்டானும் கூடி... ... ... சுடுகாடு.

செவியின் செம்மை சேவல்மேலும், வாயின் வன்மை காக்கைமேலும் ஏற்றப்பட்டன.

'பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கட் பேதை' -

பெருமை என்ற அடையும் தோள் என்ற சினையும் பேதை என்ற முதலொடு நேராக இணைய முடியாதபடி சிறுநுசுப்பின் பேரமர்க்கண் என்ற தொடர்கள் இடைப் பிறவரலாக வந்துள்ளன.

பெருவழுதுணை என்ற செடியின் காய் பெரு வழுதுணங்காய். காயின் பெருமையைக் கூறவேண்டு மெனின், வழுதுணையின் பெருங்காய் எனல் வேண்டும். முதலொடு சினைக்கு ஒற்றுமை உண்மையின், சொல்லு வான் கருத்தினான் வழுதுணையின் பெருங்காய் பெரு வழுதுணங்காய் என்றும் கூறப்படலாம்.

இளம்பெருங்கூத்தன் - இளமை, பெருமை இரண்டும் முதற்கே அடை.

## தெய்வச்சிலையார் உரை

### வண்ணச்சினைச் சொல் மயங்காமை

**26. *அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.***

ஒருசார் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வண்ணம் பெற்ற சினையை உடைய பெயர்ச் சொல் முற்பட அடையும், அதன்பின் சினையும், அதன்பின் முதலும் ஆகி அம்முறை மயங்காமை வழக்குப்பெற்று இயலும் எ-று.

வண்ணச்சினைச்சொல் மயங்காமை நடைபெற்று இயலும் எனவே, வண்ணமுதற்சொல் மயங்கியல்லது நடவாது என்றவாறாம்.

இதனான் பெற்ற பொருள் என்னைஎனின், பொருட்கு உளது ஆகிய பண்பும் சினையும் பொருளோடு அடுத்துக் கூறக் கருதுவான்ஆயின், பொருள்மேல் செல்லாது சினை மேல் செல்லும் என்பது அறிவித்தற்கு என்க.

உ-ம் : செங்கால் நாரை : வண்ணம் சினைமேல் ஏறி முதலொடு முடிந்தது. கருங்கோட்டு யானை எனப் பண்பினை முதலோடு அடுத்துக் கூறக் கருதுவான் ஆயின், கருமை யானையின்மேல் செல்லாது கோட்டின்மேல் செல்லுதலின் இம்முறை நடைபெறாதது ஆயிற்று.

'வந்ததுகொண்டு வாராதது முடித்தல்' என்பதனான், வடிவு முதலாய பண்பும் கொள்ளப்படும்.

உ-ம் : சிறுகண் யானை. பிறவும் அன்ன.

அடை என்று பொதுப்படக் கூறிய அதனான் ஒரு பொருள்மேல் அடை இரண்டு வருதலும் கொள்க. கருநெடுங் கூந்தல் காரிகை எனவரும்.

முறை மயங்காமை என்றதனான், மயங்கும்ஆயின் குறித்த பொருள்மேல் செல்லாது என்க.

உ-ம் : 'பெருந்தலைப் புல்ஆர் நல்ஆ' என்றவழி, பெருந்தலை என்பது புல்லொடு சார்ந்து வருதலின், சொல்லுவான் குறிப்பு வேறு ஆயினும், அதன்மேல் செல்லாது ஆயிற்று.

'கவிசெந் தாழி குவிபுறத்து இருந்த, செவிசெஞ் சேவலும்' (புறம்-238) என முறை மயங்கி வந்ததால் எனின், ஆண்டுச் செஞ்செவி என்பது மொழி மாறி நின்றது என்க. (26)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**26. 'அடைசினை முதல்' -**

முதலில் பொருளுக்கு உரிய அடையைக்கூறி அடுத்துச் சினையையும் அடுத்துப் பொருளையும் 'கருங்கோட்டு யானை' என்றாற்போலக் கூறின் கருமை யானைக்கு அடையாகாது கோட்டுக்கு அடையாகிப் பொருத்தம் இன்மையைத் தெரிவிக்கும் என்பதே இந்நூற்பாவின் கருத்து என்கிறார். எனவே சினைக்கு உரிய அடை, சினை, முதல் என்ற முறையில் 'செங்கால் நாரை' என்றாற்போல வரல் வேண்டும் என்பது.வண்ண முதற்சொல் மயங்கி அல்லது நடவாது - என்பது.

முதலில் முதற்சொல்லின் பண்பும், அடுத்து முதற் சொல்லின் சினையும் அடுத்து முதற்சொல்லும் வரின் முதற்சொல்லின் பண்பு முதற்சொல்லைச் சேராது அதன் சினையைச் சேர்ந்து பொருளை மயங்கச் செய்யும் என்பது.

செய்ய கூந்தல் மகள் என்றால் செந்நிறம் மகளைச் சாராது கூந்தலைச் சார்ந்து அழகையே கெடுத்துவிடுதல் காண்க.

'சிறு கண் யானை' கண்ணுடைய வடிவிற்கு உரிய அடை.

'கருநெடுங்கூந்தல் காரிகை' - கருமையும் நெடுமையும் கூந்தலுக்கு அடை.

பெருந்தலைப் புல்லார் நல்லார் - பெரிய தலையை உடையராய்ப் புல்லரிசிச் சோற்றை உண்கின்ற நல்லவர்கள்.

(பெருந்தலையை யுடையவாய்ப் புல்லினை மேய்கின்ற நல்ல பசுக்கள்)

இத்தொடரில், பெருந்தலை என்பது நல்லாரை (நல்லாவை)ச் சேராமல் பெரிதாக வளர்ந்திருக்கின்ற மேற்பக்கத்தை உடைய புல் எனப் புல்லுக்கு அடைமொழி ஆயிற்று.

***கவி செந்தாழ்*** - பிணம் இட்டுப் புதைக்கப்பட்ட கவிக்கப்பட்ட செய்ய தாழியினது குவிந்த புறத்தே இருந்த செவி சிவந்த கழுகின் சேவலும் : செவிசெஞ்சேவல் என்பது செஞ்செவிச்சேவல் என மொழிமாற்றிப் பொருள் செய்யப்படும்.

***வந்தது கொண்டு வாராதது முடித்தல்*** : பின் ஒருவழி வந்தது கொண்டு முன் வாராததொரு பொருளை அறிய வைத்தல். கூறப்பட்ட 'வண்ணம்' என்பதனைக் கொண்டு அதனோடு இயைபுடைய வடிவு (சொ. 75) முதலியனவும் கோடல்.

### கல்லாடனார் உரை

### வண்ணச் சினைச் சொல்

***26. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.***

என்-எனின், வண்ணச்சினைச் சொல்லது ஒரு மரபு கூறுதல் ஆயிற்று.

இ-ள்: பண்பினை உணர்த்தும் சொல் முன்னது; பண்பினை உடைய சினைப்பொருளை உணர்த்தும் சொல் அதன் பின்னது; அச்சினையை உடைய முதற்பொருளை உணர்த்தும் சொல் அதன் பின்னது என்று, கேட்டான் அடைவு கருதும்படி அம்மூன்றும் அம்முறைமையின் மயங்காமல் வழக்குப் பெற்று நடக்குமது வண்ணச் சினைச்சொல் என்றவாறு.

எ-டு : பெருந்தலைச்சாத்தன், செங்கால்நாரை என வரும். பெரும்பலாக்கோடு, பெருவழுதுணங்காய் என மயங்கியும் வருமாலோ எனின், அவை சொல்லுவான் கருத்து வேறு; பெரும்பலா, பெருவழுதுணை எனப் பெருமை முதல்மேலே நோக்கி நின்றமையின். அவ்வாறு மயங்கிக் கூறுவன கண்டன்றே இவ்விலக்கணம் எழுந்தது? இதனான் அதனை அழிவழக்கு என்று மறுக்க. 'கருங்கோட்டு யானை'யும், 'பெருந்தலைப் புல் ஆர் நல்லேறு'ம் வேறு பொருள் கொண்டு இயையுமால் எனின், அவ்வாறு பொருள்கோடல் செய்யுட்கு அல்லது இன்று என மறுக்க.

'முறை' என்ற அதனானே, ஒரு முதல் பொருட்கண் இரண்டு பண்பு அடுத்து வருவனவும் வழக்கினுள் உள என்று அமைத்துக்கொள்ளப்படும்.

எ-டு. : இளம்பெருங்கூத்தன், சிறுகருஞ்சாத்தன் என வரும். இளமை என்னும் சொல் பெருமை என்பதனோடு இயைபு இன்றாய்க் கூத்தன் என்பதனோடு இயைபு கோடல் மரபு அன்மையின் அமைக்கப்பட்டது.

இன்னும் இவ்விலேசானே, சினைப்பொருட்கண் இரண்டு பண்பு அடுத்து வருவனவும் செய்யுளுள் உள என்றும் அமைக்கப்படும்.

எ-டு : 'சிறுபைந்தூவிச் செங்கால்பேடை' (அகம்-57) எனவரும்.

'நடைபெற்று' என்றதனால் அவ் அடைசினை முதல்கள் செய்யுட்கண் முறை மயங்கியும் வரப்பெறும் என்பது கொள்ளப்படும்.

எ-டு : 'பெருந்தோள் சிறுநுசுப்பின் பேர் அமர்க்கண் பேதை' எனவரும்.

'அடைசினை முதல்' என்ற பின்பும், 'வண்ணச் சினைச் சொல்' என்றது என்னை எனின், முற்கூறியது இலக்கண வாய்பாடு ஆகலான் அவ்விலக்கணம் உடையது இஃது என வேண்டுதலின், அவ்விலக்கணத்தான் அவ்விலக்கணம் உடைய பொருட்குக் குறி இட்டார் என உணர்க.

இதனான் சொல்லியது என்னை எனின், அடைசினை முதல் பொருள்களைக் கூறுங்கால் இன்னவாறு கூறுக என்று அவற்றது மரபு இலக்கணமும், அவ்வழி மரபு வழுஅமைதியும் கூறியவாறு ஆயிற்று. (26)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**26. 'அடைசினை . . . சினைச்சொல்.'-**

பெரும்பலாக்கோடு, பெருவழுதுணங்காய் - அடை, முதல், சினை என மயங்கின.

'பெருந்தலைப் புல்லார் நல்லேறு' பெரிய தலையை உடையதும், புல்லை உண்பதும் ஆகிய பெரிய காளை என்பது பொருள்.

பெருந்தலை என்பது புல்லுக்கு அடையாய் பெரிய உச்சியை உடைய புல் எனவும்படும். பெருந்தலை என்பது நல் ஏறு என்பதனோடு இணையப் 'புல் ஆர்' என்பது இடைப்பிறவரலாய் வருவது செய்யுட்கே என்பது.

அடைசினை முதல் - உலகியல் விளக்கம்.

வண்ணச்சினைச்சொல் - இலக்கணக்குறியீட்டு வாய்பாடு.

இந்நூற்பாவில் மரபு இலக்கணமும் மரபு வழுவமைதியும் விளக்கப்பட்டன.

**ஒருவர் உரை**

***26. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.***

எ-து : வண்ணச்சினைச் சொல்லாவது அடையும் சினையும் முதலும் மூன்றும் மயங்காமை அடைவே வழக்குப் பெற்று நடக்கும்.

அடை - ஒரு பொருளது குணம். சினை - உறுப்பு. முதல்-அவ் இரண்டையும் உடைய பொருள்.

எ-டு : பெருந்தலைச்சாத்தன், பெருந்தோள் கண்ணை, நெட்டிலைத் தெங்கு, செங்கண்வரால், செங்கால்நாரை - என வரும்.

'அடைசினை முதல் என மூன்றும்' என்னாது 'முறை' என்றதனான், அம்முறை இன்றி நடத்தலும் உடைய; அவை வழக்கினுள் குணம் இரண்டு அடுக்கி முதலொடு வருதலும், செய்யுளுள் குணம் இரண்டு அடுக்கிச் சினையொடு வருதலும் என. அவை வருமாறு :

இளம்பெருங் கொற்றன், சிறுகருஞ் சாத்தன் - இது வழக்கு.

'சிறுபைந் தூவி செங்கால் நாரை' (அகநா - 57) - இது செய்யுள்.

'முதலொடு குணம்இரண்டு அடுக்குதல் வழக்கியல்;
சினையோ டடுக்குதல் செய்யு ளாறே'.

இது புறச்சூத்திரம். அதனான் அவ்இலேசு கொள்க. (26)

**ஒருவர் உரைவிளக்கம்**

**26. 'அடைசினை . . . சொல்.'-**

பெருந்தோள் கண்ணை - இக்காலத்துக் கண்ணம்மா என்று வழங்கும் சொல் பழங்காலத்தில் கண்ணை என்று வழங்கப்பட்டது. நக்கண்ணையார் என்ற புலவர் பெயர் காண்க.

'சிறுபைந் தூவிச் செங்காற் பேடை'

சிறுபைந்தூவி என்ற தொடரில் சினைக்கு இருபண்பு அடுக்கப்பட்டுள்ளன.

செங்காற்பேடை என்பது நேரிதான வண்ணச் சினைச் சொல்.

சிறுபைந்தூவிப் பேடை என்பது இருபண்பு, சினை, முதல் என்பன கொண்ட தொடர். இப்பாடலடியில் செங்கால் என்பது இடைப்பிறவரல் என்று கொள்க.

## சாத்திரியார் உரை

26. 'அடைசினை . . . சொல்.'-

அடைசினை முதல் என்றதனால் சினைக்கு அடையான சொற்கள் இச்சூத்திரத்துக்கு விஷயம் அல்ல. அடையையும் சினையையும் கொண்ட முதல் எங்கு உள்ளதோ, அதுதான் இச்சூத்திரத்துக்கு விஷயம். ஆதலால் செங்கால் நாரை என்ற சொல் தவறன்று என்று மட்டும் இச்சூத்திரத்தால் கூறப்பட்டுள்ளதே அன்றி, செந்நாரைக்கால் முதலிய சொற்கள் தவறா, தவறு அன்றா என்பது இச்சூத்திரத்தில் உணர்த்தப்படவில்லை.

## பாலசுந்தரனார் உரை

26. 'அடைசினை . . . சொல்.'

வண்ணம் என்பது நிறமாயினும், 'அடை' எனப் பொதுப்படக் கூறினமையான் வன்கைக் கொல்லன், நெட்டிலை வாழை எனப் பிறபண்பு அடுத்து வருதலும் ஆம் எனக் கொள்க.

'பெருந்தோள் சிறு நுசுப்பின் பேரமர்க்கட்பேதை' என்புழிப் பெருந்தோட் பேதை, சிறு நுசுப்பின் பேதை, பேரமர்க்கட் பேதை எனக் கூட்டப்படுதலின் மயங்கி வந்தன அல்ல என்க.

'வண்ணச்சினைச்சொல்' என்ற தொடரே செய்யுளா தலின் இவ்விதி செய்யுட்கு என்பது போதரும்.

### பதிப்பாசிரியர் குறிப்பு

26. 'வண்ணச்சினைச்சொல்' என்ற தொடரே செய்யுள் தொடர் ஆதலின், இவ்விதி செய்யுட்கே குறிப்பாகக் கூறப்பட்டது என்ற கருத்துடையாரும் உளர்.

### இளம்பூரணர் உரை

#### பால் திணை வழுஅமைதி

**27.** ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்ஆறு அல்ல.***

எ . . . ன், வழீஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணை ஒருவரைப் பன்மையாற் சொல்லுதலும், அஃறிணை ஒன்றனைப் பன்மையாற் சொல்லுதலும், வழக்கின் அகத்து உயர்த்துச் சொல்லப்படும்; இலக்கண முறைமையான் சொல்லுமிடத்து நெறியல்ல என்றவாறு.

ஒருவனையும் தாம் வந்தார் என்ப.
ஒன்றனையும் தாம் வந்தார் என்ப.

மற்று, 'இலக்கண மருங்கின் சொல்லாறு அல்ல' என வேண்டா கூறலான், உயர்திணையை அஃறிணை போலச் சொல்லுதலும், அஃறிணையை உயர்திணை போலச் சொல்லுதலும் கொள்க.

உதாரணம் : என் பாவை வந்தது, போயிற்று என ஒருத்தியையும் கூறுப.

இனி, ஓர் ஆவினையும் எம் அன்னை வந்தாள், போயினாள் என்ப. காதல் மிகுதியான் இவ்வாறு கூறுப எனக் கொள்க.

இனி, 'வழக்கின் ஆகிய' என்றதனான், 'கன்னி எயில்' 'கன்னி ஞாழல்' என்பன கொள்க. (27)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**27. 'ஒருவரைக் கூறும்' -**

'வழக்கின் . . . கிளவி' என்பதே போதும். 'இலக்கண ... அல்ல' என்ற தொடர் மிகை. அது வேண்டா கூறலாகும். அதனானும் ஒருபயன் கொள்ளலாம்.

காதல் - சிறப்பும் நலனும் இல்வழியும் கொள்ளப்படும் பற்று.

கன்னி-உயர்திணைப் பெண்பாற்பெயர். தன் பெண்மை பிறரால் கவரப்படாமையின் அழிவில்லாதவள் என்பது பொருள். அழிவில்லாமையை உடைய மதில், அழிவில்லாமையை உடைய சுரபுன்னை மரம் என்பன கன்னி எயில், கன்னி ஞாழல் எனப்பட்டன.

## சேனாவரையர் உரை

### பால்வழு அமைதி

27. ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்ஆறு அல்ல.***

(இ-ள்) : ஒருவனையும் ஒருத்தியையும் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும், வழக்கின்கண் உயர்த்துச் சொல்லும் சொல்லாம்; இலக்கண முறைமையான் சொல்லும் நெறி அல்ல என்றவாறு.

(எ-டு) : யாம் வந்தோம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என வரும்.

உயர் சொல் உயர்க்கும் சொல். உயர் சொற் கிளவி என்புழிக் கூறியது கூறல் அன்மை பண்புத்தொகை ஆராய்ச்சியின்கண் சொல்லுதும்.

தாம் வந்தார் தொண்டனார் எனப் பன்மைக் கிளவி இழித்தற்கண்ணும் வந்ததால் எனின், ஆண்டு உயர் சொல் தானே குறிப்பு நிலையாய் இழிபு விளக்கிற்று என்பது.

இலக்கண மருங்கின் சொல் ஆறு அல்ல என்றதனான் இலக்கணம் அன்மையும், வழக்கின் ஆகிய உயர் சொற் கிளவி என்றதனான் வழு இன்மையும் கூறினார்; கூறவே, வழு அமைதி என்றவாறாம். அஃதேல் 'வழக்கின் ஆகிய உயர் சொற்கிளவி' எனவே, வழு அமைதி என்பது பெறுதும்; இலக்கண மருங்கின் சொல் ஆறு அல்ல எனல் வேண்டா எனின், அங்ஙனம் கூறின் செய்யுளுள் வரைந்தவாறோ, வழு அமைத்தவாறோ என ஐயமாக்கலின், அவ்வாறு கூறுதல் வேண்டும் என்பது.

பன்மைக் கிளவியும் எனப் பொதுவகையான் கூறினாரேனும், உயர்த்தற்கண் வழங்கப்பட்டு வரும் உயர்திணைப் பன்மையும், விரவுப் பன்மையுமே கொள்ளப் படும் என்றற்கு 'வழக்கின் ஆகிய' என்றார்.

'தன்னினம் முடித்தல்' என்பதனான், எருத்தையும் ஆவையும், எந்தை வந்தான்-எம் அன்னை வந்தாள்-என உயர்திணையாய் உயர்த்து வழங்கலும், 'ஒன்றென முடித்தல்' என்பதனான் 'கன்னி ஞாழல்' (சிலப்- 18), கன்னி எயில் என அஃறிணையாய் நின்று உயர்திணை வாய்பாட்டான் கூறப்படுதலும், பண்பு கொள் பெயர்க் கொடை, வழக்கின் அகத்தும், பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து உயர்சொல்லாய் வருதலும் கொள்க. (27)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**27. ஒருவரை . . . அல்ல.-**

உயர்சொற்கிளவி என்புழி, ஒரே பொருளுடைய சொல் கிளவி என்ற இரண்டு சொற்களை இணைத்துக் கூறியமை கூறியது கூறல் அன்று என்பதனைப் பண்புத்தொகை ஆராய்ச்சியுள் கூறுவதாகக் குறிப்பிட்ட சேனாவரையர் அங்கு (சொ. 416) இன்னோரன்ன அமையும் என்க என்றே கூறியுள்ளார்.

தாம் வந்தார் தொண்டனார் என்புழித் தாம் வந்தார் என்பதே குறிப்பு நிலையாய் இழித்தற்பொருளைத் தந்தது. தொண்டனார் என்பது 'தாம் வந்தார்' என்பது இழித்தற் பொருள் தருவதற்கு உபகாரமாக வந்த சொல்லாகும்.

'உயர் சொற்கிளவி' இலக்கண முறைப்படி ஏற்றுக்கொள்ளத்தக்கது அன்று எனினும், உலக வழக்கில் பயின்று வருதலான் ஏற்றுக்கொள்ளத்தக்கதே.

'வழக்கின் ஆகிய' என்பதனான் உயர்த்துக் கூறுதற்கண் அஃறிணைப் பன்மை வாராது; உயர்திணைப் பன்மையும் விரவுப் பன்மையுமே கொள்ளப்படும்.

கன்னி என்ற உயர்திணைச்சொல் கன்னி ஞாழல், கன்னி எயில் என அஃறிணைச் சொல்லோடும் இணைந்து வருதல் ஒன்றென முடித்தலான் கொள்ளப்படும்.

### நச்சினார்க்கினியர் உரை

#### பால் திணை வழுஅமைதி

27. ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்ஆறு அல்ல.***

இது பால்வழுவும் திணைவழுவும் அமைகின்றது.

இ-ள்: ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியும் - ஒருவனையும் ஒருத்தியையும் சொல்லும் பன்மைச் சொல்லும்; ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும் - ஒன்றனை உயர்திணைப் பன்மையாகச் சொல்லும் பன்மைச் சொல்லும்; வழக்கின் ஆகிய உயர்சொற்கிளவி - வழக்கின் உளவாகிய உயர்த்துச் சொல்லும் சொல்லாம்; இலக்கண மருங்கின் சொல்ஆறு அல்ல - இலக்கண முறைமையான் சொல்லும் நெறி அல்ல என்றவாறு.

'வழக்கின் ஆகிய' எனவே, வழூஉஅமைதி பெற்றாம். உயர்சொல் - உயர்க்கும் சொல்.

ஒருவனையும் 'தாம் வந்தார்' என்ப; ஒருத்தியையும் 'தாம் வந்தார்' என்ப; ஒன்றனையும் 'தாம் வந்தார்' என்ப.

உதாரணம் : யாம் வந்தோம், நீஇர் வந்தீர், இவர் வந்தார் எனவரும்.

'தாம் வந்தார் தொண்டனார்' என்பது, உயர்சொல் குறிப்புநிலையின் இழிபு விளக்கிற்று.

'இலக்கண மருங்கின் சொல் ஆறு அல்ல' என்ற மிகை யான், ஓர் எருத்தை 'எந்தை வந்தான்' எனவும், ஓர் ஆவை எம் அன்னை வந்தாள் எனவும்,

'கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருகுவர் தாயர்' (முல்லைப். 15, 16)

எனவும் ஒப்புமை கருதாது காதல் பற்றி உயர்த்த வழங்கலும், 'கன்னி நறு ஞாழல்' (சிலப். 7 : 9) 'கன்னி எயில்' எனவும், ஓர் எருத்தை 'நம்பி' எனவும், ஒரு கிளியை 'நங்கை' எனவும், அஃறிணையை உயர்திணை வாய் பாட்டான் கூறலும், பண்புகொள் பெயர்க்கொடை வழக்கின் அகத்தும் 'பெருங்கொற்றன்' ' பெருஞ்சாத்தன்' என இல்குணம் அடுத்து உயர்த்துக் கூறலும் கொள்க. 'என்பாவை வந்தது' என்பது ஆகுபெயர். அஃது ஒப்புமை உள்வழிக் கூறியது. (27)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**27. ஒருவரைக் கூறும் -**

*பேச்சுவழக்கில் இவை மிகுதியும் வந்துவிட்டமை யான், இவை வழுவமைதி ஆயின.*

*உயர்சொல் -ஒருவனையோ ஒருத்தியையோ ஒன்றனையோ உயர்த்திக் கூறும் சொல்.*

*தாம் வந்தார் என்றால் ஒருவனை உயர்த்திக் கூறும் சொல் ஆகும். தொண்டன் உயர்த்திக் கூறப்படுபவன் அல்லன்; ஆகவே, தொண்டனார் என்ற உயர்சொல்லைக் கூட்டித் 'தாம் வந்தார் தொண்டனார்' என்பதன்கண் 'தாம்' என்பது இழிவு உணர்த்திற்று. தொண்டர் இறைவனுடைய தொண்டராயின், அவரைத் தொண்டனார் என்று குறிப் பிடுவது இழிபு ஆகாது.*

*'தொண்டனார்க்கு இமயப்பாவைத் துணை வனார் அவர்முன் தம்மைக் கண்டவாறு எதிரே தோன்றும் காட்சிதந் தருளி' பெரிய. மெய்ப்-23 என்பது காண்க.*

*'வழக்கினாகிய உயர் சொற்கிளவி' என்று கூறுவதே போதும்; 'இலக்கண மருங்கின் சொல்லாறு அல்ல' என்பது மிகை எனக்கொண்டு, அம்மிகையான் சில கொள்ளப்பட்டன.*

*'**கொடுங்கோல்**' - "கொடிய கோலை உடைய இடையர் பின்னே நின்று செலுத்துதலைச் செய்கையினாலே, உம்முடைய தாய்மார் இப்பொழுதே வருவர்" என்று இடைச்சியார்கள் கன்றுகளிடம் கூறினர்.*

*இதன்கண், இடைச்சியர் கன்றுகள் தம் கூற்றைக் கேட்பன போலக் கருதி நும்தாயர் இன்னே வருவர் என்று கூறியது, காதல் பற்றி உயர்த்திக் கூறியது. காதல் என்பது சிறப்பும் நலனும் இல்வழியும் இட்டு உரைப்பதாம்.*

**கன்னி நறு ஞாழல், கன்னிஎயில்** - திருமணம் ஆகாமையின் பெண்மை நுகரப்படாமல் அழிவற்றிருக்கும் பெண் என்ற பொருள்தரும் 'கன்னி' என்ற அடைமொழியை அழிவற்றிருக்கும் ஞாழல் மரத்திற்கும் மதிலுக்கும் கூறும் வழுவமைதியாம்.

எல்லா நற்பண்புகளும் பொருந்தியதனான் நம்மால் விரும்பப்படும் ஆண்மகன் **நம்பி**.

எல்லா நற்பண்புகளும் பொருந்தப்பெற்றமையான் நம்மால் விரும்பப்படும் பெண்மகள் **நங்கை**.

இந்த உயர்திணைப் பெயர்களால் முறையே ஒருகாளையையும் ஒரு கிளியையும் குறிப்பிடுதல் அஃறிணையை உயர்திணைவாய்பாட்டான் கூறிய வழுவமைதி.

கொற்றன், சாத்தன் என்பவர்கள் பெருமைக்குரிய சிறப்பியல்பு எதுவும் இல்லாத பொதுமக்கள். அவர்களை மரியாதை நிமித்தமாகப் பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என, அவர்களிடம் இல்லாத பண்பினைப் புணர்த்துக் கூறுதலும் வழுவமைதி.

பாவைபோன்று அழகுடையவளைப் பாவை என்றல் உவம ஆகுபெயர். அழகாகிய ஒப்புமை உடைய பெண்ணைப் பாவை என்றல் ஆகுபெயர். அழகு முதலியன இல்வழியும் பாவை என்று கூறுவது காதல்பற்றிக் கூறப்பட்ட வழக்கினாகிய உயர்சொற்கிளவியாம்.

## தெய்வச்சிலையார் உரை

27. ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்ஆறு அல்ல.***

ஒருசார் பால்வழுவும் திணைவழுவும் அமைத்தலை நுதலிற்று.

இ-ள்: ஒருவரைச் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும் இலக்கண மருங்கின் சொல் நெறி அல்ல; வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி எ-று.

உயர்சொல் கிளவி - இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகை.

உ-ம் : அவர் வந்தார் என வரும். ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றனையும் இவ்வாறு கூறுதல் வழு ஆயினும், உயர்வு குறித்துச் சொன்னமையான் அமைதி ஆயிற்று.

'இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி - பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே' (இடையியல்-22) என்புழி அடங்காதோ எனின், ஆண்டு நம்பி, நங்கை, சாத்தன் என்னும் பெயர்தாமே பால் காட்டுதலான் அதன்மேல் ஓர் இடைச்சொல் ஆயிற்று; ஈண்டுப் பன்மைச்சொல்தானே ஒருமைக்கு வருதலின் அடங்காது ஆயிற்று என்க.

'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனான், ஒரு பசுவை என் அன்னை வந்தாள் எனவும், பெருங்கொல்லன், பெருவண்ணான் எனவும் வருவனவும் கொள்க. (27)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

### 27. ஒருவரைக்கூறும் -

*இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி*
*பலர்க்கு உரி எழுத்தின் வினையொடு முடிமே - (சொ. 266)*

இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல் ஒருமைப் பொருள்மேல் வரினும் பலர்க்கு உரித்தாகிய எழுத்தினை உடைய வினையொடு முற்றுப்பெறும்.

(எ-டு.) நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார், சாத்தனார் வந்தார்: நம்பி, நங்கை, சாத்தன் என்ற பெயர்களே ஆண்பாலையும் பெண்பாலையும் காட்டின. அப்பெயர் களுக்கு மேல் ஆர் என்ற இடைச்சொல் வந்தது.

இந்நூற்பாவில் அவர் வந்தார் என்ற பன்மைச்சொல் தானே ஆண்பால், பெண்பால், ஒன்றன்பாலை உணர்த்திற்று. இதுவே இரண்டற்கும் இடையே வேறுபாடு.

வந்ததுகொண்டு வாராதது உணர்த்தல் - என்பதனான் ஒரு பசுவினை எம் அன்னை வந்தாள் என்று காதல் பற்றி முறைப்பெயரான் குறிப்பிடுதலும், பிறரை அண்டி ஏவல் செய்து வாழ்வாரைப் பெருங்கொல்லன், பெருவண்ணான் என அவர்களுக்கு இல்லாத பெருமைக் குணத்தை இட்டு வழங்குதலும் வழக்கில் உண்மையான், அவையும் கொள்ளப்படும்.

### கல்லாடனார் உரை

27. ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்லாறு அல்ல.***

என்-எனின், உயர்திணைப் பால்வழு அமைதியும் அஃறிணைத் திணை வழுஅமைதியும் உடன் கூறுதல் நுதலிற்று

இ-ள்: உயர்திணை யிடத்து ஆண்பாலினையும் பெண்பாலினையும் பன்மைப்பாலான் சொல்லும் சொல்லும், அஃறிணை ஒன்றனை உயர்திணைப் பன்மைப் பாலான் சொல்லும் சொல்லும் - இவை இரண்டும் வழக்கின் கண்ணே உள ஆகிய உயர்த்துச்சொல்லும் பொருண்மைக்கண் வரும் சொல்லாம்; இலக்கணத்திடத்துச் சொல்லும் நெறி அல்ல என்றவாறு.

எ-டு : தாம் வந்தார் என்பது.

'இலக்கண மருங்கின் சொல் ஆறு அல்ல' என்ற மிகையானே, காதல் மிகுதியான் உயர்திணை அஃறிணை ஆகவும், அஃறிணை உயர்திணை ஆகவும் கூறுவனவும் அமைத்துக்கொள்க.

எ-டு : என் பாவை வந்தது, போயிற்று - என் யானை வந்தது, போயிற்று - என இவை உயர்திணை அஃறிணை ஆயின.

இனி ஓர் ஆவினை எம் அன்னை வந்தாள், போயினாள்- எனவும், ஓர் எருத்தினை எந்தை வந்தான், போயினான் - எனவும் கூறுவன அஃறிணை உயர்திணையான் வந்தன.

மற்று, இவை ஆகுபெயர் அலவோ எனின், ஒப்பு உள்வழிச் சொல்வது ஆகுபெயர்; இது காதல் உள்வழிக் கூறுவது என உணர்க.

இதனுள் உயர்திணை அஃறிணையான் வந்தன, 'குடிமை ஆண்மை' (கிளவி-57) என்புழிச் சிறப்பு என்புழிப்பட்டு அடங்குமாலோ எனின், அவை காதல் இன்றிச் சிறப்பித்துச் சொல்லுவன என வேற்றுமை உணர்க.

'வழக்கின் ஆகிய' என்றதனான், பிறவும் உயர்திணைப் பெயர்களை அஃறிணைமேல் வைத்துச் சொல்லுவனவும் செய்யுட்கண் அமைத்துக்கொள்க.

எ-டு : கன்னி நறுஞாழல், கன்னி எயில், கதிர்மூக்கு ஆரல், கரியன் நாகம் என்பன போல்வன.

இதனான் சொல்லியது வழக்கின்கண்ணும் செய்யுட்கண்ணும் ஓர் ஓர் காரணங்களைப் பற்றிப் பாலினையும் திணையினையும் மயங்கக் கூறுவன கண்டு அவற்றிற்கு அமைதி கூறியவாறு ஆயிற்று. (27)

கோபலய்யர் - 22

## கல்லாடனார் உரைவிளக்கம்

**27. 'ஒருவரைக் . . . அல்ல.'-**

உயர்திணைப்பால் வழுவமைதி, அஃறிணைத்திணை வழுவமைதி உடன் கூறுகின்றது இது. மிகையான், மகளைப் பாவை என்றலும், மகனை யானை என்றலும் உயர்திணை அஃறிணையாயின; பசுவை எம் அன்னை என்றலும், எருதினை எந்தை என்றலும் அஃறிணை உயர்திணை ஆயின. இவை யாவும் காதலால் குறிப்பிடும் பெயர்களாம்.

இவை ஒப்புமை கருதாது கூறலின் ஆகுபெயர் ஆகா; காதல் பற்றிக் கூறலின் 'சிறப்பு' என்பதன்கண் அடங்கா. 'வழக்கினாகிய' என்ற மிகையான் கன்னி நறுஞாழல் போல்வன கொள்ளப்பட்டன.

கன்னி - தன் பெண்மை ஆண்மகனால் நுகரப்படாத பெண்; பெண்மை அழிவில்லாதவள். அழிவில்லாமை என்ற கருத்தில், கன்னி என்ற உயர்திணைப் பெயர் ஞாழல் மரத்திற்கும் மதிலுக்கும் அடையாயின.

கதிர் மூக்கு ஆரல் - சூரியன் போன்ற ஒளிவிடும் மூக்கினை உடைய ஆரல் மீன். சூரியன் உயர்திணை.

கரியவன் நாகம் - பறை நாகம்; மந்திரத்துக்குக் கட்டுப் படாத கரும்பாம்பு. பறை என்பது உயர்திணைச் சாதிப்பெயர்; நாகத்திற்கு அடையாயிற்று. நாற்குல நாகங்கள் பற்றிச் சீவகசிந்தாமணியில் காண்க. (பா. 1287). இந்நூற்பாவின் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

27. ***ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்***
***வழக்கின் ஆகிய உயர்சொல் கிளவி***
***இலக்கண மருங்கின் சொல்லாறு அல்ல.***

எ-து : உயர்திணை ஒருவரைப் பன்மையான் சொல்லுதலும், அஃறிணை ஒன்றனைப் பன்மையான் சொல்லுதலும் என இவை வழக்கினகத்து உயர்த்துச் சொல்லப் படும்; இலக்கண முறைமையான் சொல்லுமிடத்து நெறி அல்ல.

எ-டு : ஒருவனையும் 'தாம் வந்தார்' என்ப. ஒருத்தியையும் 'தாம் வந்தார்' என்ப. ஒன்றனையும் 'தாம் வந்தார்' என்ப. இது வழூவே ஆயினும் அமைக.

அன்றியும், யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என ஒருவனையும் ஒன்றனையும் உயர்த்திச் சொல்லியவாறு. 'தாம் வந்தார் தொண்டனார்' என்பது உயர்சொல்; குறிப்பு நிலை ஆயின், இழிபு விளக்கிற்று.

'இலக்கண மருங்கின் சொல்லாறு அல்ல' என்றதனான், உயர்பினும், இழிபினும், உவப்பினும், சிறப்பினும் உயர் திணையை அஃறிணையே போலச் சொல்லுதலும், அஃறிணையை உயர்திணையே போலச் சொல்லுதலும் வழக்கினுள் வரும்.

குரிசில் வந்தது என்பது உயர்பு.

பொறியிலி வந்தது என்பது இழிபு.

ஒருத்தியை என்பாவை வந்தது என்றும், ஓர் எருத்தினை என் தந்தை வந்தான் என்றும், ஒரு பசுவினை என் அன்னை வந்தாள் என்றும் சொல்லுதல் உவப்பு.

சாத்தனார் வந்தார், நரியனார் வந்தார் எனல் சிறப்பு. ('நரியார்' என்றிருத்தல் வேண்டும்.)

இவற்றில் திணைபால் மயக்கம் காண்க. (27)

**ஒருவர் உரைவிளக்கம்**

**27. 'ஒருவரை . . . அல்ல.'-**

*உயர்பினும் இழிபினும் உவப்பினும் சிறப்பினும் உயர்திணையை அஃறிணையே போலச் சொல்லுதலும் என்ற தொடர்,*

*உவப்பினும் உயர்பினும் சிறப்பினும் செறலினும்*
*இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே*
*(நன். 378)*

*என்ற நன்னூல் நூற்பாவை உட்கொண்டு சொல்லியதாகும்.*

**சாத்திரியார் உரை**

*27. 'ஒருவரை . . . அல்ல.'-*

*சேனாவரையர் உயர்திணைப் பன்மையும் விரவுப் பன்மையுமே கொள்ளப்படும் என்றார். அதனால் ஒன்றனை உயர்த்துக்கூறப் பலவின்பாற் சொல் வருவது வழக்கின்று என்று உணர்த்தியவாறு ஆயிற்று.*

**பாலசுந்தரனார் உரை**

**27. 'ஒருவரை . . . அல்ல.' -**

*இத்தகையன சான்றோர் வழக்குப் பற்றிப் பயின்று வருதலின், அவை இலக்கணத்தை நோக்கி வழு என்று களையப்படா; 'தம்மரபினவே' (சொ. 11) எனக் கொள்ளப்படும் என்றவாறு. அவர் பெரியவர், அவர் நல்லவர் எனவும் ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி வரும். நாலடி பற்றி வரும் நூலை நாலடியார் எனவும், பாக்களைக் கோவை செய்த நூலைக் கோவையார் எனவும், காக்கை - குருவி - கிளி - முதலியவற்றைக் காக்கையார், குருவியார், கிளியார் எனவும் ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவி வரும்.*

அஃறிணை இயற்பெயர் அஃறிணைப் பன்மைச் சொல்லான் வருதல் இலக்கண நெறியே ஆதலின் ஈண்டுப் பன்மைக்கிளவி என்றது உயர்திணைப் பன்மைச் சொல்லை என்று அறிக.

இனி, ஒப்பு, உருவகம், காதல், சிறப்பு, வெகுளி முதலாயின பற்றி வருவன செய்யுள் மரபு பற்றிய ஆதலின் அவற்றை ஈண்டுக் காட்டுதலும், வழுவமைதி என்றலும் தொல்காப்பிய நெறிக்கு ஒத்தன அல்ல.

## பதிப்பாசிரியர் குறிப்பு

27. 'வழக்கினாகிய உயர் சொற்கிளவி' இலக்கணத்தை நோக்கி வழு என்று களையப்படாமல், வழக்கு நோக்கித் 'தம்மரபினவே' என்று *வழாநிலையாகக்* கொள்ளப்படும் என்பதே இந்நூற்பா நுவலும் செய்தியாகும்.

## இளம்பூரணர் உரை

### தன்மை முன்னிலை படர்க்கைக்கு உரிய சொற்கள்

**28.** ***செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்***
***நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ விடத்தும் உரிய என்ப.***

எ . . . ன், இடவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள்: செல்லும், வரும், தரும், கொடுக்கும் என நிலைபெற்றுப் புலப்படுகின்ற இந்நான்கு சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூவிடத்திற்கும் உரிய என்றவாறு.

அவையாமாறு முன்னர்ச் சொல்லுதும். *(28)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**28. 'செலவினும் வரவினும்' -**

இறையனார் களவியல் 7ஆம் நூற்பா உரையுள், 'இருவரும் உள்வழி அவன் வரவு உணர்தல்' என்று கூறுவது பொருந்தாதே. 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும், தன்மை முன்னிலை ஆயீரிடத்த' (சொ. 29) 'ஏனை இரண்டும் ஏனை இடத்த' (சொ. 30) என்ற விதி யிருப்பதனான், 'அவன் செலவு உணர்தல்' என்றே இருத்தல் வேண்டும் எனின், 'தரவினும் வரவினும்' (சொ. 28) என்னும் சூத்திரத்து இலேசினான் வரவு படர்க்கைக்கண்ணும் வரும். அதனாலேயே சான்றோர்கள், 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா. 36) என்று சொல்லியுள்ளனர் என்ற செய்தி காணப்படுகிறது.

## சேனாவரையர் உரை

### இடம் உணர்த்தும் சொல்

***28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்***
***நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ இடத்தும் உரிய என்ப.***

(இ-ள்) : செலவு முதலாகிய நான்கு தொழிற்கண்ணும் நிலைபெறப் புலப்படாநின்ற அந்நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூ இடத்திற்கும் உரியவாய் வரும் என்றவாறு.

செலவு முதலாகிய தொழிற்கண் சிறப்பு வகையான் நிலைபெறாது பொதுவாய் வரும் இயங்குதல், ஈதல் என்றும் தொடக்கத்தனவற்றின் நீக்குதற்கு 'நிலை பெறத் தோன்றும்' என்றார்.

முற்றும் எச்சமும் தொழிற்பெயரும் ஆகி அத்தொழில் பற்றி வரும் வாய்பாடு பல ஆயினும், அவை எல்லாம் இந்நான்கு தொழிலும் பற்றித் தோன்றுதலின் 'நான்கு சொல்' என்றார்.

பொருள் வகையான் முன் அறியப்பட்டமையான் 'அந்நாற் சொல்லும்' என்றார்.

இச்சூத்திரத்துள் ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும், ஆங்கு முதலாயின படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன. வினைச்சொல் மூன்று இடத்திற்கும் உரிய ஆதல் வினையியலுள் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டா எனின், ஆண்டுப் பால் உணர்த்தும் ஈற்றான் இடத்திற்கு உரிமை கூறினார். ஈண்டு ஈற்றான் அன்றிச் செலவு முதலாயின முதனிலைதாமே இடம் குறித்து நிற்றல் உடைமையான், இவ்வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமையின் ஈண்டுக் கூறினார் என்பது. அஃதேல், 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும், தன்மை முன்னிலை யாயீ ரிடத்த, படர்க்கை இடத்த கொடைச் சொல்லும் செலவுச் சொல்லும்' என ஓதுக; இச்சூத்திரம் வேண்டா எனின், அங்ஙனம் ஓதின், இடம் சுட்டும் முதனிலை இந்நான்குமே என்னும் வரையறை பெறப்படாமையின், இது வேண்டும் என்பது. அஃதேல், போதல், புகுதல் என்னும் தொடக்கத்தனவும் இடம் சுட்டுதலின் நான்கு என்னும் வரையறை அமையாது எனின், அவை இக்காலத்துச் சில இடத்துப் பயின்று வருமாயினும் மூன்று இடத்திற்கும் பொதுவாகலின் அன்றே, ஆசிரியர் அந்நாற் சொல்லும் என இவற்றையே வரைந்து ஓதுவார் ஆயிற்று என்பது. *(28)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**28. செலவினும் . . . என்ப-**

இந்த விதி செலவு, வரவு, தரவு, கொடை என்ற நான்கு சொற்கள் அடிப்படையாகத் தோன்றும் முற்று, எச்சம், தொழிற்பெயர் முதலியவற்றிற்கே உரியது; இச்சொற்களின் பொருள்பட வரும் இயங்குதல், ஈதல் முதலியவற்றிற்குப் பொருந்தாது.

'பரகதி இழக்கும் பண்பு **ஈங்கு** இல்லை' (சிலப். 15 : 85): ஈங்கு என்பது எனக்கு என்னும் பொருளில் தன்மைக்கண் வந்தது.

'ஆங்குயான் கூறிய அனைத்திற்குப் பிறிதுசெத்து
ஓங்குமலை நாடன் உயிர்த்தோன் மன்ற' (குறுந் - 217)

ஆங்கு என்பது தலைவனாகிய அவனிடம் என்னும் பொருளில் படர்க்கைக்கண் வந்துள்ளது. பகுதியினாலேயே தன்மை முன்னிலை படர்க்கை என்ற இடங்களைச் சுட்டும் சொற்கள் இந்நான்கே என்றவரையறை இந்நூற்பாவான் தெரிவிக்கப் பட்டது.

## நச்சினார்க்கினியர் உரை

### இடம்பற்றி நிகழும் சொற்களுக்குப் பொதுவிதி

28. ***செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மு விடத்தும் உரிய என்ப.***

இஃது இடம்பற்றி நிகழும் சொற்களுக்குப் பொதுவிதி கூறுகின்றது.

இ-ள்: செலவினும் வரவினும் தரவினும் கொடையினும் நிலைபெறத் தோன்றும் அந்நால் சொல்லும் - செலவு முதலிய நான்கு வினையானும் இடம் நிலை பெறப் புலப்படாநின்ற அந்நான்கு சொல்லும்; தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூவிடத்தும் உரிய என்ப - தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம் மூவிடத்திற்கும் உரியவாய் வரும் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும், ஆங்கு முதலாயின படர்க்கைக்-கண்ணும் அடக்கப்பட்டன.

வினைச்சொல் பால் உணர்த்தும் ஈற்றான் மூன்று இடத்திற்கும் உரிமை வினையியலுள்கூறி, செலவு முதலிய முதனிலை தாமே இடம் உணர்த்தி நிற்றலின், ஈண்டுக் கூறினார், அவற்றுள் அடங்காமையின். *(28)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**28. செலவினும் வரவினும் -**

**ஈங்கு** என்பது தன்மையைக் குறித்தல்,

> 'நரகன் உயிர்க்கு நல்லுயிர் கொண்டு
> பரகதி இழக்கும் பண்பு ஈங்கு இல்லை'
> *சிலப்-15:84-85*

[ஈங்கு இல்லை - எனக்கு இல்லை] என்ற இடத்துக் காண்க. 'போர்யானை வந்தீக ஈங்கு' *(கலி. 86)* என்பதும் அது.

**ஆங்கு** என்பது படர்க்கையைக் குறித்தல்,

> 'நீ ஆங்குக் கொண்ட விழவினும் பலவே
> நின் வெம்முனை இருக்கை செம்மற்று அம்ம' - *புறநா. 33*

[நீ அவ்விடத்து எடுத்துக்கொண்ட விழவினும் பலவாய், நினது வெய்ய முனையை உடைய இருப்பிடம் தலைமையை உடைத்து.]

> 'ஆங்குயான் கூறிய அனைத்திற்கும் பிறிதுசெத்து
> ஓங்குமலை நாடன் உயிர்த்தோன் மன்ற'
> குறுந்.(ஆங்கு-தலைவனிடம்)

என்ற இடத்துக் காண்க.

வினைச்சொல் பால் உணர்த்தும் ஈற்றான் மூன்றிடத்தும் உரிமைபெறுதல் வினைமுற்றிற்கே உரிய இயல்பு. அது வினையியலில் 204 முதல் 226 ஆம் நூற்பா முடியக் கூறப்பட்டுள்ளது.

இவை வினைப்பகுதிகளானேயே மூன்றிடத்தும் உரிமை பெற்றுள்ளன.

'**பெருவிறல்**' -பெரியவலியை உடைய தேவர்களுக்கு வெற்றியைத் தந்த கரிய நிறம் சேர்ந்த திருமிடற்றை உடைய இறைவன்.

'**புனல்தரு**'- தண்ணீரால் தன்னை நோக்கிக் கொண்டு வரப்பட்ட பசிய மாங்காயைத் தின்ற தவற்றுக்காக.

'**தூண்டில் வேட்டுவன்**'- வரால்மீன், தூண்டிலை நீரில் இட்ட வலைஞன், தூண்டிலை நீரின் வெளியே இழுக்கவும் பாராது.

'**அரிமலர்**'-மெல்லிய மலர் போன்ற கண்களை உடையையாய் அழகிய மாமைநிறத்தை உடைய மருதநிலப் பெண்ணே! நின் அழகிய முகத்தையும் முழுமதியையும் ஒன்றாகக் கருதி மனம் சுழன்று, நிலத்திலும் தங்காது, வானத்திற்கும் செல்லாது, கேது என்ற பாம்பு ஐயப்பாட்டி லேயே தங்கிற்று.

இவற்றுள்,
வெற்றியைத் தந்த சிவபெருமான்
தண்ணீர் அடித்துவந்து தந்த பசுங்காய்
வலைஞர் இழுக்கவும் வரால் வாராது
(அரவு வானத்துச் செல்லாது)

என்று தருசொல்லும் வருசொல்லும் படர்க்கைக்கு வந்தவாறு

**தெய்வச்சிலையார் உரை**

28. ***செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்***
***நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ விடத்தும் உரிய என்ப.***

***அவற்றுள்,***
***தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்***
***தன்மை முன்னிலை ஆயீர் இடத்த***
***ஏனை இரண்டும் ஏனை இடத்த.***

ஒருசார் வினைச்சொற்கண் இடவழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: செலவு, வரவு, தரவு, கொடை என்னும் தொழிற்கண் நிலைபெறத் தோன்றும் அந்நாற்சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்று இடத்தும் உரிய என்ப ஒரு சாரார். அவற்றுள், தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும் தன்மை முன்னிலை என்னும் இரண்டு இடத்தினும் வரும்; ஏனை இரண்டும் படர்க்கைக்கண் வரும் எ-று.

உ-ம் : எனக்குத் தந்தது, எனக்கு வந்தது; நினக்கு தந்தது, நினக்கு வந்தது; அவர்க்குச் சென்றது, அவர்க்குக் கொடுத்தது - என வரும்.

இந்நான்கு சொல்லும் மூன்று இடத்தும் வரும் என்பார் உதாரணம் காட்டுமாறு: எனக்குச் சென்றது, எனக்குக் கொடுத்தது; நினக்குச் சென்றது, நினக்குக் கொடுத்தது; அவர்க்குத் தந்தது, அவர்க்கு வந்தது - எனக் காட்டுவர்.

இவற்றுள் கொடு என்பதனை, 'கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும் - தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின் - தன் இடத்து இயலும் என்மனார் புலவர்' (எச் -49) என எடுத்து வழு அமைக்கின்றார் ஆகலானும், பிறவும் இத்துணைச் சிறப்பு இல ஆதலானும், இலக்கண வழக்கு மேல்காட்டப்பட்ட ஆறு உதாரணமுமே; ஏனை ஆறும் ஒரு முகத்தான் வழு அமைத்தவாறாகக் கொள்க. (28)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**28. 'செலவினும் வரவினும்', அவற்றுள்-**

**மற்றவர் மூன்று நூற்பாக்களாகக் கொண்டவற்றை இவர் ஒரு நூற்பாவாகக் கொள்கிறார்.** நூற்பா உரைக்கு ஏற்ப முதலில் ஆறு உதாரணங்கள் காட்டுகிறார். அவையே வழாநிலை என்கிறார். இந்நான்கு சொல்லும் மூன்று இடத்திற்கும் உரிய என்பார் காட்டும் உதாரணங்களை ஒருவகையான் வழக்கு நோக்கி வழுவமைதியாகக் கொள்ளலாம் என்கிறார்.

கொடு என்கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்னிடத்து இயலும் என்மனார் புலவர். (சொ. 437)

கொடு என்னும் சொல் படர்க்கை ஆயினும் தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பினான் தன்மையிடத்தும் வரும் என்பது வழுவமைதி.

கொடு என்பது படர்க்கை என ஆசிரியரே எடுத்து ஓதியுள்ளார்.

## கல்லாடனார் உரை

*28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்*
*நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்*
*தன்மை முன்னிலை படர்க்கை என்னும்*
*அம்மூ விடத்தும் உரிய என்ப.*

என்-எனின், இடம்பற்றி நிகழும் சொற்களுள் சிலவற்றிற்கு இலக்கணம் கூறுவான், அச் சொற்களவும் இடங்களவும் பெயரும் முறையும் கூறிய முகத்தான், அவற்றிற்குப் பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செலவுப் பொருண்மைக்கண்ணும், வரவுப் பொருண்மைக்கண்ணும், தரவுப் பொருண்மைக்கண்ணும், கொடைப் பொருண்மைக்கண்ணும் நிலைபெற்றுத்

தோன்றுகின்ற செலவு வரவு தரவு கொடை என்ற நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை என்று சொல்லப்பட்ட அம்மூன்று இடத்திற்கும் பொதுவகையான் உரிய என்றவாறு.

எ-டு : சிறப்பு வகையான் கூறும்வழிக் காட்டுதும். (28)

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**28. 'செலவினும் . . . என்ப.'-**

இடம் பற்றி நிகழும் சொற்கள் இந்நான்கே.

**ஒருவர் உரை**

***28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்***
***நிலைபெறத் தோன்றும் அந்நால் சொல்லும்***
***தன்மை முன்னிலை படர்க்கை என்னும்***
***அம்மூ இடத்தும் உரிய என்ப.***

எ-து : செல்லும், வரும், தரும், கொடுக்கும் என்று நிலைபெற்றுப் புலப்பட்டு நின்ற அந்நான்கு சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்று இடத்திற்கும் உரிய.

எ-டு : முன்னர்க் காட்டுதும். (28)

**பாலசுந்தரனார் உரை**

**28. 'செலவினும் . . . என்ப.'**

செலவு முதலியன சொற்கள் பற்றி ஓதப்பட்டமையான் போதல்-நீங்குதல்-இரிதல்-முதலியன செலவின்கண்ணும், புகுதல்-அடைதல்-முதலியன வரவின்கண்ணும், ஈதல் வீசுதல்-முதலியன கொடையின்கண்ணும் மரபிற்கு ஏற்ப அடக்கப்பெறும்.

அவ்வாறே இடம்பற்றி வரும் ஈங்கு, ஈண்டை முதலியன தன்மைக்கண்ணும், ஆங்கு, ஆண்டை முதலியன படர்க்கைக்கண்ணும் அடங்கும்.

## இளம்பூரணர் உரை

### தன்மை முன்னிலைக்கு உரிய சொற்கள்

**29.** ***அவற்றுள்,***
***தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்***
***தன்மை முன்னிலை ஆயீர் இடத்த.***

எ . . . ன், எய்தியது விலக்குதல் நுத[illegible]

இ-ள்: தரும் வரும் என்னும் சொல் தன்மைக்கும் முன்னிலைக்கும் உரியவாம்; படர்க்கைக்கு ஆகா என்றவாறு.

உதாரணம் : எனக்குத் தரும் காணம், எனக்கு வரும் காணம்; நினக்குத் தரும் காணம், நினக்கு வரும் காணம் -என வரும். *(29)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**29. 'அவற்றுள் தருசொல்' -**

எய்தியது - தரவு, வரவு, கொடை, செலல் என்பன தன்மை முன்னிலை படர்க்கை என்ற மூவிடங்களுக்கும் உரிய என்பது. விலக்குதல் - தருதலும், வருதலும் படர்க்கைக்கு ஆகா எனல்.

> காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
> பேதைமை எல்லாம் தரும். (குறள் - 507)
>
> தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
> தீரா இடும்பை தரும். (குறள் - 508)
>
> தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
> தீரா இடும்பை தரும். (குறள் - 510)

இம்மூன்று குறட்பாக்கள் உரையிலும் பரிமேலழகர் 'தரும்' என்ற சொற்குக் கொடுக்கும் என்றே உரை வரைந்த நயத்தினை நோக்குக.

## சேனாவரையர் உரை

### தன்மை முன்னிலைக்கு உரிய சொற்கள்

***29.   அவற்றுள்,***
***தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்***
***தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த.***

*(இ-ள்)* : கூறப்பட்ட நான்கு சொல்லுள், தரு சொல்லும் வருசொல்லும் தன்மை முன்னிலை ஆகிய இரண்டு இடத்திற்கும் உரிய என்றவாறு.

*(எ-டு)* : எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான்-என்னுழை வந்தான், நின்னுழை வந்தான் - எனவும், ஈங்கு வந்தான் எனவும் வரும்.

தரப்படும் பொருளை ஏற்பான் தானும் முன்னின்றானும் ஆகலானும், வரவுதொழில் தன்கண்ணும் முன்னின்றான்கண்ணும் சென்று முடிதலானும், ஈற்றான் அன்றி இவ்விரு சொல்லும் தன்மை முன்னிலைக்கு உரியன ஆயினவாறு கண்டு கொள்க.

'நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய' (சொல்-28)

என்று மூன்று இடத்திற்கும் வரைவு இன்றி ஆம் எனவும் கொள்ளவைத்தமையான்,

'பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற்று அண்ணல்' (புறம்-55)

எனவும்,

'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகம்-36)

எனவும்,

மயங்கி வருவனவும் அமைக்கப்படும். அஃதேல், படர்க்கைச் சொல் மயக்கமும் எய்துமால் எனின், அஃது எச்ச இயலுள் பெறப்படுதலின், ஈண்டுக் கொள்ளப்படாது என்க.

ஒருவன் சேய்நிலத்துநின்றும் அணிநிலத்துப் புகுந்தானாயின் சேய் நிலம் நோக்க அணிநிலம் ஈங்கு எனப்படுதலின், இவன்கண் வந்தான், ஈங்கு வந்தான் என்பன இலக்கணமேயாம். இந்நான்கும் கொடைப்பொருளன என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் :- 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்பதனை அமைத்தார் ஆகலின், அவர்க்கு அது கருத்து அன்று என்க.

தரவு வரவை உணர்த்துவனவற்றைத் தருவதும் வருவதும் போலத் தருசொல், வருசொல் என்றார். (29)

### சேனாவரையர் உரைவிளக்கம்

**29. அவற்றுள் தருசொல் . . . இடத்த-**

***'பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த கறைமிடற்று அண்ணல்'*** -

பேராற்றல் பொருந்திய தேவர்களுக்கு வெற்றியை வழங்கிய விடக்கறை பொருந்திய கழுத்தை உடைய சிவபெருமான். 'சிவபெருமான் தந்த' எனத் தருதல் படர்க்கைக்கண் வந்தது.

***'வரால், தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது'*** வரால் மீன், தன்னைத் தூண்டிலில் அகப்படுத்திய மீனவன் தன்பக்கம் இழுக்கவும் வாராது - என 'வரால் வாராது' என வருதல் படர்க்கைக்கண் வந்தது.

'தூண்டில் வேட்டுவன் கைக்கு வரால் கிட்டாமல்' என்று பொருள்படுவதால் வருதல் கொடைப்பொருளில் வந்ததாக உரையாசிரியர் கருதினார்.

## நச்சினார்க்கினியர் உரை

### அவற்றுள் சிலவற்றிற்குச் சிறப்பு இலக்கணம்

*29. அவற்றுள்,*
*தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்*
*தன்மை முன்னிலை ஆயீர் இடத்த.*

இஃது அவற்றுள் சிலவற்றிற்குச் சிறப்பு இலக்கணம் கூறுகின்றது.

இ-ள்: அவற்றுள் தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும் - முற்கூறிய நான்கு சொல்லினுள் தருசொல்லும் வருசொல்லும் ஆகிய இரண்டுசொல்லும்; தன்மை முன்னிலை ஆயீரிடத்த - தன்மை முன்னிலை ஆகிய அவ்விரண்டு இடத்திற்கும் உரிய என்றவாறு.

உதாரணம் : எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான், என்னுழை வந்தான், நின்னுழை வந்தான், ஈங்கு வந்தான் என ஈற்றான் அன்றித் தரவும் வரவும் ஆகிய வினை, தன்கண்ணும் முன் நின்றான்கண்ணும் சென்றன. முன்னிற் சூத்திரத்துப் பொதுவிதியான் மூன்று இடத்தும் வரைவு இன்றி ஆம் எனவும் கொள்ள வைத்தமையான்,

> 'பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
> கறைமிடற்று அண்ணல்' (புறநா. 55)
>
> 'புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு' (குறுந். 292)
>
> தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா. 36)
>
> 'அரிமலர் ஆய்ந்தகண் அம்மா கடைசி
> திருமுகமும் திங்களும் செத்துத் - தெருமந்து
> வையத்தும் வானத்தும் செல்லாது அணங்காகி
> ஐயத்துள் நின்றது அரவு'

என மயங்குவனவும் அமைக்க.

'தரவு வரவு உணர்த்தும் சொல்' -என்பது பொருள். (29).

## கல்லாடனார் உரை

*29. அவற்றுள்,*
*தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்*
*தன்மை முன்னிலை ஆயீர் இடத்த.*

என்-எனின், மேற்கூறிய சொற்களுள் சிலவற்றிற்குச் சிறப்பு வகையான் இட இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ-ள்: மேற்கூறப்பட்ட நான்கு சொல்லுள்ளும் தரும் வரும் என்னும் சொல் தன்மைக்கும் முன்னிலைக்கும் ஆம்; படர்க்கைக்கு ஆகா என்றவாறு.

எ-டு. : எனக்குத் தரும் காணம், நினக்குத் தரும் காணம்-எனக்கு வரும் காணம், நினக்கு வரும் காணம்-எனவரும். (29)

## ஒருவர் உரை

*29. அவற்றுள்,*
*தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்*
*தன்மை முன்னிலை ஆயீர் இடத்த.*

எ-டு : எனக்குத் தரும் காணம், நினக்குத் தரும் காணம்; எனக்கு வரும் காணம், நினக்கு வரும் காணம் -என வரும். (29)

## பதிப்பாசிரியர் குறிப்பு

29. தொல்காப்பியத்தில் படர்க்கை இடத்தில் 'வரூஉம்' என்னும் சொல் 40 இடங்களுக்குமேல் வந்துள்ள செய்தி உளம்கொளத்தக்கது.

## இளம்பூரணர் உரை

### படர்க்கைக்கு உரிய சொற்கள்

*30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.*

எ . . . ன், இதற்கும் மேல் எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: செல்லும் கொடுக்கும் என ஒழிந்து நின்ற இரண்டும் படர்க்கைக்கு ஆம்; தன்மைக்கும் முன்னிலைக்கும் ஆகா என்றவாறு.

உதாரணம் : அவற்குச் செல்லும் காணம்
அவற்குக் கொடுக்கும்காணம்-
எனவரும்.

இனிச் 'செலவும் கொடையும் தரவும் வரவும்' என்று சூத்திரஞ் செய்யற்பாலான்; எற்றுக்கு? செல்லும் காணம், கொடுக்கும் காணம், என்பன இரண்டும் படர்க்கைக்குரிய; தரும், வரும் என்பன இரண்டும் தன்மைக்கும் முன்னிலைக்கும் உரியவாகலான். அவ்வாறு கூறாது மயங்கக் கூறிய அதனான், செல்லும் என்னும் சொல்லான் சொல்லப்படுவதனை வரும் என்னும் சொல்லானும் சொல்லுப; கொடுக்கும் என்னும் சொல்லான் சொல்லப் படுவதனைத் தரும் என்னும் சொல்லினானும் சொல்லுப.

உதாரணம் : 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகநா. 36) எனவும், 'புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பல்' (குறுந். 292) எனவும் வரும்.

இனி, இச்சூத்திரம் கொடுத்தல் கோடற்பொருண்மை மூன்றிடத்தும் சொல் நிகழுமாறு கூறியது என்பாரும் உளர். (30)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**30. 'ஏனை இரண்டும் ஏனை இடத்த' -**

இருதிணை ஐம்பால் மூவிடங்களையும் விளக்குதற் குரிய படர்க்கைக்கு உரிய செலவு, கொடை என்பனவற்றை முன்னர்க் கூறி, ஒருமை பன்மையையே குறிப்பிடும் தன்மை முன்னிலை இவற்றிற்கு உரிய தருதல், வருதல் என்பன வற்றைப் பின்னர்க் கூறல்வேண்டும். அங்ஙனம்

கூறாததனான், 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' *(அகநா.36)*, 'புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு' *(குறுந்.292)* என்பன கொள்ளப்பட்டன.

'வாராது' - தூண்டில் வேட்டுவன் ***கைக்கொள்ளுமாறு*** அவன் அருகில் வாராது; புனல்தரு பசுங்காய் - ஓடுகின்ற நீர் ***அடித்துக் கொண்டுவந்து கொடுத்த பசுங்காயை*** என்று பொருள் செய்தற்கு வாய்ப்பு உண்மையின், இந்நூற்பாவில் கோடல் பொருளையும் கொடுத்தல் பொருளையும், தருசொல் வருசொல் என்பன, மூன்றிடத்தும் சுட்டும் என்று கருதுப ஒருசாரார்.

### சேனாவரையர் உரை

### படர்க்கைக்கு உரிய சொற்கள்

***30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.***

*(இ-ள்)* : செலவுச் சொல்லும் கொடைச் சொல்லும் படர்க்கைக்கு உரியன என்றவாறு.

*(எ-டு)* : அவன்கட் சென்றான், ஆங்குச் சென்றான், அவற்குக் கொடுத்தான் என வரும்.

செலவுதொழில் படர்க்கையான்கண் சென்று உறுதலானும், கொடைப் பொருள் ஏற்பான் படர்க்கையான் ஆகலானும், ஈற்றான் அன்றி இவ்விரு சொல்லும் படர்க்கை இடத்திற்கு உரிய ஆயினவாறு கண்டுகொள்க. *(30)*

### நச்சினார்க்கினியர் உரை

### இதுவும் அது

***30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.***

இதுவும் அது.

இ-ள்: ஏனை இரண்டும் - செலவுச் சொல்லும், கொடைச் சொல்லும்; ஏனை இடத்த - படர்க்கைக்கு உரிய என்றவாறு.

உதாரணம் : அவன்கண் சென்றான், ஆங்குச் சென்றான், அவர்க்குக் கொடுத்தான் என, ஈற்றான் அன்றிச் செலவுத் தொழிலும், கொடைப் பொருளும் படர்க்கையான்கண் சென்று உற்றன. (30)

## கல்லாடனார் உரை

**30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.**

என்-எனின், இதற்கும் விதி ஒக்கும் என்றவாறு.

இ-ள்: ஒழிந்த செல்லும் கொடுக்கும் என்னும் சொல் இரண்டும், ஒழிந்த படர்க்கை இடத்திற்கு உரிய; தன்மைக்கும் முன்னிலைக்கும் ஆகா என்றவாறு.

எ-டு. : அவர்க்குச் செல்லும் காணம், அவர்க்குக் கொடுக்கும் காணம் - என வரும்.

பொதுச்சூத்திரத்துள் தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய தரவினையும் வரவினையும் தரவு வரவு என்று ஓதாது வரவினைச் செலவினோடு இயைபு படுத்தியும், படர்க்கைக்கு உரிய கொடுக்கும் என்பதனொடு செல்லும் என்பதைக் கூறாது தரவு என்பதனை இயைய வைத்தும் கூறிய முறை அன்றிக் கூற்றினான், கொடைப்பொருட்கண் கொடுக்கும் என்பதனைத் தரும் என்றும், செல்லும் என்பதனை வரும் என்றும் கூறுவனவற்றை இடவழு ஆக்கி அமைத்துக் கொள்ளப்படும் என்பது.

வரவு தரவு என்பன தம்முள் இயைபுபட நின்றனவால் எனின், தம்முள் இயைபு உடைய எனினும், முற்கூறிய செலவினொடும் வரவுப் பொருளான் இயைபுபடுதலின் இத்தரவினோடு இயைபு இன்று ஆயிற்று என உணர்க.

'புனல்தரு பசுங்காய் தின்ற' (குறுந்-292), அவர்க்கு வரூஉம் காணம் என்றாற்போல்வன கொடைத்தொழிலிடை மயக்கமாகக் கொள்க. இன்னும் வரவினொடு செலவு கூறிய முறையன்றிக் கூற்றால், அக்கொடைத் தொழில் அல்லாச் செலவுவரவின்கண்ணும் இடமயக்கம் கூறுவன அமைத்துக் கொள்ளப்படும்.

எ-டு : 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகம்-36), 'யான் எய்த அம்பு நின்மேல் செல்லும்',

'அரிமலர்ந் தன்ன அம்மா கடைசி
திருமுகமும் திங்களும் செத்துத் - தெருமந்து
வையத்தும் வானத்தும் செல்லாது அணங்குஆகி
ஐயத்து நின்றது அரா' -

இந்நிகரன எல்லாம் கொள்க.

இந்நான்கு சொல்லுமே இடமயக்கம் ஆராய்ந்தது என்னை? எல்லாப் பெயர்களும் வினைகளும் இடத் தொடுபட்டால் வருவது என் எனின், வேற்றுமை உண்டு. அவ்வாறு தத்தம் இடங்கள்மேல்நின்ற சொற்கள் ஒன்றனோடு ஒன்றுசேரும் இயல்பு கூறுதல் இந்நான்கிற்கும்அல்லது இன்மையின் இவற்றையே கூறினார் என்பது.

செலவு முதலிய சொல் நான்கும் படர்க்கையே எனினும், வரும் தரும் என்னும் இரண்டு படர்க்கையும் தன்மை முன்னிலைகளோடு இயைபுபட்டும், செல்லும் கொடுக்கும் என்னும் இரண்டும் தமக்கு ஏற்ற படர்க்கை யோடு இயைபுபட்டும் நின்றவாறு கண்டுகொள்க.

இவற்றான் சொல்லியது, ஓர் இடத்துச்சொல் ஓர் இடத்துச் சேரும் இடத்துப் பிறக்கும் இட இலக்கணமும் இடவழுஅமைதியும் என்பது. (30)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**30. 'ஏனை இரண்டும் ஏனை இடத்த.'-**

தரவு வரவு செலவு கொடை என்பதே வரிசை. அந்த வரிசையை மாற்றிக் கூறியதனான் கொடுக்கும் என்பதற்குத் தரும் எனவும் செல்லும் என்பதற்கு வரும் எனவும் கூறுதல் வழுவமைதி.

***தூண்டில்*** - தூண்டிலில் அகப்படுத்திய வலையன் வலையை இழுக்கவும் வரால்மீன் வாராது.

***அரி மலர்ந்***-மருதநிலப் பெண்ணே ! நின் முகத்தையும் சந்திரனையும் ஒன்றாகக் கருதிப் பாம்பு நிலஉலகம் நோக்கியும் வானம் நோக்கியும் செல்லாது ஐயுற்று நின்றது.

இந்நூற்பாவில் 28, 29, 30ஆம் நூற்பாக்களின் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

***30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.***

எ-து : செல்லும் கொடுக்கும் என்பன படர்க்கை இடத்தன.

எ-டு : அவர்க்குச் செல்லும் காணம், அவர்க்குக் கொடுக்கும் காணம் என வரும்.

'அந்நாற் சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும், அம்மூ இடத்தும் உரிய என்ப' என்றதனான், அவை மயங்கி வரவும் பெறும்.

'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகம் - 36)
'புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு' (குறுந் -292)

எனவும்,

'அரிமலர் ஆய்ந்தகண் அம்மா கடைசி
திருமுகமும் திங்களும் செத்துத் - தெருமந்து

வையத்தும் வானத்தும் செல்லாது அணங்குஆகி
ஐயத்து நின்றது அரா'

எனவும் மயங்குவன அமைக்க. கடைசி என முன்னிலை ஆக்குக.(கடைசி : விளி) (30)

### பாலசுந்தரனார் உரைவிளக்கம்

30. 'ஏனை இரண்டும் ஏனை இடத்த.'

எனக்குக் கொடுத்தான், நினக்குக் கொடுத்தான் எனச் சிறுபான்மை வருதலை 'அம்மூவிடத்தும் உரிய' (சொ. 28) என்பதனான் கொள்க. 'கொடு என் கிளவி' (சொ. 449) என்னும் சூத்திர விதி ஏவல்வினை பற்றிய சூத்திரவிதி ஆதலின் ஈண்டைக்கு எய்தாது என்க.

### இளம்பூரணர் உரை

#### யாது எவன் என்பன

**31. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.**

எ . . . ன், அறியாத பொருளை அறியுங்கால் சொலற்பால ஆறு இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யாது எவன் என்ற இரண்டு சொல்லும் தன்னான் அறியப்படாத பொருட்கண் வினாவாய்த் தோன்றும் என்றவாறு.

உதாரணம் : நும் நாடு யாது? இப்பண்டி யுள்ளது எவன்? என வரும்.

'செறிய' என்பது யாப்புறுத்தல்.

இஃது யாப்புறத் தோன்றும் என, பிற யாப்புறாமல் தோன்றுவனவும் உள என்பதாம்.

அவை யாவன், யாவள், யாவர், யாது, யாவை என்பன.

ஐந்து பாலும் அறியலுற்று வாரா; வினாவும் மாத்திரத்திற்கு வந்த சூத்திரம் இது. (31)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**31. 'யாது எவன் என்னும்' -**

யாப்புறுத்தல் - முழுதும் ஏற்புடையதாதல். யாவன் முதலியன அறியான் வினாவிற்கு அவ்வளவு ஏற்புடையன அல்ல. உயர்திணைப் பெயரை உணர்த்துமிடத்து 'யாவன், யாவள், யாவர்' (சொ. 159) என்றும், அஃறிணைப் பெயரை உணர்த்துமிடத்து 'யாது, யா, யாவை' (சொ. 164) என்றும் ஆசிரியர் குறிப்பிடுவதனான் இவை திணையும் பாலும் அறியப்பட்டமையாம்.

யாவன் முதலியன அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றா ஆயின என்றே சேனாவரையரும் நச்சினார்க் கினியரும் குறிப்பிட்டுள்ளார். கல்லாடரும் ஒருவரும் இளம்பூரணரைப் பின்பற்றியுள்ளனர்.

> 'ஏனை, ஒன்றறி சொல்முன் யாதுஎன் வினாஇடை
> ஒன்றிய வகரம் வருதலும், இரண்டும்
> மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே' (எ. 172)

என்று குறிப்பிடப்படும் 'யாது' அஃறிணை ஒருமைக் குறிப்பு வினைமுற்றாகவும் வரும். எவன் என்பது அஃறிணை இருபாற்கும் உரிய குறிப்புவினைமுற்று (சொ. 215) என்பது அறிக.

திவாகரம் 'யாதும் எவனும் கொல்லும் என்னையும் ஆகும் என்ப ஐயுற்ற கிளவி' என்று கூறும்.

## சேனாவரையர் உரை

### 'யாது' 'எவன்' என்னும் சொற்கள் அமையும் வகை

**31. *யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்***
***அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.***

(இ-ள்) : யாது எவன் என்னும் இரண்டு சொல்லும் அறியாப்பொருள்இடத்து வினாவாய் யாப்புறத் தோன்றும் என்றவாறு.

*(எ-டு) : இச்சொற்குப் பொருள் யாது, இச்சொற்குப் பொருள் எவன் என வரும்.*

*எவ்வகையானும் அறியாப் பொருள் வினவப்படாமையின், ஈண்டு அறியாப் பொருள் என்றது, பொது வகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப்படாத பொருளையாம்.*

*யா, யாவை, யாவன், யாவள், யாவர், யார், யாண்டு, யாங்கு என்னும் தொடக்கத்தன, திணையும் பாலும் இடமும் முதலாகிய சிறப்பு வகையானும் சிறிது அறியப்பட்ட பொருளன ஆகலின், அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றாமையான், இவற்றையே விதந்து 'அறியாப் பொருள் வயின் செறியத் தோன்றும்' என்றார். இவையும் திணையும் பாலும் குறித்து வருதலின் சிறப்பு வகையானும் அறியப்பட்ட பொருளனவே அன்றோ எனின், அற்றன்று; இச்சொற்குப் பொருள் யாது-எவன்-என்று வினாயவழி, இறுப்பானும், அஃறிணை ஒருமையும் பொதுமையும் துணிந்து அவற்றுள் பகுதி அறிதற்கு வினாவுகின்றான் அல்லன்; பொது வகையான் வினாவுகின்றான் என்று உணரும் ஆகலின். அவ்வாறு ஆதல், வழக்கினகத்து வினாவுவானதும் இறுப்பானதும் குறிப்பொடு படுத்து உணர்க.*

*முன்னர் வழு அமைத்தற்கு அவை இன்ன பொருட்கு உரிய என அவற்றது இலக்கணம் கூறியவாறு. (31)*

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**31. யாது எவன் . . . தோன்றும்**

*யாது - அஃறிணை ஒருமைப் பெயர்*
*எவன் - அஃறிணை இருபாற்கும் உரிய குறிப்பு வினை. அது படுத்தல் ஓசையான் குறிப்பு வினையாலணையும் பெயர் ஆகும். (எழு. 122- நச்.)*
*இறுப்பானும் - விடைகூறுபவனும்; உம்மையான் வினவுவானும் கொள்ளப்படும்.*

அடுத்த நூற்பாவைச் சேனாவரையர் வினாவழுவமைதி கூறும் நூற்பாவாகக் கோடலின், முன்னர் வழு அமைத்தற்கு அவற்றது இலக்கணம் கூறினார் என்று கூறுகிறார்.

## நச்சினார்க்கினியர் உரை

### அறியாப் பொருள்மேல் சொல் நிகழ்த்தும் மரபு

31. *யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்*
*அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.*

இஃது அறியாப் பொருள்மேல் சொல் நிகழ்த்தும் மரபு கூறுகின்றது.

இ-ள்: யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும் - யாது, எவன் என்று சொல்லப்படும் அவ்விரண்டு சொல்லும்; அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும் - அறியாப் பொருளிடத்து ஒருவன் வினாவும் வினாவாய் யாப்புறத் தோன்றும் என்றவாறு.

உதாரணம் : இச்சொற்குப் பொருள் யாது?
இச்சொற்குப் பொருள் எவன்?

இது பொதுவகையான் உணரப்பட்டுச் சிறப்பு வகையான் உணர்த்தப்படாத பொருளாம். இக்காலத்து 'எவன்' என்பது, 'என்' என்றும், 'என்னை' என்றும் மருவிற்று.

யாவன் யாவள் யாவர் யார் யா யாவை யாண்டு யாங்கு எப்பொருள் என்பன, திணை-பால்-முதலியன உணர்த்தலின், அறியாப் பொருள் வயின் செறியத்தோன்றா ஆயின. ஆயின், யாது எவன் என்பனவற்றிற்கும் அவை உளவால் எனின், வினாவுகின்றான் அஃறிணை ஒருமையும் பன்மையும் துணிந்து, அவற்றின் பகுதி அறிதற்கு வினாவுகின்றான் அல்லன், பொதுவகையான் வினாவுகின்றான் என்று அறிவுறுக்குமாறு வழக்கு நோக்கி உணர்க. (31)

[விளக்கம் :
யாது என்பது வினாப்பெயர். 'யாதுயா யாவை என்னும் பெயரும்' (169 நச்.) நோக்குக.
எவன் என்னும் குறிப்புவினை படுத்தல் ஓசையான் பெயராகும். (எ. 122. நச்.)
எவன் என்னும் வினாப்பெயர் என் என்று ஆகி ஈண்டு இன்மை குறித்து நின்றது. (குறள். 2. பரி.)]

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**31. யாது எவன்-**

யாது, யா, யாவை என்ற வினாப்பெயர்களை ஆசிரியர் எடுத்து ஓதியுள்ளார். யாது என்ற குறிப்பு வினைமுற்றை இந்நூற்பாவினான் உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளார் என்று கருதலாம்.

யாது அஃறிணை ஒருமைக் குறிப்பு வினைமுற்று. எவன் என்பது அஃறிணை இருபாற்கும் பொதுவான குறிப்பு வினைமுற்று. (சொல்.221)

யாது, எவன் என்று வினவுகின்றவன் கருத்து, அறியாத பொருளை வினாவி அறிதற்கண் இருக்குமேயன்றித் தான் அஃறிணை ஒருமைப் பொருளையோ பன்மைப் பொருளையோ பற்றி வினவியதாக இராது என்பதனை உலக வழக்கில் காணலாம்.

## தெய்வச்சிலையார் உரை

***29. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.***

வினாவழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: யாது எவன் என்று சொல்லப்பட்ட இரண்டு சொல்லும் அறியாத பொருட்கண் பொருந்தத் தோன்றும் எ-று.

நின் நாடு யாது? இப் பண்டி உள்ளது எவன்? - என வரும்.

ஏனைப் பால் உணர்த்தும் வினாச்சொற்கள் எல்லாம் கூறாது இவ் இரண்டினையும் வகுத்துக் கூறியது என்னை எனின், ஆண்டு உளது ஒரு வழு அமைத்தல் பொருட்டு என்க. (29)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**29. 'யாது எவன்'-**

யாது என்ற வினாப்பெயர் 162ஆம் நூற்பாவில் உள்ளது. யாது என்னும் குறிப்பு வினைமுற்று இந்நூற்பாவில் உடம்பொடுபுணர்த்தலாகக் கூறப்பட்டுள்ளது. எவன் என்பது அஃறிணை இருபாற்கும் பொதுவான குறிப்புவினை (சொ.212).

'இப்பண்டியுள் உள்ளது எவன்' என உதாரணத்தில் ஒன்றன்பாலாக வந்துள்ளது. பண்டி - வண்டி.

ஏனைப்பால்உணர்த்தும்வினாப்பெயர்கள்யாவன், யாவள், யாவர் (சொ. 157) யாது, யா, யாவை (சொ. 162) என்பன. அவை அறிந்த பொருள் வயின் ஐயம் தீர்த்தற்கு வருவன. ஐயம் தீர்த்தல் வழுவமைதி என்பது இவர் கருத்து.

## கல்லாடனார் உரை

*31. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்*
*அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.*

என்-எனின், உலகத்துப் பொருள்தான் அறிந்த பொருள் என்றும், அறியாப் பொருள் என்றும் இருவகைத்து; அவற்றுள் அறியாப்பொருள்மேல் நிகழும் சொல்லது இலக்கணம் கூறுதல் என்றவாறு.

எ-டு : நும் நாடு யாது ? இப்பண்டி உள்ளது எவன்? என வரும்.

இவற்றுள் எவன் என்பது இக்காலத்து 'என்' என்றும், 'என்னை' என்றும் மருவிற்று.

'செறிய' என்றதனான் பிறவும் அவ்வினாப் பொருளிடத்து வருவன கொள்ளப்படும்.

எ-டு : யாவன், யாவள், யாவர், யார், யா, எப்பொருள் என இவை. எவன் என்பது அஃறிணை இருபாற்கும் உரியது (வினை: இயல்-21) எனினும், இதனானே ஒருமைப்பால்மேல் வருவதே பெரும்பான்மை என்பது 'உரையிற்கோடல்' என்பதனால் கொள்ளப்படும். (31)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**31. 'யாது . . . தோன்றும்.'-**

எவன் என்பது இருபாற்கும் உரித்தேனும் அஃறிணை ஒருமைக்கண் வருதலே பெரும்பான்மை.

## ஒருவர் உரை

***31. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்***
***அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.***

எ-து : யாது, எவன் என்னும் இரண்டு சொல்லும், தன்னால் அறியப்படாத பொருட்கண் வினாவாய்த் தோன்றும்.

எ-டு : நும் நாடு யாது? இப் பண்டி உள்ளது எவன் ? மடி உள்ளது யாது ? மடி உள்ளது எவன் ? கை உள்ளது யாது ? கை உள்ளது எவன் ? என வரும்.

இச்சொற்குப் பொருள் யாது? இச்சொற்குப் பொருள் எவன்? எனவும் வரும். 'எவன்' என்பது இக்காலத்து 'என்' என்றும், 'என்னை' என்றும் திரிந்து நடக்கும்.

'செறிய' என்றதனால், யாவன், யாவள், யாவர், யாது, யாவை எனவும், யாங்கு, யாண்டு, எப்பொருள் என இவையும் திணைபால் முதலியனவும் அறியப்படாதன அவ்விடத்துத் தோன்றும் என்பது கொள்க.

(வாக்கியம் பிழைபட்டுள்ளது) (31)

## ஒருவர் உரைவிளக்கம்

**31. 'யாது எவன் . . . தோன்றும்.'**

யாவன், யாவள், யாவர், யாது, யாவை என்பனவும் யாங்கு யாண்டு எப்பொருள் என்ற சொற்களும் திணைபால் முதலியன அறியப்படாத இடத்துத் தோன்றும் என்பது இவர் கருத்து.

## சாத்திரியார் உரை

**31. 'யாது . . . தோன்றும்.'**

'இச்சொற்குப் பொருள் யாது?' என்ற தொடரில் பொருள் என்பதற்கு அர்த்தம் என்று பொருள்கொண்டு பொருள் என்பதும் யாது என்பதும் அஃறிணையே ஆதலின் ஈண்டு வழுவமைதி எவ்வாறு எனின், பொருள் என்பதற்கு உயர்திணை அஃறிணை இரண்டற்கும் பொதுவான விஷயம் என்பதே பொருளாம் என்க. அஃதாவது 'இராமன் என்ற சொற்குப் பொருள் யாது?' என்ற வாக்கியத்தில் 'இராமன் என்ற சொல்லால் குறிக்கப்படுபவன் யாவன்' என்பது பொருள். அவ்வாறாயின் ஈண்டுப் பொருள் என்பது உயர்திணை ஆகையால், இராமன் என்ற சொற்குப் பொருள் யாவன் என்றுதான் கூறவேண்டும் என்பது பெறப்பட, அதனை விலக்கி, அங்கு 'யாது' என்றும் கூறலாம் என்பது கருத்து.

## பாலசுந்தரனார் உரை

**31. ' யாது . . . தோன்றும்.'**

செறியத்தோன்றும் - யாப்புறத் தோன்றும். (செறிவு நிறைவு)

எவன்என்பது 'என்' எனவும், 'என்னை' எனவும் வரும். 'என்ன' என்பது இழிவழிக்காம்.

இனி, யாது என்பது அஃறிணை ஒருமைச் சொல்லைக் குறித்து நின்றது அன்றோ எனின், தெரிந்து கூறும் வழியே அது சிறப்புச் சொல்லாம்; அல்லாதவழிப் பொதுச்சொல்லாம் என்பது வரும் சூத்திரத்தால் கூறுப.

## பதிப்பாசிரியர் குறிப்பு

*31.* 'எவன்' என்னும் குறிப்பு வினைப்பொருளில் 'என்ன' என்பதனை வழங்குதல் இழிவழக்கு என்று கருதுவாரும் உளர்.

## இளம்பூரணர் உரை

### யாது என்பதன் சிறப்பு

***32.*** ***அவற்றுள்,***
***யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி***
***அறிந்த பொருள்வயின் ஐயந்தீர் தற்குத்***
***தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.***

எ . . . ன், இறந்தது காத்தல் நுதலிற்று.

இ-ள்: அவற்றுள் யாது என்பது தன்னான் அறியப்பட்ட பொருட்கண் ஐயப்பட்டதனைத் தெளிதற்குச் சொல்லவும் பெறும் என்றவாறு.

உதாரணம் : நம் எருத்துள் யாது கெட்டது என வரும். உம்மை எதிர்மறை.

மற்று, இதுவும் அறியாப் பொருளாதல் ஒக்கும் பிற எனின், முன், யாதும் உணராததன்கண் சொல்லினான். அது முற்சூத்திரத்தோடு இதனிடை வேற்றுமை. முன்னர்ச் சூத்திரம், எவன் யாது என்று கூறற்பாலன்; எற்றுக்கு யாது எவன் எனக் கூறினான் எனின், யாது என்பதனைப் பின்னரும் இங்குக் கொணர்ந்து ஆராய்ந்தானாகலின். இவ்வாறு கூறாது குறிப்புக் கொண்டதனான், நமருள் யாவர் போயினர்? அவற்றுள் எவ்வெருது கெட்டது? என்பனவும் கொள்க. *(32)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாகிய 'எவன்' என்பதனை முன்னர்க் கூறி யாது என்பதனைப் பின்னர்க் கூறியிருந்தால், இந்த நூற்பாவில் எடுத்து விளக்குதல் எளிமையாக இருந்திருக்கும். அவ்வாறு கூறாமல், ஓர் உட்கருத்தை உள்ளத்துக் கொண்டு 'யாது எவன்' என்று கூறியதனான், 'நமருள் யாவர் போயினார்' 'அவற்றுள் எவ்வெருது கெட்டது' என அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்கு யாவர், எகரவினாவோடு இணைந்த பெயர் முதலியனவும் கொள்ளப்படும்.

குறிப்புக் கோடல் - ஓர் உட்கருத்தை உள்ளத்துக் கொண்டு தெரிவித்தல்.

## சேனாவரையர் உரை

### அவற்றுள் 'யாது' என்னும் சொல்

***32. அவற்றுள்,***
***யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி***
***அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத்***
***தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.***

*(இ-ள்)* : கூறப்பட்ட இரண்டனுள் யாது என்னும் வினாச்சொல் அறியாப் பொருள்வினா ஆதலே அன்றி அறிந்த பொருட்கண் ஐயம் நீக்குதற்கு ஆராய்ந்த சொல் ஆதலும் உரித்து என்றவாறு.

*(எ-டு)* : இம்மரங்களுள் கருங்காலி யாது? நம் எருது ஐந்தனுள் கெட்ட எருது யாது? என வரும்.

நமருள் யாவர் போயினார், அவற்றுள் எவ்வெருது கெட்டது எனப் பிறவும் அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத் தெரிந்த கிளவியாய் வருதலின், அவையும் ஈண்டு

அமைக்கற்பால எனின், அவை அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்கு அல்லது யாண்டும் வாராமையின் ஈண்டு அமைக்கப்படா என்பது.

இதனான் வினாவழு அமைத்தார். (32)

## நச்சினார்க்கினியர் உரை

### யாது என்பதன் சிறப்பு

*32. அவற்றுள்,*
*யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி*
*அறிந்த பொருள்வயின் ஐயந்தீர் தற்குத்*
*தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.*

இஃது அவற்றுள் ஒன்று அறிந்தவழியும் வரும் என்று மரபு கூறுகின்றது.

இ-ள்: யாது எனவரூஉம் வினாவின் கிளவி - அக்கூறப் பட்ட இரண்டனுள் யாது என்னும் வினாச்சொல் அறியாப் பொருளை வினாதலே அன்றி; அறிந்தபொருள்வயின் ஐயம் தீர்தற்குத் தெரிந்தகிளவி ஆதலும் உரித்து - அறிந்த பொருட் கண் ஐயம் தீர்தற்கு ஆராய்ந்த சொல் ஆதலும் உரித்து என்றவாறு.

உதாரணம் : நம் எருது ஐந்தனுள் கெட்ட எருது யாது? எனவரும்.

இஃது அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தலின் வழுஅமைதி அன்று. முன்னிற் சூத்திரத்துள் யாது என்பதனை இச்சூத்திரத்தொடு பொருந்தப் பின் வையாததனான் செறியத் தோன்றாதனவற்றினும் வருவன கொள்க.

நமருள் யாவன் போயினான்?
என எல்லாவற்றோடும் ஒட்டுக.

இனிக் 'கடிசொல் இல்லை' சொ. 452 என்பதனான்,

நமருள் எவன் போயினான்?

அவற்றுள் எவ்வெருது கெட்டது?

என்பனவும் கொள்க.

உம்மை எதிர்மறை ஆகலான், ஐயத்ததாய் நிற்றல் வலியுடைத்து. (32)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**32, அவற்றுள், யாதுஎன -**

இந்த நூற்பாவில் யாது என்பதற்கு எய்தியதன்மேல் சிறப்புவிதி கூறலின் சென்ற நூற்பாவில் 'எவன் யாது' என்று கூறியிருக்கவேண்டும்; அங்ஙனம் கூறாததனை ஓர் இலேசாகக் கொண்டு யாவன் முதலியனவும் அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்த்தற்கு வரும் என்பது கொள்ளப்பட்டது.

'எகர முதல் வினாவின் இகர இறுதியும்' எ. 159

என ஆசிரியர் எகரம் வினாப்பொருளில் வருவதனை உடம்பொடு புணர்த்துக் கூறியதனொடு

'சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்' எ. 334

என்புழி எகரம் புறத்துறுப்பாய் வந்து வினாப்பொருள் தருவதனையும் உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளார். ஆதலின் அவ்விரண்டனையும் உட்கொண்டு பிற்காலத்தார் எவன், எவ்வெருது முதலிய சொற்களையும் பயன் படுத்துதல் 'கடிசொல் இல்லை' சொ. 452 என்ற நூற்பாவான் கொள்ளப்பட்டது.

'தெரிந்த கிளவி ஆதலும்' என்புழி, 'ஆதலும்' என்ற உம்மை பெரும்பாலும் வழக்கில் இல்லை என்று தெரிவித்தலின், யாது என்பது அறியாப்பொருள் வயின் செறியத் தோன்றுதற்கே பெரும்பாலும் ஏற்றது.

## தெய்வச்சிலையார் உரை

***30. அவற்றுள்,***
***யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி***
***அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத்***
***தெரிந்த கிளவி ஆகலும் உரித்தே.***

வினாவழு அமைத்தலை நுதலிற்று.

இ-ள்: மேல் சொல்லப்பட்டவற்றுள், யாது என்று சொல்லப்பட்ட அறியாத பொருண்மைக்கண் நிற்கும் சொல், அறிந்த பொருட்கண் ஐயம் தீர்தல் பொருட்டு ஆராய்ந்த சொல் ஆகலும் உரித்து எ-று.

உம்மை எச்சவும்மை ஆகலான், ஐயம் அறுத்தலே அன்றி, அறிவு ஒப்புக் காண்டல் பொருட்டும் வினாவப்படும் என்றும் கொள்க.

ஐயம் அறுத்தல் ஆவது, இச்சொற்குப் பொருள் இது என உணர்ந்தான் ஒருதலை ஆகத் துணிதல் ஆற்றாது, அஃது அறிவான் ஒருவனை வினாதல்.

அறிவு ஒப்புக்காண்டல் ஆவது, சொல் இலக்கணம் அறிவான் ஒருவனை இதற்குப் பொருள் யாது என வினாதல். பிறவும் அன்ன.

இவ்வாறு அறிந்த பொருளை வினாதல் வழுஆயினும் அமைக என்றவாறு. (30)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**30. அவற்றுள், யாது -**

ஐயம் அறுத்தல் - இதுவோ அதுவோ என்று யாதானும் ஒருமுடிவுக்கு வாராதபடி அமைந்த ஐயத்தைப் போக்குதல். (ஒருதலை - உறுதி)

அறிவு ஒப்புக்காண்டல் - தன் கருத்தை வினாவப் பட்டான் கூறும் கருத்தோடு ஒப்பிட்டு உயர்வு தாழ்வு நோக்குதல்.

அறிபொருள் வினா ஒரு பயன்நோக்கி வினாவப் பட்டமையின் வழுவமைதி என்பது இவர் கருத்து. வினாவுக்கு வழு அமைதி இன்று என்ற கருத்தில் 'செப்பே' (15) என்பதில் உள்ள ஏகாரம் சிறப்புப் பொருளது என்று குறிப்பிட்ட இவர் வினாவழுவமைதி கூறியது ஆராயத்தக்கது

**கல்லாடனார் உரை**

*32. அவற்றுள்,*
***யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி***
***அறிந்த பொருள்வயின் ஐயந்தீர் தற்குத்***
***தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.***

என்-எனின், மேல் அறியாப் பொருள்மேல் நிகழும் என்ற மரபு இலக்கணம் கூறிய சொற்களுள் ஒன்றற்குச் சிறிது அறிந்தவழியும் வருமரபும் உண்டு என்று அறிந்து அது காத்தல் நுதலிற்று.

இ-ள்: மேல் வினாவப்பட்ட இரண்டனுள்ளும், யாது என்று சொல்ல வருகின்ற வினாப்பொருளை உணர நின்ற சொல், அறிந்த பொருளிடத்து உண்டாகிய ஐயம் தீர்தற்கு ஆராய்ந்த சொல் ஆதலும் உரித்து என்றவாறு.

எ-டு : ஒருவன் ஐந்து எருது உடையான். காப்பக் கொடுத்தவற்றுள் ஒன்று கெட்டது என்று காப்பான் சொன்னஇடத்து, எருது உடையான் வெள்ளை, காரி என்னும் ஐயம் தீர்தல்பொருட்டு 'அவற்றுள் யாது?' என்று வினாதல் என்பது.

மேல்சூத்திரத்துப் பின்தொடர்பு உடையது என்ப தனைப் பின்வைக்கற் பாற்று என்பதனான், இத்தோடு இயைபு உடைய யாது என்பதனை எவனின் பின்வையாது முன்வைத்த

முறையன்றிக் கூற்றினான், அச்சூத்திரத்து எடுத்தோத்தான் இலேசான் கொள்ளப்பட்டனவும் அறியாப் பொருளிடத்து ஐயம் தீர்த்தற்கும் வரும் எனக் கொள்க.

எ-டு : நமருள் யாவன் போயினான்? அவற்றுள் எவ்வெருது கோட்பட்டது ? என்றாற்போல்வன.

இச்சூத்திரத்தால் கூறியது வழுஅமைதி அன்றோ எனில், முன்பு அறியாப் பொருள் என்றதும் ஒருவகையானும் அறியாமை என்பது இன்மையின், அதனைப் பார்க்க இது சிறுபான்மை என்பதுஅல்லது வழு என ஆகாது என உணர்க.

இவற்றால் சொல்லியது, வினாப்பொருள்மேல் நிகழும் சொற்களது பெரும்பான்மை சிறுபான்மை மரபு இலக்கணம் என உணர்க. (32)

## கல்லாடனார் உரைவிளக்கம்

### 32. 'அவற்றுள், யாது . . . உரித்தே.'

காப்பான், சொன்னவிடத்து எருதுடையான் வினாதல்- எருதுகளைமேய்த்து நீராட்டி வருமாறு நியமிக்கப் பட்ட மாடு மேய்ப்பவன், அவற்றை உடைமையாக உடையவனிடத்துச் சென்று ஓர் எருது காணாமல் போய் விட்டது என்றபோது அவ்வுடைமையாளன் வினவுதல்.

யாது என்பது அடுத்த நூற்பாவில் எடுத்துச் சிறப்பு விதி கூறப்படுதலின் முதல், நூற்பாவில் 'எவன் யாது' என 'எவன்' என்பதன் பின் வைத்திருக்கவேண்டும். அவ்வாறு கூறாத இலேசினான், யாவன் முதலியன அறியாப் பொருள்வயின் வரும்.

இந்நூற்பா வழுவமைதியன்மை விளக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

32. *அவற்றுள்,*

***யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி***
***அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத்***
***தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.***

*எ-து : யாது என்னும் வினாச்சொல் அறியாப் பொருளை வினாவுதலே அன்றி அறிந்த பொருட்கண் ஐயம் தீர்த்தற்கு ஆராய்ந்த சொல் ஆதலும் உரித்து.*

எ-டு : நம் எருது ஐந்தனுள் கெட்ட எருது யாது? - என வரும்.

'தெரிந்த கிளவி ஆதலும் உரித்து' என்றதனான், நமருள் யாவன் போயினான் என ஐந்தனோடும் ஒட்டுக.

'கடிசொல் இல்லை' (எச்ச-56) என்பதனான், நமருள் எவன் போயினான்? அவற்றுள் எவ்எருது கெட்டது- என்பனவும் கொள்க. (32)

## ஒருவர் உரைவிளக்கம்

**32. 'அவற்றுள் . . . உரித்தே.'**

நமருள் யாவன் போயினான், யாவள் போயினாள், யாவர் போயினார். நம் எருதினுள் யாது கெட்டது, யாவை கெட்டன - என ஐம்பாலோடும் இணைத்துக் கூறப்பட்டது. எவன் என்ற ஆண்பால் வினாப்பெயரும் எவ்வெருது என்ற எகர வினாவும் பிற்காலத்தன என்பது இவர் கருத்து. எகரம் தொல்காப்பியத்திலேயே 'எகரமுதல் வினா' (எ. 159) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாத்திரியார் உரை

*32. 'அவற்றுள் . . . உரித்தே.'*

சேனாவரையர் இதனால் வழு அமைத்தார் என்றார். நச்சினார்க்கினியர் இஃது அறிந்த பொருட்கண் ஐயம் தீர்த்தலின் வழுவமைதி அன்று என்றார். இது சிறப்புச் சூத்திரம் ஆகையால், நச்சினார்க்கினியர் சொல்வதே பொருத்தம் என்று தோன்றுகிறது.

## பாலசுந்தரனார் உரை

**32. 'அவற்றுள் யாது . . . உரித்தே.'**

தெரிதலாவது அஃறிணை ஒருமைப் படர்க்கை எனத் தெரிதல். எனவே, 'எவன்' என்பது அறியாப் பொருள்வயின் மட்டுமே வரும் என்பதாயிற்று.

யாது என்பது அறியாப் பொருள்வயின் வருமிடத்து ஒருமை பன்மை தெற்றெனத் தோன்றாத பொருள் பற்றியே வரும் என்பது இதனான் உய்த்துணரவைத்தமை காண்க.

இனி, 'கடிசொல் இல்லை' (சொ. 453) என்பதனான் 'நமருள் எவன் போயினான் எனவும், அவற்றுள் எவ்வெருது கெட்டது எனவும் வருதல் கொள்க' என்பர் நச்சினார்க்கினியர். 'யாவன் போயினான்' என்பதே தொல்காப்பிய மரபு. எகரம் வினாப்பொருளில் வருவது இடைக்கால வழக்கு. எந்த என்பது இழிவழக்கு என்பது அறிக.

## பதிப்பாசிரியர் குறிப்பு

*32.* யாவன் என்னும் ஆண்பால் பெயர்ச்சொல் 'எவன்' என்று வழங்குதல் இடைக்கால வழக்கு. எப்பொருள் என்பதனை எந்தப் பொருள் என வழங்குதல் இழிவழக்கு என்பாரும் உளர்.

## இளம்பூரணர் உரை

### இனைத்து என அறிந்த சினைமுதல் கிளவி

*33. இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு*
*வினைப்படு தொகையின் உம்மை வேண்டும்.*

*எ . . . ன், வரையறைப் பொருட்கண் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று; மரபு வழுக்காத்தது எனினும் அமையும்.*

*இ-ள்: இத்துணையென்று வரையறுக்கப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லு மிடத்து இறுதி உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.*

*உதாரணம் : நம்பி கண்ணிரண்டும் நொந்தன,*
*நங்கை முலையிரண்டும் வீங்கின*
*என வரும்.*

*சினைக் கிளவிக்கு உம்மை கொடாவிடின், பிறவுங் கண்ணும் முலையும் உளஆவான்செல்லும் ஆகலான் உம்மையின்றிக் கூறுதல் மரபு அன்று.*

*இனி, முதற்கிளவி வருமாறு: தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் - எனவரும்.*

*'இருதிணை மருங்கின் ஐம்பாலும் அறிய' (கிளவி. 10) என்னாது 'இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய' (கிளவி. 10) என்று சூத்திரம் செய்தானால் ஆசிரியனேனும், செய்யுட்கண் உம்மையின்றி வருதற்கு உடம்பொடு புணர்த்தான் என்றலும் ஒன்று.*

*இனிச் சூத்திரத்தில் சினை முதற்கூறிய முறையன்றிக் கூற்றினான், உம்மை இன்றி வருவனவும் உள என்பது. உம்மையைத் தொகுத்துக் கூறினான் என்பாரும் உளர். (33)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**33. 'இனைத்தென அறிந்த' -**

உம்மை கொடாவிடின் இவ்வளவுதான் என்ற வரையறை புலப்படாது ஆதலின் உம்மை வேண்டும். ஆசிரியர் உம்மை இன்றியும் வரலாம் என்பதனை உடம்பொடு புணர்த்துக் கூறினார். உடம்பொடு புணர்த்த லாவது, நேரிடையாக ஒரு செய்தியை நூற்பாவில் அமைத்துக் கூறாது, தாம் வரைந்த நூற்பா அமைப்பில் அச்செய்தியை அமைத்து, அதனைச் சான்றோர் விதி போலவே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதனைத் தெரிவித்தலாம். இத்தகைய உடம்பொடுபுணர்க்கும் உத்திவகைகள் தொல்காப்பியத்தில் பலவாக உள்ளன.

இளம்பூரணச் சுவடிகள் சிலவற்றில் 'சினைமுதற் கிளவி' என்றே பாடம் உள்ளது. தெய்வச்சிலையார் பாடமும் அதுவே. நன்னூலாசிரியரும் 'இனைத்து என்று அறிபொருள்' என்றே நூற்பா யாத்தார். அடுத்த நூற்பாவில் 'மன்னாப் பொருளும்' என்றே உள்ளது. அதனான் 'சினை முதற் கிளவி' என்ற பாடமே இங்கு ஏற்றது. முதலை முன்னரும், சினையைப் பின்னரும் கூறுதலே முறையான கூற்றாகும். 'சினை முதல்' என்பது முறை அல்லாக் கூற்றாகும். இறையனார் களவியல் 7ஆம் நூற்பா உரையுள் இந்நூற்பா மேற்கோளாக வந்துள்ளது. 'அம்மூன்று என்ப தோழிக்கு உணர்ச்சி' என்புழி, மூன்றும் என்ற உம்மை, தொகுத்தற்கு இலக்கணம் உண்மையின் தொகுத்துக் கூறப்பட்டது என்ற செய்தி உள்ளது.

## சேனாவரையர் உரை

### சினை முதல் சொற்கள் அமையும் வகை

***33. இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு***
***வினைப்படு தொகையின் உம்மை வேண்டும்.***

*(இ-ள்)* : கேட்போரான் இத்துணை என்று அறியப்பட்ட சினைக்கிளவிக்கும், முதற்கிளவிக்கும் வினைப்படு தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

*(எ-டு)* : 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி' *(திருமுருகா-118)* எனவும், 'முரசுமுழங்கு தானை மூவரும் கூடி' *(பொருந-54)* எனவும் வரும்.

'அறிந்த சினை முதற் கிளவி ' எனவே, முன் அறியப் படாக்கால், முருகற்குக் கை பன்னிரண்டு, தமிழ்நாட்டிற்கு வேந்தர் மூவர் என உம்மை பெறாது வரும் என்பதாம்.

ஐந்தலை நாகம் உடன்றது, நான்மறை முதல்வர் வந்தார் என்புழி, இனைத்தென அறிந்த சினை முதற் கிளவி ஆயினும், வினைப்படு தொகுதி அன்மையின், உம்மை பெறா ஆயின. அஃதேல், பன்னிருகையும் என்புழியும், தொகுதிப் பெயர் வினையொடு தொடராது கை என்பதனோடு ஒட்டி நிற்றலின், வினைப்படு தொகுதி அன்றாம் பிற எனின், ஒட்டி நின்றது ஆயினும், ஐந்தலை நாகம், நான்மறை முதல்வர் என்பன போலாது, இரு சொல்லும் ஒரு பொருள்மேல் வருதலின், கை என்பதனோடு இயைந்த இயற்றி என்னும் வினை தொகுதிப் பெயரொடும் இயைந்ததாம்; அதனான் அது வினைப்படு தொகுதியாம் என்பது. அஃதேல், கண்ணிரண்டும் குருடு, எரு திரண்டும் மூரி எனப் பெயர் கொண்ட வழி உம்மை பெறுமாறு என்னை எனின், பெயராக, வினையாக, முடிக்கும் சொல்லொடு படுதலை ஈண்டு வினைப்படுதல் என்றார் ஆகலின், அவையும் வினைப்படு தொகுதியாம் என்க. ஐந்தலை, நான்மறை என்பவற்றிற்கு நாகம், முதல்வர் என்பன முடிக்கும் சொல் அன்மையின் வினைப்படு தொகுதி ஆகாமை உணர்க.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்' என்பதனால் சினைமுதற் கிளவி என்றார் ஆயினும், சிறவாத பண்பு முதலாயினவும் கொள்ளப்படும்.

(எ-டு) : சுவை ஆறும் உடைத்து இவ்வடிசில், கதி ஐந்தும் உடைத்து இக்குதிரை எனவரும்.

'இருதோள் தோழர் பற்ற' எனவும், 'ஒண்குழை ஒன்று ஒல்கி எருத்தலைப்ப' எனவும் உம்மை இன்றி வந்தனவால் எனின், ஆண்டு உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன என்பது. (33)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**33. இனைத்தென . . . வேண்டும்.-**

***'பன்னிருகையும் பாற்பட இயற்றி'*** முருகு.118

'கைகள் பன்னிரண்டும் ஆறுமுகங்களின் பகுதியிலே பொருந்து மாறு செயற்படுத்தி' என்பது பொருள்.

***'முரசு முழங்குதானை மூவரும் கூடி'*** பொருந. 54

முரசங்கள் ஒலிக்கும் படைகளை உடைய சேர பாண்டிய சோழர் என்ற மன்னர் மூவரும் ஒன்றுசேர்ந்து என்பது பொருள்.

ஐந்தலை நாகம் - ஐந்துதலைகளை உடைய நாகம்
நான்மறை முதல்வர் - நான்கு மறைகளை வல்ல முதற்றொகுதியினர்
ஐந்தலை என்பதற்கு உடைய என்பதே முடிக்குஞ்சொல்; நாகம் அன்று.
நான்குமறை என்பதற்கு வல்ல என்பதே முடிக்குஞ்சொல்; முதல்வர் அன்று.
வினைப்படுதொகுதி - முடிக்குஞ்சொல்லொடு கூடி இருத்தல்.
சுவை என்பது பண்பு. கதி என்பது தொழில். மூரி - கிழம்.
ஐங்கதி - விக்கிதம் வற்கிதம் வெல்லும் உபகண்டம்
மத்திபம் சாரியோடு ஐந்து. (சீவக. 784 - நச்.)

## நச்சினார்க்கினியர் உரை

### இனைத்தென அறிந்தவற்றிற்கு உம்மை

**33. இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு
வினைப்படு தொகையின் உம்மை வேண்டும்.**

இது வரையறை உடையது தொகைபெறும்வழிப் படுவது ஒரு மரபு கூறுகின்றது.

இ-ள்: இனைத்து என அறிந்த சினைமுதல் கிளவிக்கு - கேட்போரான் இத்துணை என்று அறியப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும்; வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும் - முடிக்கும் சொல்லொடு படும் தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : நம்பிகண் இரண்டும் நொந்தன
தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்

எனச் சினை முதல் கிளவிகள் தாமே வினைப்பட்டமையின், உம்மை வேண்டின.

'பன்னிருகையும் பாற்பட இயற்றி' (முருகு 118)

இது பிறவினைப்படுத்தினது.

'முரசுமுழங்கு தானை மூவரும் கூடி' (பொருந. 54)

இது தானே வினைப்பட்டது. பன்னிரண்டு என்னும் தொகுதியும், கையும் 'இயற்றி' என்பதன்மேல் வருதலின், 'கை' என்பதனோடு இயைந்த 'இயற்றி' என்னும் வினை தொகைப்பெயரோடும் இயைந்ததாம். 'ஐந்தலை நாகம் உடன்றது' என்பதற்கு 'நாகம்' வினைப்படு தொகுதி அன்று, முடிக்கும் சொல் அன்மையின்.

இனிக் 'கண் இரண்டும் குருடு' 'எருது இரண்டும் மூரி' எனப் பெயர் கொண்டவழிப் பெயரும் முடிக்கும் சொல்லேயாம். 'சுவை ஆறும் உடைத்து இவ் அடிசில்' 'கதி

ஐந்தும் உடைத்து இக்குதிரை' எனச் சிறவாத பண்பு முதலியன பற்றி வருவனவும் கொள்க.

'இருதோள் தோழர்பற்ற' என்பது பிறரால் வினைப் படுக்கப்பட்டது. இதற்கு உம்மை விகாரத்தால் தொக்கது, செய்யுள் ஆதலின். இத்தனை என்று அறியாக்கால் முருகற்குக் கை பன்னிரண்டு என உம்மை பெறாதாம்.

'ஒண்குழை ஒன்று ஒல்கி எடுத்து அலைப்ப'
என்பது, ஒன்றேனும், இனைத்தென அறிதலின் உம்மை வேண்டும்; அது விகாரத்தால் தொக்கது. (33)

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**33. இனைத்துளன -**

உரையாசிரியர்கள் அனைவரும் இனைத்து என்பதற்கு இத்துணை என்றே பொருள் செய்துள்ளனர். இத்துணைத்து என்று பொருள் செய்யவில்லை. எனவே, இனைத்து என்பது ஒருமைக்கொப்பாகவும், இனைய என்பது பன்மைக்கொப் பாகவும் இருக்கலாம். இங்கு 'இனைத்து' என்பது சாதி ஒருமையாகக் கொள்ளப்பட்டது போலும்.

நோதல் - சினைகளாகிய கண்களின் தொழில்.

வருதல் - முதற்பொருள்களாகிய வேந்தரின் தொழில்.

'பன்னிரு கையும் பாற்பட இயற்றி'-

'பன்னிரண்டு கைகளையும் முறையே ஆறுமுகங்களின் பகுதிகளில் பொருந்துமாறு செயற்படச் செய்து'

'கைகள் பன்னிரண்டும்' என்பது 'பன்னிருகையும்' என இரு பெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கை என்னும் ஒருபொருள்மேல் வருதலின், கை என்பதன் முடிக்கும் சொல்லாகிய 'இயற்றி' என்பது பன்னிரண்டு என்ற தொகைப் பெயருக்கும் முடிக்குஞ் சொல்லாதற்குப் பொருந்தும்.

ஐந்தலை நாகம் என்பது ஐந்து தலையை உடைய நாகம் என்று பொருள்படுதலின் 'உடைய' என்ற முடிக்குஞ்சொல்

தொக்குள்ளது. நாகம் என்பது தலை என்பதற்கு முடிக்கும் சொல் அன்று. மூரி-கிழம்.

**குதிரையின் கதி ஐந்து** - சுவரிதகம், ஆக்கிரந்திகம், வல்கிதம், இரேசிதம், புலிதம் என்பன. இவை முறையே மெல்லிய நடை, விரைவு நடை, இருகால் தூக்கி ஆடி வருநடை, சுற்றி ஓடல், முழு ஓட்டம் என்பன. இவற்றுள் முழு ஓட்டம் ஆதி எனவும், வட்டமாய் ஓடல் மாதி எனவும் கூறப்படும். *(கலி. 96- நச்.)*

**குதிரையின் பஞ்சகதி** - மயூரகதி, மல்லகதி, வானரகதி, விடபகதி, வியாக்கிரகதி என்றும் கூறப்படுகின்றன.

'கடுவன் முதுமகன் கல்லா மூலன்
வதுவை அயர்ந்த வன்பறழ்க் குமரி
இருதோள் தோழர் பற்ற '-

'குரங்குகளுள் ஆண்டில் மூத்த குரங்கு, மரம் ஏறுதல் தொழிலன்றிப் பிறதொழிலைக் கல்லாத மூலன் என்ற குரங்கிற்குத் திருமணம் செய்து வைத்த வலிய குட்டிக் குரங்கின் இருதோள்களையும் மகிழ்ச்சியால் அக்குரங்கின் தோழர்களான குரங்குகள் தழுவ'

இத்தொடரில் இருதோள்களையும் பற்றும் தொழில் மற்ற குரங்குகளால் செய்யப்பட்டது. இருதோள்களையும் என்னும் உம்மை செய்யுள் விகாரத்தான் தொக்கது.

**அறுசுவை** - கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு என்பன.

*'ஒண்குழை ஒன்று ஒல்கி எடுத்தலைப்ப'*

*'கண்கவியாச் சென்றுஅமர்ப்பக் கைந்நாஞ்சில்மேல்அசைஇ*
*ஒண் குழைஒன்று ஒல்கி எடுத்துஅலைப்ப - ஒண்சுடர்ப்பூண்*
*நேர்மலர்த் தார்ஐவர் நீர்மை உடைத்ததே*
*நீர்மலிப்பூண் வெள்ளை நிலை.*

இது பாரதப்போரில் குருக்கேத்திரத்தில் வீமன் குருகுலவேந்தனான துரியோதனனின் குறங்கறுத்த ஞான்று, தீர்த்தயாத்திரையினின்றும் மீண்ட பலராமன், அப்போர்க் களம் போந்து, கதையால் அபராங்கத்தில் அடிபட்டுச் சாய்ந்து கிடந்த துரியோதனனைக் கண்டபோது, பாண்டவர் மனம் பதறிய செய்தியைக் கூறுகிறது.

நீரிலே மேம்பட்டுத் தோன்றின முத்தாலான அணி கலன்களை அணிந்த , வெண்ணிறத்தவனான பலராமன் தன் கண்கள் குனிந்து போர்க்கள நிகழ்ச்சியை நோக்கவும், கையினைத் தன் கலப்பைப்படைமேல் வைத்துக்கொண்டு, தலை குனிந்து நோக்கியதால் தன் ஒற்றைக்குழை கழுத்துப் பக்கம் சாய்ந்து ஊசலாட நின்ற நிலையானது, சிறந்த மலர்மாலை அணிந்த பாண்டவருடைய மனஉறுதியைத் தகர்த்தது.

பலராமன் 'ஒருகுழை ஒருவன்' என்று எல்லோராலும் போற்றப்படுபவன். அவன் ஒற்றைக் குழையினன் என்று உலகு அறிதலின் 'ஒண்குழை ஒன்றும் ஒல்கி' என உம்மை வேண்டும். அது விகாரத்தான் தொக்கது.

'இனைத்தென **அறிந்தபின்** உம்மைவேண்டும்' என்பது 'இனைத்தென **அறிதலின்** உம்மை வேண்டும்' என்று இருத்தல் வேண்டும்.

## தெய்வச்சிலையார் உரை

**31. *இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவி***
***வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.***

ஒருசார் செப்புவழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: இத்துணை என வரையறுக்கப்பட்ட சினைக் கிளவியும் முதல்கிளவியும் தொழில்படு தொகுதிக்கண் உம்மை பெறல்வேண்டும் எ-று.

எனவே, தொழில்படாத் தொகை இயல்புஆகி வரப் பெறும் என்பது பெறுதும்.

உ-ம் : தேவர் முப்பத்து மூவரும் வந்தார்; நங்கை முலை இரண்டும் நல்ல : இவை தொழில்பட்ட தொகை. தேவர் முப்பத்துமூவர், ஆவிற்கு முலை நான்கு : இவை தொழில்படாத் தொகை.

'கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு - வதுவை வந்த வன்பறழ்க் குமரி - இருதோள் தோழர் பற்ற' என்புழி உம்மை வந்தது அன்றால் எனின், ஆண்டு எஞ்சிநின்றது என்க. *(31)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**31. 'இனைத்தென'-**

தொழிற்படு தொகுதி - வினையைக் கொண்டு முடிய அதனோடு இணைந்து வருதல்.

தேவர் முப்பத்து மூவர் - உருத்திரர் பதினொருவர், ஆதித்தர் பன்னிருவர், வசுக்கள் எண்மர், அசுவினிதேவர் இருவர் ஆக முப்பத்துமூவர்.

தேவர் முப்பத்துமூவர், ஆவிற்கு முலை நான்கு - இவை முடிக்கும் சொல்லோடு இணைந்து வாராதவை.

***கடுவன் முதுமகன்*** - ஆண்குரங்குகளுள் ஆண்டு மூத்த குரங்கு, மரம் ஏறுதல் தொழிலன்றிப் பிறவற்றைக் கல்லாத மூலன் என்ற குரங்கிற்கு மணம் செய்து கொடுப்பதற்காக வளர்த்துவந்த பெண்பால் குட்டிக்குரங்கின் இருதோள்களையும் அதன் தோழமைக் குரங்குகள் தழுவ. இருதோளும் என்ற உம்மை செய்யுள் விகாரத்தான் தொக்கது..

## கல்லாடனார் உரை

**33. *இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு வினைப்படு தொகையின் உம்மை வேண்டும்.***

என்-எனின், இன்னும் உலகத்துப் பொருள்தான் வரையறை உள்ளதூஉம் இல்லதூஉம் என இருவகைத்து. அவற்றுள் வரையறை உள்ளது தொகை பெறும்வழிப் படுவதொரு மரபு இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

இ-ள்: இத்துணை என்று வரையறுக்கப்பட்ட சினைக்கிளவியும் முதற்கிளவியும், தம்மை மேலொரு வினையொடு படுத்துச் சொல்லுவதாக அதற்குத் தொகை கொடுத்துக் கூறுமிடத்து, அத்தொகைச்சொல் இறுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுதலை வேண்டும் எ-று.

எ-டு : நம்பி கண் இரண்டும் நொந்தன, நங்கை முலை இரண்டும் வீங்கின: இவை சினைக்கிளவி. தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், முப்பத்துமூவரும் வந்தார்: இவை முதற்கிளவி.

'வினைப்படு தொகுதி' என்றமையான், தொகை கொடாத வினைப்பாட்டின்கண் உம்மை இன்றியும், கண் நொந்தது-கண் நொந்தன-என வரும்.

'இருதோள் தோழர் பற்ற' எனவும், 'ஒண்குழை ஒன்று ஒல்கி' எனவும் உம்மை இன்றியும் வந்தனவும் உளவால் எனின், அவை செய்யுள்; தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதனான் தொக்குநின்றன. இவ்வாறு வழக்கினுள் இல்லை என்று உணர்க.

'இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய' (கிளவி-10) என்ற சூத்திரத்துள்ளும் உம்மை இன்றி வந்தது, உடம்பொடு புணர்த்தல் என்பதனான். செய்யுளுள் உம்மை இன்றி வருவனவும் உள என்றலும் ஒன்று. இது சிறுபான்மை.

இனி வினைப்படாத பெயர்ப்பாட்டின்கண், தமிழ் நாட்டு மூவேந்தர் இவர் எனினும் அமையும் என்பது. *(33)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**33. 'இனைத்துஎன . . . வேண்டும்.'-**

தொகை கொடாத வினைப்பாட்டின் - தொகை கொடுக்கப்படாத சொற்கள் வினைச்சொல்லைத் தம்மை முடிக்குஞ்சொல்லாகக் கொள்ளுமிடத்து.

செய்யுளுள் உம்மை தொக்கு வரலாம். ஆனால் வழக்கினுள் தொக்கு வருதல் கூடாது. செய்யுளுள் உம்மை தொக்கு வருதல் சொ. 10ஆம் நூற்பாவில் உடம்பொடு புணர்த்துக் கூறப்பட்டது. செய்யுளுள்ளும் உம்மை இன்றிவருதல் சிறுபான்மையே.

வினைப்படாத பெயர்ப்பாடு - முடிக்கும் சொல்லாக வினைச்சொல் அமையாது பெயர் அமைதல்.

## ஒருவர் உரை

***33. இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு வினைப்படு தொகையின் உம்மை வேண்டும்.***

எ-து : இத்துணை என்று வரையறுக்கப்பட்டு நின்ற சினைக்கிளவிக்கும், முதல் கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லும்இடத்து இறுதி உம்மை கொடுத்துச் சொல்லுக.

எ-டு : நம்பி கண் இரண்டும் நொந்தன, நங்கை முலை இரண்டும் வீங்கின - சினைக்கிளவி உம்மை பெற்றவாறு.

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், முப்பத்து மூவரும் வந்தார், நமர் நால்வரும் வந்தார் - முதல்கிளவி உம்மை பெற்றவாறு.

அன்றியும், 'பன்னிருகையும் பாற்பட இயற்றி' (திருமுருகு-118) எனவும், 'முரசுமுழங்கு தானை மூவரும் கூடி' (பொருந-54) எனவும் சினையும் முதலும் செய்யுளில் உம்மை பெற்றவாறு.

இனி, 'எருமை நாற்கால் நீர்க்கீழ் வரும்' எனவும், 'இருதோள் தோழர் பற்ற' எனவும்,

'கண்கவியாச் சென்றிமைப்பக் கைந்நாஞ்சில் மேல்அசைஇ
ஒண்குழைஒன்று ஒல்கி எருத்துஅலைப்ப-ஒண்சுடர்ப்பூண்
நேர்மலர்த் தார்ஐவர் நீர்மை உடைத்ததே
நீர்மணிப்பூண் வெள்ளை நிலை'

எனவும் இவை உம்மை இல்லை எனின், செய்யுள் ஆதலின் தொக்கது என்க. *(33)*

### ஒருவர் உரைவிளக்கம்

33. **'இனைத்தென . . . வேண்டும்.'**-

எருமையின் நாற்காலும், இருதோளும், ஒண்குழை ஒன்றும் என வரும் உம்மைகள் செய்யுளாதலின் தொக்கன.

### சாத்திரியார் உரை

*33.* 'இனைத்தென . . . வேண்டும்.'-

இங்கு வினை என்பதற்கு முடிக்கும் சொல் என்பது பொருளாகும். ஆகவே, வினைப்படு தொகுதி என்பதற்கு முடிக்கும் சொல்லொடு பொருந்திய சொற்றொகுதி என்பதும், அஃது உத்தேசியம் ஆகும் என்பதும் பெறப்படும். படவே, சூத்திரத்திற்கு இனைத்தென அறிந்த சினைக் கிளவியும், முதற்கிளவியும் உத்தேசியமாக இருப்பின், அவற்றின் இறுதியில் உம்மை கொடுக்க வேண்டும் என்பதே முடிவான பொருளாகும். அவ்வாறாயின் 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி' என்புழிப் பன்னிருகையும் என்பது உத்தேசியம் ஆகையால் ஆசங்கைக்கு இடம் இன்று. ஐந்தலை நாகம் உடன்றது என்றுமிடத்து, இனைத்தென அறிந்த சினைக்கிளவியாகிய தலை உத்தேசியமாகாது உத்தேசிய மாகிய நாகம் என்பதற்கு விசேடணமாகையால் அங்கும்

உம்மை வருவதற்குக் காரணம் இல்லை. கண் இரண்டும் குருடு என்னுமிடத்து, குருடு என்பது விதேயம் ஆகையாலும், கண் இரண்டு என்பது உத்தேசியம் ஆகையாலும் உம்மை வந்தது பொருத்தமே. சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் கூறும் சமாதானம் வலிந்து கூறுதலாகவே தோன்றுகிறது.

### பாலசுந்தரனார் உரை

*33. 'இனைத்தென . . . வேண்டும்.'-*

வினைப்படு தொகுதி - பயனிலை கொள்ளும் தொகுதி. பயனிலை வினைப்பயனிலையாகவும் பெயர்ப் பயனிலையாகவும் வரலாம்.

உம்மை தொகுதிப் பெயரொடு மட்டுமே வரும் என்னும் யாப்புறவில்லை; ஆதலின் 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி' (முருகு. 118) எனவும் வரும்.

சுவை ஆறும் உடைத்து இவ்வடிசில், கதி ஐந்தும் உடைத்து இக்குதிரை-என்றாற்போல வருவனவற்றான் சுவை, கதி என்பன சினையாகக் கருதிக் கொள்ளப்படும்.

### இளம்பூரணர் உரை

### மன்னாப் பொருள் உம்மை பெறல்

***34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.***

எ . . . ன், இதுவும் மரபுவழுக் காத்தது.

இ-ள்: 'மன்னாப் பொருள்' என்பது இல்லாப் பொருள் என்பது; அதனையும் சொல்லுமிடத்து உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : பவழக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை என வரும்.

உம்மை பெறுதல் ஒப்புமை நோக்கியே முதற் சூத்திரத் தொடு மாட்டெறிந்தது எனக் கொள்க. (34)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**34. மன்னாப் பொருளும் -**

ஊர்க்காவல் தெய்வமான சாத்தன் கோயிலில் சுதையால் செய்யப்பட்டு வர்ணம் பூசப்பட்ட யானைகளும் குதிரைகளும் சாத்தனுடைய விக்கிரகத்தை நோக்கியவாறு கோயிலின் வெளியில் அமைக்கப்பட்டிருக்கும். அவ்வாறு வர்ணம் பூசப்பட்ட யானைகளுள்ளும், பவளம் போன்ற செந்நிறமான தந்தங்களையும், நீல நிறமான உடம்பையும் உடைய யானை வடிவத்தைக் காணமுடியாது என்பது இப்பொருளுக்கு எடுத்துக்காட்டு.

முதல் நூற்பாவில் முற்றும்மை கூறப்பட்டது. இந்நூற்பாலில் எச்ச உம்மை கூறப்படுகிறது. எனினும் உம்மையாதல் ஒப்புமையான் இந்நூற்பா இதன் முன்னைய நூற்பாவினொடு மாட்டெறியப்பட்டது.

## சேனாவரையர் உரை

### மன்னாப் பொருள் அமையும் வகை

*34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.*

*(இ-ள்) :* இல்லாப் பொருட்கும் இடமும் காலமும் பொருளும் முதலாயினவற்றொடு படுத்து இன்மை கூறுதற் கண் உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

*(எ-டு) :* பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை எனவும், குருகு காண்டல் பகலும் இல்லை எனவும், 'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' (நாலடி-104) எனவும் வரும். இல்லாப் பொருட்கு ஒருகாலும் நிலையுறுதல் இன்மையின் 'மன்னாப் பொருள்' என்றார்.

இடம் முதலியனவற்றொடு படுத்தற்கண் என்பது ஏற்புழிக் கோடல் என்பதனான் பெற்றாம். அவற்றொடு படாதவழிப் பவளக் கோட்டு நீல யானை இல்லை என உம்மை இன்றி வரும் என்பதாம்.

முற்றும்மையும் எச்ச உம்மையும் ஆகிய வேறுபாடு உடையவேனும், உம்மை பெறுதல் ஒப்புமையான், 'அன்ன இயற்று' என்றார்.

இரண்டு சூத்திரத்தானும் மரபுவழுக் காத்தவாறு. *(34)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**34. மன்னா . . . இயற்றே-**

***உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா-***

வரக்கூடிய நன்மை தீமைகளைப் போக்குதல் மேம்பட்ட ஞானிகளுக்கும் இயலாது.

மன்னாப்பொருள் - நிலைபேறு இல்லாத பொருள். இல்லாப் பொருளுக்கு ஒருகாலத்தும் நிலைபேறு இன்மையின் இல்லாப்பொருள் மன்னாப்பொருள் எனப்பட்டது.

சென்ற நூற்பா முற்றும்மை பற்றியது. இந்நூற்பா எச்ச உம்மை பற்றியது. இதனையும் முற்றும்மையாகக் கொள்ளலாம் என்று சாத்திரியார் கூறுவர்.

## நச்சினார்க்கினியர் உரை

### மன்னாப் பொருள் உம்மை பெறல்

***34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.***

இது, நிலையாப் பொருட்கண் மரபு நிகழ்த்துமாறு கூறுகின்றது.

இ-ள்: மன்னாப் பொருளும் - உலகத்து நிலை இல்லாத பொருளும்; அன்ன இயற்று - அதுபோல உம்மை கொடுத்துக்கூறுதல் வேண்டும் என்றவாறு.

'பொருளும்' என்ற எச்ச உம்மையான், உலகத்து இல்லாத பொருளும் இடமும், காலமும், பொருளும் முதலியவற்றொடு படுத்துக்கூறுதற்கண், உம்மை கொடுத்துக் கூறுதல் வேண்டும் என்று பொருள் உரைத்துக்கொள்க.

'யாக்கையும் நிலையாது' எனவே, 'இளமையும், செல்வமும் நிலையா' என்னும் பொருளும் உணர்த்தி எச்ச உம்மையாய் நிற்கும்.

உம்மை பெறுதல் ஒப்புமையான், முற்றும்மையோடு எச்ச உம்மையை மாட்டெறிந்தார்.

இனிப் 'பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை'- 'குருடு காண்டல் பகலும் இல்லை'-'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' (நாலடி. 104) என இல்லாப் பொருள்களும் எச்ச உம்மை பெற்றவாறு காண்க. இடம் முதலியவற்றொடு வாராதவழி உம்மை பெறா.

மன்னுக பெரும! நீ நிலமிசை யானே (புறநா. 6) எனவும்,

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர் (புறநா. 165)எனவும்,

மன்னாப் பொருட்பிணி முன்னி (நற். 71) எனவும்

மன்னாமை நிலையாமையை உணர்த்துதல் அன்றி, இன்மையை யாண்டும் உணர்த்தாமை காண்க. (34)

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**34. மன்னாப் பொருளும் -**

மன்னாப் பொருள் - உலகத்து நிலையில்லாத பொருள்.

'மன்னாப் பொருளும்' என்ற உம்மையான் உலகத்து இல்லாத பொருளும் உம்மை பெறும். பவள நிறக் கொம்புகளை உடைய நீல நிறத்து யானை **சாத்தன் கோயில்** பொம்மைகளிலும் இல்லை - இடம். குருடு சூரிய வெளிச்ச முடைய **பகலிலும்** எதனையும் காணமுடியாது-காலம். வரக்கூடிய வினைப்பயன்களைத் தடுத்து நீக்குதல் மேம்பட்ட **முனிவருக்கும்** இயலாது- பொருள்.

'பெருமானே! நீ உலகில் நீடுவாழ்வாயாக'.

'நிலைபேறு இல்லாத உலகில் நிலைபேறுடைய ராதலைக் கருதியவர்கள்'

'நிலைபேறு இல்லாத பொருளைத் தேட ஆசை பிணித்த லானே அதன்கண்ணே கருத்தைச் செலுத்தி'

இம்மூன்றும் மன்னாமை நிலையாமைப் பொருளே தரும் என்பதற்கு மேற்கோள்.

## தெய்வச்சிலையார் உரை

***32. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.***

இது மரபுவழுக் காத்தது.

இ-ள்: பொருந்தும் பொருளும் பொருந்தாப் பொருளும், உறழ வேண்டும் இடத்தும் பொருந்தும் பொருள் கூறும் இடத்தும், உம்மை கொடுத்துச் சொல்லவேண்டும் எ-று.

வேத ஆகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்தும் இடத்து, உலகும் உயிரும் பரமும் அநாதி; பதியும் பசுவும் பாசமும் அநாதி- என வரும். உலகும் உயிரும் பரமும் பசுவும் பொருந்தும் பொருள் ஆனவாறும், பாசமும் பதியும் இவற்றொடு பொருந்தாத பொருள் ஆனவாறும் காண்க. 'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்' (தொல். பொருள்இயல்-8) எனவும், 'நோயும் இன்பமும்' (தொல். பொருள்இயல்-2) எனவும் கூறியவாறும் காண்க. மன்னிக் கழிகின்றேன் என்றால் மன்னுதல் பொருத்தமும் மன்னாமை பொருந்தாமையும் ஆனவாறும் காண்க.

**இரண்டாவது ஏட்டில் காணும் உரை**

*இதுவும் அது.*

*இ-ள் : நிலையாத பொருள் உம்மை பெறல் வேண்டும் எ-று. அவையாவன இளமை, செல்வம், யாக்கை என்பன.*

*உ-ம் : சக்கிரவர்த்தி இளமையும் நிலையாது, சக்கிரவர்த்தி செல்வமும் நிலையாது, சக்கிரவர்த்தி யாக்கையும் நிலையாது. 'ஏமம் ஆக இந்நிலம் ஆண்டோர்- சிலரே பெரும கேளினி(ன்) நாளும் - பலரே அத்தைஅஃது அறியா தோரே - அன்னோர் செல்வமும் மன்னி நில்லா' எனவரும்.*

*இல்லாப் பொருள் என உரைப்பவால் எனின், இல்பொருள் வழக்கு இன்று என மறுக்க. உம்மை கொடாக் கால் வரும் குற்றம் என்னை எனின், பிறர் இளமையும் செல்வமும் யாக்கையும் நிற்கும் எனப் பொருள்படும் ஆதலான், கொடுக்கவேண்டும் என்க. (32)*

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**32. 'மன்னாப் பொருளும்' -**

*இந்நூற்பாவிற்கு இரண்டு ஏடுகளில் இருவேறு உரைகள் உள்ளன. முதல் ஏட்டில் உள்ள உரை புதுமையாக உள்ளது.*

*மன்னாப் பொருளும் - பொருந்தும் பொருளும் பொருந்தாப் பொருளும். உலகும் உயிரும் பரமும் அநாதி - தமக்கு முற்பட வேறு எவையும் தோன்றாதவை. பதி - இறை; பசு - ஆன்மா; பாசம் - உலகியல் பிணிப்பு. உலகிலே உயிரினங்கள் பொருந்தி வாழக்கூடியவை. பரத்திடத்தில் பசுப் பொருந்தின் பேரின்பம் நுகரக்கூடியது. பாசம் பதியாகிய இறைவனை அணுகமுடியாது. பதியாகிய இறையும் பாசத்தொடு பிணைப்பு எய்தாது.*

'நோயும் இன்பமும் இருவகை நிலையின்' - (பொ. 196)

'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்' - (பொ. 203)

நோயும் இன்பமும் - ஒன்றற்கு ஒன்று மறுதலைப் பட்டது.

உடம்பும் உயிரும் - அசேதனமாய் உருவாய் அநித்த மாய உடம்பும், சேதனமாய் அருவாய் நித்தமாய உயிரும் தம்முள் மறுதலைப்பட்டன. உலகும் உயிரும், பரமும் பசுவும்-பொருந்தும் பொருள். பதியும் பாசமும், உடம்பும் உயிரும், நோயும் இன்பமும்-பொருந்தாப் பொருள். மன்னுதல் பொருத்தமும், மன்னாமை பொருந்தாமையும் குறிக்கும் என்பது இவர் கருத்து.

இரண்டாம் ஏடு நிலையாத பொருள் உம்மைபெறல் வேண்டும் என்கிறது.

***ஏமமாக*** - மேம்பட்ட உரிமைச் சுற்றத்தொடு மிகப் பாதுகாவலாக இந்நிலத்தை ஆண்ட அரசர்கள் சிலரே. அதனை அறியாது இருந்தவர் பலர். அந்த மன்னர்கள் செல்வமும் நிலையாக நிற்கவில்லை.

*சக்கிரவர்த்தியின் இளமை செல்வம் யாக்கை என்ற இவை நிலையா என உம்மை கொடாதுபோயின், ஏனையவர் இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையாக நிற்கும் எனப் பொருள்படுமாதலின், சக்கிரவர்த்தியின் இளமையும் நிலையாது, செல்வமும் நிலையாது, யாக்கையும் நிலையாது என உம்மை கொடுத்தல் வேண்டும்.*

*மன்னாப்பொருள் - நிலையாத பொருள்.* இல்லாப் பொருள் என்பது பொருள் அன்று. இல்லாப் பொருளைக் கூறும் வழக்கம் இல்லை.

## கல்லாடனார் உரை

### *34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.*

என்-எனின், இன்னும் உலகத்துப்பொருள் இல்லதும் உள்ளதும் என இருவகைத்து. அவற்றுள் இல்லதன்மேல் பிறக்கும் மரபு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உலகத்து இல்லாப் பொருளும் மேலதனோடு ஒத்த இயல்பினை உடைத்து எ-று.

அன்ன இயல்பு என்பது: மேல் பிறபொருள் ஒழிந்தனவும் உள எனப்படுதற்கு அஞ்சி, முற்றும்மை கொடுக்க என்றார். அதுபோல, ஈண்டும் ஒழிவது அஞ்சி எச்சஉம்மை கொடுக்க என்பார் 'அன்ன இயல்பு' என்றார் என்பது.

எ-டு. : முயல்கோடும் ஆமை மயிர்க்கம்பலமும் அம்மிப்பித்தும் துன்னூசிக்குடரும் சக்கிரவர்த்தி கோயிலுள்ளும் இல்லை - என வரும்.

மேல் சூத்திரத்து முற்றும்மையோடு இச்சூத்திரத்தை மாட்டேற்றலின், முயல்கோடும் ஆமைமயிர்க் கம்பலமும் யாண்டும் இல்லை என்பது உதாரணம் ஆகற்பாற்று எனின், யாண்டும் என்னாது இல்லை எனவும் வழக்கு அமைதலின், இதுவே பொருள்அன்மையை வாளாதே இல்லை என்பது அன்றி ஓர் இடத்தொடு படுத்து இல்லை என்புழி, எச்சஉம்மைகொடாதுவிடின் பிறஇடத்து உண்மை சேறலின், மாட்டேற்று ஒரு புடைச்சேறல் என்பதாகக் கொண்டு, மேற்காட்டிய உதாரணம் ஆகற்பால என்பது. *(34)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**34. 'மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.'**

*33*ஆம் நூற்பாவில் பிற பொருள்களை நீக்க முற்றும்மை கொடுத்தாற் போல இந்நூற்பாவில் பிற பொருள்களை நீக்க எச்ச உம்மை கொடுக்கப்பட்டது.

அம்மிப்புற்று - கருங்கல்லாகிய அம்மியில் புற்றுத் தோன்றல்.

துன்னூசிக்குடர் - தைக்கும் ஊசியின் காது போன்ற சிறிய துவாரமுடைய குடல் உறுப்பு. 'ஊசித்தொண்டை தாழி வயிறு' என்ற உலகியல் கூற்றும் நோக்குக. முயற்கோடு யாண்டும் இல்லை எனவும், முயற்கோடு இல்லை எனவும் கூறலாம்.

உம்மை இன்றி 'முயற்கோடு இங்கு இல்லை' என்னின், பிற இடங்களில் உண்டு என்று பொருள்படுதலின் இடத்தொடு பொருத்திக் கூறுதற்கண் உம்மை வேண்டும் என்பது. இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் என்னும் உத்திவகையின் பாற்படும்.

## ஒருவர் உரை

## *34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.*

எ-து : மன்னாப் பொருள் - இல்லாப் பொருள்.

எ-டு : பவழக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை- முயற்கோடும், யாமைமயிர்க் கம்பளமும், அம்மிப் பித்தும், துன்னூசிக் குடரும் சக்கிரவர்த்தி கோயிலுள்ளும் இல்லை - எனவும், என் அங்கையுளும் மயிர் இல்லை- இக்கழுதைக்கும் கோடு இல்லை - எனவும் உம்மை கொடுத்துச் சொல்லுக. உம்மை கொடாது சொல்லின், பிறாண்டு உண்டு எனச் செல்லும்.

உம்மை - எச்ச உம்மை. (34)

## ஒருவர் உரைவிளக்கம்

**34. 'மன்னாப் . . . இயற்றே.'-**

என் அங்கையுள்ளும் மயிரில்லை-இக்கழுதைக்கும் கோடு இல்லை-என்ற எடுத்துக்காட்டுக்கள் இவர் உரையிலேயே உள்ளன.

## சாத்திரியார் உரை

*34.* 'மன்னா . . . இயற்றே.'-

மன்னாப்பொருள் என்பதற்கு நிலையாத பொருள் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. உம்மையால் இல்லாப் பொருளை நச்சினார்க்கினியர் கொள்ளுவது சூத்திரப்போக்குக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

இச்சூத்திரத்தின் கருத்து யாதெனின், 'இவ்வுலகத்தில் ஒருவர் செல்வம் நிலையாது' என்று சொல்லுமிடத்து, ஒருவர் செல்வமும் நிலையாது என்று செல்வம் என்பதன்பின் உம்மை கொடுக்கவேண்டும் என்பதே. இவ்வாறு கொள்ளின் 'அன்ன இயற்றே' என்பதற்கு 'வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்' என்பதே பொருளாகும். இங்கு 'இவ்வுலகத்தில் ஒருவர் செல்வம்' என்பதே வினைப்படு தொகுதி ஆகுமே அன்றிச் செல்வம் மாத்திரம் வினைப்படு தொகுதி ஆகாது. உம்மையும் முற்சூத்திரத்தில் கூறியதுபோலவே முற்றும்மை ஆகும்.

## பாலசுந்தரனார் உரை

*34.* 'மன்னாப் . . . இயற்றே.'

மன்னாப் பொருள் - நிலைபேறு இல்லாத பொருள்.

மன்னாப் பொருட்கண் யாதானும் ஒரு பொருளைப் பற்றி உம்மை வரும் என்றவாறு. அதனான் அவ்வியற்று என்னாது 'அன்ன இயற்று' என்றார்.

## இளம்பூரணர் உரை

### சொல் தொகுத்து இறுத்தல்

***35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்***
***அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.***

எ . . . ன், மறித்துச் சொல் பல்காமைத் தொகுத்து இறுக்கும் இலக்கணம் இஃது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:எவ்வகைப்பட்ட பொருளாயினும் தன்னுழை உள்ளதல்லதனை இல்லை எனலுறுமே எனின், அவன் கூறிய பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறி, இல்லை என்க என்றவாறு.

தன்னுழை உள்ளதன் உண்மை கூறி இல்லை என்க என்பது கருத்து.

உதாரணம் : பயறுளவோ வணிகீர் என்றால், உழுந்து அல்லது இல்லை என்க, தன்னுழை அவை உளவாயின்.

இதன் கருத்து: அவன் வினாவப்பட்ட பொருட்கு இனமாய பிறிது பொருளே கூறுக என்பது.

இச்சூத்திரம் 'செப்பும் வினாவும்' (கிளவி-13) என்பதனுள்அடங்காதாயிற்று, அவன் வினாவிற்குச் செவ்வனிறையாக அன்றிப் பிறிதும் ஒன்று கொணர்ந்து இறுத்தமையின். (35)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**35. 'எப்பொருள் ஆயினும்' -**

மறித்துச் சொல் பல்காமை தொகுத்திறுத்தல் - மீண்டும் சொற்கள் மிகாதபடி சுருக்கமாக வினாவிற்கு விடை கூறுதல்.

தன்னுழை உள்ளது அல்லது - தன்னான் வாணிகம் செய்யப்பட்ட பொருளாய்த் தன்னிடம் இருந்தது வாணிகம் செய்யப்பட்டு எஞ்சாது விற்கப்பட்டுவிட்டதனான், அப்பொழுது தன்னிடத்துக் கைவசம் இல்லாத பொருள்.

தன்னுழை உள்ளதன் உண்மைகூறி - தன்னிடம் வாணிகத்திற்கு இருக்கும் பொருள் இன்னதுதான் என்று தன்னிடம் இருக்கும் பொருளைக் கூறி, வினாவினவன் வேண்டிய பொருள் தன்னிடத்து அப்பொழுது கைவசம் இல்லை என்பதனைக் குறிப்பால் தெரிவித்து.

இது வினாவிற்கு நேரிடையான விடையாகாமல் உய்த்து உணருமாறு இருத்தலின் 'சொல் தொகுத்து இறுத்தல்' என்ற செப்புவழுவமைதி ஆயிற்று.

**சேனாவரையர் உரை**

**அல்லதுஇல்' என்னும் வாய்பாட்டு விடை**

*35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்எனின்*
*அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.*

*(இ-ள்)* : யாது ஆயினும் ஒரு பொருளை ஒருவன் 'அல்லது இல் ' என்னும் வாய்பாட்டான் இல்லை எனல் உறின், அப்பொருள்தன்னையே கூறாது அப்பொருள் அல்லாத பிறிது பொருள் கூறுக என்றவாறு.

*(எ-டு)* : பயறுளவோ வணிகீர் என்று வினாயவழி, உழுந்துஅல்லது இல்லை; கொள்அல்லது இல்லை என அல்லது இல் என்பான் பிறிது பொருள் கூறியவாறு காண்க.

'அல்லது இல் எனின்' எனப் பொருள் பற்றி ஓதினார் ஆகலின், அல்லது இல் என்னும் வாய்பாடே அன்றி, உழுந்து அன்றி இல்லை -உழுந்தே உள்ளது -என அப்பொருள்படுவன எல்லாம் கொள்க. உழுந்தல்லது இல்லை எனப் பிறிது பொருள் கூறாது, பயறு அல்லது இல்லை என அப்பொருள் கூறின், 'பயறுள்ளது; அல்லன இல்லை' என மறுதலைப் பொருள்பட்டுச் செப்புவழு ஆமாறு அறிக.

யாதானுமாக, ' அல்லது இல்' எனின் பிறிது பொருள் கூறுக என எஞ்சாமல் தழீஇ யாப்புறுத்தற்கு 'எப்பொருள் ஆயினும்' என்றார்.

அல்லது என்பதற்குத் 'தன் உழை உள்ளது அல்லது' என்றும், அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல் என்பதற்கு 'இனப்பொருள் கூறுக' என்றும் உரைத்தாரால் உரையாசிரியர் எனின் :- பயறுளவோ என்று வினாயவழிப் பயறு இல்லை என்றால்படும் வழு இன்மையானும், உள்ளது அல்லது என்றல் கருத்து ஆயின் ஆசிரியர் 'அல்லது' எனக் குறித்த பொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியார் ஆகலானும், பாம்புணிக் கருங்கல்லும் பயறும் விற்பான் ஒருவன்உழைச் சென்று பயறு உளவோ என்றவழிப் 'பாம்புணிக் கருங்கல்அல்லது இல்லை' என்றால் இனப் பொருள் கூறாமையான் பட்ட இழுக்கு இன்மையானும், அவை போலி உரை என்க. அல்லதூஉம், இனப் பொருள் கூறுக என்பதே கருத்து ஆயின், அப்பொருள் அல்லா இனப்பொருள் கூறல் என்னாது பிறிது பொருள் கூறல் என்னார் ஆசிரியர்; அதனானும் அஃது உரைஅன்மை உணர்க. *(35)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**35. எப்பொருள் . . . கூறல்-**

தன்னிடம் இருந்து வாணிகம் செய்யப்பட்டுத் தீர்ந்துபோன பொருளைப் பற்றித் தெரிவிக்கவேண்டு மெனின், வினவப்பட்ட பொருளின் இனமான பொருளைக் கூறி இஃதுஅல்லது இல்லை என்றே கூறவேண்டும் என்றார் உரையாசிரியர். "அப்படித்தான் விடை கூறவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. பயறு உளதோ என்றால் பயறு இல்லை என்று விடைகூறுவதில் தவறு இல்லை. அல்லது என்பதற்குத் தன்னிடத்தில் வாணிகத்திற்கு இருந்து வாணிகம் செய்து தீர்ந்துபோன பொருள் என்று பொருள் செய்யுமாறு அச்சொல்லை ஆசிரியர் சுருங்க உரையார். இனமான பொருளைக் கூறவேண்டுமெனின் 'இனப்பொருள் கூறுக' என்றே நூற்பா அமைத்திருப்பார்" என்று சேனாவரையரான் உரையாசிரியர் கருத்துக்கள் மறுக்கப்படுகின்றன.

பாம்பு உணிக்கருங்கல் - பாம்பு கடித்த விடத்தை நீக்கும் மருத்துவ குணமுடைய கல்.

## நச்சினார்க்கினியர் உரை

### சொல் தொகுத்து இறுத்தல்

*35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்*
*அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.*

இது வினாயதன் புறத்துச் சொல் பல்காமை 'சொல் தொகுத்து இறுத்தல்' என்னும் செப்பு ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: எப்பொருள் ஆயினும் - யாதானும் ஒருபொருளை ஆயினும்; அல்லது இல் எனின் - தன்னுழை உள்ளது அல்லதனை இல்லை எனல் உறுமே எனின்; அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல் - அவ் வினாய பொருள்தன்னையே கூறாது, அதற்கு இனமாகிய பிறிது பொருளைக் கூறி இல்லை என்க என்றவாறு.

'நூறு விற்கும் பட்டாடை உளவோ?' என்று வினாயினார்க்கு 'ஐம்பது விற்கும் கோசிகம்அல்லது இல்லை' என்றும், 'பயறு உளவோ வணிகீர்?' என்றார்க்கு, 'உழுந்துஅல்லது இல்லை - கொள்அல்லது இல்லை' - என்றும், தன்னுழை உள்ளது அல்லதனை இல்லை என்பான் பிறிது பொருள் கூறினான்.

பயறு உளவோ? என்றவழி, அல்லது என்பது ஒழியவும், 'பயறு இல்லை; உழுந்து உள' என்றால் படும் இழுக்கு என்னை எனின், 'எப்பொருள் ஆயினும்' என்றது ஐம்பாற்பொருளை ஆகலானும், அல்லது என்பது அஃறிணை ஒருமைப்பாற்கு உரித்தேனும் மற்றை நான்குபாற்கண்ணும் பால்வழுவாயும், திணைவழுவாயும் மயங்குதலானும், அதுகண்டு அதனை அமைத்தற்கு 'எப்பொருள் ஆயினும் அல்லது இல்' என்றார். அவன் அல்லது, அவள் அல்லது, அவர் அல்லது, அஃது அல்லது, அவை அல்லது எனவரும்.

'நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யான்அலது இல்லைஇவ் வுலகத் தானே'
(அகநா.268)

எனச் சான்றோர் செய்யுளுள் பயின்று வருமாறும் உணர்க. 'அவன் அல்லது பிறன் இல்லை' என மேல்வரும் சொல்லொடு படுத்து வழுஅமைதி ஆதல் அறிக.

பயற்றான் முடிக்கும் குறை உழுந்தான் முடித்தல் அன்றிப் பாம்பு உணிக் கருங்கல்லான் முடித்தல் ஆகாமையின், பயறு உளவோ? என்றார்க்குப் 'பாம்பு உணிக்கருங்கல்அல்லது இல்லை' என்றல் பொருந்தாமை உணர்க. (35)

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**35. எப்பொருள் ஆயினும் -**

| | |
|---|---|
| வினாயதன்புறத்துச் சொல் பல்காமல்- | வினவினவன் மீண்டும் வினாவும் வகையில் வாய்ப்பு அளிக்காமல், கூறும் விடையிலேயே வினவியன யாவும் அடங்கும்படி. |
| சொல் தொகுத்து இறுத்தல்- | தேவையான செய்திகள் யாவற்றையும் சுருக்கி இணைத்து விடை கூறுதல். |
| தன்னுழை உள்ளது அல்லது- | தன்னிடம் வாணிகத்துக்கு இருந்து யாவும் விற்றுப் போனதால் அப்பொழுது தன் கைவசம் இல்லாதது. |

உழுந்தல்லது இல்லை-கொள் அல்லது இல்லை- என்றல், அவையும் பயற்று வகையுள் அடங்குதலின்.

'அல்லது இல்' என்று கூறுதல், அல்லது இல் என்ற வாய்பாடு அக்காலத்துப் பயின்று வந்தமையான் என்க. அல்லது என்பது அஃறிணை ஒருமைப் பெயராயினும், அஃது இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பயின்று வருதலின் வழு அமைக்கப்பட்டது.

'நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானலது இல்லைஇவ் வுலகத் தானே' - அகநா. 268

இவ்வுலகத்தின்கண் நாணும் நட்பும் இலராயினாரை ஆராயின் என்னை ஒழிந்தார் யாரும் இலர்.

சான்றோர் செய்யுளுள் 'அல்லது இல்' என்பது பயின்று வருதல்,

'பெருந்தோட் குறுமகள் **அல்லது**
மருந்துபிறிது **இல்லை** யான் உற்ற நோய்க்கே' - நற் -80

'நின்கண் **அல்லது** பிறிது யாதும் **இலனே**' - நற். 355

'வேளாண் மாந்தர்க்கு உழுதூண் **அல்லது**
**இல்**லென மொழிப பிறவகை நிகழ்ச்சி' - பொ-635

முதலியவற்றுள் காண்க.

இனமான பொருளே கூறி அஃது அல்லது இல்லை எனல் வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தப் 'பயற்றான்... ... ... பொருந்தாமை உணர்க' என்று சேனாவரையர் கருத்து மறுக்கப்பட்டது.

'புல்லியோர் பண்டம் கொள்வார் வினவிய பொருள்தம் பக்கல்
இல்லெனின் இனனா யுள்ள பொருளுரைத்து எதிர்ம றுத்தும்
அல்லதப் பொருளுண்டு என்னின் விலைசுட்டி அறுத்து நேர்ந்தும்
சொல்லினும் இலாபம் கொள்வார் தொன்மரபு இருக்கை சொல்வாம். -திருவிளை. நகர. 58

## தெய்வச்சிலையார் உரை

***33. எப்பொருள் ஆயினும் அல்லது இல்எனின்***
***அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.***

செப்பு வழுஅமைதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யாதானும் ஒருபொருள் ஆயினும் அல்லது என்னும் சொல்லொடு கூட்டி இல்லை எனக் குறித்தான் ஆயின், அவன் வினாவிய பொருள் அல்லாத பிறிதுஆய பொருளைச் சொல்லுக எ-று.

எனவே, அதனொடு கூட்டிச் சொல்லுக என்றவாறாம், 'அப்பொருள் அல்லாப் பிறிது' என்றமையான், அதற்கு இனம் ஆகிய பொருளே சொல்லப்படும்.

பயறு உளவோ வணிகீரே என்றார்க்கு, உழுந்துஅல்லது இல்லை என்க. கொல்லவன்பட்டு உளவோ என்றால், கோசிகம்அல்லது இல்லை என்க.

எனவே, அவன் கருத்திற்கு ஏற்ற வினாவிய பொருளை இல்லை என்னாது, பிறது ஒன்று கூறுதல் வழுஆயினும், அப்பொருள் பயத்தலின் அமைதி ஆயிற்று. *(33)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**33. 'எப்பொருள் ஆயினும்'-**

கொல்லவன் பட்டு - கொல்லம் என்ற ஊரில் நெய்யப்பட்ட பட்டு.

கோசிகம் - ஒருவகைப் பட்டாடை

## கல்லாடனார் உரை

***35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்***
***அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.***

என்-எனின், 'சொல்தொகுத்து இறுத்தல்' என்னும் செப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எவ்வகைப்பட்ட பொருள் ஆயினும் தன்னுழை உள்ளது அல்லதனை 'இல்லை' எனல் உறுமே எனின், அவன் வினாவின பொருள் அல்லாத பிறிது பொருள் கூறி இல்லை என்க என்றவாறு.

எ-டு : 'பயறு உளவோ வணிகீர்' என்றக்கால், 'உழுந்து அல்லது இல்லை' என்க.

பயறு உளவோ என்றால், அல்லது என்பது ஒழியவும் 'பயறு இல்லை உழுந்து உள' என இந்நிகரனவும் சொல்லுப ஆகலான், அல்லது என்பது வேண்டா எனின், அல்லது என்பது அஃறிணை ஒருமைப்பாற்கு உரியதே எனினும் மற்றை நான்கு பாற்கண்ணும் பால்வழுவாயும் திணை வழுவாயும் சென்று மயங்கல் கண்டு, அதனைக் காத்தல் பொருட்டாகச் சொல்லினார் என்பது.

எ-டு : அவன் அல்லது, அவள் அல்லது, அவர் அல்லது, அவை அல்லது-எனவரும்.

'அவன் அல்லது' என்புழி, அல்லது என்பதனைப் பின் 'பிறன் இல்லை' என்று வருவதனொடு படுத்து வழுஆதல் அறிக.

அப்பொருள் அல்லா என்பது மிகை. அதனான், பிறிதுபொருள் கூறும்வழியும் அவன் வினாயதற்கு இனமாய வற்றையே கூறுக என்றவாறு.

இதனான் சொல்லியது, செப்பின்கண் பிறப்பதொரு வழுக்கண்டு அதனை அமைத்தற்குக் கூறியவாறு ஆயிற்று. இதனுள் வழு என்பது என்னை எனின், அவன் வினாயதனை மறுப்பது அன்றி, அவன் வினவாத பிறிது ஒன்றனையும் உடம்பட்டுக் கூறினமையின் என்பது. வழுஅமைதியேல் 'பிறிது பொருள் கூறுக' என விதிக்கற்பாற்று அன்று எனின், அவ்வாறு கூறல் ஆகாது என மறுத்து இவ்வாறு கூறுக என்பது ஒரு விதி நீர்மைத்து அஃது என்பது. (35)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**35. 'எப்பொருள் . . . கூறல்.'-**

தன்னுழை உள்ளது அல்லது - தன்னிடத்தில் வாணிகத்திற்கு இருந்து வாணிபம் செய்து தீர்ந்தது. 'அல்லது' என்ற ஒன்றன்பாற்சொல் ஏனை நாற்பாற்கண்ணும் வரும் வழுவமைதி கூறப்பட்டது. அவன் அல்லது பிறன் இல்லை என்பது வழு என்பது விளக்கப்பட்டது.

இந்நூற்பாவில் வழுவமைதியாதல் முதலியன விளக்கப்பட்டன.

## ஒருவர் உரை

***35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்எனின்***
***அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.***

எ-து : எவ்வகைப்பட்ட பொருள் ஆயினும், தன்னுழை உள்ளது அல்லதனை இல்லை என்று சொல்லின், அவன் கூறிய பொருள் அல்லாப் பிறிது பொருள்கூறி இல்லை என்க.

தன்னுழை உள்ளதன் உண்மைகூறி இல்லை என்பது இதன் கருத்து.

எ-டு : பயறு உளவோ வணிகீர் என்றக்கால், உழுந்து அலது இல்லை - கொள் அலது இல்லை - என்றும், நூறுவிற்கும் பட்டு ஆடை உளவோ என்றார்க்கு, ஐம்பது விற்கும் கோசிகம் அல்லது இல்லை- என்றும் சொல்லுக.

இஃது, அஃறிணை ஒருமைப்பாற்கு உரித்தேனும் 'எப்பொருள் ஆயினும்' என்றமையால், இருதிணை ஐம்பாற்கண்ணும் அல்லது என்னும் சொல் கொடுத்துச் சொல்லுக.

வரலாறு : அவன் அல்லது இல்லை, அவள் அல்லது இல்லை, அவர் அல்லது இல்லை, அஃது அல்லது இல்லை, அவை அல்லது இல்லை என்று சொல்லுக.

'நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யான்அல்லது இல்லை இவ்வுலகத் தானே'
(அகம்-268)

எனச் சான்றோர் செய்யுளுள் பயின்று வருமாறும் காண்க.

'பயறு உளவோ?' என்றார்க்கு அதற்கு இனம் ஆகிய உழுந்தான் முடித்தல் அன்றி, அதற்கு இனம் ஆகாப் பாம்பு உண்ணிக் கருங்கல்லான் முடித்தல் ஆகாமை அறிக. (35)

## சாத்திரியார் உரை

35. 'எப்பொருள் . . . கூறல்.'

உரையாசிரியரும், நச்சினார்க்கினியரும் தெய்வச் சிலையாரும் பிறிது பொருள் என்பதற்கு இனப்பொருள் என்று பொருள் கொண்டதன் காரணம் சூத்திரத்தில் உள்ள 'அல்லது' என்னும் சொல்லே. 'பயறு அல்லது' என்றால் பயறு போன்றதும் பயற்றின் வேறுபட்டதுமாகிய பொருள் என்பதே கருத்து ஆகும். பாம்புணிக் கருங்கல்லும் பயறும் வியாபாரப் பொருள் என்ற தன்மையில் ஒப்புமைப்படுவதால் இனம் என்று கொள்வதற்கு இடம் உண்டு.

## பாலசுந்தரனார் உரை

**35. 'எப்பொருள் . . . கூறல்.'**

'அல்லது இல்' என்பது வாய்பாடு ஆதலின், அல்லது இல்லை, அன்றி இல், அல்லாது இல் என்றாற்போல அப்பொருள் பற்றிவரும் சொற்கள் எல்லாம் கொள்க.

பிறிது பொருள் என்பது பெரும்பான்மையும் இனப் பொருள் பற்றியதாகும். சிறுபான்மை இனப்பொருள் இன்றியும் வரும். பயறும் பாம்புணிக் கருங்கலும் விற்பான் ஒருவனுழைச் சென்று பயறு உளவோ? என்றவழிப் 'பாம்புணிக் கருங்கல் அல்லது இல்' என்னுமன்றே? அதனான் இனப்பொருள் என்னாமல் 'எப்பொருள் ஆயினும்' என்றார் என்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

35. வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி - (பொ. 635)

'அல்லது இல்' என்புழி, அல்லது என்பது பெயர்ப் பொருளில் வருவது என்ற கருத்தும், வினையெச்சப் பொருளில் வருவது என்ற கருத்தும் அறிஞரிடையே காணப்படுகின்றன.

## இளம்பூரணர் உரை

### மேலதற்குப் புறனடை

*36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.*

எ . . . ன், இதுவும் ஓர் இறுத்தல் வகைமை உணர்த்துதல் நுதலிற்று; மேலதற்கு ஒரு புறனடையும் என்பது.

இ-ள் : அவன் வினாயின அப்பொருளையே சொல்லலுறும் எனின், சுட்டிக் கூறுக என்றவாறு.

உதாரணம் : இவையல்லது பயறில்லை,
இப்பயறல்லது இல்லை என வரும். (36)

## சேனாவரையர் உரை

*36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.*

(இ-ள்) : அல்லது இல் என்பான், பிறிது பொருள் கூறாது அப்பொருள்தன்னையே கூறுமாயின், 'இப்பயிறுஅல்லது இல்லை' எனச் சுட்டிக் கூறுக என்றவாறு.

பயறு உளவோ என்றவழிச் சுட்டாது பயறு அல்லது இல்லை எனின், 'பயறு உள; உழுந்து முதலாயின இல்லை' எனப் பிறிது பொருள் ஏற்பித்துச் செப்பு வழூஉம் என்பது.

அல்லது இல் என்பது அதிகாரத்தால் பெற்றாம்.

தன்னினம் முடித்தல் என்பதனான், பசும்பயறு அல்லது இல்லை, பெரும்பயறுஅல்லது இல்லை எனக் கிளந்து கூறுதலும் கொள்க.

'செப்பும் வினாவும்' (சொல். 13) என்றதனான் இவ்வேறுபாடு இனிது விளங்காமையானும், 'பொருளொடு புணராச் சுட்டு' (சொல்-37) என வழு அமைக்கின்றார் ஆகலானும், இவற்றை விதந்து கூறினார். (36)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**36. அப்பொருள் . . . கூறல்-**

கிளந்து கூறுதல் - இன்னது என விளக்கமாகக் கூறுதல்.

விதந்து கூறுதல் - சிறப்பாகப் பிரித்து எடுத்துச் சொல்லுதல்.

அடுத்த நூற்பாவில் வழு அமைத்தற்கு முன்னர்த்தாக இந்நூற்பாவில் வழாநிலையை எடுத்துக் கூறியுள்ளார்.

## நச்சினார்க்கினியர் உரை

### மேலதற்கு ஒரு புறனடை

***36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.***

இது மேலதற்கு ஒரு புறனடை ஆவது ஓர் இறுத்தல் வகைமை கூறுகின்றது.

இ-ள் : அப்பொருள் கூறின் - அல்லதுஇல் என்பான், பிறிது பொருள் கூறாது, அப்பொருள்தன்னையே கூறு மாயின்; சுட்டிக் கூறல் - முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச் சொல்லுக என்றவாறு.

'இவை அல்லது இல்லை' 'இப்பயறு அல்லது இல்லை' என வரும். வினாவினான் பயற்றின் நன்மையும் தீமையும் உணர்ந்து, கோடற்கும் தவிர்தற்கும் இவ்வாறே கூறுக என்றார். சுட்டாது 'பயறு அல்லது இல்லை' எனின், 'பயறு உள; உழுந்து முதலிய இல்லை' எனப் பிறிது பொருள் ஏற்பித்துச் செப்புவழுவாம்.

'தன் இனம் முடித்தல்' என்பதனான், பெரும்பயறு அல்லது இல்லை; பசும்பயறு அல்லது இல்லை எனக் கிளந்து கூறுதலும் கொள்க. *(36)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**36. அப்பொருள் கூறின் -**

பயறு உளவோ என்று வினாவினாற்கு அங்கு இருந்த பயறு வகைகளைக் காட்டி 'இப்பயறு அல்லது இல்லை' என்று கூறின், வினாவினான் அங்குள்ள பயறுகளின் தரம் நோக்கி வாங்கிக்கொண்டோ வாங்காமலோ செல்ல வாய்ப்பு ஏற்படும். படவே, உரையில், பயற்றின் நன்மையும் தீமையும் உணர்ந்து கோடற்கும் தவிர்தற்கும் என்பது, பயற்றின் நன்மையும் தீமையும் உணர்ந்து, கோடற்கும் தவிர்தற்கும் என்று காற்புள்ளி, 'உணர்ந்து' என்பதன் பின்னர் இடப்படல் வேண்டும்.

பெரும்பயறு, பசும்பயறு என்பன பயற்றின் வகை.

## தெய்வச்சிலையார் உரை

***34. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.***

செப்பின்கண் வழுக்காத்தலை நுதலிற்று.

இ-ள் : வினாவிய பொருளையே சொல்லி அல்லது இல்லை எனின், சுட்டிக் கூறுக என்றவாறு.

இப்பயறுஅல்லது இல்லை - இப்பட்டுஅல்லது இல்லை என்க. எனவே அவன் கருத்திற்கு ஏற்ற பயனும் பட்டும் இல என்றவாறு ஆம். *(34)*

## கல்லாடனார் உரை

***36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.***

என்-எனின், இதுவும் மேலதற்கு ஒரு புறனடை ஆயதோர் இறுத்தல் வகைமை கூறுதல் நுதலிற்று.

*இ-ள் : அவன் வினாவின பொருள்தன்னைச் சொல்லு மிடத்துச் சுட்டி 'இல்லை' என்று சொல்லுக எ-று.*

*எ-டு : இப்பயறு அல்லது இல்லை-இவைஅல்லது பயறு இல்லை.* *(36)*

**ஒருவர் உரை**

## *36. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.*

*எ-து : வேறொரு பொருளைக் கூறாது, வினாயின பொருளையே கூறில், தன் முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச் சொல்லுக.*

*எ-டு : இப்பயறு அல்லது இல்லை என்க.*

*வினாயின பயறு நன்மையும் தீமையும் உணர்ந்து, கோடற்கும் தவிர்தற்கும் ஆக இவ்வாறே கூறுக.*

*தன்னினம் முடித்தல் என்பதனான், பெரும்பயறு அல்லது இல்லை - பசும்பயறு அல்லது இல்லை - எனக் கிளந்து கூறுதலும் கொள்க.* *(36)*

**ஒருவர் உரைவிளக்கம்**

**36. 'அப்பொருள் . . . கூறல்.'-**

*இப்பயறு அல்லது இல்லை என்று கூறுவது, பயறு வாங்க வந்தவன் பொதுவாக வாங்கக் கூடிய அப்பயறு இன்மையை அறிவித்து, விற்பதற்கு இருக்கும் பயற்றின் குறைபாட்டை உணர்ந்து அதனை வாங்கிச் செல்வதற்கும் வாங்காது விடுத்துச் செல்வதற்கும் ஏற்றதாகும்.*

**இளம்பூரணர் உரை**

**இதுவும் அது**

## *37. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்<br>பொருள்வேறு படாஅது ஒன்றுஆ கும்மே.*

எ...ன், இதுவும் ஒரு சொல்லுதல் வகைமை உணர்த்துதல் நுதலிற்று; மேலதற்கே புறனடை எனவுமாம்.

இ-ள் : பொருளொடு புணராது நின்ற சுட்டுப் பெயராமே யெனினும், அப்பொருட்கு இயைபுபட வருமேயெனின் அமையும் என்றவாறு.

உதாரணம் : இவையல்லது பயறில்லை என்புழிப் பயறு என்னும் சொல்லான் பயன் உணரப்பட்டது. அல்லதென்னுஞ் சொல்லே எதிர்மறுத்து நின்றது. இல்லை என்னுஞ் சொல்லான் இன்மை உணரப்பட்டது.

இனி, இவை என்னும் சொல் பொருள் இன்றால், அஃது என் செயும் என்றார்க்கு, அதுவும் பயற்றினையே சுட்டிற்று ஆகலான் அமைக என்பது கருத்து.

இஃது ஒரு பொருண்மேல் இருபெயர் வழுக் காத்தவாறு. (37)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**37. 'பொருளொடு புணரா' -**

'இவை அல்லது பயறு இல்லை': 'எம்மிடம் இப் பயறு வகைகளே விற்பனைக்கு உள்ளன. இவற்றின் தரம் உம் உள்ளத்துக்குப் பொருந்துவதாக இருப்பின் வாங்கிச் செல்க' என்பது கருத்து.

'இவை அல்லது பயறு இல்லை' என்புழி, இவை என்பது கடையிலுள்ள பயறு வகைகளைக் குறிக்க வந்துள்ளமையின், அஃது இன்றியமையாத சொல்லாகும். 'பயறு உளவோ?' என்று வினாவினார்க்கு, 'இவைஅல்லது பயறு இல்லை' என, இவை-பயறு- என்று இருபெயர்களை இணைத்து விடை கூறும்வழி இருசொற்களும் இன்றியமை யாதன ஆதலின், ஒரு பொருள்மேல் வரும் இரு பெயர் களையும் கொள்ளவேண்டும் என்பது.

## சேனாவரையர் உரை

### பொருட்பெயரும் சுட்டுப்பெயரும் அமையும் வகை

*37. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்*
*பொருள்வேறு படாஅது ஒன்றா கும்மே.*

(இ-ள்) சுட்டான் அன்றிப் பொருள் வரையறுத்து உணர்த்தாச் சுட்டுப் பெயரான் கூறினும், பொருள் வேறு ஆகாது, இப்பயிறு எனச் சுட்டிக் கூறிய பொருளே ஆம் என்றவாறு.

என் சொல்லியவாறோ எனின், இவைஅல்லது இல்லை என்றவழி, இவை என்பது பயற்றையே சுட்டாது உழுந்து முதலியனவற்றிற்கும் பொதுவாய் நிற்றலின் வழுவாம் அன்றே? ஆயினும், முன் கிடந்த பயறு காட்டி, இவை என்றான் ஆகலின், அவற்றையே சுட்டு முதலான் அமைக்க எனச் செப்புவழு அமைத்தவாறு.

சாதியும், பண்பும், தொழிலும் முதலாயினபற்றி ஒரு பொருளை வரைந்து உணர்த்தாது எல்லாப் பொருள்மேலும் சேறலின் 'பொருளொடு புணராச் சுட்டுப்பெயர்' என்றார்.

வேறுபடாது, ஒன்றாகும் என்பனவற்றுள் ஒன்றே அமையும் எனின், பொருள் வரைந்து உணர்த்தும் பெயரொடு பொருள் வரைந்து உணர்த்தாச் சுட்டுப் பெயர் வேறுபாடு உடைத்தேனும், ஒரு பொருள்மேல் முடிதலின் ஒரு பொருட்டாம் என்பது விளக்கிய, 'பொருள் வேறுபடாது ஒன்றாகும்' என்றார்.

அப்பொருள் கூறுதற்கண் என்னாது பொதுப்பட கூறிய அதனால், பிறிது பொருள் கூறும்வழியும், இவையல்லது இல்லை எனச் சிறுபான்மை சுட்டுப் பெயரான் கூறினும் அமையும் என்பதாம்.

யானை நூல் வல்லான் ஒருவன் காட்டுள் போவுழி ஓர் யானை அடிச் சுவடு கண்டு, 'இஃது அரசுவா ஆவதற்கு ஏற்ற இலக்கணம் உடைத்து' என்றவழியும்,

'இஃதோ செல்வற்கு ஒத்தனம் யாம்என
மெல்லஎன் மகன்வயின் பெயர்தந் தேனே' (அகம்-26)

என்புழியும் சுட்டுப்பெயர் பொருளொடு புணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச்சூத்திரம் என்பாரும் உளர். (37)

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**37. பொருளொடு . . . ஆகும்மே-**

சாதி பற்றியன - பெரும்பயறு, சிறுபயறு என்பன.

பண்பு பற்றியன - பசும்பயறு, காராமணிப்பயறு, தட்டைப்பயறு என்பன.

தொழில் பற்றியன - வறுகடலை, சுண்டற்கடலை என்பன.

'வேறுபடாது ஒன்றாகும்' என்றது, பொருளைச் சுட்டிக் கூறினாலும், பொருளை வரையறுத்து உணர்த்தாச் சுட்டுப் பெயரான் இவையல்லது இல்லை என்று கூறினாலும் உலக வழக்கில் பொருள் வேறுபடாது என்பதாம்.

சுட்டு முதலான் - சுட்டாகிய காரணத்தான். காரியத்தின்முன் நிற்றலின் காரணத்தைத் தொல்காப்பியனார் 'முதல்' என்றே குறிப்பிட்டார். 'ஆயெட் டென்ப தொழில் முதல் நிலையே' சொ. 112 காண்க.

யானை அங்கு இல்லாதிருப்பினும் அதன் அடிச் சுவட்டைக் கண்டே இந்த யானை அரசயானை என்று கூறுவதும் பொருளொடு புணராச் சுட்டாகும்.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனிடம் ஊடற்கண், தலைவி கூறுவது:

*இஃதோ செல்வற்கு* - 'நீங்கள் பரத்தையர்க்கு ஏற்புடையவராய் இருக்கின்றீர்கள். இங்குள்ள எம் புதல்வனுக்கு நாங்கள் ஏற்புடையவராய் இருக்கின்றோம்' என்றுகூறித் தலைவி அங்கு இல்லாத தன்மகனை நோக்கிச் சென்றதாகத் தோழியிடம் கூறற்கண், அருகில் இல்லாத புதல்வன் 'இஃதோ செல்வன்' என்று சுட்டப்பட்டதும் பொருளொடு புணராச் சுட்டாகும்.

## நச்சினார்க்கினியர் உரை

### சுட்டும் பெயரும் பொருளொடு புணரா மரபு

*37. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்*
*பொருள்வேறு படாஅது ஒன்றுஆ கும்மே.*

இது, திணைவழு அமையுமாறும், ஒரு பொருட்பெயர் சுட்டாய் நின்று அப்பொருள் உணர்த்துவதுஒரு மரபுவழு அமைதியும் உணர்த்துகின்றது.

இ-ள் : சுட்டு பொருளொடு புணரா ஆயினும் ஆகும் - ஒரு சுட்டு தான் உணர்த்துதற்கு உரிய அஃறிணைப் பொருளை உணர்த்தாது உயர்திணைப் பொருளை உணர்த்தி நிற்குமாயினும் ஆம்; பெயர் பொருளொடு புணரா ஆயினும் சுட்டுப் பொருள் வேறுபடாது ஒன்றாகும் - சில பொருட் பெயர் சுட்டுப் பொருளை உணர்த்தா ஆயினும், தாம் சுட்டுவதுஒரு பொருளிடத்து வேறுபட நில்லாமல் அப்பொருளையே உணர்த்திநிற்கும் என்றவாறு.

இஃது ஒத்தன் (கலி. 61, 62, 84, 88) என்றவழி, இஃது என்ற அஃறிணைப் பொருளை உணர்த்திய சுட்டு, 'இவன் ஒத்தன்' என உயர் திணைப்பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க. 'இஃதோர் செல்வற்கு ஒத்தனம் யாம் என' (அகநா.26) என்பதும் அது.

'நாய் உடை முதுநீர்' (அகநா. 16) என்னும்அகப்பாட்டினுள்,

'நாணி நின்றோள் நிலைகண்டு, யானும்,
பேணினென் அல்லெனோ மகிழ்ந! வானத்து
அணங்க(அ)ருங் கடவுள் அன்னோள், நின்
மகன்தாய் ஆதல் புரைவது ஆங்கு எனவே'

என்புழி, நாணி நின்றோள் என்னும் பொருட்பெயர், தன் தொடர்ப்பொருளைக் கொண்டு முடிந்த பின்னர், அப்பொருட்பெயர்மேல் ஒரு காரியம் கூறவேண்டியவழி, 'அவள்' என்று சுட்டிக் கூறுதல் வேண்டும்; அங்ஙனம் கூறாது, வானத்து அணங்க(அ)ருங் கடவுள் அன்னோள் என எல்லார்க்கும் பொதுவாயதொரு பெயரான் கூறினாள் ஆயினும், கூறுகின்றாள் பரத்தையைக் கருதியே கூறுதலின், அக் 'கடவுள் அன்னோள்' என்ற பெயரும் சுட்டுப் பெயர்த்தன்மையாய் நின்றவாறு காண்க.

'அளிநிலை பொறா அது' என்னும் அகப்பாட்டினுள்(5) 'ஒண்ணுதல். . . . உயிர்த்தகாலை, மாமலர் மணி உரு இழந்த அணிஅழி தோற்றம், கண்டே கடிந்தனம் செலவே' என முடித்த பின்னர், அவள்மேல் பின்னரும் ஒரு காரியம் கூறக்கருதிய தலைவன், 'ஒண்தொடி' எனப் பொதுப் பெயரான் கூறினானேனும், அப்பெயர் 'அவள்' என்னும் பொருள் தந்து நின்றவாறு காண்க.

'கொய்தளிர்த தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே ! - கைதொழுவல்;
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணஎஞ்
சாலேகம் சார நட' (முத்தொள்ளாயிரம்)

பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடு போழ
நற்பூங் கழலான் இருதிங்கள் நயந்த வாறும்;
கற்பாடு அழித்த கனமாமணித் தூண்செய் தோளான்,
வெற்புஊடு அறுத்து விரைவின்நெறிக் கொண்டவாறும்
- சீவக. 19

என்றாற்போலப் பிற செய்யுள்களுள்ளும் பொருட்பெயர் சுட்டுப்பெயர்ப் பொருளவாய் வருதல் பெரும்பான்மை என்று உணர்க.

'வையைக் கிழவன் வயங்குதார் மாண்அகலம்
தையலாய் ! இன்றுநீ நல்கினை; நல்காயேல்,
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடுஅறியக் கௌவை ஒருங்கு' -முத்தொள்ளாயிரம்

என்புழிக் கூடலார்கோ என்றாற்போலப் பின் பொருட்பெயர் பொதுவாய் நில்லாது அப்பொருளையே விளக்கிச் சுட்டாய் நிற்பனவும் 'ஒன்று என முடித்தலால்' கொள்க.

இச்சூத்திரத்துக்குப் பலரும் கூறும் பொருள் எல்லாம் முன்னிற் சூத்திரத்தான் பெற்றவாறு காண்க.

உம்மை -சிறப்பு உம்மை; அது வேறுபடுதல் மாலைத்து ஆயினும், பொருள் வேறுபடாது ஒன்று ஆகும் என்றவாறு. *(37)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**37. பொருளொடு புணரா -**

அஃறிணைச்சுட்டு 'இஃது ஒத்தன்' என்றாற் போல உயர்திணைப் பொருளை உணர்த்தும். சுட்டுப்பெயர் வரவேண்டிய இடத்தில் சில பொருட் பெயர்கள் வரினும் அவை தம் பொருள் உணர்த்தாது சுட்டுப்பொருளையே உணர்த்தும்.

'இஃதோ செல்வற்கு ஒத்தனம் யாம்' -**செல்வனாகிய இதனுக்கு** நாங்கள் பொருந்தியவர்கள் ஆவோம்.

**செல்வன் இ்ஃது** என்பதற்குச் செல்வன் இவன் என்று பொருள் செய்ய வேண்டும்.

'**நாணி நின்றோள்**' - "நாணி நின்ற பரத்தையின் நிலையைக் கண்டு, வானத்தின் அரிய தெய்வம் ஆகிய அருந்ததியைப் போன்றாள், நின் மகனுக்குத் தாய் ஆதல் ஒக்கும் என்று யானும் அவளைவிரும்பினேன் அல்லெனோ?"

இதன்கண், 'வானத்து அணங்கருங் கடவுள்அன்னோள்' என்ற தொடர் தன் பொருளை உணர்த்தாது பரத்தையாகிய 'அவள்' என்ற சுட்டுப்பெயர்ப் பொருளையே உணர்த்தியது.

**அளிநிலை பொறாஅது**- "ஒள்ளிய நெற்றியை உடைய தலைவி புதல்வன் தலையில் அணியப்பட்ட மாலையை மோந்து பெருமூச்சுவிட்டபோது, அச்சிறந்த மலர்கள் பவளம் போலும் உருவினை இழந்த பொலிவற்ற காட்சியைக் கண்டு நாம் வேற்றூர் செல்வதனைத் தவிர்த்தோம். ஒள்ளிய தொடியினை அணிந்தவள் நாம் அணியம் ஆகவும் இவ்வாறு வருந்தும் இயல்பினள். நாம் பிரிந்து செல்வோம்ஆயின் உயிர்பிழைத்திராள் ஆதலின் செலவைத் தவிர்த்தோம்."

இப்பகுதியில் முதலில் தலைவியைக் குறிப்பிட்டுப் பின்னர் 'ஒண்டொடி' என்று குறிப்பிட்ட தொடர் 'அவள்' என்னும் சுட்டுப்பெயர்ப் பொருளையே தந்தது.

**கொய்தளிர்**- "கொய்யப்பட்ட குளிர்ந்த தளிர்களை இணைத்துச் செய்யப்பட்ட பூமாலையை அணிந்தவனாகிய நாட்டியத்தில் வல்ல பெருஞ்சேந்தன் என்னும் தலைவன் நாடோறும் ஏறிச்செலுத்தும் வலிய களிறே ! உன்னைக் கைகள் கூப்பி வணங்குகின்றேன். கலவைச் சந்தனம் பூசியவனை நான் கண்கள் திருப்தி அடையுமாறு காணும்படி என் இல்லத்துச் சாளரங்கள் அருகில் நடந்து செல்வாயாக."

இப்பாடலுள், பெருஞ்சேந்தனாகிய அவனை என்ற சுட்டின் பொருளைக் 'காலேகவண்ணனை' என்ற தொடர் தெரிவிக்கிறது.

**பொற்பூண்** - நல்ல அழகிய வீரக்கழலை அணிந்த சீவகன், பூணாகிய கிம்புரியைச் சுமந்த முலையாகிய கோடு உழாநிற்க, அதனை இரண்டு திங்கள் விரும்பியபடியும், உலகத்தின் பெருமையைக் கெடுத்த கனத்த மணித்தூணை ஒத்ததோளான் காரியத்தின் விரைவாலே மலையை ஊடறுத்து வழிக்கொண்ட படியும்.

இதன்கண், 'கற்பாடு அழித்த கனமாமணித் தூண்செய் தோளான்' என்ற தொடர் 'அவன்' என்றும் சுட்டுப்பொருளே தந்தவாறு.

**வையைக் கிழவன்** - "தோழீ! வையைநதிக்கு உரிமை யுடைய பாண்டியனது விளங்குகின்ற மாலையை அணிந்த மேம்பட்ட மார்பினை நீ எனக்கு வழங்குவாயாக. அங்ஙனம் வழங்காவிடின், இந்நாடு முழுதும் அறியும்படியாகப் 'பாண்டியனை விரும்பிய மகள் ஒருத்தி அவனை அடைய முடியாமையால் உயிர் நீத்தாள்' என்ற பழிமொழிக்கு மதுரை நகர் மன்னனொடு நீயும் காரணம் ஆவாய்."

'கூடலார் கோவொடு' என்ற தொடர் அவனொடு என்ற சுட்டுப்பெயர்ப் பொருளில் வந்தது.

இந்த நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் இங்ஙனமே பொருள் செய்த காரணம், இளம்பூரணரும் சேனாவரையரும் இந்நூற்பாவிற்கு வழங்கிய பொருள் இதற்கு முற்பட்ட இரண்டு நூற்பாக்களிலேயே அடங்கி இருத்தலாம்.

'ஆயினும்' என்பதன்கண் உள்ள உம்மை சிறப்பு உம்மை.

வேறுபொருள்படுதல் மாலைத்து - வேறாகப் பொருள் செய்யப்படும் இயல்பினது.

### தெய்வச்சிலையார் உரை

*35. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்*
*பொருள்வேறு படாஅது ஒன்றுஆ கும்மே.*

செப்புவழு அமைத்தலை நுதலிற்று; மேலதற்கு ஒரு புறனடை எனினும் அமையும்.

இ-ள் : வினாவப்பட்ட பொருளொடு புணராச் சுட்டுப் பெயரைச் சொல்லினும், பொருள் வேறுபடாது ஒன்றுஆம் எ-று.

இப்பயறு அல்லது, இப்பட்டு அல்லது இல்லை என்னாது, இவை அல்லது இல்லை எனினும் பொருள் வேறுபடாவாறு கண்டு கொள்க. *(35)*

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**35. 'பொருளொடு புணரா'-**

இவையல்லது இல்லை எனினும் வினாவினான் வினாவிற்கு விடையாகப் பயற்றையோ, பட்டாடையையோ குறிக்கும் என்பது.

**கல்லாடனார் உரை**

***37. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும் பொருள்வேறு படாஅது ஒன்றுஆ கும்மே.***

**என்**-எனின், இஃது ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்காத்தல் நுதலிற்று. மேல் இவைஅல்லது பயறு இல்லை என்பதனைப் பற்றிப் பிறத்தலான் மேலதற்கே புறனடை எனினும் அமையும்.

இ-ள் : பொருளொடு பொருந்தாச் சுட்டுப்பெயர் ஆயினும் பொருள் வேறுபடாது ஒருபொருளே ஆகும் எ-று.

எ-டு. : இவை அல்லது பயறு இல்லை என வரும்.

இவை என்பது பயறே எனினும், பயறு என்பது பின் உண்மையின் அதன்மேல் செல்லாது பிறிது ஒன்றனைச் சொல்லியதுபோலும் நோக்கு உடைத்தே எனினும், அமைக என்றவாறு.

இதனால் சொல்லியது : ஒரு பொருள்மேல் இரு பெயரும் பலபெயரும் கூறுதல் இலக்கணமே எனினும் இயைபுபடக் கூறவேண்டும். அவ்வழி இயைபு இல்லது கண்டு அம்மரபு வழுவினை அமைத்தவாறு ஆயிற்று. *(37)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**37 'பொருளொடு . . . ஒன்றாகும்மே.'-**

இது வழூவமைதியாதல் விளக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

***37. பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்***
***பொருள்வேறு படாஅது ஒன்றுஆ கும்மே.***

எ-டு : 'இஃது ஒத்தன்' (கலி-84) என்றவழி, இஃது என்று அஃறிணைப் பொருளை உணர்த்திய சுட்டு, இவன் ஒருத்தன் என உயர்திணைப் பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க.

இன்னும் ஒரு கருத்து :. பெயர்ப் பொருளொடு புணரா ஆயினும் சுட்டுப்பொருளை வேறுபடாது ஒன்று ஆகும். இதன் கருத்து: சில பொருட் பெயர் சுட்டுப் பொருளை உணர்த்தா ஆயினும், தாம் சுட்டுவது ஒரு பொருளிடத்து வேறுபட நில்லாமல் அப்பொருளையே உணர்த்தி நிற்கும்.

எ-டு. : 'கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே - கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணஎம்
சாலேகம் சார நட.'

இதனுள் உன்னை எனவும், அவனை எனவும் சுட்டிக் கூறுதல் காண்க. *(37)*

## ஒருவர் உரைவிளக்கம்

**37. 'பொருளொடு . . . ஒன்றாகுமே.'-**

சுட்டு பொருளொடு புணரா ஆயினும், பெயர் பொருளொடு புணரா ஆயினும் வேறுபடாது ஒன்றாகும் என்று பிரித்து நச்சினார்க்கினியர் வரைந்த உரையை ஏற்ப உணராமல் அதன் கருத்தை உட்கொண்டு உரை வரையப் பட்டுள்ளது.

'வயக்களிறே! உன்னைக் கைதொழுவல்
காலேக வண்ணனாகிய அவனைக் கண்ணாரக் காண'

என இப்பாடலில் களிற்றையும் சேந்தனையும் சுட்டிக் கூறியவாறு.

## சாத்திரியார் உரை

37. 'பொருளொடு . . . ஆகும்மே'

சேனாவரையரும் பிறர் மதமாக வேறொரு பொருள்கூறி அதனை மறுக்காது விடுத்துள்ளார். நச்சினார்க்கினியர் உரையில் வாக்கிய பேதம் உள்ளது.

## பாலசுந்தரனார் உரை

37. 'பொருளொடு . . . ஆகும்மே.'

பொருளொடு புணர்ந்த சுட்டாவன: அப்பொருள், அவ்வீடு, இப்பொருள், இவ்வீடு, இம்மலர், இப்பயறு என வருவன. பொருளொடு புணராச் சுட்டாவன; அது, இது, அவை, இவை எனப் பொதுவாய் வருவன.

சுட்டுப் பெயரான் விடைகூறுதல் வினாய பொருட்கும், பிறிது பொருட்கும் ஒக்கும் என்க. அதனான் இம்மரபை எடுத்துக்கூறினார்.

இனி, 'வேறுபடாது' என்று ஒழியாது, 'ஒன்றாகும்' என்று விதந்து கூறியதனான், முன் கிடந்த பொருளே அன்றி அப்பொருட் கூறுகளையும் அடையாளங்களையும் சுட்டிக் கூறினும் அமையும் எனக் கொள்க.

போர்க்களத்துக் கிடந்த கோட்டினைக் காட்டி 'இஃது அரசன் யானை' எனவும், அதன் அடிச்சுவடுகளைக் காட்டி இஃது அரச யானை எனவும் கூறினும், பொருள் வேறுபடாது ஒன்றாகும் என்க. இம்மரபு 'அல்லது இல்' என்னும் வாய்பாடு பற்றியது அன்று ஆதலின் மிகையான் கொள்ளப்பட்டது என உணர்க.

## இளம்பூரணர் உரை

### இயற்பெயரும் சுட்டுப்பெயரும்

*38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும்*
*வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின்*
*சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்*
*இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.*

எ . . . ன், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழூக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : இயற்பெயர் என்பன இரண்டு திணைக்கும் உரிய பெயர்; சுட்டுப் பெயர் மூன்று சுட்டும் முதலாக வரும் பெயர். அவ்விரண்டும் வினைக்கண் ஒருங்கு நடப்பதொரு காலம்தோன்றுமே யெனின், இயற்பெயர் முன்கூறிச் சுட்டுப் பெயரதனைப் பின்னர் வைத்துக் கூறுக என்றவாறு.

உதாரணம் : கொற்றன் வந்தான்; அவற்குச் சோறு கொடுக்க என வரும்.

மற்றுச் 'சுட்டுப் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்' எனவே, இயற்பெயர் வழியே கிளப்ப என்பது முடிந்தது. பின்னை 'இயற்பெயர் வழி'யென வேண்டா; அதனான், உயர்திணைப்பெயர்வழியும் அஃறிணைப்பெயர்வழியும் வைத்துக் கூறுக, அச்சுட்டுப் பெயர்களை என்பதாம்.

உதாரணம் : நம்பி வந்தான்; அவற்குச் சோறு கொடுக்க என வரும். எருது வந்தது; அதற்குப் புல்லுக் கொடுக்க என வரும்.

இனி, 'வினைக்கு இயலுங் காலம்தோன்றின்' என அமையும். 'ஒருங்கு' என்ற மிகையதனான், அகர இகரச் சுட்டே கொள்க.

இனி, 'வினைக்கு ஒருங்கு இயலும் சுட்டே கிளக்க' என்பதனான், பெயர்க்கு யாது முன் கூறினும் அமைக என்பதாம்.

*உதாரணம் : சாத்தன் அவன்; அவன் சாத்தன் -என வரும்.*

*இனி ஒருவன், 'இயற்பெயர்' எனவே, உலகத்து இயன்று வரும் பெயர் எல்லாம் அடங்கும் என்னும்.* *(38)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**38. 'இயற்பெயர்க் கிளவியும்' -**

*இயற்பெயர்-இருதிணைக்கும் பொதுவான சாத்தன், சாத்தி முதலிய பெயர், உலகத்தில் வழங்கிவரும் எல்லா வகைப் பெயர்கள் - என்று இருவகையாக இளம்பூரணர் விளக்குகிறார்.*

*சுட்டு முற்கிளவார் என்பதே போதுமானது. இயற்பெயர்ப் பின்னர் வரும் என்பது மிகை. அம்மிகையான் உயர்திணைப் பெயருக்குப் பின்னரும் அஃறிணைப் பெயருக்குப் பின்னரும் வரும் சுட்டுக்கள் கொள்ளப்பட்டன.*

*'ஒருங்கு' என்பது மிகைச்சொல். அதனான் அகர இகரச் சுட்டே கொள்ளப்பட்டன.*

## சேனாவரையர் உரை

### இயற்பெயரும் சுட்டுப்பெயரும்

***38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்***
***வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின்***
***சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்;***
***இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.***

*(இ-ள்) : இயற்பெயரும், சுட்டுப்பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினை கோடற்கு ஒருங்கு நிகழும் காலம் தோன்றுமாயின், உலகத்தார் சுட்டுப்பெயரை முற்படக் கூறார், இயற்பெயர்க்கு வழியவாகக் கூறுவர் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.*

வினைக்கு ஒருங்கு இயலுங்கால் அப்பெயர் எழுவாயாயும் உருபு ஏற்றும் நின்றன எல்லாம் கொள்ளப்படும்.

வினைக்கு என்புழி அவ்விரு பெயரும், ஒரு வினை கோடலும் தனித்தனி வினை கோடலும் கொள்க. 'ஒருங்கு இயலும்' என்றதனான் அவை ஒரு பொருள்மேல் வருதல் கொள்க.

*(எ-டு) :* சாத்தன் அவன் வந்தான், சாத்தன் வந்தான் அவன் போயினான் எனவும், சாத்தி வந்தாள் அவட்குப் பூக்கொடுக்க எனவும் வரும்.

அவன் தான் வந்தான், அவன் ஒருவனும் அறம் கூறும், ஈது ஒன்று குருடு என இயற்பெயர் அல்லா விரவுப் பெயர்க்கும், உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் வரையறை இன்றிச் சுட்டுப்பெயர் முற்கிளக்கவும்படுதலின் இயற்பெயர்க் கிளவி என்றார். அவ்வாறு அவை முற்கிளக்கப்படுவது ஒருவினை கோடற் கண்ணே என்பது. அற்றேல், அவை முடவன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க, நங்கை வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க, குதிரை வந்தது அதற்கு முதிரை கொடுக்க-எனத் தனித்தனி வினை கோடற்கண் சுட்டுப்பெயர் பிற்கிளக்கப் படுதல், முன்னையதற்குத் 'தன்னினம் முடித்த'லினானும் ஏனை இரண்டற்கும் 'இயற்பெயர்' என்ற மிகையானும் கொள்க.

பிறிதுவினை கோடற்கண் எனவே, அவன் சாத்தன், சாத்தன்அவன் என ஒன்றற்கு ஒன்று பயனிலை ஆதற் கண்ணும், ஒரு பொருள்மேல் நிகழும் எனவே, அவனும் சாத்தனும் வந்தார், சாத்தனும் அவனும் வந்தார் என வேறு பொருளவாய் வருதற்கண்ணும், யாது முற்கூறினும் அமையும் என்பதாம்.

வினை என்றது முடிக்கும் சொல்லை.

சுட்டுப் பெயர் யாண்டும் இயற்பெயர்வழிக் கிளக்கப்படும் என யாப்புறுத்தற்கு, முற்படக் கிளவார் என்றும், இயற்பெயர் வழிய என்றும் கூறினார்.

சுட்டுப் பெயர் என்றார் ஆயினும், அகர இகரச் சுட்டுப் பெயரே கொள்க.

இதுவும் ஒரு மரபு வழாநிலை. *(38)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**38. இயற்பெயர் . . . புலவர்-**

இயற்பெயர் - சாத்தன் கொற்றன் என வழங்குதற் பயத்தவாய் ஒரு காரணமின்றிப் பொருளேபற்றி வரும் பெயர் *(சொ. 174 - சேனா.)*

சாத்தன் அவன் வந்தான் என்றாற்போல இயற்பெயரை அடுத்துச்சுட்டுப்பெயரை வழங்கும் வழக்கம் உரையாசிரியர் காலத்தது என்பதனைச் சாத்திரியார் விளக்கியுள்ளார். சேனாவரையர் அவ்வழக்கினைக் குறிப்பிட்டுள்ளார். நச்சினார்க்கினியர், "சாத்தி அவள் வந்தாள் என்றாற்போலத் 'தேவியவள் சுடுகாடு சேர்ந்தவாறும்' என வினைக்கு ஒருங்கு இயன்றது என்பாரும் உளர். அது வழக்கு இலது என மறுக்க" என்று சீவக. 9ஆம் பாடல் உரையில் குறிப்பிட்டுள்ளார். இயற்பெயர் அல்லா விரவுப்பெயர் - சினைப்பெயர், சினை முதற்பெயர், முறைப்பெயர் முதலியன. *(சொ. 174)*

## நச்சினார்க்கினியர் உரை

### இயற்பெயரும் சுட்டுப்பெயரும்

***38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும்***
***வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின்***
***சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்***
***இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.***

இஃது ஒரு பொருளை உணர்த்தும் இருபெயர் வழுக் காக்கின்றது.

இ-ள் : இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும் - இயற்பெயராகிய சொல்லும் சுட்டுப்பெயராகிய சொல்லும்; வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின் - ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிது வினைகோடற்கு ஒருங்கு நிகழும் காலம் தோன்றுமாயின்; சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார் - உலகத்தார் சுட்டுப்பெயராகிய சொல்லை முற்படக் கிளவார்; இயற்பெயர் வழிய என்மனார் புலவர் - இயற்பெயருக்குப் பின்னாகக் கூறுவர் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு. 'ஒருங்கு இயலும் என்றதனான், இயற்பெயர்வழி நிற்றற்கு உரிய அகர இகரச் சுட்டே கொள்க.

உதாரணம் : சாத்தன் வந்தான்; அவற்குச் சோறு கொடுக்க-
சாத்தி வந்தாள்; அவட்குப் பூக்கொடுக்க-

எனவரும்.

'அவன் வந்தான்; சாத்தற்குச் சோறு கொடுக்க' எனின், அவனும் சாத்தனும் வேறாம்; அவன் வருந்துணையும் சாத்தன் சோறு பெறாது இருந்தான்ஆவான் செல்லும். அங்ஙனம் கூறற்க.

இனி, 'இயற்பெயர்வழிய' என்ற மிகையான், இயற்பெயர் அல்லா உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின்வருதல் கொள்க.

உதாரணம் : நம்பி வந்தான்; அவற்குச் சோறு கொடுக்க-
நங்கை வந்தாள்; அவட்குப் பூக்கொடுக்க-
எருது வந்தது; அதற்குப் புல் இடுக-
குதிரை வந்தது; அதற்கு முதிரை கொடுக்க-

எனவரும்.

'தன் இனம் முடித்தல்' என்பதனான், விரவுப்பெயருள் இயற்பெயர் ஒழிந்தனவும் கொள்க.

உதாரணம்: முடவன் வந்தான்; அவற்குச் சோறுகொடுக்க-
முடத்தி வந்தாள்; அவட்குக் கூறை கொடுக்க-
எனவரும்.

'வினைக்கு ஒருங்கு இயலும்' என வினை கூறுதலான், பெயர்க்கு இயலாது முன்கூறினும் அமைக என்பதாம்.

உதாரணம்: சாத்தன் அவன்; அவன் சாத்தன் எனவரும். *(38)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**38. இயற்பெயர்க் கிளவியும் -**

'அவன் வந்தான். சாத்தற்குச் சோறு கொடுக்க':

"சாத்தன் சோறுபெற வந்தான். ஆனால் அவன் வந்த உடனே அவனுக்குச் சோறு வழங்கமுடியவில்லை. மற்றொருவன் வரும்வரை அவன் சோறுபெறக் காத்திருக்க வேண்டியிருந்தது. இந்நிலையில் அவ்வேற்றவன் வந்து விட்டான். இனிச் சோறு வழங்குவதில் தடையில்லை. ஆதலின் சாத்தனுக்குச் சோறு கொடுக்கவும்" - என்று பொருள் தரும் .

'சுட்டுப்பெயர் முற்படக் கிளவார்' என்பதே போதும்; 'இயற்பெயர்வழிய ' என்பது மிகை. அம்மிகையான் சில கொள்ளப்பட்டன.

விரவுப்பெயருள் இயற்பெயர் ஒழிந்தன - சினைப் பெயர், சினை முதற்பெயர், முறைப்பெயர் முதலியன. *(சொ.176)*

**தெய்வச்சிலையார் உரை**

***36. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.***

ஒரு பொருள்மேல் பலபெயர் வருவழிச் செப்புவழூக் காத்தலை நுதலிற்று.

இ-ள் : ஒரு பொருள்மேல் வரும் இயற்பெயர்ச் சொல்லும், சுட்டுப்பெயர்ச்சொல்லும், வினைகோடற்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின், சுட்டுப்பெயர்ச் சொல்லை முற்படச் சொல்லார்; இயற்பெயர் வழியவாகக் கூறப்படும் என்று சொல்லுவர் புலவர் எ-று.

'வழிய' எனப் பன்மை கூறியது, சுட்டுப்பெயர் பல ஆகலான். இயற்பெயர் ஆவன : சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி என்பன. சுட்டுப்பெயர் ஆவன : அவன், இவன், அவள், இவள் என்பன. இயற்பெயர் என்றார் ஆயினும், 'வந்ததுகொண்டு வாராதது முடித்தல்' என்பதனான், ஒரு பொருட்குப் பெயர் ஆகி வரும் நிலப்பெயர் முதலாயினவும் கொள்க. 'ஒருங்கு இயலும் காலம் தோன்றின்' என்பதனான், ஒரு பெயர் ஒரு வினையொடு முற்றி நில்லாது பல சொல்லொடு தொடரும் காலத்து இவ்வாறு வருவது என்று கொள்க.

சாத்தன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; சாத்தி வந்தாள், அவட்குப் பூக் கொடுக்க என வரும். பிறவும் அன்ன.

சுட்டுப்பெயர் முற்கூறின் ஒரு பொருள் ஆதல் தோன்றாது ஆம். *(36)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**36. 'இயற்பெயர் கிளவியும்' -**

இயற்பெயர் ஒருவனையோ ஒருத்தியையோ அழைப் பதற்கு அடையாளமாகப் பெற்றோரும் சான்றோரும் வழங்கிய பெயர்.

ஒரு பொருட்குப் பெயராகி வரும் 'நிலப்பெயர் முதலாயின' 160ஆம் நூற்பாவில் குறிப்பிட்டவை. வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின் என்பது ஓர் இயற்பெயர் பற்றிய செய்தி ஒருவாக்கியத்தில் முடியாது பல வாக்கியங் களில் தொடரும்போது என்பது.

அவன் வந்தான்; சாத்தற்குச் சோறு கொடுக்க எனின், அவனும் சாத்தனும் வெவ்வேறு மக்களாகக் கருதப்படுவர்.

## கல்லாடனார் உரை

***38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும்***
***வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின்***
***சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்***
***இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.***

என்-எனின், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : இயற்பெயர் ஆகிய சொல்லும், சுட்டுப் பெயர் ஆகிய சொல்லும், வினைச்சொற்கண்ணே கூடவரும் காலம் தோன்றின், அவற்றுள் சுட்டுப்பெயர்க் கிளவியை முற்படச் சொல்லார்; இயற்பெயருக்குப் பின்வைத்துச் சொல்லுக என்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

எ-டு. : சாத்தன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; கொற்றி வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க - என்றாற் போல்வன.

'தன்னினம் முடித்தல்' என்பதனானே விரவுப் பெயர்களில் இயற்பெயர் ஒழிந்தனவும் கொள்ளப்படும்.

எ-டு : முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க - என்றாற்போல்வன.

'இயற்பெயர் வழிய' என்ற மிகையான் உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் பிற்கூறுக என்பது கொள்ளப்படும்.

எ-டு : நம்பி வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; எருது வந்தது, அதற்குப் புல் இடுக - என வரும்.

'ஒருங்கு இயலும்' என்ற மிகையான், இம்மூவகைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் கூறும்வழி அகரச்சுட்டே கிளக்க என்பது கொள்ளப்படும்.

'வினைக்கு ஒருங்கு இயலும்' என்று வினைக்கே கூறுதலான் பெயர்க்கு யாது முற்கூறினும் அமையும் என்பது.

சாத்தன் அவன், அவன் சாத்தன் என வரும்.

இதனால் சொல்லியது : பொருட்பெயரொடு சுட்டுப் பெயர் கூறும்வழிப் பின்கூறாது முன்கூறின் பிற பொருள் மேலே நோக்குப்பட நிற்பது கண்டு அவ்வாறு கூறற்க என மரபு வழுக் காத்தவாறு. (38)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**38. 'இயற்பெயர்க் . . . புலவர்.'-**

'தன்னினம் முடித்தல்' என்பதனானும், 'இயற்பெயர் வழிய' என்ற மிகையானும், 'ஒருங்கியலும்' என்ற மிகை யானும் கொள்ளப்பட்ட செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூற்பாவில் மரபுவழுக் காக்கப்பட்ட செய்தி விளக்கப்பட்டது.

## ஒருவர் உரை

***38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும் வினைக்குஒருங்கு இயலும் காலம் தோன்றின் சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார் இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.***

எ-து : இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஆகிய இரண்டும் ஒன்றனை ஒன்று கொள்ளாது, இரண்டும் பிறிதுவினை கோடற்கு ஒருங்கு நிகழும் காலம் தோன்றுமாயின், சுட்டுப் பெயரை முற்படச் சொல்லார், இயற்பெயர்க்குப் பின்னாகச் சொல்லுவர்.

எ-டு : சாத்தன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க, சாந்து கொடுக்க; சாத்தி வந்தாள் அவட்குச் சாந்து கொடுக்க, பூக்கொடுக்க.

'ஒருங்கியலும்' என்றதனான் ஒரு பொருளையே உணர்த்துதல் கொள்க.

இயற்பெயர் வழிய என்றதனான், விரவுப் பெயர் அன்றி, உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப்பெயர் பின்வருதல் கொள்க.

எ-டு. : நம்பி வந்தான் அவற்குச் சோறு கொடுக்க - நங்கை வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க - எருது வந்தது அதற்குப் புல் இடுக - நாய் வந்தது அதற்குச் சோறு இடுக - குதிரை வந்தது அதற்கு முதிரை கொடுக்க - என வரும்.

'வினைக்கு ஒருங்கு இயலும்' என்றதனான், பெயர்க்குச் சுட்டு ஆயினும், இயற்பெயர் ஆயினும் ஒன்று முற்கூறினும் அமையும்.

சாத்தன் அவன், அவன் சாத்தன் - என வரும். (38)

கோபலய்யர் - 28

## ஒருவர் உரைவிளக்கம்

**38. 'இயற்பெயர்க் . . . புலவர்.'-**

*நாய் வந்தது; அதற்குச் சோறு இடுக - இந்த உதாரணம் இவராலேயே கூறப்பட்டுள்ளது.*

## சாத்திரியார் உரை

*38. 'இயற்பெயர் . . . புலவர்.'*

*சாத்தன் அவன் வந்தான் முதலிய வழக்கு இளம்பூரணர் காலத்தில் மிகுதியாக இருந்தது என்ற செய்தி 'தன்மைச்சொல்லும் அஃறிணைச் சொல்லும் அவை வழங்குமிடத்து' (சொ. 43 - இ) முதலிய அவர்வாக்கியங்களால் அறியப்படுகிறது.*

*இயற்பெயர் என்பதற்கு 'உலகத்தில் இயன்று வரும் பெயர்' என்றுகூறும் பொருள் பொருந்தாது என்பதனை மனத்துக்கொண்டு சேனாவரையர் உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் சுட்டு வரையறை இன்றி முற்கிளக்கவும் வரும் என்பதனை எடுத்துக்காட்டால் விளக்கியுள்ளார்.*

## பாலசுந்தரனார் உரை

**38. 'இயற்பெயர் . . . புலவர்.'-**

*'சுட்டுப்பெயர்க்கிளவி முற்படக் கிளவா' என்பதே பாடம்.*

*சுட்டுப் பெயர்கள் முற்படக்கிளக்கப்படா; இயற்பெயர் வழியினவாம் என்பது பொருள்.*

*ஈண்டு இயற்பெயர் என்றது விரவுப் பெயரை அன்று; பொருளை உணர நிற்கும் குறியீடாகிய எல்லாப் பெயர் களையும் ஆம். அவற்றுள் சுட்டுப்பெயரை விதந்தமையின், அவை தவிர்த்த ஏனை எல்லாப் பெயரும் கொள்ளப்படும்.*

'வினைக்கு ஒருங்கு இயலும்' என்றதனான், அப்பெயர் வினைமுதலாயும் ஏனை வேற்றுமை ஏற்றும் நிற்பன எல்லாம் கொள்க.

சாத்தன்அவன் வந்தான், சாத்தன்அவன் பெரியன், சாத்தன்அவன் கொடை என வரும். இவை இயற்பெயரும் சுட்டுப்பெயரும் வினைமுதலாய் ஒருங்கியன்று ஒரு பயனிலை கொண்டன.

சாத்தன் வந்தான்; அவன் உண்ணுவான் . . . நாரை வந்தன; அவை மீன் அருந்தும் எனவரும். இவை இயற் பெயரும் சுட்டுப்பெயரும் ஒரு பொருளைச் சுட்டி, வெவ்வேறு பயனிலை கொண்டன. சாத்தன் எழுந்தான்; அவனை அழைத்திடுக . . . கொற்றனைக் கேட்க; அவன்கண் இருக்கும் . . . இவை ஏனை வேற்றுமை ஏற்ற பெயர்களாய் ஒருங்கு இயன்று பயனிலை கொண்டன.

இச்சூத்திர விதியான், பின்வரும் சுட்டுப் பெயர்களான், முன்நின்ற இயற்பெயர்கள் பொதுமை நீங்கி ஒரு திணைக்கு உரியவாவதை ஓராமல் இயற்பெயராவது விரவுப் பெயரை என்று பொருள் கொள்வதும், 'இயற்பெயர் வழிய' என்னும் இன்றியமையாத தொடரின் செம்பொருள் காணாமல் அதனை மிகையாகக் கொண்டு அதனான் உயர்திணைப் பெயர் அஃறிணைப் பெயர்களை அடக்குதலும் பொருந்தாமை காண்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

38. 'சுட்டுப் பெயர்க்கிளவி முற்படக் *கிளவா*' என்ற பாடத்தின் சிறப்பை நோக்குக. 'இயற்பெயர் என்பது விரவுப்பெயர் அன்று; பொருளை உணரநிற்கும் எல்லாப் பெயர்களுமே' என்ற பொருளே இந்நூற்பாவிற்குப் பொருத்தமாக உள்ளது.

## இளம்பூரணர் உரை

### எய்தியது விலக்குதல்

***39. முற்படக் கிளத்தல் செய்யுள் உரித்தே.***

எ . . . ன், இஃது எய்தியது விலக்குதல் நுதலிற்று.

இ-ள் : செய்யுளகத்து ஆமே எனின், சுட்டுப்பெயர் முன் சொல்லி இயற்பெயர் பின் வைத்துக் கூறினும் அமையும் என்றவாறு.

உதாரணம் :

***அவன்அணங்கு நோய்செய்தான், ஆயிழாய் ! வேலன்***
***விறல்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி-முகனமர்ந்(து)***
***அன்னை அலர்கடப்பந் தாரணியில் என்னைகொல்,***
***பின்னை அதன்கண் விளைவு?'***

என வரும். இதனுள் அவன் என்பது சுட்டு; சேந்தன் என்பது இயற்பெயர். (39)

## இளம்பூரணர் உரை விளக்கம்

**39. 'முற்படக் கிளத்தல்' -**

செய்யுளுள் முற்படக் கிளக்கப்பட்டதாயினும் மொழிமாற்றிப் பிற்படக் கொண்டு பொருள் செய்யப்படும் என்பர் கல்லாடர்.

*'அவன் அணங்கு'* - இது தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றது. களவுக் காலத்துத் தலைவன் தன் இட்டுப்பிரிவு முதலியவற்றான் தலைவியின் உள்ளத்திற்கும் உடலுக்கும் நோய் செய்தானாக, அந்நோய்க் காரணத்தைப் பிறழ உணர்ந்த செவிலி, இந்நோய் வெறியாட்டினான் தீரும் என்று முருகற்கு வெறிஅயர, அதன்கண் ஈடுபட்ட வேலன் முருகனுடைய பெயருள் ஒன்றாகிய சேந்தன் என்ற பெயரை வாழ்த்தினான்.

தலைவனுடைய இயற்பெயர் சேந்தன் என்பது ஆதலின், தலைவி தலைவனுடைய பெயரே வாழ்த்தப்படுவதாகக் கருதி மகிழ்ந்தாள். பின்னர், அன்னை வேலனிடமிருந்து கடப்பம்பூ மாலையை வாங்கித் தலைவிக்கு அணிவித்தாள். "தலைவனாகிய சேந்தன் சூடிய மாலையை அணிவிப்பின் தலைவி நோய் தீரும். ஆனால் முருகனாகிய சேந்தனுடைய கடப்பமாலையை அணிவிப்பதால் பயன் யாது?" என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள்.

## சேனாவரையர் உரை

## *39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.*

*(இ-ள்)* : இயற்பெயரும், சுட்டுப் பெயரும் வினைக்கு ஒருங்கு இயலும்வழிச் சுட்டுப்பெயரை முற்படக் கூறுதல் செய்யுளுள் உரித்து என்றவாறு.

*(எ-டு):*

'அவன்அணங்கு நோய்செய்தான்;ஆயிழாய்!வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகனமர்ந்து
அன்னை அலர்கடப்பந் தாரணியில் என்னைகொல்
பின்னை அதன்கண் விளைவு'

என வரும். இதனுள் சேந்தன் என்பது இயற்பெயர்.

ஒருவினை கொள்வழிச் சுட்டுப்பெயர் முற்கிளத்தல் வந்தவழிக் கண்டு கொள்க.

இது செய்யுளிடத்து மரபுவழு அமைத்தவாறு. *(39)*

## நச்சினார்க்கினியர் உரை

### எய்தியது விலக்குதல்

## *39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.*

இஃது எய்தியது விலக்கிற்று.

இ-ள் : முற்படக் கிளத்தல் - இயற்பெயரும் சுட்டுப் பெயரும் வினைக்கு ஒருங்கு இயலும்வழிச் சுட்டுப்பெயரை முற்படக் கூறுதல்; செய்யுளுள் உரித்து - செய்யுளிடத்து உரித்து என்றவாறு.

உதாரணம் :

அவன்அணங்கு நோய்செய்தான்; ஆயிழாய்! வேலன்
விறல்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகனமர்ந்து
அன்னை அலர்கடப்பந் தார்அணியில் என்னைகொல்
பின்னை அதன்கண் விழைவு.

சேந்தன் இயற்பெயர். (39)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**39. முற்படக் கிளத்தல் -**

முற்கூறலாகாது என்னப்பட்ட சுட்டுப்பெயர் மொழி மாற்றியும் பொருள் கொள்ளும் நயம் செய்யுட்கண் உண்மையான், அதன் அகத்தாயின் அமையும் என்று நேர்ந்த வாறு ஆயிற்று - என்று கல்லாடனார் குறிப்பிடுகின்றார்.

**அவன் அணங்கு**- இந்த ஒருபாடல்தான் எல்லா உரையாசிரியரானும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இது தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றது.

தலைவனுடைய இட்டுப்பிரிவினான் உள்ளமும் உடலும் வாடிய தலைவி நிலை கண்டு செவிலி இந்நலிவு தெய்வத்தான் ஆயிற்று என்று வெறியாட்டு நிகழ்த்திய இடத்து, வேலவன் முருகனுடைய பெயர்களுள் ஒன்றாகிய சேந்தன் என்ற பெயரை வாழ்த்தினான். தலைவன் பெயரும் அதுவாகலான் தலைவிக்கு அப்பெயர் மனமகிழ்வு தந்தது. வெறியாட்டு நிகழ்த்திய பின்னர்ச் செவிலி முருகனுக்குச் சூட்டிய கடப்பப்பூமாலையைத் தலைவிக்கு அணிவித்தாள். "தலைவிக்குக் காமநோய் விளைவித்த தலைவனுடைய மாலையைச் சூட்டினால்தான் அவள்நோய் தீரும்; முருகனுடைய கடப்பப்பூமாலையை அவளுக்குச் சூட்டியதனான் கிட்டக்கூடிய பயன் யாதும் இல்லை" என்ற கருத்தில்,

"அழகிய அணிகலன்களை அணிந்த தோழியே! அவன் யான் வருந்துவதற்குக் காரணமான நோயைச் செய்தான். வேலன் வெற்றி மேம்பட்ட மாலையை அணிந்த சேந்தன் பெயரை வாழ்த்தினான். ஆனால் அன்னை முகமலர்ந்து முருகனுடைய கடப்ப மாலையை எனக்கு அணிவித்தால் யாது பயன் கிட்டக்கூடும்?" என்ற இப்பாடலில், 'அவன்' என்ற சுட்டுப்பெயர் முன்னரும் 'சேந்தன்' என்ற இயற்பெயர் பின்னரும் வந்துள்ளன. தலைவி தோழிக்குக் கூறியது இது.

## தெய்வச்சிலையார் உரை

**37. *முற்படக் கிளத்தல் செய்யுள் உரித்தே.***

எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலை நுதலிற்று.

இ-ள் : மேலைச் சூத்திரத்துப் பிற்படக் கூறப்படும் என்று சொல்லப்பட்ட சுட்டுப்பெயரை முற்படக் கூறுதல் செய்யுட்கண் ஆம் எ-று.

'அவன்அணங்கு நோய்செய்தான், ஆயிழாய் வேலன்
விறல்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகன்அமர்ந்து
அன்னை அலர்கடப்பந் தார்அணியின் என்னைகொல்,
பின்னை அதன்கண் விளைவு ?'

இதனுள் சேந்தன் என்பதூஉம் அவன் என்பதூஉம் ஒரு பொருள் ஆகியவாறும், சுட்டு முன் வந்துழியும் பொருள் வேறுபடாமையும் கண்டுகொள்க.

அஃது அற்றுஆக, சுட்டுப் பல ஆகலின் உரிய எனப் பன்மையின் கூறாதது என்னை எனின், ஈண்டு அகரச் சுட்டே வருதலின் ஒருமையாகக் கூறப்பட்டது. அதனைப் 'பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்' என்பதனான் கொள்க.

'நாய் உடை முதுநீர் கலித்த' என்னும் அகப்பாட்டினுள் (அகம். 16) கூர் எயிற்று அரிவை, குறுகினள், செத்தனள்,

*கொண்டனள், நாணி நின்றோள், அணங்கு அருங்கடவுள் அன்னோள் - என ஒரு பொருள்மேல் பல பெயர் சுட்டிக் காலம் காட்டியவாறு காண்க. (37)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**37. 'முற்படக்கிளத்தல்'-**

*இந்த உதாரணப்பாடலே எல்லா உரையாசிரியரானும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதன் விளக்கம் இளம்பூரணர் உரையில் காண்க.*

*வந்தது கொண்டு வாராதது முடித்தல், பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல் என்பனவற்றான் அ, இ, உ என்ற மூன்று சுட்டில் அகரச்சுட்டே கொள்ளப்படும். அதனான், 'உரித்து' என்ற ஒருமை வாய்பாட்டான் முடிந்தது.*

*'நாயுடை முந்நீர்க் கலித்த' (அகநா. 16) என்ற பாடலில், கூரிய பற்களை உடைய பரத்தை நெருங்கி வந்தவள், தலைவனொடு புதல்வனின் வடிவு ஒப்புமையை நோக்கினவள், புதல்வனைத் தூக்கிக் கொண்டவள், என்னைக் கண்டு வெட்கப்பட்டு நின்றவள், வானத்தில் விண்மீனாக விளங்கும் அருந்ததியை ஒத்தவள் - எனப் பரத்தை என்ற ஒரு பொருளின்மேல் பலவினையாலணையும் பெயர்கள் வந்தன.*

### கல்லாடனார் உரை

***39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.***

*என்-எனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.*

*இ-ள் : மூவகைப் பெயர்களுக்கும் சுட்டுப்பெயரை முற்படச் சொல்லுதல் செய்யுள் இடத்தாயின் அமையும் என்றவாறு.*

எ-டு. :

'அவன்அணங்கு நோய்செய்தான் ஆய்இழாய் வேலன்
விறல்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகன்அமர்ந்து
அன்னை அலர்கடப்பந் தார்அணியில் என்னைகொல்,
பின்னை அதன்கண் விளைவு?'

என வரும். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இதனால் சொல்லியது : முன்கூறல் ஆகாது என்னப் பட்ட சுட்டுப் பெயர் மொழிமாற்றியும் பொருள் கொள்ளும் நயம் செய்யுட்கண் உண்மையான், அதன்அகத்தாயின் அமையும் என்று நேர்ந்தவாறு ஆயிற்று. (39)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**39. 'முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.'-**

முற்படக் கூறலாகாது எனப்பட்ட சுட்டுப்பெயர் செய்யுளுள் முற்படக் கிளக்கப்படினும் மொழிமாற்றிப் பிற்பட அமைத்துக்கொள்ளலாம் ஆதலின், செய்யுளுள் முற்படக்கூறல் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## ஒருவர் உரை

*39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.*

எ-டு :

'அவன்அணங்கு நோய்செய்தான் ஆயிழாய் வேலன்
விறல்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி - முகன்அமர்ந்து
அன்னை அலர்கடப்பந் தார்அணியில் என்னைகொல்,
பின்னை அதன்கண் விளைவு?'

இதனுள் 'அவன்' என்பது சுட்டுப்பெயர்; சேந்தன் என்பது இயற்பெயர். (39)

### பாலசுந்தரனார் உரை

**39. 'முற்படக் . . . உரித்தே.'**

*(எ-டு.)* ஆக்கமும் கேடும் அதனான் வருதலான்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு -குறள்-642

எனவும் வரும்.

### இளம்பூரணர் உரை

#### சுட்டு முதலாகிய காரணக்கிளவி

***40. சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.***

எ . . . ன், இதுவும் ஒரு பொருண்மேல் இருபெயர் வழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : மேற் சுட்டுப்பெயர் இயற்பெயரின் வழியே கிளக்க எனப்பட்டது போலச் சுட்டு முதலாகிய காரணப் பெயரையும் இயற்பெயர்க்கு வழியே வைத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : *சாத்தன் கையெழுதுமாறு வல்லன்; அதனால் தன் ஆசிரியன் உவக்கும்; தந்தை உவக்கும்*-என வரும்.

அதிகாரத்தான் வழிக்கிளத்தல் 'வினைக்கு ஒருங்கு இயலும்' வழிக் (சொல். 38) கொள்க.

எழுதுமாறு என்பது வினை. முதல் சூத்திரம் பொருள் வழி வந்தது; இது பொருளது குணத்துவழி வந்தது. (40)

### இளம்பூரணர் உரைவிளக்கம்

**40. 'சுட்டு முதலாகிய' -**

*சாத்தன் கை எழுதுமாறு வல்லன்:* எழுதுமாறு - எழுதுதல். *சாத்தன் அழகு, அளவு,* வடிவு, தெளிவு, விரைவு என்ற தொழிற்பண்புகள் தோன்றத் தன் கையால்

எழுதுவதில் தேர்ந்தவன்; அதனால் தன் ஆசிரியன் உவக்கும். ஆசிரியன் உவத்தலுக்குச் சாத்தன் காரணம் அல்லன்; அவன் தொழிற்பண்பே காரணம் என்பது. பொருள் -சாத்தன். குணம்- அவன் எழுத்துச் சிறப்பு.

## சேனாவரையர் உரை

### அதனான் என்பதன் முடிபு

**40. *சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்***
***சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.***

*(இ-ள்)* : சுட்டை முதலாக உடைய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும், சுட்டுப்பெயர் போலத் தன்னால் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொற்குப்பின் கிளக்கப்படும்.

ஈண்டு, சுட்டப்படும் பொருள் தொடர்மொழிப் பொருள்.

*(எ-டு)* : சாத்தன் கை எழுதுமாறு வல்லன்; அதனான் தந்தை உவக்கும்- சாத்தி சாந்து அரைக்குமாறு வல்லள்; அதனான் கொண்டான் உவக்கும் - எனவரும்.

சுட்டு முதல் ஆகிய காரணக்கிளவி உருபேற்று நின்ற சுட்டு முதற்பெயரோடு ஒப்பதோர் இடைச்சொல் ஆகலின், 'சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்' என்றார். செயற்கு என்னும் வினையெச்சம், உருபு ஏற்று நின்ற தொழிற்பெயரோடு ஒப்புமை உடைத்து ஆயினும், உருபும் (தொழிற்) பெயரும் என்று ஆகாது பகுப்பப் பிளவுபட்டு இசையாது ஒன்றுபட்டு இசைத்தலான், அதனின் வேறு ஆயினாற்போல, இதுவும் உருபு ஏற்ற சுட்டுப் பெயரோடு ஒப்புமை உடைத்து ஆயினும் பிளவுபட்டு இசையாது ஒன்றுபட்டு இசைத்தலான், வேறு ஆகவே கொள்ளப்படும் என்பது. அஃதேல், சாத்தன் வந்தான், அஃது அரசற்குத் துப்பு

ஆயிற்று எனத் தொடர்மொழிப் பொருளையும் சுட்டி வரும் சுட்டுப்பெயர் கூறாது காரணக் கிளவியே கூறியது என்னை எனின் :- அவ்வாறு வருவன 'தன்னினம் முடித்தல்' என்பதனான் அடங்கும். ஈண்டுச் சுட்டப்படும் பொருளை உணர்த்துவது பெயர் அன்மையின், சுட்டுப்பெயர் இயற்கை என்றது, வழக்கின் அகத்துச் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொற்குப் பின் நிற்றலும், செய்யுள் அகத்து முன்நிற்றலும் ஆகிய அத்துணையே ஆம். செய்யுட்கண் முன்நிற்றல் வந்தவழிக் கண்டுகொள்க.

பொருள் பற்றாது பண்பு முதலாயின பற்றி வந்த சுட்டு ஆதலின் வேறு ஓதப்பட்டது என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் :- சாத்தன் வந்தான், அஃது அரசற்குத் துப்பு ஆயிற்று எனவும், கிழவன் பிரிந்தான், அதனைக் கிழத்தி உணர்ந்திலள் எனவும், எழுவாயாயும், ஏனை வேற்றுமை ஏற்றும் அச்சுட்டுப் பயின்று வருதலான், பண்பு முதலான வற்றைச் சுட்டும் சுட்டு எனப் பொதுவகையான் கூறாது காரணக்கிளவி என ஒருசார் வேற்றுமைக்கு உரிய வாய்பாடு பற்றி ஓதுதல் குன்றக் கூறல் ஆகலானும், சுட்டுப்பெயர் ஆயின் சுட்டு முதலாகிய காரணக் கிளவி என்றும், சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும் என்றும் கூறுதல் பொருந்தாமையானும் அது போலி உரை என்க.

இதனான் வழக்கின்கண் மரபு வழாநிலையும் செய்யுட் கண் மரபு வழு அமைதியும் உணர்த்தினார். *(40)*

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**40. சுட்டு . . . தோன்றும்-**

38ஆம் நூற்பாவில் சுட்டு தனிப்பெயரைச் சுட்டியது. இந்த நூற்பாவில் சுட்டினான் தொடர் மொழிப் பொருள் சுட்டப்படுகிறது.

செயற்கு என்னும் வினையெச்சம் வேறு; செயல் என்னும் தொழிற்பெயர் நான்கன் உருபு ஏற்றுச் சொல் வேறு, வேற்றுமை உருபு வேறு என்று பிரிக்கப்படும் நிலையில் உள்ள செயற்கு என்ற சொல் வேறு. வினையெச்சம் பிரிக்கப்பட மாட்டாது.

அதுபோல் பிரிக்கப்படாது என்றும் ஒன்றாகவே இருக்கும் 'அதனால்' என்னும் இடைச்சொல் வேறு. அது என்ற சுட்டுப்பெயர் அன்சாரியை பெற்று ஆல் என்னும் உருபை ஏற்றுவரும் அதனால் என்ற சொல்வேறு. உருபு ஏற்ற பெயர் பிரிக்கப்படலாம். ஆனால் அதனால் என்ற இடைச் சொல் பிரிக்கப்படமாட்டாது.

சாத்தன் வந்தான்; அஃது அரசற்குத் துப்பு ஆயிற்று என்புழி அஃது என்ற சுட்டுப்பெயர் சாத்தன் வந்தான் என்ற தொடரைச் சுட்டுகிறது. சுட்டுப்பெயர் இரண்டாவது முதலிய உருபு ஏற்றுத் தொடர்மொழிப் பொருளைச் சுட்டுதலும் விளக்கப்பட்டுள்ளது.

உரையாசிரியர் அதனால் என்பது பண்பு முதலாயின பற்றி வந்த சுட்டு என்றார். மூன்றாம் வேற்றுமைக்கு உரிய அதனை ஓதினால், ஏனை வேற்றுமைகளை ஏற்றுத் தொடர் மொழிப் பொருளைச் சுட்டும் சுட்டுக்களையும் எடுத்து ஓதுதல்வேண்டும். அவ்வாறு ஓதாவிட்டால் குன்றக்கூறல் என்ற சிதைவுக்கு இடம் ஏற்படும். 'அதனால்' என்பது உருபு ஏற்ற சுட்டுப்பெயர் என்று கூறப்படவில்லை. சுட்டை முதலாக உடைய காரணச்சொல் என்றே கூறப்பட்டுள்ளது. மேலும் அது சுட்டுப் பெயரின் இயற்கையைப் பெறும் என்றும் கூறப்பட்டமையான் அது சுட்டுப்பெயர் அன்று என்பதும் புலப்படும். இவற்றான் உரையாசிரியர் கூறுவது பொருந்துவதாக இல்லை என்கிறார் சேனாவரையர்.

## நச்சினார்க்கினியர் உரை

### சுட்டு முதலாகிய காரணக்கிளவி

*40. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்*
*சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.*

இதுவும் அச்சுட்டு ஆராய்ச்சியே கூறுகின்றது.

இ-ள் : சுட்டு முதல் ஆகிய காரணக் கிளவியும் - சுட்டுப்பெயர் முதலாகிய காரணத்தை உணர்த்தும் சொல்லும், உம்மையான் காரணம் இன்றி வரும் சுட்டுப்பெயரும்; சுட்டுப் பெயர் இயற்கையின் செறியத் தோன்றும் - சுட்டுப் பெயர் போலத் தன்னால் சுட்டப்படும் தொழிலை உணர்த்தும் சொற்குப்பின் கிளக்கப்படும் என்றவாறு.

'சுட்டுப்பெயர் இயற்கை' எனவே, வழக்கிற்குப் பின்னும், செய்யுட்கு முன்னும் நிற்கும் என்பது பெற்றாம்.

உதாரணம் : சாத்தன் கைஎழுதுமாறு வல்லன்;
அதனான் தந்தை உவக்கும்.
சாத்தி சாந்து அரைக்குமாறு வல்லள்;
அதனான் கொண்டவன்உவக்கும்.

இவற்றுள் சுட்டு முதலாகிய காரணக்கிளவி உருபு அன்று; உருபு ஏற்ற சுட்டுப் பெயரோடு ஒப்பது ஓர் இடைச்சொல்; என்னை ? பிளவுபடாது ஒன்றுபட்டு இசைத்தலின்.

சாத்தன் வந்தான்; அஃது அரசர்க்குத் துப்பு ஆயிற்று - கிழவன் பிரிந்தான்; அதனைக் கிழத்தி உணர்ந்திலள் - என இவை காரணம் இன்றி வந்தன. (40)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**40. சுட்டுமுத லாகிய -**

சுட்டு ஒருபொருளையே சுட்டும். சுட்டு முதலாகிய காரணக்கிளவியாகிய 'அதனான்' என்பது தனக்கு முற்பட்டுக்

கூறப்பட்ட ஒரு வாக்கியத்தையே சுட்டவும் கூடும். அதனான் என்னும் இடைச்சொல் அது + அன் + ஆன் என்று பிரிக்கப் படாது ஒன்றுபட்டே இருக்கும்.

| | |
|---|---|
| கை எழுதுமாறு வல்லன் - | கையான் அழகு, அளவு, வடிவு, தெளிவு, விரைவு- என்ற சிறப்புக்களொடு —சுவடியில் எழுதுவதில் ஆற்றலுடையவன். |
| சாந்து அரைக்குமாறு - கொண்டவன் -கணவன் | சந்தனம் அரைத்தல். |

## தெய்வச்சிலையார் உரை

***38. சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்***
***சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.***

செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: சுட்டெழுத்து முதல் ஆகிய காரணச் சொல்லும், சுட்டுப் பெயர் இயற்கை போலப் பொருந்தத் தோன்றும் எ-று. என்றது, பிற்படக் கூறப்படும் எ-று.

உ-ம் : மழை பெய்தது; அதனால் யாறு பெருகும். பிறவும் அன்ன.

இது சுட்டுப்பெயருள் அடங்காதோ எனின், பொருளைச் சுட்டாது தொழிலைச் சுட்டுதலானும், காரணக் கிளவி கருவி ஆதலானும் வேறு ஓதப்பட்டது. *(38)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**38. 'சுட்டு முதலாகிய'-**

'அதனால்' என்பது மழை பெய்தலாகிய தொழிலைக் குறிப்பிட்டு மூன்றாம் வேற்றுமைக்கு உரிய கருவிப் பொருளில் வருதலான் வேறு ஓதப்பட்டது.

## கல்லாடனார் உரை

**40. *சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்***
***சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.***

என்-எனின், இதுவும் சுட்டுப்பெயர் ஆராய்ச்சியே கூறுதல் நுதலிற்று.

இ-ள் : சுட்டு எழுத்தை (சுட்டு இடைச்சொல்லை) முதலாக உடைய காரணப் பொருளை உணரநின்ற சொல்லும் மேல்கூறிய சுட்டுப்பெயர் இயல்பு போலப் பெயர்ப்பின்னே யாப்புறத் தோன்றும் என்றவாறு.

எ-டு. : சாத்தன் கை எழுதுமாறு வல்லன், அதனால் தன் ஆசிரியன் உவக்கும்; சாத்தி சாந்து அரைக்குமாறு வல்லள், அதனால் கொண்டான் உவக்கும் - எனவரும். மேற்கூறிய வகைகள் எல்லாம் இதற்கும் ஒக்கும்.

இதுவும் ஆண்டே அடங்காதோ எனின், ஆண்டுச் சுட்டு, பொருள்வழி வந்தது; ஈண்டு அப்பொருளது குணத்துவழி வந்தது என உணர்க. (40)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**40. 'சுட்டு . . . தோன்றும்.'-**

சுட்டு முதலாகிய காரணக்கிளவி 'அதனான்' என்பது.

முன் இரண்டு நூற்பாக்கள் சுட்டுப்பொருள்வழி வந்தன. இது அப்பொருளின் குணத்துவழி வந்தது.

## ஒருவர் உரை

**40. *சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்***
***சுட்டுப்பெயர் இயற்கையின் செறியத் தோன்றும்.***

எ-து : சுட்டுப்பெயர் இயற்பெயரின் பின் கிளக்கப் பட்டது போலச் சுட்டு முதல் ஆகிய காரணச் சொல்லையும், இயற்பெயரின் பின்வைத்துச் சொல்லுக.

எ-டு : சாத்தன் கை எழுதுமாறு வல்லன் அதனான் தன் ஆசிரியன் உவக்கும் - சாத்தி சாந்து அரைக்குமாறு வல்லள் அதனான் கொண்டான் உவக்கும் - எனவரும்.

சுட்டு முதல் ஆகிய காரணக்கிளவி வினைக்கு ஒருங்கு இயலும்வழி வரும் என்று கொள்க. (40)

## ஒருவர் உரைவிளக்கம்

**40. 'சுட்டு முதலாகிய . . . தோன்றும்.'–**

சுட்டு முதலாகிய காரணக்கிளவி அதனான் என்பது. இஃது இயற்பெயர் வினைகொண்டு முடிந்த பின்னரே வரும் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

## சாத்திரியார் உரை

*40. 'சுட்டு . . . தோன்றும்.'-*

அஃது, அதனை முதலிய சொற்கள் முற்கூறப்பட்ட தொடர்மொழிப் பொருளை உணர்த்தி நிற்பதைச் சேனாவரையர் தன்னினம் முடித்தலானும், நச்சினார்க்கினியர் உம்மையானும் கொண்டனர். சேனாவரையர் செய்யுட்கண் முன்நிற்றல் வந்தவழிக் கண்டுகொள்க என்றார். சாத்திரியார்

> ஆக்கமும் கேடும் அதனான் வருதலான்
> காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு (642)

என்ற குறளுரையில் பரிமேலழகர் செய்யுளாதலின் சுட்டுப் பெயர் முன்வந்தது என்று காட்டியிருத்தல் சேனாவரையர் 'வந்தவழிக் கண்டுகொள்க' என்பதற்கு ஏற்ற உதாரணம் ஆதல் காண்க என்று குறிப்பிட்டார். (திருக்குறள் உதாரணம் உருபு ஏற்ற சுட்டுப் பெயர்க்கு உரியது; அதனால் என்ற இணைப்பு இடைச்சொற்கு உரியதன்று என்பதனைச் சாத்திரியார் நோக்கவில்லை.)

## பாலசுந்தரனார் உரை

**40. 'சுட்டு . . . தோன்றும்.'-**

சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்றது அதனான், இதனான் என வரும் இடைச்சொற்களை. காரணப் பொருட்டாக வரும் வேற்றுமையை உணர்த்தும்வழி 'இன் ஆன் ஏது' (சொ. 74) என னகர ஈற்றுச் சொல்லையே ஆசிரியர் கூறினமையானும், லகர ஈறு 'வழாஅல் ஓம்பல்' (சொ. 13) என எதிர்மறை எச்சத்தின்கண்ணும், வியங்கோளின்கண்ணும், உண்பல், காண்பல் என ஒருமைப்பால் உணரவருதற் கண்ணும், தரல், வரல் எனத் தொழிற்பெயர்க்கண்ணும் வருதல் அன்றிக் காரணப் பொருட்டாய சொல்லின்கண் வாராமையானும் 'அதனால்' எனக் கொள்ளுதல் பொருந்தாது. அதனான், இதனான் என னகர ஈறாகக் கொள்ளுதலே நேரிது என்க. இதனான் என்பது பயின்று வாராது.

'நால்வகைப் படையும் ஆற்றல் உடையன; ஒற்றரும் நிலை அறிந்து கூறினர்; குறுநில மன்னரும் துணை நின்றனர்; அதனான் வேந்தன் எளிதில் வென்றான்' என ஒன்றும் பலவு மாகிய தொடர்மொழிக் கருத்துக்களைச் சுட்டி வருதலின் 'அதனான்' என்பது மூன்றன் உருபு ஏற்ற சுட்டுப் பெயர் அன்று என்பது விளங்கச் 'சுட்டு முதலாகிய காரணக்கிளவி' என்றார். அதனான் என்பது உருபு ஏற்ற சுட்டுப்பெயராயின், அஃது ஒருமையைச் சுட்டுதல் அன்றி இங்ஙனம் பலவற்றைச் சுட்டுதற்கு ஏலாது என்க. சுட்டுப் பெயர்கள் மரபு பிறழ வருதற்கு ஏலாமையின் எடுத்து ஓதிற்றிலர்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

40. 'அதனால்' என்ற இணைப்பு இடைச்சொல் தொல்காப்பியனார் கருத்துக்கு ஏலாது; 'அதனான்' என்பதே சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்ற செய்தி ச.பா. அவர்களான் தக்கவாறு நிறுவப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில், 'அதனான்' என்ற சொல் ஆட்சி இல்லை. புறநானூறு319 : 7இல் 'அதனான்' என்ற இணைப்பு இடைச்

சொல் வந்துள்ளது என்ப. பதிப்புக்களில் 'அதனால்' எனவே அப்பாடலில் உள்ளது. 'அதனால்' என்ற சொல்ல இடங்களுக்குமேல் சங்க இலக்கியங்களில் கையாளப் பட்டுள்ளது. தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு மிக முற்பட்டதாகும் என்பதற்கு இதுவும் ஒரு சான்றாக அமையலாம்.

'அதனான்' என்ற உருபு ஏற்ற சுட்டுப்பெயர் அஃறிணை ஒன்றன்பாலையே சுட்டும். அதனான் என்ற இடைச் சொல் ஒருமை, பன்மை இரண்டனையும் சுட்டும். இந்த வேறுபாட்டையும் நோக்கவேண்டும்.

## இளம்பூரணர் உரை

### சிறப்புப் பெயரும் இயற்பெயரும்

**41.** ***சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்***
***இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

எ . . . ன், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : சிறப்புப் பெயரும் இயற்பெயரும் ஒருவற்கு உளவாயின், அவ்விடத்து அவனைப் பெயர் கொடுக்குங்கால், அவன் சிறப்புப்பெயரை முன் கூறி, இயற்பெயரைப் பின் கூறுக என்றவாறு.

உதாரணம் : ஏனாதி நல்லுதடன்,
சோழன் நலங்கிள்ளி என வரும்.

உம்மையான், பிறப்பினாகிய பெயர்க்கும் தொழிலினாகிய பெயர்க்கும் கல்வியினாகிய பெயர்க்கும் இயற்பெயர்களை வழியே வைத்துச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் : பார்ப்பான் கண்ணன் எனவும்,
வண்ணான் சாத்தன் எனவும் வரும்.

கல்வியினாகிய காரணம் வந்தவழிக் கண்டுகொள்க. சிறப்புப்பெயர் என்பன சிறப்புடை மன்னரான் பெறுவன. (41)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**41. 'சிறப்பி னாகிய' -**

*ஏனாதி-அரசனான் அவன் அமைச்சருக்கு வழங்கப் படும் சிறப்புப் பெயர்களுள் ஒன்று. நல்லுதடன் - பெரிய உதட்டை உடையவன். பார்ப்பான் கண்ணன்- பிறப்பினாகிய பெயர்; வண்ணான் சாத்தன் - வண்ணாரம் என்ற தொழிலா னாகிய பெயர்; தெய்வப்புலவன் திருவள்ளுவன்- கல்வியினாகிய பெயர். (சேனா.)*

## சேனாவரையர் உரை

### இயற்பெயரும் சிறப்புப் பெயரும் அமையும் வகை

***41. சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்***
***இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

(இ-ள்) : வினைக்கு ஒருங்கு இயலும்வழிச் சிறப்பின் ஆகிய பெயர்க்கும் இயற்பெயரை உலகத்தார் முற்படக் கிளவார்; பிற்படக் கிளப்பர் என்றவாறு.

'வினைக்கு ஒருங்கு இயலும்' என்பது ஏற்புழிக் கோடல் என்பதனான் பெற்றாம்.

ஈண்டுச் சிறப்பு ஆவது, மன்னர் முதலாயினாராற் பெறும் வரிசை.

(எ-டு) : ஏனாதி நல்லுதடன், காவிதி கண்ணந்தை-என வரும்.

உம்மையான், தவம், கல்வி, குடி, உறுப்பு முதலாயினவற்றான் ஆகிய பெயரும் கொள்ளப்படும். அவை முனிவன் அகத்தியன் எனவும், தெய்வப் புலவன் திருவள்ளுவன் எனவும், சேரமான் சேரலாதன் எனவும், குருடன் கொற்றன் எனவும் வரும்.

திருவீரவாசிரியன், மாந்தக் கொங்கேனாதி என இயற்பெயர் முன் வந்தனவால் எனின், அவை தொகைச் சொல் ஆகலான், அவற்றின் கண்ணது அன்று இவ்வாராய்ச்சி என்பது. ஆண்டு இயற்பெயர் முன்நிற்றல் பண்புத்தொகை ஆராய்ச்சிக்கண் பெறுதும். (41)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**41. சிறப்பின் . . . கிளவார்-**

*திருவீர ஆசிரியன், மாந்தக்கொங்கு ஏனாதி-*
*திருவீரன் இயற்பெயர்; ஆசிரியன் சிறப்புப் பெயர்.*
*மாந்தன்-இயற்பெயர்; கொங்குநாட்டுத்தலைவன்*
*என்பது சிறப்புப்பெயர்.*

இவற்றுள் இயற்பெயர் முன்னும் சிறப்புப் பெயர் பின்னும் வந்துள்ளன. இவை இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாக இணைந்துள்ளன. இவை தொகைச் சொல் ஆதலான் இவற்றைப் பற்றிப் பண்புத்தொகை ஆராய்ச்சியுள் கூறுவதாகக் குறிப்பிடும் சேனாவரையர் பண்புத்தொகை பற்றிய சொ. 416இல் செய்தி யாதும் குறிப்பிடவில்லை.

## நச்சினார்க்கினியர் உரை

### இயற்பெயரைப் பிற்படக் கிளத்தல்

**41. *சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்***
***இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

இதுவும் ஒரு பொருளை உணர்த்தும் இருபெயர் வழுக் காக்கின்றது.

இ-ள் : சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும் - வினைக்கு ஒருங்கு இயலும் வழிச் சிறப்பின் ஆகிய பெயராய் நிற்றலை உடைய சொற்கும், உம்மையான் தவம் கல்வி குடி உறுப்பு முதலியவற்றான் ஆகிய சொற்கும்; இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார் - இயற்கைப் பெயராகிய சொல்லை உலகத்தார் முற்படக் கிளவார்; பிற்படக் கிளப்பர் என்றவாறு.

சிறப்பு - மன்னர் முதலியோரால் பெறும் வரிசை.

உதாரணம் : ஏனாதி நல்லுதடன்
முனிவன் அகத்தியன்
தெய்வப்புலவன் திருவள்ளுவன்
சேரமான் சேரலாதன்
சோழன் கிள்ளி
பாண்டியன் மாறன்
குருடன் கொற்றன்

எனவரும்.

'தச்சக் கொற்றன்' - தொழிலினான் ஆகிய பெயர்.

'திருவீர ஆசிரியன் என்றாற்போல இயற்பெயர் முற்கூறுவன பிறவும், இக்காலத்தார் மயங்கிக் கூறுவன பிறவும், 'கடிசொல் இல்லை' சொ. 452 என்பதனான் கொள்க. (41)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**41. சிறப்பின் ஆகிய -**

ஏனாதி-அரசனான் அமைச்சனுக்கும் படைத்தலைவனுக்கும் வழங்கப்படும் சிறப்புப்பெயர்களுள் ஒன்று.

ஏனாதி நல்லுதடன் - முதற்பெயர் மன்னன் தந்த சிறப்புப் பெயர்

முனிவன் அகத்தியன் - முதற்பெயர் தவம் பற்றிய சிறப்புப் பெயர்

தெய்வப்புலவன் திருவள்ளுவன் - முதற்பெயர் கல்வி பற்றிய சிறப்புப் பெயர்

சோழன் மணக்கிள்ளி - முதற்பெயர் குடி பற்றிய சிறப்புப்பெயர்

பாண்டியன் மாறன் - முதற்பெயர் குடி பற்றிய சிறப்புப்பெயர்

குருடன் கொற்றன் - முதற்பெயர் உறுப்புப் பற்றிய காரணப்பெயர்

தச்சக்கொற்றன் - முதற்பெயர் தொழில் பற்றிய சிறப்புப்பெயர்

இயற்பெயர் முன்னரும் சிறப்புப்பெயர் பின்னரும், திருவீர ஆசிரியன் என்பது போல வருவன, முறைமாறிக் கூறப்படுவன. அவை 'கடிசொல் இல்லை' (சொ.452) என்பதனான் வழுவமைதியாகும்.

## தெய்வச்சிலையார் உரை

**39. *சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும் இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

இதுவும் அது.

இ-ள் : மன்னர் முதலாயினாரான் பெற்ற சிறப்பினான் ஆகிய பெயர்ச்சொற்கும், உம்மையான் நிலப்பெயர் முதலாகிய பெயர்க்கும் இயற்பெயர்ச் சொல்லை முற்படக் கூறார் ஆசிரியர் எ-று.

சிறப்பினான் வந்தன : ஏனாதி, வாயிலான், படைத் தலைவன். அவை ஏனாதி நல்லுதடன், வாயிலான் சாத்தன், படைத்தலைவன் கீரன் என்பன. இக்காலத்து, உடையார், தேவர் என்பனவும் சிறப்பினான் ஆகிய பெயர். அருவாளன் சாத்தன், பாண்டியன் மாறன், முனிவன் அகத்தியன், ஆசிரியன் சாத்தன். பிறவும் அன்ன. (39)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**39. 'சிறப்பினாகிய'-**

ஏனாதி - மன்னர் அமைச்சருக்கு வழங்கும் சிறப்புப் பெயருள் ஒன்று.

வாயிலான் - அரண்மனைத் தலைமை வாயில்காவலன்.

படைத்தலைவன் - அரசனுடைய படைத்தலைவன்.

அருவாளன் - அருவா நாட்டைச் சார்ந்தவன்.

பாண்டியன் - பாண்டிய மன்னர் குடியில் பிறந்தவன்.

'குடிப்பெயர் ஆவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டியன் என்றிவை
போல்வன பிறவும் பொருத்தம்கொளலே' -
பன்-பாட்.

முனிவன் - தவத்தான் பரம்பொருளை நோக்கி இருப்பவன்.

ஆசிரியன் - ஆசான் தொழிலைச் செய்பவன்.

**கல்லாடனார் உரை**

***41. சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

என்-எனின், இதுவும் ஒரு பொருள்மேல் இருபெயர் வழுக்காத்தலை நுதலிற்று.

இ-ள் : சிறப்பின் ஆகிய பெயர்ச்சொற்கும் உம்மையான் பிற பெயர்க்கும் இயற்பெயர் ஆகிய சொல்லை முற்படச் சொல்லார்; பிற்படச் சொல்லுவர் ஆசிரியர் எ-று.

எ-டு. : ஏனாதி நல்உதடன், வாயிலான் சாத்தன், படைத் தலைவன் கீரன் - என இவை சிறப்புப்பெயர்.

பிறவும் என்றது, குலத்தினான் ஆய பெயரும், கல்வியினான் ஆய பெயரும், தொழிலினான் ஆய பெயரும், பிறவும் என்பது.

எ-டு. : சேரமான் சேரலாதன், சோழன் நலங்கிள்ளி, பாண்டியன் மாறன் - இவை குலப்பெயர். ஆசிரியன் சாத்தன் என்றாற்போல்வன கல்வியினான் ஆகிய பெயர். வண்ணாரச் சாத்தன், தச்சக் கொற்றன், நாவிதன் மாறன் - இவை தொழிலினான் ஆகிய பெயர்.

இதனால் சொல்லியது : ஒரு பொருட்கு இருபெயர் கூறும்வழி யாது முற்கூறினும் அமையும் என்று கூறலாகாது. மேல்தொட்டும் கூறிவந்த மரபானே கூறாவிடின், அப்பொருள்மேல் செல்லாது பிறபொருள்மேல் நோக்குப் படும் என மரபு வழுவற்க என்றவாறு ஆயிற்று. (41)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**41. 'சிறப்பின் . . . கிளவார்.'-**

வண்ணாரம், தச்சு, நாவிதம் என்பன தொழில்களின் பெயர்.

இந்நூற்பாவில் மரபு வழுவற்க என்று கூறிய செய்தி விளக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

***41. சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்***
***இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.***

எ-து : சிறப்பின் ஆகிய பெயர்க்கு முன் இயற்பெயர் வைத்துச்சொல்லார்.

உம்மையால் தவம், கல்வி, குடி, உறுப்பு முதலியனவும் கொள்க.

எ-டு : ஏனாதி நல்லுதடன், வரி இலான் சாத்தன், படைத்தலைவன் தீரன், சேரமான் சேரலாதன், சோழன் நலங்கிள்ளி, பாண்டியன் மாறன், முனிவன் அகத்தியன், தெய்வப்புலவன் திருவள்ளுவன், பார்ப்பான் கண்ணன், வேளாளன் கொற்றன், வண்ணான் சாத்தன், கோலிகன் சாத்தன், தச்சன் கொற்றன், கொல்லன் செய்யான், நாவிதன் மாறன், குருடன் கொற்றன் என வரும். (41)

## ஒருவர் உரைவிளக்கம்

**41. 'சிறப்பின் . . . கிளவார்.'-**

வரியிலான் -பலவகை வரிக்கணக்கையும் பதிவு செய்யும் அரசியல் அலுவலன்.

கோலிகன் - துணி நெய்பவன்.

## சாத்திரியார் உரை

**41. 'சிறப்பின் . . . கிளவார்.'**

நச்சினார்க்கினியர் 'வினைக்கு ஒருங்கு இயலும் வழி' என்று கூறுவதால் 'ஏனாதி நல்லுதடன் வந்தான்' என்றாற் போல முடிக்குஞ்சொல்லோடு உதாரணம் காட்டியிருத்தல் வேண்டும்.

## பாலசுந்தரனார் உரை

**41. 'சிறப்பின் . . . கிளவார்.'-**

ஒரு வினை கொள்ளாதவழி உம்மைத்தொகை ஆதற்கும் ஏற்றலின் வினைக்கு ஒருங்கு இயலுதல் தந்து உரைக்கப் பட்டது என்க.

இவை அகத்திய முனிவன், பேரூர்கிழான் ஆசிரியன், நலங்கிள்ளிச் சோழன்-எனப் பிறிகிளக்கப்படினும் இழுக் கின்மை நோக்கி உம்மையான் தழுவிக் கொண்டார் என ஓர்க. இனி, திருவீரவாசிரியன், மாந்தக்கொங்கு ஏனாதி என வருவன, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றாற் போலப் பலசொல் தொக்கு ஒரு பொருள்மேல் வந்த இயற்பெயர் எனக்கொள்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

*41.* திருவீர ஆசிரியன், மாந்தக்கொங்கு ஏனாதி என்பன போல்வன பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பது போலப் பல பெயர்தொக்கு ஒரு சொல் நீர்மைப்பட்டு, ஒருபொருள்மேல் வந்த இயற்பெயர் என்று கொள்வாரும் உளர்.

## இளம்பூரணர் உரை

### ஒரு பொருள்மேல் பல பெயர் மரபு

**42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி**
**தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.**

எ . . . ன், இஃது ஒரு பொருள்மேல் பல பெயர் வழூஉக் காத்தல் நுதலிற்று; மரபு வழூஉக் காத்தலுமாம்.

இ-ள் : ஒரு பொருளைக் கருதி வேறுவேறு பெயர் வரும் எனின், அப்பெயர் வேறுவேறு தொழில்கோடற்கு வரும் பெயர் எல்லாம் சொல்லிய பின்னைத் தொழில் கொடுக்க; அங்ஙனம் கொடுக்க வந்த பெயரெல்லாம் அதற்கு ஒன்றும்; அல்லாக்கால் அதற்கு ஒன்று இடன் இல என்றவாறு.

உதாரணம் : ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என வரும்.

மற்று, எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக எனவும் ஒரு பொருட்கு ஒன்றுமால் எனின், அதனை ஞாபகங்கூறல் என்னும் உத்திவகையான் உணர்க.

என்னை? 'தொழில் வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே' என்றான்; அத்தொழில் வேறு கிளத்தல்தான் இருவகைப்படும்; பெயர்தொறும் ஒரு தொழில் கிளத்தலும், வேறு கிளத்தலும் என. பெயர்தொறும் வேறாய்த் தொழில் கிளத்தலும் வேறு கிளத்தலாம். அதனான் இச்சூத்திரத்துப் பெயர்தொறும் வேறாய்த் தொழில் கிளத்தலைத் 'தொழில் வேறு கிளப்பின் ஒன்று இடன் இல' என்றது.

அங்ஙனம் ஞாபகத்தான் கொள்வதனையும் ஒரு பொருட்கு ஒன்றும் என்று கொள்க. மற்று, வரும் பெயர் எல்லாம் சொல்லிப் பின்னைத் தொழில் கிளப்பதனை எடுத்தோத்தினான் கூறி, அவ்வப் பெயர்தோறும் ஒரு தொழில் கிளப்பதனை உத்திவகையான் கொண்டது என்னை எனின்,

'எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக' என்றவிடத்து ஒரு பொருள்மேலும் நிற்கும்; மற்றைய தாயின் ஒரு பொருட்கே திரிபுபடாது ஒன்றும். அதனான் அதனை எடுத்தோத்தினானும்,இதனை உத்திவகையானும் கொண்டான் என்பது. *(42)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**42. 'ஒருபொருள் குறித்த' -**

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் : சாத்தன் என்பது இயற்பெயர். இளங்கண்ணன் என்பது அவன் தந்தை பெயர். செயிற்றியன் என்பது அவன் செயிற்றியம் என்ற நாடக நூலில் வல்லவன் என்பதனான் கிட்டிய சிறப்புப் பெயர். பேரூர் கிழான் என்பது பேரூர் என்ற ஊரில் தன் சொந்த நிலங்களுக்கு உரிமையாளன் என்பது. ஆசிரியன், அவன் ஆசிரியத்தொழில் இயற்றுகிறான் என்பது. இந்த ஐந்து பெயர்களும் ஒருவனுக்கு உரிய பெயர்களே. இவற்றைச் சேர்த்துச் சொல்லியவழியே அவை யாவும் இணைந்து ஒருவனையே குறிக்கும்.

ஒருவனையே அன்புபற்றி எந்தை எனவும், எம்பெரு மான் எனவும், மைந்தன் எனவும் அழைத்து, 'எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக' என ஒரே வினையைக் கொடுத்தால் எந்தையும், எம்பெருமானும், மைந்தனும் ஒருவனே என்ற செய்தி ஞாபகம்கூறல் என்னும் உத்தி வகையான் கொள்ளப்படும். 'தொழில் வேறு கிளத்தல்' பெயர்தொறும் ஒரு தொழிலே கிளத்தலும், பெயர்தொறும் வெவ்வேறு தொழில் கிளத்தலும் என இருவகைத்து.

பெயர்தொறும் எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக என ஒரே தொழிலைக் கிளத்தல் திரிபுபடாது, எந்தை, எம்பெருமான், மைந்தன் என்ற பல பெயர்களால் குறிப்பிடப்பட்டவன் ஒருவனே என்பதனைக் குறிக்கும். அதனான் இஃது உத்திவகையான் கொள்ளப்பட்டது.

ஆசிரியன் வந்தான், பேரூர்கிழான் உண்டான், செயிற்றியன் சென்றான் என்று பெயர்தோறும் வேறு வேறு வினை கிளத்தல் மூவரும் வெவ்வேறானவர் என்ற கருத்தைத் தரும். ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என ஒரே முடிக்குஞ் சொல்லை வழங்கின், ஒரு பொருளையே திரிபுபடாது குறிக்கும். அதனான் அது நூற்பாவான் கொள்ளப்பட்டது.

## சேனாவரையர் உரை

### ஒருபொருட் பல பெயர் மரபுவழுக் காத்தல்

**42. *ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி***
***தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே.***

*(இ-ள்)* : ஒரு பொருளைக் குறித்து வந்த பல பெயர்ச் சொற்கள், ஒரு தொழிலே முடிபாகக் கூறாது பெயர்தோறும் வேறு ஆகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின், ஒரு பொருளவாய் ஒன்றா என்றவாறு.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என்னாது, ஆசிரியன் வந்தான்-பேரூர் கிழான் உண்டான்- செயிற்றியன் சென்றான்- என வேறுவேறு தொழில் கிளந்தவழி, வந்தானும் உண்டானும் சென்றானும் ஒருவன் ஆகாது வேறாய்த் தோன்றியவாறு கண்டுகொள்க.

எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக, மணாளன் வருக என்புழிக் காதல் முதலாயின பற்றி ஒரு தொழில் பலகால் வந்தமைஅல்லது வேற்றுத்தொழில் அன்மையான், ஒரு தொழில் கிளத்தலே ஆம் என்பது.

ஈண்டுத் தொழில் என்றது முடிக்கும் சொல்லை.

ஆசிரியன் வந்தான் என்று ஒருகாற் கூறி, இடையிட்டு அவனையே பின் ஒருகால் பேரூர் கிழான் சென்றான் என்று

கூறியவழி, ஒரு தொடர் அன்மையான் ஆண்டு ஆராய்ச்சி இல்லை என்பது. அஃதேல், ஆசிரியன் வந்தான், பேரூர் கிழான் உண்டான், செயிற்றியன் சென்றான் என இடையீடு இன்றி நின்றனவும் ஒரு தொடர் அன்மையின் ஆராய்ச்சி இன்றாம் பிற எனின், அற்றன்று; உள் தொடர் பல ஆயினும், அவற்றின் தொகுதியாய் அவன் தொழில் பலவும் கூறுதற் பொருண்மைத்து ஆகிய பெருந்தொடர் ஒன்று எனவே படும் என்பது.

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என்னாது, ஆசிரியன் வந்தான்-பேரூர் கிழான் உண்டான்-செயிற்றியன் சென்றான்-எனப் பெயர்தோறும் வேறுதொழில் கிளத்தல் மரபு அன்மையின், மரபு வழுக் காத்தவாறு ஆயிற்று. (42)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**42. ஒரு பொருள் . . . இலவே-**

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் என்பது சிறப்பினாகிய பெயர்கள் அடுத்த ஒருவனுடைய இயற்பெயர்.

அடையடுத்த அப்பெயரைக்கூறி இடையே பல எச்சங்கள் அடுத்தாலும் ஒரே முற்றுவினை முடிபாகக் கூறல்வேண்டும். அஃதாவது ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என்றே கூறல்வேண்டும் என்பது.

ஒருவனுடைய பல பெயர்களைத் தனித்தனியே கூறி ஒரே தொழிலைப் பலகால் கூறின் அது காதல் முதலாயின பற்றிக் கூறப்படுதலின் வழுவன்று என்பது இவர்கருத்து.

## நச்சினார்க்கினியர் உரை

### ஒரு பொருட் பல பெயர் மரபு வழுக்காத்தல்

***42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.***

இஃது ஒரு பொருளை உணர்த்தும் பல பெயர் வழுக் காக்கின்றது.

இ-ள் : ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி - ஒரு பொருளை உணர்த்துதலைக் குறித்து வந்த பல பெயர்ச் சொற்கள்; தொழில் வேறு கிளப்பின்- ஒரு தொழிலையே முடிபாகக் கூறாது, பெயர்தோறும் வேறாகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின்; ஒன்று இடன் இல - ஒரு பொருளின வாய் ஒன்றுதல் இல என்றவாறு.

கிளவி, கருவிக் கருத்தாவாய் நின்றது.

'ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான்' என்னாது, ஆசிரியன் வந்தான், பேரூர்கிழான் உண்டான், செயிற்றியன் சென்றான் என வேறு வேறு முடிக்கும் சொல் கொடுப்பின், ஒருவன் ஆகாது வேறு வேறு பொருள் ஆம்.

'எந்தை வருக! எம்பெருமான் வருக!'

என்றாற் போல்வன, காதல்பற்றிப் பலகால் ஒரு தொழிலே வந்தனவாம். *(42)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**42. ஒருபொருள் குறித்த -**

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன்: சாத்தன்-இயற்பெயர்; இளங்கண்ணன்-அவன் தந்தை பெயர்; செயிற்றியன் - அவன் செயிற்றியம் என்ற கூத்து நூலில் வல்லவன் ஆதலான் பெற்ற சிறப்புப்பெயர்; பேரூர்கிழான் -அவன் பேரூர் என்ற ஊரில் உழுவித்துண்ணும் வேளாண் செல்வத்தான் பெற்ற பெயர்; ஆசிரியன் - அவன் செய்து வந்த தொழிலான் பெற்ற பெயர்.

அவன் வந்து உண்டு சென்ற செயல்களைச் சொல்லவேண்டுமென்றால், ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என ஒரு தொழிலையே முடிபாகக் கூறவேண்டும்.

ஒரே தலைமகனைக் குறிக்கும் பலபெயர்களையும் தனித்தனியே பிரித்து வேறுவேறு முடிக்கும் சொல் கொடுத்தால், அவை வேறுவேறு மனிதர்களைக் குறிப்பன வாகுமே ஒழிய அவன் ஒருவனையே குறிக்கமாட்டா.

காதல் என்பது சிறப்பும் நலனும் இல்வழியும் அன்பினான் குறிப்பிடுவதாகும்.

செக்கினுள் எள் பெய்து ஆட்டுவார் இல்லா மோட்டு முதுகிழவி, மன்றத்து இருந்த வன் திறல் இளைஞரைச் சென்று கைப்பற்றி, "எந்தை வருக, எம்பெருமான் வருக, மைந்தன் வருக, மணாளன் வருக" என்று அழைத்தால், ஒவ்வொரு பெயரும் ஒவ்வொருவரைக் குறிப்பதாகிவிடும். ஆதலின், 'எந்தை வருக!' 'எம்பெருமான் வருக!' என்றாற் போல்வன இடம் நோக்கி ஒருவனையே குறித்தவை ஆகலாம்; பலரைக் குறித்தனவும் ஆகலாம். *(நேமி. சொ. 13-உரை)*

**தெய்வச்சிலையார் உரை**

***40. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி***
***தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.***

இதுவும் அது.

இ-ள் : ஒரு பொருளைக் குறித்த வேறு வேறு ஆகிய பெயர்ச்சொல் தொழிலைப் பெயர்தோறும் கிளப்பின் ஒரு பொருள் ஆகிய ஒன்றும் இடம் இல என்றவாறு.

எனவே, பலபெயர் அடுக்கி வரின் ஒரு வினையான் முடித்தல் வேண்டும் என்றவாறு ஆம். ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் எனவரும். ஆசிரியன் வந்தான், பேரூர் கிழான் வந்தான், செயிற்றியன் வந்தான், இளங்கண்ணன் வந்தான், சாத்தன் வந்தான் - எனின் ஒரு பொருள் ஆதல் தோன்றாதாம்.

'விழைந்துமுதிர் கொற்றத்து விறலோன் வாழி
கடற்கடம்பு எறிந்த காவலன் வாழி
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி
பூந்தண் பொருநைப் பொறையன் வாழி
மாந்தரஞ் சேரல் மன்னவன் வாழி'
*(சிலம்பு 23:80-84)*

என்றவழி, ஒரு பொருள் குறித்த பெயர்தோறும் வினை வந்ததால் எனின், இச்சூத்திரத்தில் 'தொழில் வேறு கிளப்பின்' என்பதற்கு, 'மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல்' என்பதனான் வேறுவேறு வினை கிளப்பின் ஒன்று இடன் இல எனப் பொருள் உரைக்கப் பெயர்தோறும் ஒருவினை வரின் ஒன்றும் என்பது பெற்றாம். அதனானே இவ்வாறு வருவன அமைத்துக்கொள்க. 'விழைந்து முதிர் கொற்றத்து விறலோன் வாழ்க; கடற்கடம்பு எறிந்த காவலன் கெடுக' எனின் வழு ஆம். *(40)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**40. 'ஒரு பொருள்'-**

பல பெயரை உடைய ஒருவனுடைய பல பெயர்களையும் ஒருங்குகூறி, அவன் செய்த பல செயல்களையும் ஒருங்கு இணைத்து இறுதியில் ஒரே வினைமுற்றை முடிக்கும் சொல்லாகக் கொடுத்து ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து உண்டு சென்றான் என ஒரேவினையான் முடித்தல் வேண்டும்.

வினை ஒன்றே ஆயினும் ஒருவனுடைய பல பெயர்களைப் பிரித்துத் தனித்தனியே கூறின் வருதல் தொழில் ஒருவனது ஆகாது வேறுபட்டபலர் செயல் போலத் தோன்றும் என்பதாம்.

மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் - கூறப்பட்ட செய்தியொடு கூறப்படாத செய்தியையும் இணைத்து ஏற்றுக்கோடல். பெயர்தோறும் வேறுவினை கொடுப்பின் பொருந்தாது எனவே, பெயர்தோறும் ஒருவினை கொடுப்பின் ஒன்றுவதும் உண்டு. அது வழுவமைதியாகும். விறலோன் வாழ்க, காவலன் கெடுக எனவேறு வினை கொடுப்பின் வழு.

***விழைந்துமுதிர் :***

விரும்பிச்சிறந்த வெற்றியை உடைய
பேராற்றலுடையோன் வாழ்க.
கடலிலே பகைவருடைய கடம்ப மரத்தை வெட்டி
வீழ்த்திய மன்னவன் வாழ்க.
மலைப்பிளப்பிடையே வில் முத்திரையைப் பொறித்த
அரசன் வாழ்க.
அழகிய குளிர்ந்த ஆன்பொருநை ஆற்றுக்கு உரிமை உடைய
சேரன் வாழ்க.
மாந்தரஞ்சேரல் என்ற பெயரை உடைய மன்னவன் வாழ்க.

விறலோன், காவலன், வேந்தன், பொறையன், மன்னவன் என்ற பெயர்கள் யாவும் மாந்தரஞ்சேரல் என்ற ஒரே மன்னனைக் குறிப்பிடும் பல பெயர்களாம்.

**கல்லாடனார் உரை**

***42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.***

என்-எனின், ஒரு பொருள்மேல் பல பெயர் வழூஉக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : ஒரு பொருளைக் கருதிய வேறுவேறு ஆகிய பெயர்ச்சொற்களுக்கு வரும் வினையை வேறுபடச் சொல்லின், ஒரு பொருட்குப் பொருந்தும் இடம் இல்லை. அதனான் வரும்பெயரை எல்லாம் சொல்லிப் பின் தொழில் சொல்லுக என்றவாறு.

எ-டு : ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் - என வரும்.

இனி, இரட்டுறமொழிதல் என்னும் ஞாபகத்தான், ஒரு பொருளைக் கருதிய வேறு வேறு ஆகிய பெயர்ச் சொற்கண் வேற்றுத் தொழிலைப் பெயர்தோறும் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இடம் இலது என, வேறு அல்லாது ஒரு தொழிலைப் பெயர்தோறும் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இடன் உடையதூஉம் கொள்ளப்படும்.

எ-டு : ஆசிரியன் வந்தான், பேரூர் கிழான் வந்தான், செயிற்றியன் வந்தான், இளங்கண்ணன் வந்தான், சாத்தன் வந்தான் - என வரும்.

இதனான் சொல்லியது : ஒரு பொருள்மேல் வரும் பல பெயர்க்கண் மரபு இலக்கணமும், மரபு வழு அமைதியும் கூறியவாறு ஆயிற்று. ஞாபகத்தான் கொண்டது மரபு வழுஅமைதி. அதனை வழூஉ என்றது என்னை எனின், ஒரு நிலைக்கண் அதுதானே பல பொருள் மேலும் சேறலான் என்பது. *(42)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**42. 'ஒருபொருள் . . . இலவே.'**

பெயர்தோறும் வந்தான் உண்டான் சென்றான் என வேற்றுத் தொழில்களைச் சொல்லின் அப்பொருட்குப் பொருந்தாது. எனவே, பெயர்தோறும் வந்தான் என ஒரே தொழிலைச் சொல்லின் பொருந்தும் என்பது இரட்டுற மொழிதல் என்னும் அறிவுறுத்தலான் பெறப்பட்டது.

இந்நூற்பாவில் மரபுஇலக்கணமும் மரபு வழு வமைதியும் கூறப்பட்டமை விளக்கப்பட்டது.

## ஒருவர் உரை

***42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி***
***தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.***

எ-து : ஒரு பொருள் கருதிவந்த பல சொற்களுக்கு ஒரு தொழிலை முடிபாகக் கூறாது, பெயர்தோறும் வேறு தொழில் கொடுப்பின், ஒரு பொருளவாய் ஒன்றுதல் இலவாம்.

எ-டு : ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்றுசொல்லுக.

இனி, ஆசிரியன் வந்தான், பேரூர்கிழான் இருந்தான், செயிற்றியன் கிடந்தான், இளங்கண்ணன் போனான், சாத்தன் நின்றான் என்னற்க.

அன்றியும், ஆசிரியன் வந்தான் - பேரூர்கிழான் வந்தான்- எனப் பெயர்தோறும் ஒருவினை கொடுப்பினும் வேறு வேறு பொருளாம்.

இனி, இத்தன்மையன கொள்க.

'எந்தை வருக எம்மான் வருக
மைந்தன் வருக மணாளன் வருக
பைந்தொடிப் பணைத்தோள் கிழவன் வருக' (சீவக.)

எனக் காதல் பற்றிப் பலகால் ஒருதொழில் வந்தன கொள்க.

அன்றியும், இனித் 'தொழில்வேறு கிளப்பின் ஒன்று இடன் இல்லை' என்பதனான், வேறு தொழில் கொடாது ஒரு தொழிலே கொடுப்பின் ஒன்று இடன்ஆம் எனப் பெயர் தோறும் ஒரு வினை கொடுத்துத் துதியிடத்துச் சொல்லுக.

எ-டு : 'தேமலர் அங்கண் திருவே புகுதுக
மாமலர்க் கண்ணி மணாளன் புகுதுக
காமன் புகுதுக காளை புகுதுக
நாமஎழில் விஞ்சை நம்பி புகுதுக'

என்பன கொள்க. (42)

## ஒருவர் உரைவிளக்கம்

**42. 'ஒருபொருள் . . . இலவே.'-**

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்து இருந்து கிடந்து போய் நின்றான் என ஒரே வினைமுற்றைக் கொள்ளுமாறு மற்ற வினைகளை அவ்வினைமுற்றைக் கொண்டுமுடியும் எச்சங்களாக அமைத்த எடுத்துக்காட்டே ஏற்றது.

பெயர்தோறும் ஒரே வினை கொடுப்பினும் வேறு வேறு பொருளாதற்கும், ஒரே பொருளைக் குறிப்பதற்கும் எடுத்துக் காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

சீவகனைக் கண்ட மக்கள் துதிக்குமிடத்து அவனைப் பல்வேறு பெயர்களால் புகழ்ந்து 'புகுதக' என்ற ஒரே வினை கொடுத்தல் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## பாலசுந்தரனார் உரை

**42. 'ஒரு பொருள் . . . இலவே.'-**

ஒரு பொருள் எனப் பொதுப்படக் கூறியிருப்பினும், பெயரிட்டு வழங்கப்படுவார் உயர்திணைக்கு உரிய மக்களே ஆதலின், மக்கட்பெயரும், உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும் தெய்வப்பெயருமே கொள்ளப்படும் என்க.

பல பெயர்க்கிளவி என்னாது 'வேறு பெயர்க்கிளவி' என்றதனான், இரு பெயர் முதலாக வருவனவும், பல சொற்களான் ஆகிய தொடர்மொழிப் பெயர்களாக வருவனவும் எல்லாம் மரபு நோக்கிக் கொள்ளப்படும்.

(எ-டு.) மருதன் இளநாகன் வந்தான்; அதியமான் நெடுமான் அஞ்சி வந்தான் - எனவும், 'மண்ணகம் புரக்கும் மாறன் வாழ்க, பைந்தமிழ்ச் சங்கம் புரப்போன் வாழ்க, பற்றார்த் தேய்த்த பாண்டியன் வாழ்க' -எனவும் வரும்.

இஃது இருவகை வழக்கிற்கும் உரியதாய்ச் செப்பின் பாற்படுவதொரு மரபு என்க.

## இளம்பூரணர் உரை

### தன்மையோடு அஃறிணை விரவுதல்

***43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று***
***எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.***

எ . . . ன், இது திணை வழுவாமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் அவை எண்ணுமிடத்து, விராஅய் வரப்பெறும் எனக்கொள்க என்றவாறு.

தன்மைச்சொல் எனவே, உயர்திணைச் சொல் எனப் பெறும்.

உதாரணம்: 'யானும் என் எஃகமும் சாறும் (அவனுடைய யானைக்கும் சேனைக்கும் நேர்)' என வரும்.

'மருங்கு' என்ற மிகையான், 'நீயும் நின் படைக்கலமும் சாறீர்' 'அவனும் தன் படைக்கலமும் சாலும்' எனவும் வருதல் கொள்க. *(43)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**43. 'தன்மைச் சொல்லே' -**

'யானும்என் எஃகமும் சாறும் அவனுடைய
யானைக்கும் சேனைக்கும் நேர்'

'அவனுடைய யானைப்படைக்கும் ஏனைய தேர், பரி, காலாள் என்ற படைகளுக்கும் (ஈடாக), யானும் என் படைக்கலங்களும் அமைவேம்' என்று வீரன் ஒருவன் படைச்செருக்கினான் கூறியது இது.

'மருங்கு' என்ற மிகையான் கொள்ளப்பட்ட செய்திக்கும் இயைய, நேமிநாதம் உரையில் (சொல் - 9)

'தன்மையோ டியைந்தன தன்மை யாகும்
முன்னிலை மொழியொடு படர்க்கையும் அற்றே'

என்ற நூற்பா எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

## சேனாவரையர் உரை

### இடவழு அமைதி

**43. *தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.***

*(இ-ள்) : தன்மைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விராய் வரப்பெறும் என்றவாறு.*

என் சொல்லியவாறோ எனின், உயர்திணைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விராய் வந்து, உயர்திணை முடிபு கொள்ளினும் அஃறிணை முடிபு கொள்ளினும் வழுவாம் ஆகலின், 'மயங்கல் கூடா தம் மரபின' (சொல்-11) எனவே அவை விராய் எண்ணப் படாமையும் எய்தி நின்றது; தன்மைப் பன்மைச் சொல்லான் அஃறிணைச் சொல்லும் முடியும் ஆகலான், தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் விராய் வந்து உயர்திணை முடிபு கொள்ளினும் அமையும் எனத் திணைவழுக் காத்தவாறு.

*(எ-டு) : யானும் என் எஃகமும் சாறும் என வரும்.*

பன்மைத் தன்மை வினைகோடல் எற்றான் பெறுதுமோ எனின், தன்மைச் சொல்லே என்றதனானும்,

'பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கின் திரிபவை உளவே.'
(சொல்-209)

என்பதனானும் பெறுதும் என்பது. அஃதேல், 'எண்ணியன் மருங்கின் திரிபவை உளவே' என்பதனான் விராய் வந்து உயர்திணை முடிபு கோடலும் பெறப்படுதலின், இச்சூத்திரம் வேண்டா எனின், உய்த்து உணர்ந்திடர்ப்படுவது எடுத்தோத்து இல்வழி என மறுக்க. (43)

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**43. தன்மை . . . வரையார்-**

தன்மை தொல்காப்பியனாருக்கு உயர்திணை. தன்மைக்கு இயல்பாக ஒருமையே உண்டு. தன்மைக்குப் பன்மை முன்னிலையையும் படர்க்கையையும் உளப்படுத் துதலானேயே ஏற்படுவது. அப்படி உளப்படுக்கும்போது அஃறிணைச் சொற்களும் உளப்படுக்கப்படலாம். அப்படி உயர்திணையோடு அஃறிணையை உளப்படுக்கும்போது அவை தன்மைப் பன்மை வினையான் முடியும். தன்மைச் சொல் அஃறிணையை உளப்படுத்தும்போது தன்மைப் பன்மை வினையைக் கொள்ளும் என்பது சொ. 209ஆம் நூற்பாவில் சொல்லப்பட்டுள்ளது.

படவே, தன்மைதான் உயர்திணையாயினும் அதனோடு அஃறிணைச் சொல்லையும் கலந்து எண்ணலாம் என்பதே இந்நூற்பாவின் கருத்தாகக் கொண்ட உரையாசிரியர் கருத்து சாத்திரியாரால் பாராட்டப்பட்டுள்ளது.

**நச்சினார்க்கினியர் உரை**

**எண்ணுவழித் திணைவழுவமைதி**

*43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று*
*எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.*

இஃது எண்ணின்கண் திணைவழு அமைக்கின்றது.

இ-ள் : தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்று - தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் என்றுகூறிய இரண்டும்; எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார் - எண்ணுமிடமாகிய இடத்து விராய் வந்து தன்மைப் பன்மைச் சொல்லான் அஃறிணைச்சொல் முடிதலை நீக்கார் ஆசிரியர் என்றவாறு. மேல் 'பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி' (சொ. 211) என்பதனான் தன்மைப் பன்மை பெற்றாம்.

உதாரணம் : 'யானும்என் எஃகமும் சாறும் அவனுடைய
தானைக்கும் சேனைக்கும் நேர்.'

இஃது இரு திணையும் விராய் எண்ணியவழி அஃறிணை உயர்திணையொடு முடிந்தது. (43)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

### 43. தன்மைச் சொல்லே -

உயர்திணையாகிய தன்மைச்சொல்லும் அஃறிணைச் சொல்லும் கலந்து எண்ணப்படுதல் வழுவமைதியாம் என்பதே இந்த நூற்பாவின் உரை.

அவை எண்ணப்பட்டுத் தன்மைப் பன்மைச் சொல்லான் முடியும் என்ற செய்தி,

'பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி
எண்இயல் மருங்கின் திரிபவை உளவே' - சொ. 211

என்ற நூற்பாவான் பெறப்படுதலின், அதனைத் தெளிவு கருதிச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் இச்சூத்திரத்திலேயே இணைத்துக்கொண்டனர்.

**யானும் என் எஃகமும்**- "அவனுடைய யானைப் படைக்கும் ஏனைய தேர் குதிரை காலாள் படைகளுக்கும் யானும் என்னுடைய படைக்கலமுமே நிகராவோம்" என்று வீரன் ஒருவன் தன் படைச்செருக்கால் கூறியது.

விராய் **எண்ணி** … … முடிந்தது - விராய் **எண்ணியவழி**… … முடிந்தது என்பதே ஏற்றது.

## தெய்வச்சிலையார் உரை

***41. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.***

திணைவழு அமைத்தலை நுதலிற்று.

இ-ள்: தன்மைச்சொல்லும், அஃறிணைப் பெயர்ச் சொல்லும் எண்ணும் இடத்தில் விரவுதல் நீக்கார் எ-று.

உ-ம் : 'யானும் என் எஃகமும் சாறும் அவனுடைய, யானைக்கும் சேனைக்கும் போர்' (நேர்) என வரும். நீயும் நின் படைக்கலமும் சாறீர்; அவனும் அவன் படைக்கலமும் சாலும்- என ஏனை இடத்தும் வருமால் எனின், முன்னிலை வினை இருதிணைக்கும் பொது ஆகலினானும், படர்க்கை வினைக்கண் 'செய்யும்' என்னும் முற்றுச்சொல் பொதுவாய் வருதலானும் அவை ஆண்டு அடங்கும் என்க. *(41)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**41. 'தன்மைச்சொல்லே'-**

***'யானும் என்'*** -என் பகைவனுடைய யானைப் படைக்கும், ஏனை முப்படைகளுக்கும் யானும் என் படைக்கலமுமே சமம் ஆவோம்.

நீயும் நின் படைக்கலமும் சாறீர் - முன்னிலை, உயர் திணை அஃறிணை இரண்டற்கும் பொது.

அவனும் அவன் படைக்கலமும் சாலும் - செய்யும் என் முற்று படர்க்கையாய் இரு திணைக்கும் பொது. ஆதலின் இவை இரண்டும் வழா நிலையேயாம்.

தன்மையொடு கூடிய படர்க்கையும், முன்னிலையும் தன்மைவினை கொள்ளும். முன்னிலையொடு கூடிய படர்க்கையும் முன்னிலை வினை கொள்ளும்.

## கல்லாடனார் உரை

**43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.**

என்-எனின், எண்ணின்கண் திணை வழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தன்மையாகிய சொல்லினையும், அஃறிணை ஆகிய சொல்லினையும் விரவி எண்ணுமிடத்து உண்டாகிய திணை விராய் வருதலை நீக்கார் கொள்வர் ஆசிரியர் என்றவாறு.

என்று என்றது எண்அசை.

எ-டு. : 'யானும் என் எஃகமும் சாறும் அவனுடைய, யானைக்கும் சேனைக்கும் நேர்' என வரும்.

இதனுள் அவன் வந்தது என்றாற்போலும் திணைவழு இல்லை எனின், அதுவே அல்லது திணைவழூஉ. எண்ணுமிடத்தும் இனம் ஒத்தனவே எண்ணுக என முன்சொன்னமையானும், திணைவழு ஆவது பொருந்தாது விடுவது என்பது ஆகலானும், இதுவும் திணைவழூஉ எனப்படும். இவ்வாறு இடர்ப்படுகின்றது என்னை? இதனை மரபு வழுஅமைதி என்று கூறுக எனின், 'வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்' என ஆசிரியர் மேற்கூறுகின்றமையின், இதற்கும் அதுவே கருத்து என்பது பெறுதும்.

இனிச் சொல்லொடு சொல் முடித்தலே திணைவழு எனினும், 'சாறும்' என்னும் உயர்திணை முற்றுச் சொல்லே எஃகம் என்னும் அஃறிணையினையும் உளப்படுத்தமையின் வழுவும் இதன்கண் உண்டு என உணர்வது.

'மருங்கின்' என்ற மிகையான், முன்னிலையோடு அஃறிணை எண்ணுதலும், படர்க்கையோடு அஃறிணை எண்ணுதலும் கொள்க.

எ-டு. : நீயும் நின் படைக்கலமும் சாறீர், அவனும் தன் படைக்கலமும் சாலும் என வரும்.

இவற்றுள், எண்ணுவழு அல்லது முடிபு வழு இல்லை. இதனால் சொல்லியது : எண்ணுப் பொருட்கண் திணை பற்றிப் பிறக்கும் மரபு வழுஅமைதி என உணர்க. சிறுபான்மை திணைவழூஉ அமைதியும் என உணர்க. (43)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**43. 'தன்மைச் . . . வரையார்.'-**

யானும்என் எஃகமும் சாறும் அவனுடைய
யானைக்கும் சேனைக்கும் நேர்.

'பகைவனுடைய யானைப்படையையும் ஏனைப் படைகளையும் எதிர்த்து வெல்ல யானும் என் படைக் கலன்களும் போதுமானவையாவேம்' என்று வீரன் ஒருவன் முழக்கம் செய்தான்.

தன்மையொடு கூடிய அஃறிணை தன்மை வினை கோடல் ஏற்றதே ஆதலின் இதன்கண் திணைவழு இல்லை. இனம் அல்லவற்றை எண்ணிய எண்ணு வழுவே உள்ளது. அஃது இந்நூற்பாவில் அமைக்கப்பட்டது. 'மருங்கின்' என்ற மிகையான் முன்னிலையோடு அஃறிணையை எண்ணுதலும், படர்க்கையோடு அஃறிணையை எண்ணு தலும் கொள்ளப்பட்டன.

இந்நூற்பா எண்ணுப்பொருள் பற்றிய திணை விரவும் மரபு வழுவமைதி ஆகும்.

### ஒருவர் உரை

***43. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்று***
***எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.***

எ-து : தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும், அவை எண்ணும் இடத்து, விராய் வருதலை நீக்கார்.

எ-டு : 'யானும்என் எஃகமும் சாறும் அவனுடைய, யானைக்கும் சேனைக்கும் நேர்' என வரும்.

இஃது இருதிணையும் விராய் எண்ணி அஃறிணை உயர்திணையொடு முடிந்தது.

'எண்ணுவழி மருங்கு' என்றதனான், நீயும் நின் படைக்கலமும் சாறீர் - அவனும் தன் களிறும் சாலும் - என முன்னிலையினும், படர்க்கையினும் கொள்க. *(43)*

## ஒருவர் உரைவிளக்கம்

**43. 'தன்மைச் . . . வரையார்.'-**

'யானும்என் எஃகமும் சாறும் அவனுடைய
தானைக்கும் சேனைக்கும் நேர்.'

இந்தப்பாடலில் யானும் என் எஃகமும் சாறும் என்பதே தேவையான எடுத்துக்காட்டு. 'அவனுடைய தானைக்கும் சேனைக்கும் நேர்' என்பது 'யானும் என் எஃகமும்' என்பதற்கு அடை.

## சாத்திரியார் உரை

*43. 'தன்மை . . . வரையார்.'-*

தன்மைச் சொல்லும் அஃறிணைச்சொல்லும் உம்மை முதலியவற்றால் எண்ணப்படினும் வழுவன்று என்று இளம்பூரணரும் தெய்வச்சிலையாரும் கூறிய உரையே நேரிய உரையாகும்.

## பாலசுந்தரனார் உரை

43. **'தன்மை . . . வரையார்.'-**

விரவுதல் - விரவி ஒரு முடிபு கொள்ளுதல்.

இங்ஙனம் திணைவிராய் எண்ணுதற்கண் ஒன்றற்கு ஒன்று திணை வேறுபட்டு மயங்குமாயினும், எண்ணப் படுதற்கண் பிறிது ஆறு இன்மையின் இம்முடிபு வழா நிலையாய் மரபு ஆயிற்று என்க.

பின்னர்ப் 'பலவயினானும் எண்ணுத்திணை விரவுப் பெயர் அஃறிணை முடிபின' (சொ. 51) என்பார். ஆதலின், ஈண்டு இவை உயர்திணை முடிபுகொள்ளும் என்பது உய்த்து உணரப்படும். தன்மைச்சொல் என்றமையானும், விரவும் என்றதனானும் தன்மைப் பன்மைவினை என்பதும் கூறிய வாறாம்.

'பன்மை உரைக்கும் . . . உளவே' (சொ. 210) என்பதனான் விரவி வந்து உயர்திணைமுடிபு கோடலும் பெறப்படுதலின் இச்சூத்திரம் வேண்டா எனின், பன்மைத் தன்மை என்பது உளப்பாட்டுப் பன்மையேயாம். அங்ஙனம் உளப்படும் முன்னிலைப் பொருளும் படர்க்கைப் பொருளும் உயர்திணையாகவும் அமையும்; அஃறிணை யாகவும் அமையும். அஃதாவது யானும் நீயும் அவன் குதிரையும் செல்வேம்-யானும் என் குதிரையும் அவனும் சாறும்-என வருமிடத்து, உயர்திணைக்கே உரிய தன்மைப் பன்மை வினை அஃறிணையை உளப்படுத்தி அதற்கும் முடிபு ஆதலை நோக்கி, வினை பற்றிய வழூ அமைப்பாராய்த் 'திரிபவை உள' என்றார். அச்சூத்திரம் வினைச்சொல்லைப் பற்றிய விதியாகும். ஈண்டு இருதிணைப் பெயர்கள் விராய் வந்து இவ்வாறு முடியும் என்றது பெயர்பற்றிய விதியாம். அன்றியும், ஈண்டு முடிக்கும் சொல் தெரிநிலை வினை யாகவோ குறிப்புவினையாகவோ அமையலாம் ஆதலின் அச்சூத்திரத்தான் இவ்விதி உய்த்துணர்தற்கு ஆகாமை அறிக.

## பதிப்பாசிரியர் குறிப்பு

43. உயர்திணையாகிய தன்மைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் திணை வேறுபடுமாயினும் இரண்டனையும் சேர்த்து எண்ணவேண்டிய தேவை ஏற்பட்ட வழி, எண்ணப்படுதற்கண் வேறுவழி இன்மையின், 'யானும் என் எஃகமும் சாறும்' என்பனபோன்ற தொடர்கள் *வழா நிலையாய்* மரபு ஆயின என்பது இந்நூற்பாச் செய்தி.

'பன்மை உரைக்கும்' (சொ. 209) என்பது வினைச்சொல் பற்றிய விதி. இந்நூற்பா நுவல்வது பெயர் பற்றி விதி. இரண்டற்கும் உரிய வேறுபாடு அறிதல் வேண்டும். தன்மையும் அஃறிணையும் இணைத்து எண்ணப்படும் வழாநிலையே இங்குக் கூறப்பட்ட செய்தியாகும்.

## இளம்பூரணர் உரை

### ஒருவன் ஒருத்தி என்பன பற்றிய மரபு

**44. *ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்***
***ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.***

எ . . . ன், மரபுவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : 'ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்' என்பது - ஓர் எண்ணாய் இரண்டுபாற்கும் பொதுவாய், ஒருவன் ஒருத்தியெனப் பிரிந்து நின்று பால் வேறுபடுவ தாயிற்று; அஃது யாதோ எனின், ஒருவர் என்பது. அஃது இருபாற்கும் பொதுவாய் நிற்பினும், ஒருவர் இருவர் என்று எண்ணும் பொழுதாயின் ஒருபாற்கே உரித்தாகி நிற்கும்.

இனி, எண்ணுதல் களைந்து ஒருவர் என்றக்கால், இருபாலையுந் தழீஇ நிற்கும். இதுவும் ஒருசார் ஆசிரியர் உரைப்ப.

இனி. ஒருமை எண்ணின் பொது ஒருவரென்பது; அப்பொதுமையிற் பிரிந்த பாற்சொல் ஒருவன் ஒருத்தி என்பன. அவை தத்தம் ஒருமை விளங்கி நிற்கும் துணை யல்லது, அப்பால் மேல் எண்ணுமுறை ஓடா என்பது. (44)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

44. **'ஒருமை எண்ணின்'** -

பொதுப்பிரி பாற்சொல் - தான் ஆண் பெண் என்ற இருபாற்கும் பொதுவாய், இடம்நோக்கி ஆண் என்றோ,

பெண் என்றோ பகுத்து உணரத்தக்க ஒருவர் என்றும் சொல். ஒருவர் என்னும் சொல் ஆண்பால், பெண்பால் இரண்டற்கும் பொது. இருவர், மூவர் போன்ற சொற்கள் ஒரு சமயத்தில் ஆண் பன்மையையோ, பெண்பன்மையையோ உணர்த்தும்; ஆண், பெண் என்ற இரண்டன் பன்மையையும் கலந்து உணர்த்தா.

பொதுப்பிரி பாற்சொல்-ஒருவர் என்ற பொதுச் சொல்லிலிருந்து பிரித்து உணரப்படும் ஒருவன், ஒருத்தி என்ற பால் காட்டும் சொற்கள். அவை இருவன், இருத்தி முதலாக வாரா.

இவ்விரு செய்திகளையும் இந்நூற்பா உரையுள் இளம்பூரணர் குறிப்பிட்டுகிறார்.

## சேனாவரையர் உரை

### எண் ஒருமைக்கு உரிய சொற்கள்

**44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்**
**ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.**

*(இ-ள்)* : ஒருமை எண்ணினை உணர்த்தும் பொதுப்பிரி பால்சொல் ஆகிய ஒருவன், ஒருத்தி என்னும் சொற்கள் ஒருமைக்கண்அல்லது இருமை முதலாகிய எண்ணுமுறைக் கண் நில்லா என்றவாறு. எனவே, பொதுப் பிரியாப் பால்சொல் ஆகிய ஒருவர் என்னும் சொல் இருவர், மூவர் என எண்ணுமுறைக்கண்ணும் நிற்கும் என்பதாம்.

பொதுப்பிரி பால்சொல் என்றாரேனும், ஒருவன் ஒருத்தி என்பனவற்றது பால் உணர்த்தும் ஈறே கொள்ளப்படும்; என்னை? எண்ணுமுறை நில்லா என்று விலக்கப்படுவன அவையே ஆகலின் என்பது.

மகன், மகள் என்னும் தொடக்கத்துப் பொதுப்பிரி பால்சொல்லின் நீக்குதற்கு 'ஒருமை எண்ணின்' என்றும், ஒருவர் ஒன்று என்பனவற்றின் நீக்குதற்குப் 'பொதுப் பிரி பால்சொல்' என்றும் கூறினார்.

ஒருவர் என்னும் ஆண்மைபெண்மைப் பொதுவின் பிரிதலின் பொதுப்பிரி பாற்சொல் என்றார்.

பொதுப்பிரி பாற்சொல் என்னும் ஒற்றுமையான் 'நில்லாது' என ஒருமையாற் கூறினார்.

ஒருவன், ஒருத்தி என ஒருமைக்கண் நிற்றலும், இருவன், மூவன்-இருத்தி, முத்தி -என எண்ணுமுறைமைக் கண் நில்லாமையும் கண்டுகொள்க.

இது பால்வழுக் காத்தவாறு. (44)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**44. ஒருமை . . . நில்லாது-**

ஆண் பெண் என்ற இரண்டற்கும் பொதுவாய் இருக்கும் தன்மையின் நீங்கி ஆண்பாலையும் பெண்பாலையும் உணர்த்தும் சொற்கள் - மகன், மகள், ஒருவன், ஒருத்தி முதலியன.

ஒருமை எண் அடிப்படையில் வரும் சொற்கள்- ஒருவன், ஒருத்தி, ஒருவர், ஒன்று என்பன.

ஒருவர் என்பது உயர்திணை ஆண் பெண் இரண்டற்கும் பொது.

ஒன்று என்பது அஃறிணை ஆண் பெண் இரண்டற்கும் பொது.

மகன், மகள் முதலியவற்றை நீக்க 'ஒருமை எண்ணின்' எனவும் ஒருவர், ஒன்று என்பனவற்றை நீக்கப் 'பொதுப்பிரி பாற்சொல்' எனவும் கூறப்பட்டன.

தன்மை ஒருமை - ஒருவேன் எனவும், பன்மைக்கண் - இருவேம் மூவேம் என்றாற்போலவும் வரும்.

முன்னிலை ஒருமை - ஒருவை எனவும், பன்மைக்கண்- இருவீர், மூவீர் என்றாற்போலவும் வரும்.

### நச்சினார்க்கினியர் உரை

### ஒருவன் ஒருத்தி என்னும் சொல் மரபு

***44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்***
***ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.***

இஃது எண்ணுவகையான் கூறும் ஒருவகைச் சொல் நிகழ்ச்சி கூறுகின்றது.

இ-ள் : ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல் - ஒருமை எண்ணினை உணர்த்தும் ஒருவர் என்னும் பொதுமையின் நின்றும் பிரிந்த பால் உணர்த்தும் சொல்லாகிய ஒருவன் ஒருத்தி என்னும் சொல்; ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது - ஒருமைக்கண் அல்லது இருமை முதலிய எண்ணுமுறைக்கண் நில்லாது என்றவாறு.

எனவே, பொதுப் பிரியாப் பாற்சொல்லாகிய ஒருவர் என்னும் சொல், 'இருவர் மூவர்' என எண்ணுமுறைமைக் கண் நிற்பது ஆயிற்று. இருவன் மூவன் எனவும் இருத்தி முத்தி எனவும், னகரஈறும் இகரஈறும் இயைபு இன்மை யானும், ரகரஈறு இயைபு உடைமையானும் இங்ஙனம் கூறினார்.

ஒன்றென முடித்தல் என்பதனான் ஒருவேன், ஒருவை என்னும் தன்மை முன்னிலை ஈறும் எண்ணுமுறை நில்லாமை கொள்க. (44)

### நச்சினியார்க்கியர் உரைவிளக்கம்

**44. ஒருமை எண்ணின் -**

ஒருவன், ஒருத்தி எனச் சொற்கள் இரண்டாயினும் சாதி ஒருமையான் நில்லாது என்ற ஒருமை வினையொடு முடிந்தது என்க. ஒருவர் - இருவர் மூவர் என வரலாம். ஒருவன் - இருவன், மூவன் எனவும், ஒருத்தி - இருத்தி, முத்தி எனவும், ஒருமை ஈறு பன்மைக்கு முடிபு ஆகாமையின் பொருந்தா.

ஒருவேன், ஒருவை என்பனவும் ஒருமை ஈறாதலின், இருவேன், இருவை என்றாற்போலப் பன்மைக்கு முடிபு ஆகா.

'மூவன்காண், மூவர்க்கும் முதலானான் காண்' (தேவா.7100)

இறைவற்குஆயின் இவ்விதிக்கு விலக்கு அளிக்கப் படும்; அவன் 'தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தான் பல்வயின் உயிர்எல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான்' (கலி. 129) ஆதலின்.

## தெய்வச்சிலையார் உரை

**42. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பால்சொல்
ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.**

உயர்திணைப் பொருள்மேல் எண்ணுமுறை நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ஒருமை எண்ணின் பொதுமை ஆகிய ஒருவர் என்னும் சொல்லின்நின்றும் பிரிந்த ஒருவன், ஒருத்தி என்னும் சொல் அவ்வொருமைக்கு அல்லது எண்ணு முறைக்கண் ஓடாது எ-று.

எனவே, எண்ணுமுறைக்கண் ஆண்பால் ஆயினும் பெண்பால் ஆயினும் ஒருவர், இருவர், மூவர் என எண்ணின்அல்லது பால்தோன்ற எண்ணப்படாது என்றவாறு ஆம். (42)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**42. 'ஒருமை எண்ணின்'-**

ஒருவர், இருவர், மூவர் என்ற சொற்களில் ஆண்பால், பெண்பால் என்ற பால் வேறுபாடு புலப்படாது.

## கல்லாடனார் உரை

### எண்ணுவகையால் சொல்நிகழ்ச்சி

***44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பால்சொல்
ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.***

என்-எனின், எண்ணும் வகையாற் சொல்லும் ஒருவகைச் சொல் நிகழ்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ஒருமைப் பொருட்கு உரிய எண்ணாய், உயர்திணை இருபாற்கும் பொது ஆகிய ஒருவர் என்னும் சொல்லின்நின்றும் பொதுமைகெடப் பிரித்து உணரப் படும் ஒருவன் என்னும் சொல்லாயினும் ஒருத்தி என்ற சொல்லாயினும், எண்ணாதபொழுது தன் ஒருமை விளங்கும் துணை அல்லது, எண்ணுமுறைக்கண் முதல் எண் ஆங்கால் ஆண்மையோ பெண்மையோ உணர்த்தும் வகை நில்லாது.

எ-டு : ஆண்மக்கள் பலர் நின்றாரை எண்ணுங்காலும் ஒருவர், இருவர், நால்வர் என்று எண்ணுக. பெண்டிர் பலரை எண்ணுங்காலும் அவ்வாறே எண்ணுக. (ஒருவர் என்பது எண்ணுமுறைக்கண் முதல் எண் ஆதல்.)

ஒருவன் என்பதும் ஒருத்தி என்பதும் ஒருமை எண்ணே. எண்ணு முறைமைக்கண் ஆகாமை என்னை எனின், பொருளான் ஆகாமை இல்லை. ஒருவன் என்பதற்கு ஏற்ப மேலும் இருவன், மூவன் என னகர ஈற்று இயைபு இன்மையானும், ஒருத்தி என்பதற்கு ஏற்ப இருந்தி, முத்தி என இகர ஈற்று இயைபு இன்மையானும், மேல் வருகின்ற ரகர ஈற்றோடு ஒருவர் என்பது சொல் இயைபு உடைமையின், அதுவே கொள்ளப்பட்டது.

இதனால் சொல்லியது, எண்ணின்கண் பிறக்கும் மரபு இலக்கணம் என உணர்க. (44)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**44. 'ஒருமை . . . நில்லாது.'-**

ஒருவன், ஒருத்தி என்பன எண்ணுமுறைமைக்கண் ஆகாமையும், ஒருவர் என்பதே எண்ணுமுறைக்கண் ஆவதும் விளக்கப்பட்டுள்ளன.

### ஒருவர் உரை

***44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பால்சொல்
ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.***

எ-து : ஒருமை எண்ணினை உணர்த்தும் ஒருவர் என்னும் பொதுமையின் நின்றும் பிரிந்து பால் உணர்ந்தும் சொல் ஆகிய ஒருவன், ஒருத்தி என்னும் சொல் ஒருமைக்கு அல்லது இருமை முதலிய எண்களின் ஓடாது.

பொதுஆவது - ஒருவர். அஃது இருபாற்கும் பொது. அது பிரியாக்கால் ஒருவர், இருவர், மூவர், நால்வர் என எவ்வளவும் எண் ஓடுமாறு காண்க. அப்பொது பிரிந்து ஒருவன் என நிற்பின் இருவன், மூவன் என ஆகாது.

இவ்வாறு கூறியது, னகர ஈறும், இகர ஈறும் எண்ணுதற்கு இயைபு இன்மையானும், ரகர ஈறு இயைபு உடைமையானும் என்க. *(44)*

### சாத்திரியார் உரை

**44. 'ஒருமை . . . நில்லாது.'-**

இச்சூத்திரத்துக்கு முற்சூத்திரம் பிற்சூத்திரம் எண்ணும்போதுள்ள சொல் நிகழ்ச்சியைப் பற்றிக் கூறுவதால் இதுவும் அதனையே கூறல்வேண்டும். ஓர் ஆணைக் குறிக்கும் ஒருவன் என்னும் சொல்லும் ஒரு பெண்ணைக் குறிக்கும் ஒருத்தி என்னும் சொல்லும் எண்ணும்போது ஒருவன், இருவர், மூவர் - ஒருத்தி, இருவர், மூவர் - என்றுவர இடனுண்டாக, அதனை விலக்கி, ஒருவர் இருவர் மூவர் என்றே வரவேண்டும் என்று இச்சூத்திரம் விதிப்பதாகும்.

## பாலசுந்தரனார் உரை

**44. 'ஒருமை . . . நில்லா.'-**

*பாற்சொல் என்றது பால் உணர்த்தும் ஈறுகளை ஆதலின் நில்லா என்பதே பாடம். 'ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்ணில' எனச் சுருங்கக் கூறியிருப்பின், இவ்விதி ஒருவன், ஒருத்தி என்ற படர்க்கைச் சொற்களுக்கு மட்டுமே செல்லும். ஒருவேன், ஒருவை என்னும் தன்மை முன்னிலைப் பெயர்களும் அடங்க இவ்வாறு ஓதினார் என்க.*

## பதிப்பாசிரியர் குறிப்பு

*44. ஒருவன், ஒருத்தி என்று நேரிடையாகக் கூறாமல் 'ஒருமை எண்ணின் பொதுப்பிரிபாற் சொல்' என்று சுற்றி வளைத்துக் கூறியதனான், ஒருவேன் என்ற தன்மைப் பெயரும், ஒருவை என்ற முன்னிலைப் பெயரும் கொள்ளப்படும்.*

## இளம்பூரணர் உரை

### வியங்கோள் திணை விரவுதல்

***45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

எ . . . ன், இதுவும் திணைவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : வியங்கோளுடைய எண்ணுப்பெயர் திணை விரவுதல் கடியப்படா என்றவாறு.

உதாரணம் : ஆவும் ஆயனும் செல்க என வரும்.

இஃது இனமல்லதனோடு எண்ணினமையின் வழூஉ ஆயிற்று.

இனி, 'ஆவும் ஆயனும் செல்க' என்றவிடத்துச் 'செல்க' என்னும் வியங்கோள் வினை இருதிணைக்கும் முடிபேற்றமையிற் திணை வழூஉ அமைதியாய் ஆயிற்று என்ப.

மற்று, இன்ன எண் என்பது சூத்திரத்துப் பெற்றிலா மையின், உய்த்துணர வைத்தல் என்னும் உத்திவகையான், உம்மை எண்ணும், எனவென் எண்ணும் எனக் கொள்க. என்னை? அவ்விரண்டு எண்ணும் தொகை பெற்றும் பெறாமலும் முடியும்; மற்றை எண்ணுக்களெல்லாம் தொகை பெற்றே முடியும்.

ஈண்டுத் தொகை பெறும் எண்ணினான் கூறிற்றிலர் திணை வழூஉம் ஆகலான் என்பது. *(45)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**45. 'வியங்கோள் எண்ணுப்பெயர்' -**

ஆவும் ஆயனும் - உயர்திணையும் அஃறிணையும் எண்ணினமையின் இனம் அல்லன.

தொகை பெற்றே முடியும் எண்கள்-பெயர்ச் செவ்வெண், என்றா, எனா, ஏ என்பன (சொ. 284, 285).

இவற்றிற்கு இவர்களை என்றோ இவைகளை என்றோ தொகை கொடுப்பின் திணை வழு ஏற்படும்.

ஆதலின் தொகை பெற வேண்டாதனவாகிய உம்மை எண்ணும் என என் எண்ணுமே கொள்ளப்பட்டன.

'உம்மை எண்ணும் என என் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே.' - (சொ. 282)

## சேனாவரையர் உரை

### வியங்கோள் அமையும் வகை

***45.வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

*(இ-ள்) :* வியங்கோளொடு தொடரும் எண்ணுப்பெயர் இருதிணை விராய் வருதல் வரையார் என்றவாறு.

*(எ-டு) :* ஆவும் ஆயனும் செல்க என வரும்.

தன்மைப் பன்மை வினைபோலாது வியங்கோள் இருதிணைக்கும் உரிய சொல் ஆகலான் இருதிணைச் சொல்லையும் முடிக்குமன்றே? அதனான் ஆவும் ஆயனும் செல்க என்புழி வழு இன்மையின் அமைக்கற்பாற்றன்று எனின், இருதிணைப் பொருட்கும் உரித்தேனும், ஒருதிணைப் பொருளைச் சொல்லுதற்கண் இருதிணைப் பொருளும் உணர்த்தாமையின், ஒரு திணையே உணர்த்தல் வேண்டும்; ஒரு திணை உணர்த்தியவழி ஏனைத் திணைப்பெயரோடு இயையாமையின் திணை வழுவாம்; அதனான் அமைக்கல் வேண்டும் என்பது.

எண் என்றா, உறழ் என்றா ஆயிரண்டும் இனன் ஒன்றல் வேண்டும் என்பது இலக்கணம் ஆகலான், யானும் என் எஃகமும் சாறும் என்புழியும், ஆவும் ஆயனும் செல்க என்புழியும் இனன் அல்லன உடன் எண்ணப்படுதலின் வழு என்றாரால் உரையாசிரியர் எனின், திணை வேறுபாடு உண்டேனும், யானும் என் எஃகமும் என்புழி வினைமுதலும் கருவியும் ஆகிய இயைபும், ஆவும் ஆயனும் என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவும் ஆகிய இயைபும் உண்மையான் உடன் எண்ணப்படுதலானும், யானை தேர் குதிரை காலாள் எறிந்தான் என முன்னர் உதாரணம் காட்டுப ஆகலானும், பிறாண்டும் 'எண்ணுத்திணை விரவுப்பெயர் அஃறிணை முடிபின' (சொல்-51) என ஆசிரியர்க்கு ஆராய்ச்சி முடிபு கோடற்கண்ணது ஆகலானும், அவர்க்கு அது கருத்து அன்று என்க. அல்லதூஉம், திணை விராய் எண்ணல் வழு என்பதே கருத்து ஆயின்,

'நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்' (புறம்-72)

எனவும்,

'இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்' (குறள்-920)

எனவும், படர்க்கைச் சொல்லும் அஃறிணைக் கிளவியும் விராய் எண்ணுதல் வழக்குப் பயிற்சி உடைமையான்,

அவையும் அடங்க உயர்திணைச் சொல்லே அஃறிணைக் கிளவி எனப் பொதுப்பட ஓதாது 'தன்மைச் சொல்லே அஃறிணைக்கிளவி' (சொல்-43) எனத்தன்மைச் சொல்லையே விதந்து ஓதல் குன்றக் கூறலாம் ஆகலானும், அவர்க்கு அது கருத்தன்மை அறிக.

'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணிஉடை யீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்' (புறம்-9)

எனத்-திணை விராய் வந்து முன்னிலைவினை கோடல் எற்றாற் பெறுதும் எனின், அந்நிகரன செய்யுள் முடிபு எனப் படும்; அவற்றை அதிகாரப்புறனடையான் கொள்க. திணை விராய் எண்ணப்படும் பெயர் வியங்கோள் அல்லா விரவு வினையொடு தொடர்ந்து வருவன வழக்கினுள் உளவேல் ஒன்றென முடித்தல் என்பதனான் கொள்க. (45)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**45. வியங்கோள் . . . வரையார்-**

வியங்கோள் இருதிணைக்கும் பொது. அஃதாவது ஒரு சமயத்தில் உயர்திணையை உணர்த்தும்; பிறிதொரு சமயத்தில் அஃறிணையை உணர்த்தும். ஆனால் ஒரே சமயத்தில் உயர்திணை அஃறிணை என்ற இரண்டனையும் உணர்த்துதல் இயலாது. அத்தகைய வியங்கோள் உயர்திணை அஃறிணை என்ற இரண்டனையும் ஒருசேர எண்ணும்வழியும் வரலாம் என்பதனை இந்நூற்பா உணர்த்துகின்றது. (எ-டு) ஆவும் ஆயனும் செல்க.

ஒன்றனுக்கு ஒன்று இனம் அல்லாத ஆ, ஆயன் என்ற இருசொற்கள் உடன் எண்ணப்படுவதால் 'ஆவும் ஆயனும் செல்க' என்பது அமைக்கப்படவேண்டிய வழு என்பது உரையாசிரியர் கருத்து. சேனாவரையர் உரையாசிரியர் கூற்றை நான்கு காரணங்கள் காட்டி மறுக்கிறார்.

*1. 'ஆவும் ஆயனும்' என்புழி மேய்க்கப்படுவனவும் மேய்ப்பானும் ஆகிய இயைபு உள்ளமையான் அச்சொற்கள் எண்ணுதற்கு இயைபு உடைய சொற்களே.*

*2. சொ. 291ஆம் நூற்பா உரையுள் உரையாசிரியர் 'யானை தேர் குதிரை காலாள் எறிந்தான்' எனத் திணைவிரவி எண்ணிய தொடரை எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார்.*

*3. தொல்காப்பியரும் 'எண்ணுத்திணை விரவுப் பெயர் அஃறிணை முடிபின' என இருதிணையும் விரவி எண்ணப் படுதலை ஏற்றுக்கொண்டுள்ளார்.*

*4. திணை விரவி எண்ணுதல் வழு என்பது தொல் காப்பியர் கருத்தாயின்*

*'யானையும் தேரும் மாவும் மறவரும் யாம் உடையம்'*
*(புறம். 72)*

*எனவும்*

*'இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்' (குறள். 920)*
*எனவும்*

*உயர்திணைப் படர்க்கைச் சொல்லும் அஃறிணைச்சொல்லும் விரவி எண்ணப்படுதல் பெரிதும் காணப்படுதலின் அவையும் அடங்க 'உயர்திணைச் சொல்லே அஃறிணைக் கிளவி, எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்' என்று கூறாது 'தன்மைச்சொல்லே அஃறிணைக்கிளவி' என்று மாத்திரம் குறிப்பிடுதல் குன்றக்கூறல் என்னும் குற்றமாகும்.*

இவற்றான் இனம் அல்லாதன உடன் எண்ணப் படுதல் வழு என்ற உரையாசிரியர் கருத்து மறுக்கப்படுகிறது. இம்மறுப்புக்களின் பொருத்த மின்மையைச் சாத்திரியார் விளக்கியுள்ளார்.

**ஆவும்** - "ஆவும், ஆனினது இயல்பை உடைய அந்தணரும், மகளிரும், நோயுடையீரும், பாதுகாத்துத்

தென்திசைக்கண் வாழ்வோர் ஆகிய நும் குடியில் இறந்தோருக்குச் செய்தற்கு அரிய பிண்டோதகக் கிரியையைப் பண்ணும் பொன் போலும் பிள்ளைகளைப் பெறாதீரும் எம்முடைய அம்பை விரையச் செலுத்தக் கடவேம், நீர் நுமக்கு அரணாகிய இடத்தை அடையும்" என அஃறிணையும் உயர்திணையும் விரவி முன்னிலை வினையை முடிக்குஞ் சொல்லாகக் கொண்ட செய்தி இச்சொல்லதிகாரப் புறனடை நூற்பாவுள் (சொ. 463) அடக்கிக் கொள்ளப்படும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**எண்ணுப் பெயரில் திணைவழு அமைதி**

***45.வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

இஃது எண்ணின்கண் திணைவழு அமைக்கின்றது.

இ-ள் : வியங்கோள் எண்ணுப்பெயர் - வியங்கோளொடு தொடரும் எண்ணுப்பெயர்; திணைவிரவு வரையார் - திணை விராய் வருதலை நீக்கார் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம் : ஆவும் ஆயனும் செல்க.

இதன்கண், எண்ணும்மை ஆதலின் சேறல் தொழில் இருதிணைப்பொருட்கும் எய்துதலின் வழு இன்றேனும், அஃறிணை ஏவல்தொழிலை முற்ற முடியாமை கருதி வழு அமைத்தார்.

'ஆவும் ஆன்இயல் பார்ப்பன மாக்களும்' -(புறநா.9:1)

என எண்ணி, 'நும்அரண் சேர்மின்(புறநா.9:5) என முன்னிலை வினைகோடல் செய்யுள்முடிபு என்பது அதிகாரப் புறனடையான் (சொ. 463) கொள்க.

'ஆவும் ஆயனும் சென்ற கானம்', 'ஆவும் ஆயனும் செல்லும் கானம்' என, வியங்கோள் அல்லா விரவு வினையான் வருதல், தன் இனம் முடித்தலான் கொள்க. (45)

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**45. வியங்கோள் எண்ணுப்பெயர் -**

செல்லுதல் தொழில் ஆவுக்கும் உண்டு, ஆயனுக்கும் உண்டு. செல்லுதல் தொழிலை ஆயன் முற்றமுடிப்பான்; ஆனால் ஆ தானாகச் செல்லுதல் தொழிலை முற்ற முடிக்காது. ஆதலின் 'ஆவும் ஆயனும் செல்க' என்பது வழுவமைதி.

அதிகாரப்புறனடை - சொல். 463ஆம் நூற்பா.

சென்ற, செல்லும் என்னும் பெயரெச்சங்கள் இரு திணை ஐம்பால் மூவிடங்களுக்கும் உரிய. இவற்றின் கண்ணும், அஃறிணை செல்லுதல் தொழிலை முற்ற முடியாமையின் வழுவமைதியாம். 'வேட்டைநாயும் வேடனும் செல்க' என்புழி, வேட்டைநாய் ஏவற்றொழிலை முற்ற முடித்தமையின் வழாநிலையாகும்.

'தன்னினம் முடித்தல்' நூற்பாவின் கூறப்படாதாயினும், நூற்பாவில் கூறப்பட்ட செய்திக்கு இனம் ஆதலின் நூற்பாவுள் அடக்கிக் கூறப்படும் என்பது.

**தெய்வச்சிலையார் உரை**

***43.வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

ஐயம் அறுத்தலை நுதலிற்று.

என்னை? வினையியலுள் வியங்கோள் இரு திணைக்கும் பொது என்றார் ஆயினும், எண்ணுங்கால் தனித்தனி எண்ணல் வேண்டுமோ, விரவி எண்ணல் வேண்டுமோ என்ன நின்ற ஐயம் நீக்குதலின். இது திணை வழு அமைதியும் ஆம்.

இ-ள் : வியம்கொள்ளும் எண்ணுப்பெயர் திணை விரவுதல் நீக்கார் எ-று.

ஆவும் ஆயனும் செல்க என வரும். (43)

### தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**43. 'வியங்கோள்'-**

வியங்கோள் இருதிணைக்கும் பொது. ஆனால் எண்ணும்போது உயர்திணைப் பொருள்களைத் தனியாகவும், அஃறிணைப் பொருள்களைத் தனியாகவும் எண்ணல் வேண்டுமோ, இருதிணைப் பொருள்களையும் கலந்து எண்ணலாமோ என்ற ஐயம் நீக்கப்பட்டு, இருதிணைப் பொருள்களையும் விரவி வியங்கோள் வினையை முடிபாகக் கூறலாம் என்ற திணைவழூவமைதி கூறப்படுகிறது.

### கல்லாடனார் உரை

### வியங்கோள் எண்ணுப்பெயர்

***45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

என்-எனின், எண்ணின்கண் திணைவழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வியங்கோட்கண் எண்ணப்படும் பெயர் திணைவிராய் வரும் வரைவினை நீக்கார் கொள்வர் ஆசிரியர் என்றவாறு.

எ-டு : ஆவும் ஆயனும் செல்க என வரும்.

'தன் இனம் முடித்தல்' என்பதனான், வியங்கோள் அல்லாத விரவு வினைக்கண்ணும் சிறுபான்மை வருவன கொள்க. அவை ஆவும் ஆயனும் சென்ற கானம் என்பன போல்வன.

இதனான் கூறியது, எண்ணின்கண் திணைபற்றிப் பிறக்கும் மரபுவழூஉ அமைதி என உணர்க. (45)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**45. வியங்கோள் . . . வரையார்.-**

இந்நூற்பா எண்ணின்கண் திணை பற்றிப் பிறக்கும் மரபு வழுவமைதி.

'தன்னினம் முடித்தல்' என்பதனான் பெயரெச்சம் முதலிய பொதுவினைகளின்கண்ணும் உயர்திணையும் அஃறிணையும் கலந்து எண்ணும் நிலை ஏற்படும் என்பதாம்.

### ஒருவர் உரை

***45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.***

எ-து : வியங்கோளொடு தொடரும் எண்ணுப்பெயர் இரு திணையும் விராய் வருதலை நீக்கார்.

எ-டு : ஆவும் ஆயனும் செல்க, யானையும் பாகனும் வருக - என வரும்.

உம்மை - எண் உம்மை.

### சாத்திரியார் உரை

**45. 'வியங்கோள் . . . வரையார்.'-**

வியங்கோள் வினை கொள்ளுமிடத்து உயர்திணை அஃறிணைப் பெயர்கள் உடன் எண்ணப்படலாம் என்பதே இளம்பூரணர், தெய்வச்சிலையார் இவர்கள் கருத்து.

உயர்திணைப் பெயரும் அஃறிணைப் பெயரும் உடன் எண்ணப்படலாம் என்பது வேறு சூத்திரத்தால் பெறப்படாமை யானும், வியங்கோள் இருதிணைக்கும் பொது ஆகலானும் இவ்விருவர்கொள்கையே பொருந்தும்.

சேனாவரையர் கூறும் மறுப்புக்களின் பொருத்தமின்மை விளக்கப்பட்டுள்ளது.

### பாலசுந்தரனார் உரை

**45. 'வியங்கோள் . . . வரையார்.'-**

வியங்கோள் வினை இருதிணைக்கும் பொது வாயினும் விரவுமிடத்து ஒரு திணைப்பொருளை நோக்கின் மற்றொன்றுக்கு அது பிறிது ஆதலின் மயங்கிநிற்கும். இம்மயக்கம் தம்மரபின ஆதலானும் பிறிது ஆறு இன்மை யானும் வழாநிலையாகக் கொள்ளப்படும் என்க.

இனமானவற்றையே எண்ணுதல் வேண்டும் என்னும் விதியின்மையானும் ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வேற்றுமை உண்மையானும் இளம்பூரணர் உரைப்பதும் நச்சினார்க்கினியர் உரைப்பதும் பொருந்தா.

## பதிப்பாசிரியர் குறிப்பு

45. வியங்கோள் வினை முடிவின்கண் திணை விரவி வருதல் வழாநிலை என்பது இந்நூற்பாவான் குறிப்பிடப் பட்டுள்ளது.

## இளம்பூரணர் உரை

### மரபு வழுக்காத்தல்

***46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.***

எ . . . ன், இதுவும் மரபுவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : வேறுவேறு வினையுடையவாய் நின்ற சொற்களை ஒரு வினையான் சொல்லற்க என்பது. எனவே, பொதுவினையான் கிளக்க என்பதாம்.

இனி, ஒருவும் வினை என்பது, ஒரூஉ வினை என்றாயிற்று என்றலும் ஒன்று. ஒரூஉதல் என்பது நீங்குதல். அவை அடிசில், அணிகலம், இயமரம் என்பன.

*அவற்றைப் பொதுவினையான் கூறுமாறு : அடிசில் அயின்றார்-அணிகலம் அணிந்தார்-இயமரம் இயம்பினார்-என்னுந்தொடக்கத்தன கொள்க. மற்று, 'ஊன்துவை கறிசோறுண்டு' (புறநா. 14) என வந்ததால் எனின், அது பாடம் அறிந்து திருத்திக்கொள்க. (46)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**46. 'வேறுவினைப் பொதுச்சொல்' -**

*ஒரு வினை - ஒன்றற்கே சிறப்பாக உள்ள வினை.*

ஒருவும் வினை - பொதுவினையின் நீங்கி ஒன்றற்கே சிறப்பாக உள்ள வினை; நீர் குடித்தான்-யாழ் எழூஉ வினாள்-வாளான் வெட்டினான் என்புழி உள்ள குடித்தல், எழூஉதல், வெட்டுதல் போன்ற வினைகள்.

இயமரம் - இசைக்கருவிகள்.

'அயிலுதல்' சிறப்பு வினை என்று கூறுவர் நச்சினார்க்கினியர்.

'ஊன் துவை கறிசோறு உண்டு' (புறநா. 14) என்புழி, உண்டு என்பது தவறான பாடம் என்பது இளம்பூரணர் கருத்து. இளம்பூரணருக்கு உண்ணுதல் சிறப்பு வினை.

'உண்டு' என்பது பொதுவினை அன்றேனும், கறி ஒழிந்தவற்றிற்கு எல்லாம் சேறலின் பன்மைபற்றி அமைத்துக் கொள்ளப்படும். ஊன், துவை, கறியொடு கூடிய சோற்றை உண்டு என உரைப்பினும் அமையும் என்பர் புறநானூற்று உரையாசிரியர்.

'ஊன்துவை, கறி சோறு உண்டு வருந்துதொழில் அல்லது பிறிது தொழில் அறியா ஆகலின்' (புறநா-14)-

என ஒருவினையான் வந்ததால் எனின், அது பொதுவினை என்று கொள்க. என்னை?

'உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு' (கலி. 51) எனவும்,

'பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு' (அகநா. 48) எனவும்,

'கலைப்புற அல்குல் கழுகுகுடைந்து **உண்டு**' (மணிமே. 11 : 112) எனவும்,

'கள்ளுண்ணாப் போழ்து' (குறள்-930) எனவும்,

'உண்ணாமை வேண்டும் புலாஅல்' (குறள்-257) எனவும் வருதலின்

என்பர் தெய்வச்சிலையார் (சொ. 45).

## சேனாவரையர் உரை

### மரபுவழுக் காத்தல்

**46. வேறுவினை பொதுச்சொல் ஒருவினை கிளவார்.**

*(இ-ள்)* : வேறுபட்ட வினையை உடைய பல பொருட்குப் பொது ஆகிய சொல்லை ஒன்றற்கு உரிய வினையால் கிளவார் என்றவாறு.

எனவே, பொதுவினையால் கிளப்பர் என்றவாறாம். அவை அடிசில், அணி, இயம், படை என்னும் தொடக்கத்தன.

அடிசில் என்பது உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்னும் நால்வகைக்கும், அணி என்பது கவிப்பன, கட்டுவன, செறிப்பன, பூண்பன என்னும் தொடக்கத்தன வற்றிற்கும், இயம் என்பது கொட்டுவன, ஊதுவன, எழுப்புவன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும், படை என்பது எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும் பொது ஆகலின் அடிசில் அயின்றார், மிசைந்தார் எனவும் அணி அணிந்தார், மெய்ப் படுத்தார் எனவும்-இயம் இயம்பினார், படுத்தார் எனவும் படை வழங்கினார், தொட்டார் எனவும்-பொது வினையால் சொல்லுக.

அடிசில் தின்றார், பருகினார் எனவும் -அணி கவித்தார், பூண்டார் எனவும்-இயம் கொட்டினார், ஊதினார் எனவும்-படை எறிந்தார் எனவும்-ஒரு சார்க்கு உரிய வினையாற் சொல்லின் மரபு வழுவாம் என்பது.

பொருளின் பொதுமையைச் சொல்மேலேற்றி வேறு வினைப் பொதுச்சொல் என்றார். (46)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**46. வேறுவினை . . . கிளவார்-**

பலபொருட்குப் பொதுவாகிய சொல்லுக்குப் பல பொருளுக்குப் பொதுவாகிய வினையே முடிக்கும் சொல்லாக அமையும்.

## நச்சினார்க்கினியர் உரை

### மரபு வழுக்காத்தல்

***46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.***

இஃது மரபுவழுக் காக்கின்றது.

இ-ள் : வேறு வினைப்பொதுச்சொல் - வேறுபட்ட வினையினை உடைய பல பொருட்குப் பொதுவாகிய சொல்லை; ஒருவினை கிளவார் - அவற்றுள் யாதானும் ஒரு வினையான் கூறார்; எனவே, அவற்றை எல்லாம் உள்ளடக்கி நிற்கும் பொதுவினையான் கூறுவர் என்றவாறு.

அடிசில் என்பது - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவற்றிற்கும், அணி என்பது - கட்டுவன, கவிப்பன, செறிப்பன, பூண்பனவற்றிற்கும், இயம் என்பது - கொட்டுவன, ஊதுவன, எழுப்புவனவற்றிற்கும், படை என்பது - எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்கும் பொதுவாதலின், அடிசில் உண்டார், கைதொட்டார் எனவும் - அணி அணிந்தார், மெய்ப்படுத்தார் எனவும் - இயம் இயம்பினார், படுத்தார் எனவும் - படை வழங்கினார், தொட்டார் எனவும் - பொதுவினையான் கூறுக. இவற்றை ஒரு வினையான் கூறின் வழுவாம்.

'மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி' (கலி. 50) எனவும்,

'நளிபுகை கமழாது இறாயினிர் மிசைந்து' (மலைபடு. 249) எனவும்,

'இடம்படின், வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த'
(அகநா. 29) எனவும்,

'கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய,
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்' (பரி. 5) எனவும், இவை தின்று எனவும் விழுங்கி எனவும் பெரும்பான்மை வருதலின், மிசைந்தார், அயின்றார் என்பன உதாரணம் காட்டல் பொருந்தாமை உணர்க

'உண்டற்கு உரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே' (பொ. 213)

என்னும் பொருளியல் சூத்திரத்தான் உண்டல்தொழில் எல்லாவற்றிற்கும் பெரும்பான்மை வருதல் பெற்றாம்.

'அறுசுவை அடிசில் அணியிழை தருதலின்
உறுவயிறு ஆர ஓம்பாது தின்றென'

என்புழித் தின்று என்பது இழித்தற்கண் வருதலின் வழு அன்று. (46)

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**46. வேறுவினைப் பொதுச்சொல் -**

உண்பன-பலவகை உணவுகள்; தின்பன-அப்பம் முதலிய தின்பண்டங்கள்; நக்குவன-கூழ் முதலியன; பருகுவன-சுவைநீர் முதலியன.

கட்டுவன-சலங்கை முதலியன; கவிப்பன-முடி முதலியன; செறிப்பன- தொடி, தோடு முதலியன; பூண்பன-முத்துமாலை முதலியன.

கொட்டுவன-மத்தளம் முதலியன; ஊதுவன-வேய்ங் குழல் முதலியன; எழுப்புன-யாழ் முதலியன.

எய்வன-அம்பு முதலியன; எறிவன- வேல், ஈட்டி முதலியன; வெட்டுவன-வாள் முதலியன; குத்துவன-சுரிகை முதலியன.

**மூங்கில்** -மூங்கிலைத் தின்ற முழந்தாளை உடைய கரிய பெண்யானை.

**நளிபுகை**- மிகுந்த புகைநாற்றம் ஏற்படாமல் பன்றியின் மேல்மயிரைப் பொசுக்கிப் பின் வேகவைத்துத் தின்று.

**இடம்படின்**- இடப்புறம் விழுந்தால், அங்ஙனம் விழுந்த களிற்று இறைச்சியைத் தின்னாத புலியினும் மேம்பட்ட.

**கடவுள்**- கடவுள்தன்மை பொருந்திய ஒப்பற்ற விண்மீனாகிய அருந்ததியைத் தவிர ஏனையவர் அறுவரும் அந்தப் பக்குவத்திலேயே விழுங்கினர்.

உண்ணுதற்கு உரிய அல்லாத பொருள்களை உண்ணப்பட்டன போலக் கூறும் மரபும் உண்மையாலும்

'தோள் நலம் உண்டு துறக்கப்பட்டோர்' - கலி. 23

'நல்கினர் புரிந்து நலன்உணப் பட்டோர்' - கலி. 23

'கூடினர் புரிந்து குணன் உணப் பட்டோர்' - கலி. 23

'பயலையான் உணப்பட்டும் பண்டை நீர்
ஒழிந்தக்கால்' -கலி. 15

'பசலை உணீஇயர் வேண்டும்' - குறுந். 27

என்று சான்றோர் செய்யுட்கண் பயிலுதல் உண்மையாலும் உண்டல்தொழில் எல்லா வற்றிற்கும் பெரும்பான்மை வரும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

உண்டல் என்பது பொதுவினை என்பதனைத் தெய்வச்சிலையார் பல எடுத்துக்காட்டுக்களைக் காட்டி நிறுவியுள்ளார்.

உண்ணலும் மகளிர் இன்பம் நுகர்தலுமே வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டவர் செயலாக,

'**அறுசுவை**'-அறுவகைச் சுவைகளை உடைய உணவு களை அணிகலன்களை அணிந்த மனைவி வழங்குதலான் பெரிய வயிறு நிறையப் பிறருக்கும் வழங்கும் எண்ணமின்றித் தானே தின்று- என்புழி, உணவுகளைத் தின்று எனத் தன் நலமே குறிக்கோளாகக் கொண்ட இழிந்தவனைப் பற்றிக் கூறுதலின், இடம் நோக்க அது வழுவன்று.

### தெய்வச்சிலையார் உரை

#### மரபுவழுக் காத்தல்

***44. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.***

மரபுவழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள் : பல வினையை உடைய பொதுப்பெயரை ஒருவினையான் கூறார் அறிவோர் எ-று. எனவே, பொது வினையான் கிளத்தல் வேண்டும் எ-று.

அது, இயம் என்பது கொட்டுவனவும், எறிவனவும், ஊதுவனவும் ஆம். அதனை இயம் கொட்டினார், ஊதினார், எறிந்தார் என்னற்க; பொதுவினையான் இயம்பினார் என்க. பிறவும் அன்ன. *(44)*

### கல்லாடனார் உரை

#### மரபுவழுக் காத்தல்

***46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.***

என்-எனின், வேறு வினைப் பொதுச்சொற்களது மரபுவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : வேறு வினை உடைய ஆகிய பல பொருளையும் பொதிந்து நின்ற பொதுச்சொல்லை ஒரு பொருளது வினையால் சொல்லார் உலகத்தார்; அதனான் அவற்றிற்கு எல்லாம் பொது ஆகிய வினையானே சொல்லுக எ-று.

எ-டு : அடிசில் கைதொட்டார், அயின்றார்; அணிகலம் அணிந்தார், மெய்ப்படுத்தார்; இயம் இயம்பினார், படுத்தார் - என வரும்.

இதனால் சொல்லியது : பல பொருட்கு உரிய பொதுப் பெயர்ச் சொல்லை எடுத்து மேலதன் வினை கூறுவழி மரபு வழுவற்க என்றவாறு.

இஃது இலக்கணம் ஆகப் பல பொருளும் ஒரு சொல்லுதற்கண் அடங்கி நில்லாது, வேறு வேறு அடிசில் எனவும், அணி எனவும் வரும் வரவும், ஒன்றன் வினை ஒன்றற்கு வரும் வரவும் வழு ஆக்கிச் 'செய்யுள் மருங்கினும்' (எச்ச-67) என்னும் அதிகாரப் புறனடையான் அமைத்துக் கொள்க என்பது. *(46)*

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**46. 'வேறுவினைப் . . . கிளவார்'-**

உண்பன யாவும் அடிசில் என்ற பொதுப்பெயருள் அடக்காது, அடிசிலின் பலவேறு வகைப்பெயரான் குறிப்பிடு வதும், அணியப்படும் ஆபரணங்கள், ஆடை வகைகள், மாலை வகைகள் என்ற பலவகைகளை அணி என்னும் பொதுப் பெயரான் குறிப்பிடாது சிறப்புப் பெயரான் குறிப்பிடுவதும் வழூவாதலின், அவை அதிகாரப்புறனடை யான் அமைக்கப்படும் என்பது கருத்து.

**ஒருவர் உரை**

***46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.***

எ-து : வெவ்வேறு வினையை உடைய பல பொருட்குப் பொதுஆகிய சொல்லை யாதானும் ஒரு வினையான் கூறார்.

ஒருவினையால் கூறார் எனவே எல்லாவற்றையும் உள் அடக்கி நிற்கும் பொதுவினையான் கூறுவர் என்பதாம்.

எ-டு : அடிசில் என்பது உண்பன, தின்பன, நக்குவன, பருகுவனவற்றிற்கும் பொது.

அணி என்பது கட்டுவன, கவிப்பன, செறிப்பன, பூண்பனவற்றிற்கும் பொது.

இயம் என்பது கொட்டுவன, ஊதுவன, எழூஉவனவற்றிற்கும் பொது.

படை என்பது எய்வன, எறிவன, குத்துவனவற்றிற்கும் பொது.

ஆதலின், அடிசில் உண்டார் - அடிசில் கைதொட்டார் எனவும், அணி அணிந்தார் - மெய்ப்படுத்தார் எனவும், இயம் இயம்பினார் - படுத்தார் எனவும், படை வழங்கினார் - தொட்டார் எனவும் பொதுவினையான் கூறுக.

அல்லது அடிசில் குடித்தார் பருகினார் என்றும், அணிகவித்தார் கட்டினார் என்றும், இயம் கொட்டினார் ஊதினார் என்றும், படை எய்தார் குத்தினார் என்றும் ஒன்றன் தொழிலான் கூறற்க.

'அறுசுவை அடிசில் அணிஇழை தருதலின்
உறுவயிறு ஆர ஓம்பாது தின்றென' என

வேறு வினையான் வந்ததால் எனின், அஃது இழித்தற்கண் வந்தது என்க. (46)

## சாத்திரியார் உரை

**46. 'வேறுவினை . . . கிளவார்.'-**

'பொதுவினைகள் சிறப்புப் பொருளில் வந்தனவே அயிலுதல், மிசைதல் என்பன' என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

**பாலசுந்தரனார் உரை**

**46. 'வேறுவினை . . . கிளவார்.'-**

*சொல் என்றது பொருளை.*

*பொதுப்பொருளாவன : உணவு, அணி, இயம், படை முதலியன.*

**இளம்பூரணர் உரை**

**இதுவும் அது**

***47. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.***

*எ . . . ன், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.*

*இ-ள் : வேறு வேறு வினையை உடைய சொற்களை எண்ணுங்காலும் பொதுவினையான் சொல்லுக என்றவாறு.*

*உதாரணம் : யாழும் குழலும் பறையும் இயம்பினார் என வரும்.* *(47)*

**சேனாவரையர் உரை**

**இதுவுமது**

***47. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.***

*(இ-ள்) : வேறு வினைப் பொருள்களைப் பொதுச் சொல்லால் கூறாது பிரித்து எண்ணுமிடத்தும், அதன் இலக்கணம் ஒரு வினையான் கிளவாது பொது வினையான் கிளத்தலேயாம் என்றவாறு.*

*(எ-டு) : சோறும் கறியும் அயின்றார், யாழும் குழலும் இயம்பினார் என வரும். சோறும் கறியும் தின்றார், யாழும் குழலும் ஊதினார் எனின் வழுவாம். அஃதேல், 'ஊன்துவை கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது' (புறம்-14) என்புழி, உண்டு என்பது ஒன்றற்கே உரிய வினை ஆகலின் வழுவாம் பிற எனின், உண்டல் என்பது உண்பன, தின்பன*

எனப் பிரித்துக் கூறும்வழிச் சிறப்பு வினையாம்; பசிப்பிணி தீர நுகரப்படும் பொருள் எல்லாம் உணவு எனப்படும் ஆகலின் பொதுவினையுமாம்; அதனான் அது வழு அன்று என்பது. கறி ஒழித்து ஏனையவற்றிற்கு எல்லாம் உண்டல்தொழில் உரித்து ஆகலின் பன்மைபற்றிக் கூறினார் எனினும் அமையும். *(47)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**47. எண்ணுங் . . . மரபே**

உண்டல் என்பது சிறப்பு வினையாகவும் பொது வினையாகவும் வரும் என இரண்டு வகைகளில் கையாளப்படும் திறம் விளக்கப்பட்டுள்ளது.

## நச்சினார்க்கினியர் உரை

## இதுவும் அது

***47. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.***

இதுவும் அது.

இ - ள்: எண்ணுங்காலும் - அவ்வேறு வினைப் பொருள்களைப் பொதுச்சொல்லால் கூறாது பிரித்து எண்ணு மிடத்தும்; அது அதன் மரபே - அதன் இலக்கணம் ஒரு வினையான் கிளவாது பொதுவினையான்கிளத்தலேயாம் என்றவாறு.

உதாரணம் : சோறும் கறியும் நன்றுஎன்று உண்டார்
யாழும் குழலும் பறையும் இயம்பினார்

எனவரும். தின்றார், ஊதினார் என்றால் வழுவாம்.

'ஊன்துவை, கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது'
(புறநா. 14)

என்புழி நுகரப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் உண்டல்தொழில் வந்தவாறு காண்க. *(47)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**47, எண்ணுங் காலும் -**

நுகரப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் உண்டல் தொழில் பொது ஆதலின் 'ஊன்துவை...... அல்லது' என்பது வழாநிலையேயாம்.

## தெய்வச்சிலையார் உரை

### எண்ணுமிடத்தும் பொதுவினையாற் கிளத்தல்

*45. எண்ணுங் காலை அதுஅதன் மரபே.*

மேலதற்கு எய்துவது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வேறு வேறு வினையை உடைய பொருளைப் பொதுப்பெயரான் கூறுதல் அன்றி எண்ணுமிடத்தும் அதன் மரபு பொதுவினையான் கிளத்தல் எ-று.

உ-ம் : அம்பும், வேலும், தண்டும், வாளும் வழங்கினார் என்க. எறிந்தார் எய்தார் என ஒரு வினையான் கிளவற்க. 'ஊன்துவை - கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது - பிறிதுதொழில் அறியா ஆகலின்' (புறநா. 14) என்றவழி உண்டு என ஒருவினையான் வந்ததால் எனின், அது பொதுவினை என்று கொள்க; என்னை? 'உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு' (கலி. குறி. 15) எனவும், 'பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு' (அகம். 48) எனவும், 'கலைப்புற அல்குல் கழுகு குடைந்து உண்டு' (மணிமே. 6 : 112) எனவும், 'கள் உண்ணாப் போழ்து' (குறள்-930) எனவும் 'உண்ணாமை வேண்டும் புலாஅல்' (குறள் - 257) எனவும் வருதலின். (45)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**45. 'எண்ணுங் காலை'-**

உண்டல் என்பது பொதுவினையே என்பது பல எடுத்துக்காட்டுக்களான் நிறுவப்பட்டது.

பாடல் அடிகளின் பொருள் :

'குடிக்கும் நீரை விரும்பி வந்தேன் என்று கூறிய தலைவனுக்கு'

'உன் மகள் பாலும் குடிக்காதவளாய் வருத்தத்தைக்கொண்டு'

'ஆடையைப் புறத்தே அணிந்திருந்த அல்குலைத்தோண்டி அதன் புலாலைக் கழுகு உண்டு'

'கள் குடிக்காத நேரத்தில்'

'புலாலை உண்ணாதிருத்தலைக் கடைப்பிடித்தல் வேண்டும்'

## கல்லாடனார் உரை

## இதுவும் அது

## 47. எண்ணும் காலும் அதுஅதன் மரபே.

என்-எனின், இதுவும் அது.

இ-ள் : வேறு வினைப் பொதுச்சொற்களைப் பொதுமையின் பிரித்து எண்ணும் காலத்தும் ஒன்றன் வினையான் கிளவாது பொதுவினையான் கிளத்தல் அதற்கு இலக்கணம் என்றவாறு.

எ-டு : யாழும் குழலும் பறையும் இயம்பினார் - என வரும்.

இதனால் சொல்லியது : அப்பொதுச்சொற்களைப் பிரித்து எண்ணும்வழியும் வினைமுடிபின் மரபு வழுவாமல் சொல்லுக என்பது ஆயிற்று. *(47)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**47. 'எண்ணுங்காலும் -**

அப்பொதுச் சொற்களைப் பிரித்து எண்ணும்வழியும் மரபு வழுவாமல் சொல்லுக என்று மரபு வழாநிலை கூறியது.

## ஒருவர் உரை

### *47. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.*

எ-து : வேறு வினைப் பொதுச்சொற்களைப் பொதுச் சொல்லால் கூறாது, பிரித்து எண்ணும்இடத்தும் ஒரு வினையான் கிளவாது பொதுவினையான் கிளக்க.

எ-டு : சோறும் கறியும் நன்று என்று உண்டார்-யாழும் குழலும் பறையும் இயம்பினார் -என்க. தின்றார், ஊதினார் - என்னற்க.

'ஊன்துவை கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது' (புறநா. 14) என்புழி எல்லாவற்றிற்கும் உண்டு எனப் பொதுவினை வந்தவாறு காண்க. *(47)*

## இளம்பூரணர் உரை

## இதுவும் அது

### *48. இரட்டைக் கிளவி இரட்டுப்பிரிந்து இசையா.*

எ . . . ன், இதுவும் மரபுவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : இரட்டித்துச் சொல்லுஞ் சொற்கள் அவ்விரட்டு தலின் பிரித்துச் சொல்லப்படா என்றவாறு.

உதாரணம் : சுருசுருத்தது, சுறுசுறுத்தது, கறுகறுத்தது என இசையும் குறிப்பும் பண்பும் பற்றி வரும். *(48)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**48. 'இரட்டைக் கிளவி'-**

சுருசுருத்தது -சுரு சுரு என்ற ஓசையை உண்டாக்கிற்று -இசை.
சுறுசுறுத்தது - சுருக் சுருக் என்று வருத்தியது - குறிப்பு.
கறுகறுத்தது - மிகவும் கருநிறம் கொண்டது - பண்பு.

## சேனாவரையர் உரை

### இரட்டைக்கிளவி அமையும் வகை

**48. *இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந்து இசையா.***

*(இ-ள்)* : இரட்டித்து நின்று பொருள் உணர்த்தும் சொற்கள் இரட்டித்து நிற்றலின் பிரிந்து நில்லா என்றவாறு.

*(எ-டு)* : சுருசுருத்தது மொடுமொடுத்தது என இசை பற்றியும், கொறுகொறுத்தார் மொறுமொறுத்தார் என குறிப்புப் பற்றியும், குறுகுறுத்தது கறுகறுத்தது எனப் பண்பு பற்றியும் இரட்டித்து வந்தன பிரிந்துநில்லாமை கண்டு கொள்க. அஃதேல் குறுத்தது, குறுத்தது எனப் பிரிந்தும் வந்தனவால்எனின், அற்றன்று, குறுத்தல் என்பதொரு சொல் குறு என்பதொரு சொல் அடுத்துக் குறுகுறுத்தது என நின்று குறுமை மிகுதி உணர்த்திற்றாயின், குறுத்தது என்பது குறுமை உணர்த்தக் குறு என்பது மிகுதி உணர்த்திற்று ஆதல் வேண்டும்; குறு என்பது மிகுதி உணர்த்தாமையின் குறுகுறுத்தது என்பது ஒரு சொல்லாய் நின்று அப்பொருள் உணர்த்திற்று எனவே படும். அதனான்தான் அக்குறுமை மாத்திரம் உணர்த்தி நிற்பது அதனின் வேறாம் என்பது. கறுகறுத்தது என்பதுக்கும் ஈது ஒக்கும். கறுத்தது கறுத்தது, குறுத்தது குறுத்தது எனச் சொல் முழுவதும் இருமுறை வாராமையின் அடுக்கு அன்மை அறிக.

ஈண்டு இரட்டைக் கிளவி என்றது மக்கள் இரட்டை, விலங்கு இரட்டை போல வேற்றுமை உடையனவற்றை அன்றி, இலை இரட்டையும் பூ இரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையனவற்றை என்று உணர்க.

இரட்டித்து நின்று பொருள் உணர்த்துவனவற்றைப் பிரித்து வழங்கல் மரபு அன்மையின், மரபு வழுக் காத்தவாறு. (48)

**சேனாவரையர் உரைவிளக்கம்**

48. இரட்டை . . . இசையா-

குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்-
உறுத்திக்கொண்டிருக்கும்
காது குறுகுறுக்கிறது - தினவு உறுகிறது.

'இட்டிடை கோறும் நாங்கள் எனக் கொறுகொறுப்ப போலும் இளமுலை' - கோபக் குறிப்பைக் காட்டுதல்.

மொறுமொறுத்தல் - முணுமுணுத்தல்.
சுறுசுறுத்தல் - விரைவுக் குறிப்பைக் காட்டுதல்.
சுருசுருத்தல் - பாம்பு முதலியன சீறும் ஒலியை
எழுப்புதல்.

இலை இரட்டை பூ இரட்டைகளைப் பிரித்தால் இரண்டும் முழு உருவம் சிதைந்துவிடும். அதுபோல இரட்டைக் கிளவியைப் பிரித்தால் உரிய பொருள்தரும் ஆற்றல் சிதைந்துவிடும்.

**நச்சினார்க்கினியர் உரை**

**இரட்டைக்கிளவி**

***48. இரட்டைக் கிளவி இரட்டின்பிரிந்து இசையா.***

இஃது உரிச்சொற்கண் மரபுவழுக் காக்கின்றது.

இ-ள்: இரட்டைக் கிளவி - இரட்டித்து நின்று பொருள் உணர்த்தும் சொற்கள்; இரட்டின்பிரிந்து இசையா - இரட்டித்து நிற்றலின் பிரிந்து நில்லா என்றவாறு.

உதாரணம் : சுருசுருத்தது மொடுமொடுத்தது என இசைபற்றியும், கொறுகொறுத்தார் மொறுமொறுத்தார் எனக் குறிப்புப் பற்றியும், குறுகுறுத்தது கறுகறுத்தது எனப் பண்புபற்றியும் இரட்டித்துப் பிரியாது நின்றன.

இவை குறுத்தது, குறுத்தது என ஒருசொல் முழுதும் இருமுறை வாராமையின் அடுக்கு அல்ல. இவை மக்கள் இரட்டையும் விலங்கு இரட்டையும் போல வேற்றுமை இன்றி, இலை இரட்டையும், பூ இரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாம். குறு என்னும் சொல் அடுத்துக் குறுத்தது என்பது மிகுதி உணர்த்திற்றேல், குறு என்பது யாண்டும் மிகுதி உணர்த்தல் வேண்டும்; அஃது உணர்த்தாமையின், இரண்டும் ஒருசொல்லே ஆயின. *(48)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**48. இரட்டைக் கிளவி -**

சுருசுருத்தது - சுருசுரு என்னும் ஓசையை உண்டாக்கிற்று.

மொடுமொடுத்தது - மொடுமொடு என்னும் ஓசையை உண்டாக்கிற்று.

கொறுகொறுத்தார் - கோபக்குறி தோன்றச் செயற்பட்டார்.

'இனிச்சிறிது எழுந்து வீங்கி இட்டிடைகோறும் நாங்கள்
எனக்கொறு கொறுப்ப போலும் இளமுலை' - சீவக. 2040

குறுகுறுத்தது - தினவு உறுத்தது.

கறுகறுத்தது - மிகவும் கருநிறம் கொண்டது.

குறுகுறுத்தது என்பது மிகவும் தினவு ஏற்பட்டது என்று பொருள்பட்டால், குறுத்தது என்பது தினவு ஏற்பட்டது என்று பொருள்படுமாயின், குறு என்பது மிகுதி என்று பொருள்படவேண்டும்; அவ்வாறு இன்மையின் சொல்லைப் பிரிக்காமல் உள்ளபடியே பொருள்கொள்ள வேண்டும்.

இலைஇரட்டை பூஇரட்டையை வெட்டிப்பிரித்தால், இரண்டும் முழு உருவம் சிதைந்துவிடும். அதுபோல இரட்டைக்கிளவியைப் பிரித்தால் இரு பகுதியும் பொருளற்று வொகிவிடும்.

ஆனால் திருமங்கை மன்னன் 'உள்ளெலாம் உருகிக் குரல் தழுத்து ஒழிந்தேன்' (நாலா. திவ். 952) என இரட்டைக் கிளவியையும் பிரித்துப் பிற்பகுதியை மாத்திரம் பயன் படுத்தியுள்ளார்.

## தெய்வச்சிலையார் உரை

### செப்புவழுக் காத்தல்

*46. இரட்டைக் கிளவி இரட்டுப்பிரிந்து இசையா.*

இது செப்பு வழுக்காத்தலை நுதலிற்று.

இ-ள்: இரட்டித்துச் சொல்லப்படும் சொற்கள் அவ் விரட்டித்தலின் பிரித்து ஒலியா எ-று.

உ-ம் : ஒன்றுஒன்றுஆக வந்தன. இரண்டுஇரண்டுஆக நீக்குக என வரும். இவை ஒன்றுஆக வந்தன, இரண்டுஆக நீக்குக என்றவழிப் பொருண்மைப் படாமையால் பிரிந்து ஒலியா ஆயின. (46)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**46. 'இரட்டைக்கிளவி'-**

எடுத்துக்காட்டில் இவர் 'தம் இயல் கிளப்பின் தம்முன் தாம் வரும் எண்ணின் தொகுதி'யை (எ. 482) எடுத்துக்காட்டி விளக்குகிறார். இரண்டு இரண்டாக நீக்குக- பலவும் தொக்க தொகுதியில் இரண்டு இரண்டாக இணைத்துப் பலவாறு பிரித்திடுக. இரண்டாக நீக்குக - பலவும் தொக்க தொகுதி முழுவதையும் இரண்டே கூறுகளாகப் பகுத்திடுக. இவற்றின் பொருள் வேறுபாடுகளை உணர்க.

## கல்லாடனார் உரை

### இரட்டைக்கிளவி

*48. இரட்டைக் கிளவி இரட்டின் பிரிந்துஇசையா.*

என்-எனின், உரிச்சொற்கண் மரபு வழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : இரட்டித்துச் சொல்லப்படும் சொற்கள் அவ் இரட்டித்துச் சொல்லுதலின் பிரித்துச் சொல்லப்படா என்றவாறு.

அஃது இசை குறிப்பு பண்பு என மூன்று வகைப்படும்.

எ-டு : சுருசுருத்தது, மொடுமொடுத்தது என இவை இசைபற்றி வந்தன. கொறுகொறுத்தன, மொறுமொறுத்தார் என்பன குறிப்புப் பற்றி வந்தன. குறுகுறுத்தார், கறுகறுத்தார் என்பன பண்பு பற்றி வந்தன.

இதனால் சொல்லியது, ஒரு பொருட்கண் இரு சொல்லினை ஒரு பொருள் வேறுபாடு குறியாது கூறின் மரபு அன்று எனினும், அவ்வாறு இரட்டிக் கூறலே அவற்றிற்கு அடிப்பாடு ஆகலின், இனி, அதனை மரபு வழுவற்க என மரபு கூறியவாறு ஆயிற்று. இது மரபு வழுஅமைதி போலும். *(48)*

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**48. 'இரட்டைக்கிளவி . . . இசையா'**

ஒரு பொருட்கண் இருசொல்லினை ஒரு பொருள் வேறுபாடு குறியாது கூறின் அது மரபு அன்று. எனினும் சிலவற்றை இரட்டிக்கூறலே மரபு என்பது வற்புறுத்தப் பட்டது. இது வழுவமைதிபோல இருப்பினும் வழாநிலை என வேறு ஒன்று இன்மையின் இது மரபே என்று கொள்க.

**ஒருவர் உரை**

***48. இரட்டைக் கிளவி இரட்டின்பிரிந்து இசையா.***

இ-ள் : இரட்டித்து நின்று பொருள் உணர்த்தும் சொற்கள் இரட்டித்து நிற்றலின் பிரிந்து நில்லா.

அவை வருங்கால் இசையும், குறிப்பும், பண்பும் பற்றி வரும்.

எ-டு : சுருசுருத்தது, மொடுமொடுத்தது என்பன இசை.

கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார் என்பன குறிப்பு.

குறுகுறுத்தது, கறுகறுத்தது என்பன பண்பு.

இவை குறுத்ததுகுறுத்தது என ஒரு சொல் முழுதும் வாராமையின் அடுக்கு அல்ல. இவை மக்கள் இரட்டையும், விலங்கு இரட்டையும்போல் அன்றிப் பூ இரட்டையும், காய் இரட்டையும், இலை இரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாய் வரும். *(48)*

## ஒருவர் உரைவிளக்கம்

**48. 'இரட்டை . . . இசையா.'-**

இவை மக்கள் இரட்டையும் விலங்கு இரட்டையும் போல அன்றிப் பூ இரட்டையும் காய் இரட்டையும் இலை இரட்டையும்போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாய் வரும் என்பது சேனாவரையர் உரையை உட்கொண்டு காய் இரட்டையைக் கூட்டி வரையப் பட்டதாகும்.

## பாலசுந்தரனார் உரை

**48. 'இரட்டை . . . இசையா.'-**

ஒரு காம்பின்கண் பிளவுபட்டுக் கிளைத்த இலை இரட்டை, பூ இரட்டைகளைப்போலச் சொல்லான் இரட்டை ஆயினும் பொருளான் ஒன்றே என்பது தோன்ற இரட்டைக் கிளவி என்றார்.

இவை பெரும்பான்மையும் இசை, குறிப்பு, பண்பு ஆகிய குறிப்புப் பொருள்பற்றி வருதலின், உரிச்சொல் பற்றிய மரபுவழுக் காத்ததாக நச்சினார்க்கினியர் கூறுவர்.

வரி வரியாக எழுதினான், படிப்படியாக முன்னேறி னான் என்றாற்போல வினையடிகளும் வழங்கப் படுதலின் வரையறுத்தல் ஒவ்வாது என்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

48. இரட்டைக்கிளவி ஆசிரியர் காலத்தில் பெரும் பாலும் இசை, பண்பு, குறிப்பு என்று பகுக்கப்பட்ட உரி அடியாகவே பிறந்தது. ஒன்றொன்றாக வந்தன, இரண்டி ரண்டாக நீங்கின என்று வருவன 'தம்மியல் கிளப்பின் தம்முன் தாம் வரூஉம் எண்ணின் தொகுதி' எ.482 என்பதனான் உணர்த்தப்பட்டன. வரிவரியாக எழுதினான், படிப்படி யாக முன்னேறினான்-என்றாற்போல வினையடியாகவும் இரட்டைக்கிளவி வருதல் பிற்கால வழக்காகும்.

## இளம்பூரணர் உரை

### ஒருபெயர்ப் பொதுச்சொல் மரபு

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொரு ளொழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

எ . . . ன், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச்சொற்களைச் சொல்லுங்கால் ஆண்டுள்ள பொருளெல்லாம் எடுத்துச் சொல்லாது, தெரிபு வேறு கிளந்து தலைமையானும் பன்மையானும் கூறுக, இருதிணைக் கண்ணும் என்றவாறு.

உதாரணம் : சேரி என்பது பலரும் இருப்பதுமன்; ஆயினும், ஆண்டுச் சில பார்ப்பனக் குடி உளவேல் அதனைப் பார்ப்பனச் சேரி என்பது. இஃது உயர்திணைக்கண் தலைமை பற்றி வந்தது.

அத்திணைக்கண் பன்மை பற்றி வருமாறு : எயின நாடு, குற்றிளை நாடு என வரும்.

இனி, அஃறிணைக்கண் தலைமை பற்றி வருமாறு: கமுகந்தோட்டம் என வரும். மற்றைய பொருள் பயின்று கமுகு ஒன்றிரண்டுண்மை நோக்கிச் சொன்னாரேல் தலைமையாம். இனிக் கமுகு ஆண்டு நெருங்கி, மற்றைய சிலவாதல் கண்டு சொன்னாரேல் அதுவே பன்மையான் பெற்ற பெயருமாம்.

ஒடுவங்காடு, காரைக்காடு என்பன பன்மையான் பெற்ற பெயர். *(49)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**49. 'ஒருபெயர்ப் பொதுச்சொல்' -**

| | |
|---|---|
| எயின நாடு - | **எயினர் என்ற இனத்தார் மிகுதியாக வாழும் நிலப்பகுதி.** |
| குற்றிளை நாடு - | **குற்றேவல் செய்து உயிர் வாழும் மக்கள் மிகுதியாக வாழும் நிலப்பகுதி.** |
| பயின்று - | **மிகுதியாகக் காணப்பட்டு** |
| ஒடு, காரை - | **மர விசேடம்.** |

## சேனாவரையர் உரை

## ஒருபெயர்ப் பொதுச்சொல்

***49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.***

*(இ-ள்)* உயர்திணைக்கண்ணும், அஃறிணைக் கண்ணும் ஒரு பெயராய்ப் பல பொருட்குப் பொதுவாகிய சொல்லைப் பிற உள்பொருள் ஒழியத் தெரிந்து கொண்டு பொதுமையின் வேறு ஆகச் சொல்லுக, தலைமையானும் பன்மையானும் என்றவாறு.

தெரிபு என்பதற்குச் செயப்படுபொருள், தலைமையும் பன்மையுமே ஆம்.

பிறரும் வாழுவார் உளரேனும் பார்ப்பனச் சேரி என்றல் உயர்திணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. எயினர் நாடு என்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிற புல்லும் மரனும் உளவேனும் கமுகந் தோட்டம் என்றல் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. ஒடுவங்காடு என்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பார்ப்பனர் பலர் ஆயினும், கமுகு பல ஆயினும் அவைதாமே பன்மை பற்றிய வழக்கமாம். பல பொருள் ஒரு சொல்லின் நீக்குதற்கு 'ஒரு பெயர்' என்றார்.

'ஒன்றென முடித்தல்' என்பதனான், அரசர் பெருந்தெரு, வயிரகடகம், ஆ தீண்டு குற்றி, ஆனதர், எருத்தில் எனப் பொதுச் சொல் இன்றி வருவனவும் கொள்க.

உள்பொருள் எல்லாம் கூறாது, ஒன்றனை எடுத்துக் கூறுதல் மரபு ஆகலின், பொதுச்சொல்மேல் சொல் நிகழுமாறு உணர்த்திய முகத்தான் மரபுவழுக் காத்தவாறு. (49)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**49. ஒருபெயர் . . . மருங்கினும்-**

பொதுச்சொல் என்பது பல பொருளுக்கும் பொது வாகிய சொற்களாகிய சேரி, நாடு, காடு போல்வன.

சேரி - பலதெருக்கள் சேர்ந்த தொகுப்பிடம்
நாடு - பல ஊர்கள் சேர்ந்த பெரும்பரப்பு
காடு - பல மரங்கள் சேர்ந்த பரப்பு

ஒன்றென முடித்தலான் தனிச்சொற்களும் தலைமையும் பன்மையும் பற்றிப் பெயரிடப்படும்.

அரசர் பெருந்தெரு -அரசர் பெருந்தெருவில் ஏனைய மக்களும் சிறுபான்மைகுடியிருக்கலாம்.

ஆதீண்டு குற்றியில் ஏனைய விலங்குகளும் தினவு தீரத் தம் உடலைத் தேய்த்துக் கொள்ளலாம்.

ஆன் அதரில் ஏனைய எருமை முதலியனவும் உலவலாம். எருத்து இல்லில் ஏனைய பசுக்கன்று எருமைக் கன்றுகளும் கட்டப்பட்டிருக்கலாம்.

ஆன் அதர் - பசுமாடு செல்லும் வழி.

எருத்தில் - காளைகள் கட்டப்படும் கொட்டில்.

தெரு - பெரும்பாலும் ஓர் இனத்தவர் இல்லங்களையே தொகுதியாக அமைத்திருக்கும் பரப்பு.

### நச்சினார்க்கினியர் உரை

### ஒருபெயர்ப் பொதுச்சொல் மரபு வழுஅமைதி

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்தல், தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

இஃது ஒருபெயர்ப் பொதுச்சொல்லை மரபுவழுக் காக்கின்றது.

இ-ள்: உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும் - உயர்திணைக் கண்ணும் அஃறிணைக் கண்ணும்; ஒருபெயர்ப் பொதுச்சொல் - ஒரு பெயராய்ப் பல பொருட்குப் பொதுவாகிய சொல்லை; உள்பொரு ளொழியத் தெரிபுவேறு கிளத்தல்-பிற உள்பொருள் ஒழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக; தலைமையும் பன்மையும் - தலைமையானும் பன்மை யானும் என்றவாறு.

உதாரணம் : பிறரும் வாழ்வார் உளரேனும் 'பார்ப்பனச் சேரி' என்றல் உயர்திணைக்கண் தலைமைபற்றிய வழக்கு. எயினர் நாடு என்றல் அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு.

பிற புல்லும் மரமும் உளவேனும் 'கமுகந்தோட்டம்' என்றல் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. பார்ப்பார் பலர் ஆயினும், கமுகு பல ஆயினும் அவைதாமே பன்மை பற்றிய வழக்காம்.

ஒன்றெனமுடித்தலான், அரசர் பெருந்தெரு, ஆதீண்டு குற்றி, வயிர கடகம் என்னும் பொதுச்சொல் அல்லனவும் கொள்க.

பலகுடி சேர்ந்தது சேரி. பல பொருள் (மரம்) தொக்கது தோட்டம். (49)

### நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**49.ஒருபெயர்ப் பொதுச்சொல் -**

அரசர் பெருந்தெருவில் அமைச்சர் போல்வாரும் தங்கியிருக்கலாம்.

பசுக்கள் தினவு தீரத் தேய்த்துக் கொள்ளும் தறியில் பிற விலங்குகளும் உடலைத் தேய்த்துக்கொள்ளலாம்.

வயிரகடகத்தில் வயிரத்தைத் தவிரப் பிற கற்களும் தங்கத்தில் பதிப்பிக்கப் பட்டிருக்கலாம்.

தெரு, குற்றி, கடகம் போல்வன சேரி தோட்டம் போன்ற பொதுச் சொற்கள் அல்ல.

### தெய்வச்சிலையார் உரை

### மரபுவழு அமைதி

**47. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்.**

மரபு வழு அமைத்தலை நுதலிற்று.

இ-ள் : ஒரு பெயர் ஆகிப் பல பொருட்கும் உரித்து ஆகிய பொதுச்சொல்லை வகுத்துக் கூறுதல் தலைமை யானும் பன்மையானும் எ-று.

எனவே, தலைமையும், பன்மையும் இல்வழி, பொதுச்சொல்லான் கிளக்க என்றவாறு ஆம்.

உ-ம்: பார்ப்பார்வேதம் என்பது அரசர்க்கும் வணிகர்க்கும் பொது ஆயினும், பார்ப்பார் வேதம் எனத் தலைமைபற்றி வந்தது. எயினர் நாடு என்பது பிறவும் குடி உள ஆயினும் பன்மைபற்றி வந்தது. ஆமேய்ப்பான் என்பதும் அது. இளமரக்கா என்பது தலைமையும் பன்மையும் இல்வழிப் பொதுவாய் வந்தது. பிறவும் அன்ன. (47)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

### 47. 'ஒரு பெயர்ப் பொதுச்சொல்'-

இந்த நூற்பாவின் மூன்றாம் அடி இவரான் அடுத்த நூற்பாவோடு இணைக்கப்பட்டுள்ளது. பார்ப்பார் வேதம் - வேதம் ஓதுதல் அந்தணர் அரசர் வணிகர் என்ற மூவருக்கும் உரித்து. ஆயினும் ஓதுவித்தல் பார்ப்பார்க்கே உரியதாகும். தலைமைபற்றிப் பார்ப்பார் வேதம் எனப்பட்டது. எயினர் - பாலை நிலத்து மக்களாகிய ஒரு கூட்டத்தார்.

ஆ மேய்ப்பான் - 'பெற்றமும் எருமையும் மரையும் ஆவே' (தொல்-பொ. 615) என்பதனான் பெண் பெற்றத்தையும் பெண் எருமை யையும் இச்சொல் குறிக்குமாயினும், ஆண் பெற்றத்தையும் ஆண் எருமையையும், இவற்றின் கன்றுகளையும் மேய்ப் பவன் மேய்ப்பவை பெரும்பாலும் பசுவும் பெண் எருமையும் ஆதலின் 'ஆ' என்பது பன்மை பற்றி வந்தது. இளமரக்காவில் பலதிற மரங்களும் உள எனினும் ஒன்றற்கும் தலைமையோ பன்மையோ இன்மையின் தனிப்பட்ட ஒரு மரத்தின் பெயரை இட்டு இம்மரக்கா என்றுகூற இயலாததாய் உள்ளது.

## கல்லாடனார் உரை

### ஒருபெயர்ப் பொதுச்சொல்லைக் கூறுமுறைமை

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

என்-எனின், ஒருபெயர்ப் பொதுச்சொற்கண் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச்சொல்லை ஆண்டு உள்ள பொருள் ஒழிய உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் தெரிந்துகொண்டு வேறே கிளத்தற்குக் காரணம், அப்பொருட்கண் தலைமையும் பன்மையும் ஆம் எ-று.

எ-டு : பார்ப்பனச்சேரி என்பது உயர்திணைக்கண் தலைமைபற்றி வந்தது. எயினர் நாடு என்பதும், குற்றிளைஞர் நாடு என்பதும் அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. கமுகந்தோட்டம் என்பது அஃறிணைக்கண் தலைமைபற்றி வந்தது. இது தானே பன்மை உள்வழிப் பன்மைபற்றி வந்ததூஉம் ஆம். ஒடுவங்காடு, காரைக்காடு என்பன பன்மைபற்றி வந்தன. சேரி என்பது பல குடியும் சேர்ந்து இருப்பது. தோட்டம் என்பது பல பொருளும் தொக்கு நின்ற இடம். பிறவும் அன்ன.

இதனான் சொல்லியது : பல பொருளும் உள் வழிப் பிறப்பதொரு பெயர்ச் சொல்லினை அப்பல பொருளினையும் உடன் கூறியன்றே கூறற்பாலது? அவ்வாறு அன்றி, அப்பொருள் தலைமையும் பன்மையும் பற்றிச் சொல் தொகுத்து இறுத்தல் கண்டு அம்மரபு வழு அமைத்தற்குக் காரணம் கூறியவாறு ஆயிற்று. (49)

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**49. 'ஒருபெயர்ப் . . . மருங்கினும்.'-**

*குற்றிளை நாடு - சிறுசிறு பணி செய்யும் தொழிலாளர் நிரம்பிய நாடு.*

*பல பெயர்ப் பொதுச்சொல்லின் பல பொருள்களையும் விடுத்துத் தலைமைப் பொருள் பற்றியோ, பன்மைப் பொருள் பற்றியோ பெயரிடுக எனச் சொல் தொகுத்து இறுக்கும் வழுவமைதி கூறப்பட்டது.*

**ஒருவர் உரை**

***49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அ∴றிணை மருங்கினும்.***

எ-து : ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச்சொற்களைச் சொல்லுங்கால், ஆண்டுள்ள பொருள் எல்லாம் எடுத்துச் சொல்லாது, உயர்திணை இடத்தும், அஃறிணை இடத்தும் தெரிந்து வேறுஆகத் தலைமையானும் பன்மையானும் கூறுக.

ஒரு பெயர்ப் பொதுச்சொல் ஆவது ஒரு பெயருமாய்ப் பொதுச்சொல்லுமாய் வருவது. அது சேரி, நாடு, தோட்டம், காடு என்பன.

சேரி, நாடு - உயர்திணைப் பொதுச்சொல்.

தோட்டம், காடு - அஃறிணைப் பொதுச்சொல்.

சேரி என்பது பலரும் இருப்பது. அதனுள் சில பார்ப்பனக் குடி உளவேல், அதனைப் பார்ப்பனச் சேரி என்பர், பார்ப்பாரது தலைமை பற்றி. இஃது உயர்திணைக்கண் தலைமை பற்றி வந்தது.

எயினர் நாடு, குற்றிளைஞர் நாடு என்பன பிறரும் ஆண்டு உறைவார் உளர் ஆயினும், எயினர், குற்றிளைஞர் பலர் ஆதலால் உயர்திணைக்கண் பன்மை பற்றி வந்தன.

தோட்டம் என்பது பல பொருளும் தொக்கது. அதனுள் பிற புல்லும் மரனும் உளவேனும், கமுகு ஆயினும் தெங்கு ஆயினும் சில உள ஆகலின், கமுகந் தோட்டம், தெங்கந் தோட்டம் என்பன அஃறிணைக்கண் தலைமை பற்றி வந்தன.

ஒடுவங்காடு, காரைக்காடு - என்பன பிற புல்லும் மரனும் உளவேனும், ஒடு காரை பல ஆதலால் அஃறிணைக்கண் பன்மையான் பெயர் பெற்றன என அறிக.

பார்ப்பார் பலர் ஆயினும், கமுகு பல ஆயினும் தலைமையானும், பன்மையானும் பெற்ற பெயர் என்க.

'ஒன்றினம் முடித்த'லான், அரசர் பெருந்தெரு, வயிரக்கடகம், ஆஉரிஞ்சு குற்றி என்பனவும் பொதுச்சொல் எனக்கொள்க. *(49)*

## ஒருவர் உரைவிளக்கம்

**49. 'ஒருபெயர் . . . மருங்கினும்.'-**

ஒடு மரம் ஒடுவைமரம் என்று குறிக்கப்பட்டுள்ளது. காரை என்பது முள் மரங்களுள் ஒன்று.

## பாலசுந்தரனார் உரை

**49. 'ஒருபெயர் . . . மருங்கினும்'-**

பொதுச்சொல்லாவன நாடு, சேரி, தோட்டம், காடு முதலியன.

இனி, ஒன்றென முடித்தல் என்னும் உத்திவகையான் பல பொருள் தொகுதியன்றிப் பல பொருட்கு உரியவாய் வரும் பொதுச்சொற்கும் இம்மரபு கொள்ளப்படும்.

(எ-டு.) அரசர் பெருந்தெரு, புலவோர் அவை, ஆதீண்டு குற்றி, ஆனதர், எருத்தில் முதலியன. யாதானும் ஒரு பொருளான் பெயர்சுட்ட வேண்டுதலின் இது தம்மரபினவாய் வந்த வழாநிலையாம் என்பது.

## இளம்பூரணர் உரை

### பெயரினும் தொழிலினும் பிரிபவை

*50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்*
*மயங்கல் கூடா; வழக்குவழிப் பட்டன.*

எ . . . ன், இதுவும் மரபுவழூக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : மேல்நின்ற அதிகாரத்தான் உயர்திணைக் கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினானும் தொழிலி னானும் பிரிந்து வருபவை எல்லாம் மயங்குதற்குச் செல்லா, வழக்கு வழிப்பட்டன ஆகலான் என்பது.

அவைதாம் பெண்ணொழி மிகு சொல்லும், ஆணொழி மிகு சொல்லும் என இருவகைப்படும்.

உயர்திணைக்கண் பெயரின் பிரிந்த பெண்ணொழிமிகு சொல்வருமாறு: வடுகர் அரசர் ஆயிரவர் மக்களை உடையர் என வரும்.

அத்திணைக்கண் பெயரின் பிரிந்த ஆணொழி மிகு சொல் வருமாறு : பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கண் நால்வர் மக்கள் உளர் என வரும்.

இனி, அத்திணைக்கண் தொழிலின் பிரிந்த பெண் ணொழி மிகுசொல் வருமாறு: அரசர் ஆயிரமக்களொடு தாவடி போயினார் என வரும்.

அத்திணைக்கண் தொழிலின் பிரிந்த ஆணொழி மிகு சொல் வருமாறு : இன்று இவ்வூர் மக்கள் எல்லாம் தைநீர் ஆடுப என வரும்.

இனி, அஃறிணைக்கண் வருமாறு : நம் அரசன் ஆயிரம் யானையுடையன் என வரும். இஃது அத்திணையின் பெயரின் பிரிந்த பெண்ணொழி மிகுசொல்.

நம்பி நூறு எருமையை உடையன் என வரும். இஃது அத்திணையின் பெயரின் பிரிந்த ஆணொழி மிகுசொல்.

இனி, அத்திணைக்கண் தொழிலின் பிரிந்து வருமாறு : இன்று இவ்வூர்ப் பெற்றம்எல்லாம் உழவுஒழிந்தன என வரும். இஃது அத்திணைக்கண் தொழிலின் பிரிந்த பெண்ணொழி மிகுசொல்.

இன்று இவ்வூர்ப் பெற்றம்எல்லாம் அறம் கறக்கும் என வரும். இஃது அத்திணைக்கண் தொழிலின் பிரிந்த ஆணொழி மிகுசொல்.

இனி 'எல்லாம்' என்றதனான், ஆணொழி மிகு சொல்லும் பெண்ணொழி மிகுசொல்லும் அன்றிச் சிறப்புப் பற்றி நிற்பனவும், பொதுவாய் நிற்பனவும், மிகுதி வகையான் நிற்பனவும் கொள்க. அவை வருமாறு : அரசர் பெருந்நெரு என்பது சிறப்புப் பற்றி வந்தது. ஆதீண்டு குற்றி, ஆன் அதர் என்பன பொதுவாய் நிற்பன.

இனி மிகுதி வகையான் சொல்லுவன வருமாறு: இவர் பெரிதும் கால் கொண்டு ஓடுப, இவர் பெரிதும் சோறு உண்ப என வரும் உயர்திணைக்கண்.

இனி, அஃறிணைக்கண் இவ்வெருது பெரிதும் புல் தின்னும் என வரும். இவையெல்லாம் மிகுதி வகையான் விளக்கினவாறு. ('இப்பெற்றம்' என்று கொள்க.) (50)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**50. 'பெயரினும் தொழிலினும்' -**

அதிகாரம் - ஒரு நூற்பாவில் உள்ள சொல்லோ சொற்றொடரோ பிறிது ஒரு நூற்பாவிலும் சென்று இணைந்து பொருள் தருவது.

ஆயிரவர் மக்கள் - ஆண்டு ஆண்மக்கள்.

நால்வர் மக்கள் - ஆண்டுப் பெண்மக்கள்.

தாவடி போயினார் - படையெடுத்தார்.

தைந்நீர் ஆடுதல் கன்னிப்பெண்களின் தொழில் (கலி. 59).

நம்பி நூறு எருமை உடையான் - பால் தரும் எருமைப் பெடையை உடையன்.

பெற்றம் அறம் கறக்கும் - தமக்கு உண்ணத் தீனி வழங்காதவருக்கும் தமக்கு இயல்பாக உள்ள கொடைப் பண்பாகிய அறத்தை மேற் கொண்டு பால் வழங்கும்.

ஆ தீண்டு குற்றி - பசுக்கள் தம் உடலில் தினவு ஏற்படும் போது உடலைத்தேய்த்துத் தினவைப் போக்கிக் கொள்ள நடப்பட்ட தறி. இதன்கண் மற்ற விலங்குகளும் தம் உடலைத் தேய்த்துக்கொள்ளலாம்.

ஆன் அதர் - பசு மாடுகள் செல்லும் வழி. இவ்வழியே பிற விலங்குகளும் செல்லலாம்.

பெரிதும் கால்கொண்டு ஆடுப - நாட்டியத்திலேயே நெடுநேரம் போக்குவர்.

பெரிதும் சோறு உண்ப - மற்ற தின்பண்டங்களை விடுத்துச் சோற்றையே மிகவும் உண்பர். (ஆடவர்)

பெரிதும் புல் தின்னும் - வைக்கோல் முதலியவற்றை விடுத்து மிகுதியாகப் புல்லையே தின்னும். (பசு)

## சேனாவரையர் உரை

### ஒன்றொழி பொதுச்சொல்

**50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம் மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.**

*(இ-ள்)* : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும், பெயரினானும் வினையினானும், பொதுமையிற் பிரிந்து ஆண்மைக்கும் பெண்மைக்கும் உரியவாய் வருவன எல்லாம் வழு ஆகா, வழக்கு வழிப்பட்டன ஆகலான் என்றவாறு.

உயர்திணைக்கண்ணும், அஃறிணைக்கண்ணும் என்பது அதிகாரத்தான் வந்தது.

'தொடியோர் கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்' என்பது உயர்திணைக்கண் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல். வடுக அரசர் ஆயிரவர் மக்களை உடையர் என்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். இவர் வாழ்க்கைப் பட்டார் என்பது தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகுசொல். இவர் கட்டில் ஏறினார் என்பது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். நம்பி நூறு எருமை உடையன் என்பது அஃறிணைக்கண் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல். நம் அரசன் ஆயிரம் யானை உடையன் என்பது பெயரிற்பிரிந்த பெண்ணொழி மிகுசொல். தொடி செறித்தலும், மக்கள் தன்மையும், இல்வாழ்க்கைப்படுதலும், கட்டில் ஏறுதலும், எருமைத் தன்மையும், யானைத் தன்மையும் ஒழிக்கப்படும் பொருட்கும் உண்மையான் பொதுவாய் நிற்கற்பாலன ஒருபாற்கு உரியவாய் வருதலின், மரபுவழு அமைத்தவாறு.

பிற சொல்லாற் பிரிவன 'வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்' (சொல்-53) எனவும், 'தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்' (சொல்-171) எனவும், 'நினையுங்காலைத் தத்தம் மரபின் வினையோடு அல்லது பால் தெரிபிலவே' (சொல்-172) எனவும் முன் ஓதப்படுதலானும், ஆண்டு வழு இன்மையானும், ஈண்டுத் தாமே பிரிவனவே கொள்க.

தம்மால் தாம் பிரியும் என்பர், 'பெயரினும் தொழிலினும்' என்றார். பெயர்க்கண்ணும், வினைக்கண்ணும் தாமே பிரிவன எனினும் அமையும்.

அஃறிணைக்கண் தொழிலிற் பிரிந்தன உளவேல் கண்டுகொள்க. இன்று இவ்வூர்ப் பெற்றமெல்லாம் அறங் கறக்கும், உழவு ஒழிந்தன என உரையாசிரியர் காட்டினாராலோ எனின் :- பெற்றம் என்னும் பொதுப்பெயர் கறத்தலும், உழுதலும் ஆகிய சிறப்பு வினையான் பொதுமை நீங்குதல் வழு அன்மையான் ஈண்டைக்கு எய்தாமையின், அவர்க்கு அது கருத்து அன்று என்று. (50)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**50. பெயரினும் . . . பட்டன-**

'***தொடியோர்***' - வளையலை அணிந்த மகளிர் தம் ஆடைக்காகவும், மாலைக்காகவும் பறித்த தளிர்கள் மீண்டும் தோன்றிய அழிவற்ற இளைய ஞாழல் மரம்.

பெற்றம் - காளை மாட்டையும் பசுமாட்டையும் குறிக்கும் பொதுச்சொல்.

பெற்றம் கறக்கும் - கறத்தல் என்ற வினையான் பசுவைக் குறிக்கும்.

பெற்றம் உழவு ஒழிந்தன - உழவு என்ற வினையான் காளை மாட்டைக் குறிக்கும்

யானை ஓடிற்று என்பது ஆண் யானையைக் குறித்தது; யானை நடந்தது என்பது பெண் யானையைக் குறித்தது என்பர் நச்சினார்க்கினியர்.

## நச்சினார்க்கினியர் உரை

### இருதிணை இருபால் பொதுப்பெயர் மரபு

*50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா; வழக்குவழிப் பட்டன.*

இஃது இருதிணை இருபாற்கும் பொதுவாகிய பெயர்க்கண் மரபுவழுக் காக்கின்றது.

இ-ள் : பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம் - உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினாலும், தொழிலினாலும் பொதுமையின் பிரிந்த ஆண்பாற்கும் பெண்பாற்கும் உரியவாய் வருவன எல்லாம்; மயங்கல் கூடா- வழு ஆகா; வழக்குவழிப் பட்டன - வழக்கின் கண் அடிப்பட்டன ஆதலான்.

உதாரணம் :

பெருந்தேவி பொறைஉயிர்த்த கட்டில்கீழ் நால்வர் மக்கள் உளர் - இது பெயரின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

வடுகர்அரசர் ஆயிரவர் மக்களை உடையவர் - இது பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

இவர் வாழ்க்கைப்பட்டார் - இது தொழிலின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

இவர் கட்டில் ஏறினார் - இது தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

இவை உயர்திணைக்கண் பெயரானும் தொழிலானும் பிரிந்தன.

நம்பி நூறு எருமை உடையன் - இது பெயரின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

நம் அரசன் ஆயிரம் யானை உடையன் - இது பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

யானை ஓடிற்று - இது தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

யானை நடந்தது - இது தொழிலின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

இவை அஃறிணைக்கண் பெயரானும் தொழிலானும் பிரிந்தன. இவை இருபாற்கும் பொது ஆயினும், ஒருபாற்கண் தாமே பிரிந்தன.

இவர் பெரிதும் சொல்லுமாறு வல்லர்; இவர் பெரிதும் கால்கொண்டு ஓடுவர் - எனத் தொழிலின் மிகுதி விளக்கி வருவனவும் கொள்க. *(50)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**50. பெயரினும் தொழிலினும் -**

உதாரணங்களில்

| | |
|---|---|
| நால்வர் மக்கள் - | மகளிர் நால்வர் |
| ஆயிரவர் மக்கள் - | வீரர்களாகிய ஆடவர் ஆயிரவர் |
| வாழ்க்கைப்படுதல் - | சிறப்பாகப் பெண்களுக்கு அமைந்த தொழில் |
| கட்டில் ஏறுதல் - | சிறப்பாக ஆண்களுக்கு அமைந்த தொழில் |
| நூறு எருமை - | சிறப்பாகப் பால் கறக்கும் பெண் எருமை |
| ஆயிரம் யானை - | மதத்தான் கதம் சிறந்து போரிடும் ஆண் யானை |
| யானை ஓடிற்று - | ஓடுதல் தொழிலில் சிறந்த ஆண்யானை |
| யானை நடந்தது - | ஓடினால் காலவேகம் என்ற நோய்க்கு இலக்காகுமாதலின், நடந்தே செல்லும் பெண்யானை. |

பெரிதும் சொல்லுமாறு வல்லர் -நாவன்மை படைத்தவர்

பெரிதும் கால்கொண்டு ஓடுவர் -ஓட்டப்பந்தயத்தில்வெற்றி பெறத் தக்கவர்.

## தெய்வச்சிலையார் உரை

### எண்ணின்கண் கிடந்தது ஒருமரபு

48 *உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்*
*பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்*
*மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.*

எண்ணின்கண் கிடந்தது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று. வழுக் காத்ததும் ஆம்.

இ-ள் : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரானும் தொழிலானும் பொதுமையின் பிரியும் பொருள் எல்லாம், எண்ணுங்கால், தம்முள் மயங்குதல் கூடாத வழக்குவழிப் பட்டன எ-று.

மரபு அல என்றவாறு. எனவே, இனம்சேர எண்ணல் வேண்டும் என்றவாறு ஆயிற்று. 'எண்ணுங்கால்' என்பது 'தந்து கொணர்ந்து உரைத்தல்' என்னும் தந்திர உத்தியால், வருகின்ற சூத்திரத்தின்நின்றும் கொணர்ந்து உரைக்கப் பட்டது.

உ-ம் : முனிவரும் அந்தணரும் சான்றோரும் எனவும், பாணரும் கூத்தரும் விறலியரும் எனவும், முத்தும் மணியும் பவளமும் பொன்னும் எனவும், மாவும் மருதும் புன்னையும் ஞாழலும் எனவும் எண்ணுக. இவை பெயர். எறிவாரும் எய்வாரும் வெட்டுவாரும் குத்துவாரும் எனவும், ஆடுவாரும் பாடுவாரும் நகுவாரும் எனவும், உண்பனவும் தின்பனவும் பருகுவனவும் நக்குவனவும் எனவும் எண்ணுக. இவை வினை. அஃதேல்,

'ஆவும் ஆன்இயல் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வற் பெறாஅ தீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்' (புறநா.9)

எனக்காட்டி இதனுள் அடங்காதால் எனின், அவையும் உய்யத்தகுவார் இவர் என்னும் இனம்குறித்து நின்றன என்று கொள்க. பிறவும் அன்ன. (48)

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**48. 'உயர்திணை மருங்கினும்'-**

***தந்து கொணர்ந்து உரைத்தல்*** - பின்னர் வரும் நூற்பாவில் உள்ள தொடரை முன்னர் உள்ள நூற்பாவிலும் இணைத்துப் பொருள் செய்தல்.

***ஆவும்*** - "பசுக்களும், பசுக்களின் இயல்பு உடையவராய்ப் பிறர் வாழ்விற்கே உதவும் பார்ப்பனரும், பெண்களும், நோயான்வருந்துபவரும், பிதிரர்களுக்கு நீர்க்கடன் செலுத்தும் பொன்னைப் போன்று அருமையான ஆண் மக்களைப் பெறாதவரும் ஆகிய நீர் நுமக்குப் பாதுகாவலான இடங்களை அடைந்து உயிர் பிழைத்துப் போகுங்கள்'' என்ற அடிகளில், உயிர் பிழைத்துப் போகவேண்டியவர்கள் யாவரும் இணைத்துக் கூறப்பட்டுள்ளனர்.

**கல்லாடனார் உரை**

**ஒன்றொழி பொதுச்சொல்**

***50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.***

என்-எனின், ஆண் பெண் என்னும் இருபாற்கும் பொது ஆகிய பெயர்க்கண் வரும் மரபுவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : பெயரினும் தொழிலினும் ஆண் பெண் என்னும் இருபாற்கும் உரிய பொதுமையில் பிரிந்து, ஒரு பாற்கண்ணே நடப்பன எல்லாம் இலக்கண முறைமையான் மயங்கின என்று மாற்றல் கூடா. யாதோ காரணம் எனின் அம்மயக்கம் வழக்கின் அடிப்பட்ட அதனான் எ-று.

அப்பொதுப்பெயர் உயர்திணை, அஃறிணை, ஆண் பால், பெண்பால் எனவும் பெயர் வினையொடு வைத்து உறழ எண்வகைப்படும். அவையாவன: உயர்திணைக்கண் பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும், ஆண்ஒழி மிகு சொல்லும், தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும், ஆண்ஒழி மிகுசொல்லும், அஃறிணைக்கண் பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும், ஆண்ஒழி மிகுசொல்லும், தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும் ஆண்ஒழி மிகுசொல்லும் என இவை.

எ-டு : வடுக அரசர் ஆயிரவர் மக்களை உடையர், பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டில்கீழ் நால்வர் மக்கள் உளர் எனவும்-அரசனோடு ஆயிரவர் மக்கள் தாவடி போயினார், இன்று இவ்ஊரார் எல்லாம் தைந்நீர் ஆடுப எனவும்-இவை உயர்திணைக்கண் பெயரினும் தொழிலினும் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும் ஆண்ஒழி மிகுசொல்லும்; நம் அரசன் ஆயிரம் யானை உடையன், நம்பி நூறு எருமை உடையன் எனவும்-இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் உழவு ஒழிந்தன, இன்று இவ்ஊர்ப் பெற்றம் எல்லாம் அறத்திற்குக் கறக்கும் எனவும்-இவை அஃறிணைக்கண் பெயரினும் தொழிலினும் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்லும் ஆண்ஒழி மிகுசொல்லும் ஆம்.

'எல்லாம்' என்றதனான், மேல் சூத்திரத்து ஒரு பெயர்ப் பொதுச்சொல் அன்றித் தலைமை பற்றி வருவனவும் சிறுபான்மை பற்றி வருவனவும் கொள்க.

எ-டு : ஆதீண்டு குற்றி, வயிரக் கடகம் என்னும் தொடக்கத்தன.

இன்னும் அதனானே, இனம் செப்பாது ஒரு தொழிற்கண் மிகை விளக்குதல் பொருட்டாக வருவனவும் அமைத்துக்கொள்க.

எ-டு : இவர் பெரிதும் சொல்லுமாறு வல்லர், இவர் பெரிதும் கால் கொண்டு ஓடுவர், இவ் எருது பெரிதும் புல் தின்னும் என வரும். ('இப்பெற்றம்' எனக்கொள்க)

இதனால் சொல்லியது : இருதிணை இடத்தும் ஆண் பாற்கும் பெண்பாற்கும் சொல்லுதற்கண்ணே உரிய பெயர்கள், அப்பொதுமை ஒழிய ஒருபாற்கண்ணே ஓடுதல் மரபு அன்று; மரபு அன்று ஆயினும் அமையும் என்று மரபுவழு அமைத்தவாறு. இலேசினான் கொண்டனவும் மரபுவழுஅமைதி என உணர்க. *(50)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**50. 'பெயரினும் . . . வழிப்பட்டன.'-**

பொதுச்சொல்லின் எண்வகையும் எடுத்துக்காட்டுக் களுடன் விளக்கப்பட்டன.

'எல்லாம்' என்ற மிகையான், தலைமைபற்றிச் சிறுபான்மை வருவனவும் கொள்ளப்பட்டன.

ஆதீண்டு குற்றி - நடப்பட்ட கட்டையில் எல்லா விலங்குகளும் தினவுதீரத் தம் உடலை உராய்ந்து கொள்ளுதல் கூடும் எனினும், சிறப்பாகப் பசுக்கள் நலம் கருதியே அக்கட்டைகள் நடப்பட்டமையின், தலைமை பற்றி ஆதீண்டு குற்றி எனப்பட்டது.

வயிரகடகம் - கடகம் என்ற கைக்கு இடும் அணியில் பொன்னும் பிற மணிகளும் இடம்பெறல் கூடும் எனினும் தலைமைபற்றி வயிரகடகம் எனப்பட்டது.

இவர் பெரிதும் சொல்லுமாறு வல்லர் - இவரிடம் பல ஆற்றல்கள் இருப்பினும் சொல்லாற்றல் சிறந்தது என்பது. (ஆடவர்)

இவர் பெரிதும் கால்கொண்டு ஓடுவர் - இவர் விளையாட்டுக்கள் பலவற்றை அறிந்தவர் எனினும் ஓட்டப் பந்தயத்தில் சிறந்தவர் என்பது. (ஆடவர்)

இப்பெற்றம் பெரிதும் புல் தின்னும்-இப்பெற்றம் வைக்கோல் முதலிய பலவும் உண்ணும் எனினும் புல்லையே சுவைத்து உண்ணும் என்பது. (பசு)

இந்நூற்பாவில் மரபு வழுவமைதிகள் விளக்கப் பட்டன.

**ஒருவர் உரை**

**50. *பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்***
***மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.***

எ-து : உயர்திணைக்கண்ணும், அஃறிணைக் கண்ணும் பெயரினானும் தொழிலினானும் பிரிந்துவரும் அவை எல்லாம் வழூஆகா, வழக்கு வழிப்பட்டன ஆகலான்.

உயர்திணை, அஃறிணை என்பன மேல்நின்ற அதிகாரத்தான் கொள்க.

அவை மயங்காது வழங்கும் இடத்துப் பெண்ஒழி மிகுசொல்லும், ஆண்ஒழி மிகுசொல்லும் என்று இரண்டு வகைப்படும்.

எ-டு : வடுகர் ஐயாயிரவர் மக்களை உடையர் என்றக்கால், மக்கள் என்பது பொது ஆயினும், இது பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

பெருந்தேவி கரு உயிர்த்த கட்டில்கீழ் நால்வர் மக்கள் உளர் என்றால், இது பெயரின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

அரசர் ஆயிரவர் மக்களொடு தாவடி போயினார், இன்று இச்சேரியாரும் அச்சேரியாரும் பொருப-இவை தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

இன்று இவ்வூரார் எல்லாம் தைந்நீர் ஆடுப, குறுங்கானம் போப-இவை தொழிலின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல்.

உயர்திணைக்கண் பெயரானும், தொழிலானும் ஆண் பெண் பிரிந்தவாறு காண்க.

நம் அரசன் ஆயிரம் யானையை உடையன் - என இது பெயரின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல். யானை - பொது.

நம்பி நூறு எருமை உடையன் என்றக்கால், இது பெயரின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல். எருமை - பொது.

இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் உழவு ஒழிந்தன - என இது தொழிலின் பிரிந்த பெண்ஒழி மிகுசொல்.

இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் அறத்திற்குக் கறக்கும் எனல், தொழிலின் பிரிந்த ஆண்ஒழி மிகுசொல். பெற்றம் - பொது.

அஃறிணைக்கண் பெயரானும் தொழிலானும் ஆண்பெண் பிரிந்தவாறு காண்க.

இனி, எல்லாம் என்றதனால், இவர் பெரிதும் சொல்லுமாறு வல்லர், இவர்பெரிதும் கால் கொண்டு ஓடுவர், இவர் மிகவும் சோறு உண்பர் - எனத் தொழில் மிகுதி உணர்த்துவனவும் கொள்க.

மற்றையார் சொல்லுமாறு அறியார், கைகொண்டு ஓடுவர், புல் தின்பர் என்பது சொல்லியது அன்று; மிகுதி உரைத்தவாறு காண்க. (50)

## ஒருவர் உரைவிளக்கம்

**50. 'பெயரினும் . . . பட்டன.'-**

குறுங்கானம் போப-மகளிர் பொழிலுக்குப் பூப் பறிக்கவும் விளையாடவும் செல்வர் என்பது. இவர் சொல்லுமாறு வல்லர், கால்கொண்டு ஓடுப, சோறுண்பர் என்ற தொடர்கள் நகைத்திறம் தோன்ற விளக்கப்பட்டுள்ளன.

## சாத்திரியார் உரை

**50. 'பெயரினும் . . . பட்டன.'-**

தெய்வச்சிலையார், உயர்திணைக்கண்ணும் அஃறிணைக் கண்ணும் பெயரானும் தொழிலானும் பொதுமையில் பிரியும் பொருள் எல்லாம் எண்ணுங்கால் தம்முள் மயங்குதல் கூடாது வழக்கு வழிப்பட்டன என்று இச்சூத்திரத்துக்குப் பொருள்கூறி, 'முனிவரும் அந்தணரும் சான்றோரும்' 'பாணரும் கூத்தரும் விறலியரும்' என்று கூறும் உதாரணங்களால் இச்சூத்திரம் 'பலவயினானும்' (சொ. 51) என்ற மேல் சூத்திரத்துக்குமுன் ஏன் வைக்கப்பட்டது என்பது நன்கு புலப்படும் ஆதலின் அவர் உரையே சிறந்தது.

## பாலசுந்தரனார் உரை

**50. 'பெயரினும் . . . பட்டன.'-**

பால் அறிவிக்கும் ஈற்று இடைச்சொல் பெறாமல் இவை ஆடூஉவிற்கு உரியன, இவை மகடூஉவிற்கு உரியன என வழக்குப்பற்றி வரும் சொற்கள் தொடர்மொழி ஆக்கத்தின்கண் மயங்கல்கூடா என்றவாறாம்.

அணி என்பது இருபாற்கும் பொது ஆயினும் தொடி, மேகலை, சிலம்பு முதலியவை மகளிர்க்கே உரியவாயும்; கழல், முடி, தோள்வளை முதலியன ஆடவர்க்கே உரியவாயும் வருதல் வழக்கு வழிப்பட்டதாம்.

அங்ஙனமே வரைதல் ஆடவர்க்கு உரிய செயலாகவும், வாழ்க்கைப் படுதல் மகளிர்க்கு உரிய செயலாகவும் கூறுதல் வழக்கு வழிப்பட்டதாம்.

இந்நூற்பாவிற்கு உரையாசிரியன்மார் கூறிய பெயரும் தொழிலுமாகிய சொற்கள் தாமே பிரிந்து நிற்றற்கு ஏற்பன ஆதலை அறிக. அவை 'வேறுபடு வினையினும், இனத்தினும், சார்பினும்'(சொல்.53) 'தெரிபு வேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்' (சொ.158) என்பனவற்றான் பெறப்படுவனவாம். தொடி, குரவை, கழல், துணங்கை, சமைத்தல், உடலுதல் என்னும் சொற்களே மரபு வகையான் ஒருபாலை ஒழித்து நிற்கும்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

50. இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் கூறும் உரையையும், ச. பா. அவர்கள், அணி இருபாற்கும் பொதுவாயினும் தொடி சிலம்பு மேகலை முதலாயின மகளிர்க்கே உரியவாகவும், கழல் தோள்வளை முதலியன ஆடவர்க்கே உரியவாகவும் வருதல் வழக்குப்பட்ட செய்தி என்றுகூறி அவர் பழைய உரையாளர்களை மறுக்கும் செய்தியில் பொருத்தம் உடையனவற்றையும் ஏற்றுக் கொள்க.

## இளம்பூரணர் உரை

### திணை வழுவமைதி

**51. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்**
**அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.**

எ...ன், இது திணைவழு அமையுமாறு கூறுதல் நுதலிற்று.

இ-ள்: பலவிடத்தினானும் உயர்திணையும் அஃறிணையும் விரவி எண்ணப்படும் பொருள் அஃறிணை முடிபினவாம் செய்யுளகத்து என்றவாறு.

உதாரணம் : *'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்*
*சுடுகாடு பேய்எருமை என்றிவை ஆறும்*
*குறுகார் அறிவுடை யார்.'*

இனிப் 'பலவயி னானும் அஃறிணை முடிபின செய்யுளுள்' எனவே, சிலவயினான் அஃறிணை விரவாது உயர்திணையாய் எண்ணி, அஃறிணை முடிபிற்று ஆகலும் உண்டு செய்யுளகத்து என்றவாறாம். அது வருமாறு :

'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று
அந்நான்கு அல்லது குடியும் இல்லை' (புறநா. 335)

என வரும். (51)

### இளம்பூரணர் உரைவிளக்கம்

**51. 'பலவயி னானும்'-**

எண்ணுத்திணை விரவுப்பெயர் - வினைத்தொகை செய்யுள் விகாரத்தான் வலி மிக்கது. உயர்திணையும் பொருள் என்னும் பொதுமையான் அஃறிணைக்கண் அடங்குதலானும், உயர்திணைக்கண் அஃறிணை அவ்வாறு அடங்காமையானும் ஆசிரியர் 'அஃறிணை முடிபின' என்றார் என்பர் நச்சினார்க்கினியர்.

***வடுகர் அருவாளர்*** : வடுக நாட்டைச் சேர்ந்தவர், அருவா நாட்டைச் சேர்ந்தவர், கருநாடக நாட்டைச் சேர்ந்தவர் என்பவர்களும், சுடுகாடு, பேய், எருமை என்ற இவைகளும் ஆக ஆறு பொருள்களையும் நல்லறிவாளர்கள் நணுக மாட்டார்கள்.

### சேனாவரையர் உரை

**திணை விரவு பெயர் எண்ணுவழி முடிபு**

*51. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்*
*அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.*

(இ-ள்) : திணைவிராய் எண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொல் கொண்டு முடியும் என்றவாறு.

எ-டு : 'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேய்எருமை என்றுஇவை ஆறும்
குறுகார் அறிவுடை யார் '

எனவும்,

' கடுஞ்சினத்த கொல்களிறும்
கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும்
நெஞ்சுடைய புகன்மறவரும் என
நான்குடன் மாண்ட தாயினும் ' (புறம்-55)

எனவும் வரும்.

எண்ணுத் திணை விரவுப் பெயர் பெரும்பான்மையும் அஃறிணைச் சொல் கொண்டு முடியும் எனவே, சிறுபான்மை உயர்திணைச் சொல் கொண்டு முடியவும் பெறும் என்பதாம்.

எ-டு : 'பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி என்னும் இவரைக் கைவிட்டு'
(சிலம்புவஞ்சினமாலை)

எனவும்,

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட் (கு)
ஆற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்'. (ஆசாரக்கோவை - 65)

எனவும் வரும்.

இருதிணைப் பெயரும் விராய் வந்து ஒரு திணைச்சொல்லான் முடிதல் வழு ஆயினும், செய்யுள் அகத்து அமைக எனத் திணை வழு அமைத்தவாறு.

எ-டு : 'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை' (புறம் - 335)

என இருதிணைப் பெயரும் விரவி வாராது உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணை முடிபு கொண்டன என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் :- பாணன் முதலாயினாரைக் குடி என்று சுட்டியவழிக் குடிக்கு ஏற்ற தொகை கொடுத்தல் வழு அன்மையான், அவ்வுரை போலி உரை என்க. குடி என்று சுட்டாதவழிப் 'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று இந்நால்வரும் அல்லது குடியில்லை' என்றே ஆம்.

'தம்முடைய தண்ணளியும் தாமும்தம் மான்தேரும்
எம்மை நினையாது விட்டனரேல் விட்டகல்க'
(சிலப். கானல்வரி)

எனவும்,

'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்துஎன் நலன்உண்டான்;
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரிஅன்றே'

எனவும் இவை எவ்வாறு வந்தனவோ எனின், அவை தலைமைப் பொருளையும், தலைமை இல் பொருளையும் விராய் எண்ணித் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமை இல் பொருளும் முடிந்தன ஆவதோர் முறைமை பற்றி வந்தன, ஈண்டைக்கு எய்தாது என்பது. தானும் தன் புரவியும் தோன்றினான் என்பதும் அது. (51)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**51. பலவயி . . . உள்ளே-**

***வடுகர்*** - தெலுங்கர், அருவா நாட்டார், கன்னட நாட்டினர், சுடுகாடு, பேய், எருமை என்ற ஆறனையும் அறிவுடைய மக்கள் அணுகமாட்டார்கள்.

**கடுஞ்சினத்த** - மிக்க கோபத்தை உடைய கொல்லும் ஆண்யானையும், விரைந்த செலவினை உடைய செருக்கிய குதிரையும், நீண்ட கொடியை உடைய பெருமிதமுடைய தோற்றத்ததாகிய தேரும், போரை விரும்பும் நெஞ்சு வலிமை உடைய வீரரும் என நான்கு படையுடன்கூட மாட்சிமைப் பட்டதாயினும்.

**பார்ப்பார்** - பார்ப்பனர், அறவழியில் செல்லும் நன்மக்கள், பசு, கற்புடைய மகளிர், மிகவும் ஆண்டு மூத்தவர்கள், குழந்தைகள் என்னும் இவரை நீக்கிவிட்டு.

**பார்ப்பார் தவரே** - பார்ப்பனர், தவம் செய்பவர், சுமையைத் தாங்கிச் செல்பவர், நோய்வாய்ப்பட்டவர்கள், ஆண்டில் மிக மூத்தவர், ஆண்டில் இளைய சிறுவர், பசுக்கள், பெண்கள் இவர்களுக்கு நடைபாதையில் நேராகச் செல்வதற்கு வழிவிட்டு விலகிச்செல்பவரேதம் வாழ்நாளில் பிறரால் போற்றப்படத் தக்கவராவர்.

**பாணன்** - பாணன், பறையன், துடியன், கடம்பன் என்ற இந்நான்கனைத் தவிர வேறு குடிமக்கள் அம்முல்லைநிலச் சிற்றூரில் இல்லை.

**தம்முடைய** - தம்முடை இரக்கப்பண்பும் தாமும் தம் குதிரை பூட்டிய தேருமாக, எம்மைப் பிரிதல் கூடாது என்று நினையாமல், தனித்திருக்க விடுத்துச் சென்றவர் எம்மை மறந்து செல்க.

**யானும்** - யானும், என் தோழியும் என் தோழியர் குழாமும் விளையாடும் நீர்த்துறையை அடுத்த பகுதியை அணுகித் தானும் தன்னுடைய தேரும் அத்தேர்ப்பாகனுமாக வந்து என் அழகினைச் சுவைத்தான் என்தலைவன்.

தலைமை இல்பொருள் - தலைமைச் சிறப்பு இல்லாத பொருள்.

பலவயினானும் - ‘இணைத்து எண்ணுதற்கு உரிய பலவழிகளையும் பின்பற்றி’ என்பது பொருள்.

எண்ணுத்திணை விரவுப்பெயர் - வினைத்தொகை செய்யுள் இன்பம் நோக்கி வல்லொற்று மிக்கது.

## நச்சினார்க்கினியர் உரை

## திணை வழுவமைதி

51. *பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்*
*அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.*

இது திணைவழு அமையுமாறு கூறுகின்றது.

இ-ள் : பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப் பெயர் - பல இடத்தும் திணைவிராய் எண்ணப்பட்ட பெயர்; செய்யுள்உள்ளே அஃறிணை முடிபின - செய்யுள் அகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொல் கொண்டு முடியும் என்றவாறு.

உதாரணம் :

'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேய்எருமை என்று இவை ஆறும்
குறுகார் அறிவுஉடை யார்'

'கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுஉடைய
புகல் மறவரும் என, நான்குடன் மாண்ட தாயினும்'
(புறநா.55)

எனவரும்.

'பலவயினானும்' என்றமையான், சிலவயினான் திணை விரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவனவும், திணை விராய் எண்ணி உயர்திணையான் முடிவனவும் கொள்க.

'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை' (புறநா. 335)

என்றது, பாண்குடி பறைக்குடி எனக் குடியைச் சுட்டி நில்லாது, பாணன் பறையன் எனப் பால்காட்டி நிற்றலான், உயர்திணைப் பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்.

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்று இவர்கட்கு
ஆற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்.' *(ஆசார. 64)*

'பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தார் குழவி எனும்இவரைக் கைவிட்டு' *(சிலப். 21:53, 54)*

இவை, திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிந்தன.

உயர்திணையும் 'பொருள்' என்னும் பொதுமையான் அஃறிணைக்கண் அடங்குதலானும், உயர்திணைக்கண் அஃறிணை அவ்வாறு அடங்காமையானும் ஆசிரியர் 'அஃறிணை முடிபின' என்றார்.

திணைவிராய் எண்ணி, அஃறிணையானும் உயர் திணையானும் முடிந்தது, தலைமைபற்றியும் பன்மை பற்றியும் இழிவுபற்றியும் என உணர்க.

'தானும் தேரும் பாகனும் வந்துஎன் நலன் உண்டான்'

என்றாற்போல்வன தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே, தலைமை இல் பொருளும் உடன்முடிந்தது ஒரு முறைமைபற்றி வந்தனவாம். *(51)*

### நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**51. பலவயி னானும் -**

இருதிணையும் விரவி அஃறிணை முடிபு ஏற்றலே செய்யுளுக்குப் பெரும்பான்மை. உயர்திணையும் பொருள் என்ற பொதுப்பெயரான் அஃறிணையுள் அடங்கும். உயர்திணையுள் அஃறிணை அவ்வாறு அடங்காது ஆதலின் அஃறிணை முடிபு சிறந்தது.

**'வடுகர்'** - வடுக நாட்டினர்-அருவா நாட்டினர்-கருநாடக நாட்டினர் -ஆகிய மக்கள் முத்திறத்தாரையும், சுடுகாடு-பேய் எருமை என்ற முத்திற அஃறிணைப் பொருள் களையும் அறிஞர் நெருங்கிப் பழக விரும்பார் - என்று கூறும் இப்பாடலில், உயர்திணையுள் மூவரையும் அஃறிணைப் பொருள் மூன்றனையும் செவ்வெண்ணாக இணைத்து 'இவைஆறும்' என்ற அஃறிணைத்தொகை வழங்கப்பட்டுள்ளது.

**'கடுஞ்சினத்த'** - 'மிக்க கோபத்தை உடைய கொலைத் தொழிலில் வல்ல ஆண் யானையும், விரைந்து செல்லும் நடையை உடைய செருக்குற்ற குதிரையும், நீண்ட கொடிகள் கட்டப்பட்ட பெருமிதமான தேரும், நல்ல மனம் உடைய போரினை விரும்பும் வீரரும்- என நான்கினால் மாட்சிமைப் பட்டதாயினும் ' - இவ்வடிகளில் அஃறிணைப் பொருள் மூன்றனோடு உயர்திணைப் பொருள் இணைக்கப்பட்டு நான்கு என்ற அஃறிணைத்தொகை வழங்கப் பட்டுள்ளது.

**'பாணன்'** - 'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்ற இந்நான்கைத் தவிர வேறு பழங்குடி இல்லை' - இதன்கண், பாணன் முதலிய உயர்திணைப் பொருள்கள் எண்ணப்பட்டு 'நான்கு' என்ற அஃறிணைத்தொகை பெற்றன. இது சேனாவரையர் கருத்தை மறுத்து உரைப்பதாகும்.

**'பார்ப்பார்'** - பார்ப்பனர், தவம்செய்வோர், மூட்டையைச் சுமந்து வருபவர், நோயான் நலிவுற்று வருந்தி நடந்துவருபவர், ஆண்டில் மிக மூத்தவர், ஆண்டில் மிக இளையவர், பசுக்கள், பெண்கள்- இவர்களுக்கு, இவர்கள் செல்லும் வழியில் குறுக்கிடாமல் இவர்கள் தடையின்றி நடக்க வழிவிட்டுத் தாங்களாகவே விலகிச் செல்பவரே, மக்கட்பிறப்பில் பிறரால் பாராட்டத்தக்கவர் எனப்படுவார்.

உயர்திணைப்பொருள் பலவும் அஃறிணைப்பொருள் ஒன்றும் விரவி உயர்திணை முடிபு பெற்றன.

கோபலய்யர் - *35*

'**பார்ப்பார்**' - பார்ப்பனர், இல்லறத்தையும் துறவறத்தையும் நெறிப்பட நடத்தும் சான்றவர், பசுக்கள், கற்பில் சிறந்த மகளிர், ஆண்டில் மிக மூத்தவர், குழந்தைகள்-என்ற இவர்களை நீக்கிவிட்டு" -

பசு அஃறிணை; குழந்தை அஃறிணை முடிவினது. ஏனைய சொற்கள் உயர்திணை. இவை செவ்வெண்ணாக இணைக்கப்பட்டு உயர்திணை முடிபு பெற்றன.

'**தானும்**' - "தானும் தன் தேரும் தன் தேரைச் செலுத்தும் பாகனுமாக, யானும் என் உயிர்த்தோழியும் தோழியர்ஆயத்து ஏனைய மகளிரும் நீராடும் நீர்த்துறையை அணுகி, என் நலனை நுகர்ந்தான்."

தானும் தேரும் பாகனும் என்ற முப்பொருள்களின் வினை 'வந்து' என்பது. அது கொண்டு முடியும் 'உண்டான்' என்ற வினைமுற்று தலைவன் ஒருவனையே சாரும் ஆண்பால் வினைமுற்று. தான், தேர், பாகன் என்ற முப்பொருளில் தான் எனப்படும் தலைவனே தலைமைப் பொருள் ஆதலின், தலைமைப்பொருட்கு வினை கொடுப்பவே, தலைமை இல் பொருளும் அவ்வினை கொண்டு முடிந்ததாகக் கருதப்படும்.

'நானும் என் சிந்தையும் நாயகனுக்கு எவ்விடத்தோம்
தானும்தன் தையலும் தாழ்சடையான் ஆண்டிலனே'
(திருவாசகம்-229)

என்ற திருவாசகப் பாடலும் அன்னதே.

**தெய்வச்சிலையார் உரை**

**திணை வழுவமைதி**

*49. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்*
*அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.*

திணைவழு அமைத்தலை நுதலிற்று.

இ-ள் : எண்ணின்கண், திணை விரவி வரும் பொருள் பெரும்பான்மையும் அஃறிணை முடிபின செய்யுளுள் எ-று.

எனவே, சிறுபான்மை உயர்திணையான் முடியவும் பெறும் என்று கொள்க.

உ-ம் : 'கோல்அஞ்சி வாழும் குடியும் குடிதழீஇ
ஆலம்வீழ் போலும் அமைச்சனும் - வேலின்
கடைமணிபோல் திண்ணியான் காப்பும் இம்மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்' (திரி. 33)

இது விரவி எண்ணி அஃறிணையான் முடிந்தது.

'அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்' (நாலடி. 151)

எனவும்,

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றுஇவர்கட்கு
ஆற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்' (ஆசாரக்கோவை 64)

எனவும் இவை உயர்திணையான் முடிந்தன.

யானையும் குதிரையும் வீரரும் போர்க்களத்துப் பட்டன- அரசனும் படையும் பட்டன என வழக்கின் கண்ணும் வருமால் எனின், 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்' என்னும் தந்திர உத்தியான், இச் சூத்திரத்திற்குப் 'பலவயினானும் அஃறிணை முடிபின செய்யுளுள்' என்றமையான், சிலவயினான வழக்கினுள்ளும் விரவி வந்து தலைமையும் பன்மையும் பற்றி வந்த அஃறிணை யான் முடியவும் பெறும் என்று கொள்க. (49)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**49. 'பலவயினானும்'-**

***கோல் அஞ்சி*** - அரசனுடைய செங்கோலுக்குப் பயந்து தவறுகளைச் செய்யாது வாழும் குடிமக்களும், குடிமக்களைப் பாதுகாத்து ஆலம்விழுது அடிமரத்தைப் பாதுகாப்பதுபோல நாட்டு நலனுக்கு அடிப்படையான அரசனைப் பாதுகாக்கும் அமைச்சனும், வேலின் பிடி போன்ற உறுதியான வீரனுடைய நாட்டுப் பாதுகாவலும் ஆகிய மூன்றும் - படையை உடைய வேற்று மன்னன் அந்நாட்டைக் கைப்பற்றுதற்கண் கொண்ட ஆசையை விடச் செய்வனவாம்.

*குடியும், அமைச்சனும், காப்பும் என அஃறிணையும் உயர்திணையும் எண்ணப்பட்டு மூன்றும் என்ற அஃறிணை முடிபு கொண்டன.*

***அங்கண்*** - அழகிய இடத்தை உடைய வானத்தில் பரந்த நிலவொளியைப் பரப்பும் நிலவும் சான்றோரும் ஒருவகையான் ஒப்பாவார்கள்.

*திங்களும் சான்றோரும் என அஃறிணையும் உயர்திணையும் எண்ணப்பட்டு 'ஒப்பர்' என்ற உயர்திணைவினை பெற்றன.*

***பார்ப்பார்*** - பார்ப்பனர், தவம் செய்வார், மூட்டை சுமப்பவர், நோயாளிகள், மிகவும் ஆண்டு மூத்தவர்கள், மிகவும் இளையவர்கள், பசுக்கள், கற்புடைய மாதர் என்ற இவர்களுக்கு எதிர்ப்புறமாக நடந்துவரும்போது வழிவிட்டுச் செல்பவரே மக்கட் பிறப்பில் பிறரால் பாராட்டத் தக்கவர்கள். உயர்திணை பலவும் பசு என்ற அஃறிணையும் எண்ணப்பட்டு 'இவர்கட்கு' என்ற உயர்திணை முடிவுபெற்றன.

***மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல்***-கூறப்பட்ட செய்தியொடு கூறப்படாததனையும் இணைத்துக் கொள்ளுதல்: செய்யுளுள் பலவயினானும் அஃறிணை முடிபின எனவே, உலக வழக்கினுள் சிலவயினான் அஃறிணை முடிபின என்று கொள்ளப்படும். அம்முடிபு தலைமை பற்றியோ பன்மை பற்றியோ கொள்ளப்படும். *(49)*

## கல்லாடனார் உரை

### திணைவிரவிய பெயர்கள் முடிபு

51. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

என்-எனின், செய்யுள் அகத்துத் திணைவழு அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பல இடத்தானும் திணை விரவி எண்ணப் படும் பெயர் அஃறிணை முடிபினவாம் செய்யுள்அகத்து எ-று.

எ-டு : 'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேய்எருமை என்றுஇவை ஆறும்
குறுகார் அறிவுடை யார்' என வரும்.

'பலவயினானும்' என்றதனான், சிலவயினான் திணை விரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவனவும் கொள்க என்பது.

எ-டு : 'பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை' (புறநா. 335)
என வரும்.

சிலவயினான் திணை விரவி எண்ணி, உயர்திணையான் முடிவனவும் கொள்ளாமோ எனின், சான்றோர் செய்யுட்கு அவ்வாறு வருவனவாய் இன்மையின் கொள்ளாம் என்பது.

'வடுகர் அருவாளர்' என்பதூஉம் சான்றோர் செய்யுள் அன்றால் எனின்,

'கடுஞ்சினத்த கொல் களிறும் கதழ்பரிய கலி மாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுஉடைய
புகல்மறவரும் என
நான்குடன் மாண்டது ஆயினும்' (புறநா-55)
என்பதும் உண்மையின் அமையும் என்பது.

அஃதேல், 'திங்களும் சான்றோரும் ஒப்பர்' (நாலடி-151) எனவும், 'வேந்தன் பெரும்பதி மண்ஆள் மாந்தர், ஈங்குஇம் மூவர் இதற்கு உரியாரே' எனவும் சான்றோர் செய்யுளுள்ளும் வருமாலெனின், திங்களும் பதியும் என்பன அஃறிணை முடிபின எனினும் தாம் உயர்திணைப் பொருள ஆகலின், அவை இந்நிகரன அல்ல. இவற்றின்கண் சிறுபான்மை வழூவினையும் இப் 'பலவயினானும்' என்றதனான் ஆதல், அதிகாரப் புறனடையான் ஆதல் அமைத்தும் என்பது.

இதனால் சொல்லியது, செய்யுட்கண் திணைவிரவி எண்ணியவழிப் பொதுவாக முடியாது ஒருதிணையான் முடிவது கண்டு அதனை அமைத்தவாறு.

இனிப் பொதுமுடிபு இல என்று அஃறிணை முடிபிற்று ஆதற்குக் காரணம் என்னோ எனின், அவ்வாறு எண்ணிய உயர்திணையும் பொருள் என்னும் பொதுமையான் அஃறிணையின் அடங்கும்; உயர்திணையுள் அஃறிணை அடங்காது என்பது போலும். (51)

### கல்லாடனார் உரைவிளக்கம்

**51. 'பலவயி . . .செய்யுளுள்ளே.'**

சான்றோர் செய்யுளுள் சிலவயினான் எண்ணி உயர்திணை முடிபுகோடல் இன்று என்பது இவர்கருத்தாம்.

புறநானூறு 55ஆம் பாடலில் 'களிறு, மா, தேர், மறவர் எனநான்கு' எனத் திணை விரவி அஃறிணை முடிபுகோடல் கூறப்பட்டதனை எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

சிறுபான்மை திணை விரவி உயர்திணை முடிபு கோடல் இந்நூற்பாவில் உள்ள 'பலவயினானும்' என்பதா லாவது, அதிகாரப் புறனடையானாவது வழூவமைதியாகக் கொள்ளப்படும்.

உயர்திணையும் பொருள் என்ற பொதுமையான் அஃறிணையுள் அடங்குதலின் அஃறிணை முடிபு வழாநிலை யாகக் கொள்ளப்பட்டது.

## ஒருவர் உரை

51. *பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்*
*அஃறிணை முடிபின செய்யுள் உள்ளே.*

எ-து : பல இடத்தினும் உயர்திணையும் அஃறிணையும் தம்முள் விராய் எண்ணப்படும் பொருள் செய்யுள் இடத்து அஃறிணைச் சொல் கொண்டு முடியும்.

எ-டு : 'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேய்எருமை என்றிவை ஆறும்
குறுகார் அறிவுடை யார்'

'பலவயினானும்' என்றதனால், சிலவயினான் திணை விரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவனவும், திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிவனவும் கொள்க.

எ-டு : 'பாணன் பறையன் துடியன் கடம்பன்என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை'. (புறம் - 335)

இது திணைவிரவாது வந்து அஃறிணையான் முடிந்தது.

1. 'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றுஇவர்கட்கு
ஆற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார். (ஆசார -64)

2. 'எருதும் உழவனும் வந்தார் ஒருகுடம்நீர்
தாராய்நீ ஆயர் மகள்.'

3. 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடாஅர்.'

4. 'நங்கையும் கிளியும் உண்டார்.'

*5.* 'வேந்தன் பெரும்பதி மண்ஆள் மக்கள்
ஈங்குஇவர் மூவர் இதற்குஉரி யோரே.'

*6.* 'வண்டுஆர் ஓதி நீயும் நல்லை
தண்தார் மார்பின் இவனும் நல்லன்
ஒலிப்பாட் டின்இவ் ஊரும் நன்றே
தீயோர் யாவரும் இல்லை'

என இவை திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிந்தவாறு காண்க. *(51)*

## ஒருவர் உரைவிளக்கம்

**51. 'பலவயினும் . . . செய்யுளுள்ளே.'**

உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிந்தது, 'பாணன் . . . இல்லை' என்பது. திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிவன :

1. பார்ப்பார் தவரே . . . இவர்கட்கு.
2. எருதும் உழவனும் வந்தார்.
3. மூர்க்கனும் முதலையும் கொண்டது விடாஅர்.
4. நங்கையும் கிளியும் உண்டார்.
5. வேந்தன், ஊர், மக்கள் - இவர் மூவர்.
6. நீயும், இவனும், இவ்வூரும் ஆகிய யாவரும்.

## பாலசுந்தரனார் உரை

**51. 'பலவயி . . . ளுள்ளே.'-**

எண்ணப்படுதற்கண் யாவும் பொருட்பகுதியாய் அடங்கலின், அஃறிணை முடிபின எனக் கொண்ட தொல்லோர் மரபினை ஆசிரியர் செய்யுள் முடிபாகக் கூறினார் என்க.

## இளம்பூரணர் உரை

### பலபொருள் ஒருசொல் வகை

*52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்*
*வினைவேறு படாஅப் பலபொருள்ஒருசொல்என்று*
*ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.*

*எ... ன், பல பொருள் ஒருசொல்லின் வகைமை உணர்த்துதல் நுதலிற்று.*

இ-ள் : வினையான் வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினையான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்லும் என அவ்விரண்டு வகைப்படும் பல பொருள் ஒருசொல் என்றவாறு.

மற்றொரு பிரதியிற் கண்டவுரை: இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், ஒரு சொல்லான் வரும் பல்பொருள் வகை கூறுதல் நுதலிற்று. பல்பொருள் குறிக்கும் ஒரு சொல், வினை வேறுபடுகின்ற பல்பொருள் ஒரு சொல்லென, வினை வேறுபடாஅப் பல்பொருள் ஒரு சொல்லென இரு வகைப்படும் என்றவாறு.

*பல் பொருள் குறிக்கும் ஒரு சொல்லினையும் பிறவகைப் படுத்திப் பகுத்தல் ஒல்லும் எனினும், வேறுபடுத்திக் கோடற்கண் வினையே சிறப்புடைமையின் இங்ஙனம் வகுத்தோதினார். (52)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**52. 'வினைவேறு படூஉம்' -**

*பிறவகைப் படுத்திப்பகுத்தல் - சார்பொடு பொருத்தியும், இனத்தோடு இணைத்தும், சந்தருப்பத்தொடு சார்த்தியும் கூறுவன போல்வன.*

## சேனாவரையர் உரை

### பலபொருள் ஒருசொல் அமையும் வகை

***52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்என்(று)
ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.***

*(இ-ள்)* : வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினை வேறுபடாப் பல பொருள் ஒருசொல்லும் என இரண்டு வகைப்படும், பல பொருள் ஒருசொல் என்றவாறு.

இனமும், சார்பும் உளவேனும் வேறுபடுத்தற்கண் வினை சிறப்பு உடைமையின், அதனான் பெயர் கொடுத்தார், ஆதீண்டு குற்றி என்பது போல.

இலக்கணச் சூத்திரங்களே அமையும் இச்சூத்திரம் வேண்டா பிற எனின், இருவகைய என்னும் வரையறை அவற்றான் பெறப்படாமையானும், வகுத்துப் பின்னும் இலக்கணம் கூறியவழிப் பொருள் இனிது விளங்குதலானும், இச்சூத்திரம் வேண்டும் என்பது. (52)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**52. வினைவேறு . . . சொல்-**

வினை, இனம், சார்பு முதலியவற்றான் பொருள் வேறுபாட்டினை உணர்த்தும் சொற்களைத் தலைமைபற்றி, 'ஆதீண்டு குற்றி' என்றாற்போல, வினை வேறுபடும் பல பொருள் ஒருசொல் என்று பெயர் கொடுத்தார். இனமும் சார்பும் வினையை அடுத்தே பொருள்படும் என்பது.

பல பொருள் ஒரு சொற்கள் இருவகையவே என்று வரையறை செய்ய இந்நூற்பா வேண்டும்.

## நச்சினார்க்கினியர் உரை

### பலபொருள் ஒருசொல்லின் வகை

***52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள்ஒருசொல்என்று
ஆ-இரு வகைய பலபொருள் ஒருசொல்.***

இதனான், பல சொல்லான் ஒரு பொருள் உணர்த்தி, இனி ஒரு சொல்லான் வரும் பல பொருள் உணர்த்துகின்றார், அவற்றின் பெயரும் தொகையும் முறையும் கூறுகின்றார்.

இ-ள் : வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல் - வினையான் வேறுபடும் பலபொருள் ஒரு சொல்லும்; வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல் - வினையான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்லும்; என்று ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல் - என அவ்விருவகைப்படும் பல பொருள் ஒரு சொல் என்றவாறு. (52)

## தெய்வச்சிலையார் உரை

### பலபொருள் ஒருசொல் பாகுபாடு

***50. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள்ஒருசொல்என்று
ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.***

பல பொருள் ஒருசொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பல பொருள் உணரவரும் சொல்ஆவன, பல பொருட்கும் தனித்தனிப் பெயர்ஆகி வருவதூஉம் பல பொருள் ஒருசொல் ஆம்; பல பொருட்கும் பொதுப் பெயர் ஆகி வருவதூஉம் பல பொருள் ஒருசொல் ஆம். அவற்றுள் வினை வேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல் ஆவன : மா, வேங்கை எனவும், மக்கள், பெற்றம் எனவும் வருவன. வினைவேறுபடாஅப் பலபொருள் ஒருசொல் ஆவன : சேவல், பெடை என்பன. அவற்றுக்கு உதாரணம் வருகின்ற சூத்திரத்தான் காட்டுதும். (50)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**50. 'வினைவேறு படூஉம்'-**

மா - மாமரம், விலங்கு, வண்டு முதலியவற்றிற்குப் பொதுச்சொல்

வேங்கை - ஒரு மரத்திற்கும் புலிக்கும் பொதுவான பெயர்.

மக்கள் - ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான சொல்.

பெற்றம் - பசுமாட்டுக்கும் காளைமாட்டுக்கும் பொதுப்பெயர்

இவை வினையான் வேறுபடுத்தப்படும் பல பொருள் ஒருசொல்.

சேவல் - ஆண் பறவைகளின் பொதுப்பெயர்

'சேவல் பெயர்க்கொண்ட சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி மயில்அலங் கடையே.' (பொ. 603)

நோக்குக.

பெடை - பெண் பறவைகளின் பொதுப்பெயர்.

## கல்லாடனார் உரை

### பலபொருள் ஒருசொல் வகை

***52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்என்று***
***ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.***

என்-எனின், மேல் பல சொல்லான் வரும் ஒரு பொருள் உணர்த்தினார். இனி ஒரு சொல்லான் வரும் பல பொருள் உணர்த்துவான், அவற்றின் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினையினான் வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினையினான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்லும் என இருவகைய பல பொருள் ஒருசொல் என்றவாறு.

எ-டு. : மா, வாள், கோல், கன்று, தளிர், பூ, காய், பழம் என்னும் தொடக்கத்தன. இவற்றுள் மா என்பதே பல சாதியும் உணர்த்திப் பொதுவாய் நின்றது. அல்லன எல்லாம் ஒரு சாதியை உணர நிற்றலின், பொதுமை இலவால் எனின், அவ்வாறு பொதுமைப் படா ஆயினும், விகற்பித்து நோக்கத் தம்முள்ளே சாதி மாறுபாடு உடையன என உணர்க.

இவற்றான் உலகத்துப் பெயர்கள் எல்லாம் ஒரு பொருளோடும், ஓர் இடத்தோடும், ஒரு காலத்தோடும், பண்போடும், தொழிலோடும், உறுப்போடும் படுத்து நோக்கப் பல பொருள் ஒரு சொல் எனப்படும் போலும். *(52)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**52. 'வினைவேறு . . . ஒருசொல்.'-**

பலபொருள் ஒரு சொற்கள் இவை என்பது விளக்கப்பட்டது.

கோல், கன்று, தளிர், பூ முதலியன பல பொருள் பொதுச்சொற்கள் அல்ல எனினும் அவற்றை விகற்பித்து நோக்கத் தம்முள்ளே சாதி வேறுபாடு உடைமையான், பல பொருள் ஒரு சொல் எனப்பட்டன.

## ஒருவர் உரை

*52.* ***வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்என்று***
***ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.***

எ-து : வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லும் என இரண்டு வகைப்படும் பல பொருள் ஒருசொல்.

எ-டு : அவை : மா, வாள், கோல், கன்று, தளிர், பூ, காய், பழம் என்னும் தொடக்கத்தன. (52)

## பாலசுந்தரனார் உரை

**52. 'வினைவேறு . . . ஒருசொல்.'**

வேறுபடுவினை என்றது வேறுபடுத்துவதற்குரிய சிறப்பு வினைகளை.

வேறுபடாவினை என்றது வேறுபடுத்துவதற்கு இயலாத பொதுவினைகளை.

இவ்விருவகை வினைகளான் எய்தும் நிலைமையைப் பல பொருள் ஒரு சொற்களின்மேல் ஏற்றி இருவகை என்றார். பின்னர் இலக்கணம் கூறுதற்கு அவற்றைக் குறியீடு செய்துகொண்டார் என்க.

கடிமலர், கடிகா என்றாற்போலப் பல பொருள் பற்றிவரும் 'கடி' என்னும் உரிச்சொல் போல்வனவற்றை வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல் எனக் கொள்ளலாமோ? எனின், உரிச்சொற்கள் பெயர்வினை களுக்கு அடையாக வந்து அவற்றின் பொருளை வேறு படுப்பன அன்றி அவை தாமே தனித்து நின்று பொருள் தாராமையின் அவை வினைவேறுபடாப் பல பொருளொரு சொல் ஆகா.

## பதிப்பாசிரியர் குறிப்பு

52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல், வினைவேறுபடா அப் பல பொருள் ஒருசொல் - இவைபற்றி ச. பா. அவர்கள் தரும் விளக்கங்களும் எடுத்துக்காட்டுக்களும் தெளிவாக உள்ளன.

## இளம்பூரணர் உரை

### வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல்

*53. அவற்றுள்,*
*வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்*
*வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்*
*தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.*

எ . . . ன், வினை வேறுபடூஉம் பல பொருள் ஒருசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினைவேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்லை அறியுமிடத்து, வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும் அறியப்படும் என்றவாறு.

வேறுபடு வினையான் அறிய வருமாறு :

மா தளிர்த்தது, மா பூத்தது, காய்த்தது எனவரும். இவ்வினை மரமாவிற்கு அல்லது ஏலாது. பிறவு மன்ன. மாவும் மருதும் ஓங்கின என்பது இனத்தான் மாமரம் என விளங்கும். மாவும் மரையும் புலம் படர்ந்தன என்றால் விலங்கு மா என்பது அறியப்படும்.

இனிச் சார்பினான் அறிய வருமாறு : விற்பற்றி நின்று 'கோல் தா' என்றால், கணைக்கோலின்மேல்நிற்கும், அதற்குச் சார்பு அதுவாகலான். குதிரைமேல் இருந்து 'கோல் தா' என்றால், மத்திகைக் கோல் மேலாயினும் சுள்ளற்கோல் மேலாயினும் செல்லும், அதற்குச் சார்பு அதுவாகலான் . பிறவும் அன்ன. (53)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**53. 'அவற்றுள், வினைவேறு படூஉம்' -**

மாவும் மரையும் புலம் படர்ந்தன - பெற்றமும் எருமையும் மரையாவும் மேய்புலம் நோக்கிச் சென்றன என்பது. 'பெற்றமும் எருமையும் மரையும் ஆவே' (பொ. 615)

என்ற நூற்பாவினான் இம்மூன்றும் ஓரினத்தவாதல் பெறப்படும்.

கணைக்கோல் - அம்பாகிய கோல்
மத்திகைக்கோல் - குதிரைச்சம்மட்டி
சுள்ளற்கோல் - வளையும் தடி.

யாப்பருங்கல விருத்தியின் 35ஆம் நூற்பா உரையுள், இந்த நூற்பா எடுத்துக் காட்டப்பட்டு 'வேறுபடு' என்ற அடையை வினை, இனம், சார்பு என்ற மூன்றனுடனும் தனித்தனிக் கூட்டிப் பொருள் செய்யவேண்டும் என்பது இயம்பப்பட்டுள்ளது.

## சேனாவரையர் உரை

### வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல்

***53. அவற்றுள்,***
***வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்***
***தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.***

*(இ-ள்) :* அவ்விரண்டனுள்ளும், வினைவேறுபடும் பல பொருள் ஒரு சொல், ஒரு பொருட்கே சிறந்த வினையானும், இனத்தானும், சார்பானும், பொருள் தெரிநிலைக்கண் பொதுமை நீங்கித் தெளியத் தோன்றும் என்றவாறு.

மா என்பது ஒருசார் விலங்கிற்கும், ஒரு மரத்திற்கும், வண்டிற்கும், பிற பொருட்கும் பொது. குருகு என்பது ஒரு பறவைக்கும், உலை மூக்கிற்கும், வளைக்கும், பிறவற்றிற்கும் பொது. நாகம் என்பது மலைக்கும், ஒருசார் மரத்திற்கும், யானைக்கும், பாம்பிற்கும், பிறவற்றிற்கும் பொது. சே என்பது ஒரு சார் பெற்றத்திற்கும், ஒரு மரத்திற்கும், பிறவற்றிற்கும் பொது.

மாப் பூத்தது, மாவும் மருதும் ஓங்கின என வேறுபடு வினையானும், இனத்தானும் மரம் என்பது விளங்கிற்று. கவசம் புக்கு நின்று 'மாக்கொணா' என்றவழிக் குதிரை என்பது சார்பினான் விளங்கிற்று. குருகு முதலாயினவும் அன்ன.

வேறுபடு வினையினும் என்றாரேனும், ஒன்றென முடித்தல் என்பதனான் இம்மா வயிரம், வெளிறு என வேறுபடுக்கும் பெயரும் கொள்ளப்படும்.

இனத்தொடு சார்பிடை வேற்றுமை என்னை எனின், ஒரு சாதிக்கண் அணைந்த சாதி இனம் எனப்படும். அணைந்த சாதி அன்றி ஒருவாற்றான் இயைபு உடையது சார்பு எனப்படும் என்பது. *(53)*

### சேனாவரையர் உரைவிளக்கம்

**53 . அவற்றுள் . . . நிலையே-**

கவசம் அணிந்தவன் ஊர்திகளிலேயே செல்லவேண்டுதலின் *(சீவக. 266)* குதிரையைக் கொணருமாறு ஏவினான்.

உலைமூக்கு . . . கொல் உலையில் துருத்திவைக்கும் துவாரம்.

### நச்சினார்க்கினியர் உரை

### வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல்

*53.* ***அவற்றுள்,***
***வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்***
***தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.***

இஃது, அவற்றுள் வினை வேறுபடுமாறு கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் - அவ்விரண்டனுள்ளும்; வினை வேறு படூஉம் பலபொருள் ஒருசொல் - வினையான் வேறு படும் பலபொருள் ஒருசொல்; வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும் - ஒரு பொருட்கே சிறந்த வினை யானும் இனத்தானும் சார்பானும்; பொருள்தெரி நிலை தேறத் தோன்றும் - பொருள் தெரிநிலைக்கண் பொதுமை நீங்கித் தெளியத் தோன்றும் என்றவாறு.

உதாரணம் : மா என்பது ஒரு சார் விலங்கிற்கும், மரத்திற்கும், வண்டிற்கும் பிற பொருட்கும் பொது. குருகு என்பது ஒரு பறவைக்கும், உலை மூக்கிற்கும், வளைக்கும் பிறவற்றிற்கும் பொது.

மா பூத்தது - இது வினை.
மாவும் மருதும் ஓங்கின - இஃது இனம்.
கவசம்புக்கு நின்று 'மா கொணா' என்பது சார்பு.

ஒரு சாதிக்கண் அனைந்த சாதி இனம்; ஒருவாற்றான் இயைபு உடையது சார்பு.

'ஒன்று என முடித்தல்' என்பதனான், 'இம்மா வயிரம், இம்மா வெளிறு' என வேறுபடுக்கும் பெயரும் கொள்க.

'கழிப்பூக் குற்றும், கானல் அல்கியும்' *(அகநா. 330)*

என்றாற்போலச் சில பொருளை ஒழித்துச் சில பொருள்மேல் நிற்றல் உரையின் கொள்க.

இனமும் சார்பும் பின்வரும் வினையொடு கூடி அல்லது பொருள் முடியாமையின், அவையும் வினை வேறுபட்டனவேயாம். *(53)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**53. அவற்றுள்,வினைவேறு படூஉம் -**

'மாவும் மருதும்' என்ற இனமும் வினையாலேயே வேறுபட்டன. 'கவசம் அணிந்துகொண்டு' 'மா' என்று குறிப்பிடும் சார்பும் 'கொணா' என்ற வினையாலேயே வேறுபடும்.

ஊர்தியில் செல்வோர் கவசம் அணிந்தே சேறல் மரபு (சீவக.)

வயிரம் -உறுதியானது.வெளிறு-உறுதியற்றது.

'கழிப்பூக் குற்றும், கானல் அல்கியும்' உப்பங்கழிகளில் மலர்ந்த பூக்களைப் பறித்தும், கடற்கரைச் சோலையில் தங்கியும் . ஏனைய கோட்டுப்பூ, கொடிப்பூப் போல்வனவற்றை விடுத்துக் கழிப்பூக்களையே பறித்தும், மருதநிலச்சோலைகளை விடுத்துக் கடற்கரைச் சோலையிலே தங்கியும் - என்பன சிலவற்றை விடுத்துச் சிலவற்றையே குறிப்பிடுவன.

## தெய்வச்சிலையார் உரை

### வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல்

**51. *அவற்றுள்,***
***வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்***
***தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.***

வினை வேறுபடும் பல பொருள் ஒருசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேல் கூறப்பட்டவற்றுள் வினை வேறு படும் பல பொருள் ஒருசொல் பொருள் தெரியும் காலத்து வேறுபட்ட வினையினானும், இனத்தினானும், சார்பினானும் தெளியத்தோன்றும் எ-று.

உ-ம் : மா காய்த்தது; வேங்கை பூத்தது என்றவழி மரம் என்பது அறியப்பட்டது. மா ஓடிற்று; வேங்கை பாய்ந்தது என்றவழி விலங்கு என்பது அறியப்பட்டது. இவை தனித்தனிப் பொருள் உணர்த்தின.

இவ்வூர் மக்கள் எல்லாம் போர்க்குப் போயினர் என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவ்வூர் மக்கள்

எல்லாம் தைந்நீர் ஆடினார் என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் அறம் கறக்கும் என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் உழவு ஒழிந்தன என்றவழி ஆண்பால் உணரப் பட்டது. இவை பொதுப்பொருள் உணர்த்தின.

இவை வினையினான் பொருள் விளக்கின.

மாவும் மருதும் அவை என்றவழி மாமரம் என்பது அறியப்பட்டது. மாவும் புள்ளும் என்றவழி விலங்கு என்பது அறியப்பட்டது. இவை இனம்.

இப்பொழில் அகத்து நூறு மா உள என்றவழி மரம் என்பது அறியப்பட்டது. இப்போர்க்களத்து நூறு மா உள என்றவழி விலங்கு என்பது அறியப்பட்டது. இவை சார்பு.

பொதுமை உணர்த்தும் பலபொருள் ஒருசொல் இனமும் சார்பும் பற்றி வருவன வந்தவழிக் கண்டுகொள்க. (51)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**51. 'அவற்றுள் வினைவேறுபடூஉம்'-**

அறம் கறக்கும் - வழங்கப்படும் தீனி ஏதும் வழங்கப்படாமையின் பசு தருமத்திற்காகவே பால் சுரக்கும்.

உழவு - காளை மாடுகளுக்கே உரிய செயல் பற்றிய சொல்.

பொதுமை உணர்த்தும் பல பொருள் ஒரு சொல் அளகு. அளகு என்பது கோழி, கோட்டான் என்ற இரு பறவைகளின் பெண்பாலை உணர்த்தும் (பொ. 610)

அளகு தன் சேவலோடு இரவில் காக்கைகளை எதிர்த்தது எனின் அளகு என்பது கூகையின் அளகு.

அளகு தன் குஞ்சுகளொடு குப்பையைக் கிளறியது - அளகு என்பதற்குக் கோழிப்பெட்டை போன்ற எடுத்துக் காட்டுக்களைக் கொள்ளலாம்.

## கல்லாடனார் உரை

### வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல்

*53. அவற்றுள்,*
*வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்*
*வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்*
*தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.*

என்-எனின், மேற்கூறிய பலபொருள் ஒருசொல்லினுள் வினை வேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்லைச் சொல்லுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற்சொல்லப்பட்ட இரண்டனுள் வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல் வேறுபடுக்கும் வினையானும், வினையொடு வரும் இனத்தாலும், சார்பினானும் 'இப்பொழுது இவன் கூறியது இப்பொருள்' எனத் தெளியத் தோன்றும், பொருள் ஆராய்ச்சிப்படும் நிலைமைக் கண் எ-று.

எ-டு. : மாப் பூத்தது, காய்த்தது : இவை வேறுபடு வினை. மாவும் அரசும் புலம் படர்ந்தன, மாவும் மருதும் ஓங்கின: இவை இனம் பற்றி வந்தன. வில் பற்றி நின்று 'கோல் தா' என்பதூஉம், தூம்பு பற்றி நின்று கோல் தா என்பதூஉம், பலகை பற்றி நின்று வாள்தா என்பதூஉம் சார்பு பற்றி நின்றன.

'உரையிற்கோடல்' என்பதனான், பல பொருள் ஒரு சொல் வினை இனம் சார்புகளைப் பற்றிப் பல பொருளை ஒழிந்து ஒரு பொருள்மேல் நில்லாது, சில பொருள் ஒழித்துச் சில பொருள்மேல் நிற்பதூஉம் கொள்ளப்படும்.

'கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்' (அகம்-330) என்றாற்போல வரும்.

இனமும் சார்பும் பற்றி வரும் அவையிற்றை வினைவேறுபடூஉம் பலபொருள் ஒருசொல் என்றது

என்னை எனின், அவ் இனமும் சார்பும் அவ்வினைச்சொல் வேறுபடுக்கும் வழி அதனொடு கூடி நின்று வேறுபடுப் பின்அல்லது தாமாக நில்லாமை நோக்கி அவையிற்றையும் வினைவேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல் என்ப.

பொதுச் சூத்திரத்துள் இரண்டையும் ஒன்றாக அடக்கி, ஈண்டு அதன் பாகுபாடு தோன்ற விரித்துக் கூறினவாறு போலும். அதனான் சூத்திரத்து இனமும் சார்பும் என்பன வற்றை முன்நின்ற வினையொடு தொடர்புபடப் பொருள் உரைத்துக் கொள்க. *(53)*

**கல்லாடனார் உரைவிளக்கம்**

**53. 'அவற்றுள், வினைவேறு . . . தெரிநிலையே.'-**

மாவும் அரசும் புலம் படர்ந்தன - மா மரங்களும் அரசமரங்களும் அந்நிலப்பரப்பு முழுதும் பரவிக் காணப் படுகின்றன.

'கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்' அகநா. *330*

மற்ற மலர்களைப் பறிக்காமல் உப்பங்கழிகளில் உள்ள பூக்களையே பறித்தும், மற்ற நிலச்சோலைகளில் தங்காமல் கடற்கரைச் சோலையிலேயே தங்கியும் எனச் சில பொருள்களை விடுத்துச் சில பொருள்களே குறிப்பிடப்பட்டு உள்ளன.

வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல் என்ற பெயர்க்காரணம் விளக்கப்பட்டுள்ளது.

**ஒருவர் உரை**

*53.* ***அவற்றுள்,***
***வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்***
***வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்***
***தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.***

எ-து : வினைவேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல்லை அறியும் இடத்து, வேறுபட்ட வினையினானும் இனத்தினானும் சார்பினானும் பொருள் தெரிநிலை தெளியத்தோன்றும்.

எ-டு : மா தளிர்த்தது, பூத்தது, காய்த்தது என்ற இடத்து மாமரத்தின்மேலும், மா ஓடும், மாப் பாயும் என்ற இடத்து விலங்கின்மேலும் செல்லும். இவை வினையான் அறியப்பட்டன.

இனி, மாவும் மரையும் புலம் படர்ந்தன - மாவும் நாயும் ஓடின - என்றால் இனத்தான் அறியப்பட்டன.

மாவும் மருதும் ஓங்கின என்றால், இதுவும் இனத்தான் அறியப்பட்டது.

வில்பற்றி நின்று 'கோல் தா' என்றஇடத்துக் கணைக் கோல் மேலும், குதிரை ஏறி இருந்து 'கோல் தா' என்றஇடத்து மத்திகைக் கோல் மேலும், பலகை பற்றி நின்று வாள்தா என்றஇடத்துக் கண்டகவாள்மேலும் செல்லும். இவை சார்பால் அறியப்பட்டன எனக் கொள்க. *(53)*

## ஒருவர் உரைவிளக்கம்

**53. 'அவற்றுள் வினை . . . நிலையே.'-**

மாவும் நாயும் ஓடின - மா என்பது விலங்கு என்பது இனத்தால் அறியப்பட்டது. கணைக்கோல் - அம்பு. மத்திகைக் கோல் - சவுக்கு. பலகை - கேடயம். கண்டகம் - உடைவாள், பெருவாள்.

## பாலசுந்தரனார் உரைவிளக்கம்

**53. 'அவற்றுள், வினை . . . நிலையே.'**

இனமாவது இயற்கையானும் செயற்கையானும் ஒரு குழுவாய் அமைதற்கு இயைபுடைய பொருள். சார்பாவது நிகழ்ச்சியானும் சூழலானும் ஒருவாற்றான் இயைபுடைய பொருள்.

ஒன்றென முடித்தலான், பாற்பொதுவாக நிற்கும் அஃறிணை இயற்பெயர்களும், உயர்திணைப் பன்மைப் பெயர்களும் வேறுபடுவினை முதலியவற்றான் ஒருபாலை வரைந்து சுட்டுதல் கொள்க.

இப்பெற்றம் உழுதது - ஆண்
இப்பெற்றம் கறந்தது - பெண்
இவ்யானை மதம் கொண்டது - ஆண்
இவ்யானை வயாவுற்றது - பெண்
இம்மக்கள் வேட்டையாடினர் - ஆண்
இம்மக்கள் கிள்ளை ஓப்பினர் - பெண்.

எனவரும்.

## இளம்பூரணர் உரை

### மேலதற்குப் புறனடை

**54. *ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.***

எ . . . ன், அம்மூவகையான் உணர்ந்தவாறு போலாது உணராமை நிற்குமாறும் உடைத்து இச்சொல் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : 'ஒன்று வினை' என்பது பொதுவினை. பொது வினையாயின் பகுதி உணராமல் தோன்றும் என்றவாறு.

அது வருமாறு : மா வீழ்ந்தது என்றவிடத்து இன்ன மா என்பது உணர்த்தலாகாது பொதுவாய் நிற்கும். *(54)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**54. 'ஒன்றுவினை மருங்கின்' -**

மூவகை - வினை, இனம், சார்பு என்பன.

***நிற்குமாறு*** உடைத்து - ***நிற்குமாறும்*** உடைத்து என்றே இருத்தல் வேண்டும்.

பொதுவினையாயின், வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல், தான் இன்ன பொருளில் அங்கு வந்துள்ளது என்ற செய்தியை உணர்த்தாமல், எல்லாப் பொருளுக்கும் பொதுவாய் நிற்கும் என்பர் இளம்பூரணர்.

பொதுமைப்பட நின்றுழியும், இவ்விடத்து இக்காலத்து இவன் சொல்லுகின்றது இம்மாவினை என்று ஒன்றனைக் குறிப்பான் உணர்த்தும் என்பர் நச்சினார்க்கினியர்.

பொதுவினை கொண்டு முடியின், பிறிதொரு பொருளோடு ஒன்றிப் பொருள்தோன்றும். யானை முறித்த லான் மா வீழ்ந்தது என்புழி மா மரத்தையும், அம்பு படுதலான் மா வீழ்ந்தது என்புழி விலங்கினையும் குறிக்கும் என்பர் தெய்வச்சிலையார்.

கல்லாடரும் ஒருவரும் நச்சினார்க்கினியரைப் பின்பற்றினர்.

சேனாவரையர் அல்லாத மற்றவர்களுக்கு இது தனி நூற்பா.

## சேனாவரையர் உரை

### வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல் இயலுமாறு

*54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.*

*(இ-ள்)* : வேறுபடாத வினை கொண்டவழி வேறு படாது தோன்றும் வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல் ஆராயுங்கால் கிளந்து சொல்லப்படும் என்றவாறு.

*(எ-டு)* : மாமரம் வீழ்ந்தது, விலங்குமா வீழ்ந்தது என வரும்.

வினைவேறுபடாப் பலபொருள் ஒரு சொல் என வேறு நிற்பன இல்லை; வேறுபடு வினை முதலாயினவற்றான் வேறுபடுவனதாமே பொதுவினை கொண்டவழி வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லாம் என்பது அறிவித்தற்கு, 'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என்றார்.

'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என ஒரு சூத்திரமாக உரையாசிரியர் பிரித்தாரால் எனின் :- அங்ஙனம் பிரிப்பின், ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றுதலும் வினைவேறு படூஉம் பல பொருள் ஒரு சொற்கே இலக்கணமாய் மாறுகோடலானும் வினைவேறு படுவன தாமே பொதுவினை கொண்டவழி வினைவேறு படாதன ஆம் என்பது அதனாற் பெறப்படாமை யானும், அது போலி உரை என்க.

முன்னும் பின்னும் வரும் சார்பு முதலியனவற்றாற் குறித்த பொருள் விளங்காக்கால் கிளந்தே சொல்லுக என யாப்புறுத்தற்கு 'நினையுங் காலை' என்றார்.

ஆங்கு என்பது உரையசை.

குறித்த பொருள்விளங்காமை கூறல் மரபு அன்மையின், மரபு வழுக்காத்தவாறு. *(54)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**54. ஒன்று . . . இயலும்-**

வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லே வினையான் பொருள் வேறுபாட்டை உணர்த்தமுடியாத பொதுவினையைக் கொண்டு முடிந்தவழி அதுவே வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லாகுமே தவிர வினைவேறுபடாப் பல பொருள் ஒருசொல் என்ற தனிப்பகுப்பு இல்லை என்பது சேனாவரையர் கருத்து.

'ஒன்று வினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என்ற நூற்பா அடியினை உரையாசிரியர் தனி நூற்பா ஆக்கினார். "அவ்வாறு பிரித்தால் அந்நூற்பா வினைவேறுபடும் பல பொருள் ஒரு சொற்கே இலக்கணமாகும். வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொற்கள் பொதுவினை கொண்டவழி வினையான் வேறுபடுக்க முடியாதன ஆகும் என்று பொருள் செய்ய அந்நூற்பாவில் போதிய சொற்கள் இல்லை" என்பது சேனாவரையர் கருத்து.

'ஆங்க உரையசை' (சொ. 277) என்ற நூற்பாவை உட்கொண்டு இந்நூற்பாவில் ஆங்க என்பது உரையசையாக வந்தது என்கிறார். ஆங்க இயலும் என்பதன் புணர்ப்பே ஆங்கியலும் என்பது இவர் கருத்து.

**நச்சினார்க்கினியர் உரை**

**மேலதற்குப் புறனடை**

***54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.***

இது மேலின் சூத்திரத்திற்கு ஒரு புறனடை கூறுகின்றது.

இ-ள் : ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும் - முற்கூறிய வினைவேறுபடும் பல பொருள் ஒரு சொல், வினையான் வேறுபட நில்லாது பொதுவினை கொண்டு பொதுப்பட நின்றுழியும், வினையான் வேறுபட்டாற் போல் 'இன்னது இது' என வேறுபட நிற்றலும் வழக்கின் அகத்து உண்டு என்றவாறு.

உதாரணம் : 'மா வீழ்ந்தது' என்பது. வீழ்தல் வினை எல்லாவற்றிற்கும் பொதுவேனும், இவ்விடத்து இக்காலத்து இவன் சொல்லுகின்றது இம்மாவினை என ஒன்றனை உணர்த்தி நின்றவாறு காண்க. என்றது, வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல், ஒருகால் வினை வேறுபடும் பல்பொருள் ஒரு சொல்போல நிற்கும் என்றவாறு. *(54)*

## நச்சினார்க்கினியார் உரைவிளக்கம்

**54. ஒன்றுவினை -**

ஆன்கன்றும் பூங்கன்றும் உள்ள இடத்தில் 'கன்று நீர்ஊட்டுக' என்று ஏவப்படின், தேவைப்பட்டதற்கு நீர் ஊட்டுதலை விடுத்துத் தேவைப்படாததற்கு நீர் ஊட்டின், செய்யவேண்டிய செயல் சிதைவுறும் ஆதலின், 'ஆன்கன்று' என்றோ 'பூங்கன்று' என்றோ நன்கு விளங்கக் கூறல் வேண்டும்.

'கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறாஅர்'-

'கன்றுகளை வழியிலே செலுத்தின சிவந்து பொலிவிழந்த தலைமயிரை உடைய இடைச்சிறுவர்' என்ற தொடரில்,வழியிலே செலுத்துதல் என்ற வினையான் ஆன்கன்று என்பது பெறப்படும்.

சேனாவரையர் கருத்தில் 'வினைவேறுபடும் பல பொருள் ஒருசொல்' என்ற ஒன்றே உள்ளது; அதுவே சிறப்புவினை முதலியன கொண்டால், வினை வேறுபடும் பல பொருள் ஒருசொல் எனப்படும்; பொதுவினை கொண்டால், வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் எனப்படும்என்பது உணரப்படுகிறது. அவ்வாறு கொண்டால், வினைவேறுபடாப் பல பொருள் ஒருசொல் என வேறொரு சொல்லே இல்லை என்பது பெறப்பட, 'ஆயிருவகைய' (சொ. 52) என்ற ஆசிரியர் கருத்தொடு மாறுபடும்.

## தெய்வச்சிலையார் உரை

### மேலதற்குப் புறனடை

***52. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்***

மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல், வேற்றுவினை கொண்டு முடிதலே அன்றி, இருபொருட்கும் பொருந்தின ஒரு வினைகொண்டு முடியின், பிறிது ஒரு சொல்லோடு ஒன்றிப் பொருள் தோன்றும் என்றவாறு.

'பிறிது ஒருசொல்' என்பது எஞ்சி நின்றது.

உ-ம் : மா வீழ்ந்தது என்றவழி இன்ன மா என்பது அறியல் ஆகாமையின், யானை முறித்தலால் வீழ்ந்தது என்றவழி மரம் என்பதூஉம், அம்பு படுதலான் வீழ்ந்தது என்றவழி விலங்கு என்பதூஉம் உணர்த்தியவாறு கண்டு கொள்க. (52)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**52. 'ஒன்று வினை'-**

இந்நூற்பாவின் உரை விளக்கமும் எடுத்துக்காட்டும் சற்றுப் புதுமையாக உள்ளன.

## கல்லாடனார் உரை

**மேலதற்குப் புறநடை**

***54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.***

என்-எனின், மேற்சூத்திரத்திற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற்கூறிய வினைவேறுபடூஉம் பல பொருள் ஒரு சொல், வினைய[illegible]ன் வேறுபட நில்லாது பொதுவாகிய வினையொடு பொருந்திப [illegible]பாருள் பொதுமைப்பட நின்றுழியும், மேல் வினையான் [illegible]றுபட[illegible]ழிப்பால இன்னது இது என வேறுபட நிற்றலும் வழக்கு[illegible]த்து உண்டு என்றவாறு.

எ-டு : மா வீழ்ந்தது என்பது வீழ்தல் வினை எல்லா மாவிற்கும் பொதுவே எனினும், 'இவ்விடத்து இக்காலத்து இவன் சொல்லுகிறது இம்மாவினை' என்று உணரநிற்கும் என்றவாறு. என்றது, முன்கூறிய வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லும் ஒரு நிலைமைக்கண் வினை வேறுபடூஉம் பல பொருள் ஒருசொல் போல உணர நிற்கும் என்றவாறு.

அஃதேல் பல பொருள் ஒரு சொல்லினை இரண்டாக ஆக்கியது என்னை? ஒன்றே ஆகற்பாற்று எனின், அவ்வாறு ஒன்றாயதனையே உணர்தல் வேற்றுமை நோக்கி இரண்டாகப் பகுத்தார் என உணர்க. *(54)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**54. 'ஒன்று வினை . . . தோன்றும்.'-**

பல பொருள் ஒரு சொல்லினை இரண்டாக ஆக்கியதன் நோக்கம், ஒன்றாயதனையே வெளிப்படையாக உணர்தல், குறிப்பாக உணர்தல் என்ற உணர்தல் வேற்றுமை நோக்கி இரண்டாகப்பகுத்தல் என்பது.

'மா வீழ்ந்தது' - சொல்லுவான் குறிப்பான் இன்ன மா என்று அறியப்படும் என்பது.

## ஒருவர் உரை

***54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.***

எ-து : மேற்சொன்ன மூன்று வகையானும் அன்றிப் பொதுவினையானும், வினை பொருந்தும் இடத்தில் பொருந்தித் தோன்றுவனவும் உள.

மா வீழ்ந்தது என்றஇடத்து, இன்ன மா என்று அறியல் ஆகாது. வீழ்தல் தொழில் எல்லாவற்றிற்கும் பொதுவே ஆயினும், இவ்விடத்து, இக்காலத்து இவன் சொல்லுகின்றது இம்மாவினை என ஒன்றினை உணர்த்தி நின்றவாறு காண்க.

இதன் கருத்து : வினை வேறுபடும் பலபொருள் ஒரு சொல், ஒருகால் வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் போலவும் நிற்கும் என்பது. *(54)*

## சாத்திரியார் உரை

**54. 'ஒன்றுவினை . . . இயலும்.'-**

சேனாவரையரை மறுக்கும் நச்சினார்க்கினியர் வினை வேறுபடாப் பலபொருள் ஒரு சொற்குத் தனியே வேறு உதாரணம் காட்டவேண்டும். காட்டாது அவர்கூறிய உதாரணத்தையே காட்டுவது பொருந்துமா என்பது ஆராயத் தக்கது. (நச்சினார்க்கினியர் காட்டும் உதாரணம் வேறு என்பதை நோக்குக.)

## பாலசுந்தரனார் உரை

**54. 'ஒன்றுவினை . . . இயலும்.'**

ஒன்றுவினை - பொதுவினை.

அவையாவன - வளர்ந்தது, வீழ்ந்தது, இனிது, பெரிது என்றாற்போல வருவன.

கிளந்து கூறுதலாவது - இன்னது என எடுத்து விளங்கக் கூறுதல்.

(எ-டு.) மரமா வளர்ந்தது, பரிமா வளர்ந்தது, முல்லைக்கொடி அசைந்தது, மீன்கொடி அசைந்தது எனவரும்.

பறவாக் கொக்கு, பாயா வேங்கை, பூவா வேங்கை எனச் சிறப்பு வினையை மறுத்துக் கூறுதல் கிளந்து கூறலாய் அடங்கும் என்க.

## இளம்பூரணர் உரை

### வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்

***55. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.***

எ . . . ன், வினை வேறுபடாஅப் பல பொருள் ஒருசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினை வேறுபடாஅப் பல பொருள் ஒரு சொல்லை ஆராயுமிடத்து இன்னதென்று அறியக் கிளந்தே சொல்லுக என்றவாறு.

உதாரணம் : ஆன் கன்று நீர் ஊட்டுக எனவரும்.

நினைதல் என்பது ஆராய்தல். ஆராயுமிடத்துக் கிளந்து கூறுக என, ஆராய்ச்சி இல்லாத இடத்தாயின் கிளவாதே கூற அமையும் என்பது அமையும். ஆராய்ச்சியுடைய நிலம் என்பது வருநிலம் யாதோ வெனின் கன்று நீரூட்டுக என்றவிடத்து, ஆன்கன்றும், எருமைக்கன்றும், பூங்கன்று மெனப் பலவும் ஆங்கு உளவாயின் அவன் சொன்ன கன்று நிற்பப் பிறிதொரு கன்று நீரூட்டல் வழுவாம். அதனான் இன்னுழி இன்ன கன்று என்று கிளந்து சொல்லுக. அல்லாக்கால், இன்ன கன்று என்று கிளவாதே சொல்ல அமையும். மேல்சூத்திரத்தின் துணிபும் இதுவே.

வேறுபடு வினையும் இனமும் சார்பும் வேண்டாமை உணர்வுழியாயின் அவை இன்றியும் அமையும் என்பது. *(55)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**55. 'வினைவேறுபடாஅ' -**

வருநிலம் - எல்லா உயிரினங்களும் வளர்தற்கு ஏற்ற செழிப்பான நிலம். வினை, இனம், சார்பு இவற்றை வேண்டாமல், கன்று என்பது இன்னது என்று தெளிவாக்க, ஆன்கன்று, பூங்கன்று என ஒரு சொல்லை முன் அடையாகச் சேர்த்தால் பொருள் புலனாகுமிடத்து, வினை இனம் சார்பு இவை தேவைப்படமாட்டா.

## நச்சினார்க்கினியர் உரை

### வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்

***55. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்***
***நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.***

இது நிறுத்தமுறையானே, வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்- வினையான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்; நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும் - ஆராயுங்காலத்து, இன்னது இது எனக் கிளக்கப்பட்டு அவ்வாராய்ச்சி உடைய இடத்து நடக்கும் என்றவாறு.

உதாரணம் : 'கன்று நீர் ஊட்டுக'

என்றவழிக் கேட்டான் இன்ன கன்று என்று அறியவாராதவழி, 'ஆன்கன்று', 'பூங்கன்று' என்று கிளந்தே சொல்லுக என்றவாறு.

'நினையுங்காலை' என்றதனான் கருமச்சிதைவு உள்வழியே கிளந்து கூறுக என்பது கொள்ளுக.

'கன்று ஆற்றுப் படுத்த புன்தலைச் சிறாஅர்' (குறுந். 241)

என்றவழிக் கருமச்சிதைவு இன்மையின் கிளத்தல் வேண்டா ஆயினவாறு காண்க.

அன்றி,

'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்'

என ஒரு சூத்திரமாக்கி, 'வேறுபடாத வினை கொண்டவழி வேறுபடாது தோன்றும் வினை வேறுபடாஅப் பலபொருள் ஒருசொல்' என்று பொருள்கூறி, வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லாகிய மா என்பதுதானே, 'வீழ்ந்தது' என்னும் பொதுவினை கொண்டவழி, வினை வேறுபடாததாய் நின்றதற்கு 'மாமரம் வீழ்ந்தது' என்று கிளந்து கூறுக என்றார் சேனாவரையர். அங்ஙனம் பொருள் கூறின், 'வினை வேறுபடாஅப் பலபொருள் ஒரு சொல்' என வேறொரு சொல் இன்றி, 'ஆஇரு வகைய' (52) என்பதனொடு மாறுபடும் என மறுக்க. (55)

## தெய்வச்சிலையார் உரை

### வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்

*53. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்*
*நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.*

இது வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினை வேறுபடாத பல பொருள் ஒருசொல் பொருள் உணருங்கால் எடுத்துக்கூறல் வேண்டும் என்றவாறு.

உ-ம் : சேவல், பெடை என்பன வினையால் வேறு படாமையான் அன்னச்சேவல், குயில்சேவல், அன்னப் பெடை, குயில்பெடை என எடுத்துக்கூறப் பொருள் விளங்கினவாறு கண்டுகொள்க. (53)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**53. 'வினை வேறுபடாஅ'-**

இதன் எடுத்துக்காட்டுக்களும் சற்றுப் புதியன.

## கல்லாடனார் உரை

### வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்

*55. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்*
*நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.*

என்-எனின், வினை வேறுபடாப் பல பொருள் ஒருசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினையினான் வேறுபடாத பல பொருள் ஒருசொல், ஆராயும் காலத்து இன்னது இது எனக் கிளக்கப் பட்ட ஆராய்ச்சியை உடைய இடத்து நடக்கும் எ-று.

எ-டு : 'கன்று நீர் ஊட்டுக' என்புழிக் கேட்டான், இன்ன கன்று என்பது அறியான்ஆமே எனின், ஆன்கன்று, எருமைக்கன்று, பூங்கன்று எனக் கிளந்து சொல்லுக.

'நினையுங் காலை' என்றதனான் கிளவாது கூறினால், கருமச் சிதைவு உண்டு எனில் கிளந்து கூறுக, அல்லுழி வேண்டியவாறு கூறுக என்பது பெறப்பட்டது. 'கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறார்' (குறுந்-241) என்புழிக் கருமம் சிதைந்தது என்பது இன்மையின் கிளவாது சொல்லவும் அமைந்தது என்பது.

எனவே பல பொருள் ஒரு சொல் வேறுபடு வினையான் உணரப்பட்டு நிற்றலும், வேறுபடு வினை இன்றிப் பொது வினையான் உணரப்பட்டு நிற்றலும், பொது வினையால் கருமச்சிதைவு உள்வழிக் கிளந்து சொல்லப் பட்டு நிற்றலும், கருமச்சிதைவு இல்வழிக் கிளவாது பொதுவினையான் சொல்லப்பட்டு நிற்றலும் என நான்கு பகுதிப்பட்டது என உணர்க. இச்சூத்திரங்களால் கூறியது, பல பொருள் ஒரு சொல் வினைபற்றிப் பிறக்கும் மரபு இலக்கணப் பாகுபாடு என உணர்க. (55)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**55.'வினைவேறு . . இயலும்.'-**

பல பொருள் ஒரு சொல்லின் நான்கு வகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

## ஒருவர் உரை

***55. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்***
***நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.***

எ-து : வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் ஆராயும் காலத்து இஃது எனக் கிளக்கப்பட்ட ஆராய்ச்சி உடைய இடத்து நடக்கும்.

எ-டு : பல கன்று ஓர் இடத்து உள்வழிக் 'கன்று நீர் ஊட்டுக' என்றக்கால், எல்லாவற்றிற்கும் நீர் ஊட்டும் வினை பொது ஆகலான், 'கன்று நீர் ஊட்டுக' என்று பொதுவாகச் சொல்லாது, ஆன்கன்றை நீர் ஊட்டுக, எருமைக்கன்றை நீர் ஊட்டுக எனக் கிளந்து சொல்லுக.

மரக்கன்று பல நின்றுழியும், இன்ன கன்றுக்கு நீர் ஊட்டுக எனக் கிளந்து கூறுக. 'நினையுங்காலை' என்றதனால், ஆராய்ச்சி இல்லாத இடத்து கிளவாது சொல்லுக.

எ-டு : 'கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறாஅர்' (குறுந்-241) எனக் கிளவாது கூறியவாறு காண்க. *(55)*

## இளம்பூரணர் உரை

### குறித்தோன் கூற்றம் பற்றிய மரபு

***56. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.***

எ . . . ன், இதுவும் மரபுவழூக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : தான் ஒரு பொருளைச் சொல்லக் கருதுமேல், அதனை இற்று என்று தெரித்துச் சொல்லுக என்றவாறு.

உலற்றல் திறமின்றிப் பயின்றார் ஒரு சான்றார் மயிர் நீட்டி உலற்றி நின்றாரைக் கண்டு, ஒருவன், 'எம்பெருமான்! உலற்றி நின்றீரால்' என்றக்கால், வாளாதே 'உலற்றினேன்' என்னற்க; இது காரணத்தான் உலற்றினேன் என்க. இது தனக்கு உற்றது உரைத்தது. பிறவும் அன்ன.

இது செப்பு வழூவற்க என்று காத்தவாறு என்ப ஒருதிறத்தார்.

இனித் தெரித்துச் சொல்லாக்கால் வழூவே ஆயினும் அமைக எனக் காத்தவாறு.

இனி ஒரு கருத்து : உலகினில் ஒப்ப முடிந்த பொருளை ஒருவன் ஒவ்வாமை சொல்லுமே எனின், இது காரணத்தான் ஒவ்வாமை நோக்கிச் சொல்லினேன் என்று தெரித்துச் சொல்லுக என்றவாறு.

***"பல்லார் தோள்தோய்ந்து வருதலான் பூம்பொய்கை***
***நல்வயல் ஊர!நின் தார்புலால் - புல்எருக்கம்***
***மாசில் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையான்***
***காதற்றாய் நாறும் எமக்கு"***

என வரும். *(56)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**56. 'குறித்தோன் கூற்றம்' -**

*உலற்றல் - ஈரமான தலைமயிரை வெயிலிலோ காற்றிலோ விரித்து, அதன்கண் கோத்திருந்த நீரை உலரச்செய்தல்.*

*இந்நூற்பா செப்பு வழுவற்க எனக் காத்தவாறு என்பர் ஒரு சாரார். தெரித்துச் சொல்லாக்கால் வழுவே ஆயினும் அமைக எனக் காத்தவாறு என்ற கருத்துக்கு எடுத்துக்காட்டு இல்லை. சேனாவரையர் குறிப்பிடும் 'ஒல்லேம் குவளைப் புலாஅல்; மகன்மார்பின், புல்எருக்கங் கண்ணி நறிது' என்பது எடுத்துக்காட்டாகும்.*

*ஒவ்வாமை சொல்லுதல் - பொருத்தம் இல்லாத வகையில் சொல்லுதல்.*

***'பல்லார்தோள்'*** *: ''பூக்கள் நிறைந்த இயற்கைக் குளங்களையும் நல்ல வயல்களையும் உடைய ஊர்த் தலைவனே! நீ பரத்தையர் பலருடைய தோள்களையும் தழுவி வருதலான், உன் மாலை புலால் நாற்றம் நாறுகிறது. அற்பமான எருக்கம்பூவினை, மனத்துக்கண் மாசு அற்றவனாய் மணிகள் பதிக்கப் பட்ட அணிகலன்களை அணிந்துள்ள எம்புதல்வன் சூடியிருப்பதனான், எருக்கம்பூ எம்மாலே விரும்பப்படுவதாய் நறுமணம் கமழ்கிறது.''*

*'உலற்றல் திறமின்றி' என்று கூறப்பட்ட எடுத்துக்காட்டு அப்படியே நேமிநாதம் சொல்லதிகாரம் 10ஆம் நூற்பா உரையுள் எடுத்தாளப்பட்டுள்ளது.*

### சேனாவரையர் உரை

### தெரித்து மொழிதல் வேண்டும் இடன்

***55. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.***

*(இ-ள்) :* ஒரு பொருள் வேறுபாடு குறித்தோன், அஃது ஆற்றல் முதலியன வற்றால் விளங்காதாயின், அதனைத் தெரித்துச் சொல்லுக என்றவாறு.

எ-டு : ‘அரிதாரச் சாந்தம் கலந்தது போல
உருகெழத் தோன்றி வருமே - முருகு உறழும்
அன்பன் மலைப்பெய்த நீர்’

எனவும்,

‘வாரு மதுச்சோலை வண்டு உதிர்த்த நாண்மலரான்
நாறு மருவி நளிமலை நன்னாட’

எனவும் வரும்.

‘கலந்தது போல வருமே இலங்கு அருவி அன்பன் மலைப் பெய்த நீர்’ எனவும், ‘நாறு மருவி நளிமலை நன்னாட’ எனவும் தெரித்து மொழியாதவழிக் குறித்தது விளங்காது வழுப்படுதலின் மரபுவழுக் காத்தவாறு. வட நூலார் இதனை நேயம் என்ப.

‘ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை’ (அகம்-68) என்புழி, இன்னதனை என்று தெரித்து மொழியாமையின் வழுவாம்பிற எனின், உவமை என்னும் அலங்காரம் ஆயின்அன்றே இன்ன தொன்றனை எனல் வேண்டுவது? செயலை அம் தளிரினது செய்யாத நிறத்தைச் செய்தது போலக் கூறும் கருத்தினன் ஆகலின் பிறிதோர் அலங்காரமாம். அதனான் அது கடா அன்று என்பது.

‘படுத்து வைத்தன்ன பாறை மருங்கின்
எடுத்து நிறுத்தன்ன இட்டருஞ் சிறுநெறி (மலைபடு-15)

என இன்னோரன்ன எல்லாம் அவ்வலங்காரம் பற்றி வந்தன.

‘ஒல்லேங் குவளைப் புலாஅல்; மகன் மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது’

என்புழிக் குவளை புலால் நாறுதற்கும், எருக்கங்கண்ணி நறிது ஆதற்கும் காரணம் கூறாமையின் வழுவாம்பிற எனின், புதல்வற் பயந்த பூங்குழல் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழவனொடு புலந்து உரைக்கின்றாள் ஆகலின், குவளை புலால் நாறுதற்கு அவன் தவற்றொடு கூடிய அவள் காதல் காரணம் என்பதூஉம், எருக்கங்கண்ணி நறிது ஆதற்கு மகிழ்நன் செய்த துனி கூர் வெப்பம் தன் முகிழ்நகை முகத்தால் தணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக்கு ஒருகால் பெருகும் அன்பு காரணம் என்பதூஉம் பெறப்படுதலின், வழு ஆகா என்பது.

*மீக்கூற்றம் என்புழிப் போலக் கூற்றுக் 'கூற்றம்' என நின்றது.* *(55)*

## சேனாவரையர் உரைவிளக்கம்

**55. குறித்தோன் . . . கிளவி**

***அரிதார*** - அரிதாரத்துடன் சந்தனத்தையும் கலந்த குழம்பு போன்ற நிறம் தன்னிடம் புலப்படுமாறு, முருகனை ஒத்த அன்புடைய நம் தலைவன் மலையில் பெய்த மழைநீர் ஓடிவருகிறது.

***வாருமது*** - நிறைந்த தேனை உடையவாய் சோலைகளில் வண்டுகள் தேனை நுகர்ந்து துறந்த புதுப்பூக்கள் தம்மிடத்து உதிர்ந்ததனால் நறுமணம் கமழும் அருவிகள் செறிந்த மலைப்பகுதியில் அமைந்த சிறந்த மலைநாடனே!

***ஊட்டி*** - செயற்கையாக நிறம் ஊட்டப்பட்டனபோல இயற்கையாகவே சிவந்த ஒள்ளிய தளிர்களை உடைய அசோகமரம்.

***படுத்து*** - படுத்து வைத்தாற்போன்ற ஒத்த நிலமாகிய கற்பாறையின் பக்கத்தில், நிலத்தே கிடக்கின்ற வழியை எடுத்து நிறுத்தினாற் போன்ற குறுகலான அரிய சிறிய வழி.

**ஒல்லேம்** - "தலைவ ! நீ அணிந்துள்ள குவளை மலர்மாலை, நீ பரத்தையரைத் தோய்ந்ததனால் அவர்கள் உடம்பின் தொடர்பால் புலால் நாற்றம் வீசுதலின் அக்குவளை மலர் மாலையை யாம் விரும்பேம். எம்மகன் தன் மார்பில் விளையாட்டிற்காக அற்பமான எருக்கம் பூமாலையை அணிந்திருந்தாலும் எமக்கு வஞ்சனையற்ற எம்மகன் அணிந்திருப்பதனால் அம்மாலை நறுமணம் கமழ்கிறது."

துனி கூர்வெப்பம் - வெகுளி மிகுந்ததனால் ஏற்பட்ட உள்ளத்துச் சூடு. தான் குறித்த பொருளை விளக்குதற்குரிய சொற்களை அமைக்காமல் ஒரு செய்தியைக் குறிப்பிட முற்படுவது நேயம் என்னும் குற்றம்.

## நச்சினார்க்கினியர் உரை

### மரபுவழுக் காத்தல்

**56. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.**

இது மரபுவழுக் காக்கின்றது.

இ-ள் : குறித்தோன் கூற்றம் - ஒரு பொருள் வேறுபடக் குறித்தோன் கூற்று, ஆற்றல் முதலியவற்றான் விளங்காதாயின்; தெரித்துமொழி கிளவி -அப்பொருளைத் தெரிவித்துச் சொல்லும் சொல்லாகக் கூறுக என்றவாறு.

உதாரணம் : 'அரிதாரச் சாந்தம் கலந்தது போல
உருகெழத் தோன்றி வருமே - முருகு உறழும்
அன்பன் மலைப்பெய்த நீர்'

எனத் தெரித்து மொழிக. 'கலந்தது போல வருமே இலங்கு அருவி, அன்பன் மலைப் பெய்த நீர்' என்று தெரித்து மொழியாக்கால் வழுவாம்.

'ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை' (அகநா. 68 ) என்றது, ஊட்டாததனை ஊட்டியது போலக் கூறலின், வேறுஓர் உவம இலக்கணமாம்.

'பல்லார்தோள் தோய்ந்து வருதலான் பாய்புனல்
நல்வயல் ஊர! நின் தார்புலால் - புல்எருக்கம்
மாசுஇல் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையான்
காதற்றுஆய் நாறும் எமக்கு.'

இதுவும் தெரித்து மொழிந்தது.

'ஒல்லேம் குவளைப் புலாஅல்; மகன்மார்பின்
புல்எருக்கங் கண்ணி நறிது'

என்பது தெரித்து மொழியாதது ஆயிற்று; ஆயினும், தலைவன் தவறும் புதல்வன் மேல் அன்பும் காரணமாகக் கூறலின், வழுவன்று என்றலும் ஒன்று. *(56)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

### 56. குறித்தோன் கூற்றம் -

'**அரிதார**' - முருகனை ஒத்த தலைவனுடைய மலையில் பெய்த மழைநீர், அரிதாரத்தொடு சந்தனத்தைக் கலந்து கரைத்தாற் போன்ற நிறத்தை மேற்கொண்டு ஓடிவருகிறது.

'ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை' - அகநா. 68

'செயற்கையாக நிறம் ஊட்டினாற்போல இயற்கையாகவே நிறத்தைக் கொண்ட ஒளிவீசும் தளிர்களை உடைய அசோகமரம்' - இங்ஙனம் கூறுதல் வேறுபட வந்த உவமத்தோற்றத்துள் ஒன்று.

'**பல்லார்**' - "பரத்தையர் பலருடைய தோள்களையும் தழுவி வருவதால், தேவைப்பட்ட நீர் பாய்வதனால் வளமான வயல்களை உடைய மருதநிலத் தலைவனே! உன்மாலை புலால் நாற்றம் வீசுகிறது. மணிகள் பதித்த அணி கலன்களை அணிந்தவனாகிய, எந்தவிதக்குற்றமும் இல்லாத எம் புதல்வன் அணிந்திருப்பதனால், அற்பமான எருக்கம்பூவும் எம்மால் விரும்பப்படுவதாய் எமக்கு நறுமணம் வீசும் மலராக உள்ளது."

**'ஒல்லேம்'** - "நீ அணிந்துள்ள குவளைப்பூமாலை புலால் நாற்றம் வீசுவதனால் அதனை யாம் ஏற்றுக்கொள்ள மாட்டேம். எம்புதல்வன் தன் மார்பில் அணிந்திருப்பது அற்பமான எருக்கம்பூ மாலை ஆயினும், அஃது எமக்கு நறுமணம் வீசுகிறது." குவளை புலால் நாறுதற்கும், எருக்கங்கண்ணி நறிதாகற்கும் காரணம் வெளிப்படையாகக் கூறப்படவில்லையாயினும், இக்கிளவி யாரால் யாரிடம் எந்தச் சந்தருப்பத்தில் கூறப்பட்டது என்பதனை உய்த்துநோக்கக் காரணம் குறிப்பான் புலப்படும்.

**உய்த்தலில் பொருண்மை** என்ற பொதுவணி இது.

'கருதிய பொருளினைத் தெரிவுற விரித்தற்கு
உரியசொல் உடையது உய்த்தலில் பொருண்மை.'

இப்பொருண்மையில் வைதருப்ப நெறியினர் 'பல்லார் தோள்' என்பதனைக் கொள்வர். கௌடநெறியிளர் 'ஒல்லேம் குவளை ' என்பதனைக் கொள்வர். இச்செய்தி இலக்கண விளக்க அணியியலில் காணப்படுகிறது.

## தெய்வச்சிலையார் உரை

### குறிப்பினால் அறியப்படும் ஒருசொல்

**54. *குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.***

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தெரிந்து வேறுபடுக்க வரும் சொல்லைக் கிளந்து உரைத்தலே அன்றி, குறித்தோன் கூற்றமும் ஆம் எ-று.

உம்மும் ஆமும் எஞ்சிநின்றன.

உ-ம் : 'நிவந்து ஓங்கு உயர்கொடிச் சேவலோய்' (பரி. 3 : 18) என்றவழிச் சொல்லுவான் குறிப்பு மாயவனை நோக்கலின் கருடன் ஆயிற்று. 'சேவல்அம் கொடியோன் காப்ப' (குறுந்.1) என்றவழிச் சொல்லுவான் குறிப்பு முருக வேளை நோக்குதலின் கோழி ஆயிற்று. பிறவும் அன்ன. (54)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**54. 'குறித்தோன் கூற்றம்'-**

தெரித்துமொழி கிளவி குறித்தோன் கூற்றமும் ஆம் - என்று மொழி மாற்றிப் பொருள் செய்யப்பட்டுள்ளது. அஃதாவது சொல்லுவான் குறிப்பினாலேயே அறியப்படும் என்பது.

***'நிவந்து'*** -மிக உயரத்தில் பறக்கும் உயர்ந்த கொடியில் எழுதப்பட்ட கருடச் சேவலை உடையோய்.

***சேவலங்*** - கோழிச்சேவற்கொடியை உடைய முருகன் பாதுகாத்தலான்.

முன்பின் வரும் பாடல் அடிகளை நோக்கிப் பொருள் செய்தல்வேண்டும். கூறுபவனுடைய குறிப்பு முன் பின் அடிகள் வாயிலாக வெளிப்படும்.

### கல்லாடனார் உரை

### மேலதற்குப் புறனடை

***56. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.***

என்-எனின், இதுவும் ஒரு செயற்கைப் பொருளின்மேல் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : உலகத்து ஒப்ப முடிந்த பொருளை ஒவ்வாமல் சொல்லக் குறித்தவன் சொல்லும் சொல், அதற்கு ஒரு காரணம் கூறிக் கூறும் சொல்லாய் இருக்கும் எ-று.

எ-டு : 'பல்லார்தோள் தோய்ந்து வருதலான் பாய்புனல்
நல்வயல் ஊரநின் தார்புலால் - புல்எருக்கம்
மாசுஇல் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையால்
காதற்றுஆய் நாறும் எமக்கு.'

இதனால் சொல்லியது, ஓர் இயற்கைப் பொருள் ஓர் இயற்கை ஆக ஒரு காரணம் கருதிக் கூறும் இடத்துத் தான் கருதிய காரணத்தினை விளங்கச் சொல்லுக என ஒரு மரபு ஆராய்ச்சி கூறியவாறு. இதுவும் ஒரு மரபு வழு அமைதிபோலும். *(56)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**56. 'குறித்தோன் . . . கிளவி.'-**

குறித்தோன் - உலகத்தாரான் வேற்றுக்கருத்து இன்றி ஒரே கருத்தாக முடிந்த செய்தியை உலகியல் முடிபுக்கு மாறாகக் குறிப்பிடக் கருதியவன்.

குவளை புலால் நாறுதற்கும் எருக்கங்கண்ணி மணத்தற்கும் காரணம் கூறப்பட்டது.

## ஒருவர் உரை

***56. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.***

எ-து. : தான் ஒரு பொருளைக் கருதிச் சொல்லுமேல் அதனை இற்று என்று தெரித்துச் சொல்லுக.

எ-டு : 'அரிதாரச் சாந்தம் கலந்தது போல
உருகெழத் தோன்றி வருமே - முருகு உறழும்
அன்பன் மலைப்பெய்த நீர்' எனத் தெரித்துமொழி
காண்க.

'கலந்தது போல வருமே இலங்கு அருவி
அன்பன் மலைப்பெய்த நீர்' என்று கூறற்க.

அன்றியும்,

'பல்லார் தோள்தோய்ந்து வருதலான் பூம்பொய்கை
நல்வயல் ஊர!நின் தார்புலால் - புல்எருக்கம்
மாசில் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையான்
காதற்றாய் நாறும் எமக்கு'
எனவும் தெரித்து மொழிந்தவாறு.

ஒல்லேம் குவளைப் புலாஅல் மகன்மார்பின்
புல்எருக்கங் கண்ணி நறிது'
என்று கூறற்க; கூறில் வழுவாம். (56)

### ஒருவர் உரைவிளக்கம்

**56. 'குறித்தோன் . . . கிளவி.'**

'ஒல்லேம் குவளைப் புலால் மகன்மார்பின்
புல்லெருக்கங் கண்ணி நறிது'

இங்ஙனம் கூறுதல் கௌட நெறியார்க்கு உரியதே என்று இலக்கண விளக்கம் உய்த்தலில் பொருண்மை என்ற பொது அணி விளக்கத்தில் கூறும்.

### இளம்பூரணர் உரை

### திணைவழுக் காத்தல்

57. ***குடிமை ஆண்மை இளமை மூப்பே***
***அடிமை வன்மை விருந்தே குழுவே***
***பெண்மை அரசே மகவே குழவி***
***தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி***
***காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்று***
***ஆ-அறு மூன்றும் உளப்படத் தொகைஇ***
***அன்ன பிறவும் அவற்றொடு சிவணி***
***முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்***
***உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்***
***அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.***

எ . . . ன், திணைவழூஉக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : குடிமை ஆண்மைத் தொடக்கத்தனவும், பிறவும் இந்நிகரன எல்லாம், உயர்திணை அல்லவும் உயர்திணைப் பொருளைப் பற்றுக்கோடாக நிகழ்தலின், உயர்திணைப் பொருளைப் போல வழங்கல் வேண்டுமே எனினும், அஃறிணையைச் சொல்லியாங்குச் சொல்லுக என்றவாறு.

உதாரணம் :

1. அவர்க்குக் குடிமை நன்று
2. அவர்க்கு ஆண்மை நன்று
3. அவர்க்கு இளமை நன்று
4. அவர்க்கு மூப்பு நன்று
5. அவர்க்கு அடிமை நன்று
6. அரசன் வன்மை நன்று
7. விருந்து வந்தது
8. அக்குழு நன்று
9. பெண்மை அடங்கிற்று
10. அரசு நிலைத்தது
11. மக நலிந்தது
12. குழவி அழுதது
13. அலி வந்தது - இது தன்மைதிரிபெயர்
14. குருடு வந்தது - இஃது உறுப்பின் கிளவி
15. என் காதல் வந்தது - காதல்
16. என் யானை வந்தது - சிறப்பு
17. கெழீஇயிலி வந்தது - இது செறற்சொல்
18. பெருவிறல் வந்தது - இது விறற்சொல்

எனவரும்.

பேடி வந்தது, குரிசில் வந்தது-என்னும் தொடக்கத்தன கொள்க.

இதுவும் ஒருசார் ஆசிரியர் உரைப்பது.

இனிக் குடிமை ஆண்மை என்றித் தொடக்கத்தன ஒருவன், ஒருத்தி, பலர் என்னும் மூன்று பாற்கும் பொதுவாய்ப் பின் முடியுங்கால் அஃறிணை முடிபிற்றாக என்பது.

வன்மை என்பது மூன்று பாற்கும் பொதுவாய் நிற்பது யாண்டுப் பெறுதுமோ வெனின், வழக்குப் பெற்றுழிக் கொள்க. (57)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**57. 'குடிமை ஆண்மை' -**

குடிமை ஆண்மை முதலியன உயர்திணைப் பொருளைப்போல வழங்கப்படினும் அஃறிணை முடிபே பெறும். *'அரசு விழைதிருவின்'* (சிலப். 2:1) என்பதற்கு இந்த நூற்பாவை அடியார்க்குநல்லார் மேற்கோளாகச் சுட்டுகிறார். இவை ஆண்பால், பெண்பால், பலர்பால் என்ற முப்பாற்கும் பொதுவாய் வரினும் அஃறிணை முடிவே பெறும்.

வன்மை என்பது ஒரு தொழிலைத் திறம்படச் செய்யும் ஆற்றல். அந்த ஆற்றல் ஆண்களிடமும், பெண்களிடமும், மாடு முதலிய விலங்குகளிடமும் உலகியலில் காணப்படுகிறது.

### சேனாவரையர் உரை

### திணைக்குப் புறனடை

***56. குடிமை ஆண்மை இளமை மூப்பே***
***அடிமை வன்மை விருந்தே குழுவே***
***பெண்மை அரசே மகவே குழவி***
***தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி***
***காதல் சிறப்பே செறல்சொல் விறல்சொல்என்(று)***
***ஆ அறு மூன்றும் உளப்பட தொகைஇ***
***அன்ன பிறவும் அவற்றொடு சிவணி***
***முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்***
***உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்***
***அ:றிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.***

*(இ-ள்)* : குடிமை முதலாக விறல்சொல் ஈறுஆகச் சொல்லப்பட்ட பதினெட்டும் உளப்பட அன்னபிறவும் அவற்றொடு பொருந்தித் தொக்கு முன்னத்தின் உணரும் கிளவிகள் எல்லாம், உயர்திணைப் பொருள்மேல் நின்றன ஆயினும், அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றவழிப் போல, அஃறிணை முடிபே கொள்ளும் என்றவாறு.

*(எ-டு) :* குடிமை நன்று, குடிமை தீது; ஆண்மை நன்று, ஆண்மை தீது என வரும். ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறு பொருந்தும் வினை தலைப்பெய்க.

தன்மை திரி பெயர் அலி. இதனோடு ஒரு பொருட் கிளவியாய் வருவனவும் கொள்க.

உறுப்பின் கிளவி, குருடு முடம் என்னும் தொடக்கத்தன. காதற்சொல், பாவை யானை என ஒப்புமை கருதாது காதல் பற்றி வருவன. சிறப்புச் சொல், கண் போலச் சிறந்தானைக் கண் என்றலும், உயிர்போலச் சிறந்தானை உயிர் என்றலும் என இவை முதலாயின.

செறல்சொல், செறுதலைப் புலப்படுக்கும் பொறி யறை, கெழீஇயிலி என்னும் தொடக்கத்தன.

விறல்சொல், விறலை உணர்த்தும் பெருவிறல் அருந்திறல் என்னும் தொடக்கத்தன. தன்மை திரிபெயர் முதலாயின பொருள்வகையான் ஆறாக அடக்கப்பட்டன.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின் கிளவி, சிறப்புச் சொல், விறல் சொல் என்பன உயர்திணைக்கண் ஆகுபெயராய் அல்லது வாரா; அல்லன இருதிணைக்கண்ணும் ஒத்த உரிமைய எனக் கொள்க. காதல் பற்றிச் சிறுவனை யானை என்றலும் ஆகுபெயராம் அன்றோ எனின், யாதானும் ஓர் இயைபு பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆயது ஆகுபெயர் ஆம்; இயைபு கருதாது காதல் முதலாயினவற்றான் யானை என்றவழி ஆகுபெயருள் அடங்கா என்பது.

சிறுவனை யானை என்றலும், ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆதல் ஒப்புமையான் ஆகுபெயர் என்பாரும் உளர்.

சொல்லான் அன்றித் திணைவேறுபாடு சொல்லுவான் குறிப்பொடு படுத்து உணரப்படுதலின், 'முன்னத்தின் உணரும் கிளவி' என்றார்.

'அஃறிணை முடிபின' என்னாது 'அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கு இயலும்' எனப் பொதுப்படக் கூறிய அதனான், குடிமை நன்று, குடிமை நல்ல; அடிமை நன்று, அடிமை நல்ல-என ஏற்புழி அஃறிணை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலும் கொள்ளப்படும்.

அன்ன பிறவும் என்றதனான், வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு என்னும் தொடக்கத்தனவும் கொள்க.

குடிமை முதலியன உயர்திணை உணர்த்தும்வழி அஃறிணையான் முடிதல் வழு ஆயினும் அமைக எனத் திணைவழு அமைத்தவாறு. (56)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**56. குடிமை . . . இயலும்-**

பொறியறை - நல்வினை இல்லாதவன், இல்லாதவள்.
கெழீஇயிலி - பிறரொடு பழகுதற்குத் தகுதியில்லாதவன், இல்லாதவள்.
குடிமை முதல் குழவி ஈறாகிய பன்னிரண்டும் சொல்பற்றி ஓதப்பட்டன.
தன்மை திரிபெயர் முதல் விறற்சொல் ஈறாகிய ஆறும் பொருள்பற்றி ஓதப்பட்டன.

'சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப' - பொ. 279

எனச் சிறப்பு முதலிய நான்கும் இடமாக உவமை பிறக்கும் ஆதலின், யானை முதலியன உவம ஆகுபெயர் என்ற கருத்து சேனாவரையரான் மறுக்கப்பட வில்லை.

வேந்து முதலாயின உயர்திணைப் பொருளைக் குறித்தாலும் அவை சொல் அமைப்பில் அஃறிணையே யாதலின் அஃறிணை முடிபே கொள்ளும்.

புரோசு- புரோகிதன். 'மடியா உள்ளமொடு புரோசு மயக்கி' எனப் பதிற்றுப்பத்து ஏழாம் பத்தின் பதிகத்தில் இச்சொல் வந்துள்ளது.

சொல்லொடு பொருட்கு உள்ள ஒற்றுமை பற்றித் தன்மை திரிபொருள் - 'தன்மை திரிபெயர்' எனப்பட்டது.

### நச்சினார்க்கினியர் உரை

#### சில உயர்திணைப்பெயர் அஃறிணை முடிபு கோடல்

*57. குடிமை ஆண்மை இளமை மூப்பே*
*அடிமை வன்மை விருந்தே குழுவே*
*பெண்மை அரசே மகவே குழவி*
*தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி*
*காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்று*
*ஆ-அறு மூன்றும் உளப்படத் தொகைஇ*
*அன்ன பிறவும் அவற்றொடு சிவணி*
*முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்*
*உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்*
*அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.*

இது திணைவழுக் காக்கின்றது.

இ-ள் : குடிமை ஆண்மை இளமை மூப்பே அடிமை வன்மை விருந்தே குழுவே பெண்மை அரசே மகவே குழவி தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி காதல் சிறப்பே செறல்சொல் விறல்சொல் என்று ஆ-அறு மூன்றும் உளப்பட அன்ன பிறவும் அவற்றொடு சிவணித் தொகைஇ - குடிமை முதலாக விறல்சொல் ஈறாகச் சொல்லப்பட்ட அப்பதினெட்டும் உளப்பட அவைபோல்வன பிறவும் அவற்றொடு பொருந்தித் தொக்கு; முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம் - சொல்லுவான் குறிப்பொடுபடுத்து உயர்திணைப் பொருளை உணரப்படும் சொற்கள் எல்லாம்; உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும் - உயர்திணை

இருபாற்கண்ணும் பெரும்பான்மை நிலைபெற்றன ஆயினும்; அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும் - அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றவழிப் போல அஃறிணை முடிபே கொள்ளும் என்றவாறு.

'என்னை உயர்திணைப் பொருள் உணர்த்தியவாறு?' எனின், இக்குடிமை முதலியன எல்லாம் பெரும்பான்மையும் உயர்திணைக்குப் பண்பேயாய் நின்று, அப்பண்பினை உணர்த்தி, அஃறிணையாய் நில்லாது, அப்பண்புச்சொல் தன் பண்பையும் தன்னை உடைய பொருளையும் ஒருங்கு தோற்றுவித்துப் பிரியாது நிற்றலின், உயர்திணைப் பொருளையே உணர்த்தினவாம். இங்ஙனம் நிற்கும் என்று உணர்தல் சொல்லுவான் குறிப்பினான் அன்றி, உயர்திணைப் பொருளின் தீர்ந்து இன்னவாறு நிற்கும் என்று வேறு ஓர் ஆற்றான் உணர்தல் இன்று என்றற்கு 'முன்னத்தின் உணரும்' என்றார். இவற்றுள் விரவுப் பெயராய், அஃறிணைப் பன்மை உணர்த்துவன உளவேனும், அவையும் சொல்லுவான் குறிப்பான், ஒருகால் உயர்திணைப் பண்பே உணர்த்தும் என்று கருதி 'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்' என்றார். உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும் மேல் கூறுபடுத்துதும்.

இனிக் குடிமை ஆண்மை முதலியவற்றை ஆகுபெயர் என்பாரும் உளர். குடிமை என்னும் குணப்பெயர் ஆகுபெயராய்க் குடிமகனை உணர்த்திற்றேல், 'குடிமை நல்லன்' என உயர்திணையான் முடியும்; அன்றிக் 'குடிமை' எனத் தனக்கு உரிய பண்பை உணர்த்திநிற்குமேல், பின்னர் 'அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்' என வேண்டா; தானே அஃறிணையாய் முடியும்.

ஆகவே, ஆகுபெயர் என்றலும் பண்பு உணர்த்தி நிற்கும் என்றலும் பொருந்தாமை உணர்க. இக்குடிமை முதலிய வற்றிற்கு 'நன்று, தீது' என்றும், 'வந்தது, போயிற்று' என்றும் ஏற்ற அஃறிணை வினை கொடுத்து ஒட்டுக.

இனி, இவை உயர்திணைப் பண்பாய் உயர்திணைப் பொருளையும் ஒருங்கு உணர்த்தி நிற்குமாறு :

குடிமை ஆவது குடிப்பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கம். அஃது 'ஒழுக்கம் உடைமை குடிமை' (குறள். 133) என்பதனான் உணர்க. 'மடிமை குடிமைக்கண் தங்கின்' (குறள். 628) என உயர்திணை இருபாலையும் உணர்த்திற்று.

ஆண்மை ஆவது ஆளுந்தன்மை. அஃது 'இருபேர் ஆண்மை செய்த பூசல்' (குறுந். 43) என இருபாலையும் உணர்த்திற்று. இன்னும் 'ஊர் ஆண்மைக்கு ஒத்த படிறு உடைத்து' (கலி. 89) எனவும்,

'வேளாண்மை செய்து விருந்துஓம்பி வெங்களத்து
வாளாண்மை யானும் வலியராய்த் - தாளாண்மை'

எனவும் வரும். இது,

'வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும்
வாளாண் எதிரும் பிரிவி னானும்' (தொ. பொ. கள. 16)

எனவும்,

'உட்கு உடையாள், ஊர்ஆண் இயல்பினாள்' (நாலடி.384)

எனவும் விகாரமாயும் நிற்கும்.

இவ்வாண்மை ஆளும் தன்மையேயன்றி, ஆண்பால் ஆகிய தன்மையும் உணர்த்தும் என்றற்கு,

'ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்' (சொ. 183)

என்று ஆசிரியர் விரவுப்பெயர்க்கண் உடம்பொடுபுணர்த்து ஓதினார். இவ்விரண்டு பண்பும்

'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே'

என்னும் மெய்ப்பாட்டியல் சூத்திரத்தான் (25) தலைவற்கும் தலைவிக்கும் ஒப்ப உரிய என்றே ஓதுகின்றார் ஆதலின், ஈண்டும் இருபாற்கும் ஒப்பவே ஓதினார்.

இனி ஆண்மையை ஆன்வினை என்றும் உரைப்ப. இவ்வாண்மையும், மேற்கூறும் பெண்மையும் உயர்திணை ஆண்பாலையும் பெண்பாலையும் உணர்த்தா என்று கருதி,

'ஆண்பால் எல்லாம் ஆண்எனற்கு உரிய;
பெண்பால் எல்லாம் பெண்எனற்கு உரிய'

என அஃறிணைக்கே ஓதி, அவற்றையே,

'பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே'

எனக் கிளந்து கூறாதவழி உணர்திணையை உணர்த்தும் என்று மரபியலுள் (50, 69) கூறுவர். அன்றியும்,

'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்' (தொ.புறத்.21)

என்றும்,

'பாடாண் பகுதி' (தொ. புறத். 25)

என்றும் பிறாண்டும் ஆண்மை என்னாது 'ஆண்' என்றே சூத்திரம் செய்ததனானும், 'ஆண்மக்கள்' 'பெண்மக்கள்' என்னும் வழக்கானும் உணர்க. இனி ஆண்மையை விரவுப்பெயர் என்றால் முற்காட்டிய உதாரணங்களுக்கும் அஃறிணைப் பெயர்க்கும் விரவுப்பொருள் ஏலாமை உணர்க.

'ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த' (புறநா. 242)

என்பதற்கும் ஆளும் தன்மை தோன்ற என்றே பொருள் உரைத்துக் கொள்க.

இளமை ஆவது காமச்செவ்வி நிகழ்வது ஒருகாலம்.

'இளமை கழிந்த பின்றை வளமை
காமம் தருதலும் இன்றே' (நற். 126)

என உயர்திணை இருபாலும் உணர்த்திற்று.

மூப்பு என்பது 'மூப்புஉடை முதுபதி' (அகநா. 7) என உயர்திணை இருபாலும் உணர்த்திற்று.

இளமையும் மூப்பும் பொருள்மேல் நில்லாது பண்பின்மேல் நிற்பின் அஃறிணையையும் உணர்த்தும்.

அடிமை ஆவது 'அடிமை புகுத்தி விடும்' (குறள். 608) என உயர்திணை இருபாலும் உணர்த்தும்.

வன்மை ஆவது ஒரு தொழிலை வல்லுதல். அது 'சொல் வன்மை நன்று' என உயர்திணை இருபாலும் உணர்த்தும். ஈண்டு வன்மை வலியன்று.

விருந்து ஆவது 'விருந்து எதிர் கோடலும்' (சிலப். 16 : 73) என உயர்திணை இருபாலையும் உணர்த்திற்று.

'ஆங்கவை விருந்துஆற்றிப் பகல்அல்கி' (கலி. 66) என அஃறிணைக்கும் இது வரும்.

குழு என்பது 'குழுவின் பெயர்' (சொ. 167) எனவும்,

'ஐம்பெருங்குழுவும் எண்பேர் ஆயமும்' (சிலப். 5 :157) எனவும் உயர்திணை இருபாலும் உணர்த்தும்.

பெண்மை ஆவது கட்புலன் ஆயது ஓர் அமைதித்தன்மை. அது,

'பெண்மை அடுத்த மகள்என் கிளவி' (சொ. 165)

என்பதனான் உணர்க. இது, மகள் என்பது பெண்பால் உணர்த்தப் 'பெண்மை' என்பதும் பெண்பால் உணர்த்துமேல் கூறியது கூறலாம் ஆதலின், ஆசிரியர்க்கு இதுவே பொருளாயிற்று.

'ஆண்மை அடுத்த மகன்' (சொ. 165) என்பதற்கும் இஃது ஒக்கும். அது 'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்' (சொல். 4) என்பதனானும், 'பிறன் இயலாள், பெண்மை நயவாதவன்' (குறள். 147) என்பதனானும் உணர்க. இப்பெண்மை அமைதித் தன்மையே அன்றிப் பெண்பால் ஆகிய தன்மையும் உணர்த்தும் என்பது கருதி, ஆசிரியர், 'பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்' (சொ. 182) என

விரவுப் பெயர்க்கண் உடம்பொடு புணர்த்து ஓதினார். உயர்திணை ஆண்பாற்கு உரித்து அன்றிப் பெண்பாற்கே வரினும், அதுவும் உயர்திணையே ஆதல் நோக்கி, 'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்' (சொல். 57) என்றார்.

அரசு ஆவது, 'அரசுபடக் கடந்து அட்டு' (கலி. 105) என உயர்திணை ஆண்பால் உணர்த்திற்று.

'பெண் அரசி ஏந்தினள்' (சீவக. 736)
என ஈறு வேறாயவழிப் பெண்பாலும் உணர்த்தும். இஃது

'அரசுஉவா வீழ்ந்த களத்து' (களவழி. 35)
என அஃறிணைக்கும் வரும்.

இனி, மகவும் குழவியும் ஆவன

'குழவியும் மகவும் ஆயிரண்டு அல்லவை
கிழவ அல்ல மக்கட் கண்ணே' (மர. 23)
என அஃறிணைக்கே அன்றி உயர்திணை இருபாற்கும் வரும் என்றார்.

தன்மை திரிபெயர் ஆவது அலி. உறுப்பின் கிளவி ஆவன - குருடு, முடம். இவை இருபாற்கும் ஒக்கும். விரவுப் பெயர்க்காயின் முடவன், முடத்தி - எனவரும்.

காதல் ஆவது 'யானை வந்தது, பாவை வந்தது' என ஒப்பின்றிக் காதல்பற்றி நிற்கும். 'போர் யானை வந்தீக ஈங்கு' (கலி. 86) எனவரும்.

தன்னினம் முடித்தலால் 'தேமலர் அங்கண் திருவே! புகுதக' (சிந்.2121) என உவப்பும் கொள்க.

சிறப்பு ஆவது கண்போலச் சிறந்தாரைக் 'கண்' என்றலும், உயிர்போலச் சிறந்தாரை 'உயிர் என்றலும் ஆம். அஃது,

'ஆல்அமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வரும்என் உயிர்' *(கலி. 81)*

எனவரும்.

செறற்சொல் ஆவன செறுதலைப் புலப்படுக்கும் 'பொறியறை' கெழீஇயிலி' 'போசீத்தை' என்றாற் போல்வன.

'தன் இனம் முடித்த' லான்,

'ஏவவும் செய்கலான்; தான்தேறான்; அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய்' *(குறள் 848)*

என இழிபும் கொள்க.

விறற்சொல் என்பன விறலை உணர்த்தும் 'பெருவிறல்' *(கலி. 81)* 'அருந்திறல்' *(சிலப். 13 : 65)* போல்வன.

'அன்னபிறவும்' என்பதனான், வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு (பதிற். 7 பதிகம்) என ஒருபாற்கு உரிய காட்டலும் ஒன்று. இருபாற்கும் உரியன வந்துழிக் காண்க.

இவை எல்லாம் பண்பு என்று விளக்கிய, பண்பு வாய்பாட்டான் ஓதினார். இவை உயர்திணைப் பண்புப் பெயராய், அப்பொருளையும் ஒருங்கு உணர்த்தின வேனும், அஃறிணைச்சொல் கொண்டு முடியும் என வழு அமைத்தார். *(57)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**57. குடிமை, ஆண்மை -**

இக்குடிமை ஆண்மை முதலியன பெரும்பான்மை உயர்திணைப்பண்பே. சிறுபான்மை விரவுப்பெயர்ப் பண்பாக இருப்பினும், சொல்லுவான் குறிப்பினான் உயர்திணைப் பண்பையும் உணர்த்தும். இப்பண்புகள் தம்மை உணர்த்துவதனொடு தம்முடைய பண்பியாகிய உயர்திணைப் பொருளையும் உணர்த்தும். அது சொல்லுவான் குறிப்பி னாலேயே உணரப்படும். இவை உயர்திணைப் பொருளை உணர்த்தினும் அஃறிணை முடிபே கொள்ளும்.

குடிமை முதலியன ஆகுபெயரால் உயர்திணைப் பொருளை உணர்த்தும் என்பர் சேனாவரையர். குடிமை ஆகுபெயராய்க் குடிமகனை உணர்த்திற்றேல், 'குடிமை நல்லன்' என உயர்திணை முடிபே பெறும். குடிமை தனக்குரிய பண்பை மாத்திரம் உணர்த்துமாயின், 'குடிமை நன்று' என அஃறிணை முடிபே பெறும். இயற்கையாகவே அஃறிணை முடிபு பெறும் குடிமைப்பண்பு 'அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்' என்று கூறப்படல் வேண்டா. இக்குடிமை முதலியன பண்பை மாத்திரம் உணர்த்தி, ஆகுபெயராய்ப் பண்பியாகிய உயர்திணைப் பொருளை உணர்த்தும் என்றல் பெருந்தாது.

குடிமை - குடிப்பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கம்.

'ஒழுக்கம் உடைமை குடிமை' -(குறள்-33) எல்லா ருக்கும் தத்தம் வருணத்திற்கு ஏற்ற ஒழுக்கம் உடைமை குலன் உடைமையாம்.

'மடிமை குடிமைக்கண் தங்கின்' -(குறள்-608) மடியினது தன்மை குடிமை உடையான் கண்ணே தங்குமாயின் என ஆண்பால்மேல் வைத்துக் கூறினும், பெண்பாலையும் உளப்படுக்கும்.

குடிமை நற்குடியில் பிறந்த ஆண்பாலையும் பெண் பாலையும் உணர்த்திற்று.

'இருபேராண்மை செய்த பூசல்' (குறுந்.43)- தலைவியும் தலைவனுமாகிய எங்கள் இரண்டு பெரிய ஆளுந்தன்மைகளும் செய்த பிணக்கு.

ஊராண்மைக்கு ஒத்த படிறு உடைத்து - (கலி-89) ஊரை ஆளும் தன்மைக்கு ஏற்ற வஞ்சனையை உடையது.

'வேளாண்மை... ... ... தாளாண்மை' -உபகாரியாம் தன்மையைச் செய்து, வந்த விருந்தினரை உபசரித்து, வாட் படையை ஆளும் செயலிலும் ஆற்றல் உடையவராய், முயற்சியை ஆளுதல்.

'வேளாண்... ...பிரிவினானும்' - பொ. 107 - தலைவி வேளாண்மை செய்ய எதிர்கொள்ளக் கருதுதல் காரணத்தான், தோழி தலைவனை விருந்தேற்றுக் கோடற்கண்ணும், வாளாண்மை செய்ததற்கு ஒத்த பிரிவு தோன்றியவழியும்.

'உட்குடையாள்,ஊர்ஆண் இயல்பினாள்' -(நாலடி -384) பெண்களுக்கு இயல்பான அச்சம் என்ற பண்பினை உடையவளாய், தன் அன்பினான் ஊர்மக்களையே ஆளும் பண்பினளாய்.

'ஆண்மை சுட்டிய எல்லாப்பெயரும்' -சொ. 183- ஆண்பாலாகிய தன்மையைக் குறிப்பிடும் இயற்பெயர், சினைப்பெயர், சினை முதற்பெயர், முறைப்பெயர் என்ற எல்லாப் பெயர்களும்.

'பிறப்பேகுடிமை... ... ஒப்பினதுவகையே' - பொ. 273- உயர்குடிப்பிறத்தல், அதற்கேற்ற ஒழுக்கமுடைமை, குடியை ஆளும் தன்மை, பன்னீராண்டும் பதினாறு ஆண்டும் ஆகிய ஒப்புமை, பெண்மை வடிவும் ஆண்மை வடிவும் பிறழ்ச்சி யின்றி அமைந்தவழி அவற்றுமேல் நிகழும் இன்பத்துக்கு வாயிலாகிய அன்பு, மறை பிறர் அறியாமை நெஞ்சினை நிறுத்துதல், எல்லா உயிர்கள்மாட்டும் இடுக்கண் செய்யாத அருள் உடையராய் இருத்தல், உலகியலான் செய்யத்தகுவது அறியும் அறிவுடைமை, எஞ்ஞான்றும் மனநிறைவோடு இருத்தல் -ஆகிய பத்தும் தலைவன் தலைவியருக்கு இடையே உள்ள ஒப்புமைகளாம்.

இவற்றுள் குடியாண்மை என்பது ஆண்மகற்கும், இல்லாண்மை என்பது பெண்மகட்கும் உரியன.

ஆண்மை என்பது ஆளுந்தன்மை, ஆணாகிய தன்மை, ஆள்வினை என்ற முப்பொருள்களை உடைய சொல்லாகும்.

'ஆண்பால் ... ... உரிய' - பொ-605. ஆண் என்னும் சொல் அஃறிணையின் எல்லாச்சாதியுள் ஆண்பாற்கும் உரித்து. பெண் என்னும் சொல் அஃறிணையின் எல்லாச் சாதியுள் பெண்பாற்கும் உரித்து.

'பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே' - பொ-624. பெண்ணும் ஆணும் பிள்ளையும் என வாளாது சொல்லியவழி, உயர்திணைக்கு ஏற்றன மரீஇ வந்த மரபு என்றவாறு.

'புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கம்' - பொ-76. உயிர்வாழ்க்கையைப் பொருந்தாத வலிய ஆண்பாலின் கூறுபாடு.

'பாடாண்பகுதி' - பொ-80. பாடப்படுகின்ற ஆண்மகனது ஒழுகலாறாகிய கூறு.

'ஆண்மை... ... கடந்த' (புறநா-242) ஆளுந்தன்மை தோன்ற வீரரை வென்ற.

ஆண்மை என்பது போல ,ஆண் என்பதும் உயர்திணை ஆண்பாலை உணர்த்தும் என்பதற்கு மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன.

'இளமை... ... இன்றே' - "காமச்செவ்வி நிகழ்வதொரு காலம் கழிந்த பிறகு, இளமையைப் பாழாக்கித் தலைவியைப் பிரிந்து தலைவன் தேடித்தொகுத்த செல்வம் இருவருக்கும் காம இன்பத்தைத் தாராது."

'மூப்புடை முதுபதி' - (அகநா-7) மூத்தவராகிய ஆண் பெண் மக்களை உடைய மூதறிவுடையார் வாழும் இவ்வூர்.

'மடிமை குடிமைக்கண்... ...அடிமை புகுத்திவிடும்' - (குறள்-608) மடியினது தன்மை குடிமைஉடையான்கண்ணே தங்குமாயின், அஃது அவனைத் தன் பகைவருக்கு அடியனாம் தன்மையை அடைவித்துவிடும். ஆண்பால்மேல் கூறினும் பெண்பாற்கும் ஒக்கும்.

அடிமை - அடியனாம் தன்மையும், அடியளாம் தன்மையும்.

வன்மை-ஒருதொழில் செய்வதில் ஆற்றல் உடையவனாய் இருத்தல். வன்மை உடல் வலிமையையோ பொருளின் அழுத்தத்தையோ உணர்த்தாது.

'விருந்து எதிர்கோடல்' -(சிலப்.16:79) ஆணும் பெண்ணுமாகிய விருந்தினர் களை வரவேற்று உபசரித்தல்.

'ஆங்கவை விருந்தாற்றிப் பகல்அல்கி' -(கலி. 66:4) வந்த வண்டுகளுக்கு அங்கிருந்த வண்டுகள் விருந்து உபசாரம் செய்தலான் பகற்பொழுதில் அவ்விடத்தில் தங்கி - இஃது அஃறிணை.

'ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்' - (சிலப்-5:157)

ஐம்பெருங்குழு - புரோகிதர், அமைச்சர், சேனாபதியர், சாரணர், தூதுவர் -என்பார்.

எண்பேராயம் - கரணத்தியலவர், கருமவிதிகள், கனகச்சுற்றம், கடைகாப்பாளர், யானை வீரர், இவுளிமறவர், நகர மாந்தர், படைத்தலைவர் - என்போர்.

பெண்மை அடுத்த மகள் - அமைதித்தன்மையை உடைய மகள். பெண் தன்மை பொருந்திய மகள் என்பது கூறியது கூறல் ஆகும், மகள் என்பதே பெண் தன்மையை உணர்த்தலின்.

ஆண்மை அடுத்த மகன் -ஆளும் தன்மை பொருந்திய மகன்.

பெண்மை சுட்டிய
உயர்திணை மருங்கின் - உயர்திணை இடத்துப் பெண்பாற்கு உரிய அமைதித் தன்மையைக் கருதுதற்குக் காரணமான

பெண்மை - பெண்பால் ஆகும் தன்மையையும் அமைதித்தன்மையையும் குறிக்கும்.

பெண்மை பெண்பாற்கே உரிய பண்பாயினும் அதுவும் உயர்திணை சுட்டும்.

'அரசுபடக் கடந்துஅட்டு' - (கலி. 105:1) அரசர்கள் அழியுமாறு வஞ்சியாது எதிர்நின்று வென்று.

அரசு என்பது அரசி என்று ஈறு வேறுபட்டுழிப் பெண்பாலை உணர்த்தும்.

'அரசுவா வீழ்ந்த களத்து' - அரசயானை இறந்து வீழ்ந்த போர்க்களத்து.

'குழவியும்...மக்கட்கண்ணே' - (பொ.578) என்பதனான், குழவி - மக - என்பன உயர்திணைக்கும் வரும்.

குருடு, முடம் என்பன ஆண்பால், பெண்பால் இரண்டிற்கும் பொது. முடவன், முடத்தி என்பன விரவுப் பெயர் ஆதலின் உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொது.

காதல் என்பது சிறப்பும் நலனும் இல்வழியும் அன்பால் கூறியது.

'போர் யானை வந்தீக ஈங்கு' - (கலி-86:10) போர் செய்யும் யானை போன்று எனக்கு இனிய என் புதல்வனே! என்னிடம் வருக.

'தேமலர் அங்கண் திருவே! புகுதக' - (சீவக-2121) தேன் நிரம்பிய செந்தாமரை மலரின் அழகிய இடத்தில் இருக்கும் திருமகள் போல்வாய்! வருக.

'என்மகன் என்கண் என்உயிர் இவ்வுல குக்கெல்லாம்.
நன்மகன் இந்த நாடுஇற வாமை நயஎன்றான்' -
(கம்ப.அயோ.1526)

'ஆல்அமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வரும் எம் உயிர்' -(கலி-81)

"கல்லால மரத்தடியில் வீற்றிருக்கும் இறைவனுடைய அழகு நிரம்பிய பேராற்றல் உடைய முருகனைப் போல, எம் உயிர் போன்ற புதல்வன் வருகிறான்."

செறல்-வெகுளி; பொறியறை-நல்வினை இல்லாதவன், நல்வினை இல்லாதவள்.

செழீஇயிலி-பிறரொடு நன்முறையில் பழகத் தகுதியற்றவன், தகுதியற்றவள்.

போசீத்தை-ஓதுக்கத்தக்கவன், தக்கவள்.

பொய்ச்சிந்தை-பொய்யன் என்று ஓதுக்கத்தக்கவன், தக்கவள்.

'ஏவவும்... ...நோய்' (குறள்-848) - புல்லறிவாளன் தனக்கு உறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாநிற்கவும் செய்யான்; அதுவன்றித் தானாகவும் இவை செய்வன என்று அறியான்; அவ்வுயிர் யாக்கையின் நீங்கும் அளவும் நிலத்திற்குப் பொறுத்ததற்கரியதொரு நோயாகும். மனிதனை மனிதன் என்று கூறாது உயிர் என்று கூறுதல் இழிபு பற்றியது.

'ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்' - பெருவிறல் - முருகன். 'அருந்திறல் பிரிந்தஅயோத்தி போல' (சிலப்-13:65-6 )அருந்திறல்-இராமன்.

வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு - இவை அஃறிணை வினை கொண்டு முடியும் உயர்திணை ஆண்பால் சொற்கள்.

ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து - குறள்-561
பொருத்தலும் வல்லது அமைச்சு - குறள்-633
உறுதி பயப்பது ஆம் தூது - குறள்-690
ஐயப்பாடு இல்லதே ஒற்று - குறள்-587

'புரையறு கேள்விப் புரோசு மயக்கி' - (பதிற்.பதி-7) வேள் வந்தது, குரிசில் வந்தது, புரோசு மயக்கிற்று என்பன கொள்க. இவை உயர்திணைப் பெயர் அஃறிணை முடிபு கொண்டன. இவை வேள் வந்தான், குரிசில் வந்தான், புரோசு வந்தான்- என உயர்திணைவினை கோடலும் ஆம்.

உயர்திணைப் பண்புப்பெயரான் உணர்த்தப்பட்ட உயர்திணைப்பெயர்கள் அஃறிணை முடிபு கோடல் வழுவமைதியாம்.

**தெய்வச்சிலையார் உரை**

**அஃறிணையான் வழங்கப்படும் உயர்திணைச் சொற்கள்**

*55.* ***குடிமை ஆண்மை இளமை மூப்பே***
***அடிமை வன்மை விருந்தே குழுவே***
***பெண்மை அரசே மகவே குழவி***
***தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி***
***காதல் சிறப்பே செறல்சொல் விறல்சொல்என்று***
***ஆஅறு மூன்றும் உளப்படத் தொகைஇ***
***அன்ன பிறவும் அவற்றொடு சிவணி***
***முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்***
***உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்***
***அ:றிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.***

திணை வழுஅமைதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : குடிமை முதலாக எண்ணப்பட்டனவும், அத்தன்மைய பிறவும் அவற்றொடு பொருந்திக் குறிப்பினான் உணரும் கிளவி எல்லாம் உயர்திணை மருங்கின் நின்றன ஆயினும் அஃறிணை இடத்துச் சொல்லான் வழங்கப்படும் எ-று.

'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்' என்ற உம்மையான், இவை எல்லாம் பண்பு குறித்தவழி அஃறிணைஆம் என்பதூஉம், பொருள் குறித்தவழி உயர்திணை ஆம் என்பதூஉம் கூறியவாறு ஆயிற்று.

குடிமை ஆவது குடி ஆகிய தன்மை. அஃது அக்குடியில் பிறந்தாரைக் குறித்து நின்றது. இக்குடி வாழ்ந்தது, இக்குடி கெட்டது என்ப.

குடிமை என்பது குடி என வருமோ எனின், 'மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு - அடிமை புகுத்தி விடும்' (குறள். 608) என்றவழிக் குடி எனப் பொருள் ஆகியவாறு கண்டுகொள்க.

ஆண்மை என்பது ஆண் ஆகிய தன்மை. அத்தன்மையைக் குறித்து ஓர் ஆண் வந்தது என்ப.

இளமை என்பது இளையாரைக் குறித்து நிற்கும். இவ்அவை இளமை இன்று என இளையாரை இலது என்னும் பொருள்பட வந்தது.

மூப்பு என்பது முதியாரைக் குறித்து நிற்கும். இவ்அவை மூப்பு இன்று என முதியரை இலது என்னும் பொருள்பட வந்தது.

அடிமை என்பது அடிமைத்தொழில் செய்வார் மேற்று. அவனது அடிமை வந்தது என அப்பொருள் குறித்து நின்றது.

வன்மை என்பது வலி ஆகிய தன்மை. அவனது வலி போயிற்று என அவற்குத் துணைஆயினாரைக் குறித்து நின்றது.

விருந்து என்பது புதுமை. விருந்து வந்தது என, புதியார் வந்தார் என்பது குறித்து நின்றது.

குழூஉ என்பது திரள். குழூஉப் பிரிந்தது, அவை எழுந்தது, படை திரண்டது என்ப, குழுவிய மாந்தரைக் குறித்து.

பெண்மை என்பது பெண் ஆகிய தன்மை. ஒரு பெண் வந்தது என்ப.

அரசு என்பது அரசத்தன்மை. அரசு இருந்தது என்ப அரசன் என்பதைக் குறித்து.

மக என்பது மகன், மகள் என்னும் முறைப்பெயர் இரண்டற்கும் பொதுவாக நிற்பது. மகக் கிடந்தது என்ப.

குழவி என்பது அப்பொருளின் இளமை குறித்து நிற்கும். குழவி அழுதது என்ப.

தன்மை திரிபெயர் என்பது தன் இயல்பின் திரிந்த பொருட்பெயர். அது மருள் என்பது. அதனை மருள் வந்தது என்ப.

உறுப்பின் கிளவி என்பது உறுப்பினான் கூறப்படும் சொல். அஃதாவது குருடு, முடம் என்பன. குருடு வந்தது, முடம் வந்தது என்ப.

காதல் என்பது காதல் பற்றி நிகழும் சொல். காதல் சொல், சிறப்புச்சொல் என ஒரு சொல் வருவிக்க. என் பாவை வந்தது, என் யானை வந்தது என்ப.

தன் மகளை 'ஈங்கு இதுஓர் நல்கூர்ந்தார் செல்வமகள்' (கலி. 58) என்றவழி, 'இது' என்பது காதல்பற்றி வந்தது.

சிறப்பு என்பது சிறப்பைப் பற்றி வரும் சொல். கண்போலச் சிறந்தானை 'என் கண் வந்தது' என்ப.

செறற்சொல் என்பது செறலினான் கூறும் சொல். என் பகை வந்தது, திருவிலி வந்தது என்ப. 'ஏ ஏ இஃது ஒத்தன்' (கலி. 62) என்றவழி இஃது என்பதும் அது.

விறற்சொல் என்பது வீரியத்தான் கூறும் சொல். விறல் வந்தது, சிங்கம் வந்தது, புலி வந்தது என்ப, அவ்வீரியம் குறித்து.

'அன்ன பிறவும்' என்றதனான், குடும்பம் வாழ்ந்தது, வேந்து சென்றது, ஆள் வந்தது, அமைச்சு வந்தது, தூது வந்தது, ஒற்று வந்தது, நட்பு-நன்று என்பன கொள்க.

'அவற்றொடு சிவணி முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்' என்றதனான், உலகு வாழ்ந்தது, நாடு வாழ்ந்தது, ஊர் வந்தது என்பது அவ்விடத்தில் உள்ள மாந்தரைக் குறித்தது. பிறவும் அந்நிகரன எல்லாம் கொள்க.

இவை எல்லாம் ஆகுபெயர் அன்றோ எனின், ஆகுபெயராயின் தன் பொருட்கு உரிய பாலான் முடியும். இவை அன்ன அன்றி வேறுபட்டு முடிதலின் குறிப்புமொழி ஆயின. (55)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**55. 'குடிமை ஆண்மை'-**

குடிமை முதலியன பண்பு குறித்தவழி அஃறிணை. பண்பினை உடைய பொருளைக் குறித்தவழி உயர்திணை எனினும் அஃறிணை முடிபே கொள்ளும்.

இவ் அவை இளமை இன்று - இந்தச் சபையிலே இளையவர்கள் காணப்பட்டிலர்.

இவ் அவை மூப்பு இன்று - இந்தச்சபையில் ஆண்டில் மூத்தவர்கள் காணப்பெற்றிலர். அவனது வலி போயிற்று - அவனுக்குத் துணையாயினார் நீங்கிவிட்டனர். விருந்து வந்தது புதியவர்கள் வந்தனர்.

குழு, அவை, படை, பெண்மை - குழுவினர், அவையினர், படைமாந்தர், பெண்பால் இவற்றைக் குறிக்கும்.

அரசு, மக, குழவி - அரசனையும், முறைப்பெயராகிய மகனையும் மகளையும், அவர்களுள் மிக இளையாரையும் முறையே குறிக்கும்.

தன்மை திரிபெயர் - அறிவின்றியே மயங்கிக் கிடக்கும் மனிதப் பிறவியாகிய 'மருள்' என்பது. 'மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு' (புறநா. 28)

உறுப்பின் கிளவி - குருடு-முடம் - குருடன், குருடி, முடவன் முடத்தி - இவரைக் குறிக்கும்.

காதல் சொல் - அன்பு பற்றி மகளைப் பாவை எனவும் மகனை யானை எனவும் குறிப்பிடுதல்.

ஈங்கிது ஓர் நல்கூர்ந்தார் செல்வமகள் - இங்குக் காணப்படும் மகப்பேறின்றி வறுமையுற்று இருந்தவர் இல்லத்தில் பிறந்து செல்லமாக வளரும் பெண் மகளை இது என்றல் காதல் பற்றி வந்தது.

இஃது ஒத்தன் - வெகுளி பற்றி 'இவன் ஒருவன்' எனற்பாலது 'இஃது ஒத்தன்' என வந்தது.

விறல் - வீரியம் - பேராற்றல்.

வேந்து, அமைச்சு, தூது, ஒற்று, நட்பு என்ற உயர்திணைப் பெயர்கள் அஃறிணை முடிபு கோடலைத் திருக்குறளில் காண்க. (வேந்து கொடிது (551) வல்லது அமைச்சு (633, 634) உறுதி பயப்பது ஆம் தூது (690) வல்லதே ஒற்று (585) அல்லல் உழப்பதாம் நட்பு (787).

உலகு, நாடு, ஊர் - உலக மக்கள், நாட்டு மக்கள், ஊர் மக்கள். ஆகுபெயர் 'வேந்து செங்கோலன்' என்றாற்போலத் தன் பொருளுக்கு உரிய திணையானும் பாலானும் முடியும். இவை வேந்து நன்று என்றாற்போல அஃறிணை முடிபு கோடலின் குறிப்பு மொழி.

**கல்லாடனார் உரை**

***57. குடிமை ஆண்மை இளமை மூப்பே***
***அடிமை வன்மை விருந்தே குழுவே***
***பெண்மை அரசே மகவே குழவி***
***தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி***
***காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல்என்று***
***ஆ-அறு மூன்றும் உளப்படத் தொகைஇ***
***அன்ன பிறவும் அவற்றொடு சிவணி***
***முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்***
***உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்***
***அ:றிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.***

என்-எனின், திணை வழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : குடிமை என்னும் சொல்லும், ஆண்மை என்னும் சொல்லும், இளமை என்னும் சொல்லும், மூப்பு என்னும் சொல்லும், அடிமை என்னும் சொல்லும், வன்மை என்னும் சொல்லும், விருந்து என்னும் சொல்லும், குழு என்னும் சொல்லும், பெண்மை என்னும் சொல்லும், அரசு என்னும் சொல்லும், மகவு என்னும் சொல்லும், குழவி என்னும் சொல்லும், தன்மை திரிந்ததனான் பெற்ற பெயர்ச்சொல்லும், உறுப்பின் பெயர்ச்சொல்லும், காதல் என்ற சொல்லும், சிறப்பித்துச் சொல்லும் சொல்லும், செறுத்துச் சொல்லும் சொல்லும், விறல் என்னும் சொல்லும் என்று சொல்லப்பட்ட பதினெட்டுச் சொல்லும் உட்பட வந்த தன்மையனவும், பிறவும் அவற்றொடு கூட்டித் தொக்கு இவ்வகை ஆகிய குறிப்பினான் உணரப்படும் சொற்கள் எல்லாம் உயர்திணை இடத்தே நிலைபெற்றன ஆயினும், அஃறிணை இடத்துச் சொல்லுமாறுபோலச் சொல்லப்பட்டு நடக்கும் எ-று.

எ-டு : இவற்குக் குடிமை நன்று, தீது; ஆண்மை நன்று, தீது; இளமை நன்று, தீது; மூப்பு நன்று, தீது; அடிமை நன்று, தீது; வன்மை நன்று, தீது, விருந்து வந்தது, போயிற்று; குழு நன்று, பிரிந்தது என வரும். இவற்கு என்பதை ஏற்புழி ஒட்டிக்கொள்க. பெண்மை நன்று, தீது; அரசு வந்தது, போயிற்று; மக நன்று, தீது; குழவி எழுந்தது, கிடந்தது.

தன்மை திரிபெயர் : அலி வந்தது, போயிற்று; உறுப்பின் கிளவி: குருடு வந்தது, போயிற்று. காதல் : என் யானை வந்தது, போயிற்று - என் பாவை வந்தது, போயிற்று. சிறப்பு : உயிர்போலச் சிறந்தாரை உயிர் என்றலும், கண் போலச் சிறந்தாரைக் கண் என்றலும் ஆம். ஆதலின், அஃது 'ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிறல் - போல வரும்எம் உயிர்' (கலி-81) எனவும், என் உயிர் வந்தது, போயிற்று; என் கண் வந்தது, போயிற்று எனவும் வரும். செறல் சொல் : கெழீஇயிலி வந்தது, போயிற்று; பொறியறை வந்தது, போயிற்று எனவும், விறற்சொல்: பெருவிறல் வந்தது, போயிற்று எனவும் வரும்.

'அன்ன பிறவும்' என்றதனால் பேடி வந்தது, பேடிகள் வந்தன, வேந்து வந்தது, வேள் வந்தது, குரிசில் வந்தது, ஒரு கூற்றம் வந்தது, புரோசு வந்தது, உலகு வந்தது என்னும் தொடக்கத்தனவும் கொள்க.

இவற்குக் குடிமை நன்று என்றதன்பொருள் இவற்குக் குடிமகன் நல்லன் என்னும் பொருண்மையாகக் கொள்க. பிறவும் இவ்வாறே உயர்திணை ஆக உணர்க. குடிமை என்பது குடிஆண்மை எனவும், ஆண்மை என்பது ஆண்மகன் எனவும், இளமை என்பது இளவல் எனவும், மூப்பு என்பது முதுமை எனவும், அடிமை என்பது அடி எனவும், வன்மை என்பது வலி எனவும், விருந்து என்பது புதுமை எனவும், குழு என்பது கூட்டம் எனவும், திரள் எனவும், ஆயம் எனவும், அவை எனவும், பெண்மை என்பது பெண் எனவும், குழவி என்பது பிள்ளை எனவும் மதலை எனவும் பிறவும் வாய்பாடு உற்றமை அறிக.

இவற்றுள் ஆண்மை பெண்மை என்றாற் போல்வன விரவுப் பெயராய் நிற்கும். குடிமை, அடிமை, அரசு என்றாற் போல்வன உயர்திணைப் பெயராய் நிற்கும். இவ்விகற்பமும் அறிந்துகொள்க.

இக்குடிமை முதலியன எல்லாம் உயர்திணைப் பண்பு ஆகலான் அப்பண்புச்சொல் தன் பொருள்மேல் ஒரு ஞான்றும் நில்லாது, தன்னையே உடைய பொருள்மேலே தன் பொருளும் தோன்றிப் பிரியாது நின்றமையின் உயர்திணை ஆயிற்று என்பது. அவையிற்றிற்கு அடி பண்பு என்பது போதரல் வேண்டிக் 'குடிமை ஆண்மை' எனப் பண்பு வாய்பாடுபடுத்துக் கூறினார் போலும்.

தன் பொருள்மேல் நில்லாது என்றது என்னை? இளமை, மூப்பு என்றாற் போல்வனவற்றிற்கு அப்பண்பு தன்மேலும் வழக்கு உண்டால் எனின், அவ்வாறு வருவனவும் சிறுபான்மை உளவேனும், அடிமை, அரசு, மகவு, குருடு, கூன் என்றால் போல்வன பொருள்மேல் அன்றிப் பண்பின்மேல் வழங்கல் இன்மையின் அவற்றிற்கு எல்லாம் முன் கூறியதே நினைவு என்பது.

இனி இவை எல்லாம் அப்பண்பின்மேல் எனவும், பண்புகொள வருதல் என்னும் ஆகுபெயரான் பொருள்மேல் நின்றன எனவும், அவற்றுக்கண்ணது ஈண்டு ஆராய்ச்சி எனவும் அவற்றுப் பண்புப் பொருள்மேல் வழக்கு இல்லனவற்றை இறந்த வழக்கு என்று கூறியும் பிறவாறும் கூறுவாரும் உளர். அதுவும் அறிந்து கொள்க.

இதனால் சொல்லியது, பண்பு நிமித்தம்ஆகப் பொருள் நிகழும் சொற்கள் பலவும் தம் பொருட்கு ஏற்ப உயர் திணையாய் முடியாது சொற்கு ஏற்றவாற்றான் அஃறிணை யான் முடிவன கண்டு, அதனை ஈண்டு அமைத்தவாறு என உணர்க. *(57)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**57. 'குடிமை ஆண்மை . . . இயலும்.'**

இவற்குக் குடிமை நன்று - இவன் குடிமகன் ஆதலின் நல்லன் என்னும் பொருளது. குடிமை முதலியவற்றின் பிறவாய்பாட்டு வடிவங்கள் கூறப்பட்டுள்ளன.

குடிமை முதலியன சிறுபான்மை பண்பினைக் குறிக்கும், பெரும்பான்மை பண்புடைப் பொருளைக் குறிக்கும் என்பதும்-குடிமை முதலியன ஆகுபெயராய் உயர்திணைப் பொருளை உணர்த்தும் என்பாரும் உளர் என்பதும்-குருடு, கூன் முதலியன பண்பை விளக்காது பண்பியையே குறிக்கும் என்பதும்-குறிக்கப்பட்டன.

இந்நூற்பா பண்பு நிமித்தமாகப் பொருளை உணர்த்தும் சொற்கள் பலவும் தம் பொருட்கு ஏற்ப உயர்திணையாய் முடியாது, சொல் அமைப்புக்கு ஏற்ப அஃறிணையாய் முடியும் என வழு அமைத்தவாறு.

## ஒருவர் உரை

*57. குடிமை ஆண்மை இளமை மூப்பே*
*அடிமை வன்மை விருந்தே குழுவே*
*பெண்மை அரசே மகவே குழவி*
*தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி*
*காதல் சிறப்பே செறல்சொல் விறல்சொல்என்று*
*ஆ அறு மூன்றும் உளப்படத் தொகைஇ*
*அன்ன பிறவும் அவற்றொடு சிவணி*
*முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்*
*உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்*
*அ:றிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.*

எ-து : குடிமை முதல் விறல்சொல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினெட்டும் உட்பட, அவை போல்வன பிறவும் அவற்றொடு தொக்குக் குறிப்பினான் உயர்திணைப்

பொருளை உணர்த்தும் சொற்கள் எல்லாம், உயர்திணை முப்பால்கண்ணும் நிலைபெற்றன; ஆயினும் அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றுழிப் போல அஃறிணை முடிபு கொள்ளும்.

எ-டு : இவர்க்குக் குடிமை நன்று, குடிமை தீது.
'இவர்க்கு' என்பதனை யாண்டும் ஒட்டிக்கொள்க.
ஆண்மை நன்று, தீது.
இளமை நன்று, தீது.
மூப்பு நன்று, தீது.
அடிமை நன்று, தீது.
வன்மை நன்று, தீது.
விருந்து வந்தது, போயிற்று.
குழு நன்று, பிரிந்தது.
பெண்மை நன்று, தீது.
அரசு வந்தது, போயிற்று.
மக நன்று, தீது.
குழவி அழுதது, கிடந்தது.

இனித் தன்மை திரிபெயர் : அலி வந்தது, போயிற்று
இனி உறுப்பின் கிளவி : குருடு வந்தது, போயிற்று
கூன்வந்தது, போயிற்று
இனிக் காதல் கிளவி : என் காதல் வந்தது, போயிற்று
என் பாவை வந்தது, போயிற்று
இனிச் சிறப்பு : என் யானை வந்தது, போயிற்று
இனிச் செறல் சொல் : கெழீஇயிலி வந்தது, போயிற்று
இனி விறல் சொல் : பெருவிறல் வந்தது,
போயிற்று - எனவரும்.

இவை உயர்திணை ஆயினவாறு என்னை? குடிமை என்ற இடத்து ஒருவன் மேலானும், ஒருத்தி மேலானும், பலர் மேலானும் நிற்கும்; ஒழிந்தனவும் இவ்வாறே காண்க.

இனி, 'அன்ன பிறவும்' என்றதனான், பேடி வந்தது, வேந்து வந்தது, வேள் வந்தது, குரிசில் வந்தது, பொறியறை வந்தது, புரோசு வந்தது, உலகு வந்தது எனவும் கொள்க. (57)

## ஒருவர் உரைவிளக்கம்

**57. 'குடிமை . . . இயலும்.'**

பேடி வந்தது என்ற எடுத்துக்காட்டு இளம்பூரணத்தில் உள்ளது இங்குக் கொள்ளப்பட்டது.

## சாத்திரியார் உரை

**56. 'குடிமை . . . இயலும்.'**

குடிமை முதலியன உயர்திணைப்பொருளை உணர்த்தினவேனும், சொல்லால் அஃறிணை முடிபைப் பெறும் என்று கூறினாராயிற்று.

குடிமை முதலியன உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும் உணர்த்தும் என்பதே ஆசிரியர் கொள்கையாய் இருத்தல்வேண்டும். இதனை மனத்துக்கொண்டே நச்சினார்க்கினியர் குடிமை ஆண்மை முதலியவற்றை ஆகுபெயர் என்றலும், அவை பண்பு உணர்த்தி நிற்கும் என்றலும் பொருந்தாமை உணர்க என்று மறுத்தார்.

## பாலசுந்தரனார் உரை

**56. 'குடிமை ஆண்மை . . . இயலும்.'-**

குடிமை, விருந்து, அரசு, தன்மை திரிபெயர், செறற்சொல், விறற்சொல் ஆகியவை உயர்திணைப் பொருட்குரிய பண்பாகலின் 'உயர்திணைமருங்கின் நிலையின ஆயினும்' என்றார்.

ஆண்மை, இளமை, மூப்பு, வன்மை, குழூ, பெண்மை, மக, குழவி, உறுப்பின் கிளவி, காதல், சிறப்பு ஆகியவை இருதிணைக்கும் பொது ஆயினும், சொல்லுவோன் குறிப்பினான், உயர்திணை மருங்கின் நிலைபெறுமாயின் அவற்றை உயர்திணைப் பண்பாக அறிதல்வேண்டும் என்பார் 'முன்னத்தின் உணரும் கிளவி' என்றார்.

அன்னபிறவும் என்றதனான் வேந்து, குரிசில், ஏந்தல், ஆயம், அமைச்சு, தூது, ஒற்று முதலியன கொள்க.

இச்சூத்திரம் 'உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே' என்றமையான் இவை மக்கட்பண்பு ஆதலின், உயர்திணைமுடிபு கொள்ளுங்கொல் என நின்றதோர் ஐயம் களைந்தது. இவை உயர்திணைப்பால் காட்டுதற்கு உரிய ஈற்று இடைச்சொற்களொடு கூடாதவழி, சொல்நிலையான் அஃறிணைச் சொல்லேயாம் என்றும் அதனான் அஃறிணை முடிபே கொள்ளும் என்றும் தொடர்மொழி ஆக்கம் பற்றிக் கூறிற்று என்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

57. இஃது 'உயர்திணை என்மனார்' என்ற நூற் பாவிற்குப் புறனடை. உயர்திணைப்பண்பு உயர்திணை முடிபு கொள்ளுங்கொல் என்ற ஐயத்தைக் களைந்து உயர்திணைப்பால் காட்டும் சொற்களொடு கூடாதவழி அவை சொல்நிலையான் அஃறிணைச்சொல்லே ஆதலின் அஃறிணை முடிபே கொள்ளும் என்னும் தொடர்மொழி ஆக்கம்பற்றி இந்நூற்பா கூறுகிறது என்பது ச. பா. அவர்கள் கருத்து. அடிமை நல்லன், வேந்து செங்கோலன் முதலிய தொடர்கள் பற்றியும் நோக்கவேண்டும்.

## இளம்பூரணர் உரை

### உயர்திணைப் பொருள் அஃறிணை முடிபு ஏற்றல்

***58. காலம் உலகம் உயிரே உடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்***
***ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன***
***ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்***
***பால்பிரிந்து இசையா; உயர்திணை மேன.***

எ...ன், இஃது உயர்திணையான் முடியாது, அஃறிணையான் முடியும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : காலம் உலகம் என்று இத்தொடக்கத்தனவும் உயர்திணை எனினும், உயர்திணைப்பால் பிரிந்திசையா; அஃறிணையான் இசைக்கும் என்றவாறு.

உதாரணம் :
1. இவற்குக் காலம் ஆயிற்று
2. உலகு பசித்தது
3. உயிர் போயிற்று
4. உடம்பு நன்று
5. இவற்குத் தெய்வம் ஆயிற்று
6. இவற்குப் பால் ஆயிற்று
7. இவற்கு வினை நன்று
8. இவனைப் பூதம் புடைத்தது
9. ஞாயிறு எழுந்தது
10. திங்கள் எழுந்தது
11. சொல் நன்று

என வரும். 'பிறவும்' என்றதனான், வெள்ளி எழுந்தது, செவ்வாய் எழுந்தது என்பன கொள்க.

இச்சூத்திரத்தில் தெய்வம் சுட்டிய பொருள் அஃறிணையான் முடிபேற்றல் கூறினான் என்ப ஒரு திறத்தார். அற்றன்று; ஈண்டுத் தெய்வமும் உள; மக்களும் உளர்.

இனி, மேற்சூத்திரம் முன்னத்தால் உணரப்படும் என்றவாறு கூறினார். இச்சூத்திரம் உயர்திணைப் பொருளே அஃறிணை முடிவு ஏற்பனவற்றிற்குக் கூறினார் என்பது.

உலகம் என்பது உலகத்தார் மேற்று; உடம்பு என்பது உடம்புடையார் மேற்று என்பது. (58)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**58. 'காலம் உலகம்'** -

இந்நூற்பாவுள் தொல்காப்பியனார் பத்துப் பொருள்களை எடுத்துக்கூறி அவை உயர்திணையான் முடியாமல் அஃறிணையான் முடியும் என்பர். இந்நூற்பா தெய்வம் சுட்டிய பெயர்கள் அஃறிணையான் முடிபு ஏற்றல் கூறுகிறது என்பது ஒருசாரார் கருத்து. திவாகரர், பிங்கலர், திருள்ளுவர் முதலியோர் இவருள் அடங்குவர்.

திவாகரர் தெய்வப்பெயர்த் தொகுதியுள் கூறுவன எல்லாம் இந்நூற்பாவுள் குறிக்கப்பட்ட பொருள்களே. திவாகரம் முதலிய நிகண்டுகளின் தெய்வப் பெயர்த் தொகுதிக்கு இந்நூற்பாவே அடிப்படை எனலாம்.

## சேனாவரையர் உரை

### பாலுக்குப் புறனடை

***57. காலம் உலகம் உயிரே உடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்***
***ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன***
***ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்***
***பால்பிரிந்து இசையா உயர்திணை மேன.***

*(இ-ள்)* : காலம் முதலாகச் சொல்லப்பட்ட பத்தும் அத்தன்மைய பிறவும் ஆகிய அப்பகுதிக்கண் வரும் சொல் எல்லாம் உயர்திணைச்சொல் ஆயினும், உயர்திணைக்கண் பால் பிரிந்து இசையா, அஃறிணைப் பாலாய் இசைக்கும் என்றவாறு.

எ-டு : இவற்குக் காலமாயிற்று, உலகம் பசித்தது, உயிர் போயிற்று, உடம்பு நுணுகிற்று, தெய்வம் செய்தது, வினை விளைந்தது, பூதம் புடைத்தது, ஞாயிறு பட்டது, திங்கள் எழுந்தது, சொல் நன்று-என வரும்.

பிறவும் என்றதனான், பொழுது நன்று, யாக்கை தீது, விதி வலிது, கனலி கடுகிற்று, மதி நிறைந்தது, வெள்ளி எழுந்தது, வியாழம் நன்று என்பன போல்வன கொள்க.

காலம் என்றது, காலக் கடவுளை. உலகம் என்றது, ஈண்டு மக்கள் தொகுதியை.

'உயிரே உடம்பே' எனப் பொதுவகையான் கூறினாரேனும், மக்கள் உயிரும் உடம்புமே கொள்ளப்படும்; என்னை? உயர்திணை முடிவு கொள்ளா என விலக்கப்படுவன அவையே ஆகலின் என்பது.

'அஃறிணை என்மனார் அவரல பிறவே' என்புழி அஃறிணையாய் அடங்கி உயர்திணை முடிபு எய்தாமையின், அவையும் விலக்கற்பாட்டிற்கு ஏலாஎனின், அற்றன்று; மக்கட் சுட்டு உடைமையான் அவை உயர்திணையே ஆம் என்பது. யாதோ மக்கட் சுட்டு உடையவாறு எனின், அறம் செய்து துறக்கம் புக்கான் எனவும், உயிர் நீத்து ஒருமகன் கிடந்தான் எனவும், உயிரும் உடம்பும் அவரின் வேறு அன்றி அவராக உணரப்பட்டு உயர்திணைக்கு ஏற்ற முடிபு கொண்டு நிற்றலின் மக்கட் சுட்டு உடைய என்பது.

ஓர் ஆவை எம் அன்னை வந்தாள் என்றும், ஓர் எருத்தை எந்தை வந்தான் என்றும் உயர்திணை வாய்பாட்டால் கூறியவாறுபோல, உயிரும் உடம்பும் அவ்வாறு கூறப் பட்டன என்று கொள்ளாமோ எனின், கொள்ளாம். அவற்றான் வரும் பயன் நோக்கிக் காதலால் எம் அன்னை, எந்தை என்றான் ஆண்டு; ஈண்டுக் காதல் முதலாயின இன்மையின் மக்கட் சுட்டு உடைய என்பது.

பால்வரை தெய்வம் என்பது, எல்லார்க்கும் இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது. வினை என்பது அறத்தெய்வம். சொல் என்பது நாமகளாகிய தெய்வம்.

அஃதேல், குடிமை, ஆண்மை என்பனவற்றோடு இவற்றிடை வேற்றுமை என்னை எனின், அவை இருதிணைப் பொருட்கண்ணும் சேறல் மாலைய; இவை அன்ன அல்ல என்பது.

உலகம் என்பது, இடத்தையும் ஆகுபெயரான் இடத்து நிகழ் பொருளாகிய மக்கள் தொகுதியையும் உணர்த்தும் ஆகலான், இருதிணைக்கண்ணும் சென்றது அன்றோ எனின், அற்றன்று; வட நூலுள் உலகம் என்பது இருபொருட்கும் உரித்தாக ஓதப்பட்டமையின், மக்கள்தொகுதியை உணர்த்தும்வழியும் உரிய பெயரே ஆகலின் ஆகுபெயர் அன்று; அதனான் ஒரு சொல் இருபொருட்கண்ணும் சென்றது எனப்படாது, இருபொருட்கும் உரிமையான் இரண்டுசொல் எனவே படும் என்பது. வேறு பொருள் உணர்த்தலின் வேறு சொல் ஆவதே துணிவு ஆயினும், பல பொருள் ஒரு சொல் என்புழி எழுத்து ஒப்புமை பற்றி ஒரு சொல் என்றார்.

மேல் என்பது ஏழாம் வேற்றுமைப் பொருள் உணர்த்துவதோர் இடைச் சொல் ஆகலின், ஈறு திரிந்து மேன என நின்றது.

இதுவும் திணைவழு அமைதி. (57)

**சேனாவரையர் உரைவிளக்கம்**

**57. காலம் . . . மேன**

உயிர், உடம்பு என்பன மக்களுடைய உயிரும் உடம்புமே எனவும் அவையே மக்களாக நன்கு மதிக்கப்படுதலின் உயர்திணையாகக் கொள்ளத்தக்கன எனவும் சில எடுத்துக்காட்டுக்களால் சேனாவரையர் விளக்குகிறார்.

உலகம், உயிர், உடம்பு நீங்கலான ஏனைய தெய்வப் பெயர்களாம்.

நிலத்தை உணர்த்தும் உலகம் என்ற சொல்வேறு. மக்களை உணர்த்தும் உலகம் என்ற சொல் வேறு. இவை இரண்டும் வெவ்வேறு சொற்கள் எனினும் எழுத்து ஒற்றுமையான் உலகம் பலபொருள் ஒருசொல் எனப்பட்டது என்பது விளக்கப்படுகிறது.

குடிமை ஆண்மை முதலியன குடிமை நன்று, குடிமை நல்லன், ஆண்மை நன்று, ஆண்மை நல்லன் என இருதிணை முடிபும் கொள்ளும். காலம் உலகம் முதலியன அஃறிணை முடிபே கொள்ளும். ஆதலின் இவை தனித்தனி நூற்பாவாகக் கூறப்பட்டன.

**நச்சினார்க்கினியர் உரை**

**இதுவும் அது**

***58. காலம் உலகம் உயிரே உடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்***
***ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன***
***ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்***
***பால்பிரிந்து இசையா, உயர்திணை மேன.***

இதுவும் திணைவழுக் காக்கின்றது.

இ-ள் : காலம் உலகம் உயிரே உடம்பே பால்வரை தெய்வம் வினையே பூதம் ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம் ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன - காலம் முதலாகச் சொல் ஈறாகச் சொல்லப்பட்ட அப்பத்தும் அத்தன்மையன பிறவும் ஆகிய; ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்- அவ்வுயர்திணைக்கண் வரும் சொல் எல்லாம்; உயர்திணை மேன பால்பிரிந்து இசையா - உயர்திணைச் சொல் ஆயினும் உயர்திணைக்கண் பால் பிரிந்து இசையா; அஃறிணைப் பாலவாய் இசைக்கும் என்றவாறு.

இச்சூத்திரத்துக் கூறியவற்றுள் உலகமும் உயிரும் உடம்பும் ஒழிந்தன எல்லாம் தெய்வத்தையே உணர்த்தின ஆதலின், தெய்வம் என்பது, 'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்' (சொ. 4) என்பதனான் உயர்திணை என்பது பெற்றாம். இவை எல்லாம் தெய்வம் என்னும் உயர்திணைப் பொருளை உணர்த்தினவேனும், தெய்வம் என்னும் சொல் அஃறிணை வாசகம் ஆதலின், அதற்கு ஏற்ப அஃறிணை முடிபே கொள்ளும் என்றார்.

இச்சொற்கள் கூறுகின்றபொழுதே தத்தம் உயர் திணைப்பாற் பொருளே தோற்றுவித்து நிற்றலின் ஆகுபெயர் அன்மை உணர்க.

இவற்குக் காலம் ஆயிற்று என்றது காலக்கடவுளை. உலகம் பசித்தது என்றது உலகத்தாரை. 'உயிர் போயிற்று, உடம்பு நுணுகிற்று': இவை உயர்திணை முடிபுகொள்ளா என விலக்குதலின், ஈண்டு உயர்திணைக்கே உரிய ஆயின; என்னை? 'அறம் செய்து துறக்கம் புக்கான்' 'உயர் நீத்து ஒருமகன் கிடந்தான்' என உயிரும் உடம்பும் வரின், வேறு அன்றி அவராக உணரப்பட்டு உயர்திணைக்கு ஏற்ற முடிபு கோடலின், மக்களே ஆயின. இவை இங்ஙனம் உணர்த்தலின், ஆகுபெயர் அல்ல.

'தெய்வம் செய்தது' - இதனைப் பால்வரை தெய்வம் என்றார், இன்பத் துன்பத்துக்குக் காரணம் ஆகிய இருவினையும் வகுத்தலின்.

'வினை விளைந்தது' - இஃது இருவினைத் தெய்வம். பூதம் புடைத்தது, ஞாயிறு பட்டது, திங்கள் எழுந்தது.

'சொல் நன்று' - இது நாமகள் ஆகிய தெய்வம்.

'பிறவும்' என்றதனான், பொழுது நன்று, யாக்கை தீது, விதி வலிது, கனலி கடுகிற்று, மதி நிறைந்தது, வெள்ளி எழுந்தது, வியாழம் நன்று என வரும்.

***உலகம் என்பது வடசொல் அன்று.*** உலோகம் என்பது வடமொழித் திரிபு. உலகம் என்பது மக்கள் தொகுதியை உணர்த்தியவழி உயர்திணையாயும், இடத்தை உணர்த்திய வழி அஃறிணையாயும் வருதலின், ஒருசொல் இருபொருட் கண்ணும் சென்றது எனப்படாது, இரு சொல் எனவே படும். அங்ஙனம் மக்கள் தொகுதியை உணர்த்துங்கால் உரிய பெயராகியே உணர்த்திற்று; ஆகுபெயர் அன்று. இங்ஙனம் வருவனவற்றைப் பலகால் எடுத்து ஓதாமை இலேசாகக் கருதி.

'ஒருசொல் பல பொருட்கு உரிமை தோன்றினும்' (சொ. 299) என எழுத்து ஒப்புமைபற்றி 'ஒருசொல்' என்றார். *(58)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**58. காலம் உலகம் -**

தெய்வம் என்பது உயர்திணைப்பொருள் உணர்த்தினும் அச்சொல் அஃறிணைச்சொல் ஆதலின் அஃறிணை முடிபையே ஏற்கும். இஃது உயர்திணைப் பொருளையே உணர்த்தலின் ஆகுபெயர் அன்று. இந்நூற்பாவில் உள்ள பிற சொற்களும் அன்ன. ஈண்டுக்கூறிய உயிரும் உடம்பும் உயர்திணை உயிரும் உயர்திணை உடம்பும் என்பதற்கு எடுத்துக்காட்டுக்கள் தரப்பட்டுள்ளன.

பால்வரை தெய்வம் - இருவினையையும் வகுக்கும் தெய்வம். வினை- இருவினைத்தெய்வம். சொல் - நாமகளாகிய தெய்வம். கனலி - சூரியன். வியாழம் வெள்ளி : கோள்கள்.

'உலகம்' என்பது வடசொல் அன்று. உலோகம் என்பதே வடமொழித் திரிபு. 'காலம்' - 'ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறார் ஆகலின்'- என்பன **இடைச்செருகலாம்.** மக்கள் தொகுதியை உணர்த்தும் உலகம் என்ற சொல் வேறு; நிலத்தை உணர்த்தும் 'உலகம்' என்ற

சொல் வேறு. எழுத்தொப்புமை பற்றி நாம் ஒரு சொற்குப் பலபொருள் உண்டு என்று கருதிப் பலபொருள் ஒருசொல் என்கிறோம். உண்மையில் ஒரு சொற்கு ஒருபொருளே உண்டு- இச்செய்தி நன்கு விளக்கப்பட்டுள்ளது.

**தெய்வச்சிலையார் உரை**

***56. காலம் உலகம் உயிரே உடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்***
***ஆசர் ஐந்தொடு பிறவும் அன்ன***
***ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்***
***பால்பிரிந்து இசையா உயர்திணை மேன.***

உயர்திணைப் பொருட்கண் எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : காலம் முதலாகச் சொல்லப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் ஆகிய பொருட்கண் வரும் சொல்லெல்லாம் உயர்திணை இடத்தன. ஆண்டுப் பால் பிரிந்து இசையா எ-று.

காலம் என்பது முன்னும் பின்னும் நடுவும் ஆகி என்றும் உள்ளது ஒரு பொருள்.

உலகம் என்பது மேலும் கீழும் நடுவும் ஆகி எல்லா உயிரும் தோற்றுதற்கு இடம் ஆகிய பொருள்.

உயிர் என்பது சீவன்.

உடம்பு என்பது மனம் புத்தி ஆங்காரமும் பூத தன்மாத்திரையும் ஆகி வினையினான் கட்டுப்பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்பது ஒரு நுண்ணிய உடம்பு. இதனை மூலப் பகுதி எனினும் ஆம்.

பால் வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியும் ஆகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள்.

வினை என்பது ஊழ். பூதம் என்பது நிலம் நீர் தீ வளி ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதம். ஞாயிறு என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது. திங்கள் என்பது நீர்த்திரளாய் உலகிற்கு அருள்செய்வது.

சொல் என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்வது. அச்சொல்லினான் இயன்ற மந்திரம், விடம் முதலாயின தீர்த்தலின் தெய்வம் ஆயிற்று. இந்நூல் செய்தான் வைதிக முனிவன் ஆதலின் சொல் என்பது வேதம் என்று கொள்ளப்படும்

'பிறவும்' என்றதனான், வியாழம், வெள்ளி முதலாயின கோள்மீனும்- பரணி, கார்த்திகை முதலாயின நாள்மீனும்- தாரகையும்- பூதம், பேய் எனப் பால் உணர நில்லாத தெய்வப் பொருண்மையும்-கொள்ளப்படும். உதாரணம் முன்னர்க் காட்டுதும். *(56)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**56. 'காலம் உலகம்'-**

உடம்பு - புரி அட்டகாயம் எனப்படும். மனம், புத்தி, ஆங்காரம்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவற்றின் தன்மாத்திரைகள் ஐந்து ஆக எட்டானும் அமைந்த நுண் உடம்பு.

பால்வரை தெய்வம் - ஆணும் பெண்ணும் அலியும் ஆகிய வேறுபாடுகளைப் பிரித்துப் படைக்கும் பரம்பொருள்.

பூதம் - நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐம்பூதம்.

சொல் - சொல்லினான் ஆகிய மந்திரம் நஞ்சு முதலியவற்றை நீக்குதலின் சொல் தெய்வம் ஆயிற்று. தொல்காப்பியத்தை இயற்றியவன் வைதிக முனிவன் ஆதலின் சொல் என்பது வேதமே.

தாரகை - பெயரான் வரையறுக்கப்பட்ட 27 விண்மீன்களைத் தவிர ஏனையவாய் வானில் காட்சி வழங்கும் விண்மீன்கள்.

பூதம், பேய் - இவை பால் உணரப்படாத தெய்வகணம்.

**கல்லாடனார் உரை**

***58. காலம் உலகம் உயிரே உடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்***
***ஆயீர் ஐந்தொடு பிறவும் அன்ன***
***ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்***
***பால்பிரிந்து இசையா; உயர்திணை மேன.***

என்-எனின், இதுவும் திணைவழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : காலம் என்னும் சொல்லும், உலகம் என்னும் சொல்லும், உயிர் என்னும் சொல்லும், உடம்பு என்னும் சொல்லும், இருவினையும் யாவர்க்கும் வரைந்து ஊட்டும் தெய்வத்தின்மேல் பால் எனவரும் சொல்லும், வினை என்னும் சொல்லும், பூதம் என்னும் சொல்லும், ஞாயிறு என்னும் சொல்லும், திங்கள் என்னும் சொல்லும், சொல் என்னும் சொல்லும் என்று வருகிற பத்துச் சொல்லினொடு பிறவும் அத்தன்மை ஆகிய உயர்திணைப் பொருள்மேல் வரும் சொற்கள் எல்லாம் உயர்திணை இடத்துப் பால் உணர்த்தும் சொல்லால் பிரித்துச்சொல்லப்படா; அஃறிணைப் பாலால் சொல்லப்படும் எ-று.

எ-டு : இவற்குக் காலம் ஆயிற்று; உலகு பசித்தது; உயிர் போயிற்று; உடம்பு நுணுகிற்று; இவற்குப் பால் ஆயிற்று; வினை நன்று, வினை தீது; இவனைப் பூதம் புடைத்தது; ஞாயிறு எழுந்தது, பட்டது; திங்கள் எழுந்தது, பட்டது; சொல் நன்று, தீது.

'பிறவும்' என்றதனால், செவ்வாய் எழுந்தது, பட்டது; வெள்ளி எழுந்தது, பட்டது - என வரும்.

என்னை இவை உயர்திணை ஆயினவாறு? எனின், காலம் என்றது காலனை. உலகம் என்றது உலகத்தாரை. உயிர் என்றது உயிர்க்கிழவனை. உடம்பு என்றது அஃது உடையானை. பால் என்பது இன்பத் துன்பங்களை வகுப்பது ஒரு தெய்வம். வினை என்பது வினைத்தெய்வம். பூதம் என்பது தெய்வப்பகுதி. ஞாயிறு, திங்கள் என்பன தெய்வம். சொல் என்பது சொல் மடந்தையை.

ஆயின், இவற்றை மேலவற்றோடு ஒன்றாக ஓதாதது என்னை எனின், அவை எல்லாம் பண்பு அடியாகப் பொருள்மேல் நிகழ்தலின் அவற்றை, 'முன்னத்தின் உணரும் கிளவி' என, வேறு ஒருவகையால் கிளவாது வரும் பெயர் ஆகலின் வேறு ஒரு வகை ஆக்கிக் கூறினார் என உணர்க. இவற்றுள் பூதம், ஞாயிறு, திங்கள் என்பன ஒழித்து அல்லன எல்லாம் ஆகுபெயரான் அஃறிணைப் பெயர் உயர்திணை மேல் நின்றன என உணர்க.

இதனான் சொல்லியது, இவற்றுள் சில உயர்திணைப் பெயர் தம் பொருட்கு ஆகுபெயராய் அதற்கு ஒப்ப முடியாது சொற்கு ஏற்ப முடிவதனைக் கண்டு, அதனை அமைத்தவாறு ஆயிற்று. *(58)*

## கல்லாடனார் உரைவிளக்கம்

**58. 'காலம் உலகம் . . . உயர்திணை மேன.'**

பால் வரை தெய்வம் - இருவினையையும் யாவர்க்கும் வரைந்து ஊட்டும் தெய்வத்தின்மேல் பால் எனவரும் சொல்.

காலம் முதலியன உயர்திணை ஆகுமாறு விளக்கி உரைக்கப்பட்டது. சென்ற நூற்பா பண்பு அடியாகப் பொருள்மேல் நிகழும் சொற்கள் பற்றியது. இந்த நூற்பா பெயரே உயர்திணைப் பொருள் உணர்த்தி அஃறிணை முடிபு கோடல் பற்றியது. பூதம் ஞாயிறு திங்கள் நீங்கலான ஏனைய, ஆகுபெயரான் அஃறிணைப் பெயர் உயர்திணைமேல் நின்றன என்று குறிப்பிடப்படுகிறது. எனினும் சொல்லுக்கு ஏற்ப அஃறிணை முடிபே பெறும்.

## ஒருவர் உரை

58. *காலம் உலகம் உயிரே உடம்பே*
*பால்வரை தெய்வம் வினையே பூதம்*
*ஞாயிறு திங்கள் சொல்என வரூஉம்*
*ஆயீர் ஐந்தொடு பிறவும் அன்ன*
*ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்*
*பால்பிரிந்து இசையா உயர்திணை மேன.*

எ-து : காலம் முதலாகச் சொல் ஈறாகச் சொல்லப்பட்ட பத்தும், அத்தன்மையன பிறவும் ஆகிய சொல் எல்லாம் உயர்திணையே எனினும், உயர்திணை இடத்துப் பால் பிரிந்து இசையா; அஃறிணைக்கண் இசைக்கும்.

எ-டு : இவற்குக் காலம் ஆயிற்று. வினை நன்று, தீது. இவனைப் பூதம் புடைத்தது. ஞாயிறு எழுந்தது, பட்டது. திங்கள் எழுந்தது, பட்டது. சொல் நன்று, தீது.

பிறவும் என்றதனால், வெள்ளி எழுந்தது, பட்டது. வியாழம் எழுந்தது, பட்டது. செவ்வாய் எழுந்தது, பட்டது-என்பன எல்லாம் கொள்க.

மேல் சூத்திரத்துள் 'அன்ன பிறவும்' என்றதனான், ஈங்கு மீண்டும் சூத்திரம் சொல்லியது என்னைஎனின், மேற் சூத்திரத்துள் சொல்லின எல்லாம் மக்கள் மேலன; இதனுள் சொல்லின எல்லாம் தெய்வங்கள் மேலன என்பது.

காலம் என்பது கூற்றத்தை. உலகு - உலகம் உடையான். உயிர் என்பதனையும் தெய்வம் என்ப. உடம்பு : ஐம்பெரும் பூதங்களின் இயன்றமையின் தெய்வம் என்ப. பால் வரை தெய்வம் : எல்லார்க்கும் இன்ப துன்பங்களை அவ்வவர் விதிவழியின் பயப்பதொரு தெய்வம். வினை : வினையைப் படைப்பானை அன்றி இருவினையையும் தெய்வம் என்ப. பூதம் என்பது ஒரு தெய்வம். ஞாயிறு திங்கள் என்பனவும் அவை. சொல் : சொல்லின் கிழத்தியை - என இவ்வாறு கொள்க.

இனி, இன்னும் ஒரு கருத்து : மேல் உயர்திணையாய் அஃறிணையான் முடிபு ஏற்றமை காட்டினார். இதனான் உயர்திணையான தேவரையும், மக்களையும் உள் அடக்கி, அஃறிணையான் முடிபு எய்தினமை காட்டினார் என்க.

உலகமும், உயிரும், உடம்பும் மக்கள் பண்பு. அல்லன தெய்வம் எனக் கொள்க.

பால் பிரிந்து இசையா உயர்திணைமேன-உயர் திணைமேல் பால் பிரிந்து இசையா என்க. (58)

**ஒருவர் உரைவிளக்கம்**

**58. 'காலம் உலகம் . . . மேன.'-**

மேல் சூத்திரத்துச் சொல்லியன மக்கள் மேலன. இதனுள் சொல்லியன தெய்வங்கள் மேலன என்று கூறியதற்கு ஏற்பக் காலம் முதலியவற்றிற்கு உரை கூறப்பட்டுள்ளது. 'குடிமை ஆண்மை'யில் உயர்திணையாய் அஃறிணை முடிபு ஏற்றமை காட்டினார். இதனால் உயர்திணையான தேவரையும் மக்களையும் உள்ளடக்கி அஃறிணை முடிபு எய்தினமை காட்டினார் என்ற கருத்தும்-உலகமும் உயிரும் உடம்பும் மக்கட்பண்பு, அல்லன தெய்வம் எனக்கொள்க என்ற கருத்தும்-காணப்படுகின்றன.

**பாலசுந்தரனார் உரை**

**57. 'காலம் உலகம் . . . மேன.'**

இவை தெய்வம் சுட்டிய பெயராக வரும் சொற்களாம்.

காலம் என்றது காலக்கடவுளை (இயமன், கூற்றுவன், காலன்)

உலகம் என்றது நிலத்தெய்வத்தை (புவிமகள், நிலமகள், மண்மகள்)

உயிர் என்றது உயிர்க்கிழவனை (சீவன், ஆன்மா, மன்னுயிர்)

உடம்பு என்றது தெய்வப் படிமத்தை (மூர்த்தி, கல்நின்ற வீரர், அருச்சனைமூர்த்தி)

பால்வரை தெய்வம் என்றது கந்தழியை (இலிங்கம், நடுதறி) 'அவன், அவள், அது' எனப்பால் பொதுமையாய்க் கந்தழி நிற்றலின் அது பால்வரை தெய்வம் எனப்பட்டது.

விதி என்றது நல்லூழும் அல்லூழும் ஆகிய ஊழினை (விதி, ஊழ்).

பூதம் என்றது பூதப்படையினை (பூதகணங்கள்).

ஞாயிறு-கதிரவன். திங்கள்-நிலா மண்டிலம். சொல்-நாமகளாகிய தெய்வம். 'அன்னபிற' என்றதனான், கனலி, காற்று, நீர், ஆகாயம் முதலிய பூதங்களும்-செவ்வாய், புதன் முதலிய கோள்களும்-அருந்ததி முதலிய விண்மீன்களும்-அணங்கு முதலாகிய தெய்வக்கூறுகளும் கொள்க.

இச்சூத்திரம் தெய்வம் சுட்டிய பெயர்கள் (சொ. 4) உயர்திணை முடிபு கொள்ளுங்கொல் என வரும் ஐயத்தை நீக்கி, அவை பால் காட்டும் ஈற்று இடைச்சொல் பெற்றால் அன்றி, உயர்திணை மருங்கின் இசையா எனக் கூறிற்று என்க.

இவை சொல்லான் அஃறிணையே ஆதலின் உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசையா என்க. சொ. 56, 57 என்ற இருநூற்பாக்களும் 'உயர்திணை என்மனார்'(1) 'தெய்வம் சுட்டிய' (4) என்பனவற்றிற்குப் புறனடையாய்ப் பாலறி கிளவி மயங்கல்கூடா எனத்தொடர் மொழி ஆக்கத்திற்கு உரிய மரபுகூற எழுந்தன.

'குடிமை நன்று' என்ற தொடரில், எழுவாயும் பயனிலையும் அஃறிணையே. பாவை, யானை என்பன ஒப்புமை கருதாது காதல் பற்றி வந்தன என்ப. ஆசிரியர் உவமவியலில் 'சிறப்பே நலனே காதல் வலியோடு, அந்நாற்பண்பும் நிலைக்களன் என்ப' (4) எனக்கூறி யிருத்தலின் ஒப்புமை கருதாது எவ்வாறு வரும் ?

உயிர் நீத்து ஒரு மகன் கிடந்தான், அறம் செய்து சுவர்க்கம் புக்கான் என்பன உயர்திணைச் சொல்லாய் உயர்திணை முடிபு கொண்டவையே. உயர்திணைப் பொருளாய் அஃறிணை முடிபு கொண்டனவற்றையே எடுத்துக்காட்ட வேண்டும். அஃது இன்று.

## பதிப்பாசிரியர் குறிப்பு

58. இது 'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவி' என்பதற்குப் புறனடை. இந்நூற்பா தெய்வம் சுட்டிய பெயர்கள் பால்காட்டும் ஈறுகளைப் பெற்றால் அன்றி உயர்திணை முடிபு கொள்ளா என்பதனை வரையறுக்கிறது என்பர் ச. பா. அவர்கள்.

## இளம்பூரணர் உரை

### குடிமை ஆண்மைக்குப் புறனடை

**59. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.**

எ.....ன், 'குடிமை ஆண்மை'(சொ.58) என்பதற்குப் புறனடை கூறுதல் நுதலிற்று.

இ-ள் : இச்சொல்லப்பட்டவையிற்றுக்கு நின்றாங்கு இசைத்தல் இயல்பின்று என்பது. (எனவே) மேற்சூத்திரத்தாற் சொல்லப்பட்டனவற்றிற்கு நின்றாங்கு இசைத்தல் இயல்புமாம் என்பது.

உதாரணம் : குடிமை நல்லன்; வேந்து செங்கோலன் என வரும். (59)

## இளம்பூரணர் உரைவிளக்கம்

59, 60. **'நின்றாங்கு', 'இசைத்தலும்'** -

திங்களுஞ் செல்வன் (சிலப். 4 : 4) என்ற தொடர் விளக்கத்திற்கு அடியார்க்குநல்லார் "'காலம் உலகம்' என்னும் சூத்திரத்துள், ஞாயிறு, திங்கள் என்பன உயர்திணை மேலனவாய்ப் 'பால் பிரிந்து இசையா' எனவும்- 'நின்றாங்கு

இசைத்தல் இவண் இயல்பு இன்று' எனவே, நின்ற முறைமையானே ஈறு பெற்று நின்று உயர்திணையாய் இசைத்தல் இவண் இயல்புஇன்று எனவும்-கூறிய ஆசிரியர், 'இசைத்தலும் உரிய வேறு இடத்தான' எனக் காலம் முதலாகிய சொல் உயர்திணையாய் இசைத்தலும் உரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டவழி என்றார் ஆதலின் இதுவும் ஈறு திரிந்து 'திங்களஞ் செல்வன்' என்று ஆயிற்று" - என்று குறிப்பிட்டுள்ளார்.

**சேனாவரையர் உரை**

**இடத்துக்குப் புறனடை**

***58. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.***

*(இ-ள்):* ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர் திணையாய் இசைத்தல் ஈண்டு இயல்பு இன்று என்றவாறு.

ஈண்டு என்றது, காலம் முதலாகிய சொற்களை. அவை இடையீடு இன்றி மேற்சொல்லப்பட்டு நிற்றலின் 'இவண்' என்றார்.

'இவண் இயல்பு' இன்று எனவே, குடிமை ஆண்மை முதலாயின சொல்லின்கண் குடிமை நல்லன், வேந்து செங்கோலன் என நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல் இயல்பு உடைத்து என்பதாம். *(58)*

**நச்சினார்க்கினியர் உரை**

**குடிமை ஆண்மைக்குப் புறனடை**

***59. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.***

இது 'குடிமை ஆண்மை' த் தொடக்கத்திற்கு ஒரு புறனடை.

இ-ள் : நின்றாங்கு இசைத்தல் - ஈறு திரியாது, நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல்; இவண் இயல்பு இன்றே - காலம் முதலிய சொற்கள் இடத்து இயல்பு இல்லை என்றவாறு.

எனவே 'குடிமை ஆண்மை' (சொ. 57) முதலிய சொற்களிடத்து இயல்பு உண்டாம் என்றவாறு. குடிமை நல்லன், ஆண்மை நல்லன், மூப்புத் தீயன் - என ஒட்டுக. *(59)*

**நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்**

**59, 60. நின்றாங்கு, இசைத்தலும் -**

'திங்களஞ் செல்வன்' என்ற தொடரை விளக்குமிடத்து அடியார்க்கு நல்லார் இந்த நூற்பாக்களை மேற்கோள் காட்டி, இங்குக் கூறப்பட்ட உரையையே கூறி விளக்கியுள்ளார்.

**தெய்வச்சிலையார் உரை**

***57. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.***

மேலதற்கு ஒருபுறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேல் உயர்திணைக்கண் பால் பிரிந்து இசையா என்று ஓதப்பட்டன எல்லாம் அத்திணை உணர நின்றன வேனும், அவ்வாறு உயர்திணை உணர நின்று ஒலித்தல் இவ்விடத்து வழக்கு இன்று எ-று.

இவ்விடம் என்றது உயர்திணையை. *(57)*

**தெய்வச்சிலையார் உரைவிளக்கம்**

**57. 'நின்றாங்கு'-**

காலம் உலகம் முதலியன உயர்திணை உணர்த்து மேனும் அவை உயர்திணைப் பொருளாய்க் கணக்கிடப் பட்டு உயர்திணை முடிபு கோடல் வழக்கத்தில் இல்லை.

இவண் என்பதற்கு உயர்திணை என்று பொருள் செய்கிறார்.

### கல்லாடனார் உரை

**59. *நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.***

என்-எனின், குடிமை ஆண்மை என்றதற்கொரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : நின்ற வாய்பாட்டானே நின்று உயர்திணை முடிபு பெறுதல் இக் 'காலம் உலகம்' என்னும் தொடக்கத்தனவற்றிற்கு இயல்பு அன்று. எனவே மேற்கூறிய 'குடிமை ஆண்மை' என்னும் தொடக்கத்தனவற்றிற்கு இயல்பு எ-று.

எ-டு. : குடிமை நல்லன், வேந்து செங்கோலன் நல்லன்- என வரும். உயர்திணை முடிபு இழந்து நின்றனவற்றை அம்முடிபு உடைய என்று எய்துவித்தவாறு.

இம்முடிபு இலக்கணம் ஆதலின், இதுவே பெரும் பான்மை ஆகற்பாற்று எனின், இலக்கணமே எனினும் வழக்குப்பயிற்சியான் அதுவே பெரும்பான்மை ஆகற்பாற்று என உணர்வது.

இச்சொற்கள் ஈறுவேறுபட்டுக் குடிமகன், வேந்தன், ஆண்மகன் என நிற்பனவற்றிற்கு உயர்திணை முடிபே முடிபு எனக் கொள்க.

இதனான் சொல்லியது : மேற்கூறிய இருவகைத் திணை வழுவினையும் ஒருவகைத் தன்மேல் முடிபு உடையவாயும் வருவன கண்டு, அவற்றின் உண்மையும் இவற்றின் இன்மையும் உடன்கொண்டு கூறியவாறு ஆயிற்று. *(59)*

### கல்லாடனார் உரைவிளக்கம்

**59. 'நின்றாங்கு . . . இன்றே.'-**

காலம் உலகம் முதலியன அஃறிணை முடிபே பெறும். குடிமை ஆண்மை முதலியன குடிமை நல்லன் என்றாற் போல உயர்திணை முடிபும் பெறும்; குடிமகன் என்றாற்போல ஈறு வேறுபட்டான் உயர்திணை முடிபே பெறும். இரண்டு நூற்பாச் செய்திகளின் வேறுபாடு உணர்த்தப் படுகிறது.

### ஒருவர் உரை

## *59. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே.*

எ-து : ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல், காலம் உலகம் முதலிய சொற்களிடத்து இயல்பு இல்லை.

எனவே குடிமை முதலிய சொற்களிடத்து நின்றாங்கு இசைத்தல் இயல்பாம் என்பதாம்.

எ-டு : குடிமை நல்லன், ஆண்மை நல்லன், இளமை நல்லன், மூப்புத் தீயன் என ஒட்டிக்கொள்க.

இச்சூத்திரம் குடிமை ஆண்மை என்னும் சூத்திரத் துக்குப் புறனடை என்று அறிக. *(59)*

### சாத்திரியார் உரை

**58. 'நின்றாங்கு இசைத்தல் இவண் இயல்பு இன்றே.'**

'அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்' என்ற சொற்களும், 'பால் பிரிந்திசையா உயர்திணைமேன' என்ற கிளவிகளும் கூறப்பட்ட இவ்வடிவான் நிற்குமிடத்து உயர்திணையாக இசைத்தல் இலக்கணம் ஆதல் இல்லை. அஃறிணையாயே இசைக்கும்.

*56, 57* ஆம் நூற்பாக்களில் கூறப்பட்ட மரபினை வலியுறுத்துகிறது இந்நூற்பா.

### சாத்திரியார் உரை

**59. 'இசைத்தலும் . . . தான.'**

காலம் முதலியன பால் பிரிந்து இசையா என்று கூறப்பட்டமையால், அதற்கு இசைய, வேறிடத்தில் பால் பிரிந்து இசைக்கும் என்றலே பொருத்தமுடையது.

### பதிப்பாசிரியர் குறிப்பு

59. 'குடிமை ஆண்மை' 'காலம் உலகம்' என்பன வற்றான் கூறப்பட்ட பெயர்கள் தம் வடிவான் நிற்குமிடத்து அஃறிணையேயாம் என்பர், ச. பா. அவர்கள். முன்னவர்கள் இதனைக் 'காலம் உலகம்' என்ற நூற்பாவுக்குப் புறனடை யாகக் கொள்வர். ச. பா. அவர்கள் கருத்துக்கு அடிமை நல்லன், அரசு செங்கோலன் முதலியன முரணாக இருப்பதனை நோக்குக.

### இளம்பூரணர் உரை

#### 'காலம் உலகம்' என்பதற்குப் புறனடை

***60. இசைத்தலும் உரிய வேறுஇடத்து ஆன.***

எ . . . ன், இது 'காலம் உலகம்' (சொ. 58) என்பதற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வேறிடம் என்பது வேறு வாய்பாடு. வேறு வாய்பாட்டான் சொல்ல இசைக்கும்; ஓதிய வாய்பாட்டான் சொல்ல இசையாவென்பது.''

உதாரணம் : காலன் கொண்டான்; உலகத்தார் பசித்தார் என வரும். (60)

### சேனாவரையர் உரை

***59. இசைத்தலும் உரிய வேறுஇடத் தான.***

(இ-ள்) : காலம் முதலாகிய சொற்கள் உயர்திணையாய் இசைத்தலும் உரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்ட வழி என்றவாறு.

காலன் கொண்டான், உலகர் பசித்தார் என வாய்பாடு வேறுபட்டவழி உயர்திணையாய் இசைத்தவாறு கண்டு கொள்க. (59)

## நச்சினார்க்கினியர் உரை

### 'காலம் உலகம்' (சொ. 57) என்பதற்குப் புறனடை

***60. இசைத்தலும் உரிய வேறிடத்து ஆன.***

இது 'காலம் உலகம்' என்பதற்கு ஒரு புறனடை.

இ-ள் : இசைத்தலும் உரிய - காலம் உலகம் முதலிய சொற்களும் உயர்திணையாய் இசைத்தலும் உரிய; வேறு இடத்தான - ஈறு திரிதற்கு ஏற்பன ஈறுதிரிந்து வாய்பாடு வேறுபட்ட இடத்து என்றவாறு.

காலன் கொண்டான், உலகர் பசித்தார் என ஈறு திரிவனவற்றோடு ஒட்டுக. *(60)*

## தெய்வச்சிலையார் உரை

***58. இசைத்தலும் உரிய வேறுஇடத் தான.***

மேல் கூறப்பட்ட சொற்கள் பால் உணர வருமாறு உணர்த்துதல் நுதலிற்று. வழு அமைதியும் ஆம்.

வேறுஇடம் என்பது அஃறிணையை.

இ-ள் : மேல் பால் பிரிந்து இசையா என ஓதப்பட்ட சொற்கள் அஃறிணையாய் இசைத்தலும் உரிய சொல்லான் அன்றி இருதிணைக்கும் பொது ஆகிய சொல்லானும் இசைத்தலும் உரிய எ-று.

உ-ம் : காலம் வந்தது, வரும். உலகு கிடந்தது, உயிர் போயிற்று, உடம்பு விட்டது, தெய்வம் தந்தது, வினை விளைந்தது, பூதம் செறிந்தது, ஞாயிறு எழுந்தது, திங்கள் எழுந்தது, சொல் பயன் தந்தது, வியாழம் எழுந்தது, வெள்ளி பட்டது, பரணி தோன்றிற்று, பூதம் புடைத்தது, பேய் பிடித்தது. பிறவும் அன்ன. *(58)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**58. 'இசைத்தலும் உரிய'-**

வேறிடம் - அஃறிணை. காலம் உலகம் முதலியன அஃறிணைக்கு உரிய சொல்லையும், உம்மையான் இருதிணைக்கும் பொதுவான சொல்லையும் கொண்டு முடியும்.

காலம் வந்தது, வரும்: வந்தது அஃறிணை வினை. வரும் இருதிணைப் பொதுவினை.

## கல்லாடனார் உரை

***60. இசைத்தலும் உரிய வேறுஇடத்து ஆன.***

என்-எனின், 'காலம் உலகம்' என்பதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : காலமும் உலகமும் என்னும் தொடக்கத்தன உயர்திணை முடிபு பெறுதலும் உடைய, அவ்ஓதிய வாய்பாடு ஒழிய வேறு வாய்பாடு ஆயின இடத்து எ-று.

எ-டு : காலம் என்பது மகர ஈறு. காலன் என்னும் னகர ஈறாய் நின்றுழிக் காலன் கொண்டான் என முடியும். உலகத்தார் பசித்தார்; உயிர்க்கிழவன் போயினான்- என்பனவும் அவை.

இதனான் சொல்லியது : மேல் 'நின்றாங்கு இசைத்தல் இவண் இயல்பு இன்று' என்ற விலக்கு, இவண் எனக் 'காலமும் உலகமும்' என்னும் வாய்பாட்டினையே நோக்கி விலக்காது, அப்பொருள்மேல் வரும் வாய்பாடுகள் எல்லாம் விலக்குவதுபோலும் நோக்கம்பட நின்றது என்று (கொள்ளினும்) கொள்ளற்க எனவும், 'அவை வேறு இடத்து ஆயின் இசைக்கும்' எனவும் கூறவேண்டிக் கூறினார் என்பது. *(60)*

### கல்லாடனார் உரைவிளக்கம்

60. **'இசைத்தலும் உரிய வேறிடத்தான.'**-

*காலம் முதலியன காலன் என்றாற்போல ஈறுதிரிந்து வாய்பாடு வேறுபட்ட வழி உயர்திணை முடிபே கொள்ளும்.*

### ஒருவர் உரை

## *60. இசைத்தலும் உரிய வேறுஇடத் தான.*

*எ-து : காலம் முதலிய சொற்கள் உயர்திணையாய் இசைத்தலும் உரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்ட இடத்து.*

*வேறு இடம் ஆவது ஈறு திரிதல்.*

*எ-டு : காலம் என்பது மகர ஈறு. அது காலன் எனத் திரிந்தது. பிறவும் ஏற்குமாறு திரித்துச் சொல்லுக.*

*காலன் கொண்டான், உலகர் பசித்தார், உயிர்க்கிழவன் போயினான் - என ஒட்டுக.*

*இச்சூத்திரம் காலம் உலகம் என்பதற்குப் புறனடை.(60)*

### பாலசுந்தரனார் உரை

59. **'இசைத்தலும் உரிய வேறு இடத்தான.'**

*மேற்கூறிய சொற்களும், கிளவிகளும் வேறு நிலைமைக்கண் உயர்திணையாய் இசைத்தற்கும் உரியவாம். வேறு நிலைமையாவது ஈறு திரிந்து வேறுபடுதலும் முழுதும் திரிந்து வேறுபடுதலுமாம்.*

*(எ-டு.) குடிமையன் வந்தான், பெருந்திறலோன் வென்றான்-இவை ஈறு திரிந்து உயர்திணையாய் இசைத்தன. நிலமகள் செழித்தாள், நாமகள் அருளினாள்-இவை முழுதும் திரிந்து உயர்திணையாய் இசைத்தன. நிலமகள்-உலகம்; நாமகள்-சொல்.*

அவற்றுள், ஈறு திரிதற்கு ஏலாதனவாகிய குழவி, தன்மை திரிபெயர், உயிர், உடம்பு, ஞாயிறு, திங்கள் போல்வனவற்றை நீக்குதற்குபொருட்டு ஒரு சூத்திரமாகக் கூறாமல் பிரித்துக் கூறினார்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

60. ஈறு திரிதற்கு ஏலாதன உயிர், உடம்பு, ஞாயிறு, திங்கள் போல்வன என்கிறார் ச. பா அவர்கள்.

உடம்பார் அழியின் உயிரார் அழிவர் - திருமந்திரம்

திங்களஞ்செல்வன் யாண்டுளன் கொல் - சிலம்பு

மாலை வெய்யோன் - திருவிருத்தம் 93

வேனிலஞ்செல்வன் - திருவிருத்தம் 26

என்பன ஈறு திரிந்து உயர்திணை ஆயினவாற்றைக் காணலாம்.

## இளம்பூரணர் உரை

### 'இனச்சுட்டு இல்லா' என்பதற்குப் புறனடை

**61. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.**

எ...ன், 'இனச்சுட்டு இல்லாப் பண்புகொள் பெயர்க் கொடை' (சொல். 18) என்னும் சூத்திரத்திற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் 'பண்புகொள் பெயர்க்கொடை' (சொ. 18) வழக்கினுள் இனம் பெற்றே நிற்க என்றான்; இனி, இனமின்றியும் நிற்கும் வழக்கினுள் என்றவாறு.

உதாரணம் : பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என வரும்.

அற்றன்று; அவையும் ஆண்டே அடங்கும்; மற்று என்னை கருதியது எனின்? இஃது அருத்தாபத்தி பெற்றது. 'விதந்த மொழிஇனம் வேறும் செப்பும்' என்பது பரிமாணச் சூத்திரம். இதுவும் அப்பொருட்டு.

உதாரணம் : மேலைச்சேரிக் கோழி அலைத்தது என, கீழைச்சேரிக் கோழி அலைப்புண்டமை சொல்லாமை முடிந்ததாம். குடங்கொண்டான் வீழ்ந்தானென, குடம் வீழ்ந்தமை சொல்லாமை முடிந்ததாம். இந்நிகரன இனம் செப்பின.

'செப்பலும் உரித்து' எனவே, இனம் செப்பாதன 'ஆவாழ்க; அந்தணர் வாழ்க' என வரும். ஒழிந்தனவும் ஒழிந்தாரும் சாக என்றவாறு அன்று. *(61)*

## இளம்பூரணர் உரைவிளக்கம்

**61. 'எடுத்த மொழி' -**

'வழக்கினுள் இனம் இன்றியும் வரும்' என்று இளம்பூரணர் தரும் விளக்கம் மற்ற உரையாளர்களான் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. நச்சினார்க்கினியரும் கல்லாடரும் ஒருவரும் இளம்பூரணர் இரண்டாம் உரையில் குறிப்பிடும் 'அருத்தாபத்தி கூறிற்று' என்பதனையே குறிப்பிடுகின்றனர்.

## சேனாவரையர் உரை

### இனம் செப்புதல்

***60. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.***

*(இ-ள்)* : இனம் ஆகிய பல பொருட்கண் ஒன்றனை வாங்கிக் கூறியவழி அச்சொல் தன் பொருட்கு இனமாகிய பிற பொருளைக் குறிப்பான் உணர்த்தலும் உரித்து என்றவாறு.

உம்மை எதிர்மறை ஆகலான், உணர்த்தாமையும் உரித்து என்பதாம்.

(எ-டு) : ‘அறம் செய்தான் துறக்கம் புகும்’ எனவும், ‘இழிவறிந்து உண்பான்கண் இன்பம் எய்தும்’ (குறள்-946) எனவும் வரும். இவை சொல்லுவார்க்கு இனப்பொருள் இயல்பு உரைக்கும் குறிப்பு உள்வழி, ‘மறம் செய்தான் துறக்கம் புகான்’, ‘கழிபேர் இரையான் இன்பம் எய்தான்’ என இனம் செப்புதலும், அக்குறிப்பு இல்வழி இனம் செப்பாமையும் கண்டுகொள்க. எடுத்த பொருளை உணர்த்தும் மொழியை ‘எடுத்த மொழி’ என்றார்.

இனன் அல் பொருளின் நீக்குதற்கு ‘இனம்’ என்றார். அஃதேல், மேற்சேரிக் கோழி அலைத்தது எனக் கீழ்ச்சேரிக் கோழி அலைப்புண்டது எனவும், குடங்கொண்டான் வீழ்ந்தான் எனக் குடம் வீழ்ந்தது எனவும், இவை இனம் செப்பும் என்றும், ஆவாழ்க-அந்தணர் வாழ்க-என்பன இனம் செப்பா என்றும் உரையாசிரியர் கூறினாரால் எனின் :- அற்றன்று; கீழ்ச்சேரிக் கோழி அலைப்புண்டல் இன்றி, மேற்சேரிக் கோழி அலைத்தல் அமையாமையானும், குடம் வீழ்தல் இன்றிக் குடம் கொண்டான் வீழ்தல் அமையாமையானும், கீழ்ச் சேரிக் கோழி அலைப்-புண்டலும், குடம் வீழ்தலும் சொல்லான் அன்றி, இன்றி யமையாமை ஆகிய பொருளாற்றலான் பெறப்படுமாகலான், ஈண்டைக்கு எய்தா, இது சொல் ஆராய்ச்சி ஆகலான் என்பது. இன்னோரன்ன சொல்லாற்றலான் பெற்றப்பட்டன எனின், புகை உண்டு என்றவழி எரி உண்மை பெறுதலும் சொல்லாற்றலான் பெறப்பட்டது என்பது.

இனி, ஆவாழ்க, அந்தணர் வாழ்க என்புழி, சொல்லுவான் ஒழிந்த விலங்கும், ஒழிந்த மக்களும் சாக என்னும் கருத்தினன்ஆயின், இவையும் இனம் செப்புவன அன்றோ என்பது. அதனான் அவை போலியுரை என்க.

ஒரு தொடர் ஒரு பொருள் உணர்த்திஅமையாது வேறு ஒரு பொருளும் குறித்து நிற்றல் வழு ஆயினும் அமைக என மரபு வழுக்காத்தவாறு. (60)

## சேனாவரையர் உரைவிளக்கம்

**60. எடுத்த . . . உரித்தே-**

இனம் செப்பலும் இனம் செப்பாமையும் சொல்லுபவன் குறிப்பை ஒட்டி நிகழ்வனவாம்.

கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டது என்பதும் குடம் வீழ்ந்தது என்பதும் பொருள் ஆற்றலால் பெறப்படும் செய்திகள், புகை உள்ள வழி நெருப்பு உண்டு என்பதுபோல; ஆதலின் உரையாசிரியர் காட்டும் இவ்வுதாரணங்கள் ஏற்புடையன அல்ல என்பர் சேனாவரையர்.

உரையாசிரியர் 'ஆ வாழ்க அந்தணர் வாழ்க' என்பன இனம் செப்பா என்றார். சொல்லுவான் ஒழிந்த இனங்கள் சாக என்னும் கருத்தினனாயின் இவையும் இனம் செப்பும் என்பது சேனாவரையர் கருத்து. சொல்லுபவனுக்கு அது கருத்தாயின் 'ஆவே வாழ்க, அந்தணரே வாழ்க' எனப் பிரிநிலை ஏகாரம் புணர்த்துக் கூறவேண்டும் என்பர் பாலசுந்தரனார்.

## நச்சினார்க்கினியர் உரை

### அருத்தாபத்தி

**61. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.**

இஃது அருத்தாபத்தி கூறுகின்றது.

இ-ள் : எடுத்தமொழி - இனமாகிய பொருட்கண் ஒன்றை விதந்து வாங்கிக் கூறிய அச்சொல்; இனம் செப்பலும் உரித்தே - தன் பொருட்கு இனமாகிய பிற பொருளைக் குறிப்பால் உணர்த்துதலும் உரித்து என்றவாறு. உம்மை எதிர்மறை ஆகலின் உணர்த்தாமையும் உரித்து ஆயிற்று.

உதாரணம் : 'அறம் செய்தான் துறக்கம் புகும்' என்றவழி, இனப்பொருள் ஆகிய 'மறம் செய்தான் நிரயம் புகும்' என்பது உணர்த்திற்று. 'இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம் எய்தும்' (குறள். 946) என்றவழி, 'கழிபேர் இரையான் இன்பம் எய்தான்' என்பதும் இனப்பொருளை உணர்த்திற்று. 'கீழைச்சேரிக் கோழி அலைத்தது' என, 'மேலைச்சேரிக் கோழி அலைப்புண்டது என்பதும் அது. 'ஆவாழ்க! அந்தணர் வாழ்க!' என்பன இனம் செப்பாதன.

அருத்தாபத்தி இனம் செப்புமாறு, தன்னொடு மறுதலைப்பட்டு நிற்பது ஒன்றே உள்வழி ஆயிற்று. மறுதலைப்பாடு பல உள்வழிச் செப்பாது. ஆவிற்கு மறுதலை எருமை, ஒட்டகம் எனப் பல மறுதலை உள்வழிச் செப்பாது. *(61)*

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**61. எடுத்த மொழி -**

அருத்தாபத்தி - வந்தது கண்டு வாராதது உணர்தல்

> 'இழிவறிந்து உண்பான் கண் இன்பம்போல் எய்தும்
> கழிபேர் இரையான்கண் நோய்' -(குறள். 946)

என்ற குறள் கருத்து விளக்கப்பட்டுள்ளது.

அருத்தாபத்தி, தன்னொடு மறுதலைப்பட்டது ஒன்று உள்ளவழியேதான் இனம்செப்பும் ; மறுதலைப்பொருள் பல உள்வழி இனம் செப்பாது - என்ற செய்தி நன்கு விளக்கப் பட்டுள்ளது. இச்செய்தி சேனாவரையர் கருத்தை மறுப்பது.

'கீழைச்சேரிக் கோழி அலைத்தது' என்றால் 'மேலைச்சேரிக் கோழி அலைப்புண்டது' என்பது அருத்தா பத்தியால் பெறப்படுவது. இதனை அச்சொல் ஆற்றலே தெரிவிக்கும் என்பது இவர்கொண்ட முடிவு.

## தெய்வச்சிலையார் உரை

### 59. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.

இது சொல்லின்கண் கிடந்தது ஒரு குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : எடுத்துச் சொல்லப்பட்ட சொல் தனக்கு இனம் ஆகிய பொருளைச் சொல்லுதலும் உரித்து எ-று. உம்மையான் சொல்லாமையும் உரித்து எ-று.

தென்சேரிக் கோழி வென்றது என்றவழி, வடசேரிக் கோழி தோற்றது என்னும் பொருளும் காட்டி நின்றது. இஃது இனம் செப்பியது.

அந்தணர் வாழ்க என்றவழி, அரசரும் வணிகரும் கெடுக என்றவாறு அன்றி, அந்தணரையே குறித்து நின்றது. இஃது இனம் செப்பாது நின்றது.

இன்னும் இச்சூத்திரத்தின்கண் 'இனம் செப்பலும் உரித்து' என்றதனானே, இனம் அல்லாதன செப்பலும் உரித்து என்று கொள்ளப்படும். அவ்வாறு வருவன ஏற்புழிக் கொள்க. சுமந்தான் வீழ்ந்தான் என்றவழி, சுமவாதான் வீழ்ந்திலன் என்னும் பொருள்படுதலே அன்றிச் சுமக்கப்பட்டதும் வீழ்ந்தது எனச் செப்பியவாறும் கண்டுகொள்க. பிறவும் அன்ன. (59)

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**59. 'எடுத்தமொழி'-**

குறிப்பிடும் சொற்றொடர் தனக்கு இனமான செய்தியை அறிவிப்பதும் உண்டு; அறிவியாது இருப்பதும் உண்டு. அந்தணர் வாழ்க - இனம் செப்பாது.

இனம் செப்பலும் உரித்து என்பதனை இனம் அல்லாதன செப்பலும் உரித்து என்று பொருள் செய்து குடம் சுமந்தான் வீழ்ந்தான் என்றவழிக் குடம் வீழ்தலையும் கொள்க என்கின்றார்.

'அந்தணர் வாழ்க' என்பது இனம் செப்பாமையின் காரணத்தை நச்சினார்க்கினியரும் கல்லாடனாரும் கூறுவர்.

## கல்லாடனார் உரை

## 61. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.

என்-எனின், இஃது அருத்தாபத்தி மேற்று.

இ-ள் : விதந்தமொழி தன் இனத்தைக் காட்டி நிற்றலும் உரித்து, உம்மையால் காட்டாது நிற்றலும் உரித்து எ-று.

எ-டு : கீழ்ச்சேரிக் கோழி அலைத்தது என்புழி மேல்சேரிக் கோழி அலைப்புண்டது என்பது சொல் லாமையே முடிந்ததாம். குடம் கொண்டான் வீழ்ந்தான் எனக் குடம் வீழ்தலும் முடிந்தது. இவை இனம் செப்பின. ஆவாழ்க, அந்தணர் வாழ்க - என்பன இனம் செப்பாதன.

இவையும் இனம் செப்பின என்னாமோ எனின், சொல்லுவான் கருத்து அஃது அன்மையானும், மறுதலை பல உள்வழி இனம் செப்பாமையானும் இனம் செப்பா ஆயின என உணர்க. (61)

## கல்லாடனார் உரைவிளக்கம்

**61. 'எடுத்த . . . உரித்தே.'-**

அருத்தாபத்தி - சொல்லியன கொண்டு சொல்லாதன வற்றையும் உணர்தல். ஆவாழ்க, அந்தணர் வாழ்க - இனம் செப்பாதன.

மறுதலை பல உள்ளவழி இனம் செப்பாது என்பதனை உணர்தல் வேண்டும்.

## ஒருவர் உரை

### 61. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.

இஃது அருத்தாபத்தி கூறுகின்றது.

எ-து : இனம் ஆகிய பொருட்கண் ஒன்றை விதந்து கூறியவழி, அச்சொல் தனக்கு இனமாகிய பிறபொருளைக் குறிப்பால் உணர்த்தலும் உரித்து.

எடுத்த மொழி - விதந்த சொல்.

எ-டு : அறம் செய்தான் துறக்கம்புகும் என்றவழி, மறம் செய்தான் நிரயம் புகும் என்பது உணர்த்திற்று.

இழிபு அறிந்து உண்பான் இன்பம் எய்தும் என, கழிபேர் இரையான் இன்பம் எய்தான் என்பது உணர்த்திற்று.

குடம் கொண்டான் வீழ்ந்தான் என, குடம் வீழ்ந்தது சொல்லாமல் முடிந்தது. பிறவும் அன்ன.

'இனம் செப்பலும் உரித்தே' என்னும் உம்மையால், செப்பாமையும் உரித்து.

'ஆ வாழ்க; அந்தணர் வாழ்க' என்றால், ஒழிந்தனவும் ஒழிந்தாரும் சாக என்பது அன்று எனக்கொள்க. (61)

## சாத்திரியார் உரை

### 60. 'எடுத்த . . . உரித்தே.'

உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும் இச்சூத்திரம் அருத்தாபத்தியைக் கூறுகின்றது என்றே கருதினர். நச்சினார்க்கினியார் உரையாசிரியர் கூறுவதுபோல் இச்சூத்திரம் அருத்தாபத்தியைக் கூறுகிறது என்று கூறிச் சேனாவரையர் காட்டிய உதாரணத்தையும் காட்டினார்.

சேனாவரையர் கூறும் பொருள், 'தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்' சொ. 440 என்ற சூத்திரத்துக்கு அவர் கூறிய பொருளுள் அடங்கும்.

'அறம் செய்தான் சுவர்க்கம் புகும்' என்பது இனப்பொருள் இயல்பு உரைக்குங்கால் 'மறம் செய்தான் சுவர்க்கம் புகான்' என்று இனம் செப்புவது சொல்லாற்றலாலா? பொருள் ஆற்றலாலா? ஆதலின் உரையாசிரியர், தெய்வச்சிலையார் கொள்கையே பொருந்தும்.

## பாலசுந்தரனார் உரை

### 60. 'எடுத்தமொழி இனம் செப்பலும் உரித்தே.'

ஆ வாழ்க, அந்தணர் வாழ்க என்போன் பிறவும் பிறரும் வீழ்க எனும் கருத்தினனாயின் ஆக்களே வாழ்க. அந்தணர்களே வாழ்க என விதந்து கூறுதலன்றி இங்ஙனம் கூறுதல் மரபு அன்று என்க. இனி, 'ஒன்றெனமுடித்தல்' என்னும் உத்தியான் சோறு உண்டான் என்றவழிக் கறியும் துவையும் நீரும் உடன் உண்ணப் பட்டமை உணர்த்தலும், பறை முழங்கிற்று என்ற வழிக் கொம்பு முதலியவை உடன் இசைக்கப்பட்டமை உணர்த்தலும், நஞ்சு உண்டான் சாம் என்றவழி ஏனைப்பாலும் உடன் உணர்த்தலும், பரதவர் சென்றபடகு கவிழ்ந்தது என்றவழிப் பரதவரும் கவிழ்ந்தார் என உணர்த்தலும், குடத்தைச் சுமந்து சென்றவன் வீழ்ந்தான் என்றவழிக் குடமும் வீழ்ந்தது என உணர்த்தலும் இவைபோல்வன பிறவும் இனம் செப்புதலாகக் கொள்க.

## பதிப்பாசிரியர் குறிப்பு

60. ஆ வாழ்க, அந்தணர் வாழ்க என்போன், பிறரும் பிறவும் வீழ்க என்னும் கருத்தினனாயின் ஆவே வாழ்க, அந்தணரே வாழ்க என விதந்தே கூறுவான் -என்பது ச. பா. மறுப்புரை.

## இளம்பூரணர் உரை

### திணை வழுக்காத்தல்

*62. கண்ணும் தோளும் முலையும் பிறவும்*
*பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி,*
*பன்மை கூறும் கடப்பாடு இலவே*
*தம்வினைக்கு இயலும் எழுத்துஅலங் கடையே.*

எ . . . ன், திணைவழூஉக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : கண்ணும் தோளும் முலையும் பிறவும் பன்மைப்பாலாற் கூறுதல் கடப்பாடில, தம் வினைக்கு இயலும் எழுத்து அல்லாதவிடத்து என்றவாறு.

உதாரணம் : கண் நல்லள், தோள் நல்லள், முலை நல்லள் எனவரும்.

'பிறவும்' என்றதனான், புருவம் நல்லள்; காது நல்லள் என்பன போல்வன கொள்க.

இனி, 'ஒருமை சுட்டிய சினைநிலைக் கிளவி ஒருமை கூறும் கடப்பாடில' என்றவற்றுக்கு ஒத்து என்னை பிற எனின், மேல் 'காலம் உலகம்' (சொ. 58) என்று திணை வழூக் காத்து வாராநின்ற அதிகாரத்தினிடையே 'எடுத்த மொழி யினம் செப்பலு முரித்தே' (சொ.61) என்னும் சூத்திரத்தை இடன் அன்றி வைத்தார். அது நிலமாகத் தந்து உரைத்த வற்றையும் கொள்க என்பது.

உதாரணம் : மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள் என வரும். (62)

### இளம்பூரணர் உரைவிளக்கம்

**62. 'கண்ணும் தோளும்' -**

திணைவழுக் காத்து நின்ற அதிகாரத்திடையே அருத்தாபத்தியைக் கூறியதை நிலமாகக் கொண்டு 'ஒருமை சுட்டிய சினைநிலைக் கிளவி, ஒருமை கூறும் கடப்பாடு இல'

என்று கூறி, மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என்பனவற்றை எடுத்துக்காட்டுகிறார். நல்லர் என்று இருப்பின் சிறக்கும்.

இங்கு அதிகாரம் என்பது ஒரு பொருள்நுதலிவரும் பல நூற்பாக்களின் தொகுதி என்னும் பொருளது. எனவே, அதிகாரம் - முறைமை என்னும் இளம்பூரணர், அதிகாரம் என்பதற்குச் சேனாவரையர் கூறிய விளக்கங்களை உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளமை பெற்றாம் (40, 50, 62-இள. உரை).

**சேனாவரையர் உரை**

**எண்ணுப் புறனடை**

*61.* ***கண்ணும் தோளும் முலையும் பிறவும்***
***பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி***
***பன்மை கூறும் கடப்பாடு இலவே***
***தம்வினைக்கு இயலும் எழுத்தலங் கடையே.***

தம்வினைக்கு இயலும் எழுத்தான் முடிதலும், தம் முதல்வினைக்கு இயலும் எழுத்தான் முடிதலும் எனச் சினைநிலைக்கிளவி இருமுடிபு உடையவற்றுள்ளும், முதல்வினைக்கு இயலும் எழுத்தான் முடிவுழி என்பார், 'தம் வினைக்கு இயலும் எழுத்தலங்கடை' என்றார்.

*(இ-ள்)* : கண் முதலாயவும், பிறவும் பன்மை குறித்துநின்ற சினைநிலைக் கிளவி; அவை தம் வினைக்கு இயலும் எழுத்தான் முடியாது தம் முதல்வினைக்கு இயலும் எழுத்தான் முடியும்வழிப் பன்மையான் சொல்லப்படும் யாப்புறவுடைய அல்ல; முதல் ஒன்றாயின் ஒருமையானும், பலவாயின் பன்மையானும் கூறப்படும்.

*(எ-டு)* : கண் நல்லள், தோள் நல்லள், முலை நல்லள் எனவும், கண் நல்லர், தோள் நல்லர், முலை நல்லர் எனவும் வரும்.

'பிறவும்' என்றதனான் புருவம், காது, கால் என்னும் தொடக்கத்தனவும் கொள்க.

பன்மை கொண்டன, பன்மை ஒருமை மயக்கம் இல்லாத் திணை வழு ஆகலின், 'தம் வினைக்கு இயலும் எழுத்தலங்கடை' என்பதனான் அமைக்கப்படும்.

மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என ஒருமைச் சினைப்பெயர் நின்று உயர்திணை கொண்டனவும், நிறம் கரியள், கவவுக் கடியள் எனப் பண்பும் தொழிலும் நின்று உயர்திணை கொண்டனவும் 'தன்னினம் முடித்தல்' என்பதனான் அமைக்கப்படும்.

கோடு கூரிது களிறு, குளம்பு கூரிது குதிரை என அஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல் வினையாகிய ஒருமையான் முடிந்தனவும் அமையுமாறு என்னை எனின், ஆண்டுப் பன்மைஒருமை மயக்கம் அல்லது திணைவழு இன்மையின் ஈண்டைக்கு எய்தா; அப்பன்மை ஒருமை மயக்கம் 'ஒன்றென முடித்தல்' என்பதனான் அமைக்கப்படும். அஃதேல், இச்சூத்திரத்தான் திணை வழுவொடு கூடிய பால்வழு அமைக்கப்பட்டது என்பது எற்றான் பெறுதும் எனின், சினைக்கிளவிக்குத் தம் வினைக்கு இயலும் எழுத்தாவது, அஃறிணை வினைக்குரிய எழுத்தாம்; அஃது அல்லாதது உயர்திணை வினைக்குரிய எழுத்தேயாம்; என்னை? அஃறிணைக்கு மறுதலை உயர்திணையே ஆகலான். அதனான் திணை வழுவுதலும் பெறுதும் என்பது. அஃதேல், தம் வினைக்கு இயலும் எழுத்து ஆவன சினைவினைக்குரிய எழுத்து என்றும், அவை அல்லாதன முதல்வினைக்குரிய எழுத்து என்றும் உரைக்க; உரைக்கவே, உயர்திணைச் சினையும், அஃறிணைச் சினையும் எல்லாம் அடங்கும் எனின், அற்றன்று; அஃறிணைக்கண் சினை வினைக்குரிய எழுத்தொடு முதல்வினைக்குரிய எழுத்திற்கு வேறுபாடு இன்றி எல்லாம் அஃறிணை எழுத்தே ஆகலின், 'தம் வினைக்கு இயலும் எழுத்தலங்கடை' என்பதற்கு ஏலாது; ஆகலான், கண் முதலாயின உயர்திணைச் சினையேயாம் என்பது. *(61)*

## சேனாவரையர் விளக்கம்

**61. கண்ணும் . . . கடையே-**

'கண் நல்லள்' என்றவிடத்துக் கண் அஃறிணை பலவின்பால். அதுகொண்டு முடியும் நல்லள் என்னும் சொல் உயர்திணைப் பெண்பாலாகிய ஒருமைப்பால். எனவே, கண் என்ற சொல் நல்லள் என்ற சொல்லைக் கொண்டு முடியும்போது திணைவழு, பால்வழு என்ற இரண்டும் அமைக்கப்படும்.

கண் நல்லர் என்புழி கண் பலவின்பால்; நல்லர் பலர்பால்; எனவே பால்வழு இன்று. திணைவழுவே அமைக்கப்படும்.

கவவுக்கடியள் - தழுவுதற்கண் பேரார்வமுடையவள். கவவு - தொழில். கோடு கூரிது களிறு: கோடு, கூரிது இரண்டும் அஃறிணை. கோடு - பன்மை, கூரிது ஒருமை. எனவே இத்தொடரில் திணை வழு இல்லை; பன்மை ஒருமைப் பால் வழுவே உள்ளது. அஃது ஒன்றென முடித்தல் என்பதனான் இந்நூற்பாவில் அமைத்துக்கொள்ளப்படும்.

இந்நூற்பாவுள், சினை அஃறிணை, அதற்குரிய முதல் உயர்திணை என்று கொள்வதனாலேயே திணைவழு பால்வழு இரண்டனையும் அமைக்கலாம் என்ப.

தம் வினைக்குரிய எழுத்து - சினை வினைக்கு உரிய எழுத்து;அவை அல்லாதன-முதல் வினைக்கு உரிய எழுத்து என்று பொதுவாக இருதிணைக்கும் கொள்ளலாம் எனின், அஃறிணையில் பன்மைச்சினைக்கும் பன்மை முதற்கும் 'யானைகள் கோடு கூரிய' என்றாற்போல ஒரே வகையாக வேறுபாடின்றி அமைதல், 'தம் வினைக்கு இயலும் எழுத்து அல்லாத இடத்து' என்ற தொடருக்குப் பொருந்தாது. ஆதலின் கண் முதலியன உயர்திணைச் சினைகளாகவே கொள்ளப்படவேண்டியவையாம்.

பீலி பெய் சாகாடும் அச்சு இறும் : சாகாடு முதல்; இறும் முதல்வினை - அச்சின்கண் இறும் என்பது பொருள். அச்சு சினை. இறும் சினைவினையாயின் சாகாட்டு அச்சு இறும் என அமைதல்வேண்டும் -- நுண்பொருள்மாலை.

## நச்சினார்க்கினியர் உரை

### திணை வழுக்காத்தல்

***62. கண்ணும் தோளும் முலையும் பிறவும்***
***பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி;***
***பன்மை கூறும் கடப்பாடு இலவே***
***தம்வினைக்கு இயலும் எழுத்துஅலங் கடையே.***

என்-எனின், திணைவழூக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : கண்ணும் தோளும் முலையும் பிறவும்-கண்ணும் தோளும் முலையும் பிறவும் ஆகிய; பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி-பன்மைப் பொருளை உணர்த்திய சினைநிலைமை உணர நின்ற சொற்கள்; பன்மை கூறும் கடப்பாடு இலவே - தம் பன்மையால் கூறுதலையே இலக்கண முறையாக உடைய அல்ல; அதிகாரத்தானும் உயர் திணையாய் முடிதல் உடைய; எப்பொழுதுமோ எனின், அற்று அன்று; தமது வினைக்கு ஏற்ற எழுத்தினான் சொல்ல நினையாது, தம் முதல்வினையால் சொல்லக் கருதிய பொழுது எ-று.

எ-டு : கண் நல்லள், தோள் நல்லள், முலை நல்லள் - எனவரும்.

'பிறவும்' என்றதனான், புருவம் நல்லள், காது நல்லள் - எனவும் வரும்.

திணைவழூ அதிகாரம் கூறிவாராநின்றதன் இடையே, 'எடுத்த மொழி' என்று இயைபு இல்லது கூறிய அதனான், ஒருமைச் சினை உயர்திணையாய் முடிவனவும் கொள்க.

எ-டு : மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள் என வரும்.

இதனான் சொல்லியது, உயர்திணைச் சினைப்பொருள் தனக்கு ஏற்ற சினைவினைகொள்ளாது முதல்வினை கொண்டு முடிவன கண்டு அதனை அமைத்தவாறு என்க.

'வினையின் தோன்றும் பால்அறி கிளவி' முதலாக இத்துணையும் சென்ற ஆராய்ச்சி, எண்வகை இலக்கணத் துள்ளும் எழுவகை வழு ஆராய்ச்சி என உணர்க.

## நச்சினார்க்கினியர் உரைவிளக்கம்

**62. கண்ணும் தோளும் -**

கண், தோள் முதலிய பன்மைச்சினைகள், தம் வினையைக்கொண்டு முடியும்போது கண் நொந்தன என்றாற் போலப் பன்மைவினையையே கொண்டு முடியும். ஆனால் அவை தம் முதல்வினையைக் கொண்டுமுடியும்போது பன்மை முடிவுகொள்ளவேண்டும் என்ற வரையறை இன்று; முதல் ஒருமையானால், ஒருமை வினையைக்கொண்டு கண் நொந்தான், தோள்மெலிந்தாள் - என்று முடியும்; முதல் பன்மையானால், கண் நொந்தார் என்று பன்மை வினையைக் கொண்டு முடியும்.

கண், தோள், முலை, கை, கால், புருவம், காது என்பன பன்மைச்சினை.

மூக்கு, வாய், கொப்பூழ் போல்வன ஒருமைச்சினை. இவ்வொருமைச் சினைகளும் முதல்வினையைக் கொண்டு முடிவுழி, முதல் ஒருமையானால் ஒருமைவினையையும், பன்மையானால் பன்மை வினையையும் கொண்டு முடியும்.

(எ-டு) மூக்கு நல்லன், நல்லள், நல்லர் என்றாற்போல்வன.

இனமான பொருள்களைக் கூறப்பட்ட விதியில் இணைத்துக்கொண்டு கூறுதல் தன்னினம் முடித்தல் என்ற உத்தியாம்.

அஃறிணையிலும் கோடு, குளம்பு முதலிய பன்மைச் சினை ஒருமை முதலைக்கொண்டு முடிதலும் உண்டு. கோடு கூரிது களிறு, குளம்பு கூரிது குதிரை: கூரிது என்பது ஒருமை முதலின் வினை; அதனைக் கோடு, குளம்பு என்ற பன்மைச்சினைகளும் கொண்டு முடிந்தன.

## தெய்வச்சிலையார் உரை

*60. கண்ணும் தோளும் முலையும் பிறவும்*
*பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி*
*பன்மை கூறும் கடப்பாடு இலவே*
*தம்வினைக்கு இயலும் எழுத்துஅலங் கடையே.*

ஒருசார் பால்அறிசொற்கண் கிடந்தது ஒருமரபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : கண்ணும் தோளும் முலையும் அத்தன்மைய பிறவும் ஆகிய பன்மை சுட்டிய சினை உணர வரும்சொல், தம் வினைக்கு ஏற்ற எழுத்தான் முற்றுப்பெறாதவழிப் பன்மை உணர்த்தும் மரபுஇல எ-று.

எனவே, பன்மை ஈற்றான் வாராக்கால் ஒருமை ஈற்றான் வரப்பெறும் என்பதூஉம், அவ்வழி அவ்விரு பொருட் கண்ணும் கிடப்பது ஒரு பொதுமையைக் குறிக்கும் என்பதூஉம் கொள்ளப்படும். கண் நொந்தது, முலை எழுந்தது, தோள்தசைத்தது என்றவழி, பன்மை உணர்த்திற்றில ஆயினும், அச்சாதி ஒருமையை உணர்த்தியவாறு கண்டு கொள்க. பிறவும் என்றதனான், கை, கால் என்பனவும் கொள்க. 'இருநோக்கு இவள்உண்கண் உள்ளது' (குறள்-1091) என்றவழி, நோக்கு ஆகிய ஒருமை குறித்து வந்தது. 'ஒப்பக்கூறல்' என்னும் தந்திர உத்தியான், சினைப்பொருளே அன்றி முதற்பொருளும் சாதி ஒருமை பற்றி வருவனவும் அமைத்துக்கொள்க. உள்ளியது எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தான்- உள்ளான் வெகுளி எனின்' (குறள் 309) : இதனுள் 'உள்ளிய எல்லாம்' எனற்பாலது நினைக்கப்படுதல் ஆகிய

ஒருமை குறித்து வந்தது. அஃதேல், கண் நல்லன் என்பது எவ்வாறு வந்தது எனின், கண்ணது நன்மை உடையன் என்னும் பொருள்பட வந்தது. கண் நொந்தான் என்பது எவ்வாறு வந்தது எனின், கண் நோவப்பட்டான் எனச் செயப்படுபொருள் குறித்து நின்றது. இவை வினையியலுள் காணப்படும். *(60)*

## தெய்வச்சிலையார் உரைவிளக்கம்

**60. 'கண்ணும் தோளும்'-**

கண் தோள் முலை முதலியன இரண்டு இரண்டாக இருப்பினும், அவ்விரு பொருட்கண்ணும் பொதுவாக நிகழும் நிகழ்ச்சியைக் குறிக்கக் கண் நொந்தது, முலை எழுந்தது, தோள் தசைப் பற்றுடையதாயிற்று எனச் சாதி ஒருமையாகக் கொள்க. நோதல்தொழில் கண்கள் இரண்டற்கும் ஒத்தலின் ஒருமைவினை கொள்ளப்பட்டது.

எந்தவகைப் பார்வைகளும் இரு கண்களுக்கும் ஒரே தன்மையவாய் இருத்தலின் நோக்குதல் ஒருமையால் 'இவள் உண்கண் இருநோக்கு உள்ளது' எனப்பட்டது.

ஒப்பக்கூறல் - நூற்பாவுள் ஒரு பொருளுக்குக் கூறப் பட்ட செய்தி, நூற்பாவுள்கூறப்படாத பிறிது ஒரு செய்திக்கும் பொருந்துமாயின் அக்கூறப்படாத செய்தியையும் உரையில் இணைத்துக் கொண்டு விளக்குதல்.

சினைப் பொருளுக்குக் கொள்ளப்பட்ட சாதி ஒருமையை முதற்பொருளுக்கும் கொள்ளவேண்டும் என்பது. 'உள்ளிய எல்லாம்' என்ற பன்மைப் பொருளை 'உள்ளியது எல்லாம்' *(குறள்-309)* என்ற ஒருமையாலும் கூறலாம் என்பது.

***உள்ளியதெல்லாம்*** - தன் மனத்தால் வெகுளியை ஒருகாலும் நினையானாயின், தான் கருதிய பேறு எல்லாம் ஒருங்கே பெறும்.

கண் நல்லன் - கண்ணினது நன்மையை உடையவன்.

கண் நொந்தான் - கண் நோவப்பட்டான். கண்ணினுடை நோதலை அனுபவித்தான் என்பது. பன்மைச்சினை ஒருமை முதல்வினையைக் கொண்டது என்று பிறர் கூறவும், இவர் வேறுவித விளக்கம் தருதல் குறித்துணரத்தக்கது.

**கல்லாடனார் உரை**

62. ***கண்ணும் தோளும் முலையும் பிறவும்***
***பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி***
***பன்மை கூறும் கடப்பாடு இலவே***
***தம்வினைக்கு இயலும் எழுத்துஅலங் கடையே.***

என்-எனின், திணைவழுக்காத்தல் நுதலிற்று.

இ-ள் : கண்ணும் தோளும் முலையும் பிறவும் ஆகிய பன்மைப் பொருளை உணர்த்திய சினைநிலைமை உணர நின்ற சொற்கள் தம் பன்மையான் கூறுதலையே இலக்கண முறையாக உடைய அல்ல; அதிகாரத்தானும் உயர் திணையாய் முடிதல் உடைய; எப்பொழுதுமோ எனின், அற்று அன்று; தமது வினைக்கு ஏற்ற எழுத்தினான் சொல்ல நினையாது, தம் முதல்வினையால் சொல்லக் கருதிய பொழுது எ-று.

எ-டு : கண் நல்லள், தோள் நல்லள், முலை நல்லள் - எனவரும்.

‘பிறவும்’ என்றதனான், புருவம் நல்லள், காது நல்லள் - எனவும் வரும்.

திணைவழு அதிகாரம் கூறிவாராநின்றதன் இடையே, ‘எடுத்த மொழி’ என்று இயைபு இல்லது கூறிய அதனான், ஒருமைச் சினை உயர்திணையாய் முடிவனவும் கொள்க.

எ-டு : மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள் என வரும்.

இதனால் சொல்லியது, உயர்திணைச் சினைப்பொருள் தனக்கு ஏற்ற சினைவினைகொள்ளாது முதல்வினை கொண்டு முடிவன கண்டு அதனை அமைத்தவாறு என்க.

'வினையின் தோன்றும் பால்அறி கிளவி' முதலாக இத்துணையும் சென்ற ஆராய்ச்சி, எண்வகை இலக்கணத் துள்ளும் எழுவகை வழு ஆராய்ச்சி என உணர்க.

## கல்லாடனார் உரைவிளக்கம்

**62. 'கண்ணும் தோளும் . . . அலங்கடையே.'-**

ஒரு பொருள் பற்றிவரும் பல நூற்பாக்களின் தொகுதி 'அதிகாரம்' என்று உரையில் குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது.

கண் தோள் முலை புருவம் காது என்பன பன்மைச் சினை. இவை பன்மைவினை கொள்ளத்தக்கன. இவை சினைவினையை விடுத்து முதல்வினையைக் கொண்டு முடியின் முதல் ஒருமையாயின் ஒருமை வினையையே கொண்டு முடியும், கண் நல்லள், முலை நல்லள் என்பன போல.

திணைவழு அதிகாரத்தின் (சொ. 57-62) நடுவே அடுத்தாபத்தியைக் குறிப்பிட்ட (சொ. 60) மிகையான் ஒருமைச்சினை உயர்திணையாய் மூக்கு நல்லள் என்றாற் போல முடிவனவும் கொள்ளப்படும்.

இந்நூற்பா உயர்திணைச் சினைப்பொருள் தனக் கேற்ற அஃறிணைவினை கொள்ளாது, முதலுக்கு ஏற்ற உயர்திணைவினை கொண்டு முடிவதனை வழுவமைக் கின்றது.

'வினையின் தோன்றும் பாலறி கிளவி' முதலாக இத்துணையும் சென்ற ஆராய்ச்சி, எண்வகைச் சொல்லி லக்கணத்துள் எழுவகையாகக் குறிப்பிடப்பட்ட வழுவா ராய்ச்சி பற்றியது என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஒருவர் உரை

62. *கண்ணும் தோளும் முலையும் பிறவும்*
*பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி*
*பன்மை கூறும் கடப்பாடு இலவே*
*தம்வினைக்கு இயலும் எழுத்துஅலங் கடையே.*

எ-து : கண்ணும் தோளும் முலையும், அவைபோல்வன பிறவும் பன்மையைக் குறித்து நின்ற சினை நிலைமையை உணர்த்திய சொற்கள், தமக்கு உரிய பன்மை வினைக்கு ஏற்ற அகர ஈற்றால் கூறக் கருதாது, தம் முதல்வினைக்கு ஏற்ற ஒருமை ஈற்றானும் பன்மை ஈற்றானும் கூறக் கருதியவழித் தமக்கு உரிய பன்மையான் கூறப்படும் முறைமை உடைய அல்ல.

எ-டு : கண் நல்லன், கண் நல்லள், கண் நல்லர்
தோள் நல்லன், தோள் நல்லள், தோள் நல்லர்
முலை நல்லள், முலை நல்லர் எனவும்,
கண் நொந்தாள், முலை நொந்தாள் எனவும் வரும்.

'பிறவும்' என்றதனால் புருவம், காது, கால் முதலியன கொள்க.

'பன்மை கூறும் கடப்பாடு இல' என்றதனான் ஒருமைக்கும் கொள்க.

எ-டு. : மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என்க.

'தம் வினைக்கு எழுத்து அலங்கடையே' என்றதனான், தம் முதலுக்கு இயலும் எழுத்தான் முடியும் என்பதாம்.

இச்சூத்திரம் அஃறிணை உயர்திணையான் முடியுமாறு கூறித் திணைவழு அமைத்தது.

'தன் இனம் முடித்தல்' என்பதனான், கோடு கூரிது களிறு, குளம்பு கூரிது குதிரை எனத் திணைவழு இன்றி, அஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று, முதல்வினை ஆகிய ஒருமையான் முடிவனவும் கொள்க. (62)

## சாத்திரியார் உரை

**61. 'கண்ணும் . . . கடையே.'**

இச்சூத்திரத்துக்குப் பொருள் யாது எனின், தம் வினையாகிய அஃறிணைப் பன்மைக்கு இயலும் எழுத்து அல்லாத இடத்துப் பன்மையைக் குறிக்கும் சினைநிலைக் கிளவியாகிய கண், தோள், முலை முதலியன பன்மையைக் குறிக்கவேண்டும் என்ற நியதி இல்லை. இவன் கண்ணால் கொத்தை என்றால் இரண்டு கண்களும் இல்லா திருக்கும்போதுதான் அத்தொடர் கூறப்படவேண்டும் என்ற நியதி இல்லை; ஒருகண் இல்லாதிருக்கும்போதும் வரலாம். ஒருகால் முடமாக இருப்பவனையும் அவன் காலான் முடவன் என்று கூறலாம்.

இவ்வாறு கூறின் இது பொருளாற்றலால் பெறப்படுமே அன்றிச் சொல்ஆற்றலால் பெறப்படாதே எனின், பொருளாற்றலால் பெறப்படும் 'எடுத்த மொழி' என்ற சூத்திரத்தை அடுத்துப் பொருளாற்றலால் பெறப்படும் இச்சூத்திரம் இருத்தல் நன்கு பொருந்தும் என்க.

## பாலசுந்தரனார் உரை

**61. 'கண்ணும் . . . கடையே.'**

கண் முதலாயவை 'கள்' என்னும் இறுதிநிலை பெறாதவழி ஒருமை வினையான் கூறுதல் வழாநிலையே என்றவாறாம். கண் முதலாயவை பன்மை யாகவே தோன்றும் பொருளாகலின், அவை ஒருமைக்கும் பன்மைக்கும் உரிய அஃறிணை இயற்பெயர் ஆகாமையின் அவைபற்றிய மரபினை விதந்து கூறினார் என்க.

(எ-டு.) கண் நன்று, தோள் நன்று; கண்கள் நல்ல, தோள்கள் நல்ல.

'கடப்பாடு இலவே' என்றதனான், கண்நல்ல, தோள் வலிய,

'அவன் கோலினும் தண்ணிய தடமென் தோளே'
(பட். 301)

எனப் பன்மை வினைக்கண்ணும் ஒருமைச்சொல்லாக வருதல் கொள்க.

கண் நல்லன், கண் நல்லள், தோள் நல்லர் என்பனவற்றிற்கு இவன், இவள், இவர் என்பன தோன்றா எழுவாய். நல்லன் முதலியன இவன் முதலிய எழுவாய்க்கு உரிய முடிபே; கண் முதலிய சினைக்கு உரிய முடிபு ஆகா.

பன்மைச் சினைக்கிளவி எழுவாய் ஆயவழி முடியும் முடிபு பற்றிய ஆராய்ச்சியே இச்சூத்திரத்தான் பேசப் படுகிறது.

## பதிப்பாசிரியர் குறிப்பு

62. இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார், சாத்திரியார், ச. பா. ஆகியோர் புதியனவாகக் கூறும் உரைகளை நோக்கி அவற்றுள் ஏற்பன கொள்க.



# ஒத்த நூற்பாக்கள்

*1. உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே . . .*

**நேமிநாதம் - சொல் - 2**

மக்கள் நரகரே வானோர் எனும் பொருள்கள்
தொக்க உயர் திணையாம்;தூமொழியாய்!-மிக்க
உயிர்உள்ளனவும் உயிர்இல்லனவும்
செயிர்இல் அஃறிணையாம் சென்று.

**நன்னூல் - 261**

மக்கள் தேவர் நரகர் உயர் திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

**இலக்கண விளக்கம் -162**

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவர்அல பிறவே.

**தொன்னூல் விளக்கம் - 50**

திணை இரண்டு என்ப; மக்கள்
தேவர் நரகர் ஆவர் உயர்
திணை; அஃறிணை பிறவே.

**முத்துவீரியம் - பெயர் - 9**

மக்கள் தேவர் நரகர்உயர்திணை;
மற்று உயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை.

**சாமிநாதம் - 34**

உயர்திணை மக்கட் சுட்டாம்;
பகரும் அவர் அல்லது
உயிர் உள்ளவும் இல்லவுமாய்ச்
செல்வது அஃறிணையாம்.

2. ஆடூஉ அறிசொல் . . . யவ்வே.

நேமிநாதம் - சொல் - 4

ஒருவன் ஒருத்தி பலர் ...
ஓங்கு திணைப்பால் ஒருமூன்று.

நன்னூல் - 262

ஆண் பெண் பலர் என முப்பாற்று உயர்திணை.

இலக்கண விளக்கம் -163

ஆண் பெண் பலர் என முப்பாற்று உயர்திணை.

தொன்னூல் விளக்கம் - 50

ஆண் பெண் பலர் உயர்திணை.

முத்துவீரியம் - பெயர் - 10

ஆண் பெண் பலர் என முப்பாற்று உயர்திணை.

சாமிநாதம் - 34

ஆண் பெண் பலர் மூன்று உயர்திணை.

3. ஒன்று அறிசொல்லே . . . அஃறிணை யவ்வே

நேமிநாதம் - சொல் - 4

(ஒன்றுபல என்று)... ஒழிந்தவை
பாங்கில்அஃறிணைப்பால் ஆம்.

நன்னூல் - 263

ஒன்றேபல என்று இருபாற்று அஃறிணை.

இலக்கண விளக்கம் -164

ஒன்றேபல என்று இருபாற்று அஃறிணை.

தொன்னூல் விளக்கம் - 50

ஒன்றுபல அஃறிணை என்ப.

முத்துவீரியம் - பெயர் - 11

ஒன்றே பலஎன்று இருபாற்று அஃறிணை.

சாமிநாதம் - 34

செறி ஒன்றுபல இரண்டும் இழிபால்.

4. பெண்மை சுட்டிய . . . இசைக்கும்.

நன்னூல் - 264

பெண்மைவிட்டு ஆண்அவா வுவபேடு. ஆண்பால்
ஆண்மைவிட்டு அல்லது அவாவுவ பெண்பால்.

இலக்கண விளக்கம் -165

தெய்வமும் பேடுமாம் அவ்விரு பகுதியும்
இவ்வென அறியும் அந்தம் தமக்கு இலவே;
உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.

சாமிநாதம் - 35

அன்ன தெய்வம் பேடுஈறின் முடிவதாம்
திணை ஈற்று ஐம்பாலின் வகுத்திடுவர்.

10. இருதிணை மருங்கின் . . . வருமே.

நேமிநாதம் - சொல் - 5

அன்ஆனும் அள்ஆளும் அர்ஆர் பவ் ஈறுமாய்
முன்னை உயர்திணைப்பால் மூன்றற்கும்-
தன்வினை கொண்டு
ஆய்ந்த துறுடுவும் அஆவவ் ஈறுமாம்
ஏய்ந்த அஃறிணைப்பாற்கு ஈங்கு.

நன்னூல் - 265

படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்து அவற்று ஒருமை பன்மைப் பாலே.

**இலக்கண விளக்கம் -167**

*படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்*
*பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை*
*இடத்து அவற்று ஒருமை பன்மைப் பாலே.*

**முத்துவீரியம் - பெயர் - 12**

*படர்க்கைப் பெயர்வினை முற்றுஇரு திணைபால்*
*அனைத்தும் பெறப்படும்; அல்லன இரண்டும்*
*ஒருமையும் பன்மையும் பெறும்என மொழிப.*

**சாமிநாதம் - 35**

*படர்க்கை முற்றுவினை பெயர் குறிப்பால் திணை*
*பால் விளக்கும்;*
*சொன்னதின் மற்று ஈர்இடமும் திணை பாலின்*
*இடத்தே சொற்குறிப்பால்*
*பெயர்வினையால் ஒருமை பன்மை விளக்கும்.*

*11. வினையின் தோன்றும் . . . மரபினவே.*

**நேமிநாதம் - சொல் - 6**

*பாலே திணையே வினாவே பகர் மரபே*
*காலமே செப்பே கருதுஇடமே-போலும்*
*பிறழ்வும் சினைமுதல் ஒவ்வாப் பிறசொல்*
*உறழ்வும் சிதைந்த உரை.*

**நன்னூல் - 375**

*திணையே பால்இடம் பொழுது வினாஇறை*
*மரபுஆம் ஏழும் மயங்கின் ஆம் வழுவே.*

**இலக்கண விளக்கம் -295**

*திணையே பால்இடம் பொழுது வினாஇறை*
*மரபுஆம் ஏழும் வழாஅல் ஓம்பல்.*

**தொன்னூல் விளக்கம் - 127**

வழூஆம் உரிமை மயங்கிக் கெடின்; அவை
இடம்பால் திணைபொழுது இறைவினா மரபு ஏழே.

**சாமிநாதம் - 58**

வாய்ந்த திணைபால் இடமேகாலம் வினாச்செப்பு
மரபும் வழாஅது ஓம்புக; வழீஇயவழி அமைக்க.

13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.

**நேமிநாதம் - 7**

ஓதும் எதிர்வினா உற்றது உரைத்தலும்
ஏவல் உறுவது கூற்று இந்நான்கும் - பேதாய்
மறுத்தல் உடன்படுதல் அன்று எனினும் மன்ற
இறுத்தலே போலும் இவை.

**நன்னூல் - 386**

சுட்டு மறைநேர் ஏவல் வினாதல்
உற்றது உரைத்தல், உறுவது கூறல்
இனம்மொழி என்னும் எண்இறையுள் இறுதி
நிலவிய ஐந்தும்அப்பொருண்மையின் நேர்ப.

**இலக்கண விளக்கம் - 308**

வினாய பொருள்அறிவுறுப்பது செப்பு; அது
செவ்வன் இறையும் இறைபயப் பதுவும்
எனஇரு வகைத்தாம்; அவற்றுள் இறை பயப்பது
வினாஎதிர் வினாதலும், ஏவலும், மறுத்தலும்,
உற்றது உரைத்தலும், உறுவது கூறலும்
நேர்தலும், சொல் தொகுத்து இறுத்தலும் என்னத்
தேரின் ஓர்ஏழ் திறன் உடைத்து என்ப.

**சாமிநாதம் - 60**

செறிவினா . . . . சான்றனவே.

**நன்னூல் - 385**

அறிவு அறியாமை ஐயுறல் கொளல் கொடை
ஏவல் தரும்வினா ஆறும் இழுக்கார்.

**இலக்கண விளக்கம் - 305**

அறியல் உறவு வெளிப்படுப்பது வினா; அஃது
அறியாமை ஐயம் அறிவு கொடை கொளல்
ஏவலின் வரூஉம் இவ்இரு மூன்றனுள்
கடைநிலை நான்கும் முதல்நிலை அனைய.

**சாமிநாதம் - 60**

அறியாத பொருளை அறிவுறுத்தல்வினா;
அதுதான் அறியாமை ஐயம் இரண்டாம்;
அறிவு கொடை கோள் இறும் ஏவல்
நான்கும் வாய்பாட்டின் வினா அமைவுஆமே.
செறிவினாப் பொருளை அறிவுறுப்பது செப்பு
அதுவே செவ்வன்இறையும் இறைபயப்பாம் அவற்றின்
இறைபயப்பே உறுவது உற்றது எதிர்வினா ஏவல் மறுத்திடலே
உடன்படல் சொல்தொகுத்து இறுத்தல் ஏழெனச் சான்றனவே.

14. வினாவும் செப்பே வினா எதிர் வரினே.

**நேமிநாதம் - சொல் - 7**

எதிர்வினா ... இறுத்தலே போலும்.

**நன்னூல் - 386**

வினாதல் . . . . . இறை.

**இலக்கண விளக்கம் -308**

. . . . . . . இறைபயப்பது வினா எதிர்வினாதல்

**சாமிநாதம் - 60** இறைபயப்பே எதிர்வினா.

*15. செப்பே வழீஇயினும் . . . கிளவியான.*

**நன்னூல் - 386**

... ஏவல் உற்றது உரைத்தல், உறுவது கூறல்,
இனம்மொழி... ... ...அப்பொருண்மையின் நேர்ப.

**இலக்கண விளக்கம் -308**

...இறைபயப்பது... ஏவலும் மறுத்தலும்
உற்றது உரைத்தலும், உறுவது கூறலும்,
நேர்தலும், சொல்தொகுத்து இறுத்தலும் என்ன

**சாமிநாதம் - 60**

... ... ... அவற்றின் இறைபயப்பே
உறுவது, உற்றது, எதிர்வினா, ஏவல் மறுத்திடலே
உடன் படல், சொல்தொகுத்து இறுத்தல் ஏழெனச்
சான்றனவே.

*16. செப்பினும் . . . பொருளே.*

**நேமிநாதம் - சொல் - 6**

பிறழ்வும் சினைமுதல் ஒவ்வாப் பிறசொல்
உறழ்வும் சிதைந்த உரை.

**நன்னூல் - 387**

வினாவினும் செப்பினும் விரவா சினைமுதல்.

**இலக்கண விளக்கம் -309**

செப்பினும் வினாவினும் சினைமுதல் கிளவிக்கு
அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.

*17. தகுதியும் வழக்கும் . . . இலவே.*

**நேமிநாதம் - சொல் - 11**

வழக்கும் தகுதியுமாய் வந்துஒழுகும் சொற்கள்
இழுக்கல்ல முன்னை இயல்பு.

**நன்னூல் - 267**

இலக்கணம் உடையது, இலக்கணப் போலி
மரூஉ என்று ஆகும் மூவகை இயல்பும்;
இடக்கர் அடக்கல், மங்கலம், குழூஉக்குறி
எனும்முத் தகுதியோடு ஆறுஆம் வழக்கியல்.

**இலக்கண விளக்கம் -168**

இலக்கணம் உடையது, இலக்கணப் போலி
மரூஉ என்று ஆகும் மூவகை இயல்பும்;
இடக்கர் அடக்கல், மங்கலம், குழூஉக்குறி
எனும்முத் தகுதியோடு ஆறுஆம் வழக்கியல்.

**முத்துவீரியம் - பெயர் -14, 15, 16 - ஒழிபு - 54**

இயல்பும் தகுதியும் என வழக்கு இருமைய
அவற்றுள்,
இயல்பு - மரூஉ, இலக்கணம் உடையன, இலக்கணப்
போலி என்மனார் கற்றுணர்ந்தோரே.
தகுதி - குழூஉக்குறி, மங்கலம், இடக்கர்-
அடக்கல் என்மனார் அறிந்திசி னோரே.
தகுதியும் வழக்கையும் தக்கோர் வரையார்.

**சாமிநாதம் - 36**

இலக்கணமது உடையது இலக்கணப் போலி
மரூஉச் சொல் இயல்பு மூன்று;
இடக்கரும் மங்கலம் குழூஉக் குறியும்
பலத்தகுதி மூன்று;
இவைகள் ஆறுமே வழக்காம்.

*18.* இனச்சுட்டு . . . செய்யுளாறே.

**நன்னூல் - 261**

பொருள்முதல் ஆறுஆம் அடைசேர் மொழி, இனம்
உள்ளவும் இல்லவும் ஆம், இருவழக்கினும்.

**இலக்கண விளக்கம் -312**

பொருள்முதல் ஆறுஆம் அடைசேர்மொழி, இனம்
உள்ளதற்கு உரித்து; இல்லதற்கும் ஒரோவழி.

**சாமிநாதம் - 61**

பொருள்முதல் ஆறினையும் ஏன்றுஅடைசேர்மொழி
இனம் உள்ளதால் குறித்து, இல்லதற்கும் ஏற்புடைத்து;
ஒரோவழியே ஈரிடத்தும் இசைப்பர்.

**சாமிநாதம் - 63**

இனம் உளபண்பாம் வழக்கில்,இலதாம் செய்யுட்கே.

**19. இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்.**

**நன்னூல் - 404**

இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தல்;

**இலக்கண விளக்கம் -313**

இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தலும்

**முத்துவீரியம் - ஒழிபு - 55**

இயற்கைப் பொருளை இற்றுஎனக் கிளத்தல்.

**சாமிநாதம் - 61**

இயற்கைப் பொருளை இற்றுஎனச் சொல்லும்.

20. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்

**நன்னூல் 405**

ஆக்கம் பெற்று . . . இயலும் செயும் பொருள்.

**இலக்கண விளக்கம் -313**

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறலும்

**முத்துவீரியம் - ஒழிபு - 56**

செயற்கைப் பொருளை ஆக்கமொடு செப்பல்.

**சாமிநாதம் - 61**

செயற்கைப் பொருள்நிலை ஆக்கத்து இசைப்பின்.

*21.* ஆக்கம் தானே காரணம் முதற்றே.

**நன்னூல் - 405**

காரணம் முதற்றா ஆக்கம் பெற்றும்
. . . . . . . . இயலும் செயும்பொருள்.

**இலக்கண விளக்கம் -313**

ஆக்கம் காரண முதற்றே ஆகலும்

**முத்துவீரியம் - ஒழிபு- 57**

ஆக்கம் தானே காரணம் முதற்றே.

**சாமிநாதம் - 61**

ஆக்கம் முன் காரணம் ஊன்றல் செய்யுட்கு ஆகும்.

*22.* ஆக்கக்கிளவி . . . வழக்கினுள்ளே.

**நன்னூல் - 405**

காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்
ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்
இருமையும் இன்றியும் இயலும் செயும்பொருள்.

**இலக்கண விளக்கம் -313**

ஆக்கம் காரணம் இன்றியும் வழக்கிடைப்
போக்குஇன்று ஆதல் போற்றினர் கொளலே.

**முத்துவீரியம் - ஒழிபு - 58**

வழக்கினுள் ஆக்கம் காரணம் இன்றியும்
வரூஉம் ஆராயும் காலத் தானே,

கோபலய்யர் - *43*

**சாமிநாதம் - 61**

ஆக்கம்முன்காரணமும் ஊன்றல் செய்யுட்கு ஆகும்;
காரணம் இன்றி ஆக்கத்துடன் சொல்லும்வழி வழக்கு
இடத்துள் உள்ளது மரபு அடைவே.

*23. பால் மயக்குற்ற . . . கூறல்.*

**நேமிநாதம் - சொல் - 8**

ஐயம் திணைபாலில் தோன்றுமேல் அவ்விரண்டும்
எய்தும் பொதுமொழியால் ஈண்டுஉரைக்க
... ... ... ... ... ... ... ...
பன்மை உரைத்தல் பண்பு.

**நன்னூல் - 376**

ஐயம் திணைபால் அவ்வப் பொதுவினும்
... ... ... ... ... ... ... ... ... விளம்புப.

**இலக்கண விளக்கம் -296**

திணை மயக்குற்ற ஐயப் பொருளையும்
பால் மயக்குற்ற ஐயப்பொருளையும்
. . . . . பன்மை சுட்டலும் செவ்விய என்ப.

**முத்துவீரியம் - ஒழிபு - 59**

திணை துணிந்து அதன்பால் துணியப் படாத
ஐயக் கிளவி அவ்வப் பொருள்வயின்
பன்மை கூறல் என்மனார் புலவர்.

**சாமிநாதம் - 58**

... ... ... ...வாய்ந்த திணைபால் களிலே
ஐயம் உற்றால் பொதுச்சொல் அறைந்திடுக.

*24. உருபு என மொழியினும் . . . காலை.*

**நேமிநாதம் - சொல் - 8**

ஐயம் திணைபாலில் தோன்று மேல் அவ்விரண்டும்
எய்தும் பொதுமொழியால் ஈண்டு உரைக்க.

**நன்னூல் – 376**

ஐயம் திணைபால் அவ்வப் பொதுவினும்
... ... ... ... ... விளம்புப.

**இலக்கண விளக்கம் – 296**

திணை மயக்குற்ற ஐயப் பொருளையும்
பால் மயக் குற்ற ஐயப் பொருளையும்
உருவே ......அஃறிணைப் பிரிப்பின் அறைதலும்
... ... ... ... ...செவ்விய என்ப.

**தொன்னூல் விளக்கம் – 128**

ஐயம் திணைபால்அணையும் பொதுவே.

**முத்துவீரியம் – ஒழிபு – 60**

ஐயமாம் இருதிணை அகத்தும் உருபைச்
செப்பினும்என்மனார் தெளிந்திசி னோரே.

25. தன்மை சுட்டலும் . . . வேறிடத்தான.

**நேமிநாதம் – சொல் – 8**

ஐயம் திணைபாலில் தோன்றுமேல்-மெய் தெரிந்தால்
அன்மை துணி பொருள்மேல் வைக்க.

**நன்னூல் – 376**

ஐயம் திணைபால் . . . . . . . .
மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புப.

**இலக்கண விளக்கம் – 296**

திணைமயக் குற்ற ஐயப் பொருளையும்
பால்மயக் குற்ற ஐயப் பொருளையும்
துணிந்துழி அன்மைஅல்லாமை
மறுப்பதன் மருங்கினும் மற்றவை இடத்தும்
திறப்படச் சுட்டலும் செவ்விய என்ப.

**முத்துவீரியம் - ஒழிபு - 61**

*... ... ... ஐயுற்றுத் துணிதரும் வழி அன்மைத்*
*தன்மையைச் சுட்டலும் உரிய ஆகும்.*

**சாமிநாதம் - 58**

*துணிவில் அன்மை மொழிக.*

*26. அடைசினை . . . சினைச்சொல்.*

**நேமிநாதம் - சொல் - 15**

*திண்ணம் அடையும் சினையும் முதலுமாய்*
*வண்ணச் சினைச்சொல் வரும்.*

**நன்னூல் - 403**

*அடைசினை முதல்முறை அடைதலும், ஈரடை*
*முதலோடு ஆதலும்வழக்கியல்; ஈரடை*
*சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.*

**இலக்கண விளக்கம் - 314**

*அடைசினை முதல்முறை அடைதலும், ஈரடை*
*முதலோடு ஆதலும் வழக்கியல்; ஈரடை*
*சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.*

**தொன்னூல் விளக்கம் - 93**

*அடைசினை முதல்முறை அடைதலும், ஈரடை*
*முதலோடு ஆதலும் வழக்கியல்; ஈரடை*
*சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.*

**முத்துவீரியம் - ஒழிபு - 62**

*பண்பும் சினையும் முதலும் முறையே மயங்காது*
*இயலும் வண்ணச் சினைச்சொல்.*

**சாமிநாதம் - 62**

*அடைசினைகள் முதல் ஏற்கும்;*
*ஈரடைகள் முதலே அடைதலும் ஆம் வழக்கினுக்கு;*
*செய்யுட்கு ஈர்அடையா.*

27. ஒருவரைக்கூறும் . . . அல்ல.

நேமிநாதம் - சொல் - 11

நன்னூல் - 379

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.

இலக்கண விளக்கம் -299

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் சொல்நோக்கினும் திணைபால் அவை
வழுக்கினும் வழுஎன வரையார் என்ப.

சாமிநாதம் - 58

இழிபு, சொல்நோக்கு உயர்வுஉவகை சினம் சிறப்பு
ஆறினும் வேய்ந்த திணைபால் வழுவும் வழுவிலாம்.

**28. செலவினும் வரவினும் . . . என்ப.**

நன்னூல் - 381

தரல் வரல் கொடை செலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.

இலக்கண விளக்கம் -301

தரல் வரல் கொடை செலல் எனஇவை நான்கும்
ஒருமூ விடத்திற்கும் உரிய.

**29. அவற்றுள், தருசொல் . . . இடத்த.**

நன்னூல் - 381 தரல் . . . ஏற்கும்.

இலக்கண விளக்கம் -301

தரல் வரல் தன்மை முன்னிலையையும்
… … … … எய்தும் என்ப.

தொன்னூல் விளக்கம் - 122

வரல் தரல் மூவிடம் மருவுதற்கு உரிய.

முத்துவீரியம் - ஒழிபு - 64

*தரல் வரல் கொடை செலல் சாரும் படர்க்கை*
*எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்.*

**30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.**

நன்னூல் - 381

*கொடை செலல் சாரும் படர்க்கை.*

இலக்கண விளக்கம் -301

*ஏனைய ஏனை இடத்தையும் எய்தும்.*

தொன்னூல் விளக்கம் - 122

*செலல் கொடை சேரும் படர்க்கை ஒன்றே.*

முத்துவீரியம் - ஒழிபு - 64

*கொடை செலல் சாரும் படர்க்கை.*

**31. யாது எவன் . . . தோன்றும்.**

இலக்கண விளக்கம் -306

*யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும்*
*அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.*

முத்துவீரியம் - ஒழிபு - 65

*யாது எவன் அறியாப் பொருளொடு சிவணும்.*

**32. *அவற்றுள்,***

**யாது என ... ... ... ...உரித்தே.**

இலக்கண விளக்கம் -307

*அவற்றுள்,*
*யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி*
*அறிந்த பொருள் வயின் ஐயம் தீர்தற்குத்*
*தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.*

முத்துவீரியம் - ஒழிபு - 66

அவற்றுள்,
யாது ஐயம் நீக்கற் பொருளொடு நிலையும்.

**33. இனைத்தென . . . வேண்டும்.**

நேமிநாதம் - சொல் - 12

... ... ... ... ... ... எண்ணி
இனைத்து என்று அறிந்த சினைமுதல்பேர்க்கு எல்லாம்
வினைப் படுப்பின் உம்மை மிகும்.

நன்னூல் - 399

இனைத்து என்று அறிபொருள் ... ... ...
வினைப்படுத்து உரைப்பின் உம்மைவேண்டும்.

இலக்கண விளக்கம் -315

இனைத்து என்று அறிபொருள் . . . . . . . .
வினைப்படு தொகுதிக் கண்ணும் முற்றும்மை
தெற்றெனப் பெறுதல் செவ்விது என்ப.

தொன்னூல் விளக்கம் - 135

வரைப்படும் எண்ணும் . . . . .
வினைப்படின் உம்மை வேண்டும்.

முத்துவீரியம் - ஒழிபு - 67

இனைத்தென அறிந்த சினைக்கும் முதற்கும்
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.

சாமிநாதம் - 62

இனைத்தென்றறி பொருள்...
வினைப்படு தொகுதிக்கண் முற்றாம் உம்மைபெறும்.

**34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.**

**நன்னூல் - 399**

*. . . உலகின் இலாப்பொருள் (உலகின் நிலாப்பொருள்)*
*வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டும்.*

**இலக்கண விளக்கம் -315**

*. . . . உலகி னிலாப் பொருள்*
*வினைப்படு தொகுதிக் கண் எச்ச உம்மை*
*தெற்றெனப் பெறுதல் செவ்விது என்ப.*

**தொன்னூல் விளக்கம் - 135**

*. . . . . வையகத்து இல்லவும்*
*வினைப்படின் உம்மை வேண்டும்.*

**முத்துவீரியம் - ஒழிபு - 68**

*இல்லாப் பொருளும் அன்ன இயற்றே.*

**சாமிநாதம் - 62**

*நாட்டில் இலாப்பொருள் . . .*
*வினைப்படு தொகுதிக்கண். . . எச்ச உம்மைபெறும்.*

**35. எப்பொருள் ஆயினும் . . . கூறல்.**

**நன்னூல் - 406**

*தன்பால் இல்லது இல்எனின், இனனாய்*
*உள்ளது கூறி மாற்றியும்...*
*... ... ... உரைப்பர் சொற் சுருங்குதற்கே*

**இலக்கண விளக்கம் -310**

*இல்லது அல்லது இல்லதனான் இல்எனின்,*
*அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறியும்*
*. . . . . . . . . . . . . மாற்றுவர் சொல் சுருங்குதற்கே.*

முத்துவீரியம் - ஒழிபு - 69

யாதெனும் ஒருபொருள் அல்லதுஇல் என்பான்
அஃதுஅல பிறபொருள் அறைவது வழக்கே.

**36. அப்பொருள் கூறின் சுட்டிக்கூறல்.**

நன்னூல் - 406

உள்ளது, சுட்டியும் உரைப்பர் சொல்சுருங்கு தற்கே.

இலக்கண விளக்கம் -310

அப்பொருள்கூறி அகற்றின் அப்பொருளினைச்
சுட்டியும் மாற்றுவர் சொற்சுருங் குதற்கே.

**38. இயற்பெயர்க் . . . புலவர்.**

நன்னூல் - 394

படர்க்கை முப்பெயரோடு அணையின் சுட்டுப்
பெயர்பின் வரும் வினை யெனின்; பெயர்க்கு
எங்கும் மருவும் வழக்கிடை.

இலக்கண விளக்கம் - 316 படர்க்கை . . . . வழக்கிடை.

முத்துவீரியம் - ஒழிபு - 70

இயற்பெயர் சுட்டுப் பெயரும் இரண்டும்
வினைகொளற்கு ஒருங்குஇயல் காலத் தானே
சுட்டுப் பெயரை முற்படக் கிளவார்.

**39. முற்படக் கிளத்தல் செய்யுட்கு உரித்தே.**

நன்னூல் - 394 . . . . . . . செய்யுட்கு ஏற்புழி.

இலக்கண விளக்கம் - 316 . . . . . . . செய்யுட்கு ஏற்புழி.

முத்துவீரியம் - ஒழிபு - 71 முற்படக்கூறல் யாப்பினுள் உரித்தே.

**40. சுட்டு முதலாகிய . . . தோன்றும்**

முத்துவீரியம் - ஒழிபு - 72

*சுட்டு முதலாகிய காரணப் பெயரும்*
*முற்படக் கிளத்தல் முறைஅன்று ஆகும்.*

**41. சிறப்பின் ஆகிய . . . கிளவார்.**

நேமிநாதம் - சொல் - 14

*சாதி முதலாம் சிறப்புப்பேர் தன்முன்னர்*
*ஓதார்இயற்பெயரை உய்த்து.*

நன்னூல் - 393

*திணை நிலம் சாதி குடியே உடைமை*
*குணம் தொழில் கல்வி சிறப்பாம் பெயரோடு*
*இயற்பெயர் ஏற்றிடின் பின் வரல் சிறப்பே.*

இலக்கண விளக்கம் -317

*திணைநிலம் சாதி குடியே உடைமை*
*தவம்தொழில் கல்வி சினை குணம் சிறப்போடு*
*இயற்பெயர் ஏற்றிடின் பின்வரல் இயல்பே.*

முத்துவீரியம் - ஒழிபு - 73

*வினைக்கு ஒருங்கு இயலும் விழுமிய பொருட்கும்*
*இயற்பெயர் முற்பட இயம்பினாம் வழுவே.*

சாமிநாதம் - 62

*குடி, சாதி, நிலம், பண்புடைமை, தவம், தொழில்,*
*சிறப்பு, கல்வி, சினை . . .திணைப்பேர்ப்பின்*
*இயற்பெயர் உரைப்பர் பொருட்கே.*

**42. ஒருபொருள் குறித்த . . . இலவே.**

**நேமிநாதம் - சொல் - 13**

*ஒருபொருள்மேல் பல்பெயர் உண்டானால், அவற்றிற்கு.*
*ஒருவினையே சொல்லுக ஓர்ந்து.*

**நன்னூல் - 392**

*ஒருபொருள் மேல்பல பெயர்வரின் இறுதி*
*ஒருவினை கொடுப்ப; தனியும் ஒரோவழி.*

**இலக்கண விளக்கம் - 318**

*ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி*
*தொழில்வேறு கிளப்பின் ஒன்றுஇடன் இலவே.*

**முத்துவீரியம் - ஒழிபு - 74**

*ஒருபொருள் குறித்த பலபெயர்க் கிளவி*
*ஒருவினை முடிபுஅறை யாது,அப் பெயர்தொறும்*
*வேறுஒரு வினைதந்து உரைப்பது விதியே.*

**சாமிநாதம் - 63**

*பொருள் தோன்றின்பல பெயர்க்கு ஓர் வினை முடித்தல் கடனாம்.*

**43. தன்மைச் சொல்லே . . . வரையார்.**

**நேமிநாதம் - சொல் - 10**

*எண்ணும் இருதிணையும் எய்தும் அஃறிணையா;*
*எண்ணி வியங்கொள்க; இருதிணையும்-எண்ணினால்*
*தன்மையாம் அஃறிணையும்; சொன்னமொழி தன்இனத்தை*
*உன்னி முடித்தலும் உண்டு.*

**முத்துவீரியம் - ஒழிபு - 75**

*உயர்திணைத் தன்மையும் அஃறிணைப் பெயரும்*
*தொகை வயின் விரவி வரப்பெறும் என்ப.*

**44. ஒருமை எண்ணின் . . . நில்லாது.**

நேமிநாதம் - சொல் - 13

*பொதுப்பிரிபால் எண்ஒருமைக் கண்அன்றிப் போகா.*

நன்னூல் - 288 *ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்இல.*

இலக்கண விளக்கம் -190 *ஒருவன் . . . எண்இல.*

முத்துவீரியம் - ஒழிபு - 76

*ஒருமைஎண் ஒருமைக்கண் அல்லது இயலா.*

**45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்**

நேமிநாதம் - சொல் - 10

*எண்ணி வியங்கொள்க இருதிணையும்.*

முத்துவீரியம் - ஒழிபு - 77

*வியங்கோளொடுதொடர் எண்ணுக் கிளவி*
*திணைவிர வியும்வரும் செப்புங் காலே.*

**46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.**

நேமிநாதம்-சொல்-13 *பொதுத்தொழிலை ஒன்றால் புகலார்.*

நன்னூல் - 389

*வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்*
*... ... ... ஓர்பொது வினை வேண்டும்.*

இலக்கண விளக்கம் -319 *வேறுவினை . . . . வேண்டும்.*

முத்துவீரியம் - ஒழிபு - 78

*வேறு வினைப்பல் பொருட்குப் பொதுப்பெயர்*
*பொதுவினை கொடுத்துப் புகல்வது நெறியே.*

**சாமிநாதம் - 63**

பொதுவினைச் சொல்லால் வேறுஎண் பல
வினைச் சொல் முடிப்பார்.

**47. எண்ணுங்காலும் அதுஅதன் மரபே.**

**நன்னூல் - 389**

வேறு அவற்று எண்ணும் ஓர் பொதுவினை வேண்டும்.

**இலக்கண விளக்கம் -319**

வேறு அவற்று எண்ணும் ஓர் பொதுவினை வேண்டும்.

**முத்துவீரியம் - ஒழிபு - 79**

எண்ணுழியும் பொதுவினையான் இயலும்.

**48. இரட்டைக்கிளவி இரட்டிற் பிரிந்து இசையா.**

**நன்னூல் - 396** இதே நூற்பா

**இலக்கண விளக்கம் -325** ,,

**முத்துவீரியம் - ஒழிபு - 80** ,,

**சாமிநாதம் - 64**

பேச்சு இரட்டைச்சொல் இரட்டுப்பிரிந்து இசையாதாகும்.

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் . . . மருங்கினும்.**

**நேமிநாதம் - சொல் - 8**

. . . . . . ஒருபேர்ப் பொதுச் சொல்
பன்மைசிறப் பாலுரைத்தல் பண்பு.

**இலக்கண விளக்கம் -323** ஒருபெயர் . . . . மருங்கினும்.

முத்துவீரியம் - ஒழிபு - 81

அஃறிணை உயர்திணை ஆயிரு மருங்கினும்
ஒருபொரு ளாய்ப்பல பெயர்க்கும் பொதுமொழி
பொதுமைவேறு இயம்பல் புலவோர் நெறியே.

சாமிநாதம் - 63

தலைமை பன்மைச் சிறப்பால் இருதிணையின்
பலபொருளை ஒருபெயரால் உரைப்பார்.

50. பெயரினும் . . . பட்டன.

நன்னூல் - 352

இருதிணை ஆண்பெணுள் ஒன்றனை ஒழிக்கும்
பெயரும் வினையும் குறிப்பி னானே.

இலக்கண விளக்கம் -324 பெயரினும் . . . . பட்டன.

முத்துவீரியம் - ஒழிபு - 82

பெயரினும் வினையினும் பிரிபவை எல்லாம்
வழுவில வாம்இரு திணைமருங் கினுமே.

சாமிநாதம் - 63

ஒருபெயரால் வினையால் ஆண்பெண்ணை
உணர்ந்து இசைப்பார்.

51. பலவயி னானும் . . . செய்யுளுள்ளே.

நேமிநாதம் - சொல் - 10

எண்ணும் இருதிணையும் எய்தும் அஃறிணையா.

நன்னூல் - 378

திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.

**இலக்கண விளக்கம் -298**

*திணைவிரவு எண்ணுப்பெயர் சிறப்பினும் மிகவினும்*
*அஃறிணை முடிபின ஆகும் என்ப.*

**முத்துவீரியம் - ஒழிபு - 83**

*திணைவிர வுப்பெயர் செய்யுள் மருங்கே*
*அஃறிணை முடிபின ஆகும் என்ப.*

**52. வினைவேறு . . . பலபொருள் ஒருசொல்.**

**முத்துவீரியம் - ஒழிபு - 84**

*வினைவேறு படூஉம் பலபொருள் ஒருமொழியும்*
*வினைவேறு படாஅப் பலபொருள் ஒருமொழியும்*
*எனஇரு திறத்தவாம் பலபொருள் ஒருமொழி.*

**53. அவற்றுள், வினைவேறு . . . நிலையே.**

**நேமிநாதம் - சொல் - 14**

*ஒப்பிகந்த பல்பொருள்மேல் சொல்லும் ஒரு சொல்லைத்*
*தப்பாவினைஇனம் சார்பினால்- செப்புக.*

**நன்னூல் - 390**

*வினை சார்பு இனம்இடம் மேவி விளங்காப்*
*பல பொருள் ஒருசொல் பணிப்பர் சிறப்பு எடுத்தே.*

**இலக்கண விளக்கம் -320**

*வினைபெயர் இனம்சார்பு மேவி விளங்காப்*
*பலபொருள் ஒருசொல் பணிப்பர் சிறப்பு எடுத்தே*

**முத்துவீரியம் - ஒழிபு - 85**

*அவற்றுள்,*
*வினைவேறு படூஉம் பலபொருள் ஒருமொழி*
*வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்*
*தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.*

**55. வினைவேறு . . . இயலும்.**

**முத்துவீரியம் - ஒழிபு - 86**

*வினைவேறு படாஅப் பலபொருள் ஒருமொழி*
*ஆயுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.*

**சாமிநாதம் - 63**

*மருவிடம் பேர் இனம் சார்பு வினையால்*
*பலபொருட்கே வரும் ஒருசொல் இனையது என்பார்.*

**56. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.**

**இலக்கண விளக்கம் -321** *குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.*

**முத்துவீரியம் - ஒழிபு - 87**

*ஒருபொருள் வேறுபாடு உணருங் காலை*
*விளங்காது ஆயின் விளங்க விளம்புப.*

**சாமிநாதம் - 64** *குறித்தோன்கூற்று வினாயலுமே.*
*(பிழைபட்டுளது)*

**57. குடிமை ஆண்மை . . . இயலும்.**

**நேமிநாதம் - சொல் - 9**

*குழுஅடிமை வேந்து குழவி விருந்து*
*வழுவுறுப்புத் திங்கள் மகவும் - பழுதில்*
*உயர்திணைப் பண்போடு உயிர்உறுப்பு மெய்யும்*
*அயர்வுஇல் அஃறிணையே யாம்.*

**நன்னூல் - 379**

*உவப்பினும் உயர்வினும் செறலினும் சிறப்பினும்*
*இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.*

